ஓம்

ஸ்ரீ வேதவியாசர் அருளிச்செய்த

# ஸ்ரீ மஹா பாகவதம்

சித்திரப் படங்களுடன்

பத்து முதல் பன்னிரண்டு ஸ்கந்தங்கள் வரையில்
அடங்கியது

## இரண்டாம் பாகம்

திருவனந்தபுரம் பாகவத சிரேஷ்டரான

**வேணுகோபாலாசார்யர் அவர்களால்**

ஸம்ஸ்க்ருத காவ்யத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது

---

சில தமிழ் பண்டிதர்களைக்கொண்டு புதுக்கியும்,
விளக்கியும் சீர் திருத்தப்பெற்றது.

---

**B. இரத்தின நாயகர் & ஸன்ஸ்,**
திருமகள் விலாச அச்சியந்திரசாலை,
சென்னை.




1950

காபிரைட் விலை ரூ. 12-0-0

# விஷய அட்டவணை

## தசம ஸ்கந்தம்

அத்தியாயம் பக்கம்

படம் நெ. 11. பக்கம் நெ. 1-A.




தேவர்கள், பகவானை துஷ்ட நிக்ரகித்தின்பொருட்டு சரணடைதல்.

ஓம்

# ஸ்ரீ மஹா பாகவதம்

## வசன காவியம்

# தசமஸ்கந்தம்

காப்பு.

வியாசம் வசிஷ்ட நப்தாரம்
சக்தே பௌத்ர மகல்மஷம்
பராசராத் மஜம் வந்தே
சுகதாதம் தபோ நிதிம்.

வியாசம்-வியாசபகவானை, வசிஷ்ட நப்தாரம் - வசிஷ்ட முனிவருக்கு இரண்டாம் பேரனை, சக்தே பௌத்ரம்-சக்திக்கு முதற் பேரனை, அகல்மஷம் - களங்கமற்றவனை, பராசராத் மஜம்-பராசாருக்குப் புத்திரனை, சுகதாதம் - சுகருக்குத் தகப்பனவனை, தபோ நிதிம் - தவத்திற்கு உற்பத்தி ஸ்தானமானவனை, வந்தே - நமஸ்கரிக்கின்றேன்.

மஹா விஷ்ணு துதி

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

ஐவகைப் பொருளு நான்கு
கரணமுங் குணங்கண் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி
யாவருந் திகைப்ப நின்ற
பொய்யிரு ளகல ஞானப்
பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவள ராழிச் செங்கட்
கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

## முதலாவது அத்தியாயம்



ஸ்ரீ வேதவியாஸருடைய குமாரராயும், சாந்தசமத மாதிகுண பரிபூர்ணராயும், தபோ நிதியாயு மிருக்கின்ற சுகமுனிவரை நெடியகடல்சூழ்ந்த பூமியைக் குற்றமற்ற அரசாளத் தக்கவராயும், சந்திர வம்சோத்துங்கராயு மிருக்கிற பரீக்ஷித்து மகா ராஜா வானவர் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, அஞ்சலி அஸ்த ராய், அம் முனிவரை நோக்கித், "தேவரீரால் சூர்ய சந்திரர் களுடைய இரண்டு வம்சங்களிலுமுள்ள அரசர்களுடைய அற்புத சரிதிரமும், உத்தம தருமசீல குணங்களையுடைய யதுமஹா ராஜன் வம்ச விருத்தியும் சவிஸ்தாரமாகச் சொல்லப்பட்டன. அந்த யதுவம்சத்தில் திவ்யாம்சமாகவும், விஸ்வ ரூபியாகவும், ஜகத் கர்த்தாவாகவுமான ஸ்ரீ பகவான் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்துச் செய்த அற்புதங்களையும், ஸ்ரீ பலராமர் ரோகணி தேவியினுடைய கர்ப்பத்தில் அவ தாரஞ் செய்தாரென்றதும், இப்போது தேவகி தேவி யினுடைய புத்திர ரென்றதும் இவை முதலியவற்றை உமது முகாரவிந்தத்தினின்றும் பெருகா நின்ற ஸ்ரீ ஹரியின் திவ்ய குண கதாமிர்தத்தைப் பானஞ்செய்துகொண் டிருக்கின்ற என்னை மிகவுஞ் சகிக்கக்கூடாத பசிதாக முதலானவைவருத்த வில்லை. இன்னமும் அவை என்னைப் பீடிக்காதிருக்கும்படி அவருடைய கிருபா குணங்களை அடியேனுக்குச் சவிஸ்தரா மாக திருவாய் மலர்ந்தருள வேண்டும்" என விரும்பிய பரீக்ஷித்துமகா ராஜாவை நோக்கிச் சுகமுனிவர் அருளிச் செய்கின்றார்.

---

*பூமிதேவி பசுரூபியாய் பிரம்மாவை சரணமடைந்ததும், அவர் திருப்பாற் கடலிற்கு தேவர்களுடன் சென்று பகவானை சரணமடைதலும், அப்போது அஸரீரி வாக்குண்டானதை பற்றியும் சொல்லப்படுகின்றன.*

ஸ்ரீ கோவிந்தனது பாதங்களில் மனதை நிறுத்திய செல்வனே கேட்பாயாக! பொறுமையிற் சிறந்த பூமிதேவி யானவள், மஹா கர்வத்தை யடைந்து அரசர்களென்று பெயர் பெற்ற கொடிய அசுரர்களினது அநேககோடி சேனு சமுத்திரங்களின் செய்கைகளி லுண்டாகின்ற பாபமாகிற

பாரத்தினால் வருந்தப் பட்டவளாகி, கோரூபத்தைத் தரித்து, மிகுந்த துக்கத்தையடைந்து, சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமாவைச் சரணமடைந்து, கண்களில் ஜலத்தைப் பெருக்கி தனது வியாகூலத்தை முறையிட்டனள். அம்முறையைக் கேட்ட பிரமதேவர் ருத்திர பகவான் முதலிய வெல்லா தேவர்களுடன் அந்நிலமகளை யழைத்துக்கொண்டு க்ஷீராப்தி தீரத்தைச் சேர்ந்து, அவ்விடத்தில் சர்வ நியந்தாவாயும், பரிபூரணராயும், ஜகந்நாதராயு மிருக்கின்ற ஸ்ரீ வாசுதேவரை புருஷசூக்த மந்திரங்களால் ஒரேமனதாக யாவரோடுந் துதிசெய்தார். அப்பொழு தவ்விடத்தில் உண்டான அசரீரி வாசகத்தைப் பிரமா கேட்டு, தேவர்களைப் பார்த்து, நீங்கள் யாவரும் ஸ்ரீ பகவ தாக்கினையின்படி விரைந்து செய்யக்கடவீர்கள். அஃதென்னவெனில், முன்னமே ஸ்ரீ பகவான் பூமிதேவியினது விசனங்களை யறிந்து, தமது வியாபகத்வமாகிற காலரூப திவ்விய சக்தியைக்கொண்டு, பூமிபார நிவர்த்தியின் பொருட்டு, இப்பிரபஞ்சத்தில் வசுதேவர் கிருகத்தில் அவதாரஞ் செய்யச் சங்கற்பித்திருக்கின்றார். ஆகையினால் நீங்கள் யதுவம்சத்தில் ஜனிக்கக் கடவீர்கள். ஸ்ரீ வாசுதேவாம்சத்தி லுண்டான அனந்தர் அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு முன்னே அவதரிக்கப் போகின்றார். சர்வ ஜகத்தையு மோகிக்கச் செய்கிற பகவன் மாயையானது ஸ்ரீ ஹரியின் திவ்வியாக்கினையால் காரியார்த்தமாக ஸ்ரீ யசோதா பிராட்டியினிடத்தில் அவதரிக்கப் போகின்றது என்று கட்டளையிட்டு, பின்பு அந்தப் பூதேவியை நோக்கி,

"பசுமையான துழாய் மாலையை அழகுபெறத் தரித்த முதற் கடவுள் உன்னை வந்து காப்பாற்றுவன். நீ வருந்துதல் வேண்டாம்" என்றுரைத்து, கடலை உடையாய்த் தரித்த நிலமகளை விட்டு, இதழ்களால் நிரம்பப் பெற்ற தாமரை மலரி லுதித்த பிரமதேவன் தனது பெருமையில் சிறந்த சத்திய லோகத்தை யடைந்தான்.



## இரண்டாவது அத்தியாயம்



*அசரீரி வாக்கியத்தைக் கேட்டு கம்ஸன் வசுதேவரின் முதல் ஆறு புதல்வர்களை வதைத்ததைச் சொல்லப்படுகிறது.*

பூர்வகாலத்தில மதுராபுரியை அரசு செய்துக்கொண்டிருந்த யதுசிரேஷ்டராகிய சூரசேன மகாராஜாவின் புத்திரராகிய வசுதேவர், போஜகுலத் தலைவனான தேவகனுடைய

புத்திரியாகிய தேவகி தேவியை விவாகஞ் செய்துகொண்டு, தம்பதிக ளிருவரும் தமது இல்லத்திற்குச் செல்ல இச்சித்து, அக்கலியாண கோலத்துடன் தேரின்மீது அமர்ந்தார்கள். உக்கிரசேன மஹாராஜா அந்தக் காலத்திற்கு உசிதமாக தனது புத்திரிகா ரத்நத்தினிடத்தில் மிகவும் அன்புடையவராகி, சுவர்ணமாலைகளினு லலங்கரித்த நானூறு யானைகளையும், பதினையாயிரம் குதிரைகளையும், அறுநூறு தேர்களையும், இருநூறு அழகிய பெண்களையும், பின்னும் வேண்டிய பரிசுகளையும் தேவகிதேவிக்குச் சீதனமாகக் கொடுத்தார். அச்சமயத்தில் உக்கிரசேன மகாராஜனுடைய புத்திரனை கம்சன் சுவர்ணமயமான அநேக இரதங்கள் சூழச் செல்லுந் தனது தங்கையினிடத்தில் அன்புகொண்டு அத்தம்பதிகளுக்கு சாரத்தியஞ் செய்துகொண்டு வந்தான்.

இப்படி சகல வைபவங்களுடன் போகும் தம்பதிகளுக்கு தேர் ஓட்டிச் செல்லும் கம்சனைக் குறித்து, அசரீரி "அட புத்தியிலாதவனே! நீ உனது தங்கையின் கருப்பத்தில் உதிக்கப் போகின்ற எட்டாவது புதல்வனுல், ஊழ்வினையின் படி உயிர் துறக்கப்போவதை உணராது தேர் ஓட்டிச் செல்கின்றுயே" என்றது. அதுகேட்டுத் திடுக்கிட்டு துஷ்டனும் மஹா பாபியுமாகிய அந்தக் கம்சன் தன் அரையிற் கட்டிய உடைவாளை யுருவி, தனது தங்கையாகிய தேவகி தேவியின் பின்னலளகத்தைப் பற்றிக்கொண்டு அவளது தலையைத் துணிக்க முயன்றுன். உடனே மகானுபாவராகிய வசுதேவர் கம்சனைப் பார்த்து "மஹா சூரர்களாற் புகழத்தக்க குணங்களை யுடைவனும் போஜ குலத்திற்குக் கீர்த்தியைச் சம்பாதிக்கிறவனுமாகிய நீ அழியக்கூடிய சரீரத்தின் மீதுள்ள ஆசைப் பெருக்கத்தால் எக்காலும் வளரக்கூடிய பழியையும் பாவத்தையும் (நினது தங்கையின் சிரத்தைத் துணித்து) சம்பாதித்துக் கொள்ளவா போகின்றுயென தெளிந்த அமுதம் பொழிவதுபோல இனிமையாகவும் இரக்கத்துடனும் வண்டுகளால் மொய்க்கப்பெற்ற மாலையைத் தரித்த வசுதேவர் சொன்னுர்.

இப்படி வசுதேவர் சொன்ன நல்ல சொற்களை கேளாமல் தேவகிதேவியைக் கொல்ல கம்சன் துணிய, இனி வேறு என்ன செய்வதென்று வசுதேவர் யோசித்து "அப்பா! நீ நினது தங்கையை கொல்வதைவிட்டு அவள் வயிற்றினுதிக்கும் குழந்தைகளை கொல்வது கூடாதா" என வேண்ட, அவன் அவர்களை விட்டு அகன்றுன்.

பிறகு ஸ்ரீ வசுதேவர் மிகவுஞ் சந்துஷ்டராய் க்ருஹப் பிரவேசஞ் செய்தார். சர்வதேவதா ஸ்வரூபியாகிய அத் தேவகிதேவி வருஷந்தோறுங் கருப்பந் தரித்து, எட்டுப் பிள்ளைகளையும் ஒரு பெண்ணையுங் கிரமமாகப் பெற்றாள். சத்திய சீலர்களாகிய மஹாத்மாக்களுக்குச் சகிக்கக் கூடா ததும் ஒன்றுண்டோ? பரமாத்ம நிஜ தத்துவத்தை நன்று யாராய்ந்துணர்ந்த பரமோத்தம ஞானிகட்கு இவ்வுலகத்தில் அபேக்ஷிக்கும் பொருளொன்றுமிராது. ஆகையால் அப்படிப் பட்ட வசுதேவர் சத்தியத்தினின்றும் வழுவாது கம்சன் கையிற் கீர்த்திமானென்கிற பிரதம புத்திரனைப் பிறந்த வுடனே கொண்டுபோய் கொடுத்துவிட்டார். அப்போது அவன் வசுதேவருடைய ஆத்மசமபுத்தியையுஞ் சத்தியத்திற் சலியாம லிருப்பதையும் பார்த்துப் புன்னகையுடன் மகா சந்தோஷ இருதயனாகி "இச்சிறு குழந்தையாலெனக்கு மரண பயமில்லை. உமது எட்டாவதாபுத்திரனால் மாத்திரமே மரண பய மாகையால், இந்தக் குழந்தையைக் கொண்டுபோம்" என் றான். அதுகேட்ட வசுதேவர் அச்சிசுவை யெடுத்துக் கொண்டு தமது வீடு சென்றார். பிறகு அவருக்குக் கிரமமாய் ஆறு பிள்ளைகள் பிறந்தார்கள்.

ஒருநாள் ஸ்ரீ நாரத முனிவர் கம்சனுடைய சபாமண்ட பத்திற்கு வந்து, அவனைப்பார்த்துக் "கம்சனே! இக்காலத் தில் கோகுலத்திற் பிறந்து விருத்தியடையும் நந்தகோபர் முதலிய கோபாலர்களும், யசோதைப் பிராட்டி முதலிய கோபிகா ஸ்திரீகளும், விருஷ்டிகள் - போஜர்கள் - அந்த கர்கள்-தாசாஹாள்-சாத்வதர்கள் என்கிற இவ்வைந்து குல மாகிய யாதவ வம்சத்தில் விருத்தியடைகிற வசுதேவர் முதலியவர்களும், தேவகிதேவி முதலிய ஸ்திரீகளும் தமது தேவ அம்சத்துடன் வந்து பிறந்திருக்கும் சுரர்களேயாவர். நீயும் பூர்வ ஜன்மத்தில் அசுரனே. இந்த ஜன்மத்தில் அரசனாகிப் பிறந்திருக்கிறாய். ஆகையினாலே ஸ்ரீஹரி தேவகி தேவியினது உத்தம கர்ப்பத்தில் அவதாரஞ் செய்து துஷ்ட சம்ஹாரமும் சிஷ்டபரிபாலனமும் செய்யப்போகின்றார். அசுர சுபாவமுடைய உனக்கும் உன்னைச்சார்ந்த அனைவருக் கும் ஆபத்து அடுத்து வருகின்றது" என்று சொல்லி மறைந் தருளினார். அதுமுதல் கம்சன் யாதவர்களைத் தேவ சமூகங்க ளென்று உணர்ந்துத் தன்னை வதை செய்வதற்கு விஷ்ணுவே தேவகிதேவியின் கர்ப்பத்தில் அவதரிக்கின்றாரென்று அசரீரி வாக்கியத்தா லறிந்தபடி பூர்வ சன்மத்தில் காலநேமி என்னு மகாவசுரனை தன்னை விஷ்ணுவே சங்கரித்தாரென்று

நாரதராலுணர்ந்த மாத்திரத்தில் வசுதேவரையுந் தேவகி தேவியையும் தந்திரமாய் அழைப்பித்து விலங்கிற் பூட்டித் தனது கிருகத்திற் காவலில்வைத்து அவர்களுக்குக் கிரமத் தின்படி பிறந்திருக்கின்ற பிள்ளைகளறுவரையும் ஹரியென்று நினைத்துக்கொன்று, யாதவபோஜர்கள் முதலிய தங்கள் வம்சஸ்தர்களையும் தனக்குப் பிதாவாயும் பிரபுவாயுமிருக்கிற உக்கிரசேன மகாராஜாவையும் நிக்கிரஹித்து தான் தனது இஷ்ட ஜனங்களுடன் சூர்சேன தேசங்களை அதிக்கிரமித் தனுபவித்துக் கொண்டிருந்தான்.



## மூன்றுவது அத்தியாயம்



*தேவகி வயிற்றிலுள்ள ஏழாவது கரு உரோகிணி வயிற்றிற்கு மாறுதல்.*

கேளும் பூபதியே! அந்தக் கம்சன் பிரலம்பன் பகா சுரன் சாணூரன் திருணாவர்த்தன் அகாசுரன் முஷ்டிகன் அரிஷ்டன் துவிதன் பூதனை கேசி தேனுகாசுரன் பாணா சுரன் நரகாசுரன் ஜராசந்தன் முதலிய பல அசுரர்களோடு சேர்ந்து யாதவர்கள் முதலான உத்தம அரசர்களை மிகவும் உபத்திரவஞ் செய்துக்கொண்டிருந்தார்கள். அதை அவர்கள் சகிக்கமாட்டாமல், குரு பாஞ்சாலம் கேகயம் சாளவம் விதர்ப் பம் நிஷதம் விதேஹம் கோசலம் முதலான தேசங்களிற் சென்றும் சிலர் அவனையே யனுசரித்தும் ஜீவித்துக் கொண் டிருந்தனர். பின்பு ஸ்ரீ அனந்த பகவான் அம்சமானது தேவகிதேவி கர்ப்பத்திலே வந்து தங்க, அதினால் வசுதேவர் சந்தோஷமடைந்தும் உடனே முன்பிறந்த ஆறு பிள்ளை களைக் கம்சனிடத்திற் கொடுத்துவிட்டதுபோல் இதையுங் கொடுத்துவிட வேண்டுமே என்னும் விசனமுண்டானவ ராயினர்.

அந்தச் சமயத்தில் ஸ்ரீ விஸ்வரூபியான பகவான் தம் மையே நம்பின யாதவர்களுக்குக் கம்சனாலுண்டான குரூர பயத்தை நிவர்த்தி செய்யும்படி திருவுள்ளங்கொண்டு தமது யோகமாயயை நோக்கி "மங்கள ஸ்வரூபியே! கம்சனுடைய பயத்தால் வசுதேவரானவர் தனது மனைவியர்களில் ரோ ஹிணி யென்பவளை பசுக்கள் மிகுதியாய்ப் பரவியிருக்கின்ற கோகுலத்திற் கரசராயும் தமக்கு இஷ்டராயுமிருக்கிற நந்த கோபருடைய மனையில் மறைத்து வைத்திருக்கின்றார். மதுரா புரியில் தேவகிதேவி வயிற்றில் எனது தேஜோன்மயமான ஆதிசேஷன் ஏழாவது கர்ப்பமா யிருப்பதைக் கிரகித்து

அந்த ரோஹிணிதேவியின் வயிற்றில் அமைத்து, நீ நந்த கோபருடைய பத்தினி யசோதைப் பிராட்டியினிடத்தி லுற்பவிக்க கடவாய். நான் எனது அம்சமாய் தேவகி தேவிக்குப் புத்திரனுக அவதரிக்கப்போகின்றேன். நீ சர்வ காமியங்களையுந் தருதற்குரிய ஈஸ்வரியாகி, பிரபஞ்சத்தில் பலராலும் பூசிக்கப்படுவாய் என்றனர்.

உடனே யோகமாயை அவருக்குப் பிரதக்ஷண நமஸ் காரங்கள் செய்து 'சுவாமியினுடைய உத்தரவின்படி நடந்து கொண்டாள். அப்படி அந்த யோகமாயையால் அந்தத் தேவகி தேவியின் கர்ப்பம் மாயமானதை ஜனங்களறிந்து கம்சன் முன்னம் ஆறு பிள்ளைகளைக் கொன்ற பயத்தால் இந்த ஏழாவது கர்ப்பங் கலங்கிவிட்டதென்று அவனைப் பலவாறு தூஷித்தார்கள்.

பின்பு பகவானுகிய மகா விஷ்ணுவானவர் பூமிபார நிவர்த்திக்காக வசுதேவரது இருதய கமலத்தில் பிரவேசித்ததினுல் சூரிய பகவானைப் போல விளங்கிக்கொண்டிருக்கிற அவ்வசுதேவரிடத்தினின்று சுசீலையான தேவகி தேவியானவள் பகவத் ரூபமான கர்ப்பத்தை யடைந்தாள். கிழக்குத் திக்கானது ஆனந்தகரமாகிய சூரியதேஜசை வஹித்து உலகத்திற் பிரகாசிக்கிறது போல அந்த மகா கர்ப்பத்தை அவள் தரித்து விளங்கினுள். அக் காலத்தில் குளிர்ந்த முகாரவிந்தத்தையுடைய தேவகிதேவியை கம்சன் பார்த்து இந்தப் புண்ணியவதி கர்ப்பத்தில் தற்போது விளங்குகின்ற இந்தக் குழந்தை என்பிராணனை அபகரிக்க வந்த ஸ்ரீ ஹரியே யாக வேண்டும். இவள் பூர்வத்தில் வகித்த கர்ப்பங்களில் இப்படிப் பட்ட வொளியை நான் கண்டதில்லை என்று, உடனே தேவகிதேவியைக் கொல்ல நினைந்தும், அப்படிச் செய்வதால் பழியும் பாவமும் தன்னைச் சூழ்வதோடு சகலராலும் வெறுக்கப்பட்டு கடைசியில் கொடுநரகிற் கிரையாக வேண்டுமே யெனும் பயத்தால் அவ்விதம் செய்யாதொழிந்து, ஸ்ரீ ஹரியினது திவ்வியாவதாரத்தையே யெதிர்பார்த்துக் கொண்டிருந்தான். இந்தச் சமயத்தில் சதுர்முகனும், சங்கரனும், இந்திராதி தேவர்களும், ஸ்ரீ நாரதாதி சமஸ்த ரிஷிகளும் ஆகாயத்தில் எழுந்தருளி, இரண்டு கைகளையும் சிரசின்மேல் குவித்துக்கொண்டு, வசுதேவர் தேவகிதேவி இவர்களுக்கு மாத்திரம் பிரசன்னமாகும்படி ஸ்ரீ ஹரியைத் துதி செய்யத் தொடங்கினுர்கள்.

சத்திய சங்கற்ப பரிபூர்ணராயும், சத்திய ஸ்வரூபராயும், பஞ்ச பூதங்களிலும் ஸ்தூல சூக்ஷமங்களிலும் உள்

ளும் புறமும் வியாபித்து, அந்தர்யாமியாகியும் பரமாத்மா வாகியு மிருக்கின்ற உம்மைச் சரணமாக அடைகின்றோம். மேலும், இப் பிரபஞ்சமாகிய விருக்ஷத்திற்கு மூலப்பிரகிருதியே விருக்ஷ ஸ்வரூபமாகவும், சுக துக்கங்க ளிரண்டும் அதில் பழுத்த பழங்களாகவும், சத்வ ரஜஸ் தமோகுணங்கள் மூன்றும் வேராகவும், தர்மார்த்த காமமோக்ஷங்கள் நான்கும் ரசமாகவும், கண்கள் முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்தும் அடிக்கிளைகளாகவும், பசி தாகம் சோகம் மோகம் மூப்பு மரணம் இவை ஆறும் சுபாவமாகவும், துவக்கு சர்மம் ஹஸ்தி இரத்தம் தசை மாம்சம் மச்சை இவ்வேழு தாதுக்களும் மேற்பட்டையாகவும், பூதங்களைந்தும் மனம் புத்தி அகங்காரம் மூன்றும் ஆகிய இவ்வெட்டும் மேற்கிளைகளாகவும், நவத்துவாரங்கள் கிளைகளின் நடுவே யிருக்கின்ற வெளியாகவும், தசவிதமாகிய பிராணவாயுக்கள் இலைகளாகவும், ஜீவாத்ம பரமாத்மாக்கள் இதனிடத்தில் வாசஞ் செய்யும் பக்ஷிகளாகவும் உம்முடைய திவ்ய சங்கற்பத்தா லுண்டாயிருக்கின்றன. இப்படி யிருக்கின்ற சம்சாரமாகிய விருக்ஷத்திற்குத் தேவரீர் ஒருவரே உற்பத்தி ஸ்திதி லய காரண ஸ்வயம்பிரகாச நித்திய விபுவாயிருக்கின்றீர். உம்முடைய பரம கிருபையினுல் பெரியோர்கள் மாயையை வென்று நித்ய ஸ்வரூபமாக மனதில் தியானித்து விதேகமுக்தியடைகின்றூர்கள். தேவரீரிடத்தில் சமாதியோக வைராக்கிய விலக்ஷணோத்தம விவேக ஞானசீல ஹிருதயத்தையுடைய மஹாத்மாக்கள் மஹாபுருஷ சேவிதமாகிய திவ்ய லக்ஷண யுக்த உமது பாதாரவிந்த சேவையாகிய தெப்பத்தினுல் ஜனன மரண சுக துக்க வாஞ்சைகளை உற்பத்தி செய்கின்ற சம்சார சமுத்திரத்தைப் "பசுவின் கன்றின் குளம்படி போலச்" சுலபமாகத் தாண்டுகின்றூர்கள். ஞான ஈன உன்மத்த ஜனங்களாகிய இதரர்கள் சம்சார சமுத்திரத்தைக் கடந்து உஜ்ஜீவிப்பதற்கு அவர்களுக்கு உத்தம க்ஞானுதி குணங்களைக் கற்பித்து, அவர்களைத் தேவரீருடைய பாதார விந்தமாகிய ஓடத்திலேற்றி, இவ்விடத்தில் யாவருந் துதிக்கச் செய்து, தேகவியோக காலத்தில் பரம பதமாகிற மோக்ஷத்தை யடைகிறூர்கள்.

உமது விலட்சண க்ஞானயுக்த பக்தி அதிசயங்களையுடைய ஸ்ரீ மகா பாகவதர்கள் சர்வகால சர்வதேச சர்வாவஸ்தைகளிலும் அன்னிய பரங்களாகிய இஷ்டார்த்தங்களையொழித்துப், புருஷார்த்த உத்தம ஸ்ரீ பகவந் நாமானுசந்தனமாகிய மோக்ஷ சாதன அநுஷ்டானத்தை அநுஷ்டிப்பார்களே யல்லாமல் வேறொன்றையும் ஆசரிக்கமாட்டார்

கள். ஸ்ரீ பக்தவச்சலரே! இந்த ஜகத் பரிபாலனத்தில் சர்வப் பிராணிகளுக்குந் தகுந்தபடி உத்தமமான கோறிக்கைகளைக் கிருபை செய்வதற்குச் சத்குண ப்ரதானமாகியும் மஹா பரிசுத்தமாகியு மிருக்கின்ற மூர்த்தி ஸ்வரூபங்களைத் தரிக்கின்றீர். அந்த ஸ்ரீ பகவத் மூர்த்தியினல் இவ்வுலக ஜனங்கள் வர்ணாச்சிரம ஆசார தர்மங்களினுலும், வேதங்களினுலும், வேதாத்யயனதி உத்தமசாஸ்திர விதிகளினுலும், வைதீக கிரியா கர்மங்களினுலும், சமாதியோக மார்க்கங்களினுலும், தபசுகளினுலும், தேவரீருக்குத் திருவாராதனத்தைவிட விலக்ஷண ஞானயுக்தமாய்ச் சமர்ப்பிப்பார்கள். ஆகிலும், தேவரீருடைய விசேஷ கிருபையினுல் இவ்வுலகத்தவர்கள் தங்கள் ஜன்மாந்திர சத்கிரியைகளினுல் தேவரீருடைய யதார்த்த தத்வார்த்த சாக்ஷாத்காரங்களை நன்ருயுணர்ந்து, சந்தோஷ ஆனந்த பாவசத்தை யடைகின்ருர்கள். இதுவுமன்றி, யாதாமொரு புருஷசிரேஷ்டன், விலக்ஷண அனுஷ்டான க்ஞான பக்தி வைராக்கிய விசேஷ தர்மத்தினுல் தேவரீருடைய சரணாரவிந்தங்களில் சமர்ப்பிக்குஞ் சித்த நியமத்தை வகித்துத் தனது உத்தம அனுஷ்டான கிரியா காலங்களில் ஜகன்மங்களகாங்களாகிய ஸ்ரீமந் நாம ஸ்வரூப குணவிசேஷங்களை யநுசரித்துத் துதித்துக் காலக்ஷேபமாகக் கேள்வியுற்றுத், தான் உஜ்ஜீவிக்கின்றது மன்றி இதரர்களுக்குஞ் சத்போதனை போதித்து, உத்தம ஞான விசேஷங்களால் தன்னைப்போல ஸ்மரிக்கும்படி விசேஷ விவேகத்தை யுண்டுபண்ணுகிருனே அம் மகானுபாவன் மறுபடி இவ்வுலகத்தில் ஜனிக்கிறதில்லை. வாரீர் ஸ்ரீஹரியே! உமது பாதாரவிந்த தத்வமாகிற இப்பூமியில் பாபத்தினுலுண்டாகிய பாரமானது நிவாரணமாகிறதற்கும், தர்ம ஸமஸ்தாபனத்திற்கும், அஷ்டஜன நிக்ரக சிஷ்டஜன பிரபஞ்சஜன ப்ராக்கியவசத்தினுலும் பாம கிருபையினுலும் திருவவதாரஞ் செய்கின்ற உம்முடைய மகா குணங்களால் பாரம் நீங்கிப் பரிசுத்தமாவதுமன்றி, அஞ்சலிபதிக்கு ஆதாரமாகியும், ஆர்த்த ஜனங்கள் சரண மடைவதற்கு முக்கிய ஸ்தானமாகியும், மகாலக்ஷண விலக்ஷிதமான சங்கு-சக்கர-சாரங்க-கதா-நந்தக-சத்திர-சாமரத்வஜ-கல்பக-அரவிந்த-ரதாங்க-வஜ்ராங்குசாதி திவ்ய ரேகா சின்னங்களினுலும், மங்களகரமாக அலங்கிருதமான திருவடித்தாமரைகள் படியப்பெற்ற பூமண்டலத்தையும் புவர்லோகாதி ஸ்வர்க்க மண்டலங்களையுஞ் சேவித்துக் கிருதார்த்தர்களாக அபேக்ஷித்துக் கொண்டிருக்கிருேம். வாரீர் ஈசனே! ஜன்ம கர்ம சூன்யராகிய உமது திவ்யாவதாரங்கள் லீலாகுணங்களன்றி வேறில்லை,

அவற்றின் கோப்பியங்களாகிய இவ்ரகசியங்களை ஆராய்ந்தறிவதற்கு வேத புருஷனுக்கும் எங்களுக்கும் புத்தி கோசரமில்லை. நித்திய முக்தானுபாவரே! உமது திவ்ய மங்களாம்சமாகிய ஜீவாத்மாக்கள் சிருஷ்டி-ஸ்திதி-சம்மார காரணங்களால் சுகதுக்கங்களை அனுபவிக்கச் செய்கிற அத் திவ்ய சக்தி இச்சாமாத்திரமே யல்லது வேறில்லை. அதனுல் தம்மை யறியக்கூடவில்லை. உமது சங்கற்ப மாத்திரத்தினுல் உம்மை யறியாமலே பிரவாக ரூபமாய்க் கற்பித்துக் கொண்டிருக்கின்றன. பரமாத்மாவே! தேவ ப்ராஹ்மண க்ஷத்திரியாதி வம்சங்களில் மச்சு-கூர்ம-வராக-நரசிம்ம - வாமன-பரசுராம-ஸ்ரீ ராம-பலராம-பௌத்த - கல்கியாதி அவதாரங்கள் செய்து, தேவரீர் எங்களையும் இம்மூன்று உலகங்களையும் சார்வதா இரக்ஷித்துக் கொண்டிருக்கிறீர்.

ஸ்ரீ ஜகந்நாதரே! இப்போதும் கிருபாப் பிரசன்னராயவதரித்துப் பூமி பாரத்தை நிவாரணஞ்செய்து, பூமிதேவியையும் எங்களையும் சுபகரமாக இரக்ஷியும். ஸ்ரீ யதுவல்லபா! உமக்கு சரணுகதியாகச் சாஷ்டாங்க தண்டன் சமர்ப்பிக்கின்ருேம் என்று பிரார்த்தித்துப், பின்பு ஸ்ரீ தேவகி தேவியைப் பார்த்துத் தெய்வ உபசாரமாக சுப வார்த்தை சொல்லுகின்ருர்கள் : 'கேளும் திவ்ய மாதாவே! பரம புருஷராகிய ஸ்ரீ புருஷோத்தமர் எங்களுக்கும் சர்வ வுலகத்திற்கும் விரோதிகளை நாசஞ்செய்து கிருபையோடும் ரக்ஷிப்பதற்குச் சாக்ஷாத் தமது நிஜாம்சத்தினுல் உமது உத்தம புண்ய கர்ப்பத்தில் அவதரிக்கப்போகின்ருர். மிகவும் உமக்கு மங்களமுண்டாகட்டும். மேலும், கம்சனுல் நேரிட்டிருக்கின்ற பயம் நிவாரணமாகப் போகின்றது. உமது திவ்ய உதரத்தில் அவதரிக்கின்ற மஹா புருஷலக்ஷண புத்திரன் யதுகுலத்தவர்களெல்லாவற்றையும் மங்களமாக ரக்ஷிக்கப் போகின்ருர்' என்று சந்தோஷமாக ஆசீர்வதித்தனர்.

அரசனே! இவ்விதமாக பரமாத்ம ஸ்வரூப லக்ஷணராய் விளங்குகின்ற அந்தப் பரம புருஷரைத் துதிசெய்து, பிரஹ்ம ருத்திராதி சர்வ தேவர்களும் லோக பாலகர்களும் மகரிஷிகளும் அந்தர்த்தியானமாய்த் தங்கள் யதாஸ்தானங்களை யடைந்தனர்கள்.

## நான்காவது அத்தியாயம்

பகவான் வசுதேவ தேவகிதேவியர்களால் செய்யப்பட்ட ஸ்துதிகளை யங்கிகரித்தும், ஸ்ரீ கிருஷ்ண அவதாரம் செய்ததும், அவர் கோகுலத்திற்கு வசுதேவரால் எழுந்தருளியதும் சொல்லப்படுகிறது.

கொடிய இருளை நீக்கி பூமியை விளங்கவைக்கின்ற குளிர்ந்த கிரணங்களை வீசும் வெள்ளியச் சந்திரன் கீழ்த் திசையில் உதிப்பதுபோல், தெளிந்த அமுதம்போலும் அழகுவாய்ந்த தேவகிதேவியி னிடத்தினின்றும் பிரகாசம் பொருந்திய நீலமணியினது நிறம்போலும் திருமேனியுடைய பகவான் உரோகிணி நக்ஷத்திரத்தில் அவதரித்தார்.

பிறகு பகவான் அவதரிக்கிற காலமான ஆவணி மாதம் கிருஷ்ணபக்ஷத்து அஷ்டமி திதி ரோகிணி நக்ஷத்திரம் இப்படிப்பட்ட தோஷ ரகிதமான தினத்தில் நவக்கிரகங்கள் உத்தம ஸ்தானங்களில் வந்து நிற்க, எட்டுத் திசைகளிலும் மங்கள வாத்தியங்க ளொலிக்க, சகல நதிகளுந் தெளிந்து குளிர்ச்சியாய்க் காற்று வீச, சாதுக்கள் மனங்களிக்க, ஆகாயத்தில் கந்தருவர், கின்னரர், கிம்புருடர் முதலியவர்கள் கானஞ் செய்ய, அப்சர ஸ்திரீகள் நடிக்க, தேவர்கள் புட்பமாரி சொரிய, ரிஷிகள் மங்கள வசனங் கூற, தேவகிதேவியிடத்தில் நின்றும் இருள் காலத்தில் சர்வ வியாபகனை ஸ்ரீ பகவான் பூரணச்சந்திரன் போன்ற கண்களும் சதுர்புஜமும் பஞ்சாயுதமும் கண்டத்திற் கௌஸ்துவாபரணமும், அரையினிற் பீதாம்பரமு மணிந்து, நீலமேக வண்ணராய் நவரத்தின கசித கிரீட குண்டல கவசம் மோதிரம் கடகம் முத்துச்சரம் முதலிய திவ்வியாபரணங்க ளணிந்த திவ்விய சரீரத்துடன் அவதாரஞ் செய்தார். வசுதேவர் அளவிலா ஆநந்தங்கொண்டு பெருங்கருணையுடன் அவதரித்த ஸ்ரீமந் நாராயணனை சாஷ்டாங்கமாய்ப் பணிந்து அஞ்சலி அஸ்தராய் சுவாமியை நோக்கி "ஓ மகானுபாவரே! தேவரீருடைய மாயையால் அடியேன் மறந்திருந்தாலு மிப்போது தேவரீர் சாதாரணமான சிசுக்களைப் போலிராமல் தேவர்களுக்கும் அறிதற்கு அரிதான சகல லக்ஷணங்களுடன் திருவவதாரஞ் செய்தபடியால் நீர் ஸ்ரீமந் நாராயணரென்று தெரிந்துக் கொண்டேன். உலகங்களை இரக்ஷிக்கவேண்டி சத்துவகுணமான வெண்மை பொருந்திய சரீரத்தையும் சிருஷ்டிசெய்ய ரஜோகுணமான சிவப்பான சரீரத்தையும் கொண்ட தாம்

இப்போது சங்கரிக்கவேண்டி தமோ குணப்பிரதானமான ஸ்ரீ கிருஷ்ண ரூபத்தைத் தரித்தீர். இப்படிப்பட்ட தெய்வீக மான பலத்துடன் கூடியிருந்தாலும் தேவரீர் தேவகி கர்ப் பத்திலெப்போது அவதரிக்கப்போகிறீரென்று எதிர் பார்த் திருக்கிற கம்சன் கேட்டால் இந்த க்ஷணத்தில் உக்கிரமான ஆயுதமெடுத்துக்கொண்டு கொல்ல ஓடி வருவானுகையால் தேவரீருக்கு கியாபகப் படுத்தினேன்'' என்றார். பின்பு தேவகி தேவியானவள் சுவாமியை நோக்கி "ஈசனே! தாம் சகல ஜீவராசிகட்கும் அந்தர்யாமியாகவும் ஆதியாகவும் அணுவுக்கணுவாயும் மகத்துக்கு மகத்தாகியும் பிரளயகாலத் திலும் அழியாதவராயும் திவ்விய மங்கள விக்கிரக ரூபியாயு மிருக்கின்றீர். கம்சனுல் ஆறு பிள்ளைகளையும் பரிகொடுத் ததை நினைத்து நடுங்கிக் கொண்டிருக்கிற எங்கள் பயத்தை நிவர்த்தி செய்ய தேவரீரே தகுந்தவர்'' என்று பலவாய் தோத்திரம் செய்தாள். ஸ்ரீ பகவான் தேவகிதேவியை நோக்கி "சுவாயம்பூ மனுவந்தரத்தில் பிரசனியெனும் பெயரையுடைய நீயும், சுதசென்று பெயரையுடைய வசுதேவ ரும் களங்கமற்றவர்களாய் சருகையுங் காற்றையும் புசித்து மகா உபசாந்த இந்திரிய முடையவர்களாய் பன்னீராயிரம் தேவருடந் தவஞ் செய்தீர்கள். உங்களிடத்திற் சந்தோ ஷித்து பிரத்தியக்ஷமான வென்னை மோக்ஷத்தை விரும்பாமற் புத்திரனுய்ப் பிறக்க வென் மாயையால் மோகித்துக் கேட்ட படிக்கே வரங் கொடுத்தேன். பின்பு பிரமாவினுல் சிருஷ்டி செய்யுங்களென்று ஆக்கியாபிக்கப்பட்ட உங்களிடத்தில் அப்போது நான் பிரசனிகற்பனு யவதரித்தேன். அதன்பின் காசிபரும் அதிதியுமான உங்களிடத்தில் உபேந்திரனுக அவதரித்தேன். இப்பொழுது உங்களுக்கு முன் ஜன்ம கியாபகம் வருவதற்காக இந்த ரூபமடைந்தேன். இச்சன் மத்தி லென்னைப் புத்திரனென்றும் ஈஸ்வரனென்றும் பாவனைசெய்து நீங்கள் மோக்ஷமடையப் போகிறீர்கள்'' என்று சொல்லி தேவகிதேவி பார்த்திருக்கும்போதே சாதாரண சிசுவாயினுர்.

அப்பொழுது கோகுலத்தில் யோக மாயையானவள் யசோதைக்குப் பெண்ணுய்ப் பிறந்தனள். அந்தச் சமயத்தில் முன்னே பகவானு லாக்கியாபித்தபடி வசுதேவர் தம்முடைய சிசுவை யசோதைக்குப் பிள்ளையாகக் கொண்டுபோய் வைத்து அவள் பெற்ற பெண்ணைத் தானெடுத்துவர யத்தனிக்க, தாம் காவலுக் குட்பட்டிருக்கிற விடத்திலுள்ள கதவுகளும், அதைச் சார்ந்த சுற்றுக் கதவுகள் முதலியதும், இரும்பினுற்



படம் நெ. 12. பக்கம் நெ, 13-A

கம்சன், மாயையால் மயங்கியது.

பண்ணி உழல்மரம் போட்டு பத்திரப்படுத்தியிருந்தும் அந்த யோகமாயையின் பலத்தால் சூரியோதயத்தால் விலகிய இருள்போலப் பூட்டுகள் திறந்தும் கால் விலங்குகளும் கழன்றுவிட்டது மன்றி சகல காவலாளிகளும் மெய்ம் மறந்து சவத்தைப்போலத் தூங்கினார்கள். அச்சமயத்தில் மேகங்கள் பேரிகைப்போற் சப்தித்து கொஞ்ச மழையைப் பொழிய வசுதேவர் சந்தோஷமாய்ச் சுவாமியை எழுந்தருளப் பண்ணுகிறதை ஆதிசேடன் பார்த்து ஆயிரம் பணா முடியாற் குடைபிடித்துக் கொண்டு போயினர். அப்பொழுது பயங்கரமான சுழி நுரை அலையுடனும் பூரணமாய் பிரவாகிக்கிற யமுனையானவள் பூர்வம் சமுத்திரம் ஸ்ரீ ராமருக்கு லங்கைக்குப் போக வழி விட்டதுபோல இடம் தந்தனள். வசுதேவர் அந்த யமுனையைக் கடந்து கோகுலத்திற்சென்று சகல கோபிகைகளுந் தூங்குவதைப் பார்த்து தன் புத்திரனை யசோதையிடத்தில் அவள் தனக்குப் பிள்ளைதான் பிறந்ததென்று எண்ணும்படி வைத்து அவள் பெற்ற பெண் குழந்தையை எடுத்துக்கொண்டுவந்து தேவகி சயனத்தில் வைத்துப்போட்டுத் தாம் பழையபடி யிருந்தனர்.



## ஐந்தாவது அத்தியாயம்



*கம்சன் மாயையினுடைய வார்த்தையை கேட்டு மிகவும் ஆச்சரியமடைந்து மந்திரிகளுடன் யோசித்து பெரியோர்களையும், பிராமணர்களையும், யாகாதி சத்கர்த்தியங்களையும் துன்பப்படுத்த கட்டளை யிட்டான் என்றுச் சொல்லப்படுகிறது.*

பிறகு சிசு அழுவதைக் காவலாளிகள் கேட்டுத் துரிதமாய்ச் சென்று கம்சனுக்குச் சேதி சொல்ல அவன் தனது சயனத்திலிருந்து எழுந்திருந்து இச்சிசு தனக்கு மிருத்யுவென்றெண்ணிக்கொண்டு தேவகி யிருக்கின்ற வீட்டை நாடி வருகையில் வழியிற் றடுக்கி வீழ்ந்து முடிகலைந்து சமீபத்தில் வந்து நிற்கிற கம்சனை நோக்கி தேவகிதேவியானவள் "அண்ணா! அக்கினிக் கொப்பான ஒளியுடனிருந்த என் பிள்ளைக ளாறுவரையும் சங்கரித்தீர். மனக் கவலை கொண்டிருக்கிற வெனக்கு ஓர் பெண் குழந்தை பிறந்தது. இதையாவது தந்து என் குறையை நீக்கவேண்டும் என்று வஸ்திரத்தால் அச் சிசுவை மூடிக்கொண்டு பிரார்த்திக்க, அவளை அதட்டித் தன் பிராணனைக் காப்பாற்றும் நிமித்தம் கை

லிருந்த சிசுவைப் பிடுங்கி இரண்டு கால்களையும் பிடித்து பந்துத்வம் பாபம் தயை முதலியதை மறந்து கல்லின்மேல் மோத யத்தனஞ் செய்கிறபோது, அச்சிசு அவன் கையை விட்டு அவன் தோளிலோர் உதை தந்து ஆகாயத்தி லெழும்பி ஆயுதங்கொண்ட எட்டுக் கைகளுடன் திவ்விய பீதாம்பர திவ்யாபரணம் கந்தம் முதலியவைகளால் அலங் கரிக்கப்பட்டு சித்தர் சாத்தியர் முதலியவர்களாற் றுதிக்கப் பட்டுக் கம்சனை நோக்கி, "அட அரசனே! என்னை நீ பாறைமீது மோதுவதெதற்கு? உன்னை யெதிர்த்து கொல்ல வேண்டியவன் புதிய நிலாவைப்போல ஒரு வகையாய்ப் பிறந்து வளர்ந்து வருகிறான்" எனும் அச்சத்தை விளைவிக் கக்கூடிய உறுதிமொழியைக் கூறிச் சென்றனள்.

கம்சன் யோகமாயை சொன்னதைக் கேட்டு ஆச்சரிய முற்று தேவகி வசுதேவர்களுடைய விலங்கை நீக்கி அவர் களை நோக்கி நான் உங்கள் சிசுக்களைக் கொன்று மகா பாபங் களை சம்பாதித்தேன். அவர்களது ஊழ்வினையே காலனைப் பிறந்து, அவனுலேவப்பட்ட மிருத்யு ஆகாயவாணியாய் என்னையேவிக் கொன்றதேயன்றி நான் கொன்றதேயல்ல. நீங்களச் சிசுக்களுக்கு விசனப்படத் தேவையில்லை. க்ஷமிக்க வேண்டுமென்று வசுதேவரை வந்தனஞ்செய்தனன். அப் பொழுது தேவகி-வசுதேவர்களிருவரும் கம்சனிடத்தில் சந் தோஷித்து உனது வாக்கின்படி வரவேண்டிய கருமம் வந்து தீருமேயன்றி உம்மிடத்தில் நாங்கள் கோபித்துக் கொள்ள வேண்டியதில்லை யென்று கூற, அதைக் கேட்டுக் கம்சன் சந் தோஷமாய் தன் வீட்டிற்குச் சென்றனன்.

தேவகி வசுதேவர்களும் தமது வீட்டில் சுகித்திருந் தனர். கம்சன் அடுத்த நாள் தனது மந்திரிகளுடன் யோசிக்க, முடிவில் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்லும் பொருட்டு ஊரிலுள்ள குழந்தைகளைக் கொல்லும்படி அவர்கள் தீர்மா னித்தார்கள்.



## ஆறுவது அத்தியாயம்



*நந்தகோபர் புத்ரோற்சவ காலத்தில் மிகவும் சந்தோஷமடைந்து கம்சனுக்கு கப்பங்கட்டும் நிமித்தமாய் மதுரைக்கு சென்றதும், அச்சமயத்தில் வசுதேவரைக் கண்டு பேசியதும் சொல்லப்படுகிறது.*

யசோதை தனக்குப் பிள்ளை பிறந்ததென்று மிகவும் மனங்களித்திருக்கையில், நந்தகோபர் பிராமணர்களை கே

தான முதலிய தானங்களாற் சந்தோஷிப்பித்து ஜாதகர்மஞ் செய்தனர். கோபிகைகள் யாவரும் நல்ல வஸ்திரம் ஆபரணம் வாசனை பொருந்திய சந்தன முதலானவைகளால் அலங் கரித்துக்கொண்டு தாமரை மலருக்கொப்பான முகமுடையவர் களாய் வந்து யசோதையைக் கண்டு அக்குழந்தையை மனங் களிக்கப் பார்த்து ஆசீர்வதித்து ஏகாந்தத்திற் பாடியாடி ஞர்கள். கோபாலர்களும் மனங்களிக்கப் பார்த்து குடங் களிற் பால்-தயிர்-நெய்-வெண்ணெய் முதலியவைகளை அனேக மாய்ப் பிராமணர்களுக்குத் தானஞ் செய்தனர். சுவாமி கோகுலத்திற் கெழுந்தருளினது முதல் சகல சம்பத்துகளும் விருத்தியடைந்தன. நந்தகோபர் பசுக்களைக் காக்க வேறே மனிதனை வைத்துவிட்டுத் தமது அரசனுகிய கம்சனுக்கு கப்பங்கட்ட மதுரைக்கு வந்தார். அதை வசுதேவர் கேள்விப் பட்டு ரகசியமாய் நந்தகோபரிருக்கிற விடஞ்சென்று வெகு களிப்புடன் ஆலிங்கனஞ்செய்துகொண்டு ஆசனத்திலிருந்து நந்தகோபரை நோக்கி வெகுகாலம் பிள்ளையில்லாதிருந்த உமக்குப் பிறந்த பிள்ளை சுகமாயிருக்கின்றதா? மாத மும்மாரி பேய்ந்து பிணியில்லாமல் பசுக்கள் மிகவும் பால் கறக்கின் றதா? யசோதைக்குத் தேகம் திடமாய் முலைப்பால் விருத்தியா கின்றதா! எனது குமாரனை இராமன் உம்மைப் பிதாவாக வெண்ணி தன் தாய் ரோகிணியுடன் சுகித்திருக்கிருனு? என் றிவ்வாறு தன் பிள்ளைகளைப் பார்க்கிறதற்கில்லை என்கிற விசனத்தினுல் வினவுகின்ற வசுதேவரை நோக்கி, "உமக்குப் பிள்ளை பிறந்ததற் கடையாள மில்லாமல் மன்மதனைப்போற் பிறந்த பிள்ளைகளைக் கம்சன் கொன்றுலும் அக்கன்னிகையும் ஆகாயத்தில் போய்விட்டதே" என்று துக்கித்துப் பின் பல தைரிய மொழிகளை யுரைத்தனர். நந்தகோபர் அவரை நோக்கி, கோகுலத்தில் வெகுப் பிரமாதம் உண்டாகப்போகிற தென்று எனக்குத் தோன்றுகின்ற தாகையால் நீர் சீக்கிரத் திற் கோகுலம் செல்லுமென்று கூற, அவ்வண்ணம் நந்த கோபர் சென்றனர்.

## ஏழாவது அத்தியாயம்

*சர்வ பிராணிகளுக்கு பயங்கரமாகிய ஸ்வரூபத்தையுடைய பூதனை சுந்தர ரூபத்தைத் தரித்து முலைப்பால் கொடுத்து கிருஷ்ணனை கொல்ல முயன்று மரணத்தை அடைந்தனளென்று சொல்லப்படுகிறது.*

அப்பால் நந்தகோபர் வசுதேவர் சொன்னது முதல் மனதில் பயஞ்சனித்து என்ன தீமை யுண்டாகுமோவென்று

சந்தேகித்திருக்கையில், கம்சனாலே ஏவப்பட்ட கோரரூபி யாயும் முலைப்பால் கொடுத்து சிசுக்களை இரக்கமின்றிக் கொல்லுகிறவளாயுமிருக்கின்ற பூதனை சர்வ லக்ஷணத்துடன் சாதாரண ஸ்திரீயாய் வர, அங்குள்ள கோபாலர்கள் கண்டு மையல்கொண்டு மனமிரங்கி நந்தகோபரிட கிருகத்திலிருக் கின்ற துவார பாலகரை யறியாமல் அவளை உள்ளேகொண்டு போய்விட்டனர். அப்போ தங்குள்ள ரோகிணி யசோதை முதலிய ஸ்திரீகள் திருப்பாற்கடலிற் பிறந்த மகாலட்சுமி நம்மை ரக்ஷிக்கிறது நிமித்தம் இக்கிருகத்திற்கு வந்தனளோ வென்று அவளழகைப் பார்த்து பிரமித்திருக்க, அந்தப்புறத் தில் நீறுபூத்த நெருப்புபோல் விளங்கும் குழந்தையை சாதாரணமான சிசுவென்றெண்ணி அப்பூதனையானவள் குழந்தையின் அருகிற்சென்று தாலாட்டி எடுத்து மடியில் வைத்துக் கொண்டனள். அவள் உண்மையை அறிந்த ஸ்ரீ கிருஷ்ணன் தூங்குவதுபோலிருந்தனர். அந்தப் பூதனை யானவள் குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு வதைக் கும்படி முலைப்பால் கொடுக்க, அவளுடைய ஆவியைச் சர்வேஸ்வரனான ஸ்ரீ கிருஷ்ணன் முலைப்பால் வழியாய் உரிய, அவள் தன் பிராணனுக்குக் கெடுதி வந்ததென்று யோசித்து, உரிகின்ற அக்குழந்தையை நோக்கி "அப்பா நீ முலைப்பால் உண்ணது போதும் போதும் விடுமென்று முறையமிட்டும் அவர் விடாமல் பாலோடுகூட பிராணனையும் உரிஞ்சி விட்டனர். அப்போது பூதனை வீறிட்டுக் கோடை யிடி யிடித்தாற்போல திசைகளில் பிரதித்தொனியுண்டாகும் படி கூச்சலிட்டு முன்னிருந்த உருமாறி பயங்கரமா யிருக் கின்ற ரூபமும் சிவந்த தலைமயிரும் நகத்தைப்போல யீற்றுப் பற்களும் குகைபோன்ற மூக்கும் பெருத்த காதுகளும் நீண்ட ஸ்தனங்களும் சமுத்திர சுழிபோன்ற கண்களுமாய் கைகால் களைப் பரப்பிக்கொண்டு பிராணனை யிழந்து விழுந்தனள்.

அந்தப் பூதனையானவள் விழுந்த சத்தத்திற்குப் பயந்து மூர்ச்சையாயிருந்த கோபாலர்கள் சற்று நேரத் தில் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து நிற்கையில் பூதனை பிணமாயிருக்கிறதையும் அவள் மார்பினில் விளையாடுகிற ஸ்ரீ கிருஷ்ணனையுங் கண்டு நடுங்கி ஆச்சரியப்பட்டுக் குழந் தையை எடுத்து வந்து ரோகிணி யசோதைகளிடத் திலே விட்டார்கள். அப்போது கோபிகைகள் பசுக்களை ஓட்டிக்கொண்டு வந்து அதின் வாலினால் ஸ்ரீ கிருஷ்ண பகவானைச் சுற்றி சாணியால் நெற்றியில் பொட்டிட்டு அப்பனே நீ விளையாடுகையில் கோவிந்தனும், படுக்கையில்

மாதவனும், நடக்கையில் ஸ்ரீ வைகுந்தனும் உட்காருகையில் ஸ்ரீயப்பதியும், போஜனம் பண்ணுகையில் ஸ்ரீமந் நாராயணனும்-சாகினிடாகினி முதலிய பிசாசுகளால் தொந்தரையில்லாமல் காக்கக்கடவரென்று ஸ்ரீ பகவானுடைய கேசவாதி இருபத்துநாலு நாமங்களால் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சிரசு முதல் இருபத்துநாலு அங்கங்களையும் ரட்சா பந்தனஞ் செய்து, ஸ்நானம் பண்ணிவைத்து ஸ்தன்னிய பானங் கொடுத்து நவரத்தினமயமான தொட்டிலில் திருக்கண் வளர விட்டார்கள்.

நந்தகோபர் பூதனையினுடைய பயங்கரமான தேகத்தைப் பார்த்து பூதனையின் சரீரத்தைக் கண்டித்து தூரத்திற் கொண்டுபோய்த் தகிக்க உத்தரவு செய்தார். அப்படித் தகிக்கின்றபோது பதித பாவனரான ஸ்ரீ பகவானால் ஸ்தன்னிய பானஞ் செய்யப்பட்டதினாலே அவள் சரீரம் பரிசுத்தமாகி சாசுவத பதவியை அடைந்தாள்.



## எட்டாவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவான் கம்சனுக்கு சினேகிதர்களாகிய சகடாசுரனையும், திருணாவர்த்தனையும் சம்கரித்ததைச் சொல்லப்படுகிறது.*

பரிக்ஷித்து மன்னனே ! ஒருநாள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஜன்ம நட்சத்திர தினத்தில் யசோதை கோகுலத்திலுள்ள சகல கோபிகைகளையும் வரவழைத்து பலவித வாத்தியங்கள் முழங்க பிராமணர்களால் வேத விதிப்பிரகாரம் குழந்தைக்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்து அலங்கரித்து அதை தொட்டிலில் தூங்கவிட்டு, அந்த ஜன்ம நட்சத்திர மகோற்சவத்திற்கு வந்திருக்கிற பிராமணர்கள் கோபிகைகள் முதலியவர்களுக்கு வெகுமதி செய்யும்போது கம்சனாலேவப்பட்ட சகடாசுரனானவன் சொர்ணத்தினாலும், வெள்ளியினாலும் உறுதியாய்ச் செய்யப்பட்டிருக்கிற வண்டியைப்போல் உருவங்கொண்டு தொட்டிலின் அருகில்வர சுவாமி சகடா சுர னென்றறிந்து கொண்டு பசியினால் அழுகின்றவர்போல் வீறிட்டழ, அதற்கு எவர்களும் வராமலிருக்கையில் தாமரை யிதழ்போன்ற தமது திருவடிகளால் நெருங்கிய அந்த வண்டியை உதைத்தனர். அந்த வேகம் பொறுக்கமாட்டாமல் உரத்த சப்தத்துடன் சகடாசுரன் முறிந்து விழுந்தனன். யசோதை முதலிய கோபிகைகளும் நந்தகோபர் முதலிய கோபாலர்களும் முறிந்த வோசையைக் கேட்டுப் பயந்து ஸ்ரீ கிருஷ்ணனருகிற்

சென்று பார்க்கையில் அக்குழந்தைக்கு பக்கத்துணையாக விருந்த இடைப்பிள்ளைகளவர்களை நோக்கி இந்த வண்டி ஸ்ரீ கிருஷ்ணனுடைய தொட்டிலின் சமீபத்தில் வரவும் குழந்தை கால்படவும் முறிந்து விழுந்ததென்று சொல்ல, அதைக்கேட்டு இந்த விடத்திற்கு வண்டி மாத்திரம் வருமா? பாலனை இந்த ஸ்ரீ கிருஷ்ணன் கால்பட்டதினுல் முறியுமா வென்று பலவாருக எண்ணி இவர்கள் சொல்வது பொய் யென்று அந்தக் குழந்தையின் பிரபாவ மறியாதவர்களாகி ஏதோ பிசாசின் தன்மையாயிருக்கிற தென்றும், குழந்தை பிழைத்ததே போதுமென்றும், பிசாசு முதலியவை அண்டாம லிருக்க பிராமணர்களைக் கொண்டு ஓமஞ்செய்து புண்ணிய தீர்த்தத்தினுல் அந்த ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஸ்நானமும் வேத மந்திரங்களால் ரட்சாபந்தனமுஞ் செய்தும் பிராமணர் களைப் பூசித்தும் அனுப்பினுர்கள்.

இப்படிச் சிலநாள் சென்ற பிறகு ஒருநாள் யசோதை ஸ்ரீ கிருஷ்ணனை மடியில் வைத்துக்கொண் டிருக்கையில் அவள் தாங்கக்கூடாதபடி அதி பாரமாயிருப்பதை யறிந்து குழந்தைக்கு உபத்திரவப்பட ஏதோ நோயுற்ற தென்றுன்னி அது நீங்கவேண்டுமென்று ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்து குழந்தையைக் கீழேவிட்டிருக்கையில், கம்சனுலேவப்பட்ட திருணவர்த்த னென்கிற அசுரன் பெருங் காற்றினுல் தூளெழுப்ப ஆகாயமெல்லாம் இருண்டு கோகுலத்திலுள்ள யாவரும் ஒரு முகூர்த்தங் கண்விழிக்க முடியாதிருந்தனர். அப்போது அவ்வசுரன் சுழற்காற்று ரூபமாக ஓடிவந்து ஸ்ரீ கிருஷ்ணனை எடுத்துக்கொண்டு போய்விட்டான். அப் போது யசோதை கண்கள் தெரியாமல் குழந்தையை விட்ட விடத்தில் கோபிகைகளுடன் தடவிப் பார்த்துக் காணுமை யால் மிகவும் துக்கத்தினுல் அழுதுக்கொண் டிருக்கையில் அசுரன் மேரு முதலிய பர்வதங்களுடன் அனேக அண்டங் களை சரீரத்தில் பொருத்தி யிருக்கிற சர்வேஸ்வரனை ஸ்ரீ கிருஷ்ணனை தூக்கிக்கொண்டு போகிறபோது அவர் வா வர மிகவும் பாரமாகக் கனத்ததை அவன் பொறுக்க மாட் டாமல் இது குழந்தை யல்லவென்று விட்டும் குழந்தை விடாமல் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு இறுக்கியதி னுல் அசுரன் நாக்கைக் கடித்துக்கொண்டு கண் பிதுங்கி அசுர வேடமாய் கல்லின்பேரில் விழுந்து இறந்தான். அவன் மார்பின்பேரில் விளையாடிக்கொண்டிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனை கோபிகைகள் பார்த்துப் பயந்து குழந்தையை எடுத்து வந்து யசோதை கையில் கொடுத்தார்கள். நமனிடத்தில் நின்றும்

விடுபட்ட ஸ்ரீ கிருஷ்ணனை நந்தகோபர் வசுதேவருடைய வாக்கியங்களை நினைத்து மனங்குழைந்து அவர் முதலிய கோபாலர்களும் யசோதை முதலிய கோபிகைகளும் பார்த்து வியந்து திரும்பவும் ரட்சாபந்தன முதலியவைகளைச் செய்திருந்தார்கள்.



## ஒன்பதாவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவானது ஸ்வரூபத்தை தரிசித்து சங்கித்திருக்கையில், காற்கேய முனிவர் வந்து, பகவானுக்கு நாமகரணம் செய்ததும், பகவானது பால்ய லீலைகளும் சொல்லப்படுகின்றது.*

பகவானுடைய மகிமையுள்ள செய்கைகளை கோபாலர்களுங் கோபிகைகளுங் கண்டு மனங்களித்து ஆனந்த பரவசர்களா யிருக்கும்போது, மதுரையில் வசுதேவரானவர் யாதவர்களுக்குப் புரோகிதராயுங் குருவாயுமிருக்கிற காற்கேய மகாரிஷியை வரவழைத்து "நீர் கோகுலத்திற்குச் சென்று நமது புத்திரர்களுக்கு ஜாதகர்மம் நாமகரணம் முதலியவைகளை கம்சன் முதலியவர்களுக்குத் தெரியாமல் செய்யவேண்டும்" என்று கூற, அவர் அவ்வண்ணம் சர்வக்கியராகியும் தயாநிதியாகியு மிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனைச் சேவிக்கலாமென்று மிகவும் சந்தோஷித்து ஆனந்த பரவசராய் கோகுலஞ் சென்றனர்.

நந்தகோபர் அந்த காற்கேயரை எதிர்கொண்டு சாஷ்டாங்க தெண்டனிட்டு அர்க்கிய பாத்திய முதலிய பூஜை செய்து ஆசனத்தி லெழுந்தருளப் பண்ணி உபசரித்து தன் புத்திரனுக்கு நாமகரண முதலியவை செய்யப் பிரார்த்தித்தனர். அவரும் ஜோதிட நூலை ஆராய்ந்து இரகசியமாய் சில கோபாலர்களை வைத்துக்கொண்டு ரோகிணியின் குமாரனுக்கு இராமனென்றும் பலராமனென்றும், யசோதை குமாரனுக்கு கிருஷ்ணனென்றும் வாசுதேவனென்றும் பேரிட்டு, நந்தகோபரை நோக்கி உமது புத்திரனுக்கு அனேக நாமங்களுண்டு. அவரை எவன் அன்புடன் பூசிக்கின்றானோ அவனிந்த லோகத்தில் சகல சம்பத்துகளு மடைந்து பரத்தில் அட்சயமான புண்ணிய லோகத்தையு மடைவனென்று சொல்லி, நந்தகோபரால் பூசிக்கப்பட்டு வெகுமதி பெற்றுச் சென்றனர். கிருஷ்ணன் சகல தேவர்களையும் தாய் தந்தை முதலிய சகல கோபாலர்களையும் பால கிருத்தியங்களால் மனங்களிக்கச் செய்தனன்.

இப்படிச் சிலநாள் சென்றபிறகு ஸ்ரீ ராம-கிருஷ்ணர்கள் தத்தித்தொத்தி நடக்கலுற்றார்கள். இடைப்பிள்ளைகளைக் கூட அழைத்துக்கொண்டு வீடுகள் தோறும் பிரவேசித்து தயிர் பால் வெண்ணெய்களைப் பட்சித்தும் பழமையா யிருக்கிற பால் முதலியவைகளைச் சிநேகிதர்களுக்கும் குரங்கு பூனை இவைகளுக்குக் கொடுத்தும் கைகளைக் கொட்டிக் கொண்டும் கூத்தாடிக் கொண்டும் வெளியில் வருவார்கள். இப்படி அநேக வீடுகளில் ஸ்ரீ கிருஷ்ணன் பிரவேசித்து செய்கின்ற துன்பங்களைப் பொறுக்க மாட்டாமல் கோபிகைகள் எல்லோருமாய் யசோதா பிராட்டியினிடத்தில் சொல்லுகிறார்கள் :

ஸ்ரீ யசோதா! நாங்கள் கன்றுகளை ஊட்டவிட்டுப் பால் கறந்துகொண்டு கன்றுகளைக் கட்டிவிட்டு வீட்டிலுள்ள வேலைகளைப் பார்த்துக் கொண்டிருக்கிற சமயத்தில், இந்த கிருஷ்ணனானவன் எங்கள் வீட்டிற்குள்ளே நுழைந்து கன்றுகளை அவிழ்த்துவிட்டு மிரட்டி மூலை மூலையாக வோடத் துரத்துகிறான். அவைகள் அம்மா அம்மா வென்றலறிக் கொண்டு ஓடுகிறதினாலே எல்லோருமிரண்டு அதிசயிக்க வேண்டியிருக்கிறது. அத்தருணத்தில் எதிரே வந்து நின்று நகைக்கின்றான். ஓ அம்மா! உன் மகனானவன் எங்கள் வீட்டிற்குள் பால் தயிர் வெண்ணெய் முதலியவைகளை வைத்திருக்கும் அரைக்குள்ளேபோய் அவையிருக்கு மிடங்கள் தெரிந்து எல்லாவற்றையும் எடுத்து பானஞ் செய்தும் உண்டும் போதாமல் ஓ கோபிகா! கொஞ்சம் பாலமுது உண்ணத்தருகிறாயோ வென்கிறான், ஓ ஸ்திரீ ரத்நமே! நாங்கள் நாள்தோறும் ஒளித்துவைக்கும் பால் முதலியவைகள் இல்லாமற் போகிறபடியால் அடையாளமாக ஒருவருக்குந் தெரியாமல் உயரமாகக் கட்டியிருக்கின்ற உறியில் வைத்துக் காவலுமிருந்தோம். அப்படியிருக்க எங்களை யறியாமல் இந்தச் செல்வனானவன் எப்படியோ எடுத்துத் தனக்குப் போதுமான வரைக்கும் புசித்து அவைகளைப் பாண்ட முதலியவற்றோடும் வெளியிலே கொண்டு வந்து சிறு குரங்குகளுக்குக் கொடுத்துவிட்டு எங்களைப் பார்த்து இதோ உங்கள் பால் முதலானவையுள்ள பானை முதலியவற்றைக் குரங்குகள் எடுத்துப்போய் பட்சிப்பதைக் கண்டீர்களோ வென்கின்றான்.

ஓ அரசியே! நாங்களிவன் செய்கைகளைக் கேள்வியுற்று அப்போதைக்கப்போது எங்கள் புத்திராதிகளோடு பாலமுது முதலிய ருசிவர்க்கங்களை அனுபவித்து வருகிறோம். அப்படிப்பட்ட எங்கள் வீட்டில் வந்தும் ஒன்றுங் கிடையா திருப்

பதிஞலே இந்தப் பாழ்வீட்டுக்கேன் வந்தேனென்று கோபித்து எங்கள் சிறு குழந்தைகளை யடித்து அழச்செய்து இனியாவது புத்திவருமாவென்று அதட்டுகின்முன். ஓ அம் மணீ! எங்கள் பாலமுது முதலியவைகளை உள்ளறையில் நடு மேட்டில் கட்டியிருக்கிற உறியில் இதரர்களுக்கு எட்டாமல் பத்திரமாக வைத்திருந்தோம். அதை எப்படியோ அறிந்து உள் நுழைந்து ஒருவருக்கும் தெரியாமல் உரலை உருட்டி வந்தமைத்து அதன்மீது மணைகளை யடுக்கி ஏறிப்பார்த்து அப்படியு மெட்டாமற் போனல் கொம்பெடுத்து சிறிய துவாரமாக்கி அதன் மூலமாக ஒழுகுவதை பானஞ்செய்து அந்தப் பாண்டங்களை யுடைத்து விடுகின்முன்.

கோபீஜன வல்லபியான ஸ்ரீ யசோதா! இந்த ஸ்ரீ கிருஷ்ணனைச் சாமான்யமாக நினைக்கப் போகாது. எங்கள் மாளிகையில் விசாலமான மேடை மேல் கட்டு விதானங்களினுள்ளறைகள் நடுவறைகள் எப்போதும் மிகவும் இருட்டாகவே யிருக்கின்றன. அவைகளினுள் இந்த ஸ்ரீ பால கோபால மூர்த்தி சஞ்சரியாத இடமில்லை. அப்படிச் சஞ்சரிக்கும் போது அந்த அறைகளின் அந்தகாரங்களைத் தனது திவ்விய தேஜசினலுண்டாகிய ஒளியால் நீங்கச்செய்து, அந்த மாளிகைக்கு ஒரு மங்கள தீபம்போல விளங்கி, எங்களச்சங்களை நீக்கி, அங்கிருக்கின்ற வஸ்துக்களைப் பிரகாசிப்பித்து, ஒரு நிமிஷத்தில் மின்னல்போல மறைந்து விடுகின்முன். மங்களவதியே! இந்த ஸ்ரீ கிருஷ்ணன் எங்களில்லம் புகுந்து நவநீதங்களை வைத்திருக்கு மிடந்தெரிந்துதான் வைத்தவன்போல எடுத்துக்கொண்டு ஒரு மூலையில் யாருக்குந் தெரியாம லுட்கார்ந்து புசித்துக்கொண்டே நகைக்கின்முன். அந்தச் சமயத்தில் நாங்களறிந்து யாரடா திருடாவென்று அதட்டினல் யாரடி திருடியென்று தான் புசித்தமீதியை எங்கள் வாயில் தடவி வாதுக்கழைக்கின்முன். அம்மா! இந்த ஸ்ரீ கிருஷ்ணன் நவநீத சோர வியாபாரங்களைச் செய்து எங்கள் கிருகங்களிற் புகுந்து நானுவித மாயையான காரியங்களைச் செய்து யாதொன்று மறியாத சாமான்யக் குழைந்தையைப் போலும் எங்கள் சொற்களுக்குப் பயந்தவனைப்போலும் எங்களை மிரண்ட விழிகளால் பார்த்துக் கொண்டு மிருக்கிமுன்.

இப்படிக்கிவர்கள் கோள்கள் சொல்லும்போது ஸ்ரீ பகவான் பயந்தவரைப்போலத் தனது தாயின் மார்பினில் தன்னுடைய சிரசை ஒற்றிக்கொண்டு விளையாடுவதை உற்றுப் பார்த்து அந்தக் கோபிகா ஜனங்களின் சொற்களைக்கேட்டு

அந்த யசோதாதேவி புத்திரனிடத்துண்டா யிருக்கின்ற அன்பினாலே அவர்பேரில் கோபஞ் செய்யாதிருந்தனள். பின்னும் ஸ்ரீ கிருஷ்ணன் கோபிகைகளின் கிருகங்களில் செய்யும் துன்பங்களினால் அவரவர்களந்தந்தக் கிருகங்களி லும் அங்கங்கு தனித்தனியாக ஸ்ரீ கிருஷ்ணனை விளையாட் டாகப் பிடித்துக்கொண்டு இவனுடைய தப்புகளை இவன் தாயினிடத்தில் கைப்பிடியாய் நிரூபிக்க வேண்டுமென்று எண்ணி, அவர்களெல்லாரும் அகப்பட்டான் அகப்பட்டா னென்று சந்தோஷத்தினால் நந்தபத்தினி சமூகத்தில் அழைத்துக்கொண்டு வந்தார்கள்.

அப்போது ஸ்ரீ யசோதாப்பிராட்டி தங்கள் முற்றத்தில் சாவதானமாக ஸ்ரீ முகுந்தனாகிய பாலகிருஷ்ணனை மடியில் வைத்துக்கொண்டு முத்தமிட்டு ஸ்தன்னியத்தை யுண்ணச் செய்து சீராட்டிக் கொஞ்சிக்கொண்டிருக்கின்றதை வந்தவர் கள் பார்த்து ஆ இதென்ன ஆச்சர்யமென்று தங்கள் கையில் பிடித்துவந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானைக் காணாமல் வெட்கித் தலையிறங்கிக்கொண்டு ஒன்றுஞ்சொல்லாமல் பின்னுமதிக அதிசயத்துடன் தங்கள் தங்கள் வீட்டிற்குச் சென்றார்கள். ஒரு நாள் பலராமரும் மற்ற சில பிள்ளைகளும் யசோதையிடம் ஓடிவந்து ஸ்ரீ கிருஷ்ணன் மண்ணைத் தின்றதாக முறையமிட, அவள் உடனே பகவானைப் பிடித்துவந்து மடியிலிருத்தி அவனது வாயைத் திறந்துபார்க்க, அப்பவளத் திருவாய் வழியாய் யசோதை காணுதற்கரிய பல அரிய காட்சிகளைக் கண்டு திடுக்கிட்டாள்.

ஆகாயத்தைக் கண்டாள், ஆகாயத்தை தமது கிரணங் களால் சூழும் சூரியனையும் சந்திரனையும் பிரகாசிக்கக்கண் டாள்; இப்பூமியைக் கண்டாள்; இப்பூமியைச் சுற்றியிருக்கும் பலகடல்களையும் பெரிய உயர்ந்த மலைகளையும் கண்டாள். குளிர்ச்சிபொருந்திய ஆயர்க்குரிய முல்லை நிலத்தையும் கண் டாள்; தன்னையும் கண்டாள். இவ்வளவையும் பகவானது வாயில் கண்டு வண்டுகளால் மொய்க்கப்பெற்ற பசுமையான துளவ மாலையைத்தரித்த நாயகனே இவனென்று துதித் தனள்.

இப்படி பகவானையே தமக்கு புத்திரனாகப்பெற்று அவனது திருவிளையாடல்களைக் கண்டு மகிழ யசோதைப் பிராட்டியும் நந்தகோபரும் என்ன புண்ணியஞ் செய்தார்க ளென்று வினவும் பரிக்ஷித்தை நோக்கி சுகயோகி அருளிச்செய் கிறார். முன் ஜன்மத்தில் துரோணரென்றும் வசுமதியென் றும் இருவர் அரிய தவம் செய்தார்கள். அவர்களை நோக்கி

பிரம்மதேவன் நீங்கள் அனேககாலந் தவஞ்செய்தாலுங் கிடையாப்பொருளாயும் சங்கு-சக்ர-கதா-கோதண்டந் தரித்த வராயு மிருக்கின்ற ஸ்ரீ மந்நாராயணன் உங்களுக்குப் பிள்ளை யாக அவதரிக்கப்போகிறார். நீங்கள் கோகுலத்தில் ஜநியுங்க ளென்றனர். “ அப்படியாயின் ஐயனே ! எமக்கு அச்சுதன் மீது பக்தியுண்டாகும்படி அருளவேண்டு” மென்று தம்பதி கள்வேண்ட, அப்படியே யாகுக வென்றனர் பிரம்மர். அந்த துரோணரும் வசுமதியுமே, இந்த நந்தகோபரும் யசோதையு மாக அவதரித்தார்கள்.



## பத்தாவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ண பகவான் செய்த துஷ்க்ருத்தியங்களை சகியாமல் பகவானை யசோதை கயிற்றால் கட்டியது.

பாரதவம்ச சிகாமணியே! யசோதாப்பிராட்டி ஒரு நாள் தானே தயிர்கடையத் தொடங்கி மிகவும் சிறுத்திருக்கிற இடையில் தரித்த நவரத்தின கசிதமான சுவர்ண ஒட்டி யாணம் விட்டுவிட்டு ஜொலிக்க, புத்ரவாஞ்சையினால் பால் சுரந்து பருத்திருக்கிற இரண்டு ஸ்தனபாரங்களுங் குலுங்கி யசைய, அவைகளின் மத்தியில் மாணிக்கமாலைகள் சிக்குப் பட்டு ஊசலாட, திவ்ய ரத்நங்களிழைத்த கங்கணாபரணங்கள் சப்திக்க, தயிரமுது கடையும் நிலைமத்துக் கயிற்றைப்பற்றி யிருக்கின்ற தாமரைபோன்ற கைகள் சிவக்க இரண்டு செவி களிலும் அணியப்பட் டசைகின்ற இரத்ந குண்டலங்களு டைய காந்தி கபோலங்களில் பிரகாசிக்க, அவற்றிலுள்ள தொங்கட்டங்கள் ஒன்றோடொன்று நெருங்கும் போது சிறு த்வனிகள் செய்ய, களங்கமில்லாத பதினாறுகலைக ளோடுங் கூடிய பூரணச்சந்திரனுக் கொப்பாகிய முகார விந்தத்தில் ஆணிச்சிறு முத்துச் சரங்களைப்போலச் சிறு வேர்வை யொழுக, தனது அளகபாரத்திலணிந்திருக் கிற திவ்விய பரிமள சுகந்த புஷ்ப மாலைகள் தளர்ந்து ஒவ் வொரு புஷ்பமாக நழுவிச் சாதுவாக வருஷிக்க மஹோத்தம வித்வஜனங்கள் தங்களுக்கு நேரிடும் ஜனன-மரணாவஸ்தை நீங்கும்படி ஸ்ரீ பாலகோபால மூர்த்தியினுடைய பால லீலா குண கீர்த்தனங்களைப் பாடிச் சந்தோஷிப்பது போலத் தன் னுடைய திவ்விய புத்திரனாகிய ஸ்ரீ பகவானுடைய குணங் களை ஸ்ரீ கிருஷ்ண நாமசங்கீதத்துடன் அடிக்கடி அப்போ தைக்கப்போது நினைப்பில் வருகின்றதாகிய அவனாசரிக் கின்ற திவ்ய லீலாங்கித கீதங்களை மஹா மதுரமாகிய மிருது

ஸ்வரங்களுடனும் சிரமமில்லாதவளாய் ஆனந்த பரவசை யாய்ப் பாடிக்கொண்டு தயிர் கடைந்தாள்.

ஒரு நாள் யசோதை ஸ்ரீகிருஷ்ணனுக்கு பால் உண் பித்துக் கொண்டிருக்கும்போது அடுப்பில் காயவைத்திருந்த பாலமுது பொங்கியது. அதைப்பார்த்து யசோதாப்பிராட்டி உண்டவரையில் திருப்தி யடையாமல் இன்னும் முலையுண்டு கொண்டிருக்கின்ற சிறு குழந்தையை உபசாரமாகக் கீழே யிறக்கிவிட்டு பாலமுதைப் பாகமா யிறக்கப்போனாள். அப் பொழுது தெறித்த தயிரினுடைய சிறுதுளிகள் நிறையப்பட் டிருக்குந் திருமுகமண்டலத்தையுடைய ஸ்ரீ பகவான் கோபத் தை வகித்துத் திருவதரங்கள் துடிக்க நயனங்களில் சிறு துளியாக ஜலமல்க மிருதுவான கைகளினால் தயிர்கடையும் மத்தை யெடுத்தெறிந்துவிட்டு அதன் கயிற்றை யிளநிலவுக் கொப்பான சிறு பற்களினால் கடித்தறுத்துதறி அந்தத தயிர்ப் பாண்டத்தை யுடைத்து அதிலிருந்த தயிரேடுகளை யெடுத்துச் சாப்பிட்டுக் கொஞ்சிக்கொஞ்சி அழுதுக்கொண்டு ஏகாந்த மான ஒரு வீட்டரைக்குட் போய் அவ்விடத்தில் உயர உறிச் சுருக்கில் பத்திரமாகச் சேர்த்து வைத்திருக்கின்ற நவநீத கலசங்களைத் தான் வைத்தவன்போலக் கண்டுபிடித்து உரலை யுருட்டிக்கொண்டு வந்து நிமிர்த்து அதன் மேலேறி வெண் ணெயை எடுத்துப் புசித்துக்கொண்டிருந்தார். பின் யசோ தை விட்டவிடத்தில் குழந்தையைக் காணமல் அறைகள் தோறும் தேடிவர கண்ணன் தன்னைப் பிடிக்கவரும் அன்னை யைக் கண்டு மிகுதியாய் நின்ற வெண்ணெயை வாரிக்கொண்டு ஓடலுற்றான்.

இப்படி கண்ணன் ஓடுவதை யசோதை கண்டு தனது மேகத்தை யொத்த கூந்தல் அவிழ்ந்து தாழ, தனது நுண் ணிய இடை தள்ளாட, உஜ்ஜீவனத்திற்கு அவசியமான தேர்ந்த பலனைத் தரக்கூடிய நான்கு வேதங்களுடன் தத்துவ விஷயங்களை நன்குணர்ந்து தேர்ந்த தவசிரேஷ்டர்களும் மனதாலும் அறிவாலும் தேடித் தொடர காணவெட்டாத குற்றமிலாத பகவானை பின்தொடர்ந்து சென்றாள்.

இப்படி தன்னை தொடர்ந்தோடி இளைத்து வருகின்ற யசோதைக்கிரங்கி ஸ்ரீ கிருஷ்ணன் தாயாக அகப்பட்டுக் கொண்டனன். அவனை ஒரு கையினால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையிலிருக்கிற சிறுகோலைக்காட்டி அதட்டிப் பயப் படும்படியாக மிரட்டினாள். அப்படி மிரட்டவே அந்த மாய னாகிய ஸ்ரீ பகவான் மகா அபராதஞ்செய்து பயந்தவனைப் போல் நடுநடுங்கி அஞ்சனந் தீட்டிய அழகிய கண்களில் சல



படம் நெ. 13. பக்கம் நெ. 22-A

பகவான், திருவாய் வழியாய் யசோதை பிராட்டியார் அரிய பல காக்ஷிகளைக் காணுதல்.

மொழுக நான்கு திக்குகளையும் மிரண்டு மிரண்டுப் பார்த்துக் கண்பிசைந்து மதுரமாகிய மழலைக்குரலோசையுடன் அழுது கொண்டிருந்தார்.

தாமரை புஷ்பங்களை யொத்த தமது இருபாதங்களை நினைப்பவர் யாவர்க்கும் பெருகுகின்ற கருமச் சேர்க்கையை போக்கும் பசுமையான துளவமாலையைத் தரித்த பெருமானை (கிருஷ்ணனை) தாயாகிய யசோதை பிரகாசம் பொருந்திய வளையலை யணிந்த காந்தள் புஷ்பம்போலும் தனது கரத்தால் ஒரு உரலில் சேர்த்துக் கட்டலுற்றாள்.

ஒரு கயிற்றைக் கொண்டுவந்து அதை ஸ்ரீ கிருஷ்ணனது இடையில் சுற்றினாள். அப்படிச் சுற்றிய கயிறானது முன் பக்கத்துக்குச் சரியாகவிருந்தது. மறுபடியுஞ் சென்று மற்றோர் தாம்பைக் கொண்டுவந்து முடிந்து சுற்றினாள். அதுவும் ஒரு சாண் குறையவிருந்தது. திரும்பவுமோடி ஒரு பெரிய கயிறுகொண்டு வந்து முடிந்துகட்டினாள். அப்போதும் நாலு விரற்கடை குறைந்ததாகத் தோன்றிற்று. பின்னும் எட்டி ஒரு பெரிய தும்பைத் திரித்துச் சேர்த்துப் பந்தித்தாள். அதுவும் இரண்டு விரற்கடை குறைந்ததாகத் தோன்றிற்று. இவ்விதமாக அலைந்தலைந்து ஸ்ரீ பகவானுடைய மாயையிலகப்பட்ட அவள் தனது வீட்டிலிருந்த தும்புகள், தாம்புக்கயிறுகள், அணைக்கயிறுகள் முதலியவைகளைக் கொண்டுவந்தது மன்றி அங்கிருந்து அதிசயப்படுகின்ற கோபிகைகளுக்கும் ஆக்ஞாபித்து அவர்கள் கொண்டுவந்த கயிறுகளையும் முடிந்து கட்டினாள். எத்தனை கயிறுகள் கொண்டுவந்து முடிந்துகட்டியும் இன்னமும் ஒரு விரற்கடை குறைவாக எட்டியு மெட்டாமலுமிருந்தது. அப்போது தாயானவள் மெத்தவும் அலுத்து ஆ ஈதென்ன ஆச்சரியம்! இவனோ சிறு குழந்தை இவனிடுப்புக்கு இத்தனைக் கயிறுகளும் போதாமலிருப்பானேன்! இதென்ன மாயமோ! என்றதிசயப்பட்டாள். அவ்வளவில் * ஸ்ரீ தாமோதரன் தனது அன்புள்ள தாயாகிய யசோதாப்பிராட்டி கயிறுதேடி இளைத்து அலைகின்றதையும் கயிறுகளை முடிந்து வலித்து வலித்து அவள் கை சிவந்து வருத்தப் படுவதையும் கண்டு இரங்கி தமது திவ்ய சக்தியை மறைத்துக்கொண்டுக் கட்டுக்குட்பட்டார். பிறகு யசோதை கண்ணனை உரலுடன் பந்தித்தாள். அப்போது அதிக கயிறுகள் மிகுந்து போய்விட்டன. மகாராஜனே! சகல சராசரங்க

* தாமோதரன்=கயிற்றினால் கட்டப்பெற்றவன்.

ளோடுங் கூடிய அந்தமாகிய அண்டங்களும் அண்டாதி பதிகளாகிய பிரம்ம-ருத்திராதிகளும் வசித்துக்கொண்டிருக்கிற ஸ்வாமியினுடைய திருவுதரமாகிய வயிற்றைக் கட்டவும் அந்தப் பகவானை வசஞ்செய்துகொள்ளவும் அந்த யசோதைக்குச் சக்தியுண்டா ? களங்கமற்ற தாய் வருத்தப்படுகிருளென்று பக்தபராதீனனான ஸ்வாமி தாமே கட்டுண்டதேயன்றி வேறில்லை.

ஒருகால் குபேரனுடைய புத்திரர்களாகிய நளகூபர-மணிக்கிரீவர்கள் ஸ்ரீமந் நாரத பகவானால் சபிக்கப்பட்டு அச் சாபவசத்தினால் இரட்டையாகிய விருட்ச ரூபத்தையடைந்து ஸ்ரீ நந்தகோபருடைய வீட்டின் பின்புறக்கடைத் தோட்டத்தில் விருத்தியடைந்திருந்தார்கள். இவ்விதமாயிருக்கின்ற அந்த இரண்டு விருட்சங்களையும் ஸ்ரீ பக்தபராதீனனாகிய சுவாமி கிருபையாகப் பார்த்தார்.



## பதினேழுவது அத்தியாயம்



*நளகூபர மணிக்கிரீவர்கள் சாப நிவர்த்தியும், அவர்களால் செய்த ஸ்துதியும், அவர்களை பகவான் அநுக்கிரகித்தாரென்றும் சொல்லப்படுகிறது.*

இப்படி அருளிச்செய்த சுகமுனிவரை நோக்கிப் பரிக்ஷித்து மன்னன் நாரதர் அவ்விரு யட்சர்களை விருட்சரூபமாக சபித்ததேதற்கென்று வினவ, சுகமுனிவர் அருளுகிருர்:

குபேர புத்திரர்களான நளகூபர மணிக்கிரீவர்களிருவரும் வெகு பராக்கிரமசாலிகள். மன்மதனுக்கொப்பான சவுந்தரியவான்கள். இவர்கள் கைலாசத்தில் சிவனுக்குப் பணிவிடைசெய்து வருகையில் ஒருநாள் மதுபானஞ்செய்து அந்த பர்வதத்தின் அடிவாரத்தில் வசந்தருது முதலிய ஆறு ருதுக்களினலுண்டான புஷ்பங்கள் பழங்கள் நிறைந்த வனத்தில் கங்கா நதியைச் சார்ந்த தாமரை யோடையில் அப்சர ஸ்திரீகளுடன் ஜலக்கிரீடை பண்ணிக்கொண்டிருக்கையில் அவ்விடத்தில் வந்த நாரதரைக் கண்டு வெட்கி நிர்வாணமாயிருந்த ஸ்திரீகள் தங்கள் தங்களுடைய ஆடைகளை யெடுத்து அணிந்துக்கொண்டு மறைய, இவர்களிருவரும் மதுபான மயக்கத்தாலொன்றுந் தெரியாமலும் வஸ்திரம் அணிந்துக்கொள்ளாமலும்தன்னை எதிர்கொண்டு அர்க்கிய பாத்திய முதலியவற்ருல் பூஜியாமலும் மரம்போல

நின்றவர்களைக் கண்ட நாரதருக்குக் கோபம்வந்து முப்பத் தாருயிரவருடம் மருதமரமாயிருந்து பின்பு ஸ்ரீ கிருஷ்ண னுடைய திருவடி சம்பந்தத்தால் இந்த பாகவதபசாரம் போய்ப் பரிசுத்தமாய்சொர்க்கமடைவீர்களென்று சொன்னார்.

அதைக் கியாபகத்தில் வைத்த ஸ்ரீ கிருஷ்ணன் அந்த உரலுடன் வெளியில் பிரவேசித்து இரண்டு பிரிவாய் முளைத் திருக்கிற விருட்சங்களின் நடுவில் புகுந்து புறப்பட்டபோது உரல் வராமல் முரண்டிக்கொண்டதை வேகமாயிழுக்க அந்த மரம் முறிந்து விழுந்தது.

அதிலிருக்கிற குபேர புத்திரர்கள் சாபவிமோசனர் களாய் பூர்வ சரீரத்தை அடைந்து நாரதர் வாக்கியத்தை நினைத்துக்கொண்டு சமீபத்திலிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணனைத் தண்டனிட்டுத் தோத்திரஞ் செய்கின்றார்கள்! அப்ராகிருத திவ்விய மங்கள ரூபியாயும், சகல பிராணிகளுக்கும் ஆதி யாயும், பிரளயகாலத்தில் நாசமில்லாமல் நாபிக்கமலத்தில் பிரம்மதேவனை சிருஷ்டி செய்து, அவருடைய கோபத்தில் நின்றும் உருத்திரனை சிருஷ்டி செய்தவராயும், சூட்சுமத்தில் சூட்சுமராகியும், ஸ்தூலத்தில் ஸ்தூலராகியும், சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களுக் குரியவராயும், சேதன சேதனங்களைச் சரீரமாகப் படைத்து சகல லோகத்திற்கும் சுகத்தைக் கொடுக் கிறவராயும், யாதவர்களுக்கு பதியாயுமிருக்கிற தேவரீரை நமஸ்கரிக்கின்றோம். தேவரீருடைய பிரபாவங்களை எங்களு டைய வாக்கினால் கீர்த்தனஞ் செய்யவும் காதுகளால் கதை களைக் கேட்கவும், கைகளால் கைங்கரியஞ் செய்யவும், மன தால் திருவடிகளை தியானிக்கவும், கண்களால் தரிசிக்கவும், இப்படியாகக் கிருபை செய்யவேண்டும். நாங்கள் கைலாசாதி பனை தொழுதற்கு நாரதர் அனுக்கிரகத்தால் கிடைத்த தேவரீருடைய தரிசன மகிமையால் ஜன்மாந்திரத்திற்செய்த பாபமும் நாசமடைந்து மோட்சத்திற் குரியவர்களானோ மென்று நமஸ்கரித்து அஞ்சலி செய்துக்கொண்டு நிற்கின்ற வர்களை ஸ்ரீ கிருஷ்ணசுவாமி கிருபாநோக்கத்துடன் அரு ளிச்செய்கிறார்:

செல்வச்செருக்கினால் கர்வமடைந்த உங்களுக்கு நாரதர் தயாளுவாகையால் அனுக்கிரகஞ் செய்தாரென்று நான் அறிவேன். அவருடைய வாக்கியம் சத்தியமாக வேண்டு மென்று உங்களண்டையில் நான் வந்தேன். இப்போது உங்களுடைய பாபம் சூரியோதயத்தால் நாசமடைந்த இருள் போலாயிற்று. என்னிடத்தில் நிரந்தர பக்தியுடையவர்களாய் உங்களிட லோகத்திற்குப் போங்களென்று அனுக்கிரகித்த

ஸ்ரீ கிருஷ்ணனைப் பிரதட்சணஞ்செய்து நமஸ்கரித்து திவ்விய விமானரூடர்களாய் ஆகாயத்திலெழும்பி தங்களுடைய லோகஞ் சேர்ந்தார்கள்.

---

## பன்னிரெண்டாவது அத்தியாயம்

பகவான் நந்த கோபர் முதலான கோபால கோபிகா ஜனங்களுடன் பிருந்தாவனத்திற் பிரவேசித்து வத்சாசூரனையும், பகாசூரனையும் சம்மரித்தாரென்று சொல்லப்படுகிறது.

மன்னர் மன்னனே! கோபிகா ஸ்திரீகளந்த மருத விருட்சங்களடிவேரோடே சாய்ந்து விழுந்தபோது உண்டாகிய மகா பயங்கரமான சப்தத்தைக் கேட்டு இது என்ன அதிசயம்! நிர் நிமித்தமாய் இடிவிழுந்ததோவென்று பயந்து சந்தேகமுற்று வயிற்றைப் பிசைந்து கையை நெறித்துக் கொண்டு ஓடி வந்தார்கள். கோபாலர்களெல்லாம் உருண்டு திரண்டு வந்தார்கள். நந்தகோபர் யசோதை ரோகிணி முதலானவர்களும் அந்தச் சப்தத்தைக் கேட்டு மெத்தவும் பிரமித்தார்கள். இப்படிப் பயந்த ஊரிலுள்ள எல்லாருஞ் சேர்ந்து அவ்விடத்திற்கு ஓடிவந்து பூமியில் வீழ்ந்திருக்கின்ற அந்த இரண்டு மருதவிருக்ஷங்களையும் அவ்விடத்தில் உரலுடன் கட்டப்பட்டவராய் நிர்ப்பயராய் எல்லாரையுங் கடாக்ஷித்துக்கொண்டு பிரத்தியட்சரா யிருக்கிற ஸ்ரீ பாலகோபால கிருஷ்ணரையும் பார்த்து ஆச்சரியத்துடன் இதென்ன உற்பாதமோ ராட்சஸ மாயையோ ஒன்றுந் தெரியவில்லையே யென்று நானாவிதமாக நினைத்து சஞ்சல முடையவர்களாய்ப் பயந்து பிரமித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அங்கிருந்து இவ்வளவையும் பார்த்துக்கொண்டிருந்த சில சிறுவர்கள் நடந்த யாவையும் சொன்னார்கள். அதை யாரும் நம்பமுடியா திருந்தனர்.

பின் ஸ்ரீ நந்தகோபர் தமது அருந்தவப் புத்திரன் கட்டுடனிருக்கும்போது நாமென்ன இப்படி மயங்கி யிருக்கிறோமென்று துடிதுடித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்திற்கு வந்து சீக்கிரமாக உரலின் கட்டை யவிழ்த்து விடுத்துக் கண்களிலே ஜலம் பெருக வுள்ளங்களிக்க எடுத்து மார்போ டணைத்துக்கொண்டு உச்சிமோந்து செல்வமாக முத்தாடிக் கொண்டிருந்தார். அத்தருணத்தில் ஸ்ரீ யசோதாப் பிராட்டியாகிய தாயானவள் கையேந்தி யழைத்தாள். அப்போது பகவான் நந்தகோபர் மடியில் நின்றுத் துள்ளிக்



படம் நெ. 14. பக்கம் நெ. 28-A.

பகவான் பகாஸுரனை ஸம்ஹரித்தது.

கீழேயிறங்கித் தாயார் கையின்மேலேறினர். தாயானவள் பிள்ளையை யெடுத்துக்கொண்டு வீட்டிற்குள்ளே போய்விட்டாள். உடனே யாவரும் தங்களில்லம் போய்ச்சேர்ந்தார்கள். பின் பகவான் வழக்கப்படி பல விளையாடல்களை சகலரும் சந்தோஷிக்கும்படி புரிந்துவந்தனர். ஓர் நாள் நாதனுகிய ஸ்ரீ பகவான் வீதியில் விளையாடிக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் ஒரு அம்மையார் நாவற்பழம் விற்ருள். அக்குரலோசையைக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ணன் அதிவேகமாயோடி வந்து தன்னுடைய இரண்டு கரங்களிலும் தானியத்தை யெடுத்துக்கொண்டு கூத்தாடிக்கொண்டே வந்து அந்தப் பழம் விற்கின்ற அம்மையாரைக் கூப்பிட்டு வாராய் கிழவி! நானிரண்டு கைகள் நிறையத் தானியங் கொண்டுவந்தேன், உன் படியினுல் இந்தத் தானியத்தை யளந்துக்கொண்டு எனக்குப் பழங்களைத் தரவல்லையோ வென்ருர். இவர் கூத்தாடிக்கொண்டே வந்தபோது இவர் திருக்கைகளிலிருந்த தானியங்களெல்லாம் மாணிக்க மயமான திருவாழிகளணிந்த திருவிரற் சந்துகளில் சிந்திப்போய் விட்டன. ஆயினும் அந்த ஸ்ரீதானுகிய ஸ்ரீ பகவானுடைய கிருபாவாஞ்சை பெருகாநின்ற மகா மதுரமாகிய வசனங்களைக் கேட்டு அந்தப் பழக்காரி ஆநந்தித்துச் சந்தோஷத்தையுடையவளாய் என்னப்பனே வாவென்றும் என்னருந்தெய்வமே வாவென்றும் மிகவும் ஆநந்தத்துடன் அழைத்து நல்ல பழங்களைப் பொறுக்கி அபயவரந்தாங்கி இருக்கத்தக்க இரண்டு கரங்கள் நிறையத் தந்தாள், அப்பொழுது சுவாமி தந்த அந்தத் தானியங்கள் கொஞ்சமாயிருந்த போதிலும் அவள் கூடை நிறைந்து அவைகளனைத்தும் திவ்ய மாணிக்க மணிகளாய் விட்டன. அவற்றைக் கண்டு அப் பழக்காரி பிரமித்து நின்ருள். அப்படி நின்றவளை ஸ்ரீ பகவான் கிருபையாகப் பார்த்து, அம்மா உனது பொருளைக் கொண்டு போவென்று சந்தோஷமாகச் சொல்லி யனுப்பிவிட்டு அந்தக் கனிகளைத் தன்னுடன் கூடி விளையாடுகின்ற ஸ்நேகிதர்களாகிய ஆயர் புத்திரர்களான சிறுவர்களுக்கு அன்புடன் கொடுத்துத் தாமும் அமுது செய்து குரங்குகளுக்கும் போட்டு அந்தக் கோகுலத் திருவீதிகளில் விளையாடிக் கொண்டிருந்தார்.

இப்படிக்குச் சிலநாள் சென்றபிறகு ஒருநாள் ஸ்ரீ நம்பி மூத்தபிரானுடைய தாயாகிய ரோகிணி தேவியானவள் யமுனு நதிதீர்த்த வோடையில் தீர்த்தமாடி வருகின்ற மார்க்கத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானும் பலராமனுஞ் சில கோபால

பாலர்களுடன் கூடி மிகவும் ஆதிவினோதமாக வெகுநேர மாய் விளையாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்து அன்புடனே யழைத்தார்கள். அவள் வார்த்தையை லட்சி யம் பண்ணுமலிருக்கையில் வீட்டிற்கு வந்து யசோதையுடன் சொல்லி யனுப்ப அவள் வெளியில் வந்து ஓடி விளையாடுகிற பிள்ளைகளைக் கண்டு வாடா குழந்தாய்! அரவிந்தாக்ஷா! ஓடிவா நீயும் உனது தோழர்களும் இளைப்பை அடைந்தீர் கள். விளையாட்டை நிறுத்தி வாருங்களென்று கூப்பிடுகிற மாதாவான யசோதையின் குரலைக்கேட்டு விளையாடுவதை விட்டு நின்ருர்கள். பிறகு அவர்களை அன்புடன் அழைத் துப்போய், அன்றையதினம் ஸ்ரீ கிருஷ்ண ஜன்ம சுபதின மாதலால் அவர்கள் யாவருக்கும் மங்கள ஸ்நானஞ் செய் வித்து திவ்யாபரணங்களால் அவர்களை அலங்கரித்து அறுசுவை ரசவர்க்கத்துடன் போஜனம் புசிப்பித்து ஸ்ரீ கிருஷ்ண சுவாமி கையால் பிராமணர்களுக்கு அநேக கோதான முதலியவையுங் கொடுத்து சந்துஷ்டி யடைந் திருக்கையில், ஸ்ரீ பகவானுக்கு பிருந்தாவனம்போக இச்சை வந்து கோகுலத்திலிருக்கிற கோபாலர்களிற் சிறந்தவனை கோபாலனெனும் ஒரு பெரியவனிடத்தில் ஆவேசித்து நந்தகோபர் முதலிய கோபாலர்களை நோக்கி "அசுரர்களால் பல துன்பங்கள் நேறிடுவது, பிருந்தாவனத்திற்குப் போனல் நின்றுவிடும்" என்ன, நந்தகோபரும் அதற்கிசைந்து பிருந்தாவனத்தில் மிகச் சிறப்பான மனைகளை ஏற்படுத்திக் கொண்டு ஒரு நல்லநாளில் தமது பந்து சிநேக வர்க்கங்க ளுடன் மங்களமாக குடிபோயினர்.

இராம கிருஷ்ணர்க ளிருவரும் மற்ற இடப்பிள்ளைக ளுடன் மாடு மேய்க்கலுற்றனர். யமுனைக் கரையில் இவர்கள் மற்ற நண்பர்களுடன் பலவிதமாக விளையாடி வருவார்கள்.

வத்சாசுரன் கன்றுரூபமாய் வந்தது

ஒருநாள், இராம கிருஷ்ணர்களைக் கொல்ல வத்சாசுரன் எனும் கம்சனைச் சார்ந்தவன் கன்று உருவங்கொண்டு கன் றேடே கலந்திருப்பதை ஸ்ரீ கிருஷ்ணன் பலராமருக்குக் காட்டி, இவன் வத்சாசுர னென்கிறவன்—நம்மைக் கொல்ல சமயம் பார்த்திருக்கிற னென்றறிவித்து, அதின் பின்னங் காலைப் பிடித்துத் தூக்கி விளாமரத்தின் மீதில் மோதி சங்க ரித்துப்போட்டார். அப்போது இடப்பிள்ளைகள் ஸ்ரீ கிருஷ் ணனை தோத்திரஞ்செய்ய தேவர்கள் புஷ்பமாரி பொழிந்து துந்துபி வாத்திய முதலியவைகளை முழக்கிக் கொண்டு சொர்க்கத்திற்குப் போனார்கள்.

அப்பால் ஸ்ரீ கிருஷ்ணன் தோழர்களுடன் கன்றுகளுக்குத் தண்ணீர் காட்டி நிழலில் நிறுத்தி யமுனைக்கரை மணல் திட்டினில் கட்டமுதைப் பதார்த்தத்துடன் போஜனஞ் செய்து, கரையேறி வருகையில் ஒரு புதுமையான பிராணியை பலராமனும் இடப்பிள்ளைகளும் பார்த்து பயந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணன் புன்சிரிப்புடன் கரையேறி வருவதை அவ்வசுரன் பார்த்து கைலாச பர்வதம்போல வெளுத்த சரீரமும் வச்சிரத்துக்கொப்பான மூக்குடன் கொக்கு உருவங்கொண்டு தன்னிட இறகினால் தூள்களை வாரி இறைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனை மூக்கினால் விழுங்கினான். அப்போது அவன் நெஞ்சில் அக்கினிபோல் கொளுத்த அதைப் பொறுக்கமாட்டாமல் கீழே யுமிழ்ந்தனன். அவன் உமிழ்கிற வரையில் பலராமனும் இடப்பிள்ளைகளும் வருத்தமுற்றார்கள். அப்பாலந்த ஸ்ரீ கிருஷ்ணன் பகாசுரனது மூக்கைக் கிழித்துக் கொன்றுபோட்டார். அப்போது இடப்பிள்ளைகள் தோத்திரஞ் செய்தார்கள். பலராமரோடிவந்து தம்பியை ஆலிங்கனஞ் செய்து சந்தோஷித்தார். தேவர்கள் புஷ்பமாரி பொழிய, தோழன்மார்களுடன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு பிருந்தாவனத்திற்கு வந்து சகல கோபாலர்களுடனும் இச்சேதி சொல்ல அதுகேட்டு நந்தகோபன் முதலியவர்களிந்த ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்தநாள் முதல் கோகுலத்திலே மகத்தான ஆபத்துக்களை அனுபவித்தான். இவ்விடத்திலும் அந்த ஆபத்து ஒழியவில்லையே என வருந்தி பகவானைப் பிரார்த்தித்து, முன்னே ஸ்ரீ கிருஷ்ணனிட ஜாதக பலன் அநேகவிதமா யிருக்குமென்று சொன்ன கர்காசாரியர் வாக்கியத்தை நினைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வருகிற ஆபத்துக்கள் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்குமென்று சந்தோஷமாயிருந்தார்கள். அப்போது வனங்களுஞ் செழித்துப் பசுக்கள் இரட்டிப்புப் பால் கறந்துக்கொண்டு செழுமையாயிருந்தன.



## பதின்மூன்றுவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவான் துராத்மாவாகிய அகாசுரனை சம்மரித்தாரென்று சொல்லப்படுகிறது.*

ஒரு நாள் காலையில் ஸ்ரீ கிருஷ்ணன் இடப்பிள்ளைகளை வேணுநாதத்தினால் கூப்பிட, அப்போது சகலரும் நித்திரை தெளிந்து ஸ்ரீ கிருஷ்ணனருகில் வர, அவர்களை நோக்கி இன்றைக்கு நாமெல்லோரும் வனத்திலிருக்க வேண்டியிருக்

கிறது. ஆகாரத்தைச் சேகரித்துக்கொண்டு வாருங்களென்று கூறி, இராமகிருஷ்ணர்களிருவருந் தங்கள் கன்றுகளை யோட்டிக்கொண்டு போனார்கள். அப்படியே இடைப்பிள்ளைகளும் நானாவித ஆகாரவகைகளைச் சேகரித்துத் தங்கள் கன்றுகளையும் ஓட்டிக்கொண்டுபோய் வனத்து நிழலிலே விட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்டிலிருக்கிற தளிர்களையுங் காய்களையும் சிலர் மாலையாகக்கட்டி கழுத்திற் போட்டுக்கொண்டும், சிலர் புஷ்பங்களினால் அலங்கரித்துக் கொண்டும், சிலர் பூங்கொத்தைத் தலையிற் செருகிக்கொண்டும், சிலர் மயில் தோகையால் அலங்கரித்துக் கொண்டும் சிலர் வெள்ளைக் குன்றிமணி செவப்புக் குன்றிமணிகளை கோர்வையாகக் கோர்த்து அங்கங்களில் அணிந்துக்கொண்டும். யமுனா நதி மணல் திட்டிலே உட்கார்ந்து போஜனம்பண்ணுகையில் பரிகாசமாய் ஒருவனுடைய அன்னத்தை ஒருவன் திருடி அவன் கண்டால் கொடுத்து விடுகிறதும், கொஞ்ச தூரம் போய் படுத்து ஒளித்துக்கொள்ளுகிறதும், சிலர் ஸ்ரீ கிருஷ்ணனை ஓடிவந்து சேஷ்டிக்கிறதும், சிலர் புள்ளாங் குழல் ஊதுகிறதும், சிலர் குரங்குகளுக்குச் சரியாய் மரமேறு கிறதும் அவைகளோடு விளையாடுகிறதும், தவளையைப் போலத் தத்தித்தத்தித் தாண்டுகிறதும், சிலர் நதிகளிலும்தடாகங்களிலும்மூழ்கி விளையாடுகிறதுமாகப் பலவிதமாக விளையாடினார்கள். அரசசிரேஷ்டனே! பரமயோகீசுரர்களாலும் அடைவதற் கருமையான ஸ்ரீ பகவானை இந்தச் சிறுபிள்ளைகள் தங்கள் நேத்திரங்களுக்கு சாக்ஷாத்காரமாக எளிதில் சேவிக்கவும் ஸ்பரிசிக்கவும் ஆலிங்கனஞ் செய்யவும் கூடியுண்ணவும் வேடிக்கையாக விருக்கவுமான பேற்றைப் பெற்றார்களே அவர்களை நான் என்னவென்று தோத்திரஞ்செய்வேன்.

அகா சூரன் மலைப் பாம்பாகிறது.

இப்படி விளையாடுகின்ற சிறுவர்களையும் ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களையும் கம்சனுக்கிணையின்படி வந்து அகாசூரன் பார்த்து, நம்முடன் பிறந்த பகாசுரனையும் பூதனையையும் சில நமது பந்துக்களையுங் கொன்ற இவனையும் இச்சிறுவர்களையும் கன்றுகளையும் ஒருமிக்க விழுங்கி நாசஞ் செய்வேன் என்று நினைந்து பர்வதாகாரமான மலைப்பாம்பின் சொரூபத்தை வகித்துக் குகையையொத்த நாசியையுடைய அகோரமான வாயைத் திறந்து பூமி மட்டத்தில் யாவர்களும் நுழையும்படி படிகளிருப்பது போல கீழுதடும் மேகமண்டலமளாவிய மேலுதடும் மலைச்சந்துகளையொத்த கோரைப் பல்லின் நடுச்சந்துகளும் பர்வத சிகரம்போன்ற பல்லின்

வரிசைகளும் விசால மார்க்கம்போலிருக்கிற நாக்கின் பிளப்பும் ஊழிப்பெருங் காற்றுக்கொப்பாகிய சுவாசமும் எரிகின்ற தீப்போன்ற கண்களும் விளங்கும்படி இவர்கள் வருகின்ற மார்க்கத்தில் நுழைந்துபோக வழியில்லாமல் படுத்துகொண்டிருந்தான். அவனைக் கோபாலர்கள் கண்டு இப்படிப்பட்ட ஜந்துவை இதுவரையிற் கண்டதில்லை. இது லோகத்தையெல்லாம் விழுங்கி விடும்போலிருக்கிறது என்று அனைவரும் பயந்து நிற்க, அந்த மலைப்பாம்பானது இடைப்பிள்ளைகளையும் கன்றுகளையும் விழுங்கிப் பின்பு ஸ்ரீகிருஷ்ணனையும் விழுங்க யத்தனப்பட்டது, அப்போது ஸ்ரீகிருஷ்ணன் தமக்குத் தோழன்மார்களாயும் தமது திருவடிகளைச் சரணமடைந்தவர்களாயுமிருக்கிற இடைப்பிள்ளைகள் ஆபத்தை அடைந்தார்களே, அவர்களைச் சீக்கிரத்தில் காக்கவேண்டுமென்று திருவுளம்பற்றி அந்த அகாசுரன் வாயிற் பிரவேசித்தார். அப்போது சகல தேவர்களும் அகாசுரன் வாயில் ஸ்ரீ கிருஷ்ணன் பிரவேசித்தாரே என்ன துன்பம் வருமோவென்று விசனப்பட்டுக்கொண்டிருக்கையில், அந்த அகாசுரன் மெத்தக் களிப்புடன் அவர்களைப் புசிக்க யத்தனித்தான். அவர்களைப் பக்ஷிக்கிறதற்கு முன்னமே இவனைச் சங்கரிக்க வேண்டுமென்று நிச்சயித்து அவன் வயிற்றில் பகவான் விருத்தியடைந்தார். அப்பாலந்த அசுரன் உள் நுழைந்த ஸ்ரீ கிருஷ்ணன் வளர்தலைப் பொறுக்கமாட்டாமல் நெஞ்சடைபட்டுக் கண்விழி பிதுங்கி நாக்கை நீட்டிக்கொண்டு இறந்தான். அப்போது அவன் தலையைப் பிளந்துகொண்டு முன்னே ஸ்ரீ கிருஷ்ணர் வெளியே வந்தார். இடைப்பிள்ளைகளுங் கன்றுகளும் அவன் விஷாக்கினியால் வாராமலிருக்கையில் ஸ்ரீ பகவான் கிருபை கூர்ந்து கடாக்ஷித்தார். அந்தப் பார்வையின் பிரபாவத்தினாலே தொந்தரை நீங்கி வெளியில் வந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனுக்கு விரோதியானாலும் அவர் திருமேனி சம்பந்தப் பிரபாவத்தால் சகல பாபமும் போய் அந்த அசுரனிடத்திலிருந்து ஒரு ஒளியுண்டாகி ஸ்ரீ கிருஷ்ணனைப் பிரதக்ஷணஞ்செய்து அவரிடத்திலேயே லயித்தது. அந்த ஆச்சரியத்தை சகல தேவர்களும் பார்த்து புஷ்பமாரி சொரிந்து, அப்ஸர ஸ்திரீகள் நடனஞ்செய்ய, சுவாமியைத் தோத்திரஞ்செய்து தங்கள் லோகத்தை அடைந்தார்கள். இராமகிருஷ்ணர்கள் முதலிய சகல கோபாலர்களும் கன்றுகளுடன் சுகமாயிருந்தார்கள்.



## பதினொன்காவது அத்தியாயம்

ஸ்ரீ பகவானுடைய லீலாநுபவங்களை பார்த்துக்கொண்டிருந்த சதுர்முக பகவான் கோபால சிறுவர்களையும், கன்றுகளையும் கொண்டுபோய் ஒளித்து வைத்தாரென்று சொல்லப்படுகிறது.

அசத்தான விஷயங்களில் பிரவர்த்திப்பதினின்றும் மனதை நன்னெறியில் திருப்பி அதிமதுரமான ஹரிசரிதத்தை அன்புடன் கேட்கும் ஆரியனே! அகாசுரன் வயிற்றினிலிருந்தமையால் மிகவும் இளைப்படைந்திருக்கிற இடைப்பிள்ளைகளையும் கன்றுகளையும் விசாலமாயும் மனோகரமாயும் சமீபத்தில் தாமரைப் பொய்கையுடன்கூடிய மிகவுங் குளிர்ச்சி பொருந்திய யமுனாநதி மணல்திட்டிற்கு அழைத்துக்கொண்டு போய் அந்த இடைப்பிள்ளைகளை நோக்கி ஸ்ரீ கிருஷ்ணன் ஒரு வார்த்தை அருளிச்செய்கிறார்: "நாமெல்லோரும் இவ்விடத்தில் போஜனம் பண்ணுவோம். நீங்கள் கன்றுகளுக்குத் தண்ணீர் காட்டிக் குளிப்பாட்டிச் சமீபத்தில் புல்லுள்ள விடத்தில் மேயவிடுங்கள்" என்று ஆக்கியாபிக்க, அவ்வண்ணம் செய்து கோபாலர்களும் மணற்குன்றில் தங்கள் சிக்கத்திலிருக்கிற நானாவித அன்னங்களைக் கையிலெடுத்துக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நாலுபக்கத்திலுந் தாமரைக் காயைச் சுற்றின இதழ்போல சூழ்ந்துக்கொண்டு சிலர் அவருடைய முகத்தைப்பார்த்தும், சிலர் அன்னங்களைப் புஷ்ப இதழ்களில் வைத்தும் சிலர் இலைகளிலும் சிலர் மாந்தளிர் முதலியவைகளிலும் இப்படி நானாவித பாத்திரங்களில் அன்னங்களை வைத்துக்கொண்டு வெகு களிப்புடன் போஜனஞ்செய்தார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் தமது திருக்கையிலிருக்கிற புள்ளாங்குழலை அரையிற் செருகி இடது கட்கத்தில் வஸ்திரமும் ஊதுகிற மாட்டுக்கொம்பும் இடது திருக்கையில் ததியோதனத்தையும் வைத்துக்கொண்டு கோபாலர்கள் நடுவிலிருந்து பரிகாச வார்த்தையால் அவர்களைச் சந்தோஷப்படுத்தி சாதாரண பிள்ளைகளைப்போல போஜனம் பண்ணுவதைச் சகல தேவர்களும் ஆகாயத்திலிருந்து பார்த்து ஆச்சரியமும் ஆனந்தமுமடைந்தார்கள்.

அந்தச் சமயத்தில் எதிரில் மேய்ந்துக்கொண்டிருக்கிற கன்றுகள் மறைந்துவிட்டன. கோபாலர்கள் அந்தக் கன்றுகளைக் காணோமென்று நடுங்கிப் போஜனம் பண்ணத்தோன்றாமல் விசாரப்படுகிற சிறுவர்களை நோக்கிக் கிருஷ்ணன் அருளிச்செய்கிறார்: "நீங்களொன்றுக்கும் விசனப்படவேண்

டாம். உங்கள் கன்றுகளை நான் ஓட்டிக்கொண்டு வருகிறேன். நீங்கள் பயமில்லாமல் போஜனஞ் செய்யுங்கள்'' என்று சமாதானம்பண்ணிக் கண்ணன் கையிலிருந்த ததியோதனத் திற் பாதியை போஜனஞ்செய்து மற்றப் பாதியை கையிலே வைத்துக்கொண்டு அந்த வனமெல்லாங் கன்றுகளைத் தேடிக் காணுமல் திரும்பவும் போசனஞ் செய்தவிடத்திற்கு வந்தார். அவ்விடத்தில் பிள்ளைகளும் ஒருவருமில்லாயல் மறைந்தனர். நான்கு வேதங்களை முழுதும் கற்று அறிந்த ஞானிகளும் சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட நியமங்களைக் கடவாத அந்தண குலமும் நன்ருய்க் காணக்கூடாத தூயவன், தனது சிறிய பாததாமரைகள் சிவப்பக் கன்றினங்களைத் தேடிக் காணுமல் திரும்பியபோது முல்லையாய்ச்சியரது புதல்வர் களையும் மணற்குன்றின்மேல் காணுமல் அதன் காரணம் யாதென நினைந்தான்.

வண்டுகள் களித்து ரீங்காரம் செய்யப்பெற்ற தேனுனது கட்டுவிட் டவிழ்த்த வெள்ளைத் தாமரையில் இனிது வீற்றிருக்கும் பிரகாசம் பொருந்திய உருவமும் பவளம் போலும் வாயுமுடைய பச்சைக் கிளியைப்போல் மழ லைச் சொற்களைப்பேசும் ஸ்ரீ சரஸ்வதி தேவியின் நாயக ஞன நான்முகன் இவர்கள் யாவரையும் ஒளித்தான் என்பதுணர்ந்து, தனது உந்தித் தாமரையில் ஏழுலகங் களையும் தோற்றுவித்து காப்பாற்றி அவைகளை மீட்டும் அழித்தருளும் ஸ்ரீ கண்ணபிரானே ஆயர் சிறுவர்களும் பசுக்களும் இளங் கன்றுகளுமாக உருக் கொண்டனன். மாற்றுதற் கியலாத சிறப்பினையுடைய மழலைச் சொற்களைப் பேசும் வாயுடைய ஆயப்புத்திரர்களது வண்ணமும் அழகும் தோற்றமும் வடிவும் அவர்கள் செய்தொழிலும் குணமும் ஒளிபொருந்திய அழகிய ஆபரணங்களும் உடைகளும் ஊற்றிலிருந்து ஒழுகுவதுபோன்ற இளந்தேனை யுடைய அழகிய மாலையும் ஊதுகின்ற இனிய புள்ளாங்குழலும் நீண்ட கொம்புகளும் சிறிதும் மாறுதலில்லாமல் ஒவ்வொரு வருக்கும் உரியனபோல் அமைந்த அமைப்பை நான் எவ்வித மெடுத்துரைப்பேன்.

இப்படி ஒருவருடம் வகையில் நடந்து கொண்டிருந்த பின்பு, ஒரு நாள் பல பத்திரன் சகல இடையர்களுடன் கோவர்த்தன பர்வதத்தில் பசுக்கள் யாவையும் ஓட்டி மேய்த் துக் கொண்டிருக்கையில், எல்லா பசுக்களும் எருதுகளுடன் எக்காளம்போட்டு வாலை உயரத் தூக்கிக்கொண்டு ஓரே பாய்ச் சலாக இடைச்சேரியினருகில் மேய்ந்துக்கொண்டிருக்கிற

கன்றுகளினருகில் வருகையில் கோபாலர்கள் யாவருங் கூடிய வரையிலோடி வந்துபார்த்து பசுக்களை நிறுத்தமாட்டாமற் போனார்கள். அந்தப் பசுக்கள் கன்றுகளை முகந்து பார்த்து நக்கிக் கொடுத்து மடிகொள்ளாமல் சுரந்து கீழேவிழுகிற பாலை ஊட்டக்கொடுத்துக் கொண்டிருந்தன. அப்போது கோபாலர்கள் மிகவும் இளைப்பையடைந்து கொஞ்சம் வெட்கத்துடன் இடைச்சேரிக்குச் சமீபத்தில் கன்று மேய்த்துக் கொண்டிருந்த பிள்ளைகளிடத்தில் வந்து நீங்கள் சமீபத்தில் கன்று மேய்த்திருந்தமையால் பசுக்கள் ஓடிவந்ததென்று கோபித்துக்கொண்டு அருகில் வர, அவர் கோபந் தணிந்து சந்தோஷத்துடனே பிள்ளைகளைக் கட்டிக்கொண்டு மடியில் வைத்து உடம்பின் தூசியைத் துடைத்து முத்தமிட்டு உச்சி மோந்து ஆனந்த மடைவதை பலபத்திரன் பார்த்து, ஆச்சரியப்பட்டு, கன்றுகளிடத்தில் பசுக்களும் பிள்ளைகளிடத்தில் கோபாலர்களும் பாராட்டும் விசுவாசமும் இயற்கைக்கு மீறி கண்ணபிரானிடத்தில் எனக்குச் சிநேகம் விருத்தியடைவது போல விருத்தியாகிறபடியால் இவர்களெல்லாரும் பகவதம்சமாயிருக்க வேண்டுமென்று நிச்சயம் பண்ணி யோகத்தினால் அத்தனை பேரையும் ஸ்ரீ கிருஷ்ணனாகவே யிருக்கக் கண்டு பலராமர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினிடஞ்சென்று "தேவரீருடைய பிரபாவத்தைச் சனகாதிகளும் அறிய மாட்டார்கள். தேவரீரது மாயையால் அடியேனு மிவ்வளவு காலம் மோகத்தை அடைந்திருந்தேன். இப்போது தேவரீருடைய கிருபா பிரபாவத்தால் மோகந்தெளிந்து உம்மிட மகிமையைக் கண்டேன்" என்று தோத்திரஞ்செய்கிற பலபத்திரனைப் பார்த்துத் தான் சர்வ சொரூபியாயிருப்பதையும் அதினுடைய காரணத்தையும் அவருக்குச் சொல்லி மற்றக் கோபாலர்களுடன் சந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கையில், பிரம்மா பார்த்து நாம் ஒளித்துவைத்த கன்றுகளும் இடைப்பிள்ளைகளும் வெளியில் வந்து விட்டார்களோவென்று ஆச்சரியப்பட்டு ஓடிப்போய் மலையின் குகையில் பார்க்க அவைகள் அங்கிருக்கக் கண்டு அதிக ஆச்சரியங்கொண்டு அந்தச் சிறு பிள்ளைகளையும் கன்றுகளையும் பகவத் சொரூபமாகவே தரிசித்து, ஆனந்தபரவசராய் மெய்ம்மறந்து தெளிந்து அன்னம்விட்டிறங்கி சாஷ்டாங்கமாக ஸ்ரீ கிருஷ்ணனிட திருவடிகளில் வணங்கி அஞ்சலி அஸ்தராய்த் தோத்திரஞ் செய்கின்றார்:

நீலமேக ஷ்யாமள வர்ண நின்மலரே! பீதாம்பரமுடுத்து, நவரத்ன கசித ஆபரணங்களணிந்து, சுகந்தபரிமள

புஷ்பமணிந்து, திருத்துழாய் மாலை தரித்து, கஸ்தூரி திலகமும் முன்னெற்றிச் சுட்டியும் கொண்டு புள்ளாங்குழல் முதலியவற்றை இடையிற்செருகி, திருவடித் தாமரைகளில் சதங்கைகள் சப்திக்க லீலாமானுஷவிக்ரஹராய் இளங் கன்றுகளைக் காணுமல் தேடுகின்ற சாமான்யச் சிறுவனைப்போல் பிருந்தாவன மார்க்கங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிற உம்மை நமஸ்கரிக்கிறேன். பூபாரநிவாரணஞ் செய்து தர்மங்களை ஸ்தாபித்துச் சாது ஜனங்களைச் சந்தோஷிப்பித்துச் சகல புவனங்களையும் இரட்சிப்பதற்காகவும், ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாக்களான எங்களை அநுக்கிரகிப்பதற்காகவும், பக்தகோடிகளை இரட்சிக்கும்படி திருவவதரித்த அவதார பரம ரஹசியங்களை அறிந்தநுபவிக்கப் பரயோகீந்திரர்களுக்கே உரிமையாமல்லாமல், அடியேனல் கூடுமோ? கேள்வி முதலிய தான-தர்மங்களைச் செய்து ஜனித்த புண்ய புருஷர்கள் ஸ்வர்க்கமடைந்து சுகானுபவங்களநுபவித்து மறுபடியும் பிரபஞ்சத்தில் ஜன்மித்துப் பாக்யவந்தர்களாய் இருப்பார்களே யல்லாமல், உமதுமாயா குணவிசேஷங்களை யறியத்தகுந்தவர்களாவார்களோ? உமது பரம கிருபையால் ஜன்மாந்தரங்களில் மஹாபுருஷர்களாயிருந்து ஸ்ரீபாகவதாபிமானத்தை யுடையவர்களாய் ஜனித்த மாகானுபாவர்கள் சர்வ விசேஷதர்மங்களை யுணர்ந்து சர்வகாலமும் ஸ்ரீ பகவத் குணங்களை யனுபவித்து நிரபேக்ஷர்களாய் வேதோக்தக் கிரமமாகச் செய்த சர்வ கர்மங்களையும் ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணஞ் செய்து சகல மந்திராதி தேவதைகளாலும் அடியேன் முதலிய லோககர்த்தாக்களாலும் மதிக்கப்பெற்று, ஸ்ரீ பகவானுகிய தேவரீருடைய கல்யாணகுணவைபவங்களை யறிந்து பிரம்மாநந்தத்தை யநுபவிப்பதுமன்றி, மரணகாலத்தில் நித்தியானந்த பரமபதத்தை அடைகிறார்கள்.

அகிலபுவன கர்த்தாவாகிய ஸ்ரீ அரியே! பரிசுத்த தத்துவ நிச்சய ஸ்ரீ பரம பாகவதோத்தமர்கள் ஸ்ரீ பகவத் ஸ்வரூப பரமார்த்த நிச்சயத்தை யுணர்ந்து, நிஷ்காமர்களாகி—இச்சையற்று—ஸ்வரூபதர்மமான சகல கைங்கரியங்களிலும் ஈடுபட்டு, புண்யசாலிகளாகி உமது திருவவதார மகிமைகளை யுணர்ந்து, ஆனந்தித்து, மகா புருஷார்த்தமான பரகதியை யடைவதற்கு யோக்கியர்களாகின்றார்கள். ஜகன்னதராயும் பரமாத்மாவாயு மிருக்கின்ற தேவரீரிடத்தில் எனது தபோபலத்தினுற் பெற்றுக்கொண்ட இந்த அண்டாதிபத்திய கர்வத்தினுல் என்னை மறந்து, உமது மகிமைகளை யறியாமல் வியர்த்தமாய் எனது சாமர்த்தி

யத்தை என்னையனுகிய தேவரீரிடத்திலேயே பிரயோகித்து அபராதஞ் செய்தேன். அதைத் திருவுளத்திற் கொள்ளாமல் சேவகனிடத்தில் பிரபுவைப்போலும், சிஷ்யனிடத்தில் ஆசாரியனைப்போலும், புத்ரனிடத்தில் பிதாவைப்போலும், க்ஷமித்து ரக்ஷிக்கவேண்டும். இவ்வண்ட கோடிகளில் ஒவ்வோரண்டத்திற்குள் அனந்த ஸ்வரூபங்க ளுண்டாயிருக்கின்றன. அந்த ஸ்வரூபங்களுக்குள்ளே ஒரு ஸ்வரூபத்தை யுடையவனுயிருக்கின்ற அடியேன் உமது விஸ்வாகார பரிமாணும்சங்களில் பரமாணுவுக்கு நிகராவேனே? ஸ்வாமி! அடியேன் செய்த அபராதத்தைத் தேவரீரே க்ஷமித்துத் தேவரீருடைய கிருபைக்குப் பாத்திரனுக அடியேனை ரக்ஷிக்க வேண்டியது.

தேவரீர் என்னை உமது நாபீ கமலத்தில் சிருஷ்டித்தீர். அப்போது நான் அந்த நாபீ கமலத்தில் நின்றும் ஒன்றையுங் காணுமல் வெகுகால வரைக்கும் கீழு மேலும் அலைந்து உலாவி யுழன்று சுழன்றேன். ஸ்ரீ யோகீஸ்வரரே! உமது அயிச்சாமாத்திர யோகமாயா சங்கல்பத்தினுல் சர்வ வுலகங்களையுஞ் சிருஷ்டித்து, அவற்றினுள் வியாபித்து, சர்வமுந்தாமாகி, அச்சர்வப் பிரபஞ்சங்களையும் தம்முள் வஹித்து, பின்னரவற்றினுள் பிரவேசித்து, ஏகராகி, பரமாணுஸ்வரூபங்களுக்கெல்லாம் சூக்ஷ்மாகாரராகி நித்யராய் விளங்குகின்றீர். உமது கிருபையால் சிருஷ்டியாதியில் என்னைக் கடாக்ஷித்து, சர்வ வேதங்களையும் எனக்கு உபதேசித்து, உம்முடைய விராட்ஸ்வரூப மகிமைகளைத் தரிசிக்கச்செய்தீர். அதுபோல இந்த அவதாரத்தில் ஸ்ரீ வசுதேவ தேவகிதேவிகளான தம்பதிகள் உம்மைப் புத்திரராகப் பெற்றுக்கொள்ளச் செய்ததுமல்லாமல், அவர்கள் உமது நிஜஸ்வரூப சேவையைக் கண்டு சேவிக்கவுங் கிருபைசெய்தீர். அவர்களே மிகுந்த பாக்யவான்கள். மேலும் ஸ்ரீ யசோதாப் பிராட்டி ஸமஸ்த பிரபஞ்சங்களையும் உமது நாபீகமலத்தில் கண்டுதுதித்து ஆநந்தத்தை யடையும்படி யருள் செய்தீர். ஆகையினுல் இப்படிப்பட்ட உமது பிரபாவாதிசயங்கள் யாவரா லுணரத்தக்கது. ஸ்ரீ பரமாத்மாவே! இந்தப் பிருந்தாவன புண்யக்ஷேத்திரத்தில் நீர் ஏகராய் வசித்தீர். நிமிஷத்தில் நிகில கோபாலபாலர்களாயும் கன்றுகளாயும் பிரகாசித்தீர். பின்னும் சர்வ ஸ்வரூபங்களும் தேவரீராகவே கண்டு சேவிக்கச் செய்தீர். பிறகு யதாப்பிரகாரம் யசோதா புத்திரனுகப் பிரகாசித்துக்கொண்டு மிருக்கின்றீர்.

எனதையனே! ஸ்ரீ கிருஷ்ண குணங்களாகிய மஹிமாதிசய யோகமாயா சேஷ்டித உமது பால லீலாகுண சமர்த்தியாகிற வனுந்தரத்தில், யதுவம்சமாகிற தடாகத்தில், உமது ஸ்ரீ பக்த ஜனங்களினுடைய முகங்களாகிய தாமரைப் புஷ்பங்களை மலரச்செய்யும்படி ஸ்ரீ வசுதேவ தேவகீ கர்ப்பமாகிற பர்வத சிகரத்தினின்று முண்டான சூர்யபகவானே! ஸ்ரீ பரமபாகவத சத்கோஷ்டிகளாகிற சமுத்திரத்திற்குச் சந்தோஷங்களை யுண்டுபண்ணும்படி நந்தகோபக் கிருகமாகிய ஆகாயத்தில் உதயமாய் வருகின்ற பூர்ணசந்திரனே! உம்மை நமஸ்கரிக்கின்றேன் என்று பல பலவாய் நான்முகர் துதித்தனர். பின், தான் முன் வஞ்சித்த காலத்திலிருந்தது போல் மணற்குன்றுகளின் மேல் கோபால குமாரர்களையும் மேய்ந்திருந்த விடத்தில் கன்றுகளையும் விட்டு விட்டு, ரிஷி கணங்கள் முதலிய யாவரும் துதிக்கத் தனது சத்தியலோகத்திற் கெழுந்தருளினர்.

பின்னர் கோபாலர்களும் பசுக்கூட்டமும் இடையில் நேர்ந்த மாயா காரியங்களைச் சிறிதும் உணராதவர்களாய் பகவானுடன் பழையபடி அன்பு பாராட்ட பகவானும் புன்னகைகொண்டு அவர்களுடன் பொழுது சாய்ந்ததும் பிருந்தாவனம் சென்று மகிழ்ந்தனர்.



## பதினைந்தாவது அத்தியாயம்



*பலராமர் தேனுகாசுரனை சம்மரித்தாரென்று சொல்லப்படுகிறது.*

வாராய் அரசனே! கோகுலப் பிருந்தாவனத்தில் வாசஞ் செய்துகொண்டிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமக்குப் பௌகண்ட வயதாகிய பருவம் வந்தவுடனே, நம்பி மூத்தபிரானாகிய ஸ்ரீ பலராமருந் தாமும் கோபால சிறுவர்களுடனே கூடி ஸ்ரீ பிருந்தாரண்யத்திலே லீலா விநோதார்த்தமாக விளையாட நினைந்து பிரவேசித்தார்கள். அப்போது அவ்வனம் தனக்கு இயற்கையாக அமைந்துள்ள சகல லக்ஷணங்களாலும் நிறையப்பெற்று இருந்தது பகவானுடைய வருகையை நோக்கி பூதேவி தன்னை யலங்கரித்துக்கொண்டு எதிர்கொள்வது போலிருந்தது.

தவசிரேஷ்டர்கள் தங்கள் தபயோக மகிமையால் பகவானை தியானித்து ஸ்துதிகள் செய்தும் திருப்தியடையாமல், காமரூபர்களாய் இவ்வண்டுகளின் ஸ்வரூபங்களை

வகித்து மகாபாவனமாகிய அவரது சுகீர்த்திகளைக் கானஞ் செய்வதுபோல் வண்டுக்கூட்டங்கள் பாடின. அவ்வன லக்ஷ்மி தனது நாயகனுன பகவான் கிருகத்திற்கு வந்தருளினுரென்கிற சந்தோஷத்தினுல் மயிலுருவங்களைக்கொண்டு ஆநந்தத்துடன் நிர்த்தனஞ் செய்வதுபோல அநேக மயில்கள் கூத்தாடின. மான் பேடுருவங்களைக்கொண்டு பூதேவி பகவானை சேவிக்கிருள் என்னும்படி மான் பேடுகள் அவர்களைப் பார்த்துக்கொண்டு மேன்மை யடைந்தன. ஓ பிரம்ஹ பிரபுவே! ஓ லோகநாயகரே! ஓ ஸ்ரீ பலதேவரே! நீர் வாரும், என்றழைக்கின்றதுபோல அநேக குயில்கள் அவர்களை நோக்கி மதுரஸ்வரமாகச் சப்தித்தன.

பகவான் முதலியோர் பலவிதமாக லீலைகளைச் செய்துக் கொண்டிருக்கிற சமயத்தில் பசுக்கள் மேய்ந்துகொண்டே அதிகதூரம் சென்றுவிட்டன. அவைகளை ஸ்ரீ கிருஷ்ண பகவான் பூரணச்சந்திரோதயமே! கௌதமீ! கங்காபவானீ! ஸ்ரீ பகீரதீ! மகாராஜபுத்ரீ! நீலமேகமாலிகையே! சிந்தாமணீ! சர்வஜனமனுேசுபத்தைக் கோருகின்ற ஸ்ரீ மகாலக்ஷ்மீ! மந்தமாருதி! மந்தாகிநீ! சுபாங்கி! எங்கள்பேரில் தயவு செய்து கம்பீரமாக நடந்துவாருங்கள் லோகமாதாவான பார்வதீதேவீ! கமலாட்சீ! அரம்பையே! இந்திராணீ! கோரத்நமே! வாருங்களென்று இத்தகைய நாமங்களைச் சொல்லி உபசாரமாக அழைத்தார். அந்தப் பசுக்களெல்லாம் அம்மாவென்ற கம்பீர சப்தங்களுடன் வெகு வேகமாய்த் திரும்பி ஓடிவந்து, ஸ்ரீ பகவானைக்கண்டு சந்தோஷத்துடன் சூழ்ந்துகொண்டன. அந்தப் பசுக்களுக்குத் தெளிந்த நீரோடைகளில் தாகங்களைத் தணிவித்து ஒரு குளிர்ந்த தோப்பிலிருக்கும்படி கடாட்சித்து, பின்பு ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களிருவரும் கோபாலபாலர்களும் அவ்வனப் பிரதேசங்களில் விளையாடிக்கொண்டிருந்து, எல்லாரும் இளைப்புற்று உட்கார்ந்துக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ பலதேவர் ஒரு கோபாலனுடைய துடையின் பேரில் தமது திருமுடியை வைத்துக்கொண்டு சயனித்தார். அதைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமது மூத்த பிராணுக்குச் சந்தோஷமுண்டாகத் திருவடிகளை மெதுவாக வருடிதளிர்களைக்கொண்டு குளிர்ந்த காற்றுவரும்படி விசிறிச் சகலோபசாரங்களைச்செய்தார். ஸ்ரீ பலதேவரும் இளைப்புத் தீர்ந்து தாமும் ஸ்ரீ பகவானும் மதுரஸ்வரங்களாகப் பாடியும் ஆடியும் கைகளைக் கொட்டியும் நகைத்தும் இவ்விதமாக அவ்வனத்தில் விளையாடினுர்கள்,

அப்போது கண்ணபிரான் இளைப்புற்று நித்திரைசெய்ய நினைக்க, சில சிறுவர்கள் தங்கள் தொடைகளின்மீது உபசாரமாகச் சயனித்துக்கொள்ளச் செய்தார்கள். அவர் திருமேனியெங்குஞ் சிறுவேர்வை யொழுகக் கண்ட பொழுது சிலர் சிரத்தையுடன் ஸ்ரீ பகவானுடைய திருவடித் தாமரைகளைக் கைகளினால் ஒற்றி வருடினார்கள். இந்தப் பிரகாரம் ஸ்ரீ மாதவப் பிரானுக்கு சிறுவர்கள் ஸ்ரீ பரமபதத்தில் ஸ்ரீ அநந்த கருட விஷ்வக்சேனாதி நித்யசூரிகள் பிரம்மாநந்த பரவசர்களாய் பிரம்மோபசாரஞ் செய்வதுபோல உபசரித்து, தங்களுடைய அநேக ஜன்மங்களில் சம்பாதித்த பாபங்களாகிற வனங்களை ஸ்ரீ மாதவனுடைய திருவடியிற் பொருந்திய மனதாகிய அக்கினியினால் தகிக்கச் செய்து கொண்டார்கள். அந்தச் சமயத்தில் ஸ்ரீ பலராம-கேசவர்களுக்குச் சிலர் தண்டஞ்சமர்ப்பித்து விநயத்துடன் சொல்லுகின்றார்: திவ்ய புருஷ சிரேஷ்டர்களே! கேளுங்கள்: இந்த ஸ்ரீ பிருந்தாரண்ணியமானது கொஞ்சதூரத்தில் பனங்காட்டில் மதுரமான கனிவர்க்கங்களைத் தருகின்றது. அக்கனிகள் ஒருவருக்கு முபயோகமில்லாமல் தரையில் வீழ்ந்து வியர்த்தமாகின்றன. அவ்வனத்தில் தேனுகாசுரனென்பான் அநேகருடனே வாசமாய் மனிதர்களைப் பட்சித்துக் கொண்டிருக்கிறான். அதனால் எப்படிப்பட்ட பராக்கிரமசாலிகளானதீரர்களும் அத்திசை நோக்குவதில்லை. இப்பொழுது தோற்றுகின்ற பரிமளம் அவ் வனத்திலுள்ள பழங்களின் வாசனைகளே. ஆகையால் நீங்கள் பக்தர்களாகிய எங்களுக்கு இந்தப் பழங்களை யனுபவிக்கச் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, கோபால குமாரர்களெல்லோரையும் அழைத்துக்கொண்டு அந்த அரண்ய மார்க்கங்களைக் கடந்து அவ்வனத்தில் இருவரும் பிரவேசித்தார்கள்.

ஸ்ரீ பலபத்திர மூர்த்தியானவர் அந்த விருட்சங்களைத் தமதிரண்டு கரங்களினால் குலுக்கி அதன் கனிகளைப் பூமியில் விழத் தள்ளினார். அவைகளுதிர்கின்ற சப்தங்களை கேட்ட மாத்திரத்தில் கழுதையுருவமாயிருக்கிற அக்கொடியவசுரன் கோபமுடன் புறப்பட்டு வர பூமியதிர்ந்து நடுங்கியது. அவனது இரண்டு காதுகளும் இரண்டு ஈட்டிகளைப் போற்காண, வால்குச்சானது யமதண்டம்போலத் தோற்ற, சகலமான கோபால குமாரர்களும் பயப்பிராந்தி யடையும்படி ஓடிவந்து பின் புறங்காட்டிப் பின் பாய்ச்சல் பாய்ந்து எதிர்த்துத் தன் பின்கால்களைக்கொண்டு ஸ்ரீ பலதேவருடைய விசாலமான மார்பின்மீது கோபத்துடன் உதைத்துத்

திரும்பி ஸ்ரீ பலராமரைக் கடிக்க வந்தான். அதை அவர் தப்பித்துக் கொண்டார். அவ்வளவில் அந்த வசுரன் தன் கண்களிலே நெருப்புகளைக் கக்கிக்கொண்டு மகா சௌரியத்துடன் கோபமதிகரித்து மறுபடியு முதைத்தான். அத் தருணத்தில் ஸ்ரீ பலராம மூர்த்தியானவர் அவனுடைய நாலு கால்களையுஞ் சேர்த்துப்பிடித்து அலட்சியமா யொருதரமுதறிக் குலுக்கிச் சக்ராகாரமாகச் சுழற்ற, அந்த வேகத்தினால் அவன் பிராணனை யிழக்கச்செய்து ஓர் மரத்தின்மீது வீசி யெறிந்தார். அந்த அசுரப்பிணம் விழுந்த பனைமரம் ஒன்றின் மேலொன்று வீழ்ந்து நாசமடைந்தது. வாராய் மகாராஜனே! ஸ்ரீ அநந்த பகவானனவர் இந்தத் தேனுகாசுரனை லோகோபகாரமாகச் சம்ஹரித்ததும், அதனால் அவனுடைய பந்துக்களாயிருந்த கழுதை ஸ்வரூபங்களையுடைய அனேகங் கொடியவசுரர்கள் இந்தத் தேனுகனைப் பார்த்துத் துக்கித்து மிகவுங் கோபித்து அந்த ஸ்ரீ பலராமகிருஷ்ணர்களிருவரையுந் துரத்திக்கொண்டோடி வந்து இவர்களை இம்சிக்க நினைத்து மகா பராக்கிரமங்களுடன் யுத்தஞ்செய்தார்கள். அத்தருணத்தில் இந்தத் திவ்ய புருஷர்களிருவர்களும் அந்தக் கழுதை ஸ்வரூப ராக்ஷசர்களுடைய பின்னங்கால்களைச் சேர்த்துப் பிடித்துச் சக்கராகாரமாகச் சுழற்றி அந்தப் பனைமரங்களில் மோதியறைந்து யாவரையும் சங்கரித்தார்கள். பின் சகல கோபாலர்களும் ஆனந்தமடைந்து தம்மிஷ்டப்படி கனிவர்க்கங்களை புசித்தனர். அந்தரத்தில் இந்திராதியோர் புஷ்பவருஷம் பெய்தார்கள், துந்துபி வாத்தியங்களைக் கோஷிப்பித்தார்கள், கின்னர ஸ்திரீகள் பாடினார்கள், அரம்பையர் ஆடினார்கள், சித்த-சாரணர்கள் தேவ கானங்களால் துதிசெய்தார்கள். அதன் பின்பு ஸ்ரீ கமலலோசனன் ஸ்ரீ பலராமருடன் பசுக்களைமடக்கித் திருப்பிக்கொண்டு வேணுகானஞ் செய்துகொண்டு வந்தார்.

இவர்களது வரவைக் கண்ட கோபிகைகள் உதயமுதல் அஸ்தமன பரியந்தம் ஸ்ரீ பகவானைப் பிரிந்திருந்ததாலுண்டாகிய தாபமாகிய கொடும் பசியை யாற்றிக் கொண்டார்கள். இப்படி அவர்கள் ஆனந்திக்கும்படி கடாக்ஷித்துக்கொண்டு கோகுலத்தில் பிரவேசித்தார். கோபால பாலர்களும் தங்கள் தங்கள் கிருகங்களுக்கு வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களிருவரும் அந்தத் திருவீதி மார்க்கங்களி லிருக்கின்ற கோபிகா ஸ்திரீகள் தம்மை மிகுந்த பக்திபூர்வமாக அர்ச்சித்து ஆசீர்வதிக்கச் சந்தோஷித்து தமது கிருகத்திற்கு வந்தார்கள். ஸ்ரீ ரோகிணி யசோதைகளாகிய இருவர்

களும் இவ்விரண்டு புத்திரர்களுக்கும் வெந்நீரைக்கொண்டு சிரமங்கள் தீரும்படி தகுந்த உபசாரங்களைச்செய்து அவர்களை பரிமள உடைகளாலும் திவ்யாபரணங்களாலும் அலங் கரித்து வஸ்திரங்களை யுடுத்தி மதுரமாகிய பலகாரங்களுடன் அன்னங்களைப் புசிக்கச்செய்து புத்திரர்களுடைய மதுர வசனங்களால் திருப்தியடைந்து மிருதுவான சயனங்களை யமைத்துப் புத்திரர்களைச் சயனிக்கச்செய்து தாங்களும் சுக நித்திரையிற் சுகித்தார்கள்.

பரிக்ஷித்து ராஜனே! இவ்விதமாகச் சிலநாள் ஸ்ரீ பல ராம கிருஷ்ணர்களிருவர்களும் அந்த கோகுலப் பிருந்தா வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். இப்படியிருக் கிற நாள்களில் ஒருநாளேதோ ஒரு காரியமாக பலராமர் கிருஷ்ண பகவானுடன் பிருந்தாவனத்திற்கு வராமல் பாடியில் நின்றுவிட்டார். சகல கோபாலர்களும் பகவா னுடன் பசுக்களை யோட்டிக்கொண்டு ஆரண்யமார்க்கத்திற் பிரவேசித்து நானாவிதமாக விளையாடிக்கொண்டு போகும் போது இளைப்புற்றுச் சமீபத்திலெங்குந் நீர் அகப்படாமல் தாகமேலிட்டு ஸ்ரீ யமுனா நதியின் ஒரு பிரிவாகிய காளிய னென்னுஞ் சர்ப்பமிருக்கும் ஒரு மடுவில் பசுக்களுடன் ஜல பானஞ்செய்து மூர்ச்சை யடைந்தார்கள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவான் தம்மையே சரணமாக வடைந்திருக்கிற கோபால குமாரர்களையும், கோவினங்களையும் தம்மிட கடா க்ஷத்தினால் பிழைப்பித்தார். அப்போது அவர்கள் பசுக்க ளுடன் நித்திரை செய்தெழுந்தவர்களைப்போல எழுந்திருந்து சந்தோஷமாகச் சஞ்சரிக்கலானார்கள். கோபால குமாரர்கள் நாமெல்லாருந் தாபம் பொறுக்கமாட்டாமல் பிராணனுக்குத் துணிந்து ஸ்ரீ கிருஷ்ணாவென்று இந்த விஷஜலத்தைச் சாப்பிட்டு மரித்துப்போனோம். பசுக்களும் அப்படியே யாயின. இப்படிக் கோக்களோடும் இறந்துபோன நாம் நமதையனாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய பரிபூர்ண கடாக்ஷ வீட்சண்யத்தினால் பிழைத்தோ மல்லவாவென்று அவரை ஸ்துதிசெய்து வாழ்த்தினார்கள்.



## பதினாறுவது அத்தியாயம்



ஸ்ரீ பகவான் காளிங்க நர்த்தனம் செய்தது.

முற்றந்துறந்த முனிவர்கோனான சுகர் இவ்விதம் காளி யனது கதையைச் சுருக்கமாக சொல்லிமுடிக்க, அத்துடன்

திருப்தி யாகாமல் பரம பாகவதனுன பரீக்ஷித்து மன்னன் அக் கதையை விவரமாக உரைக்கும்படி விண்ணப்பித்தான். ஸ்ரீ சுகரும் சொல்லலுற்றனர் :

வாராய், அச்சுதனருளால் ஆருயிர் பெற்றவனே! கேளும். யமுனுநதிப் பிரவாகத்தில் பிரிந்தோடுகின்ற ஓர் மடுவில் வாசஞ் செய்கின்ற காளியனெனும் சர்ப்பராஜனுடைய விஷாக்நிச் சுவாலையினுல் அந்த மடுவின் ஜலமானது எப்போதுங் கொதித்துக் கொண்டிருக்கும். அந்த ஜலத்துக்கு நேராய் ஆகாச வீதியிற் பறக்கின்ற பக்ஷிகள் யாவும் விஷ வேகத்தினுல் சோகித்து வீழ்ந்தழியும். அந்த ஜலத்தினுலுண்டாகிய அலைகளின் திவலைகளைக் காற்றுனது கொண்டு வந்து வீசுதலினுல் அம்மடுவின் சமீபத்திலுள்ள விருக்ஷம், கொடி-செடி-பூண்டு முதலியதும் உண்டாகின்றதே யில்லை. ஆயினும் ஒரு கடம்ப விருக்ஷமானது ஸ்ரீ பகவானுடைய காசரண ஸ்பரிசங்களுக்கு யோக்யமாகும்படித் தனது பூர்வ ஜன்ம புண்யவசமிருந்தபடியால் தெய்வீகமாய் முன்னெருக்கால் அமிர்த கடத்தைக் கருடபகவானுனவர் பூமிக்குக் கொண்டு வரும்போது இக்காரண நிமித்தமாகவே அந்த விருக்ஷத்தின் மீதிரங்கி அமிர்த ஸ்பரிசங்களை யுண்டாக்கி அதற்கு விஷதோஷமில்லாமற் செய்வித்தாரென்று புராணுந்தரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றபடியே, அந்த விஷாக்கினியில் நின்றுந் தப்பித்துக்கொண்டு காய் கனிகளுடன் செழிப்பாய் விளங்கிக்கொண்டிருந்தது. இப்படியிருக்கச் சர்வ பிரபஞ்சங்களுக்கும் மங்கள முண்டாக்கும்படித் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணன் இந்தக் காளிய சர்ப்பராஜனை இந்த மடுவில் நின்று நீக்கவும், இந்தச் ஜலத்துக்கு இவனுல் நேரிட்ட விஷதோஷங்களைப் போக்கி அந்தத் தீர்த்தத்தை யாவருக்கு முபயோகமாகும்படி பரிசுத்தஞ் செய்யவும் நினைந்து முகமலர்ந்து அந்த விருக்ஷத்தின் நுனியிற் சென்று நின்று அம்மடுவின் சலம் குபகுபகுபீரென்று சப்தித்துத் தளும்ப அந்த அகாத சலத்தில் குதித்துக் கலக்கினுர்.

வாராய் மஹிபாலகா! முதல் மனுவந்தாத்திலே வேதங்களை யபகரித்துச் சமுத்திரத்திலொளித்த கோமுகாசுரனைச் சம்ஹரித்து வேதங்களை யுத்தரிக்கிறது நிமித்தம் ஸ்ரீ மச்சாவதாரஞ்செய்து மகாப் பிரளய ஜலதியில் பிரவேசித்து அந்த சமுத்திரத்தைக் கலக்கின திவ்யமூர்த்தியாகிய ஸ்ரீ பகவானுடைய சாதுர்யங்களுக்கு இந்தக் காளிந்தி மடுவு ஒரு லட்சியமாகுமோ? ஆகாதே, ஆகையால் இப்படி அளவிறந்த மகாப்பிரதாப கோபால கண்டீரவரானவர்

அம்மடுவைக் கலக்கும்போது உண்டாகிய மகா வேகத்தினால் கொதித்துக் கொண்டிருந்த அந்த சலமானது பொங்கி நூறு வில்லினளவு கோல்பிரமாண வரையில் தசதிக்குகளிலும் அவ்விஷ சலத்தினுடைய திவலைகள்மோதின. அத்திவலைகளின் பரிசத்தால் அவ்வெல்லைக்குள்ளிருந்த சகல பிராணிகளும் வெப்பமடைந்தன. விருட்ச முதலாகியவைகளுந் தீய்ந்தன. ஸ்ரீ பாலகோபால சிறுவனைப் பார்த்து அந்தச் சர்ப்பேந்திரன் தன்னுடைய இருதயத்தில் நின்றும் கோபாக்கினியாலுண்டாகிய சுவாலைகளைக் கக்கினான். அப்படிக் கக்கின மாத்திரத்தில் அம்மடுவின் சலமெங்கும் பரவி தீவிரமாகக் கொதித்துப் புகையெழும்பிப் பார்க்கின்றவர்களுக்குப் பிராண பீதியை யுண்டாக்கிற்று. இப்படி விஷச் சுவாலையைக் கக்கிய அந்தக்காளியன் அதி ஆச்சரியமடைந்து அப்பாலனை உடனே கொல்ல நினைந்து அதி கோபத்துடன் ஸ்ரீ கிருஷ்ணனை கோராகாரமான விஷாக்கினிகளையுடைய தனது கோரைப் பற்களினால் கடித்து கோபாலனுடைய பாதாதிகேச பரியந்தம் சுற்றிக்கொண்டான். அப்படிச் சுற்றிக் கொண்ட மாத்திரத்தில் சர்வ வியாபக அந்தராத்ம ஸ்வரூபராகிய ஸ்ரீ பகவான் சலியாமல் நின்றுகொண்டிருந்தார். இப்படியிருக்கின்ற ஸ்ரீ பகவானைப் பார்த்துக் கோக்களும் மற்ற ரிஷபங்களும் கன்றுகளும் மூர்ச்சை யடைந்து சற்று நேரத்தில் தெளிந்து துக்கங்கொண்டிருந்தன. கோபால பாலர்கள் சுவாமியினுடைய பிரபாவங்களை யறியாமல் மூர்ச்சையடைந்து சற்றுநேரத்தில் தெளிந்து மகா துக்கிதர்களாய் பலவிதமாய் பகவானைப் பிரார்த்தித்து அழுதார்கள். பசுக்களும் எருதுகளும் கன்றுகளும் தங்களபீஷ்ட அருந்தெய்வ ஸ்ரீ கிருஷ்ணரைப் பார்த்து வால்குச்சுகளை உயர வெடுத்துக்கொண்டு அப்போதே தாங்கள் அம்மடுவிற் பாய்ந்து ஸ்ரீ பகவானை விடுவிப்பதுபோலத் தங்கள் மேச்சலையொழித்து சர்வேந்திரியங்களையுஞ் சமர்ப்பித்து அம்மாவென்று வாய்களைத் திறந்து கதறிக்கொண்டிருந்தன.

அந்தச் சமயத்தில் பூமி கிடுகிடென்று நடுங்கிற்று. ஆகாசத்தில் நின்றும் குறைக்கொள்ளிகள் வீழ்ந்தன, மண் மாரி பொழிந்தது. அந்த கோகுலத்திலுள்ள சகலருடைய சரீரங்களும் நடுங்கின. நந்தகோபர் முதலியவர்களும் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஏதாகிலும் தீமை நேர்ந்ததோவென்று பயந்து தத்தளித்துக்கொண்டு ஸ்ரீபலராமருடன் ஸ்ரீபகவானை ஆரவாரத்துடன் தேடிச்சென்றார்கள். பகவானது லீலைகளில் இதுவுமொன்றாகு மென்பதை பலராமர் உணர்ந்திருந்

தும் தானும் மற்றவர்களைப்போல ஓடிவந்தார். இப்படி பல விடங்களிலும் தேடி கடைசியாய் காளியனது மடுவை யடைந்தார்கள். அம்மடுவின் மத்தியில் சர்ப்ப ராஜனிடத்தி லகப்பட்டுக்கொண்டு சர்ப்பசரீர பாசத்தினால் பந்திக்கப்பட்டி ருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவானைக்கண்டு திடுக்கிட்டு ஏக்கங் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணா! ஸ்ரீமாதவா! ஸ்ரீகோவிந்தாவென்று பிரலாபித்து இந்த மடுவினிடத்தில் உம்மைவிட்டு மகா பாவி களாகிய எங்களைப் பிரிக்கும்படித் தெய்வம் பிரதிகூலஞ்செய்ய நினைத்ததோவெனத் தங்களை நிந்தித்து விசனப்பட்டுக் கொண்டிருக்கின்ற கோபால பாலர்களையும், பசிதாகங்களை யொழிந்து மேய்ச்சலை விட்டுக் கண்ணிமையாமல் ஸ்ரீ பகவா னையே பார்த்துக்கொண்டிருக்கின்ற கோகணங்களையுங்கண்டு எல்லாரும் திடுக்கிட்டேங்கி மஹா கோஷத்துடன் அநேக விதங்களாக ஸ்ரீ கிருஷ்ண பகவானை யுத்தேசித்து ஸ்ரீ யசோ தாப் பிராட்டியைக் கட்டிக்கொண்டு அலறி வியாகுலப்பட்டு பகவானது லீலைகளை நினைத்து ஆ கிருஷ்ணா! வென்கிற சப்தத்துடன் பிரலாபித்தார்கள்.

எங்களருமை புத்திரனே குழந்தாய்! ஆ ஸ்ரீ கிருஷ்ணா! இந்தக் கோர சர்ப்பேந்திரன் எங்களைக் கடியாமல் உன்னை ஏன் கடித்தான்? நீ யொருவன் க்ஷேமமாயிருந்து எங்களுக் கிப்படிப்பட்ட அபாயம் நேரிடுமாகில் நீ ரட்சிப்பையே. எங்களையனே! உனக்கு நன்மைசெய்ய எங்களுக்கொன்றுந் தோற்றவில்லையே? ஸ்ரீ கோப கோபீஜன வல்லபா! ஸ்ரீ யசோதா வத்ஸலனே! இன்றையதினம் நாங்களெல்லாரும் உன்னைத் தரிசனஞ்செய்ய வந்திருக்க உனது கடாட்ச வீட்சண்ணியத்தினால் நீ எங்களைப் பாராமலிருப்பது என்ன காரணமோ? உனது ஸ்நேகிதர்கள் யாவரும் வந்திருக்க, நீ பேசாமலிருக்கின்ற கோபமென்னே? நாங்கள் சந்தோஷிக் கும்படி நீ உன்னுடைய திவ்யபாதார விந்தங்களிலணிந்த நூபுரசதங்கைகள் சப்திக்க நர்த்தனங்கள் செய்யாமலிருப்ப தென்னே? உனதன்புள்ள தாய்மார்களும் கோபிகா ஜனங் களும் உன்னை அழைக்க வந்திருக்க அவர்களிடத்தில் வந்து செவி குளிர ஒரு வார்த்தையாவது பேசாமலிருப்பது என்ன தர்மமோ? சொல்வாயென்று பிரலாபித்து மேலும் துக்கத் தோடு சொல்லுகின்றார்கள்.

எங்கள் மனோரத தவப்பலனாகிய கிருஷ்ணா! இனி எங் களுடைய கர்னேந்திரியங்கள் குளிரவும், மனது திருப்தி யடையவும், மாதுரியமாக வார்த்தை சொல்லுகிறவர்கள் யாரிருக்கிறார்கள்? எங்கள் சரீரங்களும் கரசரணாதி அவயவங்

களும் மஹோத்மத்தன்யத்தையடைய மேல்விழுந்து சந்தோஷகரமாக விளையாடுகின்றவர்கள் யாரிருக்கின்றூர்கள்? எங்கள் நயனங்களுக்கு சித்திர விசித்திரமாக அநந்த சாதுர் லீலைகளைச்செய்து நாங்கள் கிருதார்த்தர்களாகும்படி கிருபையாகக் கடாட்சிக்கின்றவர்கள் யாரிருக்கின்றூர்கள்? லோக குருவாகிய எங்களையனே! நீ ஸர்ப்பதஷ்டனுகி யிருந்தால் இவ்வுலகத்தில் எங்களுக்கு இகபர ஸாதனுர்த்தங்களாகிய க்ஷேமங்களை யுண்டுபண்ணுகின்றவர்கள் யாரிருக்கின்றூர்கள்? உனது சம்பந்தங்கள் கிடைத்த பின்பு இனி அன்னிய சம்பந்தங்களை நாங்கள் எப்படி யிச்சிப்போம்? நீ உனது ஸ்வரூப தர்மத்துடன் வசிக்கின்ற திவ்யலோக மெதுவோ அதுவே எங்களுக்கு வேண்டுவதென்றுசொல்லி துக்கித்தார்கள்.

இப்படி ஒருவர்க்கொருவர் கட்டியணைத்து பிரலாபித்துக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானுடன் இம்மடுவில் நாமெல்லோரும் பிரவேசித்து ஸ்ரீ ஜனுர்த்தன பிரீதியர்த்தமாக ஸ்ரீ கிருஷ்ணபதத்தை யடைவோமென்று யாவரும் ஏககாலத்தில் தீர்மானித்துக்கொண்டு ஆ! ஸ்ரீ கிருஷ்ணுவென்று அந்த நதியிற் பிரவேசிக்க யத்தனித்தார்கள். அப்படி விழுகின்ற சமயத்தில் ஸ்ரீ பகவானுகிய பலபத்திர மூர்த்தியானவர் ஓ கோபாலர்களே! கோபிஜனங்களே! ஸ்ரீ பகவானுடைய மகிமைகள் ஒருவரா லறியக்கூடுமோ? ஆகையால் இவ்வுலகத்தின் க்ஷேமத்துக்கு உரித்தாகிய இக்காரியத்தை நீங்களறியீர்கள். ஸ்ரீ ஜனுர்த்தனனுகிய புருஷோத்தமனுக்கு யாதொரு குறைவுமில்லை, தைரியங்களை வஹித்திருங்கள். இவ்வவதாரம் விரோதிகளை சிக்ஷிக்க வந்த அவதாரமாதலால் நமது பரமோத்தம குரு ஸ்வாமியாகிய ஸ்ரீ யசோதா வத்ஸருடைய பிரபாவங்களை இன்னமொரு நிமிஷத்திலேயே கண்டு சேவிக்கப்போகின்றீர்கள் என்று தைரியங் கூறி அவர்கள் யாவரையும் அம்மடுவில் பிரவேசிக்க வொட்டாமல் நிறுத்தினுர்.

தன்னைக் குறித்து இவ்விதம் பிரலாபிக்கும் ஆயர்களைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ண பகவான் தாம் சர்வ சக்திமானுனபோதிலும் லோகமரியாதையின் நீதிக்கிடமாக வகித்து ஒரு முகூர்த்த காலம் ஸ்தம்பிதராய் நின்று, பின்பு தமது விராட் ஸ்வரூப விஸ்வாகார மகிமைகளைக்கொண்டு ஸ்ரீ திரிவிக்கிரம ஸ்வாமியைப்போலத் திவ்ய திருமேனியை விர்த்தியடையச்செய்தார். அவ்வளவில் அந்தச் சர்ப்பராஜன் தனது சரீரம் வருத்தத்தை யடையச் சகிக்கக் கூடாதவனுய்த் தான் சுற்றிக்கொண்டிருந்த சுற்றுகளை விட்டுக் கடிக்கின்றதை

யொழிந்து தன்னுடைய பணாமண்டலங்களை எடுத்து அந்தத் திவ்விய மங்கள விக்ரக ஸ்வரூபரை நன்றாகப் பார்த்து பெருமூச்சு விட்டுக்கொண்டு நாசிகாரந்திரங்களில் நின்றும் தூர்விஷாக்கினி புகையோடு மெழும்பப் பிரகாசவீனகாஷ்டா காரத்தைப்போல விளங்கி நின்றனன். அத்தருணத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவலீலையாகப்பிடித்து எடுத்துக் கொல்ல மனமில்லாமல் அந்தப் புஜங்கேந்திரனுடைய கண்களி லிருந்து விஷநீர்கள் வருஷிக்க அலட்சியமாகக் குலால னுடைய சக்கரத்தைப்போலக் கிறுகிறென்று இடசாரி வல சாரியாகச் சுற்றி அம்மடுவெங்கும் ஓடியோடி யலையும்படி அக்கொடிய சர்ப்பராஜனை வீசிவீசியெறிந்து வருத்தப்படுத் தினர். மேலும் ஆதிபுருஷரான ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவன் பின் தொடர்ந்து அந்தச் சர்ப்பராஜனைப் பிடித்து அவலீலையாகப் பணாமண்டலங்களின்மீது நின்று ஒருகரத்தி னால் அவனுடையவாலின் நுனியைப்பற்றித் தாக்கி எடுத் துக்கொண்டு, அந்த மடுவின் அலைகளினோசையை மதுர த்வனியுள்ள மிருதங்கமாகவும், ஸ்ரீ பிருந்தாவனங்களில் வாசஞ்செய்கிற மாரபட்சிகளின் சுகத்வனிகளை சுகீத கானங் களாகவும், ராஜஹம்ஸசாரஸ குக்குடாதி பட்சிகளினுடைய மனோரம்மியமான த்வனிகளை சுரதாளங்களாகவும், ஆகாச வீதியில் தரிசனஞ்செய்துக் கொண்டிருக்கிற தேவதாகண சமூகங்களை ஸபாநினங்களாகவும், திவ்விய மாணிக்கம் விளங்குகின்ற அந்தக் காளியனுடைய அநந்த பணாமண்டல முகசிரங்களை ரத்நகசிதமான மண்டபமாகவும் வகித்து அந்தக் காளியனுடைய பாபங்களைப் போக்கி பாவனனாகச் செய்யும்பொருட்டு தமது கிருபையினால் விசித்திரங்களாகிய நர்த்தனஞ் செய்யும்போது விஷமுண்டுபண்ணத் தக்கதா யிருக்கிற அந்தப் பணாமண்டலங்களில் எது தலையெடுக்கிற தோ அப்பணா மண்டலத்தை மிதித்து ஆஸப் பிராசங்களு மொடுங்கி சுத்த ஸாத்வீகனாகும்படி நர்த்தனஞ் செய்யத் தொடங்கினர். அந்தக் காளியனும் ஸ்ரீ பகவானிட வேகம் பொறுக்கமாட்டாமல் விகாரமாய் வீறிட்டான். அப்போ தவன் தலையின்மீதிருக்கிற மாணிக்க ஒளியினால் சிவந்த திருவடிகளோடே அவன் சிரசில் நர்த்தனஞ் செய்கையில் அம்பர வீதியில் அப்ஸரஸ்திரீகள் முதலியவர்களில் சிலர் மத்தளங்களடிக்கவும், சிலர் புள்ளாங்குழலூதவும், சிலர் வீணை வாசிக்கவும், சிலர் லயைபோடவும், அதற்குத் தக்கபடி ஸ்ரீ கிருஷ்ணன் லயை தப்பாமல் காளியனது ஆயிரந் தலை மேலும் ஓயாமல் நர்த்தனஞ் செய்வதைப் பார்த்து சித்தசாத் தியர், கந்தருவர் முதலிய தேவர்கள் ஆச்சரியப்பட்டு, புஷ்ப

மாரி சொரிந்து துதி செய்தார்கள். அந்தப் புஷ்ப வருஷ மத்தியில் நின்று துஷ்டஜன சிஷ்டாவதாரராகிய ஸ்ரீ பகவான் மிகவும் உத்ஸாஹ அதிசய வேகத்துடன் அந்தப் புஜகேந்திரனுடைய பண முடிகளின்மேல் பிரம்மானந்தத் தாண்டவங்கள் செய்யும்போது அந்தக் காளியனெனவன் தனது நிஜகர்வமழிந்து பிரதி முகங்களிலிருக்கின்ற வாய்களின் வழியே கிரமக் கிரமமாக இரத்தமாம்ஸங்களைக் கக்கிக் கண்களின் வழியே விஷப்பொறிகளை யுதிர்த்து நாசிகளின் வழியே விஷஸ்வாஸங்களை விட்டுப் பலவீனனாகி யிளைத்துத் திக்குவிதிக்குகளைப் பார்த்துக்கொண்டு பிராணனைவிடாத சவத்தைப்போலச் சாந்தனாகித் தனது இருதயத்தில் சிந்திக்கத் தொடங்கினன்.

காளியன் சிந்தனை

அகோவாச்சரிய மாச்சரியம்! சர்வசராசராத்மகமாகிய இந்தப் பிரபஞ்சத்தினுள் விருத்தியடையும் தேவாசுர கந்தர்வாதி சமூகங்களும் மனுஷ்ய-பசு-பட்சி-விருட்ச முதலானவைகளும் எனது அர்விஷாக்நி ஜ்வாலைகளின் ஸ்பரிச மாத்திரத்தினால் தங்கள் ஆஸப்பிராஸங்களுமொடுங்கி அதிக துன்பங்களை யடைந்து மரண மடைவார்களே! ஆ ஈதென்ன வதிசயம்! இப்படிப்பட்ட கொடிய விஷஜ்வாலைகளைச் சகித்து எவ்வளவும் லக்ஷியஞ்செய்யாமல் இந்த ஸ்ரீ கோபால சிறுவன் எனது சஹஸ்ர பண முடிகளையுஞ் சின்ன பின்னமாக மிதித்து நர்த்தனஞ் செய்கின்றனன். ஆகையால் இவன் பிராகிருத சம்பந்தமாகிய தேவாதி மகாஜன மனுஷ்ய வர்க்கங்களைப் போலப் பஞ்ச பூதாத்மகமான சரீரத்தையுடையவனல்லன். சர்வாந்தரியாமியும், பரப்பிரம்ம ஸ்வரூபனும், ஸ்ரீ சர்வேஸ்வரனுமான ஸ்ரீ ஹரியேயாக வேண்டும். அந்த ஹரிக்கேயல்லாமல் என்னுடைய விஷக்கடூரத்தைச் சகிக்க இதரமானவர்களுக்குத் தரமாகுமோவென்று சிந்தித்துத் திவ்யக்கியானம் பிறந்து மஹத்தாகிய பீதியை யடைந்து வந்தனஞ்செய்து மிகவும் ஆயாசமுற் றிருந்தான்.

காளிய பத்தினிகளான நாககன்னிகைகளின் ஸ்துதி

பரிக்ஷித்துவே! இந்தப் பிரகாரம் தனது கர்வமழிந்து சவத்தைப்போல அசைவற்றவனாய் வீழ்ந்து கிடக்கின்ற பாம்பரசனைப் பார்த்து இவனுடைய பத்திகளான நாக கன்னிகைகள் தங்கள் பர்த்தாவாகிய நாதனுக்கு நேரிட்ட உபத்திரவத்தை நினைத்து மனது திகிலடைந்து சிந்தாக்கிராந்தையாய்க் கண்களிலே தாரைதாரையாய் ஜலம் பெருக

ஸ்ரீ கோபால சூடாமணியாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பார்த்துச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்துத் தங்கள் சிரோபாகத்தி னுச்சியின்மீது இரண்டு கைகளையும் அஞ்சலி செய்து குழந்தைகளை முன்னிட்டுக் கொண்டு திவ்வியக் கியானேதயர்களாய் ஸ்துதி செய்யத் தொடங்கினார்கள்.

அகிலாண்டகோடி பிர்ம்மாண்ட நாயகராயும் ஜகத் காரணராயும் சுருதி ஸ்மிருதி இதிஹாச ரூபியாயுமிருக்கிற தேவரீர் தவிர கியானமில்லாத இவன் போலொத்த மூடர்கள் செய்த அபராதத்தை யார் க்ஷமித்து ரக்ஷிக்கப் போகிறார்கள். பரம கிருபாவத்ஸலராகிய ஜகத்விபுவே! தீனதயாளுவே! எங்களுக்குப் பர்த்தாவாகிய இவ்வுரகேந்திரன் மஹோத்த மன், க்ஷமிக்கக்கடவீரென்று சொல்லுகின்றோ மல்லோம். ஜன்ம ஸ்வபாவமான கண்டகஹிருதய குரூபுத்தியும் துரா சாரமுஞ் சர்வஜன பயங்கரமுஞ் ஜாதீயமா யிருக்கின்றவன் தான். அப்படி யிருந்தபோதிலும் உமது பக்தஜன ஸ்திரீக ளாகிய எங்களுடைய சுபாவமான மாங்கல்ய சம்பத்தையிழக் கவும் அலங்கார ஈனமாயிருக்கிற வைதவ்யத்தை யடையவும் நேரிடுமே யென்றெண்ணி கிருபாபயோநிதியாகிய உம்மைச் சரணமாக வடைகின்றோம். அனாதைகளாகிய எங்கள் பொருட்டு அவனது அபராதத்தை க்ஷமித்து தீனவசன ஸ்துதிகளை அங்கீகரித்து மங்களகரமாகிய பதி பிக்ஷையை லபிக்கச்செய்து ரக்ஷிக்கக் கடவீர். கருணாபயோநிதியாகிய ஸ்ரீயப்பதியே! உமது ஊழியனாகிய இந்தக் காளியனானவன் அகங்காரபோக சௌக்ய கர்வகுணங்களழிந்து மஹத்தாகிய அந்தப் பணாமண்டல முடிகளுஞ் சிதைந்து ஆசப்பிராசங் களுமொடுங்கி தத்தளித்துக் கொண்டிருக்கின்றான். ஆகை யால் எங்களைக் குறித்தாவது எங்கள் பர்த்தாவாகிய இந்தச் சர்ப்பராஜனிடத்தில் கிருபைகூர்ந்து இவன் நற்குணங்களை யடைந்துய்யும்படி இரக்ஷிக்கக் கடவீரென்று பிரார்த்தித்த மாத்திரத்தில், ஸ்ரீ பகவானும் பாதாரவிந்தத்தாடன நர்த்த னங்களில் நின்றுஞ் சாந்தராய் அப்பாலெழுந்தருளிக் கிருபா பரிபூரணராய்க் கடாக்ஷித்தார். அப்படிக் கடா க்ஷித்த மாத்திரத்தில் அவ்வுரகபதியுஞ் சிலநேரம் ஆயாச முற்றிருந்து பின்பு சற்று நேரத்தில் தெளிந்து ஜீவனோடுங் கூடிய பிராணேந்திரியங்களைச் சௌக்கியமாக வடைந்து தனது பணாமண்டல முகங்களை நன்றாகச் சீர்திருத்திக் கொண்டு பெருமூச்சுக்களை விட்டு ஆயாசங்க ளொழிந்து ஸ்ரீ ஜல ஜநயனரான சுவாமியை நன்றாக உற்றுப்பார்த்துப் பக்தியுடன் சேவித்துத் துதிசெய்யத் தொடங்கினான்.

காளியன் வாக்கியம்

ஸ்ரீ பகவானே! உமது திவ்ய சங்கல்பமாத்திர ஸ்ருஷ்டிகளில் தமோகுணப் பிரதானர்களாய் கொடிய விஷாக்நியை கண்டங்களில் கொண்டுயிருக்கிற எங்களால், இவ்வுலகத்திற் பயங்கரமாகிய கொடிய வினைகள் நேரிடுகின்றனவே யல்லது ஒரு நன்மையாவதுண்டோ? எங்களுக்கு சஜாதீய கோரமும் விஷசக்தி பலத்தா லுண்டான ரௌத்ராகாரமும் தைரிய குண ரோஷங்களும் மிகுந்த கர்வாதிசயங்களும் விருத்தியடைந்துக் கொண்டிருக்கின்றனவே யல்லாமல் இந்த ஜன்மத்தில் சிறிதும் யாதொரு நன்மையும் உண்டாகின்றதேயில்லை. அப்படிப்பட்ட எங்களிடத்தில் சர்வலோக சகிதபராகிய நீர் உமது பரம காருண்யாதிசயத்தினால் சிட்சித்துப் பரமோபகாரார்த்தமான நல்லறிவு தோன்றும்படியருளிச்செய்த உமது கல்யாண குணங்களுக்கு நமஸ்கரிக்கின்றேன்.

புருஷோத்தமரே! சர்வ ஜனங்களுக்கும் மூலகாரணசப்பூதராகி உமது பத்மநாபீ விவரங்களில் நின்றும் சர்வ பிரபஞ்சங்களையும் சிருஷ்டித்தீர். அப்படிப்பட்ட ஆச்சரியகரமான சிருஷ்டி பேதங்களில் ஸஜாதீய தாமசகுணங்களும் சர்ப்பாகாரங்களும் குரூர ஸ்வபாவங்களு முள்ளவர்களாய் நாங்கள் ஜன்மித்து ஸ்ரீ பகவானாகிய உம்முடைய மாயா மோஹன திரோகிதர்களாய் மயங்கிக் கர்வாந்தகாரத்தில் மூழ்கிப் பிரமித்திருக்கின்றோம். இப்படிப்பட்ட நாங்கள் எந்தச் சுகிர்தத்தினால் பரம தர்மங்களை யறிந்து அம்மாயா சாதுர்யங்களில் நின்றுந் தெளிந்து உச்சீவிக்கப் போகின்றோம். ஸ்ரீ பகவானே! அகிலலோக கர்த்தாவாகியும், சர்வ ஸ்வாமியாகியும் விளங்குகின்ற உமதாக்கினையால் நிக்ரானுக்ரக பூர்வமாகச் சிட்சித்து எங்களை நியமிக்கக் கடவீர். ஸ்ரீ சர்வேஸ்வரரே! நீர் ஆக்கியாபித்தபடி நாங்கள் வசித்துக்கொண்டிருக்கின்றோம். ஆகையால் மகத்துக்களாகிய ஸ்ரீ பாகவதாபிமான ஸ்ரீ பகவத் கிருபைக்குப் பாத்திரமாகத் தக்க புத்திகோசரங்களை யருளிச்செய்து இரக்ஷிக்கக் கடவீர். என்னுடைய ஜன்மாந்திரங்களில் என்னையு மரியாமல் எந்த மகானுபாவர்களுடைய திவ்யாபிமான கிருபாவலோகனாதிசயத்தை நானடைந்தேனோ அந்த மகாதிசய சுகிர்த பாக்கியோதயங் கிடைக்கப் பெற்றேன். பரமயோகி சிரேஷ்டர்களும் உமது திருவடித் தாமரைகளின் ஸ்பரிசம் பெற்று உச்சீவிக்க இன்னமும் பிரார்த்தித்துக் கொண்டிருக்கின்றார்கள். அப்படிப்பட்ட திவ்ய சம்பத்கரமான

ஸ்ரீ சரணாரவிந்த பரிசங்கள் எனக்குக் கிடைக்கும்படி பெற்றுக்கொண்டேன். இனி எனக்குப் பதமானலு மென்ன? எந்த லோகத்தில் வாசமா யிருக்கச் செய்தபோதிலு மென்ன? உமதருளின் வண்ணமேயல்லது வேறில்லையென்று இந்தப் பிரார்த்தனைகளைச் செய்து துதித்தனன். ஸ்ரீ ஸர்வேஷ்வான் இந்தக் காளிய சர்ப்பராஜனுடைய ஸ்துதி பூர்வகமான உபசார வார்த்தைகளை யங்கீகரித்து அந்த உரகேந்திரனுக்கு நியமிக்கின்றார்.

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்

காளியனே! இன்று முதல் இந்த மகா நதிதீரத்தில் யாவரும் ஸ்நானபானங்களைச் செய்து சந்தோஷிக்கவும், கோவர்க்கங்கள், மனுஷ்யர்கள் முதலியவர்கள் தங்கள் தாபந் தீரும்படியாய் நீராடித் தாகபானஞ்செய்யவும், இந்த நதியை விட்டுவிட்டு நீயும் உனது புத்ர மித்ர களத்ராதி பரிவாரங்களும் சமுத்திரத்திற்குப்போய் எனது குணாநுபவங்களைத் துதிசெய்துகொண்டு சுகித்திருங்கள். இந்த யமுனாநதி மடுவில் நடந்த, இந்த எனது லீலையை மனனம் செய்வார் பக்தியெய்தி பல சுகங்களை யடைவதுடன் சர்ப்பங்களால் யாதொரு தீமையும் அடையார்கள். மேலும் இத் தீர்த்தத்தில் மூழ்குவார் இஷ்டபலனை யடைவார்கள். பிதுர்க்களுக்காக தர்ப்பணாதி செய்பவர்களும் உரிய பலன் பெறுவார்கள்.

உரகேந்திரனே! பூர்வத்தில் ஸ்ரீ கருடனுடைய பயத்தால் உனது நிஜநிவாஸ ஸ்தானமாகிய ரமணகத்வீபத்தை விட்டு இம்மடுவில் பிரவேசித்திருந்தாய். இனி யுனக்கு அவனால் பயமில்லை. எனது ஸ்ரீ பாதாரவிந்தக் குறிகளை யடைந்த உனது பணாமுடிகளைக்கண்டமாத்திரத்தில் அந்தப் பக்ஷிராட்டாகிய கருடபகவான் உன்னை மிகவும் விசுவாசமாக ஸ்நேகிப்பாரே யல்லது, சத்துருவாக ஹிம்சிக்கக்கடவரல்லர் என்று, இவ்விதமாக ஸ்ரீ கோபால கிருஷ்ண பகவான் கிருபையாகச் சொன்னார். அந்தப் புஜகேந்திரன் மகா சந்தோஷாநந்த பரிதனாய்த் தனது பத்திநிகளுந் தானும் மிகுந்த பக்தி விசுவாசத்துடன் தேவதாம்சமா யிருக்கின்ற மகா பரிமளமுள்ள ஒரு நீலோற்பல புஷ்ப மாலையை ஸ்ரீ கண்ணபிரானுக்குச்சமர்ப்பித்து,செலவுபெற்றுக்கொண்டு தனது புத்ர மித்ர களத்ரசமேதனாய் ஸ்ரீ பகவானுக்கு அடிக்கடி அஞ்சலிசெய்து துதித்துக்கொண்டு ரமணக நாமதேய ரத்நாகரத்வீபத்தைக் குறித்துச்சென்றான். ஸ்ரீகிருஷ்ண பகவான் அனுக்கிரகத்தால் அந்த ஜலத்திற்கு விஷம்போய் பரிசுத்தமாச்சுதென்று சுகயோகீந்திரர் சொன்னார்.



## பதினேழாவது அத்தியாயம்

*ஸ்ரீ பகவான் காளிய சர்ப்ப அரசனை நிக்ரஹித்ததும் பெருங் காட்டுத் தீயை உட்கொண்டதும் சகல கோபால கோபீஜன கோவத்ஸங்களை இரக்ஷித்ததும் சொல்லப்படுகின்றது.*

பரிக்ஷித்து வாக்கியம்

வாரீர் தயாபரிபூரணரான பிர்ம்மரிஷி சிரேஷ்டரே! இந்தக் காளியன் தனது நிவாசஸ்தானமாகிய ரமணக த்வீபத்தை விட்டுத் தங்கள் சுஜாதியர்களான சர்ப்ப இனங்களைத் துறந்து, தான்மாத்திரந் தனது குடும்பத்துடன் வெளிப்பட்டு வரும்படியாய் கருடபகவான் விஷயத்தில் என்ன அபராதங்களைச் செய்தான்? அந்தச் சரித்திரத்தை விசிதமாகச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தான். அவ்வரசனைப் பார்த்து சுக முனீந்திரர் சொல்லுகிறார்: கேளும் மகாபாகவத சிகாமணியே! அந்த ரமணக த்வீபத்தில் வாசஞ் செய்கின்ற சகலமான ஜனங்களுந் தங்களுக்கு இந்தச் சர்ப்பங்களுடைய பயங்களில்லாமலிருக்கத்தக்கதாக மாதங்கள் தோறும் மகா விருட்சங்களினடிவாரங்களிலும், பிலத்வார சமீபங்களிலும், புற்றுகளின் சமீபங்களிலும், சுகிர்ப்பூதர்களாய்ச் சர்ப்பங்களை அர்ச்சித்து அறுசுவை ரசவர்க்கங்களைச் சமர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள். இந்தச் சர்ப்பங்களும் பருவதின புண்ணியகாலங்கள்தோறும் தங்களுக்குச் சர்வ ஜனங்களாலும் சமர்ப்பிக்கப்பட்ட, அந்த ஸத்கார பூஜா பாகங்களைத் தங்கள் குலத்திற்கு வைரியாகிய கருடபகவானுக்குச் சமர்ப்பித்து, அவரால் யாதொரு அரிஷ்டங்களையுந் தாங்கள் அடையாமலிருக்கத் தங்களை அவர் இரட்சிக்கும்படியிருக்க, இந்தக் காளியன் தான்மாத்திரம் அந்த நிவேதனத்தைச்சிறுவராகிய பக்ஷீந்திரரை மதியாமலுந் தனது பூஜா பாகங்களைக் கொடாமலும் அலக்ஷியஞ்செய்துக் கொண்டிருந்தான். அதனால் கருடபகவான் கோபங்கொண்டு, அந்தக் காளியனுடைய பணமண்டல முகங்களைக் கிழித்துசம்ஹரிக்க உத்தேசித்து பூமியதிர்ந்து பிரதித்வனிகள் செய்ய பயங்கரமாகச் சப்தித்துக்கொண்டு வந்தார்.

இப்படி வருகின்ற பக்ஷீந்திரரைப் பார்த்துச் சர்வஜந்துக்களும் பயங்கொள்ள உத்தமர்கள் சரணமடைந்து பிரார்த்திக்க காளியன் மாத்திரம் கோபோத்தீபிதனாய் தனது பணமண்டல முகங்களை விரித்துக்கொண்டு கண்களில் நின்றும் விஷாக்நி யுதிரப் புகையெழும்ப யமபாசத்தைப்போல நாக்குகளை நீட்டிக்கொண்டு மகா கோபத்துடன் எழும்பி அந்தப் பக்ஷீந்திரருடைய சர்வாவயங்களையுஞ் சின்ன பின்னமாக

கடித்து வடவாக்நிச் சுவாலைகளுக் கொப்பான விஷரசங்களை மேலுமுமிழ்ந்து கொளுத்தி மகா வருத்தங்களை யடையச் செய்தான். அப்போது கருடபகவான் முன்னிலும் அதிக சௌரிய பராக்கிரம வீரியாதிசய ரௌத்திராகார கால மிருத்தியுவுக்குச் சமானராய் சிறிதும் தயையைக் கொள்ளா தவராய், ஊழிகால ருத்திரபகவானைப்போல உக்கிரமான கோபத்தை யடைந்து, அந்தச் சர்ப்பேந்திரன் பேரிற் பாய்ந்து துரத்தி, நகசகபரியந்தம் சரீராவயவங்கள் முறியத் தனது பக்ஷங்களாலறைந்து அவனுடைய அநந்த பண மண்டல முகங்களையுந் தலையெடுக்க வொட்டாமற் கொத்திக் கொத்தி கிழித்துச் செண்டாடி இரக்த மாம்ஸங்களுதிரும் படி யவன் விஷங்களைக் கொள்ளைக்கொண்டு சரீரமாத்தி யந்தமும் சல்லடைக் கண்களைப்போலத் தமது பாத நகங்க ளாலும் மூக்கின் கூர்மையினாலுந் துளைத்துச் சின்ன பின்னமாக அடித்தார். அப்படி அடிக்குஞ் சமயத்தில் இந் தப் புஜகேந்திரன் இளைத்து மகாவருத்தத்தை யடைந்து தனது கர்வமழிந்து பிராணபீதியுடனே எப்படித்தப்பித்துக் கொள்ளப் போகின்றோமென்று ஏக்கங்கொண்டு சமையம் பார்த்துப் பதறிக்கதறிக்கொண்டு ஓடிவந்து, இந்த யமுனாநதி மடுவில் பிரவேசித்தொளித்தான். அப்போது கருடபகவான் நல்லது இனி எப்போதாவது அகப்படமாட்டாயா அந்தச் சமயத்தில் உன்னைச் சம்ஹரிக்கிறேனென்று சொல்லிப் போனார்.

மஹாராஜனே! இந்தச் சர்ப்பராஜன் இந்த மடுவிலிருந் தால் பயமில்லாமல் வாழலாமென்று நினைத்து பிரவேசித்த தற்குக் காரணஞ் சொல்லுகின்றேன். பூர்வத்தில் மகா தபோ நிதியாகிய சௌபரியென்பார் வெகுகாலமாக யமுனாநதி தீரத்தில் தவஞ்செய்துக்கொண்டிருந்தார், அப்படியிருக்கின்ற சமயத்தில் கருடபகவான் மிகவும் பசியினால் வருந்தி இம்மடு வில் பிரவேசித்து அதிலுள்ள ஜலஜந்துக்களை நிர்த்தய ராய்ப் பட்சித்துக்கொண்டிருந்தார். அதை அந்தச் சௌபரி யானவர் பார்த்து "அப்பனே பட்சித்தது போதும், இனிமே லிதிலிருக்கும் ஜலராசிகளை இம்சிக்கவேண்டா" மென்று சொன்னார்.

மறுபடியும் ஒருநாள் கருடபகவான் அந்தப் புண்ய ஸரசில் பிரவேசித்து ஜலஜந்துக்களை இம்சித்துப் பட்சிப் பதை அம்மஹா ரிஷியானவர் கண்டு கோபங்கொண்டு "இன்றுமுதல் இந்த மடுவில் பிரவேசித்து இதிலிருக்கின்ற ஜலஜந்துக்களை இம்சித்துப் பட்சித்தீராகில் உமது பிராண

வாயுக்கள் சிதறி உயிரிழந்துபோகக்கடவீரென்று" அப்பட்சி ராஜனை சபித்தார். அந்தச் சாபகாரணம் இந்தக் காளியன் அறிந்திருந்தானாதலின் அவனிப்போது பயமின்றி, இந்த நதியிற்பிரவேசித்துத் தனது புத்ரமித்ரகளத்ர பரிவாரங்களை யழைப்பித்துக் கொண்டான்.

இப்படி காளியன் யமுனாநதி மடுவைவிட்டுச் சென்றபின் பகவான் சகல சுரர்களாலும் மனிதர்களாலும் பலவிதமாகப் போற்றப்பட்டு தனது பந்துஜன சமூஹங்களில் வந்துசேர்ந்தார். அத் தருணத்தில் ஸ்ரீ யசோதாநந்தகோபர் ரோகணி முதலியோர் மூர்ச்சை தெளிந்து ஆயாசந்தீர்ந்து ஸ்ரீ மாதவப் பிரானைப் பார்த்து பிராணலாபத்தை யடைந்த இந்திரிய சமூஹங்களைப்போல சந்தோஷித்துப் பரமாநந்த பரிதர்களானார்கள். ஸ்ரீ பலபத்திராருந் தமது திருத்தம்பியாகிய ஸ்ரீ கண்ணபிரானைக்கண்டு கண்களித்து ஆனந்தத்துடன் ஆலிங்கனஞ்செய்து சந்தோஷித்தார். கோபாலகோபீஜனங்கள் யாவரும் நேத்ரோத்ஸவமாக சேவித்துக்கொண்டிருந்தார்கள். விருஷபங்களெல்லாம் மகத்தாகிய செருக்கை யடைந்து வால்களை உயரத்தூக்கித் தலையை யெடுத்துக் கொண்டு ஆ ஸ்ரீ கிருஷ்ண ஜயது! வென்னுமாப்போலக் கர்ஜ்ஜித்து ஊங்கரித்தன. கன்றுக் குட்டிகள் ஸ்ரீ கிருஷ்ண தரிசன குதூஹலத்தினால் அந்த யமுனாதீர்த்தத்தின்றோங்களில் வால்களை உயரவெடுத்துச் சப்தித்துக்கொண்டு இளமான் குட்டிகளைப்போல இடசாரி வலசாரியா யோடி விளையாடிச் சம்பிரமங்களை யடைந்தன. காமதேனுவைப் போலொத்த பசுக்கள் யாவும் தங்கள் போஷகனாகிய ஸ்ரீ கோபால கிருஷ்ணமூர்த்தியானவரைக் கண்ட மாத்திரத்தில் சந்தோஷ பரிதமானஸத்தால் சரீரவவயவங்கள் பூரித்து ஆ! கோவிந்தா! வென்னுமாப்போல அம்மாவென்று சப்தித்துப் பரமாநந்தமடைந்து ஸ்ரீ பகவானைச் சூழ்ந்திருந்தன. அந்தப் புண்ணிய தீர்த்தத்தின்றோங்களில் பட்டுப் போயிருந்த விருட்சங் கொடி பூண்டு சகல சமூஹங்களுந் தளிரெடுக்குங் காலமாகிய வசந்தகாலம் நேரிட்டதுபோலத் தளிர்ந்தன. சகல மிருக பட்சிசமூகங்களும் சூரியோதயகால சமீபபஞ்சவிஷக்காலத்தைக் கண்டதுபோலக் கலகலவென்று மகாநந்த வைபவத்துடன் நானாவித மதுர ஸ்வரங்களுண்டாகச் சப்தித்தன. அப்பொழுது சகல பிரம்ஹண்ய சனங்களும் புண்யாங்கனைகளாகிய பிராமண ஸ்திரீகளும் ஸ்ரீ நந்தகோப யசோதை முதலாகியவர்களைப் பார்த்து உங்கள் பூர்வ சன்மங்களினுடைய சுகிர்தவிசேஷ அருந்தவப் பயன்களி

ளுல் சர்வப்பிரபஞ்ச மனோகரமாய் விளங்குகின்ற மகா தவப் பலமாகிய உங்களன்புள்ள புத்ர ரத்நமானவர் இந்தக் கொடிய சர்ப்பதஷ்டத்தில் நின்றும் விடுபட்டு க்ஷேமமாய் வந்து சேர்ந்தார். உங்கள் பாக்யோதய புண்ணியவசத்தை என்னென்று துதிக்கப்போகிறோமென்று மிகவும் ஆதரத்துடன் ஆசீர்வசனங்களைக் கூறினார்கள். அத் தருணத்தில் ஸ்ரீ யசோதாப்பிராட்டி தனது அருமைச் சிறுவனை ஆலிங்கனஞ்செய்து உச்சிமோந்து திவ்ய திருமேனியெங்கும் ஸ்பரிசித்துத் தனது இடுப்பின் மீதெடுத்துக்கொண்டு என்னையனே! என்னப்பனே! எங்கள் குலதெய்வமே! என்று முத்தமிட்டுச் சற்றுநேரஞ் சும்மாவிருந்து எங்கள் அருஞ்செல்வப் புத்திரனே! உன்னை இக்கொடிய சர்ப்பமானது கடிக்கும்போது மகத்தாகிய ஆபத்துகளையடைந்து எங்களை நினைத்து துக்கித்தையோ? பதறிக் கதறினையோ? விதியை வெறுத்தையோ? ஏனப்பா இம் மடுவிலிறங்கினாய், நீ யெப்போதுந் தீரபுருஷனாகித் துணிந்து பிரவேசிக்கின்றவனல்லவா? உனது ஆச்சரியகரமான சேஷ்டிதங்களைக் குறித்து நாங்களஞ்சுகின்றோம். எங்களைப்பற்றியாவது மற்றப் பிள்ளைகளைப் போல் சாதுவாயிருக்கப் போகாதாவென்று சொன்னாள். இப்படிப் பலவாறு தனது ஆகராதிசயங்களை விளங்கச்செய்து பிரீதியால் நஷ்டகதனை புத்திரனென்னுமாதவனை அடிக்கடி பார்த்துப் பார்த்து ஸ்வப்நத்தில் அடைந்த தனமானது நேராகக் கிடைத்ததுபோல், ஸ்ரீ பகவானை மடியில்வைத்துக் கொண்டு அடிக்கடி ஆனந்தபாஷ்பங்களை வருஷித்து நல்ல திருப்தியடைந்த மனமுடையவளாயிருந்தனள்.

அரசர்கோனே! இவ்விதம் யாவரும் ஆநந்தத்தை யடைந்திருக்கும்போது சூரியன் அஸ்தமித்தான். அந்தக் காளிந்தி தீரத்தில் அன்றையத்தினம் இராத்திரி நந்தகோப யசோதாதேவி முதலிய சகலகோபால கோபீஜன ஆபால விர்த்த ஜனங்களெல்லோரும் பசு-கன்று-விருஷப கணங்கள் யாவும் ஸ்ரீ பகவத் சந்தர்சன சந்தோஷத்தினால் பசிதாகங்களை மறந்திருந்து மிகவும் பொழுதுபோனபின்பு பசிதாகபீடிதர்களாய் அலுத்து எவரெவர்கள் எங்கெங்கு எப்படி எப்படி யிருந்தார்களோ அவரவர்கள் அங்கங்கு அப்படி அப்படியே சயனித்து நித்திரைசெய்துக் கொண்டிருந்தார்கள். பசு-கன்று-விருஷப-கணங்கள்யாவும் அப்படியே மெய்மறந்து நித்திரைசெய்தன. அந்த நடுநேரத்தில் அந்த மகாரண்யப் பிரதேசத்தில் தெய்வீகத்தாலுண்டாகிய தாவானலமென்கிற ஒரு காட்டுத் தீயானது உற்பவித்து, அம்மகா வனத்திலிருக்

கிற விருட்சம் கொடி பூண்டுகள் யாவையும் பற்றி யெரித்துக் கொண்டு நான்கு திக்கிலும் ஜாச்வல்யமானமாய்ப் பொறிகள் சிதற அதிகோராகாரமாய் மண்ணும்விண்ணும் புகை யெழும்ப ஜ்வலித்துச் சூழ்ந்து, அலுத்துத் தங்கள் தாபந் தீரும்படி சுகமாக நித்திரை செய்துக்கொண்டிருக்கின்ற, இந்த நந்தவிரஜ சமூக புண்யசனங்கள்மீது பாய்ந்தது. பாய்ந்த மாத்திரத்தில் யாவருந் திடுக்கிட்டுத் தூக்கந் தெளிந்தெழுந் திருந்து இத்தீயினால் கொளுத்தப்பட்ட வேகத்தைச் சகிக்கக் கூடாதவர்களாய்ப் பிராணபீதியை யடைந்து சர்வ ஜனங் களும் மாயாமனித பாலராகிய ஸ்ரீ ஹரியைத் தவிர அன்னிய ராகிய வொரு ரட்சகரையுங் காணாமல் ஹா ஸ்ரீ கிருஷ்ணா! ஆபத்பாந்தவா! சரணாகத வத்சலனாகிய ஸ்ரீ பகவானே! இதோ பார்த்திரா! காட்டுத் தீயானது சமீபத்திற்கு வந்து விடுகின்றது. இப்போதே எங்களுக்குச் சகிக்கக்கூட வில்லையே ஸ்வாமி இன்னமுபேட்சை செய்கின்றீரோ? தகித்து விடுகின்றதே! இதோ வந்து சூழ்ந்துகொண்டதே! ஏககாலத்தில் யாவரும் இவ்வக்நி கணங்களால் மகத்தாகிய துன்பமுற்று அலைகின்றோம். எங்களை நீ ரெவ்விதமாக இரட் சிப்பீரோ? அறிகிலோம். ஓ பத்மாட்சரே! ஸ்ரீ கிருஷ்ணா! ஓகோ ஸ்ரீ பலராமரே! நீங்கள் பராக்ரமசாலிகளான அதி மானுஷ சேஷ்டித தெய்வபுருஷர்களாகையால் சீக்கிரமாக இந்தக் காட்டுத்தீயைக் குளிரச்செய்யுங்கள். உங்களுடைய சேவையே புருஷார்த்தமென்று நம்பின, பக்த ஜனங்களாகிய எங்களுக்கு இத்துன்பங்கள் நேரிடலாகுமோ? ஓ பரமபுரு ஷர்களே! அதியுக்ரமான இந்தத் தாவானலச் சுவாலைகள் முழுதிலுமேல் விழுந்து ஹிம்சியாதபடி எங்களை ரட்சிக்கக் கடவீர்களென்று யாவருமுறையிட்டார்கள்.

அந்தச் சமயத்தில் ஸ்ரீ பகவானானவர் தமது கருணா கடாட்ச வீட்சண்யத்தினால் அவர்களுக்குத் துன்பமிலாதி ருக்கும்படி கடாட்சித்து, ஜகதீஸ்வரனாகியும் அநந்த சக்த தேஜோமயனாகியும் விளங்கித் தமது நிஜசக்தி லேசத்தினால் விஸ்வரூபங்கொண்டு ஒருவருந் தன்னை யுணராமல் சங்கல் பித்துக்கொண்டு அக்நியாத்மக அந்தரியாமித்வத்தினால் அந்தக் காட்டுத்தீயை அரைக்ஷணமாத்திரத்தில் தாம் போக் தாவுங் கர்த்தாவுமாய் பிரதிபாதிக்கின்ற வேதார்த்தங்களுக் குச் சாட்சியாய் முழுதும் பானஞ்செய்து அரண்யமெங்குங் குளிரச்செய்த ஆசிரதர்களாகிய நந்தகோப ஜனங்கள் யாவ ரையும் இரட்சித்தார்.

பின்பு யாவருஞ் சௌக்யத்தை யடைந்திருந்தார்கள். அந்த கோபால ஜனங்களின் முகங்களுக்கொப்பாய்த் தாமரை புஷ்பங்கள் மலரச் சூரியன் கிழக்குத்திசையில் உதயமானன. ஸ்ரீ நந்தகோபர் முதலியோர் காலையிலெழுந்திருந்து ஸ்ரீ கிருஷ்ண பகவானை யழைத்துக்கொண்டு சகல கோபால குமார கோபீஜன கோகண சமேதர்களாய்ப் பரயாநந்தத்துடன் திருவாயர்பாடியை வந்து சேர்ந்தார்கள்.



## பதினெட்டாவது அத்தியாயம்



*வசந்தகால வர்ணனையும் ஸ்ரீ பலராமரால் மஹாபராக்கிரம சாலியாகிய பிரலம்பாசுரனை சம்ஹரித்தது சொல்லப்படுகின்றன.*

வாராய் ஜனநாயகனே! ஸ்ரீ பலராம கேசவமூர்த்திகள் கோபால பாலவேஷ ஸ்வரூபர்களாய்ச் சந்தோஷாதிசயமான மனோத்ஸாஹங்களுடன் சகல பந்துக்களால் செய்யப்பட்ட ஸ்துதிகளைப் பெற்றுக்கொண்டு அளவிறந்த கோ சமூகங்களை சம்ரக்ஷணஞ்செய்து தங்கள் மாயா சேஷ்டிதங்களால் அநந்த விசித்திர லீலா விநோதங்களை யாசரித்துச் சர்வத்திரர்களுக்கும் மனோரம்யமாக விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அப்படியிருக்கின்ற சமயத்தில் இரண்டுடலுக்கும் ஓருயிரென்று சொல்ல மனமொருமித்திருக்கின்ற ஸ்திரீபுருஷர்களை யுருகச்செய்யவும், சர்வபிராணிகளுக்குந் தாபங்களை யுண்டுபண்ணவும், உத்தராயணகாலந் தோன்றியது. வாராய் உத்தரா நந்தனனே! அக்நிபகவானும் யமனும் நிருதியுமிருக்கத்தக்க தென்றிசையில் வெறுப்பில்லாமல் நித்தியமாய் நடந்ததினாலே முன்னிலும் அதிகமான தாபம் மேலிட்டது. அதைப் பனியால் தணித்துக் கொள்ள வேண்டுமென்று நினைத்து இமயமலைப் பக்கத்தில் சேர்ந்தானென்று சொல்லவும் தன்னுடைய கிரணங்களினாலமர்ந்து பரிமளிக்கின்ற தாமரைப் புஷ்பங்களைப் பனிகள் வாட்டுகின்றபடியால் பனி மலையோடு சண்டைசெய்யப் போனானென்று சொல்லவும், சூரியபகவான் வடதிசையைச் சேர்ந்தான்.

இப்படிச் சூரியன் வடதிசையைச் சேர நேரிட்டதாகிய உத்தராயண காலத்தில் மகரராசியிற் பிரவேசித்த சூரியன் அதைவிட்டுக் கும்பராசியிற்போய் அதிலிருந்து மீனராசியிற் பிரவேசித்தான். இப்படிச் சூரிய பகவான் ராசியைவிட்டு

ராசிகளிற் பிரவேசிக்குந்தோறும் அந்த இமந்தகால சிசிர காலங்களில் நாளுக்குநாள் அகசுகள் அதிகரித்துப் பகற் பொழுது விருத்தியடைந்தது. இரவு அகசு குறைந்தது. இப்படி ராசியைவிட்டு வேறுவேறு ராசிகளில் வருகிற திவா கரனுடைய கதிபேத சஞ்சாரங்களினால் அவனுடைய கிர ணங்கள் தினந்தோறும் உஷ்ண விருத்தி யடைந்தன. அத ளுல் உலகத்திற்கு அதிகமதிகமாய் உஷ்ணஜ்வாலை மேலிட் டது. அந்தக் காலத்தில் ஏரிகள் தடாகங்கள் குளங்கள் குட்டைகள் முதலியவற்றில் நாளுக்கு நாள் சலங்கொஞ்சங் கொஞ்சமாய் வற்றியது. இப்படி நீர்வளங்களெல்லாம் வற் றவே, ஆவினங்கள் சலபானஞ்செய்யுந் தீர்த்தத்துறைகளெங் குஞ்சேருய்க்குழம்பின. உடனே சூரியபகவான் மேஷராசியிற் பிரவேசித்தான். இளவேனிற் காலமாகிய வசந்தகாலம் வந் தது. வசந்தமாகிய தென்றற்காற்றுந் திரும்புவதற்கு முன்னம் கீழ்க்காற்று வாடைக்காற்றுமாறிக் கொஞ்சம்வேகங்கொண்டு அடித்தன. அதனால் இந்தப் பூமியினுடைய சூக்ஷ்மாய்வங்க ளாகிய பூரேணுக்களென்னுந் தூளிகள் அங்கங்கேயெழும்பி ஆகாய மெங்கும் வியாபித்துச் சூழ்ந்திருந்தன. விஷஜந் துக்களாகிய சர்ப்பங்கள்முதலிய குரூரபிராணிகள் யாவும் புற்றுகளினிடமாகிய பிலத்தின் அடிவாரங்களிற் சென்று பகற்காலமெல்லாந் தங்கி இராக்காலங்களில் வெளியில் வந்து வாயைத் திறந்துக்கொண்டு பக்ஷிப்பதற்குத் தகுந்த சீதள மந்தமாருதம் வாராமல் பெருங்காற்ருயிருந்தபடியால் சகிக்கக் கூடாத பிரயாசங்களைக் கொண்டிருந்தன.

சகலமான விருக்ஷவர்க்கங்கள் யாவும் இலைகள் பழுத் துதிர்ந்தன. சர்வஜன சாதாரண விஹார அந்த உஷ்ண காலமானது இவ்வண்டாதிபதியான பிரமதேவன் சர்வத்திர சாதாரணமாக இந்தப் பிரம்மாண்டமென்னும் பெரிய கடார மாகிய ஒரு பாத்திரத்தில் சூரிய பகவானுடைய கிரணங்க ளாகிய உஷ்ண ரசங்களைச்சேர்த்து வைத்ததுபோல, இவ் வுலகத்தில் விளங்கியது. இவ்விதமாகிய உஷ்ணகாலத்தை வசந்தகால மென்னும் பேர்கொள்ளச் செய்யும்படி மந்த மாருத மென்னுந் தென்றற்காற்ருனது அகஸ்திய பகவா னுக்கு வாசயோக்கியமாகிய பொதியமாமலையி னுச்சியிற் ருேன்றி அம்மலைச்சாரலில் விளங்காநின்ற சந்தன முதலிய வாசனு விருக்ஷங்களிலுள்ள கனி - புஷ்ப கந்தங்களிலும்- கன்யர்குமரியின் அலைகளினுடைய குளிர்ந்த திவலைகளிலுந் தோய்ந்து ஸ்பரிசித்துக் கிரகித்துக்கொண்டு மகா மனே ரஞ்சனமாகத் தோன்றி அக்காலத்திற் சூரியவனுகிய மன்மத

னுக்கு மகுடாபிஷேகஞ் செய்யும்படிப் புறப்பட்டு வந்தது. அந்த வசந்தமானது உலகத்திற் பரவியதனால் சில விருக்ஷங்கள் அரும்பெடுத்துப் புஷ்பித்தன. சில விருக்ஷங்கள் புஷ்பித்து இதழ்களை யுதிர்த்தன. சில மரங்கள் பல கொடிகள் தளிர்த்துத் தோன்றின. அவற்றுள் மாமா முதலியவை இலை பழுத்துதிர்ந்து தளிர்த்துத் தோன்றின. அவற்றைப் பார்க்குமிடத்தில் வேனிலாகிய புருஷன் வருகின்றதைக் குயில்கள் சொல்லக் கேட்ட மாத்திரத்தில், விருக்ஷங்களாகிய ஸ்திரீகள் முன் கட்டியிருந்த கறுப்பு வஸ்திரம் மங்களகரமல்லவென்று நீக்கிச் செம்பட்டு வஸ்திரங்களை யுடுத்திக் கொண்டது போலவும், பூர்வம் தாங்கள் வேரினாலுண்ட சலத்தையெல்லாங் காலத்துக்குத் தகுந்தபடியே அக்நி ரூபமாக்கித் தங்கள் கிளைகள் தோறுங் காட்டுகின்றது போலவும் விளங்கின. அவ்விருக்ஷங்களினது அரும்பிய தளிர்கள் மிகச் சிவந்தும் பின் வெள்ளித் தகட்டை யொத்தும், அதற்குமேற் பசுமைகொண்டும் விளங்குகின்றவை எப்படி யிருக்கின்றன வென்றால், இந்திரஜால வித்தைக்காரருடைய செய்கையையும் ஒத்திருக்கின்றன. மேலும் புஷ்பித்த புஷ்பங்களில் நின்றும் மகரந்தப்பொடிக ளுதிர்கின்றவை எப்படி யிருக்கிறதென்றால், மன்மதனனவன் உலகத்திலுள்ள ஸ்திரீ புருஷர்கள் யாவரையு மயக்கும்படி மோகனப்பொடி தூவியதை ஒத்திருந்தன.

மேலும் சர்வ பிராணிகளும் இந்த வசந்தகால இரவுகளில் சாதாரண சஞ்சாரமாகிய மதனரதி கிரீடா விசேஷங்கள் மிகுதியாக விளங்கின. மேலும் சூரிய பகவானனவன் இந்தப் பிரபஞ்சத்தினிடத்தில் விருத்தியடைகின்ற பசு-பக்ஷி-விருக்ஷம் கொடி முதலிய சர்வப்பிராணிகளின் சத்துக்களைத் தனது கிரணங்களினால் கிரகித்துச் சர்வ மனித ஸ்வபாவங்களுக்குச் சத்துவபல தேசங்களையும், விருட்சலதாகுலங்களுக்கு உண்டான பலரச ருசிகளையும், மற்றவைகளுக்கு அதற்குத் தக்கவைகளையுந் தோன்றச்செய்தனன். அவ்வசந்தகாலமானது நேரிட்ட மாத்திரத்தில் அந்த பிருந்தாவனங்களில் தென்றற்காற்றானது குளிர்ந்து வீசுதலினால் உஷ்ணரசங்கள் தணிந்து எல்லா புண்ய ஜனங்களும் சௌக்கியமடைந்தார்கள். மிருக பக்ஷிகள் க்ஷேமங்கொண்டன. விருட சலதாசமூஹங்கள் எப்பொழுதும் வாசனையோடுங் கூடிய புஷ்பங்கள் சகல சுப மங்களாகர சோபிதங்களாக விளங்கின. விசித்திர பக்ஷிகளின் கோலாஹலத்வனிகளும், கிளி முதலியவைகளின் மகா மாதுரியமாகிய சுஸ்வர நாதங்களும், குயில்

முதலிய நானாவித சுந்தர பக்ஷிகளினுடைய கம்பீர சந்தோ ஷத்வனிகளும், மயில் முதலிய நானாவித குதூஹல பக்ஷி களினுடைய லோகாநந்தகர நர்த்தன சிற்றோசைகளும், அங்கங்கு நதீ தடாக உபவனங்களில் விகசிதங்களாயிருக் கின்ற தாமரைஜாதி நானாவித ஜாதி புஷ்ப மகரந்த சஹித மதுபானங்களைச் செய்து மதித்தெழும்பின. நானாவித விசித்ர ரத்ன ஸ்வர்ணமயாகார ஜாதி பேதங்களால் விளங்குகின்ற வண்டுகளின் கம்பீர கீதநாத ஸ்வரங்களின் ஓசைகளும் ஏககாலத்தில் சர்வ மங்களகரமாய்ச் சப்தித்தன.

இந்தச் சப்தங்களினால் அந்தப் புண்ணிய வனமெங்குஞ் சோபித்து மங்கள ஓசைகளோடும் பிரகாசித்தன. அக்காலத் திற் பெய்ந்த மழையினால் ஸ்ரீ யமுனா நதியானது விசித்ர மான அலைகளோடுங் கூடி பெருகியது. அந்தப் பெரு வெள்ள ஜலம் அங்கங்குள்ள தடாகங்கள்-ஏரிகள்-குளங்கள்-ஓடைகள்-மடுக்கள் இவைகளுக்குப் பாய்ந்தன. அதனால் அவைகள் சற்றேறக்குறைய ஜல சமர்த்தியடைந்தன. அத் தீர்த்த வளங்களில் நானாவிதமாகிய செந்தாமரை - வெண் டாமரை-செங்கழுநீர்-செவ்வாம்பல்-வெள்ளாம்பல் முதலான வைகள் புஷ்பித்துப் பரிமளமாய் விளங்கின. அந்தத் தென் றற் காற்றானது இவைகளின்மீது வியாபித்து ஸ்பரிசித்துக் கொண்டு அலைகளின் திவலைகளையும் புஷ்பங்களின் மதுகர ஸ்பரிசங்களையும் வகித்துக் குளிர்ந்து வீசுதலினாலே அந்தப் பிருந்தாவன பிரதேசங்கள் முழுவதும் முன்னடைந்திருந்த உஷ்ணங்கள் தணிந்து குளிர்ந்து விளங்கின. இவ்விதங்க ளாக மிகவுஞ் சர்வாலங்கார சோபித சுந்தராகாரங்களாகப் பிரகாசிக்கின்ற அந்தக் கோகுல பிருந்தாரண்யத்திற்கு ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திகளிருவரும் மற்றைக் கோபால ஜனங்களுடன் சர்வகோக்களின் சமூகங்களையுங் கூட்டிக் கொண்டுபோய் மேயவிட்டார்கள். அவைகள் மேய்ந்துக் கொண்டிருந்தன. அந்தச்சமயத்தில் அந்தக் கோபால குமாரர்களும் ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களும் அந்த ஆரண்ய மார்க்கங்களில் நானாவித லீலா விநோதமாக விளையாடி னார்கள்.

மேலும் கோபால குமாரர்கள் தங்களுக்கு சுவாதீன பாடங்களாகிய ஸ்ரீ கிருஷ்ண கீர்த்தனங்களைப் பாடினார்கள். பின் யாவரும் ஒரு குளிர்ந்த தோப்பில் ஒன்றாகச் சேர்ந்து உட்கார்ந்து இளைப்பாறி ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திகளுக் குப் பக்தியுடன் தண்டன் சமர்ப்பித்து மகானுபாவர்களே! நீங்கள் எங்களை அநந்த விதங்களால் ரட்சிக்கின்றவர்களா

கையால் அந்த லீலைகளிலும் நியமிக்கின்ற திவ்யாக்கிய ஸ்வரூப பூபாலர்களாய் நின்று எங்களை நியமிக்கக் கடவீர்களென்று பிரார்த்தித்தார்கள். அப்போது பலராம கிருஷ்ண மூர்த்திகள் புன்னகையுடன் அங்கீகரித்தார்கள். இன்னும் பல விதமாய் கோபாலர்கள் ஸ்ரீ கிருஷ்ண பலராமர்களை பக்தி விசுவாசத்துடன் கொண்டாடி ஆனந்த மெய்தினார்கள். யாவரும் ஒவ்வோரதிசய திவ்விய விஷய கிரியாபரர்களாய் நதிதீரதடாக சமீபங்களிலும், பர்வதநுனி குகைகளிலும், ஏரிக்கரைகளிலும், பசுவினங்களின் மந்தைகளிலும், குளிர்ந்திருண்ட தோப்புகளிலும், புஷ்ப பலிதங்களான பொதுருகளினருகிலும், மஹா லீல நடனம் முதலிய அநந்த விசித்ர விளையாட்டுகளைச் செய்துக்கொண்டு பசும் புல்லுகளுள்ள விடங்களில் தங்கள் பசுக்கூட்டங்களை மேயவிட்டுச் சந்தோஷ பரர்களாய்ச் சம்ப்ரமித்திருந்தார்கள்.

இப்படியிருக்கின்ற தருணத்தில் அந்த மஹா வனத்தில் பிரலம்பாசுரனென்னும் பெயரையுடைய ஒரு கொடிய ராக்ஷஸன் ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களையும் மற்றுமுள்ள கோபால குமாரர்கள் யாவரையும் ஹிம்சித்து ஜயத்தை யடையவேண்டுமென்றெண்ணி தன்னுடைய மாயையினால் ஒரு கோபால குமாரனைப்போல் காமரூபனாய் வேஷங்கொண்டு, அந்தக் கோபால குமாரர்களெல்லாரும் தங்களிலொருவனென்று நினைக்கும்படி மயக்கிக் கபடமானஸனாய் அவர்களில் வந்து சேர்ந்து கலந்து ஸ்நேகித்துக் கொண்டிருந்தனன். அந்தச் சமயத்தில் சர்வக்கியனாகியும் சர்வமயனாகியும் ஸ்ரீ பகவானாகியுமிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் அந்த மாயா வேஷதாரியான துராத்மாவானவனை அசுரனென்று தமக்குள் அறிந்து, அவ்வசுரனைச் சிக்ஷிக்கத்தக்க சதுருபாயங்களைச் சங்கல்பித்துக் கொண்டிருந்தும் தாமொன்றும் அறியாதவரைப்போலத் தங்களைக் கொலைசெய்ய வந்த அந்த மாயா கோபால பிரலம்பாசுரனையும் ஸஹஜகோபாலனாகவே தாம் பாவித்திருக்கிறதாய் அவன் நினைத்துக்கொள்ளும்படி அவனுக்கு மிகவும் அன்னியோன்யமாகிய சிநேகத்தைக் காட்டிச் சகல கோபாலகுமாரர்களையும் அழைத்து, ஓ பிரிய ஸ்நேகிதர்களே! நாமெல்லோருமொன்றாய்ச் சேர்ந்து இனி அஸ்தமனகால பரியந்தம் சந்தோஷமாய்ச் சில சிலைகளை யோரிடத்தில் ஸ்தாபித்துக் குறிவைத்துப்பந்துக்களடித்து அவ்விளையாட்டினால் வருகின்ற ஜயாபஜயங்களை யடைந்து அவற்றிற்குத்தக்க பந்தயங்களை யநுபவிக்கத் தக்கதாக விளையாடிக் கொண்டிருக்கலாம் வாருங்களென்று சொன்னார். அப்படி விளையாடுவதற்கு யாவரும் ஒத்துக்கொண்டார்கள்.

உடனே ஸ்ரீ ஜநார்த்தனரானவர் தாமொரு பேருத்தியும், ஸ்ரீ தாமனென்னும் கோபாலன் தமக்கெதிர் பேருத்தியும், தம்முடைய பக்ஷத்தில் மாயாகோபால பிரலம்பன் ஒரு பேருத்தியும், அவனுக்கெதிர் பலபத்திரர் ஒரு பேருத்தியுமாக (தலைவர்களாக) ஏற்படுத்தி, மற்ற கோபாலர்களை சிறிய வுத்திகளான ஸேவகர்களாக வகுத்து, அவர்கள் யாவரையும் கணக்குச்செய்து இரண்டு பட்சத்திற்குஞ் சமமாகப்பாகித்து இரண்டினமாகப் பிரிந்தவர்களுடன் அந்த ஸ்ரீ பிருந்தாவன மஹா விசாலமார்க்கப் பிரதேசங்களுக்குச் சென்று மஹா விருக்ஷங்களையும் சிலர் ஸ்வரூபங்களையும் லட்சியக் குறிகளாக ஏற்படுத்திக் கைகளிற் பந்துகளேந்திப் பாண்டீரக மென்கிற வடவாலவிருட்சத்தி னடிவார நிழலிற் சேர்ந்து நாமெல்லோரும் இந்தப் பந்து விளையாடுவோம். இவ்வாட்டங்களில் தோற்றவர்கள் வாகனமாகி ஜயித்தவர்களைச் சுமந்து பசுக் கூட்டங்கள் அப்புறம் பிரிந்து சிதறிப் போகாமல் அம்மந்தைகளை பிரதக்ஷணமாக வந்து மடக்குகிறதும், மகா விருக்ஷ சிலாலட்க்ஷியக் குறிகளைத் தொட்டுப் பிரதட்சணம்பண்ணி யதாஸ்தானத்திற்கு வந்திறங்குகிறதென்று கட்டளையிட்டார். அப்படியே யாவரும் ஒப்புக்கொண்டவர்களாய் விளையாடிக் கொண்டிருக்கின்ற சமயத்தில் இருவர் கட்சிகளிலும் ஜயாபஜயங்கள் நேரிட்டுப் பின்பு ஸ்ரீ கிருஷ்ண பகவான் கட்சி தோற்றது. அப்போது பலபத்திரர் பக்கலிலிருந்த ஸ்ரீ தாமன் தமக்கு அந்தரங்க பக்தனுகையால் பக்தபராதீனரான சுவாமியானவர் அவனைத் தோளின் மீது வைத்துக்கொண்டார்.

அப்போதவன் சரீரமாத்திரந்தோளின் மீதிருந்ததேயன்றி மனது சுவாமியினும், ஸ்ரீ பலராமரை பிரலம்பனும் வாகனங்களாகிச் சுமந்துகொண்டு முன் சங்கற்பப்பிரகாரம் லக்ஷியப் பிரதக்ஷணஞ் செய்யப்போனூர்கள். அவர்களுக்குள் ஸ்ரீ தாமனைச் சுமந்து கொண்டுபோன ஸ்ரீ கிருஷ்ண பகவானும் ருஷபனைச் சுமந்துகொண்டு போன பத்திரசேனனும் லக்ஷியப் பிரதக்ஷணஞ்செய்து எல்லையிலே வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீ பலராம மூர்த்தியைத் தோள்களிலே சுமந்துகொண்டு போன, மாயாகோபால வேஷதாரியான இந்தப் பிரலம்பாசுரன் லக்ஷியப் பிரமாணப்படி பிரதக்ஷணஞ் செய்து வராமல் கபடனுய் வந்திருக்கின்றவனுதலால் அவரைக் கொல்ல நினைத்து லக்ஷியங்களைத் தாண்டிப்போனுன்.

அப்படிப் போகுமளவில் பூர்வம் ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் திருணவர்த்தனென்னும் அசுர சிரேஷ்டன், எடுத்

துக்கொண்டு ஆகாச மார்க்கத்தில் போகும்போது தம்மைச் சுமக்கமாட்டாமல் அவன் அதிக துன்பங்களையடைந்து சுமந்துகொண்டு போக ஸ்வாமி அவனுக்கு எவ்வளவு பாரமாய்த் தோன்றினாரோ, அவ்வளவு சுமக்கக்கூடாத பாரமாய் சகலாரிஷ்ட நிவாரண ஜயோத்தமராகிய ஸ்ரீ பலராமரானவர் இந்தப் பிரலம்பனுக்குத் தோன்றினார். அப்படித் தோன்றின மாத்திரத்தில் ஈதென்ன பர்வத சிரேஷ்டமோவென்று பிரமித்து மகா சிரமங்களையடைந்து நடக்க மாட்டாதவனாய் அந்தக் கோபால வேஷத்தை விட்டுத் தன்னுடைய நிஜாகாரமாகிய கொடிய ராக்ஷஸ ஸ்வரூபத்தை வகித்து ஊழிப்பெருங்காற்றின் வேகத்தைப் பார்க்கிலும் அதிவேகமாய் ஆகாசமார்க்கத்திலெழும்பினான். அப்படிப் போகும்போது இவ்வசுராகாரம் மேகத்தைப் போலக் காணப்பட்டது. மின்னலையும் காந்தியையும் வகித்ததுபோலச் சர்வாபரண பூஷிதராகிய ஸ்ரீ பலராமர் இவ்வசுரன் தோளின்மேல் விளங்கினார். அத்தருணத்தில் இந்தப் பிரலம்பனுடைய தோள்களின்மீது உட்கார்ந்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீ ஹலாயுத மூர்த்தியாகிய பலதேவர் அதிசயித்துத் தைரியத்துடனே தமக்கு வாகனமாகிய கோபால வேஷப் பிரலம்பனை யுற்றுப் பார்த்தார். அப்போது சோராகார நீல ஸ்வரூபமும் சிரோபாகத்தில் இரத்நங்களிழைத்த ஸ்வர்ண மயமான கிரீட குண்டலங்களும் நெற்றியிற்போய் வளைந்த புருவங்களும், நெருப்புப்பொறிகள் சிதறுகின்ற இரக்த வர்ணாகாரஜ்வலித நேத்திரங்களும் மகா பயங்கராகாரமாகிற கோரைப் பல்லுகளும் சரீர வவயவங்களில் அசுராலங்காரத்துக்குரிய வலயாதி ஆபரணங்களும் அக்நிக்கொழுந்து போல எரிகின்ற சிவந்த குச்சுமட்டமான மயிர்களுங் காணப்பட்டன. அவைகளைக் கண்டு தங்களை மோசஞ்செய்ய வந்த துஷ்டராக்ஷஸனென்று தெரிந்துகொண்டு தீரபுருஷோத்தமராய் க்ஷணப்பொழுது நிதானித்து அதிவேகமாய் ஆகாயத்திற் கெழும்பி அதிசௌரிய பராக்ரம கோபத்தினால் விளங்குகிற மனமுடையவராய்த் தமது முஷ்டியினால் அவன் சிரோபாகத்திற்குச் சரியாய்ப்பாய்ந்து கிரீடத்தை ஒரு கையினாலே தட்டிவிட்டு ஆகண்டலனாகிய இந்திரனானவன் கோபித்துத் தன் வச்சிராயுதத்தினால் மகா பர்வதங்களைப் பிளந்து சின்ன பின்னஞ்செய்ததுபோல, அவனுடைய சிரசு பிளந்து சின்ன பின்னமா யழியும்படி ஓரறையறைந்து ஒரே குட்டாகக் குட்டினார். உடனே அவ்வசுரன் தலை பிளந்து சின்னபின்னமாகச் சிதைய அவன் சரீரமெங்கும் செந்நீராய்ப்பெருக முகத்தில் நின்றும் இரத்த மாம்ஸங்கலொழுக லோகபயங்கரமாகிய

பிராணபீதியினால் கதறிக்கொண்டு பூமியில் வீழ்ந்து பிராண ஞெழிந்துபோக மரணமடைந்தான்.

அப்போது எல்லா கோபாலர்களும் அந்தப் பிரலம்பா சுரனைப் பார்த்துப் பயந்து பிரமித்து ஆச்சரியத்தை யடைந்து, பலராமரைப் பார்த்து ஓகோ மகானுபாவரே! இவ்வுலகத்திற்கு உபகாரார்த்தமாக இந்தக் கபடவேஷ துஷ்டாசுரனைச் சம்மரித்து எங்களையெல்லாம் ரக்ஷித்தீர். உமக்குச் சர்வ மங்களமும் உண்டாகக் கடவதென்று ஆசீர் வதித்து, அவரவர்களுக்குத் தகுந்தபடி உபசாரஞ்சொல்லி ஆலிங்கனஞ் செய்துகொண்டு இறந்துபோன பிராதாவா னவர் பிழைத்துப் புனர்ஜ்ஜீவிதராய் வரக்கண்டு களித்தாற் போல் மகா சந்தோஷ சம்பிரமாதிசயங்களை யடைந்தார்கள். உடனே ஆகாசவீதியில் நின்று இந்த திவ்ய புருஷர்க ளுடைய விசித்ரலீலா சேஷ்டிதங்களை நேத்ரோத்ஸவமாக அநுபவித்துக் கொண்டிருக்கின்ற பலிசூதனுதி நாமாங்கித திவ்விய புருஷர்களான தேவதா சமூகங்கள் யாவரும் இவ் வுலகத்திலுள்ள சாதுக்களுக்குஞ் சகல தேவதைகளுக்குஞ் சத்துருவாயிருந்த கொடிய அசுரனுகிய இந்தப் பிரலம்பா சுரனை வெகு அலக்ஷியமாக ஒரே முஷ்டியினுல் சம்ஹரித்த ஸ்ரீ பலபத்திர ராமரை நாஞவிதமாக துதித்தார்கள்.



## பத்தொன்பதாவது அத்தியாயம்

ஸ்ரீ கண்ணபிரான் முஞ்சாரண்யத்தில் தாவனலமெனும் பெருங் காட்டுத்தீயை விழுங்கி கோபாலரை ரக்ஷித்ததை சொல்லப்படுகிறது.

பாரதகுல சிரேஷ்டனே! மேஷராசியிலிருந்த சூரியன் ரிஷபராசியிற் பிரவேசித்தான். அவன் ரிஷபராசியி லிருக் கும்போது சிறுதென்றலாலுங் கீழ்காற்றினுலும் உலகத்திற் குச் சௌக்கியமுண்டா யிருந்தது. அதைவிட்டு மிதுனராசி யிற் பிரவேசித்தான். அப்போது சூரியனுடைய அத்யுஷ்ண கிரணங்களால் வெந்தழிந்து போயினவென்று சொல்லும் படி வாடை கொண்டல் தென்றல் கோடையென்னும் நான்கு திசைக்காற்றும் ஒடுங்கின. ஆயினும் சந்திர கிரணத்திலும் பனிநீரிலும் ஊற்று ஜலத்திலும் மரநிழலிலும் உண் டாகிய குளிர்ச்சியினுலும் சாமரையிலும் - ஆலவட்டத் திலும் - மூன்ருனையிலும் மூர்ச்சிலும் உண்டாகிய காற்றி னுலும் உலகத்திலுள்ள ஆத்மாக்களுக்குக் கொஞ்சஞ்

சௌக்கியங் கிடைத்தது. அப்போது அக் காலத்தைக் கோடைக்கால மென்னும் பெயர்கொள்ளச் செய்யும்படி மேல்காற்றுத் திரும்பியது. அதனால் தூளிகளெழும்பி உலக மெல்லாங் கவியவும் ஆத்மாக்களுக்கு வாய்புலரவும் தேகத்தில் அத்யுஷ்ணம் உண்டாகவும் நேரிட்டது. அப்போது விஷஜந்துக்கள் லயமடையவும், மற்ற ஆத்மாக்களுக்குச் சந்தோஷ முண்டாகவும், மேகங்கள் தோன்றி இடித்து ஜலத்தை வருஷித்தன. அதனால் உலகஞ் சௌக்கியத்தை யடைந்தது.

இப்படிப்பட்ட கோடைக்காலத்தில் சமஸ்தமான கோபாலர்களும் பாண்டீர நாமதேய இந்த வடாரண்யத்தில் விளையாட்டில் விருப்பமுள்ளவர்களாகத் தங்களை மறந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் கோவினங்கள் பிரிந்து தங்களுக் கிச்சையானபடி சுயேச்சையாகப் பசும் புல்லுகளை மேய்ந்துகொண்டு வெகுதூரஞ் சென்று மிகவுந் தாஹத்தையுந் தாபத்தையும அடைந்தனவாய் ஆற்றிக் கொண்டு இஷிகமென்கிற அரண்யத்தைத் தாண்டிப்போயின.

அப்போது ஸ்ரீ பலராமகிருஷ்ணர்கள் முதலிய கோபாலர்களும் பசுவினங்களைக் காணுமல் வருந்தி, விளையாட்டுகளையொழித்து பசுவினங்கள் சென்ற மார்க்கங்கள்தெரியாமல் சில நேரம் நான்கு திக்குகளிலுந் தேடிக் காணுமல், நிமிஷ மாத்திரத்தில் நானுவித வியாகுலத்தை யடைந்தவர்களாய் பல திசையிலும் ஓடி அலைந்து திரிந்து பசுவினங்களின் குளம்படி அடையாளங்களைக் கண்டு, அம்மார்க்கங்களைப் பிடித்துப் பலவாறுகத் தேடிப்பார்க்குமளவில் அந்தக் கோவினங்கள் முஞ்சாரண்யத்தில் வழிதெரியாமல் அம்மாவென்றரற்றிக் கோஷிக்கின்ற சப்தங்களைக் கேட்டுத் தங்கள் தங்கள் கோதனங்களைக் கண்டுபிடித்து ஒரே மந்தையாகச் சேர்த்து ஆயாசங்களைத் தீர்த்துக்கொண்டு திரும்பினுர்கள்.

அத் தருணத்தில் ஸ்ரீ கண்ணபிரானுனவர் நீருண்ட காளமேகமானது விந்தையாகக் கர்ச்சிக்கின்றதுபோல தமது திருவதரத்தில் புள்ளாங்குழலை வைத்துப் பசுக்களுடைய நாமதேயங்களைச் சொல்லி பிரீதியாக அழைத்தார்.

அந்த ஆவினங்கள் யாவும் ஆ ஸ்ரீ கிருஷ்ணு! வென்றதுபோல அம்மா வென்றிரைந்துக்கொண்டு சந்தோஷத்திஞல் ஸ்ரீ பகவானைப் பின் தொடர்ந்துவந்தன. அந்தச் சமயத்தில் தெய்வீகமாக ஒரு காட்டுத் தீயானது உண்டா

யிற்று. அங்கு வீசாநின்ற காற்றினது சஹாவேகத்தினால் நான்குபக்கமும் வியாபித்து எங்கும்புகைகளெழும்ப ஜ்வலித்து ஆகாயமளாவி யெரிந்து சர்வ ஸ்தாவர ஜங்கமாதிகளையுஞ் சூழ்ந்துக்கொண்டு விருத்தியடைந்தது. அப்போது சமஸ்தமான கோபாலர்களும் தங்களைச் சூழ்ந்து வாராநின்ற காட்டுத்தீயைப் பார்த்து மிகவும் பயந்தவர்களாய்த் திடுக்கிட்டுத் தத்தளித்துத் தப்பித்துக்கொள்ள எந்தத்திசையிலும் வழிகாணமல் மிருத்தியு பயத்தினால் பீடிக்கப்பட்டார்கள். அவர்களைப் போலவே கோக்களும் நடுநடுங்கிக் கொண்டிருந்தன. இப்படி யிருக்கும்போது கோபாலர்கள் யாவரும் ஸ்ரீ ஹரிநாம கீர்த்தனங்களைச்செய்து தங்கள் மிருத்தியு பயஜயமாகிய ஆபன்னிவாரணத்தை யடைகின்ற ஸ்ரீ பாகவத ஜனங்களைப்போல் ஸ்ரீ பலராம சந்திரசகிதராகிய கிருஷ்ண பகவானைச் சரணமடைந்து முறையிடத் தொடங்கினார்கள்.

வாரீர் ஆதிமூர்த்தியான ஸ்ரீ கிருஷ்ண பகவானே! ஸ்ரீ பலராம சந்திரரே! இந்தக் காட்டுத் தீயினால் நாங்களும் கோக்களும் தகிக்கப்படாமல் இரட்சிக்கக்கடவீர்கள். இதோ உங்களைச் சரணமாக அடைகின்றோம். எங்கள் குலதெய்வமாகிய ஸ்ரீ கிருஷ்ணா! ஆபத்பாந்தவா! தீனரட்சகா! சிரோரத்நமே! தீனதயாளுவே! ஸ்ரீ சுஜனரட்சகா! ஸ்ரீ பக்தவத்ஸலா! தேவரீருடைய நாமாதிசயங்களைப் பலவாறாகத் துதித்து முறையிடுகின்றோம். சிநேக பந்துக்களாகிய எங்களை இந்தத் தாவானல ஜ்வாலையினின்றும் இரட்சிக்கக் கடவீர். எங்கள் சக்தி உபாயங்களாலே தப்பித்துக்கொள்வதற்கு யாதொன்றுந் தோற்றவில்லையே! எங்களுக்கு அதி உஷ்ணகரமாகிய ஜ்வாலை தாங்குகின்றதினால் சரீரங்கள் தகிக்கப்படுகின்றன. இனி சகிக்கமாட்டோம். ஆ ஸ்ரீ கிருஷ்ணா! விரைவாக ரட்சிக்கக் கடவீரென்று முறையிட்டுத் துதித்தார்கள்.

ஸ்ரீ சுபத்ரா பௌத்ரனே! இவ்விதம் முறையிடும் பந்துக்களுடைய தீனவசனங்களைக் கேட்ட மாத்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் கடாட்சித்துச் சத்கார வசனங்களினால் அவர்களது தாபங்களைத் தீர்த்து, நீங்கள் யாவரும் பயப்படவேண்டுவதில்லை. உங்கள் நேத்திரங்களை மூடிக் கொள்ளுங்களென்று நியமித்தருளினார். ஸ்ரீபகவான் பணித்தபடி சகல கோபாலர்களும் மிகவும் பயபக்திகளுடன் ஸ்ரீ பக்தவத்ஸலரே யென்று திடசித்தர்களாய் யாவருந் தங்கள் நேத்திரங்களை நன்றாகப் பொதிந்துக் கொண்டார்கள். அத்தருணத்தில் ஸ்ரீ யோகீஸ்வரேஸ்வரராகிய ஸ்ரீ ஹரியானவர்

சர்வப்ரபஞ்ச மாயாத்மக தமது விராட் ஸ்வரூபத்தை வகித்து அக் காட்டுத் தீயை அவலீலையாகப் பானஞ் செய்து அந்தக் கோபாலர்களையுங் கோவினங்களையுங் ஒரு க்ஷணமாத்திரத்தில் மூஞ்சாரண்யத்தில் நின்றும் பாண்டீகமென்னப்பட்ட ஆலமரத்தடியில் தமது மாயையினாற் கொண்டு வந்து சேர்த்து, நேத்திரங்களை விழித்துப் பார்க்கும்படி நியமித்தருளினர். அவர்களும் அப்படியே விழித்துப் பார்த்து ஸ்ரீ பலராம கிருஷ்ணர்கள் ஸஹிதமாய்ச் சமஸ்தமான கோபாலர்களும் கோவினங்களும் யாதொரு குறைவுமின்றிச் சுரட்சிதமாய் முன் தாங்களெல்லோருஞ் சந்தோஷமாய் விளையாடிக்கொண்டிருந்த ஆலமரத்தடியில் வந்து சேர்ந்திருக்கக் கண்டு, அதி ஆச்சரியமடைந்து, ஸ்ரீ பகவானது யோக மாயாப் பிரபாவங்களை யறிந்து ஆநந்திப்பதற்குச் சக்தியில்லாதவர்களாய்ச் சிலர் அந்தக் காட்டுத்தீயை விழுங்கி நம்மை ரட்சித்தாரோ வென்றார்கள். சிலர் காட்டுத் தீயைக் குளிரச் செய்வதற்கு மந்திரங் கற்றவரோ வென்றார்கள். சிலர் ஆயினும் மானிடர்களால் தாமோவென்றார்கள். சிலர் காரியார்த்தமாக இவ்விடத்தில் வந்தவதரித்த தெய்வ சிரேஷ்டர்களே யல்லது வேறல்லவென்று மகிழ்ந்து துதித்தார்கள். சிலர் இப்படிப்பட்ட காலங்களை யுணர்ந்து ரட்சிக்கிறது நிமித்தமாக ஸ்ரீ புருஷோத்தமரே இந்த ஸ்ரீ கிருஷ்ணபகவானாகித் திருவவதரித் திருக்கின்றாரென்று சரணமடைந்து ஸ்துதிகளைச் செய்தார்கள்.

இவ்விதங்களாக ஆநந்த பாவசத்துடனிருக்கின்ற சகல கோபாலர்களையும் கோவினங்களையும் சம்பூர்ணமாகக் கடாக்ஷித்து ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் கோபாலர்களைப் பார்த்து வாருங்கள் தன்யர்களே! சூரியாஸ்தமானகாலம் சமீபமாய் விட்டது, இனி யாவரும் கோகுலத்திற்குப் போவோம். பசுக்களுடன் புறப்படுங்களென்று நியமித்துத் தாமும் வேணுகானஞ் செய்துக்கொண்டு ஸ்ரீ பலராமரும் வேணுகானஞ் செய்து தம்முடன் வரச் சகல கோபாலர்களுந் தங்களை ஸ்தோத்திரங்கள் செய்து, முன்பின் சூழ்ந்து வர, கோவினங்கள் அதிக சந்தோஷாநந்தத்துடன் தம்மை மோந்துக்கொண்டு நான்கு பக்கங்களிலும் வியூஹாகாரமாய் வரச் சகல கோபால கோபிகாஜன நேத்ரோத்ஸவமாக ஸ்ரீ கோகுலத்திற்குட் பிரவேசித்தார். அந்த ஸ்ரீ புருஷோத்தமராகிய ஸ்ரீ கமல லோசனரைத் தரிசனஞ் செய்யாத ஒரு க்ஷணகாலமாவது அவரவர்களுக்குள்ள பிரீதி யதிசயத்தினால் ஒரு மஹா யுகம்போற்றோன்ற அந்த நந்தவிரஜத்திலே

யிருக்கிற ஸ்ரீ நந்தகோப-யசோதா - ரோகிணி தேவிகளும் கோபால கோபிகா ஜனங்களும் ஸ்ரீ பகவானெழுந்தருளக் கண்டமாத்திரத்தில் யாவருங் கண்களிகூர்ந்து ஆனந்த சந்தோஷங்களை யடைந்தார்கள்.

ஸ்ரீ பலராம கிருஷ்ண சகிதர்களாய்க் காட்டுத்தீயினின்றும் ஸ்ரீ பகவானுடைய பரம கிருபையால் இரட்சிக்கப்பட்டு வந்த ஸ்ரீ தாமன் முதலிய கோபாலர்களும் கோவினங்களுடன் நமதருந்தவப் பயனாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் சர்வ காலமும் நம்மை ரட்சிக்கக் கடவரென்று துதித்துக்கொண்டு அவரவர்கள் தங்கள் தங்கள் வீடுகளைச் சேர்ந்தார்கள்.



## இருபதாவது அத்தியாயம்



மாரிகால ஸரத்காலத்தின் வர்ணனைகள் சொல்லப்படுகின்றன.

ஸ்ரீ பாகவதோத்தமனாகிய பரிட்சித்து மகாராஜனே! ஸ்ரீ பகவத் கிருபைக்குப் பாத்திரர்களாயிருக்கின்ற மஹா புண்ய புருஷர்களாகிய அந்தக்கோபால குமாரர்கள் யாவரும் தங்கள் தங்கள் இல்லரங்களில் வந்து சேர்ந்து சுகித்து ஸ்ரீ ராம கிருஷ்ணர்களுடைய துஷ்ட சம்மார சிஷ்ட பரிபாலன சரித்திரங்களை எல்லாருக்கும் தெரிவிக்க, அவர்கள் யாவரும் செவிக்கானந்தமாக கேட்டுச் சந்தோஷித்து ஸ்ரீ பலராம கிருஷ்ணர்கள் தேவகாரியார்த்தமாகத் திருவவதாரஞ் செய்த மகாபுருஷ சிரேஷ்டர்களே யென்று நினைந்து ஸ்தோத்திரங்கள் செய்தார்கள்.

இவ்விதம் ஸ்ரீ பகவான் கௌமார கிரீடாதிசயங்களைச் செய்து சஞ்சரித்துக்கொண்டிரா நின்ற காலத்தில் சூரிய பகவான் தென்றிசையைவிட்டுப் பிரியவும் தென்றற்காற்று வீச வாரம்பித்தது. பின் தினகரன் தென்றிசையைச் சேர்ந்து கடகராசியிற் பிரவேசித்தான். அந்த ராசியில் சூரியனிருக்கும்போது மேற்காற்று வரவரக் குறைவுபட்டு உலகத்திற்குக் கொஞ்சம் சௌக்கியங் கிடைக்கலாயிற்று. அந்த ராசியை விட்டுச் சிங்கத்திற் சென்றான். மாரிகாலம் வந்தது. அந்த ருதுவில் ஸ்ரீ ஹரியினுடைய லீலாகுணங்களுக் கநுகுணமான இந்தக் கோகுல பிருந்தாவனத்திலும் மற்றைப் பூமிகளிலும் வருஷகால லட்சண யுக்தமாய் அடிக்கடி வாடைக் காற்றும் கீழ்க்காற்றுந் திரும்பித் திரும்பிக் குளிர்ந்து வீசின,

மண்டலத்தைச் சூழ்ந்த பரிவேஷம் நானாவிதமாகக் காணப் பட்டு வருஷக் குறிகளை யுண்டுபண்ணிற்று. மேகங்கள் வடதிசையிலெழும்பி ஸ்ரீ பலராமருடைய திருமேனியைப் போலத் தென்றிசையிலே பிரவேசித்துக் கடலிற் பாய்ந்து ஜலபானஞ்செய்து ஸ்ரீ கண்ணபிரானுடைய திருமேனியைப் போலக் கறுத்த நிறத்தைக்கொண்டு வடதிசையிலடைந்து ஆகாயமெங்கும் பரவிக் கவிந்தன. உலகமெங்கும் மின்னல் களுண்டாயிருந்தன. ஸ்ரீ பலராமர் பிரலம்பன் தலையிலிடித்த இடியின் சப்தத்திற்கொப்பாய் நீலமேகங்கள் கர்ஜித்தன. சித்ர விசித்ரமான இந்திரதனுசு அடிக்கடி சூரியகிரணத்திற் கெதிர்முகமாக ஆகாயத்தில் காணப்பட்டது. வடதிசையிற் றோன்றிய கருமேகங்கள் சகலமான ஜலசரங்களுக்கும் விருத்தியுண்டாக்கி அவைகளைச் சந்தோஷிக்கச் செய்தன. இவ்விருண்ட மேகங்கள் ஆகாயத்தி லிடைவெளியில்லாமல் அந்தர வீதிகளெங்கும் பரவி வியாபித்து இவ்வுலகமெங்கும் இருளடையும்படிச் செய்தன. இவ்வுலகத்திற்குத் தாபத்தை யும் ஜலத்தையும் கற்பிக்கச் சக்தியுள்ள சூரிய பகவானவன் தனது கிரணங்களினால் முன் மேகங்கள் வருஷித்ததினாலே நதி - மடுக்கள் - ஏரிகள் - தடாகங்கள் முதலியவற்றிலுள்ள ஜலத்தையும் சகல பூமியினது திரவங்களையும் எட்டு மாதங் கள் வரைக்கும் கிரகித்து, மறுபடியும் சரத் கால முதலிய கால பக்குவங்களில் தனது கிரணத்தினாலுண்டாகிய மேகங் களுக்கு முன்கிரகித்த திரவங்களை ஜலகிரணங்களால் கொடுத்து வருஷாதி காரிகளான பர்ஜன்யாதி தேவதை களுக்கு அதிகாரங்களை வகிக்கச்செய்து தனது கிரணம்ச சம்பூதங்களான மேகங்களை முன்னிட்டுக்கொண்டு சர்வ வுல கங்களும் க்ஷேமங்களை யடையும்பொருட்டு வருஷர்களை யுண் டாக்கி ஜலத்தை வருஷித்தான். நீருண்ட காளமேகங்களா னவை திக்கு விதிக்குகளிற் சிதறும்படி பிரசண்டமாக வீசா நின்ற காற்றுவேகத்தினால் கலக்கப்பட்டு ஆகாயமெங்கும் பரவி சர்வ ஜந்துக்களும் நேத்திரங்கள் சிதறும்படி மின்னப் பட்ட அந்த மழைக்காலத்தில் ஜலத்தை பெய்வதற்குமுன் மேகாடம்பர வியாபக தினங்களில் லோகோபகாரார்த்தமாக ஆகாய வீதிகளில் பிரகாசிக்கின்ற சூரிய சந்திர நட்சத்திர கிரகாதி கணங்களெல்லாம் இருளடைய, பட்டணம் ஆயர் பாடி முதலான இடங்களில் மின்மினிப் பூச்சிகள் பிரகா சித்துக் கொண்டிருந்தன.

இவ் வுலகத்திலுள்ள ஏழை ஜனங்கள் விஷயத்தில் அன்புகொண்டு மகா தாதாவான புருஷர்கள் அவ்வேழை

களுக்குத் தங்கள் அன்புள்ளவரைக்குங் கொடுத்து திருப்தி யடையச்செய்து தாங்களுஞ் சந்தோஷித்துக் கைசலித்து நின்றாற்போல மேகங்கள் அரவங்களுண்டாகக் கர்ஜித்து சர்வ ஜந்துக்களுந் திருப்தியடையும்படியாக வருஷித்து லோகமெல்லாம் பிரகாசிக்கும்படி அந்தரவெளி தோன்ற நின்றன. மேலும் மகாபோகங்களை யடையும்பொருட்டுப் பஞ்சாக்கினி மத்தியினின்று ஸ்ரீ பகவானைக் குறித்துப் பொறி புலாதிகளை யடக்கித் தவசுசெய்து தங்கள் சரீரங்களைச் சுருக்கி தபித்துக் கொண்டிருக்கின்ற காலத்தில் ஸ்ரீ பகவான் பிரசன்னமாய் இஷ்டங்களைக் கொடுத்தருளப் பெற்றுக் கொள்ளும் தவசிரேஷ்டர்கள் சரீரம் பூரித்து சந்தோஷ மடைவதுபோல, கிரீஷ்மகால தாபகிரணங்களால் ஈரம் கிரகிக்கப்பட்டு பூமி வரண்டு வருஷ ஜலத்தைக் கோரி யிருந்த இந்தப் பூமியானது மாரி காலத்தில் பூர்ணமாய் வருஷித்தபடியினாலே சந்தோஷித்து நீரை கிரகித்துப் புஷ்டி யடைந்தது. மழை பெய்யும்போதெல்லாம் ஒடுங்கி நின்று வருஷம் நின்றவுடனே ஜல சமர்த்தியாய் பிரவகிக்கின்ற ஏரிகள் - மடுக்கள்-கால்வாய்கள்-நீரோடைகள்-கழணிகள் முதலியவைகள் தோறும் தவளைக் கூட்டங்கள் இனமினமாய்ச் சேர்ந்து சந்தோஷத்துடன் தங்களுக்கு விருத்தியான ஜீவனகாலம் நேரிட்டதென்று மேக கர்ஜ்ஜனைகளுக்குப் பிரதியாய்ச் சப்தித்தன.

இப் பூமியில் ஜலசமர்த்தியால் நானாவித விசித்ர வர்ணங்களாகத் தளிர்த்தும் புஷ்பித்தும் விளங்குகின்ற புற்கள்-பூண்டுகள்-புதர்கள்-கொடிகள் - விருக்ஷங்கள் முதலிய சர்வ ஸ்தாவரங்களையுடைய வனங்கள் நானாவித விசித்திர ஆடைகளால் அலங்கரிக்கப்பட்டு அநந்தமான ஆயுதபாணிகளா யிருக்கின்ற ஓர் ராஜாவினுடைய சேனைகளைப்போலத் தோன்றின. தாங்கள் பூர்வ ஜன்மங்களின் பலனை அபேக்ஷித்தவர்களாய் ஸ்ரீ ஹரியினுடைய ஸேவையினாலும், தியானஸத்கர்மங்களினாலும், புண்யங்களைச் செய்து இச்சன்மத்தில் எப்பொழுதும் ஆசார உத்தம வம்சங்களில் லோகோபகாரிகளாய் விளங்குகின்ற புண்ய ஜனங்களைப் போலத் தெய்வானுக்கிரகத்தினால் போதுமான மழையுண்டாகி சில பூமிகள் நல்ல ஜலத்தை யடைந்து நல்ல பயிர்களால் விருத்தியடைந்து விளங்கின. இந்திரிய நிக்ரஹங்களை யடையாத யோகிகளுடைய மனது சஞ்சலப்படுவதுபோல, நதிகள் - மடுக்கள்-கால்வாய்களில் பூரணமா யிருக்கின்ற ஜலம் வாயு வேகத்தினால் கலங்கி யிருந்தன. ஸ்ரீ புருஷோத்தமனாகிய ஸ்ரீ ஹரியி

னிடத்தில் ஸமாஸ்ரயணமாகிற அன்பைப்பெற்று பக்தியோடு மனதை சுவாமி திருவடியிற் செலுத்தி சுகதுக்க முதலிய வினைகளுக்கஞ்சாத தீரத்வத்தைக் கொண்ட மகா புருஷர்களைப்போல, பர்வதங்கள் இவ் வருஷாகாலத்தி லுண்டாகிய மேக கர்ஜ்ஜனை முதலிய இடிகளாலும் பெய்யப்பட்ட மழையினாலும் அதனாலுண்டாகிய அருவி ஜலத்தினாலும் பேதிக்கப்படாமல் கலங்காமலிருந்தன. வேதபாராயணஞ் செய்கின்ற பிராமணச் சிறுவர்கள் வேதங்களைச் சொல்வதை யொழிந்து அந்தப் பாடங்களைத் தொடங்கும் போது அந்தச் சிறுவர்களுடைய மனதிற்கு அவைகள் சந்தேகமுண்டாக்குதல் போல, வருஷ ஜல சமர்த்தியினால் இவ்வாரண்ய பூமி புற்கள் பூண்டுகள் முதலியவற்றால் மார்க்கங்கள் மறையப்பட்டனவாகிச் சஞ்சரிக்கின்ற மனிதர்களுக்கு மார்க்க சந்தேகங்க ளுண்டாக்கின. சகல ஜனங்களுக்கும் ஆநந்தகரமாய்த் தோற்றுகின்ற மேகபடலங்களினின்றும் பிரகாசிக்கின்ற மின்னல்கள், காமத்தில் இச்சையுள்ள புருஷர்களின் சித்தங்களைக் கலங்கச் செய்யும் வேசிகளினுடைய மேனியழகும் குணங்களும் இப்படித்தான் நிலையில்லாம லிருக்குமென்று காட்டுவதுபோல, அடிக்கடித் தோன்றித் தோன்றி மறைந்தன. சூரியமண்டலம் போன்ற இந்திர தநுசானது சத்வாதி குணங்களால் விருத்தியடையப்பட்ட இந்தப் பிரபஞ்சத்தில் சத்வாதிகுண சூன்னியர்களாய் விளங்குகின்ற பரமாத்மாவாகிய ஸ்ரீ பரமபுருஷன் பிரபஞ்ச ஸம்ரட்சணார்த்தத்தின் பொருட்டு வகித்த ஸ்ரீ ஹரி ஹர இரண்யகற்பாதி ஸ்வரூபங்களுக்குள்ள வர்ணங்களைப் போன்றிருந்தது.

இவ் வருஷாகால சுக்லபக்ஷத்தில் தினங்கள் தோறும் கலைகள் விருத்தியடைந்தும் உலகத்தவர்களுக்குத் தோன்றாமல் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற மேகசமூகங்களால் மறைக்கப்படுகின்ற சந்திரனானவன் சர்வேஸ்வரனுடைய கிருபையினால் இப் பிரபஞ்சத்தினிடத்தில் ஸ்ரீ பகவதாக்ஞையை வகித்து சேதனன் அந்த ஸ்ரீ பகவன் மாயாபிரபாவங்களால் தனது ஸ்வரூபக்ஞான தேஜஸ் மறைக்கப்பட்டு மாழ்குகின்ற தன்மை யிதுதானென்று காட்டுகின்றவனைப் போலிருந்தான். ஆகாயமெங்கும் பாவி மின்னலுடன் கம்பீரமாகக் கர்ஜிக்கின்ற சூற்கொண்ட மேகங்களைப் பார்த்து சந்தோஷமடைந்து சிறகுகளை விரித்து நர்த்தனஞ்செய்கிற மயில்கள் இவ்வுலகில் மகா புண்யசாலிகளாய் ஜனித்து ஸ்ரீ ஹரி பஜனையைக் குணானுபவமாகச் செய்து மகா ஆநந்தத்துடன்

நர்த்தனஞ் செய்யுந் தன்மைகளைப்போலக் காணப்பட்டன. நந்தகோப குமாரனாகிய ஸ்ரீ மாதவன் தமது திருப்பவளம் போன்ற அதரத்தில் வைத்தூதுகின்ற புள்ளாங்குழலி னுடைய வோசையைக் கேட்டு வெட்கப்பட்டு வாயை மூடிக் கொண்டனவென்று சொல்லும்படி குயிற் கூட்டங்களெல் லாங் கூவாமல் வாயடங்கியிருந்தன. பூமியினால் விருத்தி யடைந்து சகல பிராணிகளுக்கும் மகோபகாரமாய் நானாவித ரசருசி பலங்களைத் தரத்தக்கதாய் இந்த பிருந்தாவனத்தில் விளங்குகின்ற விருக்ஷங்கள் சர்வேந்திரியங்களை ஜயித்து மகா பரிசுத்தர்களாய்த் தங்கள் தபப் பிரபாவத்தால் ஸ்ரீ பகவா னைச் சந்தோஷிப்பித்து அவருடைய கிருபையால் சர்வ பலத் தைக் கொடுக்கத்தக்க சம்பத்தையடைந்து அநுக்ரகிக்கின்ற தபசிகளைப்போல விளங்கின.

மேக சமூஹங்கள் சூற்கொண்டு எங்குநிறைந்து வாயு வால் கலக்கப்பட்டு சகல பூமியுங் குளிரச் சர்வ ஜனங்களுஞ் சந்தோஷித்துத் திருப்தியடைய வருஷித்தன. அவ்வனத் தில் வசிக்கின்ற மஹாரிஷிகள் வானப்ரஸ்தாசிரம ஜனங்கள் முதலியவர்களும் திருப்தியடைந்து சந்தோஷித்தார்கள். அந்த பிருந்தாவனத்தில் வருஷகாலத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஸ்ரீ பலராம சகிதராய்ச் சகல கோபாலர்களுங் கோவினங்களுஞ் சூழ சஞ்சரித்துக் கொண்டிருந்தார். பின் சூரிய பகவான் கன்னியா ராசியை விட்டுத் துலாராசியிற் பிரவேசித்தான். ஆகாயமும் பூமியும் சகல நதிநத பிரவா ஹங்களும் தெளிந்து மந்தமாருதத்தையுடைய சாத் ருதுவி னுடைய லக்ஷக்குறிகள் விளங்கின. வெண்மேகங்கள் சஞ்சார மொழிந்து விளங்கின. வருஷங்களில் கலங்கலா யிருந்த நதிகள் தடாகங்கள் முதலியவற்றிலுள்ள ஜலந் தெளிந்து செவ்வாம்பல் வெள்ளாம்பல் செங்கழுநீர் கருங் கழுநீர் செந்தாமரை வெண்டாமரை விருத்தி யடைந்து புஷ்பித்து, ஸ்ரீ மகா லக்ஷ்மி வீட்டைப்போல விளங்கிய அந்த ஜலமானது, இந்திரிய நிக்கிரகத்துக்குரிய யோகா ரம்பத்தைக் கொண்டு சித்தங் கலங்கி நின்று காலாந்தரத் தில் சித்தந்தெளிந்த யோகபுருஷனுடைய மனதைப்போல, சுபகரமாய்த் தோன்றியது. சூரிய பகவானுடைய கிரணங் களாலும் வீசுகின்ற காற்றினாலும் ஆகாயமானது தன்னை மறைத்துக்கொண்டிருந்த மேகக்கூட்டம் நீங்க விளங்கியது.

நல்ல ஆசாரியர்களை அடைந்து குருகுலவாசஞ்செய்து அந்த ஆசார்யாநுக்ரகத்தினாலே வேதோக்த ஆத்மஹித தத் வார்த்தங்களை நன்றாய்ப்போதித்து திருப்தியடையச் செய்

கின்ற ஆசாரியனைப்போல, அந்த வனத்திலுள்ள பர்வதங்கள், வருஷாகால மேகங்களாற் பொழியப்பெற்ற ஜலத்தை வகித்து, அந்த ஜலத்தினால் தங்களை யாஸ்ரயித்த மகா ஜனங்கள் திருப்தியடையும்படிச் செய்தன. இவ் வுலகத்தில் தேஹாபிமானிகளாய் புத்ரமித்ர களத்ராதிகளை சாசுவதமாக நினைத்து, தினமும் ஆயுள் கழிவதை யறியாமல் சஞ்சரிக்கின்ற சேதனர்களைப்போல, இம்மகா வனங்களிலுள்ள சிறு ஓடைகளிலும் அற்ப தடாகங்களிலும் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற ஜலஜந்துக்கள் சூரிய கிரணங்களினால் ஜலம் குறைந்து தங்கள் சீவனோபாயங்களற்றுப் போவதை யறிய சக்தியில்லாமல் பின் தாபத்தை யடைந்து தபித்துக்கொண்டிருந்தன. இவ் வுலகத்தில் ஸ்ரீ ஹரியினிடத்தில் பக்தியுக்த அன்புகளையுடையவர்களாயும், துராபிமானங்களை யொழித்தவர்களாயும், சித்தசுத்தியுடன் விளங்குகின்ற உத்தமக் கியானிகளைப்போல ஆரண்யங்களிலுள்ள நீர் பிரவாஹத்தினால் சேற்றை வகித்த பூப்ரதேசங்களும் சூரிய கிரணங்களால் தமது மலினங்களை யொழிந்து சாதாரணமாகச் சஞ்சரிக்கும்படி பிரகாசித்தன.

சகலாத்ம-சமதர்ஸன க்ஞானமுடைய புண்ய ஜனங்களைப்போல ஸ்ரீபகவானுடைய சஞ்சாரங்களுக்கு யோக்யமான இந்தப் பூமியானது சேற்றையும் வண்டலையும் உளையையும் விட்டுத் தன்னுள் விளங்கிய கொடிகளிலும் புதர்களிலும் உண்டாகின்ற மனோரம்யமாகிய புஷ்பங்களையும் பலங்களையுந் தந்து, சகலரையுஞ் சந்தோஷிக்கச் செய்தது. தங்கள் குல சிரேஷ்டனாகிய காளியன் தலையை மிதித்து அவனுடைய கர்வத்தை யடக்கிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் வருகின்றாரோ வென்று பயத்தினால் சர்ப்பங்கள் தலையை நீட்டி எட்டிப் பார்ப்பதுபோல காந்தள்க ளரும்பெடுத்தன. கண்ணனைப் பார்த்து வனங்களும் கிரிகளும் வாராய் மாதவா ! எங்களைப் பரிசுத்தர்களாக்கி ரக்ஷிக்கவாரும் ஐயனேயென்று கையேந்தி அழைப்பதுபோலக் காந்தள்கள் மலர்ந்தன. யசோதா தநயனுடைய திருமேனியின் காந்தி அவ் வனமுழுதும் பாவினாற் போல் காயாமலர் நிறைந்தன. ஆகாய வீதிகளில் மேக சமூகங்கள் நீங்கப்பட்டு கிரக நக்ஷத்திர சமூகங்கள் நிர்மலமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அகண்ட மண்டலாகாரமாயிருக்கின்ற ஆகாயவீதியில் நானு விதங்களாகிய நக்ஷத்திர கணங்கள் சூழ்ந்துவிளங்கத் தனது சோடசகளா பாகங்களையுடைய பூரணச்சந்திரன் பிரகாசித்தான். இந்தப் புண்ய பூமியிலிருக்கின்ற மகாஜனங்கள் அந்த சரத்கால சூரிய கி

ணங்களால் அதிக தாபங்களை யடைந்தார்கள். அப்படி அதிக தாபத்தை யடைந்தவர்கள் அங்கங்குள்ள உபவனங்களிலும் குளிர்ந்திருண்ட இளந்தோப்புகளிலும் நாளுவித பரிமளத்தையுடைய புஷ்பச் சோலைகளிலும் நின்று வீசா நின்ற காற்றினுல் தங்கள் தாபத்தைத் தீர்த்துக்கொண்டு சௌக்கிய மடைந்தார்கள். மிருகங்களும் பக்ஷிகளும் தத்த மது பேடுகளுடன் சேர்ந்து சுகித்தன. கர்ப்பமில்லாதவைகள் கர்ப்பப்பட்டன. கர்ப்பந் தரித்திருந்தவைகள் பெற்று சந்ததிகளோடு விருத்தியடைந்தன. கர்ப்பங்களோடிருந்த கோக்கள் கன்றுகளை யீன்று பாலமுதை அமிர்தமாகக் கறந்தன. சர்வ ஜனங்களும் ஸ்திரீ புருஷர்களுடன் கூடி ஆநந்த பரவசர்களாகி யிருந்தார்கள். கர்ப்பமில்லா திருந்தவர்கள் கர்ப்பப்பட்டார்கள். இப்படிப் பலரும் பலவித நன்மைகளையும் பெற்றுச் சுகித்தனர்.



## இருபத்தொன்றுவது அத்தியாயம்



ஸ்ரீ கண்ணன் யமுனநதி தீரங்களில் பிரவேசித்து வேய்ங்குழ லிசைத்தது.

வாராய் பூபதியே! ஸ்ரீ அச்சுத பகவானுனவர் ஸ்ரீ பலராம ஸகிதராய்ச் சமஸ்தமான கோபால கோதன சமூகங்களுடன் இந்தச் சரத்கால தினங்களில் நிர்மலமாய் தெளிந்து விசித்ரமான அலைகளோடு சப்தித்துக்கொண்டு கம்பீரமாயப் பிரவஹிக்கின்ற யமுனநதி முதலிய தடாகங்களையும், அதைச் சூழ்ந்த வனத்தையும் கடாக்ஷித்துக் கொண்டுதிரிந்தார்.

அநேகவித விசித்ர லீலாவிநோதமாய் விளையாடி பகவான் வனமெங்குங் கோக்களை மேய்த்து வேணுகானஞ் செய்து சஞ்சரித்துக் கொண்டிருந்தார். அந்தச் சரத்காலங்களில் கோபகன்னிகைகளாகிய ஐந்து லக்ஷங் குடிப்பெண்கள் யாவரும் ஸ்ரீ பகவானுடைய வேணுகான ஸ்வரங்களைக் கேட்டு நாளுக்கு நாள் ஸ்ரீ பகவானிடத்தில் மிகவும் மோக பரவசர்களாகி வீட்டு வேலைகளைப் பாராமல் கூட்டங் கூட்டமாகச் சஞ்சரித்துக்கொண்டு ஸ்ரீ பகவானுடைய லீலாகுணங்களை நினைத்து சகிஜனங்களை முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பற்றின சர்வேந்திரியங்களை யுடையவர்களாய் மனேலயங்களை யடைந்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீ கோபால சக்ரவர்த்தியாகி எழுந்தருளி யிருக்

கின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் தமது சிரோபாதத்தில் ரத்ன விபூஷணங்களுடன் மயில் தோகைகளினுடைய காந்தி கள் விளங்க, முன்னெற்றிச் சுட்டியினெளி வீசவும் பரிமள மிகுந்த புஷ்பங்கள் கொண்டையில் சூட்டப்பெற்று விளங் கவும் செவிகளிலணிந்த மகர குண்டலங்களின் ஒளியால் கண்டபாகங்களில் ப்ரதிபலித்து சுந்தரங்களும் இரத்ந கஸ்தூரி திலகாலங்கார ஊர்த்வ புண்டரங்களின் சிங்காரங் களும் ரத்நகுண்டலங்கள் அமைந்த காதுகளை யளாவிய விசால நேத்ரங்களின் பார்வைகளும் மனோரமணீய மாகிய பிரவாள வதரங்களும் அவை விகசிக்கத் தோன்றுகின்ற இளஞ் சந்திரிகைகளை யொத்த சிறு பற்களிலுண்டாகிய இளநகையிற் காணப்பட்ட கௌரவமும் சங்குபோன்ற கண் டத்திலும் விசால மார்பிலும் பொருந்திய பூஷணங்களின் காந்திகளுடன் வைஜயந்தீ வனமாலைகள் விளங்கவும் மகா ராஜ லக்ஷணத்துடனிருக்கிற அரையினில் அரைநூன் மாலை யோடும் சதங்கையோடுங் கூடிய ஒட்டியாணத்தினுள்ளிருகக் கட்டியிருக்கின்ற பீதாம்பரம் பிரகாசிக்கவும் பரமயோகீந்திரர் களுடைய மனதாகிய தாமரைக்காயினி லிருப்பிடமாகவுடைய பதும முதலிய ரேகைகளால் அலங்கிருதமாகிய ஸ்ரீ சரணர விந்தங்களையும் சர்வ புவன மோகனகாரமாகியும் விசித்ர வர்ணப்பட்டுக் குச்சுகளாலும் அலங்கிருதமாகியும் மதுர ஸ்வரங்களை வருஷிக்கின்றதாகியும் விளங்குகின்ற புள்ளாங் குழலைத் தமது திவ்ய அதரத்தில் வைத்து ஜகன்மோகனதி சயங்களை யுண்டுபண்ணும் புருவங்களை நெறித்து இரண்டு கன்னங்களும் பூரித்து ஸ்ரீ பெரிய பிராட்டியா ரெழுந்தருளி யிருக்கின்ற திருமார்பை நெறித்து ஸ்வரபேதங்களைக் கற்பிக் கின்ற சாதுர்யங்களினல் தாமரைபோன்ற முகம் பிரகாசிக்க அந்த வேணுவின் ஸ்வரத் துவாரங்களின்மீது இடவல மாகத் தமது மிருதுவாகிய விரல்களின் வைப்புதலைக் கொண்டு சங்கீத சாஸ்திரப்படிக்கு ஷட்ஜம-மத்யம-தைவத- நிஷாத-பஞ்சம-ருஷப-காந்தார மென்னும் ஸப்த ஸ்வரங் களை யுண்டாக்கி ராக பேதங்களோடும் சேதன சேதனப் பிரபஞ்சங்களும் அத்திவ்ய ஸ்வராமிர்தங்களைத் தங்கள் செவிகளே வாயாகப் பானஞ்செய்து மகா சந்தோஷங்களைக் கொண்டுய்யும்படி கந்தர்வ தேவதாகீத ஸ்வரங்களைத் தமது குழலோசையினற் பாடியருளினர்.

இவ்விதமாகப் பாடுகின்ற ஸ்ரீ பகவானுடைய மதுரமான தொனியைக் கேட்ட மாத்திரத்தில் அந்தப் பிருந்தாவனங் களில் வாசஞ்செய்கின்ற தபோமூர்த்திகளும் வனவாசிக

ளாகிய வேடுவர் முதலிய ஜனங்களும் தினந்தோறும் ஸ்ரீபக வானைப் பிரியாமல் அவருடைய லீலா குணங்களைத் தங்களுக்கு ஜீவனமாக அனுபவித்து ஆனந்தித்துக் கொண்டிருப்பார்கள். சகல கோபாலர்களும், ஆகாயத்தில் விமானரூடர்களாய்ச் சஞ்சரிக்கின்ற தேவகணங்களும், அரம்பையர் முதலிய ஜனங்கள் யாவரும் ஸ்ரீ பகவானுடைய மதுர ஓசைக்குச் சமீபமாகப் பூமியிலுள்ள விருக்ஷங்களிற் சூழ்ந்து பசி தாகங்களை விட்டு நித்திய சூரிகளைப்போல அசைவற்று ஆழ்ந்து நின்றார்கள். சமஸ்தமான மிருகபக்ஷி சமூஹங்களும் தமக்குள்ள விரோதங்களைவிட்டு ஆனந்த பரவசங் கொண்டிருந்தன. திவ்யாவதார மூர்த்திகளாகிய ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களை அர்ச்சிப்பதற்கு ஸ்ரீ சதுர்முக பகவானால் ஆக்ஞாபிக்கப்பட்ட திவ்யாம்ஸராசுக்களின் பூர்ணம்சத்தினால் கோகுலத்தில் வந்தவதரித்திரா நின்ற கோபகன்னியா ஸ்திரீ மணிகள் ஸ்ரீ ஹரியாகிய கண்ணனுடைய வேணுகீதங்களைக் கேட்டு யாவருமோரிடத்தில் இனமினமாகச் சேர்ந்து பகவத் குண மோஹன மானஸர்களாய்ச் சரீராபிமானத்திற் குரிய பெண்குணமாகிய நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு வென்னும் நான்கு குணத்துள் முக்யமாய்க் காப்பாற்றத் தகுந்த முதற் குணமாகிய நாணமென்பதை சிறிதும் கொள்ளாமல் விட்டு ஸ்ரீ கிருஷ்ண சுவாமியை தியான பூர்வகமாக ஆலிங்கனம் செய்து ஒருவர்க்கொருவர் சரீர பரவசர்களாய் பரிசுத்தமாவதற்காக ஸ்ரீ கிருஷ்ணனுடைய சாதுர்யாதி லீலைகளை அநுபவிக்கத் தொடங்கினார்கள்.

அடி எனதன்புள்ள சகியே! இந்த ஸ்ரீ மாதவனானவர் சகலாபரண பூஷிதராய் விளங்கத் தமது பவளம்போன்ற உதட்டில் வேணுவை வைத்துக் கானங்களைச் செய்கின்ற ஆச்சரியங்களைக் கண்டு, இந்த வனத்திலிருக்கின்ற ஸ்தாவரங்களும் லயித்து நின்றதே யன்றிச் சலிக்கவில்லை யென்பாள் ஒருத்தி. என தன்புக்குரியவளே! ஸ்ரீ புண்டரீகாக்ஷரானவர் பிருந்தாவனத்தில் இடவலமாகச் சர்வலோக மோகனாகாரமாகிய புருவங்களால் அபிநயஞ்செய்து தமது பத்ம கரங்களின் விரல்களைக்கொண்டு சங்கீதசாஸ்திர மூர்த்தியைப் போல வேணுஸ்வர மூலமாய் சங்கீத ரசங்களை வருஷிக்கின்றதால் இவ்வன விருக்ஷங்கள் தங்கள் தாபந் தீர்ந்திருக்கின்ற ஆச்சர்யாதிசயங்களைக் கண்டு களித்தாயோ வென்றாள் வேறொருவள். மற்றொரு ஸ்திரீ இந்த நந்தகோப தநயனுடைய வேணுநாதத்தைக் கேட்டமாத்திரத்தில் யானைகளும் சிங்கங்களும் மான்களும் புலிகளும் இன்னுமற்றுமுள்ள மிருகங்

களும் விரோத பயங்களைவிட்டு அதிசினேகங்கொண்டவை களைப்போலத் தம்மைத்தாம் மறந்திருக்கின்ற வேடிக்கை யைப் பாராயென்ருள். சிலர் மரகத ஸ்தம்பம்போன்ற கம்பீர புஜங்களைத் தரித்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய புள்ளாங் குழலோசையைக் கேட்ட மாத்திரத்தில் அவரெழுந்தருளி யிருக்கும் இடத்திற்குச் சமீபத்திலிருக்கின்ற நதியானது கங்கைக் கொப்பாய்ப் பொங்கி அவருடைய திருவடி மேற் படும்படி அலையைப்புரட்டுகின்ற வேடிக்கையைப் பாருங்க ளென்ருர். மற்ருெருத்தி அன்புடையவளே! இந்த யசோதா புத்ர ரத்னமானவர் ஊதுகின்ற குழலோசையைக் கேட்ட மாத்திரத்தில் குளிர்ந்த சிறுதென்றற் காற்ருனது அக்னி யைப் போலென்னைத் தகிக்கின்றது. நான் ஸ்தனங்களின் மேல் தரித்த கலவைச்சாந்து கரிந்து தீய்ந்தது. நான் சூடிய புஷ்பங்கள் கருகின. சந்திர கிரணம் அழற்குழம்பாக விருக் கின்றது. கைவளை சோர்கின்றன. இடையாடையும் நழுவு கின்றது. கை கால்கள் துவளுகின்றன. இவ் வாச்சரிய மென்ன சொல்வாயம்மா வென்ருள்.

பின்னெருத்தி சகியே! காளிய நர்த்தன பதாம்புஜ ரானவர் சப்திக்கின்ற குழலோசையைக்கேட்ட வளவில் என் செவிகளுக்கு குயிலோசையானது நாராசங்காய்ச்சிச் சொருகி யது போலிருக்கின்றது. புஷ்பங்களைப் பார்த்தால் பயமுண் டாகின்றது. மனமிருந்திருந்து பறையறைகின்றது. தேகத் தில் பசலை யுண்டாகின்றது. சந்திரகிரணம் சீதளமாறி உஷ்ணிகரிக்கின்றது. இவ்வதிசயமென்ன சொல்லென்ருள். மற்ருெருத்தி சகீ ரத்னமே! நளின தளாக்ஷராகிய கிருஷ்ண பகவானுடைய வேணுகான மதுரஸ்வரங்கள் என திரண்டு செவித்வாரங்களிலும் நுழைந்த மாத்திரத்தில் மனக்களிப்பை யடைந்து சரீரமெங்கும் குளிர்ந்தது. ஸ்ரீ கிருஷ்ண விரக தாப ஜ்வரம் மேலிட்டது. எனக்குச் சகிக்கக்கூடவில்லையே? எனது சரீர பந்துக்களாகிய சகோதரர்கள் முதலிய ஜனங் களினுக்கினைக்கு அச்சந்தோற்ற வில்லையே? இதற்கென்ன செய்வேன். நீ என்ன உபாயஞ் சொல்லுகின்ருய் யென்ருள். ஒரு ஸ்திரீ சபலாக்ஷீ! உன்னைப்போலவே நானும் வெகுகால மாய் நினைத்து மனமுருகி அச்சத்தைவிட்டு ஸ்ரீ பகவதாதீன மாகத் துணிந்திருக்கின்றேன் என்னுடன் சொல்லவேண்டுவ தில்லை. உனக்கு ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் அன்பிருப்பது உண்மையானல் உன்மீதிலாணைப்படிக்கு மற்ற உனது சகீஜ னங்கள் மெச்சும்படி என்னுடன் கூடவா; வருகையாகில் ஸ்ரீ நளின தளாக்ஷரிடத்தில் உன்னைமுன்னம் சிநேஹஞ்செய்

வித்துப் பின்பு நானும் அடைகின்றேனென்றாள். இந்தப் பிரகாரம் அநேகவிதமாக ஒருவர்க்கொருவர் உத்தேசித்து ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் ஆநந்த பரவசர்களாய்ச் சம்பிரம வார்த்தைகளைப் பேசிக்கொண்டு கோபிகா ஜனங்கள் யாவரும் பிருந்தாவனத்தில் ஸ்ரீ கோவிந்தனை தரிசிக்க சமீப வனங்களினின்றும் அவருடைய விசித்ர லீலை முதலிய குணங்களையும், ஜகன் மோகனாகார திவ்ய சௌந்திரியங்களையுங் கண்டு களித்து நேத்திரோற்சவமாகச் சேவித்துத் தங்கள் மனதில் தியானபூர்வகமாக நிமிஷ நிமிஷத்திற்குக் காடாலிங்கனஞ் செய்து மோகபரவசர்களாய்த் தங்களுக்குள் ஒருவர்க்கொருவரைப் பார்த்துத் துதிக்கத் தொடங்கினார்கள்.

ஸ்ரீ பகவானிடத்தில் வைக்கப்பட்ட மனதுடையவர்களாகிய திவ்ய சுந்தரவதிகளே! இப்பொழுது உங்கள் கண்கள் கலிதீரப் பார்த்தீர்களா? நமக்கெதிரிலிருக்கின்ற ஸ்ரீ புருஷோத்தமர் இந்தப் பிருந்தாவனத்தில் அளவிறந்த கோவினங்கள் சூழ்ந்து நிற்கக் கோபாலஜனங்கள் மகாசந்தோஷத்துடன் பரமாநந்த பரிதர்களாய்த் தங்கள் சர்வேந்திரியங்களையுஞ் சமர்ப்பித்துத் துதிக்க மகா மிருதுவாயுங் குளிர்ச்சியாயுமிருக்கின்ற மாந்தளிர்களையும், இளந் தவனங்களையும், தாமரை இதழ்களையும், நானாவித பரிமள விசித்ர புஷ்பங்களையுஞ் சேர்த்து மாலையாக வணிந்து திவ்ய வஸ்திராபரணாலங்காரராய் வேணுகானஞ்செய்து பாதாரவிந்தங்களில் விளங்குகிற நூபுர சதங்கைகள் கலீல் கலீலென்று லயைப் பிரகாரம் சப்திக்கச்செய்கின்ற விநோதங்களை யென்னென்று துதிக்கப் போகின்றோம். சகிஜன சமூஹங்களே! இந்தத் திவ்ய புருஷ சிரேஷ்டருடைய ஸ்துதி நமது வாக்கால் அளவிடலாகுமோ? நாமெல்லாருமொன்றாய்ச் சேர்ந்து இப்படிப்பட்ட சேவார்த்தங்களைக் கொள்ளப் பூர்வத்தில் ஸ்ரீ புருஷோத்தமரைக் குறித்துச் செய்த தபோமௌன விரதமென்னோ வறிகிலோம். அவற்றின் பல சித்திகளே பிரசன்னமாய்த் தோற்றுகின்ற இந்தத் திவ்ய மூர்த்தியின் சேவை நமது நேத்திரங்களுக்கு விசேஷ சம்பத்காரமாக நேரிட்டனவென்று சொல்லித் துதிசெய்தார்கள். இவ்விதமாகச் சில தருணங்களில் துதித்து ஸ்ரீ பகவானைச் சேவித்தமாத்திரத்தில் இதர விஷயங்களை மறந்து ஸ்ரீ கோவிந்த பிரானையே யுத்தேசித்து ஸ்துதி பூர்வகமாகப் பின்னும் கானங்களைச் செய்யத் தொடங்கினார்கள்.

வனிதா ரத்நமே! ஸ்ரீ கோபால கிருஷ்ண சுவாமியின் காரணமில்லாத கடாக்ஷத்திற் குரியதாய் ஸ்ரீ பகவதநுபவங்

களை யனுபவிக்க இந்தப் பிருந்தாவனத்தில் கேவலம் அசேதன ஸ்வரூபத்தை அடைந்து, ஸ்வரங்களைத் த்ரா நின்ற புள்ளாங்குழ லாகாரத்தை யடைந்து, ஸ்ரீ பகவானு டைய கரங்களை யாஸ்ரயித்துச் சர்வேந்திரியத்தையுஞ் ஜயித்த முமுட்சுவைப் போல ஸ்ரீ பகவத் திருவதாங்களைச் சேர்ந்து, திவ்யகானங்களிலுண்டான வேதாந்தார்த்த ரஸங் கள் தங்கிய திருப்பவளாதாரச் செல்வங்களைப் பானஞ்செய்து திருப்தி யில்லாமல் விந்தை விந்தையாக ஸப்தஸ்வர துவாரங்கள் இமைக்கொட்டுகின்ற கண்களைப்போல, அவ ருடைய ஸ்ரீ முகார விந்தத்துடன் கூடியிருந் தனுபவிப்பதற்கு எவ்வித தவங்களைச் செய்ததோ ஸ்ரீ பகவ துபயோகியான இக் குழலாகார மூங்கில் எனது நெஞ்சம் அதிசயிக்கின்றதே யென்றாள். ஒருவள் அடி எனதன்புக்குரிய சகிமணியே! ஸ்ரீமந் நாராயணனுடைய பக்தஜனங்கள் ஸ்ரீ ஹரியின் பிர சன்னமான சேவை கிடைக்கப்பெற்ற மாத்திரத்தில் தங்கள் மனதில் பிரம்மாநந்தத்தைக்கொண்டு சரீரம்புளகி நேத்திரங் களின் வழியே ஆநந்த பாஷ்பங்களை வருஷிக்கின்றதுபோல், இந்தப் பிருந்தாரண்ய நதிதீரங்களினுல் விருத்தியடைகின்ற சமஸ்தமான விருக்ஷங்களும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வேணுகான சுவராநந்தத்தினுல் தழைத்துப் புஷ்பித்து மதுக்களையும் மகரந்தங்களையும் வருஷிக்கின்ற சந்தோஷங் களைப் பாராயென்றாள் ஒரு கோபிகா நங்கை.

வாராய் ஸ்ரீ மாதவனிடத்தி லன்புள்ளவளே! இனி நானென்ன செய்வேன், எனது நெஞ்சமென்னை வஞ்சித்த தன்றோ? எனது பூர்வ ஜன்மத்தில் நான் ஸ்ரீ ஹரியைக் குறித்து விரதோபவாஸங்களைச் செய்து அதனுல் மெய்ப் பித்து இச் சன்மத்தையே னடைந்தேனோ? அக்காலத்தில் இவ்வதிசயத்தை ஒருவருஞ் சொல்லாமற் போனார்களே? அப்போதே எனக்கிந்த ஆச்சர்யானுபவந் தெரிந்திருக்கு மாகுல் நான் இந்தக் காளிந்தி நதிதீரத்தில் இம்மூங்கிலின் வம்சத்தில் வேணுஸ்வரூபமாகப் பிறந்து ஸ்ரீ மாதவப்பிரா னுடைய திவ்விய திருப்பவள வதராமிர்த பானத்தைச்செய்து எனது ஜன்ம சபலமாகும்படி திருப்தி யடைந்து ஸ்ரீ பகவத நுபவங்களைச் செய்வேனே யென்று பெருமூச்செறிந்தாள் ஒரு கோபால கன்னிகா சேகரம்.

ஸ்ரீ பகவத் பாதமாகிற தாமரையினுடைய தேனையுண்டு மதித்து வண்டுருவமான விசித்ராங்கனையே! இந்தக் காளிந்தி நதிதீரத்தில் நந்தகோபருடைய அருந்தவப் புத்திரனுகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய பவளம்போன்ற அதராமிர்த

பானஞ் செய்வதற்கு நான் அனுஷ்டிக்கத்தக்க விரதநோன்புகளை எனக்குப்போதிக்க மாட்டுவையோவென்ருள், ஒருகோப கன்னிகா சிந்தாமணி.

அடி சுந்தரி! இந்தப் பிருந்தாவனமே ஆகாயமாகவும் ஸ்ரீ ஜனார்த்தனருடைய திருமேனியே நீருண்ட மேகமாகவும், இவருடைய வேணுகான ஸ்வரங்களே மேககர்ஜ்ஜனையாகவும், பாவித்துக்கொண்டு இவ் வனத்திலுள்ள மயிலினங்கள் சிறகுவிரித்து ஆநந்த நர்த்தனஞ் செய்தலைப்போல, ஸ்ரீபகவானுடைய சிரோபாகத்தி லணிந்திருக்கின்ற மயிர்ப்பிஞ்சங்கள் அசைகின்றன. இந்த வதிசயங்களைப் பாராயென்ருள் ஒரு கோப தேஜோவதி.

அடி மோகன வனிதா! ஸ்வர்க்க லோகத்தில் தேவேந்திரனுடன் கூடி வாழ்ந்து சுகிக்கும்படியான சசிதேவியினுடைய கேளீக்ருகத்தைப் பார்க்கிலும் இந்தப் பிருந்தாவனமானது ஸ்ரீ கிருஷ்ண பாதபத்ம முதலிய விசித்திர ரேகைகளால் அலங்கரிக்கப்பட்டு ஸ்ரீமகா லக்ஷ்மியானவள் அன்பு கூரத்தகுந்த புண்ணிய பூமியாயும், நமக்கு ஜன்ம சாபல்யமாயும் விளங்குகின்றதைப் பார்த்தாயோவென்று சொல்லி அதிசயித்தாள் ஒரு கோபிகை. புண்ணியாங்கனையே! ஜனார்த்தனனுடைய ஸ்வரூபாதிசயங்களை நேத்திரோத்ஸவமாகத் தங்கள் கண்கள் கலிதீர சேவித்துக் களித்து ஆனந்தித்து இவருடைய புள்ளாங்குழலின் மாதுர்ய ஸ்வராமிர்தத்தைச் செவி வாயாகப் பானஞ்செய்து, மதோன் மத்தர்களாய் மனோவியாபாரங்களை மறந்து, ஆகாயத்தில் தங்கள் விமானங்களிலிருந்தபடி மனோலயமடைந்து திவ்விய வஸ்திரங்கள் தளர அளகபாரத்தினின்றும் புஷ்பங்கள் நழுவ தங்கள் சர்வேந்திரியங்களையும் ஸ்ரீ கிருஷ்ண பிரீதிசெய்து பரமயோகீந்திரரைப்போல விளங்குகின்ற தேவதா ஸ்திரீகணங்களைப் பாராயென்ருள் ஒரு கோப பத்மதள நேத்ரி.

அடி சுகுணவதி! இந்தப் பிருந்தாரண்யத்தில் விருத்தியடைந்து கொண்டிருக்கின்ற சகல மிருகங்களும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வேணுகானத்தைச் செவியாரக்கேட்டுச் சரீரங்கள் புளகித்து ஆகாரங்கொள்ளுதலையும் நடக்கைகளையும் ஒழித்து வால்களை தூக்கிக்கொண்டு காதுகளை நீட்டி மருண்டு சௌமிய பார்வைகளை யடைந்து ஸ்ரீ புருஷோத்தமனைத் தரிசித்து பரமயோகீந்திரர்களைப்போல விளங்குகின்றதைப் பாராயென்ருள் ஒருகோபாஞ்சன லோசினி. புண்ணியவதியே! இந்தக் கன்றுகளானவை பசிதாகத்துடன் தங்கள் தங்கள் தாய்களாகிய பசுக்கூட்டங்களை அடைந்துப் பால்

மடிகளைப் பிடித்துண்கிற சமயத்தில் தங்கள் பரிபாலக விபுவாகிய ஸ்ரீ மாதவப் பெருமானுடைய புள்ளாங்குழலின் சுவரமாகிற அமுததாரைகள் செவிவழியாகச் சென்று நுழைந்துத் தங்கள் பசிதாகங்களைத் தணித்து திருப்தியை யடையும்படிச் செய்தபடியினாலே, பாலைக்கிரஹிக்க முட்டி யுண்ணாமல் சித்திரங்களிலெழுதிய பிரதிமைகளைப் போல ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய ஸ்வரூபத்தில் தங்கள் பார்வை களைச் சமர்ப்பித்து ஜன்ம சாபல்யமான மேன்மை யடைந்து அந்தந்த ஸ்தானங்களில் அப்படி அப்படியே மனோலயமாக ஆநந்த பாஷ்பங்களை வருஷித்துக்கொண்டு நின்கின்றதைப் பாருங்களென்றாள் ஒரு யாதவப் பெண்.

ஹே சுந்தர ஸ்வரூப பத்மாக்ஷீ! ஸ்ரீ கோபாலமூர்த்தியி னுடைய பரிபாலனத்தினால் விருத்தி யடைந்திருக்கின்ற பசுவின் சமூகங்கள் ஸ்ரீ கிருஷ்ண பகவான் முரளிகான ஸ்வராமிர்தங்களைக் காதுகளின் சந்தினால் பானஞ்செய்து திருப்தியடைந்து வால்களை நெரித்து முகங்களை உயரத்தூக்கி சரீரரோம புளகாங்கிதத்துடன் தங்கள் இருதயாரவிந்தங் களில் ஸ்ரீ கிருஷ்ண ஸ்வரூபத்தை நிறுத்தி மேய்ச்சலைவிட்டு ஆநந்த பாஷ்பங்களைச் சொரிந்துக்கொண்டு மெய்ம்மறந்து நேத்திரோத்ஸவமாகத் தரிசித்துக்கொண் டிருக்கின்றன. விருக்ஷங்களின் கிளை நுனிகளில் வாசஞ்செய்துக் கொண்டி ருக்கின்ற நானாவித ஜாதிபேத சுகுமார பக்ஷிகளின் சமூஹங்க ளானவை நமது இருதயேஸ்வரனுடைய புள்ளாங்குழலின் சப்தாமிர்தங்களைக் கிரகித்து சர்வ விவகாரங்களொழிந்து மகா மௌனீந்திரர்களைப்போல பகவத்ஸ்வரூபத்தை இருதய கமலத்தினுள் நிறுத்திச் சலிக்காமல் தங்கள் நேத்திரங்களை மூடி மூடிச் சிறு பார்வையாகப் பார்த்தநுபவித்து மனோலய மடைந்து விளங்குகின்றன, அவைகளைப் பாராயென்றாள் ஒரு கோப சுகுமாரி. வனிதாரத்நமே! இந்த ஆகாய வீதி களில் சஞ்சரிக்கின்ற மேக சமூஹங்கள் யாவும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வேணுகான கம்பீர மதுர ஸ்வரங்களைக் கேட்டுத் திக்குவிதிக்குகளெங்கும் பரிமளிக்கும்படியான புஷ்ப மாரிகளை வருஷித்துத் தங்கள் சரீரங்களாகிய ஸ்வரூபங்களைக் கொண்டு ஸ்ரீ பகவானுக்குச் சூரிய கிரணங்களால் நேரிடும் சிரமங்களைத் தோற்றவொட்டாமல் மகா ராஜோபசாரமாக வெண்பட்டுக் குடைகளைப்பிடித்து உபசரிக்கின்றவைகளைப் போல ஆகாயமார்க்கத்திற் சூழ்ந்து நிழலைக்கொடுக்கின்றன. இந்த ஆச்சரியங்களைப் பார்த்துக் கண்களிப்பாய் யென்ற னள் மற்றொரு சுந்தரி.

நற்றவமிழைத்த நாரீ ரத்னமே! இந்தப் பிருந்தாவனத்தில் விருத்தியடைந்து வாசஞ்செய்துக் கொண்டிருக்கின்ற வேடஸ்திரீகள் நார்களினாற் பின்னிய வஸ்திரங்களை யுடுத்தித் தளிர்களையும் சிறகுகளையும் அவயவங்கள் மறையச் சாத்திக் கொண்டு, இவ்வன மார்க்கங்களில் வேணுகானங்களைச் செய்து சஞ்சரிக்கின்ற இந்த ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினுடைய ஸ்ரீ பாதாரவிந்தங்களில் அலங்கிருதார்த்தமாய்த் தரித்திருக்கப்பட்டிருந்து, அவ் வனத்திலுள்ள புற்கொடி புதர்களில் ஒட்டிக்கொண்டதாகிய சந்தன புஷ்ப குங்குமாங்கித வாசனு திரவியங்கள் கலந்த கலவைச் சேற்றை எடுத்துத் தங்கள் ஸ்தன பாரங்களிலும் நெற்றிகளிலுமணிந்து இந்த ஆரண்யங்களிலிருக்கின்ற மகா மதுரமான கந்தமூல பலாதிகளைச் சம்பாதித்து நானாவித திவ்யபரிமள வனபுஷ்பங்களைச் சாஞ்சாமாகச் சேர்த்துத் தங்கள் கரங்களிலேந்திக்கொண்டு, இந்தத் திவ்யபுருஷ சிரேஷ்டரைப் பிரியாமல் முரளிகான ரஸாமிர்தங்களைச் செவிகுளிரப் பானஞ்செய்து திருப்தியடைந்த மனமுடையவர்களாய் மெய்ம்மறந்து பாரங்களினால் இடை துவளும்படி நடந்து வந்து இந்தத் திவ்ய மூர்த்திக்கு ஒவ்வொருத்தியாக அந்தக் கனிகளையும் புஷ்பச் சரங்களையுஞ் சமர்ப்பித்துப் பிரம்மானந்த பரிதர்களாய்ச் சந்தோஷிக்கின்றார்கள் பார்த்தாயோ வென்றாள் ஒரு கோபகுல சுக வசனி. வாராய் சர்வாலங்கார சோபிதையான சௌந்தரிய வதியே! ஸ்ரீ பலராம சகிதராகிய ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினுடைய முரளிகான திவ்யாமிர்த வருஷ தாரைகளினால் இந்தப் பிருந்தாவனங்களிலுள்ள கோவர்த்தனாதி மகா பர்வதங்களுங் கடினமாகிய பாறைகளுந் தண்ணீர் போலுருகிக் கரைந்தன, வன விருக்ஷங்கள் யாவும் தளிர்த்துத் தழைத்துப் புஷ்பித்தன. சமஸ்தமான வனஜன சமூஹங்களும் மிகவுஞ் சந்தோஷாதிசயங்களை யடைந்தார்கள்.

இப் புருஷோத்தமருடைய ஸ்ரீ சரணாரவிந்த ஸ்பரிச சத் ஸஹவாசங்களினால் இந்த அரண்ய பூமி பாகங்கள் ஸ்ரீ ஹரி தாசர்களாகிய மகா பாகவதர்களைப்போல மகாபரிசுத்தங்களை யடைந்து, ஸ்ரீ பகவானை அடுத்திருக்கின்ற கோவினங்களுக்கு இளம் புற்களைக் கொடுத்துச் சந்தோஷிப்பித்தன. மகா நதிகள் யாவும் மிகவுந் தெளிந்து பிரவாகிக்கின்ற ஜலங்களினால் தாகங்கள் தீர்த்துத் திருப்தி யடையச் செய்தன. வன விருக்ஷங்க ளியாவும் புளகிப் பல புஷ்பவர்க்களைக் கொண்டு தங்கள் சாகைகளாகிற உத்தம கரங்களால் ஸ்ரீ கிருஷ்ண பிரீதியர்த்தமான காணிக்கைகளைச் சமர்ப்பித்

தன. இவ்வனங்களும், வனமார்க்கங்களும், பர்வதங்களும்' குகைகளும், கிரிசிகர கோபுர வீதிகளும், சமஸ்தமான விருக்ஷலதாகுல்மாதிகளும், இவ்வன பூமிகளில் வாசஞ்செய்கின்ற சேதனுசேதனுத்மகமான மிருகபக்ஷி சமூகங்களும் புளகித்தனவாய் ஜன்ம பாவங்களை யடைந்து ரஜஸ்தமோ குணங்கலந்த ஜாதீ வைரங்களற்றுப் பரிசுத்த மனமுடைய முமூட்சுக்களைப் போல பிரம்மானந்த பரவசங்கொண்டு விளங்குகின்றன. இந்த அதிசயங்களைப் பாராயென்ருள் ஒரு கோப கன்னிகா சூடாமணி.

வாராய் பரதகுலோத்தமனுகிய பரிக்ஷித் மஹாராஜனே! இவ்விதங்களாக இந்த மனோரம்மியவதிகளாகிய கோப கன்யா மணிகளானவர்கள் பிருந்தாவன மார்க்கங்களில் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீ பலராம சகிதராகிய ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினுடைய அதிமானுஷ சேஷ்டித லீலா குணதிசயங்களை ஒருவர்க்கொருவர் பிரம்மானந்த பரவசர்களாய் வர்ணித்துக் கொண்டு சர்வ பிரபஞ்சங்களையும் ஸ்ரீ கிருஷ்ணமயமாக நினைத்து மனோலயங்களை யடைந்தார்கள்.



## இருபத்திரெண்டாவது அத்தியாயம்



ஸ்ரீ கண்ணன் கோபியர் துயில்களைக் கவர்ந்து தமது கிருபையால் அவர்களுக்கு மனோபீஷ்ட வரங்களை கொடுத்ததும், அவ்வனத்தில் பிராமணர்களால் செய்யப்படுகின்ற யாகசாலைக்கு கோபால பாலர்களை யனுப்பிவித்ததும் சொல்லப்படுகின்றது.

வாராய் ஞான-வைராக்கிய சீலனே! இவ்விதம் வருஷ கால சரத்காலங்களில் ஸ்ரீ பகவானுனவர் லீலாவினோதமாய் வேணுகானஞ் செய்துக்கொண் டிருக்கின்ற சமயத்தில், சூரியபகவான் தனுராசியிற் பிரவேசித்தான். ஹேமந்தருதுவாகிய பனிக்காலத்தில் வாடைக்காற்று குளிர்ந்து வீசியது. ஆகாய வீதிகளில் மேகங்கள் சஞ்சரித்துக்கொண்டிருந்தன. பகல் அஹசு குறைந்தது. சூர்ய பகவானுடைய கிரணங்களுங் குளிர்ந்து காட்டியது. இராக் காலங்களில் அகசு அதிகரித்து சந்திரகிரணங்கள் அதி சீலமாகத் தோன்றின. இவ்வுலகத்தி லிருக்கின்ற அக்நித்ரயங்களும் மிகவுங் குளிர்ச்சியுள்ள இச்சீதள காலத்திற்குப் பயந்து ஸ்ரீ சம்புவாகிய ஸ்ரீருத்ர பகவானுடைய பால நேத்திரத்திலொன்றும், இப்பூமியைச் சூழ்ந்துக்கொண்டிருக்கின்ற மகா சமுத்தி



படம் நெ. 15. பக்கம் நெ. 84-A.

கோபிகா வஸ்திராபஹரணம்.

ரத்தி லொன்றும், இவ்வுலகத்தில் விருத்தி யடைந்திருக்கின்ற சகல மனித மாளிகைகளிலொன்றும், விளங்கினவேயல்லது சர்வ வியாபகமாய்த் தமது ஜ்வாலா மாலைகளைப் பிரகாசிப்பிக்கச் சக்தி யற்றனபோலத் தோன்றின.

இப்படிப்பட்ட ஹேமந்தருது காலத்தில் கோகுலத்திலுள்ள ஆயர்கள் யாவரும் தங்கள் வம்சங்களும் கோக்களும் க்ஷேமத்தை யடையும் பொருட்டுத் தங்களுடைய குலதர்மப்படி அவரவர்கள் வீட்டிலிருக்கின்ற கன்னியாஸ்திரீகளை நியமித்து அவர்களைக்கொண்டு தங்கள் குல தெய்வமாக விளங்குகின்ற, கௌரிதேவியைக் குறித்து விரதங்களை யநுஷ்டிப்பிக்கின்றது வழக்கமானபடியால் அவ்வருஷத்து ஹேமந்த ருதுவிலும் மாதங்களுக்குள் மகோத்தம மாதமாகிய தநுர்மாதத்தில் முதற்றேதிமுதல் முப்பது தேதி வரைக்கும் விரத மநுஷ்டிக்கும்படியாய் ஸ்ரீ நந்தகோபர் உபநந்தர் முதலிய சமஸ்தமான ஆயர்களும் ஸ்திரீஜனங்களுக்கு நியமித்தார்கள்.

அப்போது கோபிகைகள் யாவரும் ஸ்ரீ பகவானிடத்திற் பக்தியுடையவர்களாய் ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தங்களுக்கு மணாளனாக வரிக்கவேண்டுமென்று வெகுகாலமாய் மனதில் தியானித்துக்கொண் டிருக்கின்றவர்களாகையால் நல்ல சமயம் வாய்த்ததென்று சந்தோஷித்து ஸ்ரீ கிருஷ்ண குண கீர்த்தனங்களைச் செய்துக்கொண்டு காளிந்தி நதிதீரத்திற் சேர்ந்து தீர்த்தமாடிச் சுசிர்ப்பூதைகளாய் அந்த நதிக்கரையில் திவ்வியமான ஈர நுண்மணலைக் கூட்டி ஸ்ரீ பகவதிதேவி ஸ்வரூபத்தை நிர்மித்து நானாவித திவ்வியாலங்காரங்களையும், மஞ்சட்பொடி முதலிய விசித்திர குங்குமங்களையும், மிகவும் பரிமளத்தைத் தராநின்ற புஷ்பங்கள் கந்தங்களையும், தூபதீபங்களையும் நானாவித மாதுர்ய பக்ஷ்ய போஜ்யாதி பலகார வர்க்கங்களையும், கந்தமூல கனி முதலியவைகளையும், சோடசோபசாரங்களினால் சமர்ப்பித்து, மிகுந்த பக்தியுடன் கைகூப்பிக்கொண்டு எதிரில் நின்று, தனித்தனியே பகவதி! காத்யாயனீதேவி! மகாமாயா! மகாயோகினீ! அதீசுவரீ! கௌரீ பவானீ! மகாதேவதேவீ! ஸ்ரீ புருஷோத்தமர் எங்களுக்கு நாயகராக அமையவேண்டும். உம்மை பால் தயிர் வெண்ணெய் மஞ்சட்பொடி சுகந்த தூளினங்கள் மஞ்சள் நீர் இவைமுதலிய மங்கல திரவியங்களால் வசந்தமாட்டி நிகில லோக சுபகரமாகிய நானாவித மங்கல வாத்தியங்களுடன் சோடசோபசாரங்களைச்செய்து சேவிக்கின்றோமென்று பிரார்த்தனை செய்து சங்கேதஞ் செய்துக்கொண்டு உபவாசர்களாய்

இந்தத் தநுர்மாதமுப்பது நாளும் கிரமமாக பஞ்சவுஷத்காலத்திற்கு முன்வந்து அவரவர்கள் முற்றத்தில் அவரவர்தம் நாமதேயங்களைச் சொல்லி எழுப்பி யழைத்துக்கொண்டு யாவரும் தங்கள் குசபாரங்கள் அசைந்தாட, இடைகள் துவள, மத்தகஜங்களைப்போலும், ராஜஹம்சங்களைப்போலும், ஒய்யார நடை நடந்து ஸ்ரீ கிருஷ்ணநாம சத்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டு சந்தோஷமாய் ஒருவர்க்கொருவர் கைகளைக் கோர்த்துக்கொண்டு யமுனாநதி தீரத்திற்கு வந்து மிகவும் பக்தியுடன் ஸ்ரீ பத்திரகாளியைப் பூஜித்துத் தங்கள் மாளிகையிற் சேர்ந்து, ஹவிசுகளை புசித்துக்கொண்டிருந்தார்கள்.

இவ்விதமாக முப்பது நாளும் விரத யாத்திரையாகச் செல்லும்போது கடைசிநாள் முன்போலவே கோபகன்னியா ஸ்திரீகள் யாவருங் ஸ்ரீ கிருஷ்ணகுண கீர்த்தனங்களைச் செய்துக்கொண்டு நதிதீர சமீபத்திற்கு வந்து பரிசுத்தமான ஏகாந்த பிரதேசத்தில் தங்கள் விலையுயர்ந்த வஸ்திரங்களைக் களைந்து அடையாளமாகவைத்து நிர்ப்பயர்களாய் அம்மகாநதியிலிறங்கி ஸ்ரீ ஹரிரோஹரியென்று ஸ்ரீ பகவன்னாமங்களை தியானித்துக்கொண்டு ஸ்நானஞ்செய்து அந்த ஜலமத்தியில் சரஸாநந்தத்துடன் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய லீலாகுண வைபவங்களைப் பாடி அந்த ஜலத்தை வாரிவாரி யொருவர்க்கொருவர் ஜலவசந்தங்களாடி அடைதற்கரிய பகவத் குணாதிசயங்களை யனுபவித்துக் கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில் சர்வலோகரக்ஷகரான ஸ்ரீ கிருஷ்ணர் கோபிகைகள் தீர்த்தமாடுகின்ற வைபவங்களை அறிந்து தாம் வெகுதூரத்திலிருந்து ஏதோ ஒரு கார்யார்த்தமாய் வருகின்றவரைப்போலத் தன்னுடன்கூட வந்தவர்களை கண்ஜாடைகாட்டி ஒரு பிரதேசத்தில் சந்தடி செய்யாமலிருக்கச்செய்து, தாம் ஒருத்தராகப் புறப்பட்டு சந்தடிசெய்யாமல் அங்கங்கு ஒளித்து மெதுவாய் மறைந்து வந்து தாமே களைந்துவைத்தவரைப்போல எல்லா வஸ்திரங்களையும் கிரகித்துகொண்டு உடனே கனைத்து மதயானையைப்போலக் கம்பீரமாக நடந்துவிட புருஷனைப்போல அந்த வஸ்திரங்களை யெல்லாம் கைகளில் சேர்த்துப் பிடித்துக்கொண்டு தமது லீலைக்கனுகுணமாய் ஒத்தபருவங்களையுடைய இந்த கோப கன்யா குமரிகளைப் பார்த்து எளனமாகிய வார்த்தைகளைச்சொல்லிக்கொண்டு அந்நதிக்கரையில் தழைத்து புஷ்பித்து விருத்தி யடைந்திருக்கின்ற ஒரு கடம்ப விருக்ஷத்தின்மீது தாவி ஏறி, அதன்மீது இவ்வஸ்திரங்களை வைத்துத் தாம் அவ்விருக்ஷத்தின்மேல் நின்று அதன் பூர்வ கர்ம பாபத்தை நீக்கிப் பரிசுத்தஞ்செய்து மோக்ஷத்திற்குக்

காரணமாகும்படி கிருபைசெய்தார். அத்தருணத்தில் அந்தச் சுந்தரவதிகள் கழுத்தளவு ஜலத்திலிருந்து ஸ்ரீ பகவானுடன் சுகுமாரமாக வசனிக்கலாயினர் :

ஸ்ரீ கோபாகன்யா சமூகங்களினுடைய சம்வாதம்

ஹே! எமதுயிர்க்குயிரான ஸ்ரீ முத்துகிருஷ்ண பகவானே! நீரிந்த நந்தவிரஜத்தி லவதரித்து எங்கள் மனதை யபகரித்ததுமன்றி எங்களுடைய மர்மாவயவமான தனங்களையும் அபகரிக்கின்றது தர்மமோ? ஈதென்ன ஆச்சரியம், நாங்கள் களைந்து வைத்த விழுப்பு வஸ்திரங்களை ஸ்பரிசித்து அவற்றைச் சுமந்து போகக்கூடுமோ? உமது கிருபையினால் எங்களை யடிமைகொண்டு எங்கள் இஷ்டங்களைத் தீர்க்கும்படியான அம்மான் மகனாகிய மைத்துனனாகவே யிருக்கின்றீர். இப்போது எங்களை மன்னித்து அவைகளை கிருபையோடுக் கொடுத்து எங்கள் மானதனங்களை நிலைநிறுத்தி ரக்ஷிக்கக் கடவீரென்று பிரார்த்தித்தார்கள். சிலர் ஸ்ரீ கோபால கிருஷ்ணனே! அன்யர்கள் நம்மிடவர்கள் என்பதில்லாத அபேதகுணங்களை வகித்துச் சர்வத்திரர்களிடத்திலும் முறை தப்பினவரே! நன்றாய் விளங்கிற்றே இச்செய்கை! சர்வ சம்பத்கர நித்யைஸ்வர்ய பிரதனாய் விளங்கவோ? சமஸ்தமான சேதனா சேதனங்களுக்கும் ஆகாரபூதையான இப்பூமிதேவியை மஹார்ணவத்தில் மூழ்கிக் கரைந்துபோகாமல் நிலைநிறுத்தவோ? மானிட சிம்ஹனாய் பிரகாசித்துச் சர்வாசுரசம்மாரம் செய்து பக்தபராதீனராய்க் காட்டி மறைக்கவோ? பலிச்சக்ரவர்த்தியினிடத்தில் யாசிக்கின்றவரைப் போல மாயாசிறு குட்டனாய் வந்து அவனுடைய ஐஸ்வரிய கர்வங்களை யபகரித்து ஸ்ரீ திரிவிக்கிரமராய்ப் பிரகாசித்துக் கீர்த்தி வகிக்கவோ? சகல அரசர்களுக்கும் பிரபுவாய் ராஜ ராஜேஸ்வரராய்ச் சகல சத்ருசங்காரஞ்செய்து நிகில ஜனங்களையு மிரக்ஷித்து உத்தரிக்கவோ? சர்வ குருஜனங்களுக்கும் குருசிகாமணியாகி மஹா மஹனீய குணாதிசயங்களை வகிக்கவோ? அல்லது மிகவும் பேதைகளாகிய எங்களை யொத்த ஸ்திரீ ஜனங்களுக்கு வசியராய் நாங்களிட்ட வழக்குக் குரியராய் எங்களுக்குப் பணிசெய்யவோ? அறிகின்றிலோம். இவ்வளவு பெருமை வகித்தது போதும் எங்களுக்குக் கிருபை செய்து எங்கள் கலைகளைத் தருவீரென்று வேண்டிக்கொண்டார்கள். சிலர் பக்தவத்ஸலனாகிய ஸ்ரீ கிருஷ்ணா! நன்றாயிருந்தது. நீ சுலபனாய் முன்னமே எங்கள் மனதை யபகரித்தாய். கிரமக்கிரமமாய் எங்கள் மர்மாவயமான தனங்களையும் சுபாவ தர்மங்களாகிய நாணயங்களையும் வஸ்திரங்களையும்

அபகரித்ததுமன்றி, எங்கள் சர்வேந்திரியங்களையும் உனக்கு அடிமையாக வெழுதிக்கொண்டாய். பின்பு இன்னமுமென்ன செய்வாயோ வென்றூர்கள். ஸ்ரீ பத்மதளாக்ஷனுகிய எங்கள் பிரபுவே! நீங்கள் ரஜோகுணப் பிரபாவங்களினுல் இந்த சர்வப் பிரபஞ்சங்களிலும் மிகவும் ஆச்சரியமாகிய விசித்திர சிருஷ்டி முதலிய செய்கைகளை யாசரிக்கிறவ னென்று அறிந்தே யிருக்கின்றோம். உனது சத்வ குணத்தினுல் சகல புவனங்களையும் மங்கலகாமாக ரக்ஷித்துச் சதுர் வித புருஷார்த்தங்களைக் கொடுக்கத்தக்க ஐசுவரியமுடைய வனுகியும், அன்னியர்களால் ஜயிக்க வொண்ணுதவனுகியும் விளங்குகின்ற உன்னை நாங்கள் தியானித்துக் கொண்டே யிருக்கின்றோம். உனது தமோ குண விசேஷத்தினுல் பயங் கரமான சக்திகளை வகித்து லோகாரிஷ்ட நிவாரணங்களைச் செய்து எப்போதும்போல மூன்று குணங்களையும் ஒருமிக்க அடைந்து மிகவுஞ் சோதிமய விக்ரஹனுகியும் ஏகனுகியும் விளங்குகின்ரு யென்று நாங்கள் கேள்விப்பட்டு உன்னையே பர்த்தாவாகச் சிந்தித்துக் கொண்டிருக்கின்றோம். இப்படிப் பட்ட நீ மகா மாயாவியாய் விசித்திர லீலாதிசயங்களை யநுஷ் டித்துக்கொண்டு பல மூர்த்தியாய் நானுவித ஜாடைகளை வகித்து ஒருவராலும் இப்படிப்பட்ட தன்மையையுடையவ னென்று அறிதற்கரியவனுகி சற்றுநேரமும் ஒழிவில்லாமல் வியாபித்துச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற உன்னுடைய வல்லமைக்கு எங்கள் மனதைச் சோதிப்பது தகுமோ? தயவு செய்து கடாக்ஷத்திற்குப் பாத்திரைகளாகிய எங்கள் வஸ்தி ரங்களைக் கொடுத்தருள்வாய் விபுவே யென்றூர்கள். இவ்விதம் கோபிகைகள் பிரார்த்திக்க மகா மாயா சாதுர்ய நடன மூர்த்தியாகிய ஸ்ரீ பகவானுனவர் புன்னகையுடன் அந்தக் கன்யா ஸ்திரீகளைப் பார்த்துக் கம்பீரமாக சொல்லுகின்றூர்:

### ஸ்ரீ பகவான் வாக்கியம்

வாருங்கள் ஹே பெண்களே! நீங்களெல்லாரும் வெகு காலமாயொன்ருகச் சேர்ந்து ஒரே மனதுடையவர்களாய் உங்கள் முன்னேர்களுக்குத் தெரியாமல் மனதி லொன்றும் வாக்கிலொன்றுமாய் விரதங்களை யநுஷ்டிக்கின்றீர்கள். உங்க ளைப்போல விரதமனுஷ்டிப்பவர்கள் எந்த லோகத்திலுங் கிடையார்கள். உங்களுடைய மோசகரமான சித்த விர்த்தி யைக் கொண்டு என்னைத் தூறு செய்வது என்ன சாதுர் யமோ? ஆம். நீங்கள் நன்ருய்த்தெரிந்தவர்களே? தயவுசெய்து ஜலத்தைவிட்டு வெளியில் வந்து உங்கள் வஸ்திரங்களை வாங் கிக் கொள்ளுங்களென்றூர். இப்படிச் சொல்லிய ஸ்ரீ கிருஷ்ண

பகவானுடைய வசனங்களைக் கேட்ட மாத்திரத்தில் யமுனா நதி சலத்துடன் வேறுபாடு தெரியாமல் கலந்திருக்கின்ற கறுத்த அளகபாரத்தைப் படைத்த இந்தச் சோப கன்யா சிரோமணிகள் ஒருவர்க்கொருவர் முகார விந்தங்களைப் பார்த்து அநந்த தாமரைப் புஷ்பங்களில் அநந்த மூன்றும் பிறைகள் ஏககாலத்திற் காணப்பட்டாற்போலப் புன்னகை செய்துக்கொண்டு இவர் சொல்லுகின்ற மர்ம வசனங்களைக் குறித்து வெட்கியும் அதி குளிருக்கஞ்சியும் கழுத்தளவு சலத்திலிருந்துகொண்டு பதிலுரைக்கலாயினர் :

ஆ கிருஷ்ணா! ஸ்திரீஜனங்கள் ஜலமாடும்போது அவ்விடத்திற்கு உத்தம புருஷர்கள் வரவேமாட்டார்கள். இப்படிப்பட்ட சாதுர்யங்கள் இப் பூமியில் முன்னம் நடந்ததென்று கேட்டதில்லை. இந்த நிகழ்காலத்திலும் இச்செய்கைகளை நீயொருவன் மாத்திரம் துணிந்து செய்தாயே யல்லாமல், மற்றொருவரு மாசரிக்கமாட்டார்கள். ஆகையால் எங்கள் விபுவே! உனக்கு அடிமை செய்கின்றோம், சந்தேகமில்லை. ஸ்ரீ யமுனாநதி பிரவாகத்தினின்றும் பிரமாணமாகச் சொல்லுகின்றோம். உனது கிருபாபிமான வஸ்திரங்களை யெங்களுக்குக் கொடுத்தருள்வாயென்று துதித்து இன்று முதல் உனது ஆக்கினையின்படி அடிமைக்கடிமைகளாய் ஆள்செய்து எங்களுடைய சர்வேந்திரியங்களையும் உனக்கே காணிக்கையாகச் சமர்ப்பித்து, உனது ஆக்கினையைச் சிரசாவகித்து, அநுஷ்டித்துக்கொண்டு வருகின்றோமென்று பிரார்த்தித்தார்கள். தங்கள் ஸ்தனபாரங்களி லணிந்த செஞ்சந்தனக் குழம்புகளோடு கலக்கப்பட்டுச் சோணையாற்றுக்கொப்பாய் விளங்குகின்ற யமுனா நதியிலிருந்துகொண்டு இப்படி நானாவிதமாகப் பிரார்த்திக்கின்ற இவர்களைச் சம்பூரணமாகக் கடாக்ஷித்து ஸ்ரீ பாலகோபாலன் மலர்ந்த தாமரைக் கொப்பான முகமுடையவராய் ஸ்ரீ கோபகன்னிகளுக்கு மர்மமான சில வார்த்தைகளைச் சொல்லுகின்றார் :

ஸ்ரீ பகவத் வாக்கியம்

சுகுண சுந்தரவதிகளே! நீங்கள் உங்கள் முன்னோர்களின்மீது பிரமாணப்படிக்கு எந்த புருஷனைப் பர்த்தாவாக வரிப்பதற்குப் பரிசுத்தைகளாய் மிகவும் பக்தியுடன் நோன்புகளை யநுஷ்டித்தீர்களோ, அந்த அநுஷ்டானப்படி உங்களிடத்தில் சனித்த தவப்பலமே உங்களுக்கு லபித்தது. அப்படியிருக்க ஸ்ரீ நந்தகோபருடைய புத்திரனாகிய என்னை யேன் வெறுக்கின்றீர்கள். எந்த மகா புருஷனை வரித்து

மோகித்திர்க்ளோ அவன் உங்களுடைய மர்மதனங்களை யபகரித்தான். வெகுகாலமாய் நீங்கள் உங்கள் மனோவீதியில் பக்தி பூர்வகமாகச் சிந்தித்துக்கொண்டிருந்த புருஷார்த்த வாஞ்சைக்கு நான் அன்யனோ? பிரமாணமாகச் சொல்லுவீர்களென்றார். ஸ்ரீ ஸ்வாமியினாலே இவ்விதம் சொல்லப்பட்ட வசனங்களைக் கேட்டு, இந்தக் கோபிகா ரத்நங்கள் ஒருவர்க்கொருவர் தங்கள் முகமாகிற தாமரைப் புஷ்பங்களைப் பார்த்துக்கொண்டு, மனதாகிற தாமரைகளில் முக்தியைக் கோரத் தக்க மன்மதன் தங்கள் இருதயமுதலிய சர்வேந்திரியங்களையும் அபகரிக்க நிர்விண்ய விருதய நிருத்தரைகளாய், மௌனமாயிருந்தார்கள். அப்படி யிருக்கின்றவர்களைத் தமது பரம கிருபையினால் மறுபடியும் கடாக்ஷித்து லோகேந்திர பரம குரு சிகாமணியாகிய ஸ்ரீ ஹரியானவர் சாஸ்திரோக்த சர்வ வியாபக கிரமப்படி சில நீதிவசனங்களோடு ஆத்ம ஸ்வரூப தர்மத்தையும் தமது குணாதிசயங்களையும், வெளியிட்டுச் சொல்லுகின்றார்.

சுகுணவதிகளே! இன்றுமுதலெப்போதும் எனது கிருகத்தில் நித்தியமாக வசித்து, நந்தகோப யசோதா தேவிகளுக்குப் பணிசெய்து, எனக்கு அடிமைகளாய் என்னுடைய ஆக்கினையைச் சிரசாக வகித்து, அநுஷ்டிப்பீர்களாகில், இப்பொழுதே உங்கள் வஸ்திரங்களைத் தருகின்றேன். ஜல மத்தியினின்றும் வெளியில் வந்து சிரத்தா பூர்வகமாக வாங்கிக் கொள்ளுங்களென்றார். இவ்வண்ணமாகச் சொல்லிய ஸ்ரீ பகவானுடைய மதுரமாகிய வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில், குளிருக் கஞ்சி ஜல மத்தியில் இருக்க கூடாதவர்களா யிருக்கின்ற கோபஸ்திரீகளுக்குள் சிலர், குளிருக்கு சஹிக்கமாட்டாமல் சலத்தைவிட்டு வெளியிற் போகலாம் வாருங்கள் போனவுடனே ஸ்ரீபகவான் நமது கலைகளை கிருபை செய்துதருவரென்றுசொன்னார்கள். சிலர் நாம் சலத்தைவிட்டு வெளியிற்சென்ற மாத்திரத்தில் நமது அருந்தவப் பயனாகிய ஸ்ரீ கோவிந்த மூர்த்தியானவர் நம்முடைய லச்சைகளை யபகரிப்பரென்று சொன்னார்கள். இந்தப்பிரகாரம் அவரவர்களும் நானாவிசாரங்களை கொண்டவர்களாய், அந்த ஜலத்தினின்று சீதளஸ்பரிச வாய்வு வேகத்தினாலுண்டாகிய சரீர நடுக்கத்துடன் என்செய்வோமென்று சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது காற்றினலைசைகின்ற தாமரைப் புஷ்பங்கள் இந்தக் கோபகன்யாஸ்திரீகளினுடைய ஸ்தனங்களின் மேற்படுதல், ஸ்ரீ கண்ணபிரானுடைய கரங்கள் இவர்களுடைய ஸ்தனங்களைப் பற்றுதல்போலுமிருந்தது. சில

முகூர்த்தகாலஞ் சென்றபின்பு தங்கள் இருதயங்களைத் திடஞ் செய்துக்கொண்டு, யாவருந் துணிந்து, அவனிட்ட வழக் காய் ஸ்ரீ பகவானிடத்தில் வைத்தமனமுடையவர்களாய் மெதுநடையாய் புன்சிரிப்புடன் தீர்த்த பிரவாகத்தினின்றும் வெளியில் வந்து, வெட்கமில்லாதவர்களாய், அவதூதாசிரமி களைப்போல நிஷ்களங்கமான மனதுடையவர்களாய் நின் ருர்கள். இப்படி நிற்கின்ற இந்த கோபஸ்திரீகள் தங்களை ஒருவர்க்கொருவர் பார்த்துக்கொள்ளும்போது. வஸ்திர ஈன மாயிருக்கின்றேமே யென்கிற நினைப்பும், லஜ்ஜையும் தோன்றுகின்றதே யல்லாமல், மற்றையோர்களுக்கு வஸ்திர பூஷணுலங்காரத்துடனிருந்து, வார்த்தை சொல்லிக்கொண் டிருக்கிறதாய்க் காணும்படி, தமது கிருபாபிமான வஸ்திரங் களை இவர்களெல்லாருக்குங்கொடுத்து, இவர்களைப் பார்த்து ஸ்ரீ பகவானுனவர் மகோத்தம தர்ம யுக்தமான சில வார்த்தை களைச் சொல்லுகின்ருர்.

வாருங்கள் விரதசீலைகளான சுந்தராவதிகளே! நான் இந்த ஸ்ரீ நந்தவ்ராஜத்தில் ஆவிர்ப்பவித்த நாள் முதல் உங் களுடன் விருத்தியடைந்து கொண்டிருக்கின்றேன். இதுவு மன்றி எனது நிசாம்சத்தாலும் உங்களுடைய சம்பந்தத் தாலும் உங்களுள்ளும் புறம்புமாக வியாபித்துக்கொண்டிருக் கின்றேன். உங்களிடத்தில் நானறியாத தர்மங்களுண்டோ? உங்கள் மனேவாக்குக் காய முதலிய சரீர குண தர்மங்களுக்கு நான் அன்யனே? ஆகையால் நீங்கள் நன்ருயோசித்துப் பாருங்கள். என் விஷயத்தில் நாணிக் கூசத்தக்க வியவகாரம் எவ்வளவுமில்லை. மேலும் நீங்களியாவரும் விரத நிஷ்டை களில் அன்புடையவர்களாயிருந்து, சாஸ்திரோக்த விதிக்கு வேறுபாடாக வஸ்திர ஈனமாய் இம்மகா புண்யநதியில் இறங்கி ஸ்நானஞ் செய்யத் தகுமோ? ஆதலால் நீங்கள் தெரியாமல் நடந்ததைக் குறித்து பிராயச்சித்தமாக யாவரு மிரண்டு கைகளையு மெடுத்து அஞ்சலி செய்து உங்கள் வஸ்திரங்களை வாங்கி யுடுத்திக்கொள்ளுங்களென்ருர்.

இவ்விதமாகச் சொல்லிய ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வசனங்களைக் கேட்டு, இந்தக் கோபிகா ஸ்திரீகள் யாவரும் பிரணுமஞ்செய்ய வொப்புக்கொண்டு ஸ்வாமியினுடைய ஆக்கினைக்கு வித்யாசம் நேரிடுவதைக் தங்களுக்குள் யோசி யாமல் வந்தனக்கிரமத்தை யுணராமல் ஒரு கையினுல் தங்கள் மர்மாவயங்களை மறைத்து மற்றொரு அஸ்தத்தைச் சேவிக்கத் தக்கதாகக் காட்டினுர்கள். அப்படி கையைக் காட்டிய மாத்

திரத்தில் ஸ்ரீ பகவான் கோபகன்னிகைகளைப் பார்த்து உங்கள் மனோரதங்கள் ஸபலமாகும்படிக்கும் விரதம் பங்கமில்லாமல் நிறைவேறப் பிராயச்சித்தத்தின்பொருட்டுஞ் சேவிக்கச் சொன்னதற்கு இன்னு மதிக குற்றமுண்டாகவே யொரு ஹஸ்த மெடுத்தீர்கள். அப்படி ஒரு கையெடுத்ததனால் ஸ்ரீ பாகவதபசாரமுண்டாகும் இதற்கு விதி யாதொருத்தன் ஸ்ரீ பகவானைத் தரிசனஞ்செய்யும்போது வஸ்திர ஈனனாகியும் அல்லது ஏகவஸ்திரனாகியும் அரையில் வஸ்திரத்தின்மேல் வஸ்திரத்தை யிறுக்கிக் கட்டாதவனாகியும் இருக்கிறானோ அவனுஞ், சிரத்தையற்று ஒருகையைக்காட்டி எவன் வந்தனஞ்செய்கின்றானோ அவனும், மகாபராதியாவர்களென்றும் எவனாவது ஒருவன் ஒருவேளை ஒருகை காட்டி வந்தனஞ் செய்வானாகில் அவனைத் தர்மநிர்ணயம் அந்த ஹஸ்தத்தை அறுக்கும்படி சொல்லி யிருக்கின்றது. நீங்களது தெரியாமல் செய்தீர்கள். ஆதலால், அதிக அபராதிகளான நீங்கள், இந்த அபராதங்களெல்லாம் நிவாரணமாகும் பொருட்டு இரண்டு கரங்களையு முயரவெடுத்துக்கொண்டு சீக்கிரமாகத் தண்டன் சமர்ப்பியுங்களென்று சொன்னார்.

அதைக் கேட்டு தம்மைத் தரிசித்தவர்களுக்கு தானென்கிற அகங்காரம் விடும்படிச்செய்து, ஆட்கொள்ளத்தக்க ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பார்த்து, அவருடைய கடாக்ஷத்தினால் அகங்காரத்தை விட்டவர்களாய், சிறிதும் பற்றில்லாதவர்களுக்கே தமது நிஜஸ்வரூப தரிசனந் தந்தருளத்தக்க ஸ்வாமியைக் குறித்து, இந்தக் கோபகன்னிகைகளும் அந்த ஸ்வாமியினுடைய நியமனப்படியே, பயபக்தி விசுவாசத்துடன் தங்களிரண்டு கரங்களையுஞ் சிரசின்மீது உயர வெடுத்துப், பக்தி பாவசர்களாய் ஸ்ரீ கிருஷ்ணா! சரணமென்று தண்டன் சமர்ப்பித்து ஸ்ரீ பகவானுடைய கிருபாமாத்திர பிரசன்னத்வங்களைப் பெற்று, தங்கள் ஆடைகளையும் வாங்கியுடுத்திக்கொண்டு திருப்தியுள்ள மனமுடையவர்களாய் ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பர்த்தாவென்கிற இச்சையுடையவர்களாய்ச் சலியாமல் நின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் ஸ்ரீ பகவானனவர் வாருங்கள் விரத நிஷ்டைகளை அநுஷ்டித்த மகா லட்சணவதிகளே! நீங்களே சொல்லாவிடினும் உங்கள் மனோரதங்கள் இன்னவையென்று எனக்கு நன்றாய்த் தெரியும் நீங்கள் என்னைப் பர்த்தாவாக வரித்து, எனக்கு அடியார்களாய் எனது சாரூப்பியத்தை யடைந்து, சுகிகளாய்த் தனுகரண போகங்களை

யடைந்து அநந்தவிதவுபசாரகைங்கர்யங்களைச் செய்யவேண்டுமென்று கோரி, விரதத்தை யநுஷ்டித்தீர்கள். ஆகையால் சத்யமாகப் பலகாக்ஷியை இச்சித்து, மகா காமிய தேவதையாகிய அம்பிகா தேவியைக் குறித்து விரத மநுஷ்டித்ததற்குப் போகங்களும், என்னைச் சரணமடைந்ததற்குத் தேகாந்தரத்தில் முக்தியும், உங்களுக்கு ஸபலமாகும். நீங்கள் யாவரும் என்னைத் தியானித்துக்கொண்டு உங்கள்கிருகங்களுக்குச் செல்லுங்கள். இன்றுமுதல் அவரவர்கள் காலாநுகுணமாய் ஏகாந்த சமயங்களில் தியானித்து நினைக்குந்தோறும் நான் பிரசன்னனாய் உங்கள் இஷ்டங்களை திருப்தியடையச் செய்கின்றேனென்று கிருபையாகச் சொல்லி விடைகொடுத்தருளினார்.

அப்போது அந்தக் கோபகன்யா ஸ்திரீகளும் அவ்வண்ணமே மஹத்தாகிய சந்தோஷமுடையவர்களாகி, ஸ்ரீ பகவான் வஸ்திர அபகாரத்தினால் நாணம்விடும்படிச் செய்து பரிகாசமாகப் பேசினது முதலிய செய்கைகள் தங்களுக்கு விரத பங்கமில்லாமல் சிக்ஷபூர்வமாக நிறைவேறச் செய்து தமது மனோபீஷ்டங்களை பரிபாலித்து இரக்ஷிக்கின்றதின் நிமித்தமேயன்றி வேறில்லையென்று நினைத்து, திருப்தியான மனதுடையவர்களாகி, யாவரும் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து ஸ்ரீ பகவானை விட்டுப்பிரிய மனமில்லாதவர்களாய் ஸ்ரீ பகவதாக்ஞையினால் சம்பூர்ண இச்சைகளையடைந்து, அந்த ஸ்ரீ கிருஷ்ணபாதார விந்தங்களைச் சலனமில்லாத பக்தியுடன் தியானஞ் செய்துக்கொண்டு, தங்கள் சர்வேந்திரியங்களும் ஸ்ரீ கிருஷ்ண சௌந்தர்யங்களிற் செல்லத் தங்கள் தங்கள் கிருகங்களுக்கு வந்துசேர்ந்தார்கள்.

பிறகு ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் முன்போலவே தமது இஷ்டஜனங்களாகிய கோபாலர்களுடன் கூடி, இவ்வுபவனத்தைக்கடந்து சென்று, வெகுதூரத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ பலராமரிடத்திற் சேர்ந்து அவருடனே அந்தப் பிருந்தாவன தூரப்பிரதேசங்களிற் பிரவேசித்து, பசுக்கூட்டங்களை மேய்த்துக்கொண்டு சந்தோஷமாய் விளையாடினார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் ஹே ராஜபுருஷ சிரேஷ்டனே! சகல லோக சிகாமணியாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமது துணைவர்களாகிய கோபாலர்களுடன் புண்ய வசனங்களைப் பேசி-

கொண்டு சந்தோஷ சித்தராய், இலை கனி முதலியவைகளால் விருத்தியடைந்திருக்கின்ற விருக்ஷங்களின் நிழலில் சஞ்சரித்துக்கொண்டு யமுனா நதிதீரத்தில் சகல கோபால கோகண சமேதராய் வந்து சேர்ந்தார். ஸ்ரீ பலராமகிருஷ்ண சகிதர்களான இந்தக் கோபாலர்கள் அந்த யமுனாநதியில் பிரவாகிக்கின்ற நிர்மலமாகியும் அதி சீதளமாகியு மிருக்கின்ற தீர்த்தத்தைப் பசுக்கூட்டங்களுக்குப் பானஞ்செய்வித்துத் தாங்களு மதிலிறங்கி மிகவுஞ் சந்தோஷத்துடன் ஸ்ரம நிவாரணமாகக் குளித்துத் தாபந் தீரத் தீர்த்தபானஞ்செய்து, அந்த நதியின் சமீபத்தில் ஒரு குளிர்ந்த தோப்பில் பசுக்களை மேய விட்டு எல்லா கோபாலர்களும் பசியினால் பீடித்தவர்களாய், அவ்விருக்ஷங்களின் நிழல்களில் சஞ்சரித்து, ஓரிடத்தில் சுகாசனர்களா யிருக்கின்ற ஸ்ரீ பலராமகிருஷ்ண மூர்த்திகளைப் பார்த்து மகா வீர்யதேஜோ ஜயசாலிகளான ஸ்ரீ பலராமகிருஷ்ணர்களே ! நாங்கள் மிகவும்பசித்திருக்கின்றோம். எங்கள் பசிக்குச் சாந்தஞ்செய்து ரக்ஷிக்கக்கடவீர்கள் என்று பிரார்த்தித்தமாத்திரத்தில், ஜகதீஸ்வராகிய ஸ்ரீ பகவானானவர் கம்ஸ மகாராஜனுக்குப் பயந்து குடும்ப சமேதர்களாய் அந்தப் பிருந்தாவனத்தினொரு சார்பில் வந்து வானப்பிரஸ்தாசிரமிகளைப் போல வாசஞ் செய்துகொண்டு, சொர்க்க விச்சையுள்ளவர்களாகி நல்ல கர்மங்களை வேதோக்த கிரமமாகவும் ரகசியமாகவும் செய்துக்கொண்டிருக்கின்ற பிராஹ்மணர்களினுடைய பத்னீ சமூகங்கள் தம்மிடத்தில் வைத்திருக்கிற பக்தி யதிசயங்களைக் குறித்துத் தாம்பிரசன்னராய், அவர்கள் இஷ்டங்களை திருப்தியடையச்செய்ய மனமுவந்து அந்தக் கோபாலர்களைப் பார்த்து சொல்லுகின்றார்.

வாருங்கள் கோபாலர்களே ! இப்போது நாம் வாசஞ் செய்கின்ற வனத்திற்குச் சமீபத்தில் பிரம்ம நிஷ்டர்களாகிய பிராமணோத்தம ஜனங்கள் ஸ்வர்க்கத்தை விரும்பி ஆங்கிரஸ ஸத்ர யாகத்தைச் செய்துகொண் டிருக்கின்றார்கள். நீங்கள் அந்த யாகசாலைக்குச் சென்று மிகவும் நாங்கள் பசித்திருக்கின்றோமென்று எங்களிருவருடைய நாமதேயங்களைச் சொல்லி அன்ன முதலியவைகளைக் கேட்டு வாருங்களென்று நியமித்தனுப்பின மாத்திரத்தில் அந்தக்கோபால குமாரர்களும் அதி சீக்கிரத்தில் அந்த யாகசாலைக்குப் போயினார்கள்.



## இருபத்துமூன்ருவது அத்தியாயம்

கோபால குமாரர்கள் யாகசாலைக்குபோய் அன்னம் கேட்டதற்கு பிராமணர்கள் கொடுக்கமுடியாதென்று மறுத்ததை அவர்கள் மனைவிகளினிடம் பகவான் அன்னம் யாசித்ததையுஞ் சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே ! ஸ்ரீ பகவானுடைய ஆக்கினையின் பிரகாரம் கோபால குமாரர்கள் யக்கிய சாலைக்குச் சமீபத்திற்சென்று, அந்தயாக யஜமான்களாகிய பிராமணர்களைக் கண்டு சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்துத் தங்கள் இரண்டு கரங்களையுங் கூப்பி அஞ்சலிசெய்துக்கொண்டு கேளுங்கள் பூசுரோத்தமர்களே ! இதற்குச் சமீபாரண்யத்தில் சாதுசஜ்ஜன தேவ-கோபிராஹ்மணயதார்த்தமாய் அவதரித்திருக்கின்ற ஸ்ரீ பலராமகிருஷ்ணர்கள் வந்திருக்கின்ருர்கள். அவர்கள் பசியினுல் மெலிந்து தங்கள் தாசபூதர்களாகிய உங்களிடத்தில் அன்னம் வாங்கிக்கொண்டு சீக்கிரமாக வரச்சொல்லி நியமித்தனுப்பினுர்கள். ஆதலால், வந்தோம்; நீங்கள் தயைசெய்து எங்களுக்கு அன்னவிரயஞ்செய்து பசியின் பாதையை நிவாரணஞ்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

வாராய் சுசீலனே ! அந்தப் பிராஹ்மணேத்தமர்கள் இந்தக் கோபாலர்களையும் ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களையும், சாமான்ய புருஷர்களாகவே யோசித்தார்களல்லது, இவர்கள் செய்கின்ற ஸ்வர்க்க காம்யங்களாகிய ஆங்கீரச சத்ர யாகத்திற்கு அதிதேவதைகளென்றும், சர்வ யாகஸ்வரூபிகளாய்க் கர்த்தா போக்த்தாக்களாகிய ஸ்ரீ ஜகதீசுவராம்சர்களென்றும், தங்கள் பூர்வஜன்ம கர்மவசத்தால் மனதிற்ருேற்ருமல் கர்மாபிமானங்களையும் தேஹாபிமானங்களையும் வகித்து. அலக்ஷியமாக விருந்தார்கள். இப்படியாக விருக்கின்றவர்களுடைய நினைப்பை யறிந்து கோபாலர்கள் மீண்டு ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களிடம் வந்து, அவர்களைப் பார்த்து திவ்ய புருஷர்களே யக்கிய சொரூபிகளென்றும், யக்கிய பலத்தைக் கொடுக்கின்ற சர்வேஸ்வராம்ச ஸம்பூதர்களென்றும் உங்களை யறிந்து கொள்ளாமல் கிரியாசூன்யர்களாய் நாங்கள் கேட்டதற்கு உண்டென்று மில்லையென்றுஞ் சொல்லாமலிருந்தார்களென்று சொன்னுர்கள்.

இவ்விருத்தாந்தத்தைக் கேட்ட ஸ்ரீ பகவான் நகைத்துக் கேளுங்கள் கோபாலர்களே ! நீங்கள் என் விஷயத்தில்

அவர்களைக் குற்றமுள்ளவர்களாக நினைக்கவேண்டாம். இப பொழுது மறுபடியும் நீங்கள் அந்தப் பிராஹ்மணர்களுக் குரிய பத்நிகளிடம் சென்று அவர்களுடன் எங்களிருவர் நாமதேயங்களையுஞ் சொல்லி அன்னத்தைக் கேளுங்களென்று சொன்னார். கோபாலர்களும் அந்தப் பிரகாரமே அந்தப் பிராஹ்மண ஸ்திரீகளை அடைந்து மிகவும் பயபக்தி விசுவாசத்துடன் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து "ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திகள் சமீப வனத்தில் வந்திருக் கின்றார்கள். உங்களிடத்தில் அன்னம் கேட்கச் சொன்னார் கள்" என்றனர்.

அந்த விரதங்களைகளாகிய பிராஹ்மண ஸ்திரீகள் ஸ்ரீ கிருஷ்ண பகவான் வந்திருக்கின்றாரென்று கேட்டதும் சரீராபிமானங்களை விட்டுச் சர்வமங்களகா அலங்கார பூஷிதர்களாய், ஸ்ரீ கிருஷ்ணகுண கீர்த்தனங்களால் மனோ லயமடைந்து ஆனந்த பரவசர்களாய்ச் சமையல் செய்து பாகமாயிருக்கின்ற அடிசில்களையும் நானாவித ருசிரான்னங் களையும், கந்தமூல பல வர்க்கங்களையும், மிகவுந் திவ்ய பரிமள புஷ்ப மாலைகளையும், பரிசுத்தமான பாத்திரங்களில் கிரமக் கிரமமாய் வெகு பத்திரமாய் வைத்துக்கொண்டு கூட்டங் கூட்டமாகப் புறப்பட்டு நதிகள் எவ்வளவு தடை நேரிட்டபோதிலும் நிற்காமல் வேகமாய்ச் சமுத்திரத்தை யடைவதுபோல ஸ்ரீ ஹரிகுண கீர்த்தனங்களைச் செய்து கொண்டு புரப்பட்டனர். அந்தப் புண்ணியவதிகளின் கணவர் முதலிய பந்துஜனங்கள் பார்த்து, நீங்களெங்களை நிராகரித்து தர்மவிரோதமாய் இப்படிப் புறப்படுகிறது தகுதி யல்லவென்று பலவிதமாய் நீதிமொழிகளைச் சொல்லியும் நிஷ்டூர வசனங்களைப் பேசியும் கோபதாபங்களைக் காட்டியும் மறுத்தார்கள், அப்போது அந்தப் பிராம்மண மாதர்கள் அவர்களைப் பார்த்து நீங்கள் அந்த பலராம கிருஷ்ணர்கள் பகவதம்ச சிரேஷ்டர்களென்றும் அவர்களைச் சூழ்ந்திருக் கின்ற அந்தக் கோபாலர்களெல்லாம் சகல தேவதாம்ச சம்பூதர்களென்றும் அறிந்திருந்தும் எங்களை ஏன் தடுக் கின்றீர்கள்? அவர்கள் இப்படிப்பட்டவர்களென்பதை மறந்து போனீர்களோ? பூர்வ வினையின் விதிவசப்படி நீங்கள் அவர்களுடைய மகிமைகளை யறியாமல் பேசுவீர்க ளாகிலும் எங்களுக்கு அவர்களது தன்மை யின்னதென்று நன்கு விளங்குவதால் நாங்கள் அவர்கள் சந்நிதானத்தை யடையாமல் இருக்கமுடியவில்லை; தயவுகூர்ந்து தடை செய்யாதீர் என வேண்டிக்கொண்டு நடந்தார்கள்.

பின் அப்பெண்கள் யமுனா நதியை யணுகி அவ்விடத்திற் கோவினங்களை மேய்த்துக்கொண்டு அநேக கோபாலர்கள் சூழ்ந்திருக்க ஒரு அசோக விருக்ஷ நிழலின்கீழ் ஒரு நிர்மல ஸ்தலத்தில் ஸ்ரீ பலராம சகிதராயிருக்கிற’ சகல புவன மோகனாகாரரான ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தங்கள் கலிதீரக் கண்டு களித்து ஆனந்தப் பரவசமடைந்தவர்களாய், தாங்கள் கொண்டுவந்தவைகளை ஸ்ரீ பகவத் சந்நிதியில் சமர்ப்பித்து சேவித்து நின்றார்கள்.

வாராய் பரீக்ஷித்து மகாராஜனே! தயா நிதியாயும், சர்வ சாக்ஷி பூதராகியும் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ பகவான் தம்மைத் தரிசனஞ்செய்து கடைத்தேற வேண்டுமென்றெண்ணிய இந்தப் பதிவிரதா ரத்நங்களினுடைய முகாரவிந்தங்களைத் தமது பரம கிருபாகடாக்ஷ வீக்ஷண்யத்தினால் பார்த்து புன்னகையுடன் சொல்லுகின்றார்: வாருங்கள் பிராம்மணோத்தம பத்நிகளே! நீங்க ளியாவரும் குடும்ப சமேதர்களாய் பந்துக்களுடன் க்ஷேமமா யிருக்கின்றீர்களா? உங்கள் கிருகங்கள் நித்ய கல்யாண மங்களகரமாக ஸ்ரீ ஹரியினது கிருபா கடாக்ஷத்தால் விளங்குகின்றனவா? இப்பொழுது என்னைத் தரிசிக்கவந்த உங்களைக் கண்டவுடனே எனக்கு பிரம்மாநந்த திருப்தியுண்டாயிற்று. இன்னமும் என்னால் உங்களுக்கு வேண்டிய சதுர்வித புருஷார்த்தங்களையும் தருகின்றேன். நீங்கள் என்னைத் தரிசிக்க விரும்பி வந்தீர்களாகையால் எனது தரிசனம் உங்களுக்குப் பரம தர்மமேயாகும். இவ்வுலகில் தீரபுருஷர்கள் சகல சராசர பிரபஞ்சங்களுக்கு அந்தராத்மாவாகியும், சர்வசாக்ஷியாகியும், சர்வப் பிரியனாகியு மிருக்கின்ற என்னிடத்தில், பலாபேக்ஷையில்லாதவர்களாய்த் தங்களுடைய ஆத்மஹித பரமபுருஷார்த்தங்களைக் குறித்து என்னை அடுக்கின்றார்கள். அவர்களைப்போல நீங்களும் ஸ்ரீ பகவத்பக்தி பரவசர்களாய், பிரகிருதி சம்பந்தமாகிய மாதா பிதா முதலிய சர்வ சம்பந்தங்களையும் என்பொருட்டு நிராகரித்து என்னைத் தரிசனஞ் செய்ய வந்தீர்கள். நீங்கள் யாதொரு குறைவுமின்றிச் சதுர்வித புருஷார்த்தங்களையும் சாக்ஷாத்காரமா யநுபவிக்கக் கடவீர்கள். பதிவிரதைகளே! மிகவும் மேன்மையுள்ள நீங்கள் உங்கள் பர்த்தாக்களைச் சேர்ந்து, நீங்கள் நடத்தி வருகின்ற யக்கியத்தை நிறைவேற்றக் கடவீர்கள் என்றனர்.

பிராமணப்பத்நிகள் வாக்கியம்

இப்படி பகவான் அருள் சுரந்து மொழிந்ததைக் கேட்டு பிராம்மண பத்நிகள் சொல்லுகின்றார்கள். வாரீர் ஸ்ரீ புரு

ஷோத்தமராகிய மகா பிரபுவே! நீரிப்படிக்கு நியமிக்கின்றது தர்மமோ? வேதபுருஷனைவர் தமது இருதயமாகிய வேதாந்த சூத்திரங்களில் ஸ்ரீ ஹரியை ஆஸ்ரயித்தவர்களுக்கு பிரகிருதி சம்பந்த பாசபந்தங்க ளுண்டாகின்றதில்லை யென்றும், இவர்கள் ஸ்திரமில்லாமலும் அற்பமாயுமிருக்கின்ற அபேக்ஷைகளை யடைகின்றதில்லையென்றும், ஸ்ரீ பகவத் சன பிரகாரத்திற்கு பிரதிக்ஞை செய்து, சொல்லியிருக்கின்றீரே; அந்த பிரதிக்ஞையைச் சத்தியமாகச் செய்யக்கடவீர். நாங்கள் உமது சரணாரவிந்தங்களில் அர்ச்சித்த திவ்ய சுகந்த புஷ்பங்களுடன் கூடிய திருத்துழாய் மாலையினை எங்கள் கேசங்களில் தரிப்பதற்குச் சமஸ்த பந்து பந்தங்களையும் ஒழித்து, உமது திருவடித் தாமரைகளைச் சரணமாக வடைந்தோமே. எங்களை மறுபடியும் நாங்கள் விட்டு வந்த பூர்வாஸ்ரமத்தை யாஸ்ரயித்து வாழச்சொல்வது தர்மமோ? எமது நாயகர்கள் எங்களை யங்கீகரிப்பார்களோ? வாரீர் பாப விமோசனஞ் செய்கிற கடவுளே! உமது பாதார விந்தங்களுக் கெம்மை யாட்படும்படி அனுக்கிரகம் புரியவேண்டுமென வேண்டி நின்றனர்.

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்

அப்புனித மாதர்களை கண்ணன் கருணையாய்ப் பார்த்து "மகா சுகிர்தவதிகளே! உங்களுடைய பதிகளும், மாதா பிதா பிராதா முதலிய சகல பந்துக்களும் உங்களுடைய பக்தி யதிசயத்தினால் எனதநுக்கிரகத்தை பெற்றுக்கொண்டு அன்னிய விஷயத்தில் பக்தி குறைந்தவர்களாய், ஸ்ரீ பகவத் பக்தி யதிகரித்து இப்போது வியாகுலப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள். அவர்களுக்கு பரமோபகாரிகளாகிய நீங்கள் எனதாக்ஞாப்ரகாரம் செல்வீர்களானால் உங்களைப் பார்த்ததும் அதிக சந்தோஷ பரிதர்களாய், அங்கீகரித்துத் திருப்தியடைவார்கள். மேலும் உங்களியாவருக்கும் நிகில புண்ய லோகங்களினுடைய சாம்ராஜ்யங்களும் என்னால் அநுக்கிரகிக்கப்பட்டிருக்கின்றன. சகல தேவர்களும் உங்களை ஸ்துதிசெய்து சிலாகிக்கப் போகின்றார்கள். மேலும் இவையன்றி இவ்வுலகில் ஜனிக்கின்ற உத்தம ஜன்மிகளுக்குச் சர்வ சௌக்யாதி க்ஷேமங்களைப் பெற்றுக்கொள்ளுவதற்குத் தேகசம்பந்தமும் தேகானு பந்திகளுடைய கூட்டுறவும் இத்தேகத்தில் ருசியும் காரணங்களல்ல. அவரவர்கள் பரிசுத்தமான மனதை ஈஸ்வரனிடத்தில் வைப்பதே சர்வ சௌக்கியங்களையும் பெற்றுக்கொள்ளுவதற்குக் காரணமாக விருக்கின்றது. ஆகையால் நீங்களும் உங்கள் சர்வேந்திரியங்க

ளோடுங்கூடிய பரிசுத்த மனதை எனக்குச் சமர்ப்பித்துக் கொண்டு, சர்வோத்தம சௌக்கியங்களை அனுபவித்துச் சீக்கிரமாக என்னையே யடையப்போகின்றீர்கள். நீங்கள் உங்கள் கிருகங்களுக்குச் செல்லுங்களென்றார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

நெறியிற் சிறந்த நீர்மையனே! இந்தப் பிரகாரம் ஸ்ரீபகவானுடைய பரம கிருபாதிசயங்களை யடைந்த இந்தப் பதிவிரதைகள், ஸ்ரீ பகவானை மனதில் திடமாகத் தியானித்து பிரம்மாநந்த பரிதர்களாய் தமது இல்லங்களை யடைந்தனர். அப்பொழுது அந்தப் பிராமணர்கள் இவர்களைப் பார்த்து, மிகவும் சந்தோஷ சித்தர்களாய், இவர்களை ஆதரவுடன் வரவழைத்து உபசரித்துக் கூடவைத்துக்கொண்டு யாகத்தை நிறைவேற்றினார்கள். இந்தப் பிராம்மணோத்தம பத்நிகளில் ஒரு மகாநுபாவையானவள் ஸ்ரீ கிருஷ்ண பக்தியினால் ஸ்ரீபகவானை பிரிய மனமில்லாமல் ஆ கிருஷ்ணா! ஸ்ரீ ஜனார்த்தனா! எனும் இத்தியாதி நாமங்களைத் தவிர வேறு புருஷார்த்தங்களை மனதில் நினையாமல் பிரகிருதி சம்பந்தமாகிய மாதா-பிதா-பிராத்ரு-பர்த்தா முதலிய பந்துஜனங்களைத் துறந்தவளாய் விளங்கினாள். அந்தப் புண்யவதியைப் பார்த்து அவளுடைய பர்த்தாவாகிய புருஷ சிரேஷ்டரானவர் கிருகஸ்தா சிரமத்தை வெறுத்தன ளென்றுணர்ந்து அம்மகா பத்நியைத் தாமும் நிவர்த்தித்தார். அப்போதந்த புண்ய ஸ்திரீயானவள் சார்வதா ஸ்ரீ பகவானைத் தியானித்து யோகாக்நியினாலிந்தக் கர்மதேகத்தை விட்டு ஸ்ரீ பகவத் வாக்யப்பிரகாரம் ஸ்ரீ யோகீஸ்வரேஸ்வரருடைய லோகத்தையடைந்தாள். சர்வஜகத் பிரபுவாகியும், ஷட்குணைசுவரிய சம்பன்னராகியும், பரமதேஜோ நிதியாகியு மிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர், அந்தப் பிராம்மணோத்தம பத்னிகள் சமர்ப்பித்த ருசிரான்ன பானவகைகளை கோபாலர்களுடன் ஸ்ரீ பலராம சகிதராயிருந்து மிகவும் சந்தோஷமாகப் புசித்து திருப்தராயினார். அத்தருணத்தில் அந்த மகா பதிவிரதைகளினுடைய பர்த்தாக்களான பிராஹ்மணர்கள் யாவருமொன்றாகச்சேர்ந்து தங்களுக்குள் சிந்திக்கலாயினர்.

வைதிகோத்தமர்களே! விசுவேசுவரர்களாகி இந்தச் சர்வப்பிரபஞ்சங்களு முய்யும்படித் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீ பலராம கிருஷ்ணமூர்த்திகள் யாதுகாரணத்தினாலேயோ ஏககாலத்தில் நாமெல்லாருங் கடைத்தேறும்படி கிருபை செய்து, மிகுந்த பிரீதியுடன் அன்னத்தை யபேக்ஷித்து,

நமது யக்ஞ சாலையைக் குறித்துக் கோபாலர்களை யனுப்பி ஞர்கள் நாம் நமது ஸ்வபாவ குணகர்மத்திஞல் அவர்களை மறுத்து நாஸ்தீக தர்மத்தை வஹித்துப் புத்திமந்தர்களாய் ஸ்ரீ பகவதபசாரத்திற்குப் பாத்திரர்களாய் விட்டோம். ஓ அந்தணர்களே! மஹா சாஸ்திரத்திஞ லுண்டாயிருக்கிற கியாஞதிகார மில்லாத நம்முடைய ஸதிரீ ஜனங்களாகிய புண்யாங்கனைகளுக்கு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியினிடத்தில் நிஷ்காரணமாய் லபித்த ஸ்ரீ பகவத்பக்தியைக் குறித்து யோசிக்குமிடத்தில் மிகுந்த ஆச்சரியகரமா யிருக்கின்றது. நமக்கிப்படிப்பட்ட பரமோத்தம பக்தி ஜனியாமற் போயிற்றே. நம்முடைய ஜன்மங்களைக் குறித்தும் ஆத்மாவைக் குறித்தும் நாம் தாபத்தை யடைந்து நம்மை நாமே வெறுத்து நிந்தித்துக்கொள்ள வேண்டுமே யல்லாமல் வேறில்லை.

ஹே பிரியர்களே! ஸ்ரீ ஜகதீசுவராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தில் உத்தம பக்தி ஜனியாவிடில், நமது பிராமணுேத்தம ஜன்மங்களும், நல்லொழுக்கமுள்ள விரதங்களும், சர்வ சாஸ்திரங்களிஞ லுண்டான கியானமும், மூன்று வர்ணங்களுக்கும் சிரேஷ்டமாகிய வர்ணுதிகாரமுள்ள குல தர்மமும், இவைகளுக்குரிய சத்கர்மங்களும், இந்தக் கர்ம தர்மங்களை நன்ருயறிந்தநுஷ்டிக்கும் விவேகங்களும், இவை முதலிய சர்வ குணங்களு மிருந்தபோதிலும் வியர்த்தமேயா மல்லவோ? ஸ்ரீ பகவானுடைய திவ்ய மாயையானது மகா யோகீந்திரர்களுக்கும் தபஸ் ஸம்பன்னர்களாகிய ரிஷிகளுக்கும் ஜயிக்க வரியது.

பண்டிதர்களே! ஸ்ரீ ஜகத்குரு சிகாமணியாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தில் இந்த மகா பதிவிருதைகளுக்கு அரிய பக்தி ஜனித்து திடச்சித்தங்களுண்டாகித் தன்யர்களாய் விளங்குகின்ருர்கள். இப்படி யாவர்களுக்கும் ஜனித்தது ஸ்ரீ பகவத் பரம கிருபாதிசயமன்ரே. சகல உத்தம தர்மங்களும் தமக்கு ரூபங்களாக விளங்கும் ஸ்ரீ பகவான் யாவரோ அவரே இப்பிரபஞ்சத்தில் மகா பரிசுத்த மாகிய யதுகுலத்தில் அவதாரஞ் செய்தனரென்று நாம் அறிந்திருக்கின்ரேம். அப்படி யிருந்தும், நமது பிராகிருத கர்ம வசத்திஞல் மறைக்கப்பட்டு அறியாமற் போனே மன்ரே? இந்தச் சமஸ்தமான பிரபஞ்சங்களையும் தமது யோகமாயாப் பிரபாவத்திஞல் சிருஷ்டித்தும், இரக்ஷித்தும், ஸம்ஹரித்தும், மோஹிக்க செய்கின்ற ஸ்ரீ பகவானுடைய அநந்த கல்யாண குணுதிசய சாதுர்யங்களை அல்ப அறிவினராகிய நாமென்ன வறியப்போகிரே

மென்று சிந்தித்து கிருஷ்ணபகவானுக்கு அநந்த பிரணமங்களைச் செய்து பலவிதமாக பிரார்த்தித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ண பகவானைச் சாக்ஷாத்காரமாகத் தரிசனஞ்செய்து வரவேண்டுமென்று அவர்கள் உத்தேசித்தும் கம்ச ராஜாவினுடைய பயத்தை நினைந்து இன்னமொரு சமயத்தில் தரிசனஞ் செய்து க்ஷமிக்கும்படி வேண்டிக்கொள்ளுவோமென்றெண்ணித் தத்தமது யதாஸ்தானங்களை யடைந்தார்கள்.



## இருபத்துநான்காவது அத்தியாயம்



*இந்திர யாகத்திற்குப் பதிலாக ஸ்ரீ கோவர்த்தன பர்வதத்தை பூசித்துப் பர்வத யாகஞ் செய்யும்படி பகவான் பணித்தாரென்று சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

அன்பிற் சிறந்த ஐவர்குலத் தோன்றலே! ஒருநாள் நந்தகோபர் உபநந்தர் முதலாகிய கோபால பிரபுக்கள் யாவருமொன்ருகச் சேர்ந்து, வருஷாவருஷம் கிரமமாய் நடத்திக் கொண்டுவந்த மகேந்திர யாகத்தை அவ்வருஷத்திலும் செய்யும்படி ஆலோசித்துக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்திற்கு வந்து, மஹேந்திர யாகத்தை யெப்போது செய்யலாமென்று கேட்டார்கள். அப்படிக்கேட்ட நந்த கோபர் முதலியவர்களுடைய மனோ அபிப்பிராயங்கள் தமக்கு நன்ருய்த் தெரிந்திருந்த போதிலும் ஒன்றும் தெரியாதவரைப்போல மிகுந்த வினயத்துடன் தண்டன் சமர்ப்பித்து பிதாவைப் பார்த்து கேட்கின்ருர்.

ஸ்ரீ பகவந் வாக்கியம்

எனது அன்பின் மிக்க பிதாவே! நீங்கள் என்ன பலாபேட்சையைக் குறித்து இந்தக் கர்மங்களை நடத்தி வருகின்றீர்கள்? அந்த யாகத்திற்குப் பிரதானமாகிய அதிதேவதை யார்? அதற்கு வேண்டுந் திரவியங்கள்யாவை? இந்த யாகத்தைத் தொடங்கி நிறைவேற்றும் வரையிலும் அதைச் செய்யும் படியான அதிகாரிகள் எப்படி யிருக்க வேண்டும்? அந்த யாகம் யாவரைக்கொண்டு செய்விக்கத் தக்கது? என்று வினவினுர். நந்தகோபர் மனமகிழ்ந்து ஸ்வாமியைப் பார்த்துச் சொல்லுகின்ருர்.

ஸ்ரீ நந்தகோபர் வாக்கியம்

வாராய் எங்கள் இஷ்டங்களைத் திருப்தியடையச் செய்யும்படி யாவிர்ப்பவித்த எங்களன்புக்குரிய குழந்தாய்! இவ்

வுலகத்திற்கு மழையை ஏவத்தக்கினவனாகிய இந்திர பகவானவர் பர்வஜன்ய ரூபத்தை வகித்து ஸ்ரீ ஹரியினுடைய சங்கல்பத்தினால் ஸப்த மேகங்களுக்கும் அதிபதியாகியும் மேகவாகனராகியும் மேகஸ்வரூபராகியும் விளங்குகின்றார். அவருடைய ஆக்ஞையினாலேதான் இந்த மேகங்கள் சகல பிரபஞ்சங்களிலுமுள்ள தேவமனுஷ்யாதி சர்வசேதனாசேதன சமூகங்களுக்கும் சர்வ ஜீவாதாரமாகியும் ஜீவனஸ்தானமாகியும் இருக்கிற சலத்தை பெய்துக்கொண்டு வருகின்றன. அதனால் இவ்வுலகத்தி லிருக்கின்ற சகல மகாசனங்களுக்கும் சர்வமேக சமூகங்களுக்கும் பிரபுவாகியும் ஈசுவரனாகியும் மூவுலகத்திற்கும் ரக்ஷகனாகியும் விளங்கிக்கொண்டிருக்கின்ற அந்த இந்திர பகவானைக் குறித்து வருஷந்தோறும் ஒருநாளை ஏற்படுத்திக் கொண்டு அந்த நாளில் பரிசுத்தர்களாயிருந்து சிரத்தையோடும் அவராலிவ்வுலகத்தில் வருஷிக்கப்பட்ட அந்த வருஷ ஜலப்பிரவாகத்தினால் விருத்தியடைந்து சித்தியாநின்ற திரவியங்களைக் கொண்டு இந்த இந்திரயாகத்தை நடத்தி அவர் திருப்தியடையும்படி பூசிக்கின்றார்கள்.

ஆச்சரிய குணாதிசயமுள்ள எங்களருமைப் புத்திரனே! இப்படி இந்திர பகவானைப் பூசித்தவர்கள் அவருடைய அநுக்கிரகத்தினால் நானாவித சம்பத்கரமாகிய திரவியங்களைப் பெற்று சர்வ தர்ம கர்மங்களுக்கும் காரணமாகிய தானதர்ம முதலிய புண்ய கர்மங்களைச் செய்து இவ்வுலகில் சரீரயோக்யாதி அநந்த போகபாக்கியங்களை யநுபவித்துக்கொண்டு அவரவர்கள் சரீரங்களில் பலசத்வ புருஷத்வ தேஜஸ்ங்களுண்டாய் விருத்தியடைகின்றார்கள். மேலும் அந்தப் பர்ஜன்ய ரூபியாகிய இந்திரர் இன்னமும் அநந்த சௌக்கிய பலன்களை யநுக்கிரகஞ் செய்கின்றார். அதனால் இந்த நந்தவ்ரஜத்திலுள்ள கோபால சமூகங்களோடு நாமும் வருஷந்தோறும் அந்த இந்திர யாகத்தை நடத்திக்கொண்டு வருகிறோம். காமாதி யரிஷ்டவர்க்கத் தோஷக்குணங்களினால் மதித்தவர்களாய் மகாலோபிகளா யிப்படிப்பட்ட சத்கர்மங்களை விட்டு விடுபவர்கள் ஒருக்காலும் க்ஷேமங்களை யடைய மாட்டார்களென்று சொன்னார்.

வாராய் கலிபுருஷ சிக்ஷனாகிய புண்யசீலனே! சர்வ யக்ஞஸ்வரூபியாகியும் சர்வ யக்ஞாதிபதியாகியும் விளங்குகின்ற ஸ்ரீ கிருஷ்ணர் தாம் சர்வக்ஞ பரிபூரணராயிருந்தும், லீலாமானுஷ விக்கிரக சௌலப்யராகி யிருப்பதால் லோகமர்யாதாக் கிரமமாகவும், தமது பரமகிருபாதிசய லீலையின்

பொருட்டாகவும், இந்த யாகதர்ம கர்மத்தைச் சாங்கோபாங்கமாகப் பலசுருதியுடன் கேட்டருளி, அலர்ந்த தாமரைக் கொப்பான முகமுடையவராய்த் தமது கிருபையாகிற பார்வையினால் நந்தகோபரை நோக்கி மகா கம்பீரமாக சொல்லுகின்றார்:

ஸ்ரீ பகவான் வாக்கியம்

எனதன்புள்ள பிதாவே! சர்வ பிரபஞ்சங்களும், சராசராத்மக ஜன்மிகளாகிய சகல பிராணிகளும், ஸ்ரீயப்பதியினுடைய ஸங்கல்ப லேசமாத்திரம் ஆக்ஞா நிரூபக அனுதிமாயா நிர்மிதமாகவிருக்கின்றன. அவ் வாத்மாக்களெல்லாம் சர்வாத்ம வஷ்யப் பிராப்த ஆகாம்ய ஸஞ்சித நாமாங்கித பழவினைகளுக்கீடாய் ஜன்மங்களை யடைந்து அந்த ஜன்மங்களில் சம்பாதித்த கர்மங்களின் பரிபாகத்தின்படி உத்தரோத்தர ஜன்மங்களை வகித்து அந்தக் கர்மத்தின் பிரபாவத்தினாலேயே நானாவித சுகானுபவங்களையும், துக்கங்களையும், பயங்களையும், நிர்ப்பயங்களையும், க்ஷேமாதிசயங்களையும், மரணாவஸ்தைகளையும், முக்யமாக அநுபவித்துக் கொண்டிருக்கின்றன. அவ் வாத்மாக்களுடைய சுகிர்த கர்மங்களே சுக துக்காத்மக பலபிரதங்களாயிருக்குமானால் இந்திரன் முதலிய லோகபாலர்கள் எத்தகையரானபோதிலும் பலன்களைக் கொடுத்து க்ஷேமங்களைப் பெற்றுக் கொள்ள மாட்டுவார்களோ? ஆகையால் யோசிக்கு மிடத்தில் பிரபஞ்சத்தில் தங்கள் தங்கள் கர்மங்களையே முக்கியமாகச் செய்து கொண்டிருக்கின்ற சர்வ பிராணிகளுக்குப் இந்த இந்திரனாலே யாக வேண்டிய முக்கிய காரணங்க ளென்னவிருக்கின்றன? இந்திரன் முதலிய பலன் கொடுக்கிற தேவதைகளுக்கும் தங்கள் இஷ்டப் பிரகாரம் ஒருவருக்கும் மேலாகிய பலன்களைக் கொடுத்து இரக்ஷிக்கும்படியான சக்தி கிடையாது.

எனது அன்பிற்குரிய தந்தையே! சகலப் பிராணிகளும் ஜன்மாந்தர கர்மங்களுக்கு வசியப் பட்டனவாய்ப் பரதந்திரங்களை வகித்து அந்தக் கர்மங்களுக்கு அநுகுணமாகிய தேவாசுர மனுஷ்ய பசு பக்ஷி கீடாதி ஜன்மங்களை யடைந்து அக்கர்ம பாசபந்தத்வத்தைக் கொண்டு, சரீரங்களில் நானாவித குணங்களை வகித்து, அவ்வளவு சுகதுக்கங்களை யநுபவித்து, அந்தந்தக் கர்மங்களுக்குத் தகுமான தேவதைகளுக்காட்பட்டு, அவைகளுக் கீடான கர்மங்களைச்செய்து, அதற்குத் தகுந்த கதிகளையடைந்து, மறுபடியும் அக் கர்மங்களுக் கீடான ஜன்மங்களை வகிக்குமென்பதற் கெவ்வளவுஞ் சந்தேகமில்லை. எனதன்புள்ள பிதாவே! சகல ஜனங்களுக்கும் அவ

ரவர்கள் அநந்த ஜன்மங்களில் சம்பாதித்த கர்ம பலன்களே முக்கிய தெய்வாகாரங்களாக விளங்கிக் கொண்டிருக்கின்றன. அந்தக் கர்மங்களுக்கும், கர்மாதி தேவதைகளுக்கும், கர்ம பலன்களுக்கும் சர்வ காரணனாகியும், ஸர்வேஸ்வரனாகியு மிருக்கின்ற ஸ்ரீ பகவானையுமிழந்து போகின்றார்கள். அந்த ஜகதீஸ்வரனால் வேதோக்தமாகப் பல பிரதங்களுக்குத் தகுந் தபடி விதித்திருக்கப்பட்ட வைதீகவிதி நியமனமான கர்ம பலாநு குண முக்யதேவதாந்தரங்களையு மிழந்து போகின் றது மல்லாமல், அவைதீகர்களாய்ப் பாஷண்ட தர்ம கர்மங் களை ஆஸ்ரயித்துப் பலன்களைப்பெற்றுச் சுகிக்கின்றார்கள். இவர்கள் நடக்கை சொந்த புருஷனைக் கையறவிட்டு அன்ய புருஷனை யாஸ்ரயித்துச் சுகிக்கின்ற சோர ஸ்திரீகளுடைய நடக்கைக்கொப்பாயிருக்கின்றது. இப்படி சுகிக்கின்றவர்கள், ஜன்ம கர்மாந்திரியங்களில் ஆத்மஹித புருஷார்த்தங்க ளான உத்தம க்ஷேமங்களை யடைய மாட்டார்கள்.

உத்தம தர்மங்களை யுணர்ந்த பிதாவே! ஸ்ரீ பகவா னுடைய ஸத்வ ரஜஸ் தமோ குண தத்வங்கள் சிருஷ்டி ஸ்திதி ஸம்மாராதிசயங்களுக்குக் காரணமாயிருக்கின்றன. சேதனு சேதன பிரபஞ்சங்களும் ஸ்ரீ ஹரியினுடைய ரஜோ குணம்ச தத்வத்தினால் ஜனித்த இச்சா சக்தியை வகித்து ஸ்திரீபுருஷ ஸம்யோகத்தைச் செய்ய, அதனால் இந்தப் பிர பஞ்சத்தவர்களுடைய சந்ததிகள் விளங்குகின்றன. இவர் களின் புண்ய பாவங்களுக்கு அநுகுணமாக அந்த ஸ்ரீ பகவா னுடைய ரஜஸ் ஸத்வ தத்வங்களுக்கு ஜனித்த மேக சமூகங் கள் ஸ்ரீ சர்வேசுராக்ஞையை வகித்து, ரவி சந்திர அங்காரக பார்க்கவாதி கிரகபேதங்களாலும், பர்ஜன்யாதி தேவதா நிய மங்களினாலும், சமுத்திர வன பர்வதங்கள் முதலிய சர்வ பிர தேசங்களிலுந் தகுந்தபடி வருஷித்து, இவ்வுலகத்தை ஜல சமர்த்தி யடையச்செய்து, சர்வப் பிராணிகளுக்கும் ஜீவா தாரமாகிய பலதருண ஸஸ்யாதி நானாவித ருசிவர்க்கங்களை விருத்தி யடையச்செய்து அவரவர்கள் யதேஷ்டபீஷ்ட சித்தி களை யநுபவிக்கும்படி அவரவர்களுக்கு இஷ்டங்களைக் கொடுக்கின்றன. ஆகையால், உலகத்தவர்களுக்கு ஸ்ரீ விஸ்வ புருஷனுடைய ஏகாங்க நிர்மித தத்வாதி தேவதையான இந்த இந்திரபகவானால் ஆகவேண்டிய ஸம்பூர்ண கர்மபல மென்ன விருக்கின்றது? ஒன்றுமில்லையே! அதனால் நமது யோகக்ஷேமங்களைக் குறித்து, இந்த இந்திரபகவானை யபே க்ஷித்து, நாம் அர்ச்சிக்கவேண்டிய அவசியமில்லை. பிதாவே! நாம் ராஜ்யாதிகாரங்களும், பட்டணங்களும், தேசங்களும்,

நகரவாஸங்களுமாகிய யாதொரு நிலையுமில்லாமல் யதேச்சா விகாரிகளாய் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றோம். நாம் எப்போதும் வனங்களிலும் பர்வதச் சார்புகளிலும் நதி தீரங்களிலும் நித்திய வாசஞ்செய்து இப்படிப்பட்ட வனப்பிரதேசங்களில் கோவினங்களைச் சம்ரக்ஷணஞ்செய்து, நினைத்த விடங்களில் ஆயர்பாடியை நிர்மித்துக்கொண்டு, சீவனும்ச சௌக்கியங்களை யநுபவிக்கின்றோம். ஆதலின் முக்கியமாய் கோக்களையும் கோக்களின் அதிதேவதைகளையும், பிராம்மணர்களையும் பிராம்மணருக்கு அதிதேவதையான ஸ்ரீ ஹரியையும், அரண்யங்களையும் அரண்யங்களின் அதிதேவதைகளையும், பர்வதங்களையும் பர்வதங்களின் அதிதேவதைகளையும், நதிகளையும் நதிகளின் அதிதேவதைகளையும் நாம் பூசிக்கவேண்டியது கிரமமாகும்.

விவேக சீலராகிய பிதாவே! இப்பொழுது நீங்கள் யாவரும் இந்த இந்திர யாகத்திற்குச் சம்பாதித்த திரவியங்களைக் கொண்டு, கோ பிராம்மண வன நதீ பர்வதங்களை பூசைசெய்யுங்கள். அந்தப் பூசை செய்யவேண்டிய விபரத்தைச் சொல்லுகின்றேன் கேளும். நாமெல்லாரும் பரிசுத்தர்களாய்ப் பய பக்தி சிரத்தையுடன் ஸ்ரீ ஹரியை தியானஞ் செய்துகொண்டு நானாவிதமான ருசிரான்னங்களையும்-அவரை-துவரை-பயறு-காராமணி முதலிய பருப்பமுதுகளையும், கார்ப்பு - கூர்ப்பு-துவர்ப்பு-தித்திப்பு-புளிப்பு-உவர்ப்பு என்னும் ஷட்ரஸ ருசி பாகங்களோடு கூடிய பொரியல் துவையல் கூட்டுக்கறி-குழம்பு-பச்சடி யென்னும் ஐவகையாகிய பலவிதக் கறியமுது வர்க்கங்களையும், நானாவித விசித்திர மதுர ருசிவர்க்க பலகார தினுசுகளையும், கந்த மூல பலாதி ரச ருசிவர்க்கங்களையும், பாநீயங்களுக்கு யோக்கியமாகப் பஞ்சதாராயுக்த பாலமுதோடு பாகமாக்கப்பட்ட பாயசங்களையும், சந்தன குசும தாம்பூலாதி திவ்விய பரிமள திரவியங்களையும், நானாவித சுகந்த புஷ்ப சித்தி விசித்ர மாலைகளையுஞ் சம்பாதித்து வைத்துக்கொண்டு ஸ்ரீ நந்த கோகுலத்திலுள்ள சகல பசுக்கூட்டங்களிடத்திலிருந்து கறந்த பாலமுதுகளையும், தயிர் - வெண்ணெய் - நெய் முதலிய மங்கல திரவியங்களையுங் கொண்டு பரம வைதிகோத்தம பிராம்ஹண்ய ஜன சமூகங்களால் ஸ்ரீ ஜனார்த்தன பிரீதியர்த்தமாக ஹோமாதி திவ்விய யாகங்களைச் செய்து, பிறகு அந்த பிராம்ஹண்ய ஜன சமூகங்களுக்குத் தேவோபசாரங்களோடு பக்ஷ்ய-போஜ்ய-லேஹ்ய-சோஷ்ய-பாநீயங்களோடுங் கூடிய ஷட்ரச யுக்தங்களாகிய ருசிரான்னங்களால் சந்தர்ப்பணையைச் செய்து அவர்கள்

ஆத்ம திருப்தியடைந்த பின்பு சந்தன குசும தாம்பூலாதி தக்ஷிணை பூர்வகமாக நல்ல உத்தம கோதானங்களை அவர்களுக்குச் சந்தோஷமாகும்படித் தானங்களாகக் கொடுத்துப் பின்பு. மற்ற ஜனங்களுக்குத் தகுந்தபடி அன்ன விரயங்களைச் செய்து, பசுக்கூட்டங்களுக்கு யதேஷ்டமாகப் புல் முதலியவைகளால் திருப்தியடையச்செய்து, நாய் முதலிய மிருகங்களுக்குத் தகுந்த ஆகாரங்களைக் கொடுத்து, ஸ்ரீ கோவர்த்தனுதி பர்வத அதிதேவதைகளைக் குறித்துப் பர்வதங்களைப் பூஜித்து, பிறகு நமது பந்து ஜனங்களில் யாவரும் நம்மைச் சார்ந்த மற்றவர்களும் அலங்காரார்த்தமாகத் திவ்விய வெண்பட்டு வஸ்திரங்களைத் தரித்து, திவ்யாபரண பூஷிதர்களாய்த் திவ்ய சுகந்த புஷ்பமாலைகளை யணிந்து யாவருந் திருப்தி யுண்டாகும்படிச் சந்தோஷமாகப் போஜனங்களைச் செய்து, பசுக்களையும் ,பிராமணர்களையும், யாகாக்கினியையும், ஸ்ரீ கோவர்த்தனுதி பர்வதங்களையும் பிரதக்ஷணஞ் செய்து, மிகவும்பக்தியுடன் சாஷ்டாங்கமாக நமஸ்காரங்களைச்செய்து திருப்தி யடையக்கடவோம்.

வாராய் சுபத்ரா பௌத்ரனே! காலரூபியான ஸ்ரீ பகவானுனவர், தேவேந்திரன் மூன்றுலகத்திற்கும் அதிபனென்கிற கர்வமடைந்திருக்கின்றதை அறிந்து அவனுடைய கர்வாபகாரஞ் செய்ய இவ்விதமாகத் திருவுளம்பற்றினுர். அந்த பகவானுடைய அபிப்பிராயத்தை யறியாதவர்களாய் ஸ்ரீ நந்தகோப உபநந்தர் முதலிய சமஸ்தமான கோபாலர்களும், ஸ்ரீ பகவானுடைய வாக்கியங்களை மிகவுஞ் சிரத்தையுடன் அங்கீகரித்துக்கொண்டு தாங்களெல்லாரும் ஸ்ரீ பகவத் கிருபைக்குப் பாத்திரர்களாய் அந்த இந்திர யாகத்திற்குச் சம்பாதித்து வைத்திருந்த சமஸ்தமான திரவியங்களுடன் மற்ற அவசியமானவைகளையும் சேகரித்துக்கொண்டு பிராம்மணர்கள் முதலியவர்களுடன் கோவர்த்தன பர்வதச் சாரலில் ஓர் விடுதி யேற்படுத்திக்கொண்டு வந்து தங்கினுர்கள்.

அத் தருணத்தில் சர்வேஸ்வரனுகியும் சர்வலோக சரண்யனுகியும் சர்வ விஸ்வாகாரனுகியும் இருக்கின்ற இந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான், மகா விலக்ஷண யுக்தமாகியும் கம்பீரனுகியும் சேவிக்குமவர்களுக்கு மனேகர சுந்தர ஸ்வரூபனாகியும் விளங்குகின்ற ஒரு மகா பர்வதாகாரமாக சாக்ஷாத்கரித்தார். பரிக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீ பகவானுனவர் இப்படி ஒரு மகா பர்வதாகாரமாகச் சாக்ஷாத்கரித்ததுமல்லாமல், ஸ்ரீ நந்தர் முதலிய இவ்வாயர் சமூகங்களிலும் தாமொருவராய் விளங்கிக்கொண்டு, இவர்களைப் பார்த்து வாருங்கள்

மகாபுண்ணிய சீலர்களாகிய ஆயர்களே! இதோ பாருங்கள்! நம்மை யெல்லாரையுங் கிருபைசெய்து ரக்ஷிக்கும் பொருட்டு ஸ்ரீ ஹரியினுடைய அம்ச சம்பூதரான பர்வத அதி தேவதையானவர் பரமகிருபையுடன் சாக்ஷாத் . கரித்திருக்கின்றார். இவரை யாவரும் பக்திசிரத்தையுடன் நன்றாய் அர்ச்சித்து பூசியுங்களென்று நியமித்தார். அதைக்கேட்டு அவர்களும் அதி ஆச்சரியமடைந்து அப்படியே மிகவும் பயபக்தி சிரத்தையுடன் அர்க்கிய பாத்தியம் ஆசமன்யம் ஸமர்ப்பித்து, மனோபாவமாக ஸ்நானபானஞ் செய்வித்து திவ்ய கந்தம் சுகந்த புஷ்பமாலைகளைச் சாத்தி பரிமள தூபம் தந்து, கர்பூர தீபாராதனைகளைச்செய்து அனந்த திவ்ய நாமங்களைச்சொல்லி அர்ச்சித்து, டங்கா பேரி முரசு மத்தள டமரக காகள வெக்காள பேய்க்காள கெளரீ காள துத்தரி சின்ன மிருதங்க கைத்தாள பிரம்மதாள நாகசுர வீணை வேணு முதலாகிய வாத்தியங்கள் சப்திக்கப் பழவகைகளையும், பருப்பு முதலிய கறியமுது வகைகளையும், செந்நெல் லரிசிச் சாதம் சித்ரான்ன முதலியவைகளையும் மலைமலையாய்க் குவித்துக் கறியமுது சாற்றமுது புத்துருக்கு நெய்யமுது தயிரமுது பாலமுது வெண்ணெய் முதலியவைகளைவைத்து, அநேக தாம்பாளங்களில் பாக்கிலை பரிமள திரவியாதிகளை நிறைத்து இவை முதலிய மற்றுமுள்ள நிவேதனத்திற்குரிய சமஸ்த பதார்த்தங்களையுஞ் சமர்ப்பித்து நிவேதனஞ் செய்தார்கள்.

அப்போது ஸ்ரீ பகவத் ஸ்வரூபமாகிய அந்த மகா கிரிதேவதை பிரத்யக்ஷ ஸ்வரூபமாக எதிரிலிருந்து இந்தக் கோபால மகா ஜனங்களால் செய்யப்பட்ட பூசைகளை யங்கீகரித்துத் ததியோதனங்களைப் புசித்து இவர்கள் செய்த சர்வோபசாரங்களையும் மனோரதித்துச் சந்தோஷித்தார். அத் தருணத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் தாமும் பயபக்தி விசுவாசத்துடன் அத்தேவனைத் துதிசெய்து, பின்பு கோபாலர்களைப் பார்த்து மகா தன்யோத்தமர்களான ஆயர்களே! திவ்ய காமஸ்வரூபியாய் சாக்ஷாத் கரித்திருக்கின்ற ஸ்ரீ ஹரி ஸ்வரூப இந்த மகா தேவனானவர் நமதிடத்தில் கிருபாப்பிரசன்னராகியும் தயாளுவாகியும் நாம் சமர்ப்பித்த சமஸ்தமான பதார்த்தங்களையும் புசித்து, நமது அர்ச்சனாதிகளை பிரசன்னமாக அங்கிகரித்தார். இவர் இவ்வுலகத்திலுள்ள ஸாது ஸஜ்ஜனங்களுக்கு சுலபராகியும், லோகத் துரோகிகளான துஷ்ட கஷ்ட ஜனங்களுக்குச் சிக்ஷகராகியும் அஜேயராகியும் விளங்குகின்றார் பாருங்களென்று சொல்லிப் பின்னும் அந்த பர்வத அதிதேவதையை அனந்த விதமாக ஸ்துதி

செய்து, அவருக்கு சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து எல்லாருடனுஞ் சேவித்து துதிசெய்தார். உடனே அந்தப் பர்வதாதி தேவதா ஸ்வரூபரானவர் அந்தர்த்தானமானார். அதன் பிறகு அவ்விடத்தில் விளங்கிக்கொண்டிருக்கிற பர்வதத்திற்கும் பூஜைகளைச் செய்து தூபதீபங்களையும் நானாவித ஸ்ரீ கந்த புஷ்பஹாரங்களையுஞ் சமர்ப்பித்துச் சாஷ்டாங்கமாகத் தண்டப் பிரணாமஞ் செய்தார்கள்.

பின்பு சமஸ்தமான பேருஞ் சர்வாலங்கார பூஷிதர்களாய் கோவினங்களையுங் கோவத்ஸங்களையும் விருஷபங்களையும் நன்றாயலங்கரித்து கிரிபிரதக்ஷணஞ் செய்பணித்துத் தாங்களும் தத்தமக்குரிய ரதங்களில் ஆரோகணஞ் செய்துக்கொண்டு தாமும் பலவகை வாத்திய கீதங்களுடன் மங்களகரமாக பிரதக்ஷணம் செய்தார்கள். பின்பு அந்தக் கோபால பிரபுக்கள் யாவரும் ஸ்ரீ வாசுதேவராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திவ்யாக்ஞையை வகித்து கோகுலத்திற்கு வந்துசேர்ந்து கோப் பிராஹ்மண சாது சஜ்ஜனங்களைச் சந்தோஷமாக அர்ச்சித்தப் பசுக்கள் தொழுவங்களைச் சேரவும், பிராஹ்மணர்கள் தத்தமது மாளிகைகளைச்சேரவும், அனுப்பிவிட்டுத் தத்தமக்குரிய ஸ்திரீ பாலர்களுடன் அவரவர்களுடைய வீடுகளைச் சேர்ந்து சுகித்திருந்தனர்.



## இருபத்தைந்தாவது அத்தியாயம்

தேவேந்திரன் மிகவும் கோபங்கொண்டு ஸ்ரீ நந்த கோகுல ஜனங்கள்
சிரமங்களையடைந்து வருந்த மேக சமூகங்களைக்கொண்டு
வருஷிக்க செய்ததும், ஸ்ரீ பகவான் கோவர்த்தன
கிரியை கரத்தேந்தி ரக்ஷித்ததும்
சொல்லப்படுகிறது.

ஐவர் வம்ச திலகனே! ஆயர்கள் வழக்கமாய் நடத்தி வந்த பூஜையை வேறுபடுத்தின காரியங்களை யெல்லாந் தெரிந்துகொண்ட அந்த மகேந்திரனானவர் மிகவும் தாமச குணங்களை வகித்து அதிக கோபங்கொண்டவராய் ஆயர்களை தண்டிக்க வெண்ணி ஊழிக்கால மேகங்களை அவைகளுக்கு பூட்டியிருந்த விலங்குகளினின்றும் விடுவித்து அவைகளை நோக்கிச் சொல்லுகின்றார் :—

வாருங்கள் பிரளயகால சம்வர்த்தமாதி மேகங்களே! இப்பிரபஞ்சத்தினுள் விளங்குகின்றஸ்ரீ பிருந்தாவன சமீபத்

தில் வாசஞ்செய்துக் கொண்டிருக்கின்ற இந்த நந்த விரஜ ஜனங்கள், கோசம்ரக்ஷண பிரபலர்களாகையால் பாலமுது தயிரமுது வெண்ணெய் நெய் முதலிய மகாருசி பக்குவங்களாகிய ருசிரான்னங்களைப் புசித்து மதத்துக் கர்வித்தவர்களாய் மகா பர்வத சமூஹங்களினுடைய இறகுகளை வெட்டி யவற்றின் கர்வங்களை நிஸ்சேஷமாக போக்கி கர்வாபகாரஞ் செய்தவனாகியும், சகலாசுரப் பிராணச்சேதஞ் செய்ய வஜ்ஜிராயுதத்தைத் தரித்த மகேந்திரனாகியும் இருக்கின்ற என்னை மதியாமல் தாய் தந்தை குரு தெய்வங்களுக்குரிய மரியாதைகளை இகழ்ந்து தன்னினைவில் தன்னையே பெரியவனாக மதித்திருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணனுடைய வார்த்தைகளை நம்பி வருஷந்தோறும் கிரமமாக எனக்குச் செய்துவந்த பூஜையைச் செய்யாமல், அந்தப் பர்வதத்தைப் பூஜித்துச் சென்றார்கள். ஸ்ரீ கிருஷ்ணனுடைய வாக்கியங்களைக் கேட்டுப் புத்தி மந்தப்பட்டவர்களாய் மதித்து வெறிகொண்டு தங்களை மறந்து எனக்குரிய யாகத்தை விடுத்து கேவல பர்வத பூஜை செய்து என்னை யவமானஞ் செய்தார்கள். இந்த ஸ்ரீ கிருஷ்ணசகித கோபாலர்களையும் கோவத்ஸங்களையும் அந்தத் திருவாயர்பாடி யெல்லையிலிருக்கிற சகல பொருள்களையும் பிரவாகத்தி லழித்து சமுத்திரத்திற் சேர்ந்து போகும்படி சீமூதங்களாய் வருஷியுங்களென்று ஆக்ஞாபித்தார்.

இந்தப்பிரகாரம் ஆக்ஞாபித்த இந்திரபகவான் தாமும் ஐராவதத்தின்மீது ஆரோகணஞ்செய்து சகல தேவர்களும் தம்மைச் சூழ்ந்து ஆயுதபாணிகளாய் வர அதிக கோபத்தை வகித்து ஊழிப்பெருங் காற்றிற்கு அதிதேவதையான வாயு பகவானை மேகங்களுக்குச் சகாயமாக நியமித்தார். வாயு பகவானுடைய சகாயத்தைப் பெற்றுக்கொண்ட அந்தச் சண்ட ஊழிக்கால மேகங்கள் ஆயர்பாடியின் மீது அமோகமாகிய ஆரவாரங்களுடன் ஆகாய வீதியில் வியாபித்துப் பிரமிக்கும்படி மின்னிப் புவனமுழுதும் நடுங்கும்படி முறி இடிகளையும் பெருஞ் சுழல் காற்றுகளையும் மகாந்தகாரமாகிய இருளையும் உண்டாக்கிக் கொண்டு கல் மழைகளையும், இடி முழக்கத்தோடுங் கூடிய பேரிடிகளையும் கற்பித்து வருஷித்தன.

அந்தச் சமயத்தில் ஸ்ரீ நந்த விரஜத்திலுள்ள சகலமான விருக்ஷங்கள் - புதர்கள் - வேர்கள்-பறித்து ஆகாயத்திலெழும்பின. கோவத்சங்கள் நடுங்கிக் கோவினங்களை யாசிரயித்தன. அந்தக் கோவினங்கள் தங்கள் தங்கள் கன்றுகளை

நாலுகால்களுக்கு நடுவே சேர்த்துக்கொண்டு அக்கன்றினங்களுக்கு முகங்களை வளைத்து முகத்திலுலுந் தேகத்திலுலும் மழைக்குங் காற்றிற்கும் மறைவு செய்தனவாகி மகா பயங்கரமான மேக கர்ச்சிப்புக்களால் செவிடுபட்டு, கால்கள் நடுங்கத் தத்தளித்து, ஓடவும் நடக்கவும் சக்தியற்று வருத்தப்பட்டன. அப் பசுவினங்களை விட்டுப் பிரிய மனமில்லாமல் அப்பசுக்களுக்கு முன்னின்ற விருஷப கூட்டங்கள் சகிக்கக் கூடாத கல் வருஷதாரைகளால் அடிபட்டு அந்த சீமூதமான வருஷதாரைகளுக்குச் சகிக்கமாட்டாமல் பிராண பயமடைந்து ஸ்ரீ ஹரிக்கு நமஸ்கரித்துச் சரணுகதியாக இரக்ஷி ரக்ஷீயென்று முறைகளிடும் சப்தங்களைப்போலத் தங்கள் சரீரங்களை வளைத்துக்கொண்டு மண்ணும் விண்ணும் அதிரும்படி அம்மா அம்மாவென்று ஆரவாரங்கள் செய்தன. அந்த விருஷபங்களையும் - கோக்களையும் - கன்றுகளையும் - ஸம்ரக்ஷணம் செய்துவரும் கோபாலர்கள் கஷ்டத்தை சகிக்க ஒண்ணுது சரீரங்கள் நலிந்து உலக முடிவு நேரிட்டதோ? ஊழிகாலம் வந்துவிட்டதோ? பிரம்மாண்டங் கிழிந்து போயிற்ருே? என்னமோவென்று கலங்கி நிற்கமாட்டாமல் கால் கைகள் நடுங்க, ஸ்ரீ மாதவார்ப்பித சப்தங்களுடன் முறையிட்டனர். அந்தக் கோபால புண்யவான்களையாஸிரயித்துக்கொண்டு புண்யாங்கனைகளாகிய கோபிகைகள் மகா வருஷ தாரைகளி லடிபட்டு நடக்கச் சக்தியற்று, இடுப்புகளை வளைத்துக்கொண்டு மிகவும் வருத்தமுற்று, ஸ்ரீ கிருஷ்ணு! ஸ்ரீ கோவிந்தா! ஸ்ரீ மாதவா! இரக்ஷி ரக்ஷீ! யென்று தங்கள் கடின குசபார மத்தியங்களில் தங்கள் குழந்தைகளை வைத்துக்கொண்டு முறையிட்டனர். பெருங் காற்றினுலும் பெய்கின்ற மழையினுலும் மாளிகைகளும் உருக்குலைந்தன. இப்படி உடல் மெலிந்து கை கால்கள் நடுக்கமுற்றுப் பொறி கலங்கி மனநிலை தளர்ந்து தத்தளிக்கின்ற நந்தகோபர் முதலியவர்கள் வேறுவழி காணுமல் அவதியுற்றுத் தீனஜன சமூக சம்ரக்ஷக தெய்வ சிகாமணியாகியும் தாங்கள் ஜனன மரண பயங்கர பிரளயத்தில் நின்றும் கரையேறிச் சுகானந்தவின்பம் பெறக் கருணை செய்யும்படி எழுந்தருளியிருக்கின்றவராயும், விளங்குகின்ற ஸ்வாமிக்குத் தண்டன் சமர்ப்பித்து தம்மை காக்கும்படி விண்ணப்பஞ் செய்துக்கொண்டு பலவிதமாய் ஸ்தோத்திரம் செய்தார்கள்.

வாராய் சந்திரகுல திலகனே! அத் தருணத்தில் ஸ்ரீ சர்வலோக சரண்யனுகி விளங்குகின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவான் இந்தப்பிரகாரம் அந்த மகேந்திரனுல் நேர்ந்த விபத்தை

யறிந்து அவனைக் கர்வபங்கஞ் செய்யவேண்டுமென்று சங்கல் பித்துக் கொண்டவராய்ச் சொல்லுகிறார்: வாருங்கள் நந்த விரஜ ஜனங்களே! இப்பொழுது பெய்கின்ற கோரதரமாகிய கல்மழையைக் குறித்து நீங்கள் ஒருவரும் அஞ்ச வேண்டிய தில்லை. உங்களுடைய பிராணேசர்களையும் குழந்தைகள் முதலிய சகல ஜனங்களையும் கோ-கோவத்ஸங்களையும் பத்திர மாய்ப்பார்த்து அழைத்துக்கொண்டு என்னுடன் வாருங்கள். இதோ ஒரு நிமிஷத்தில் ஸ்ரீ புண்டரீகாக்ஷரானவர் மிகவுங் கிருபையுடன் இரக்ஷிக்கப் போகின்றாரென்று சொன்னார்.

பூமண்டலாதிபதியே! இவ்விதமாய் ஸ்ரீ பகவான் நிய மித்த மாத்திரத்தில், கோபால ஜனங்கள் யாவரும் பசுக் களையும் கன்றுகளையும் தைரியங்கொண்டு அழைத்து சகல சாமக் கிரியைகளையு மெடுப்பித்துக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ண பிரானுடன்சென்று அவர் நியமித்த இடத்தில் நின்றார்கள். அப்பொழுது அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் திரிபுவன சங்கார மூர்த்திக்கொப்பாகிய ஒரு பீமபராக்கிரம ஸ்வரூபத் தை வகித்து, கோவர்த்தன மகா பர்வதத்தை வேரோடும் பிடுங்கித் தமது ஒற்றைத் திருக்கையினாற்றூங்கிக் குடையாகப் பிடித்தார். பூர்வகாலத்தில் ஸ்ரீ வாரகப்பிரானாகி இந்தப் பூமண்டலாகாரத்தை வெண்மையாகிய தமது தந்தக்கோட் டில் பறித்துவந்து ஸ்தாபனஞ்செய்து பிரம்மாதி தேவதை களும் ஸ்துதிகள் செய்யச் சர்வ சேதனா சேதனங்களையு மிரக்ஷித்தவ ராகையால் அந்தப் பகவானுக்கு இந்த மலை யைப் பறிப்பது ஒரு வருத்தமோ! இந்த கோவர்த்தன பர்வதமானது இவர் அஸ்தத்தில் ஒரு மதத்த யானையின் துதிக்கையில் ஒய்யாரமாயும் அவலீலையாயும் உயரவெடுத் தேந்தப்பட்ட ஒரு தாமரை மொக்கைப்போல விளங்கிற்று. வாராய் பரதகுலோத்துங்கனே! சர்வலோக சரண்யராகிய ஸ்ரீ ஹரியானவர் அநந்தகோடி பிரம்மாண்டங்களைப் பந்து களைப்போலப் பற்றி விளையாடி விநோதங்களைச் செய்கின்றவ ராகையால், இந்த ஒரு அண்டத்துளொரு உலகத்தில் ஒரு தீபத்தில் ஒரு பர்வதத்தைத் தாங்கியது ஆச்சரியமன்று. கோபால சேகராகிய ஸ்ரீ பகவான் ஸ்ரீ நந்தர் முதலிய கோபால ஜன சமூகங்களைக் கடாக்ஷித்து சொல்லுகிறார்:

மாத்ருபித்ருக்களே! கோபால கோபீஜனங்களே! இந்த மகா பர்வதத்தின் கீழ் கோதனங்கள் முதலிய சமஸ்தமான வஸ்து திரவியங்களுடன் யாதொரு குறைவுமின்றி மனது சந்தோஷத்துடன் அவரவர்கள் மனோ பீஷ்டப்படிக்கு நிர்ப்பயமாயிருங்கள். மேலும் நீங்களென்னைக் குறித்து

இவன் மிகவும் பாலகனுயிற்றே இந்த மகா பர்வதத்தை என்னமாய் வகிக்கப் போகின்ருனென்று சந்தேகிக்க வேண்டுவதில்லை. இப்படிப்பட்ட மகா பர்வதங்கள் அனந்தங்களைப் படைத்த சகல சேதனு சேதன சமூகங்களோடு கூடிய அநந்தகோடி பிரம்மாண்டங்கள் ஏக காலத்திற் புரண்டுருண்டு இந்தப் பர்வதத்தின் மீது வீழ்ந்தபோதிலும் இம்மகா பர்வதத்திற்கோர பாயமு மில்லை. எனது கையுஞ் சலியாது. ஆகையால் இதனடியில் சமஸ்தமான பேர்களுஞ் சந்தோஷமாய்ச் சுகமாக வாசஞ்செய்து கொண்டிருங்களென்ருர். வாராய் பத்ரவதி மணுளனே! இவ்விதமாகிய ஸ்ரீ பகவானுடைய திவ்ய வாக்கியங்களைக்கேட்ட இவ்வாயர்களியாவரும் சமஸ்தமான கோவின சமூகங்களுடனும் ஸ்ரீ ஹரியை தியானஞ் செய்துக்கொண்டு நிர்பயர்களாய் அந்த மகா பர்வதத்தினடிவாரத்திற் பிரவேசித்து ஸ்ரீ ஜனுர்த்தனருடைய கருணுகடாக்ஷ வீக்ஷண்யங்களாகிய குணங்களில் தங்கள் மனத்தைச் சமர்ப்பித்துப் பசி தாக மோக சோக மற்றவர்களாய் ஸ்ரீ கிருஷ்ண கதா விநோத கல்யாணங்களைக் குனுநுபவஞ் செய்துக் கொண்டிருந்தார்கள்.

ராஜராஜனே! இவ்விதம் அம்மகா மேகங்களானவை இந்திர பகவானுடைய ஆக்கினையைச் சிரசாவகித்து இரவும் பகலுமோயாமல் ஏழு நாள்கள் வருஷித்தன. அந்த ஏழு நாளும் ஆயர்கள் கோக்கள் முதலிய சகலரும் ஸ்ரீபகவானுடைய கிருபையினுல் சகல சௌக்கியத்துடனும் பிரம்மாநந்த ஸம்பூர்ணத்துடனுஞ் சுகமாக வாசஞ்செய்து கொண்டிருந்தார்கள். அதன் பிறகு இந்த ஏழுநாளும் ஸ்ரீ பகவானுனவர் கோவர்த்தன பர்வதத்தைச் சலியாமல் லேசாக தாங்கி சர்வ ஜனங்களையும் ரக்ஷித்துக்கொண்டிருக்க, இந்திரன் தேவ சாரணர்களால் அதிமானுஷ ஸ்ரீ கிருஷ்ணகுண சரித்திரங்களைக்கேட்டு மனதில் ஆச்சர்யமும் பயமுந் தோன்றி, எண்ணங்கள் குன்றி, பிரயோஜனமற்றவனுய் மேக ஸமூகங்களை யழைத்துக்கொண்டு தன்னுடையஸ்தானத்திற் சேர்ந்து மேகங்களைத் தத்தமது இடங்களுக்கு அனுப்பிவிட்டார்.

அதன் பின்பு ஆகாயவீதியானது பரிசுத்தமாய் மகா புருஷர்களுடைய மனதைப்போலக் களங்கமற்றதாய் விளங்கியது. சூரியகிரணங்கள் ஆகாயவீதியில் வியாபிக்கச் சமஸ்த ஜனங்களும் பயங்கரமாகிய ஊழிப்பெருங் காற்றுகளும் மேகங்களும் ஒழிந்தனவென்று, ஸ்ரீ மாதவப்பிரானைத் துதித்தாகள். கோவர்த்தனதராகிய ஸ்ரீ கோபால சக்ரவர்த்தியானவர் சமஸ்தமான கோபால ஜனங்களைப் பார்த்து

சொல்லுகின்றூர். வாருங்கள் தன்யர்களே! ஸ்ரீ ஹரியினுடைய கிருபையினுல் காற்றும் மழையும் பரிஷ்காரமாய் விட்டு ஓய்ந்தன. சமஸ்த பிரவாகங்களும் நதிகளைச்சேர்ந்து சமுத்திரத்தை யடைந்தன. பூமியெங்கும் ஈரம் நீங்கி சுப்ரமாய்த் தோன்றின. ஆகையால் நீங்கள் யாவரும் ஸ்வஸ்த சித்தர்களாய் வெளிப்பட்டு யதாஸ் தானங்களைச் சேருங்களென்று நியமித்தார்.

அரசனே! ஸ்ரீ பகவான் அப்படி நியமித்ததும் யாவரும் அவரவர்கள் ஸ்தானங்களில் சுகமாக வந்துசேர்ந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணபகவானும் எப்போதும்போல அந்த மகா பருவதத்தைச் சகல பிராணிகளும் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே எளிதாக அதன் இருப்பிடத்தில் அசையாமல் ஸ்தாபனஞ் செய்தார். பிறகு சகல ஆயர்களும் மிகவும் பக்தி சிரத்தையுடன் துதிசெய்து ஸ்ரீ பகவானை ஆலிங்கனஞ் செய்து புகழ்ந்தார்கள். புரோகிதர்கள் முதலிய பிராஹ்மணர்கள் மங்களாக்ஷதைகளைக் கொண்டு வேத மந்திரங்களைச் சொல்லி ஆசீர்வதித்துத் ததியந்ந கவளங்களை யுபசாரமாக ஸ்ரீ பகவானுக்குச் சமர்ப்பித்து ஆனந்தமடைந்தார்கள். நந்த கோபரும் மகா பராக்கிரமசாலியான ஸ்ரீ பலராமரும் யசோதாப்பிராட்டியும், ரோஹிணி தேவியும், மிகவும் பிரீதியுடையவர்களாய் பகவானை ஆலிங்கனுதி உபசாரத்துடன் ஆசீர்வதித்துத் துதித்தார்கள்.

ஆகாயவீதியில் தேவர்கள் புஷ்பமாரிபெய்து அதிக ஆச்சரியமடைந்து தேவதுந்துபி முதலிய சர்வ தேவ வாத்தியங்களையுஞ் சப்தித்தார்கள். தும்புரு நாரதாதி மகாபுருஷ ஜனங்கள் மதுர ஸ்வரங்களால் ஸ்துதிசெய்து கானஞ்செய்தார்கள். சர்வகோபிகா ஜனங்களும் ஸ்ரீ பகவானுடைய குண கீர்த்தனங்களை மகா திவ்விய ஸ்வரங்களாகப்பாடிக் கொண்டுவர ஸ்ரீ பலராம சகிதராகிய கோபால ஜனங்கள் ஸ்ரீ கிருஷ்ண பகவானைச் சூழ்ந்துகொண்டு பிரம்மாநந்த பரிதர்களாய்க் கோகுலத்திற்கு வந்தார்கள்.



## இருபத்தாறுவது அத்தியாயம்

ஸ்ரீ நந்தகோபர் கர்க்க மஹாரிஷியினால் தாம் அறிந்திருக்கப்பட்ட பகவத் ரகசியார்த்தங்களை மனதில் தியானித்து ஸ்ரீ கிருஷ்ண குண பிரபாவங்களை வர்ணித்தமை சொல்லப்படுகிறது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

மகாஜன வல்லபனே! ஸ்ரீ நந்தகோபருடைய சபா ப்ரதேசத்தில் கூடியிருக்கின்ற கோபாலஜன சமூகங்கள் யாவரும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய அதிமானுஷ சேஷ்டித லீலா விநோதங்களைக் குறித்து ஆச்சரியா நந்த பரவசர்களாகி ஸ்ரீ நந்தகோபரைப் பார்த்து சொல்லுகின்றார்கள்:

### கோபாலர்கள் வாக்கியம்

வாரும் ஸ்ரீ நந்த கோபரே! நாமெல்லாரும் ஜன்மாந் தரங்களில் என்ன சுகிர்தங்களைச் செய்தோமோ! உமது தபோபல மெப்படிப்பட்டதோ! அறியோம் எனப் பலவாறு புகழ்ந்து பகவான் பூதகியை சிக்ஷித்தது முதல் புரிந்து வந்த பல லீலைகளையும் சிறப்பாக எடுத்துப்பேசி, மேலும் சொல்லுகிறார்கள். கோகுலத்திலுள்ள நம்மியாவரையும் அடியோடு நாசம் செய்யும்படி பெய்த கொடுமழையினின்றும் நம்மை இரக்ஷித்த விதத்தை நினைக்க நினைக்க அதிக ஆச்சரியமும் அடங்கா ஆனந்தமும் நம் சிறுவர்பால் பெரிய பக்தியும் அன்றோ நமக்கு ஜனிக்கின்றது. ஆகையால் நாங்களெந்தவிதத்தில் யோசித்தபோதிலும் இவர் மானுஷ்ய மாத்திரரென்று தோற்றவே யில்லை. காமியதேவதைகளான பிரம்ஹசிவேந்திராதி தேவதாம்ச புருஷரில் ஒருவரென்றுந் தோற்றவில்லை. ஸ்ரீமந் நாராயணனாகிய பர பிரம்மமேயென்று நினைத்து பஜித்துக்கொண் டிருக்கிறோமென்று யாவரும் ஏக கண்டமாய்ச் சொன்னார்கள். இப்படிச் சொல்லும் கோபாலர்களைப் பார்த்து நந்தகோபர் சொல்லுகின்றார்.

### ஸ்ரீ நந்தகோபர் வாக்கியம்

வாருங்கள் மகா தன்யோத்தமர்களாகிய இஷ்டபந்து ஜனங்களே! இந்த ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய திருவவதார காலத்தில், கர்க்கமகா முனீந்திரர் எழுந்தருளி நாமகரண சம்ஸ்கார திருவிலச்சினை செய்தபிறகு, ஒரு ஏகாந்த பிரதேசத்தில் என்னையழைத்து அவர் சொன்னதை உங்களுக்கு சொல்லுகின்றேன். நீங்களும் சிரத்தையுடன் கேளுங்கள். இவர் தமது கிருபாமாத்திரத்தில், சாக்ஷாத்காரமாக யெழுந்

தருளி உமக்குப் புத்திரனாக விளங்கும் ஸ்ரீ பகவானேயல்லாமல் சாமான்ய புத்திரனல்லர். இவரை அநாதிநிதனராகிய பரமாத்மாவாகத் தியானியுங்கள். இவர் இவ்வுலகத்திலுள்ள சாது சஜ்ஜனங்களும் நலிந்து, உலக தர்மங்களும் நீதிதப்பித், தமது ஆஸ்ரித ஜனங்கள் மனது சங்கையற்றுத் தியானிக்குங் காலங்கள்தோறும் துஷ்ட நிக்ரக சிஷ்டசம்ரக்ஷணம் செய்து, ஸர்வ தர்மங்களையும் ஸ்தாபிக்கும்பொருட்டு, திருவவதரிக்கின்ற பரமாத்ம ஸ்வரூபரே யல்லது, மற்றசிறுதெய்வங்களினம்சமுமல்லர். சுயர்; தாமச மானிட ஜன்மமுமல்லர். இவருக்குண்டாகிய அவதாரங்களையும் அவ்வவதாரங்களின் அநந்த கல்யாண குணகண மகிமாதிசயங்களையும் வேத வேதாந்த புருஷ சூக்தங்களினால் அவ்வேத புருஷனாலும் அளவிட்டுரைக்கக் கூடாது. எனது பிரிய பந்துக்களே! இந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் பூர்வயுகங்களில் தேதீப்யசுவர்ணகாரத்தையும் சுத்தஸ்படிகம் போன்ற வெளுப்பாகாரத்தையும் திவ்ய ரத்நமய மாணிக்க செவ்விய புஷ்பாகாரத்தையும் வகித்து தற்காலத்தில் நீலமேகம்போன்ற சர்வ ஜகன்மோகனாகார சுந்தர ஸ்வரூபத்தை யுடையவராய் விளங்குகின்றார்.

இன்னும் இந்த ஸ்ரீ மாதவர் பூர்வத்தில் தங்கள் தபோபலத்தினாலே தேவாசுரர்கள் மனித ஜன்மங்களை யடைந்து, அரசர்களாய் அதிகாரங்களைச் செலுத்தும்போது, வேத தர்ம விதிகள்மாறி, ராஜ்யங்கள் அராஜகமாய் ராஜசோரர்களால் உலக ஜனங்களும் சாதுக்களும் நலியடைந்தபோது பிருது-ருஷப-பரத-திரு முதலாகிய ராஜபுருஷ சிரேஷ்டாவதாரங்களையும், பக்தஜன சம்ரக்ஷணார்த்தம் நானாவித அவதாரங்களையுஞ் செய்து ராஜசோர சிக்ஷைகளையும், பாஷண்ட தர்ம நிவாரணங்களையும் செய்த மகா மகிமைகளையுடைய திவ்விய மூர்த்தி யிவர்தானென்றுஞ் சொன்னார். ஆகையால் கேளுங்கள் சுஜனங்களே! இவருடைய சரித்ராதிசயங்களில் ஆச்சரியப்பட வேண்டுவதில்லை. இவை மாத்திரமல்ல. இன்னு மனந்த அதிசயங்களுண்டாகவிருக்கின்றன. இவரால் நமக்கு நேரிடுஞ் சங்கடங்களெல்லா மொழியப்போகின்றன. வாருங்கள் உத்தமர்களே நீங்களும் என்னைப்போலவே இந்த ஸ்ரீ பகவானுடைய அதிமானுஷ லீலா வைபவங்களை மனமுகந்து களித்து ஸ்ரீ பகவத் பக்தி ஸஹிதர்களாய் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய கிருபைக்குப் பாத்திரர்களாய் உஜ்ஜீவியுங்களென்று சொன்னார். அந்தக் கோகுல ஜனங்கள் நந்தகோபரால் இந்த பரமரஹஸ்யங்களை

விசிதமா யறிந்து சங்கையற்றுப் பரமாநந்த பரிதர்களாய் ஸ்ரீ பகவானையும் நந்தகோபரையும் பூசித்துக்கொண் டிருந் தார்கள்.



## இருபத்தேழாவது அத்தியாயம்



*இந்திரன் தன் அபராதத்தை க்ஷமிக்கும்படி, காமதேநுவை முன்னிட்டு கோவிந்த பட்டாபிஷேகஞ் செய்து துதித்தா னென்று சொல்லப்படுகிறது.*

வாராய் கலிபுருஷ கர்வாபஹாரனாகிய மகோத்தம ராஜ வல்லபனே! தேவ சாரணர்களால் ஸ்ரீ கிருஷ்ண பகவா னுடைய அதிமானுஷ சேஷ்டித கல்யாண குணங்களைக் கேள்விபட்டு அதி ஆச்சரியத்தையும் பீதியையும் அடைந்த இந்திரன் சாந்தசித்தனாய் அகோ நானென்ன காரியஞ் செய் தேன். ஸ்ரீ பகவத் விஷயத்தில் அபராதங்களைச் செய்தேனே யென்று சிந்தித்து மூவுலக ராஜ்ய ஐஸ்வரிய விபவத்தை நிந் தித்து நிகர்வசிரோமணியாய் ஓகோ துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனாத்மக சர்வலோக ஜகத் ப்ரபுவே நாங்கள் உனது கடாக்ஷ வீக்ஷண்ய லேசாம்சங்களை யடைந்து லோகபாலர் களாய் இந்தப் பிராகிர்தகர்ம விபவைஸ்வர்ய மதத்தினால் எங்களை நாங்கள் மறந்தோம். எங்கள் சிரேயசுகளுக்கு இடர் வரும்போதெல்லாம் எங்கள் துஷ்டத் தன்மையைப் பரமகிரு பாமய திருவுளத்தில் நினையாமல் இரக்ஷிக்கக் கடவீரென்று துதித்துக்கொண்டு தேவதாசுரபியான காமதேனுவை யழைத் துக்கொண்டு பூமியினிடத்தில் வந்து பசுக்கூட்டங்கள் பல திசையினும் பரவிப் பிரிந்து மேயக் கோபால குமாரர்கள் அந்தப் பசுக்கூட்டங்களைக் காக்கப் பலதிசையிலும் போயிருக் கத் தனித்தவரா யெழுந்தருளியிருக்கின்ற திருத்துழாய் மாலை மார்பராகிய ஸ்ரீ கண்ணபிரானைத் தம்முடைய ஆயிரங் கண் களுங் களிகூரக்கண்டு ஆநந்தங்கொண்டு நல்ல சமயம் வாய்த்ததென்று உள்ளமுருகி ஸ்வாமி சந்நதியில் வந்து இரண்டு கரங்களையுங்கூப்பி சூரியமண்டலத்தைப் போல பிர காசிக்கும் கிரீடமானது ஸ்ரீ பகவானுடைய இரண்டு திரு வடித் தாமரைகளுக்குத் திருப்பாதுகையைப் போல அலங் காரமாகும்படி ஸாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து இரண்டு கரங்களையும் உயரவெடுத்து அஞ்சலிசெய்து துதிக்க லானான்.

### இந்திரனுடைய வாக்கியம்

ஹே பகவன்! தேவரீர் வாக்கினால் செய்யப்படும் அதி ஆஸ்சர்யமான வர்ணனைகளுக்கு அடங்காமலும் மனதாலும் அறிவாலும் ஆராய்ந்து உணர்வதுங் கூடாமல் கடந்தும் உயர்ந்து நிற்பீர். பூமியில் சாதாரணர்போல் ஜனித்து ஒப்பற்ற உத்தம தர்மங்களை அழியாமல் காத்தருள்வீர். பூந்தேன் நிறைந்த தாமரை மலர்மீது பிரம்மதேவராக வீற்றிருப்பீர். கைலாய மலையில் சம்மார கர்த்தாவான சிவபெருமானாக இருந்தருள்வீர். திருப்பாற்கடலில் சகலமும் அறிந்தும் அறியாதவனைப் போல் யோகநித்திரை கொளும் விஷ்ணுக் கடவுளாக விளங்குவீர். உம் லீலா குண விபவங்களை அடியேன் எவ்விதம் அறிந்து உய்தல் கூடும்?

மாற்றில்லாமல் அதிகமாய் உயர்ந்த பொன்னைப் போலும் தாமரை மலரில் வசிக்கும் திருமகள் புணர்ந்திருக்கும் புஷ்பமாலைகள் நிறைந்த மார்புடையவரே! வன்மையின் மிகுந்த சக்ராயுதத்தை யுடையவரே! வெறுப்பும் விருப்பும் அற்றவரே! அடியேன் இப்போது தம்மைப் பகைத்துக் கொண்டது அறியாமையால் யான் கொண்ட கோபத்தால் விளைந்தது. கிருபை கூர்ந்து என்னை மன்னித்தாண்டருளும் என பிரார்த்தித்து ஸ்ரீ கிருஷ்ண பகவானது திருவடிகளில் விழுந் தெழுந்தான். சுவர்க்க லோகத்தைக் காக்கும் அரசனான தேவேந்திரன்.

இவ்விதம் பலபலவாய் துதித்துக்கொண் டிருக்கின்ற தேவேந்திரனைப்பார்த்து, அடுத்தவர்களிடத்தில் அன்புள்ளவராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் மலர்ந்த தாமரைக்கொப்பான முகமுடையவராய் புன்னகைகொண்டு நீருண்ட காளமேகம் கர்ச்சிக்கின்றதுபோல மகா கம்பீரத்தோடு இந்திரனுடன் சொல்லுகின்றார்.

### ஸ்ரீ பகவான் வாக்கியம்

வாராய் அமராதீசுவரனே! சர்வப்பிரபஞ்சங்களினுடைய விருத்தியின் பொருட்டு எனது கிருபையினால் இந்திரலோக ஐஸ்வர்யங்களை யடைந்து அவற்றின் அனுபவத்தினால் மதித்து என்னையும் வேத சோதிதமான வைதீக தர்மங்களையும், இவ் வுலகங்களையும் உலகத்தவர்களையும், க்ஷணத்திற்கு க்ஷணம் மறக்கின்றபடியினால் நான் எந்தப் புருஷனை இரக்ஷிக்கவேண்டு மென்று சங்கல்பிக்கின்றேனே அந்தப் புருஷனுடைய ராசத தமோ குணங்களினால் காரியங்களை விக்கினஞ் செய்து கர்வ குணங்களை யழித்து அவனைப் பரி

சுத்தனுக்கி யிரக்ஷித்துக்கொண் டிருக்கின்றேன். ஆகையினல் உனது விஷயமாக விதித்திருக்கின்ற இந்திரயாகபங்கஞ் செய்து என்னிடத்தில் உனக்குச் சம்பூர்ணமான பக்தியுண் டாகும்படி பர்வதார்ச்சனை செய்வித்ததேயல்லது வேறில்லை. உனக்குச் சர்வ மங்கள முண்டாகக்கடவது. நீ ஸ்ரீ பகவதாக்ஞா கிரமமாகத் திரிலோகாதிகாரங்களைச் செலுத்தி அகங்கார முதலிய சுதந்தர குணங்களை விட்டு என்னிடத்தில் பக்தியுடையவனுய் நற்குணங்களை வகித்து சிரேயோசம்பன்னனுகித் தெய்வ சம்பத்கரங்களை யநுபவித்துக் கொண்டிருக்கக் கடவாயென்று நியமித்துக் கொண்டிருக்கிற சமயத்தில் காமதேனுவானது தனது ஸந்தானங்களான கோவின் சமூஹங்களுடன் வந்து பக்தஜன காமதேனுவாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பார்த்து ஸ்துதிக்கின்றது :

காமதேனுவினுடைய வாக்கியம்.

வாரீர் அரவிந்த லோசனராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானே ! அந்தரேந்திரிய பகிரேந்திரிய நிக்ரகபரர்களாகிய பரம முநீந்திரர்களால் சேவிக்கவுந் துதிக்கவுந் தகுந்த சர்வ மங்கலாவக கல்யாண குணங்களை யுடையவராயும், சர்வ பிராணிகளுந் தங்களுழ்வினைப் பகுதியான ஜன்மங்களிற் சம்பாதித்த பாவங்களொழிந்து உய்வதற்கு முக்கிய ஸ்தானமாகிய கங்காப் பிரவாகத்திற்கு உற்பத்தி காரணமாக விருக்கிற சரணுரவிந்தங்களையுடைய ஸ்ரீ விஸ்வேஸ்வரர்ாகியும் சர்வப் பிரபஞ்ச ஸ்வரூபராகியும் விளங்குகின்ற உம்மை நாங்கள் பரிசுத்த விலக்ஷண ஞானங்களை வகித்துச் சாசுவதமாகிய பிரஹ்மாநந்த சௌவுக்கியங்கள் இப்படிப்பட்டதென்று உமது அவதார தரிசனப் பிரபாவத்தால் கண்டு கிருதார்த்தர்களாகின்ருேம்.

தேவ தேவதா சிரோரத்நமே! எங்களுக்கும் சமஸ்தமான தேவதைகளுக்கும் சம்ரக்ஷணுர்த்தமாகத் திருவவதரிக்கின்றவராய் பிரகாசிக்கின்ற வுமக்கு இவ் வண்டாதிபதியாகிய சதுர்முகனுனவர் என்னையும் இவ்விந்திரனையும் பார்த்து இவருடைய அபராதக்ஷாபணத்தின் பொருட்டும், தர்மத்தை நிலைநிறுத்துவது முதலிய பூமிபார நிவாரணத்தின் பொருட்டும், தேவதா சக்ரவர்த்தி நாமமாகிய மகேந்திர விபவாதிசய சர்வேந்திராதிபத்திய தேவ பட்டத்தைச் சமர்ப்பித்து வரும்படி யாக்ஞாபித்துக் கோகண சமேதையாகிய என்னையும் இவ்விந்திரனையு மனுப்பினுர். ஸ்ரீயப்பதியாகிய தேவரீர் அங்கீகரித்தருள வேண்டுமென்று துதித்து ஸ்வர்ண பாத்தி

ரங்களில் தேவாமிர்தத்திற் கொப்பாகிய க்ஷீரங்களைக் கறந்து சுகந்த பரிமள திரவியங்களுடன் அமைத்தது.

அச்சமயத்தில் தேவேந்திரனானவன் ஐராவதமென்கிற வெள்ளை யானையைச் சமஸ்த பூஷணாலங்காரத்துடன் அழைத்து வந்து தேவசாரணர்களை யனுப்பி சகல புண்ணிய தீர்த்தங்களையும் அழைப்பித்து அநந்த ரிஷிகளும் சகல தேவர்களும் இந்திராணியும் ரம்பை முதலிய ஸ்திரீகளுஞ் சூழக் காமதேனு சகிதராயிருந்து ஸ்ரீ புருஷ சூக்த வசனங்களைச் சொல்லி அந்த ஐராவதத்தின் மீது சுரபிக்ஷீர முதலிய சர்வ புண்ணிய தீர்த்தங்களையும் தேவதுந்துபி முதலிய சர்வ மங்கள வாத்தியங்களுடன் பவனியாகக் கொண்டுவந்து அதன் துதிக்கையினா லெடுத்துச் சமர்ப்பிக்க ஸ்ரீ பகவானுக்குத் திருவபிஷேகஞ் செய்து நீர் துவட்டி வஸ்திர பூஷண கந்த புஷ்பாலங்காரங்கள் செய்து கோடி சூரியப் பிரகாச தேவ கிரீடத்தைத் திருமுடியிற் சாத்திச் சர்வ யக்ஷ கிந்நர கருட கந்தர்வர் முதலியவர்கள் ஜய விஜையிபவா வென்று துதிக்க ஸ்ரீ கோவிந்த நாமத்தை ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குச் சாத்தி ஏககண்டர்களாய் ஸ்ரீ கோவிந்தா! கோவிந்தா! ரக்ஷியும் ரக்ஷியுமென்று துதித்தார்கள். அத் தருணத்தில் தும்புரு நாரதாதிகள் ஸ்ரீ பகவந்நாம ஸ்மரணாதி கானங்களைச் செய்தார்கள். அரம்பையர்கள் முதலிய அப்சர ஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தார்கள். மற்ற தேவதைகள் யாவரும் புஷ்பங்களை வருஷித்தார்கள். நிகில ருஷிகணங்களும் மௌநிகளும் வேதாந்த வாக்கியங்களால் ஸ்ரீ பகவானுடைய ஆச்சரிய குண சேஷ்டிதங்களைப் புகழ்ந்து துதிக்கும்போது இந்த மூன்று லோகங்களும் சௌக்கியகரங்களாய் விளங்கின. சமஸ்த கோவினங்களும் க்ஷீரஸமர்த்திகளோடு விருத்தியடைந்தன. நிகில புண்ய நதிகளும் ஜல சமர்த்தியாய் பிரவாஹித்தன. சகல விருக்ஷங்களும் பலங்களோடும் பலித்தன. சர்வ சஸ்யங்களும் விர்த்தியடைந்து பலித்தன. சகல கொடிகளும் நானாவித சுகந்த புஷ்பங்களுடன் விளங்கின. பர்வதாதிகள் யாவும் நானாவித மணிகண இரத்னங்களோடு ஜ்வலித்தன. அந்த பிருந்தாவன புண்யப் பிரதேசங்களில் வாசஞ்செய்கின்ற சமஸ்த சேதனாசேதன ஸமூஹ சர்வப் பிராணிகளும் ஆசாபாசங்களை விட்டு மகா குணங்களை வஹித்து ஸ்ரீ கிருஷ்ண பகவானையே தஞ்சமாக நம்பி விருத்தியடைந்து பிரகாசித்துக்கொண்டிருந்தன. இப்படி சகலமும் மங்களமாய் விளங்கக் கண்டு மகிழ்ந்து இந்திரன் காமதேனு முதலியவர்களுடன் ஸ்ரீ பகவானிடத்

தில் விடைபெற்றுக்கொண்டு அவரைத் துதித்தபடி தமது ஸ்வர்க்க லோகத்திற்குப் போய்ச்சேர்ந்தான்.



## இருபத்தெட்டாவது அத்தியாயம்



ஸ்ரீ நந்தகோபர் யமுனாநதிக்கு எழுந்தருளித் தீர்த்தமாடுகின்ற சமயத்தில் வருணன் அவரை வருணலோகத்தில் கொண்டுபோயொளித்ததும், ஸ்ரீ கிருஷ்ணர் அவரை மீட்டு வந்ததும் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் மஹாராஜனே! கோகுல பிரபுவாகிய நந்தகோபர் ஸ்ரீஹரி திவச விரதங்களை மிகவும் பக்தி சிரத்தையோடு அனுஷ்டிக்கின்ற பரம வைதீகராகையால், ஒரு ஏகாதசி திவசத்தில் ஸ்ரீ ஹரியைப் பூசித்துக்கொண்டிருந்து, அன்று இராத்திரி காலமெல்லாங் கண்விழித்து தனுஜ காலமென்றுணராமல் பஞ்சவுஷத்கால மென்று நினைத்துச் சில கோபால ஜனங்களுடன் ஸ்நானத்திற்கு யமுனா நதிக்கெழுந்தருளி ஸ்ரீ ஹரியென்று சங்கல்பித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணா! ஸ்ரீ மாதவா! ஸ்ரீ கோவிந்தா! ஸ்ரீ புருஷோத்தமனே! ஸ்ரீ பக்தவத்ஸலா சரணமென்று ஸ்ரீபகவந் நாமங்களை ஸ்துதி செய்துகொண்டு தீர்த்தமாடுகிற சமயத்தில் வருணதேவனுடைய பிருத்தியர்களில் ஒருவன் ஸ்ரீ நந்தகோபரை தனது மாயா சாதுரியத்தினால் கிரகித்துக்கொண்டு வருணபகவானுடைய சமுகத்தில் சேர்த்தனன். அத் தருணத்தில் சமஸ்த கோபாலர்களும் நந்தகோபரைக் காணாமல் திடுக்கிட்டேங்கி யெங்குந் தேடிக்கலங்கி ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களுக்குத் தெரிவித்தார்கள்.

பகவான் நடந்த யாவையும் உணர்ந்தவராய் அந்தக் கோபாலர்களுக்கு அபயப்பிரதானஞ்செய்து, தமது யோக மாயாப் பிரபாவத்தினால் அஷ்ட திக்குப்பதிகளில் ஒருவராகிய வருணபகவானுடைய மகா நகரத்திற்கு எழுந்தருளினார். ஸ்வாமி யெழுந்தருளின சமாசாரத்தைச் சாரணர்களாலறிந்து வருணபகவான் அர்க்கிய பாத்திய வாசமனாதி அநந்த பூஜா திரவியங்களுடன் ஸ்ரீ பகவானுக் கெதிர்கொண்டு அழைத்துச்சென்று நமஸ்காரம் செய்து பரம சந்தோஷராகி மிகுந்த பக்தி சிரத்தையுடன் வேதோக்த கிரமமாக நானாவித தேவோபசாரங்களைச் செய்து திவ்ய புஷ்பமாலிகைகளை சமர்ப்பித்து சொல்லுகின்றார்.

ஸ்ரீ வருணன் வாக்கியம்

வாரீர் கருணையோ நிதியாகிய ஸ்ரீ மாதவரே! யோகீஸ்வரர்களாகிய மகாநுபாவர்களாலும் லோகேஸ்வரர்களாகிய பிர்ம்மாதிகளாலும் சரணமடைந்துய்வதற் குரியனவாகியும், அவர்களுக்கெட்டுதற் கரியனவாகியும், விளங்குகின்ற உமது பாதாரவிந்தங்கள் பிரத்தியக்ஷமாக ஒருகோணுதி பதித்வத்தால் மமதை வகித்திருக்கின்ற வென்னையுங் கடாக்ஷித்து மன்னித்து இரக்ஷிக்கும்பொருட்டு எழுந்தருளினதால் இந் நரகமானது மகா பாவனமடைந்தது. எனது இருதயமும் கிருதார்த்வமடைந்து பிரஹ்மாநந்த சந்தோஷமுண்டாகப் பெற்றது. நான் சர்வ சௌக்கியமு மடைந்து சரீரேந்திரியங்களின் தாபங்களற்று அவைகளைப் பெற்றுக்கொண்டதற் குரிய மகத்தான சௌக்ய சுகாதிசயங்களை யடைந்துய்யவும் பெற்றேன். இந்த நந்தகோபர் தேவரீருக்குப் பிதாவென்கிறது தெரியாமல் கொண்டு வந்தார்கள். அந்த அபராதத்தைப் பொறுத்து அடியேனை இரக்ஷிக்க வேண்டுமென்கிற வருணனைப் பார்த்து சந்தோஷித்து அவனிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு, நந்தகோபருடன் யமுனைக் கரைக்கு வந்து சேர்ந்தனர்,

பிறகு நந்தகோபர் கோபாலர்களுடன் தான் வருணலோகத்தை கண்ட அதிசயங்களையும் அந்த வருணனால் ஸ்ரீ கிருஷ்ணன் பூசிக்கப்பட்டு பிரதியுத்தரஞ் சொன்னது முதலியவைகளையும் சொல்லி மிகவு மாச்சரியப்பட்டு சகல கோபாலர்களும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூசித்து உத்தமமான கதியை அடைய விரும்பினர். ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களுடைய அன்பை தாமறிந்து மிகவுந் திவ்ய தேஜோமயமாகியும் சாசுவதமாகியும், ஒன்றினுலுந் துன்பப்படாததாகியும் ஆதிமத்யம் முடிவில்லாததாகியு மிருக்கின்ற தம்மிட நிஜரூபத்தையும், கோடி சூரிய சமானர்களாயிருக்கிற நித்திய சூரிகளால் சூழப்பட்டும் அதிசயமான ஐஸ்வரியத்துடனும் நித்தியமான சம்பத்துகளால் நிறைந்தும் மகான்களால் அர்ச்சராதி மார்க்கத்தால் அடையத்தக்கதாயும் சத்புருஷர்கள் சரணுகதி மார்க்கப்படிக்கு ஸ்வாமியைச் சரணுகதி பண்ணி அடையத்தக்கதாயுமிருக்கிற ஸ்ரீ வைகுந்தம்வாக்குக்கும் மனதிற்கும் எட்டா பிரபாவமுடையதா யிருந்தாலும், தன்னைப்போலொத்த அன்பனிருக்கையிலொன்றுங் குறைவில்லை யென்பது தெரியப்படுத்தவேண்டி அந்த யமுனைக் கடுத்த பிர்ம்மகிருத மெனும் பேருடைய மடுவினில் கிருஷ்ண ஸ்வாமியினிட ஆக்கினையின்படி ஸ்நானஞ்செய்துக் கொண்

டிருக்கையில், அவர்கட்கு ஞானக்கண்ணைக் கொடுத்து ஸ்ரீ வைகுண்ட லோகத்தையுந் தம்மிட நிஜரூபத்தையுங் காக்ஷிகொடுத்தனர். அதைக் கண்டு சேவித்து அந்த ஆனந்தத்தினால் ஒரு முகூர்த்தம் பரவசர்களா யிருந்தார்கள். பிறகு ஸ்ரீ கிருஷ்ணன் கோபாலர்களை மடுவிலிருந்து கரையேற்றி வீட்டிற்கு வந்து சேர்ந்தனர். பின்பு யமுனையில் கண்ட ஆச்சரியங்களை நினைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனை ஸ்ரீமந் நாராயண னென்றெண்ணி சகல கோபாலர்களும் அவரையே ஆராதனஞ் செய்துகொண்டிருந்தார்கள்.



## இருபத் தொன்பதாவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவானுடைய வேணுகானஸ்வர மகிமைகளில் ஈடுபட்டு கோபிகைகள் பகவானை யடைந்து சுகித்தது.*

வாராய் ராஜேந்திரனே! பரம கிருபா நிதியாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் சமஸ்த கோபிகா ஜனங்களின் இஷ்டங்களைப் பூர்த்திசெய்ய நிச்சயித்தவரா யெழுந்தருளி யிருந்தார். இப்படி யிருக்கின்ற காலத்தில் ஒரு திவசத்தில் அஸ்தமனமாய் சர்வப் பிராணிகளுக்கும் காமபோகங்களை அனுபவிப்பதற்குத் தகுந்த லக்ஷண யுக்த மன்மதன் புஷ்ப சர வருஷங்களை வருஷிப்பதற்குச் சமயமாகிய இராத்திரி காலம் வந்தது. அப்போது மல்லிகை முல்லை ஜாதி சுகந்த புஷ்பங்கள் அலர்ந்து பரிமளித்தன. வண்டினங்கள் புஷ்பங்களின் மேல் அணியணியாகப் பாய்ந்து தேனையுண்டு மகரந்தங்களைப் பூசிக்கொண்டு ரீங்கார விசைகளைப் பாடின. சந்திர கிரணங்களைப் புஜித்துச் சர்வதா தம்பதி சமேதமாய்ப் போகங்களை யனுபவித்துக் கொண்டிருக்கத்தக்க சகோர அன்றிலாதி பக்ஷிகள் கிழக்குத் திசையை விரும்பிப் பார்த்தன. மகா சௌந்திரியவதிகளாகிய கோபிகைகளுக்கு இஷ்டங்களை யடையத்தகுந்த கால லக்ஷணத்திற் குரியவராகியும் சர்வ பிராணிகளுடைய யோகாதிசய வாஞ்சைகளை விருத்தியடையச் செய்கின்ற ஸ்ரீ மன்மத பகவானுக்கு வெண்குடை உருவராகியும் இராத்திரி காலமாகிய ஸ்திரீக்கு மணவாளராகியும் விளங்குகின்ற ஸ்ரீ சந்திர பகவானானவர் கிழக்கு திக்காகிய உத்தம ஸ்திரீயைத் தமது கிரணங்களாகிய கைகளினால் ஆலிங்கனஞ் செய்து இதுவரைக்கும் பிரிந்திருந்ததினால் அவளுக்கு உண்டாயிருந்த தாபங்களைத் தீர்த்து உதயமானார். அந்தச் சந்திரபகவானானவர் அவ்வுதய காலத்தில் கீழ்திசை மகளுடைய முகத்திற்கு ஒரு குங்கும திலகத்தைப்

போலவும், விரகிணி ஜனங்களின்மீது யுத்தத்திற்கு செல்லுகின்ற மன்மதனுக்குச் சுபத்தைக் காண்பிக்கிறதாக அமைந்திருக்கின்ற பூர்ண கும்பத்திற் கொப்பாகவும், மகா காமிகளாகிய ஜனங்களின் மோகமாகிய கொடிகளை அறுக்கத் தாங்கின மாரனுடைய சக்ராயுதத்திற்கு நிகராகவும், காமகேளி விலாசத்தில் மூழ்கி பிரமித்துக் கொண்டிருக்கின்ற விரகிணி ஜன மிருகங்களைச் ஜயிப்பதற்கு மதனன் கொண்டு வந்த ஒரு மோக தீபமென்னவும், யவ்வனமுடைய ஸ்திரீ புருஷர்களின் ஊடல்களாகிய கடின மனோரதாரண்யங்களைக் கொளுத்த வஸந்தன் கொண்டுவந்த பெருந்தீயின் கொழுந்திற்குச் சமானமாகவும், விசித்திரமான ஸ்வரூபத்தை வகித்து விருத்தமாகியும் சிவந்த நிறத்தைகொண்டுந் தோன்றினர். — உடனே சகோராதி பக்ஷி ஸமூகங்கள் மகத்தான சந்தோஷங்களை யடையத்தக்கதாகத் தமது குளிர்ந்த கிரணங்களை வியாபிக்கச் செய்தார்.

இராஜோத்தமனே! ஸ்ரீ புருஷோத்தமராகிய ஸ்ரீ பகவானவர் பிருந்தாவன மகாலக்ஷ்மி முகாரவிந்தத்திற்கு அலங்காரமாகிய நவ குங்குமாங்கித திலகம்போல விளங்கிய இந்த மண்டலாகார சந்திரோதயத்தையும், சந்திரகிரணங்கள் அவ்வனமெங்கும் வியாபித்துக் குளிர்ச்சி யுண்டாக்குதலையும், அதனால் ஆம்பல் முதலிய நானாவித சுகந்த பரிமள புஷ்பவினங்கள் சோபிதமாக மலர்ந்து பிரகாசித்துக்கொண்டிருப்பதையும் இவைகளால் அவ் வனலட்சுமி யடைந்திருக்கிற சௌந்திரியங்களையுங் கண்டு கோபிகைகளின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்யத் தக்கவராய் ஸ்ரீ யமுனாதீரத்திற் கெழுந்தருளி, புன்னகையுடன் மகா கம்பீர மதுர ஸ்வரங்களோடுங் கூடிய வேணுவைத் தமது திருவதரத்தில் வைத்து கானஞ்செய்து விஹரித்துக் கொண்டிருந்தார். அத் தருணத்தில் அந்த வேணு ஸ்வரத்தினால் அந்த பிருந்தாவனத்தில் விருத்தியடைந்து கொண்டிருக்கிற சகல சேதனா சேதனங்களும் பிரம்மானந்த பரவசத்தைக்கொண்டு விளங்கின. கோகுலத்தில் வாசஞ்செய்யும் சகல கோபாலர்களும் கோபிகைகளும் தங்கள் தங்கள் செவியாகிய இந்திரியங்களினால் அந்த மதுரகான தேவகீத ரசங்களை வாரியுண்டு வேறு விஷயங்களில் பிரவேசிக்க சித்த சூன்யர்களா யிருந்தார்கள்.

கோபிகா ஸ்திரீகளோவெனில், ஸ்ரீ பகவானுடைய முரளீ கான மதுர ஸ்வரங்கள் செவிகளில் நுழையும்போது அவற்றுடன் அதிக துரிதமாய்க் கரும்புவில்லை வளைத்து மன்மதன் தொடுத்துவிடுகின்ற புஷ்ப பாணங்களும் அந்த

ஸ்திரீகளினுடைய மார்பில் நுழைந்தன. அதனால் அந்த ஸ்வரங்களைக் கேட்ட மாத்திரத்தில் தங்கள் சரீர ஸ்மரணங்களை மறந்து க்ருஹ கிர்த்தியங்களையெல்லாம் எவையெவையெப்படி யிருந்தனவோ அவைகளை யப்படி யப்படியே விட்டு விட்டவர்களாய் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் வைத்த மனதுடையவர்களாய் ஒருவர்க்கொருவர் சொல்லாமல் அவரவர்கள் யதேச்சா விகாரிகளாய் ப்ராதாக்கள் பர்த்தாக்கள் மைத்துனர்கள் முதலிய பந்து ஜனங்களால் தகையப்பட்டபோதிலும் லேசமாத்திரமும் அவர்கள் ஆக்ஞைக் கஞ்சாமல் வேலைக்குறைவையும் யோசியாமல் நிர்மதிதாரணராய்ச் சர்வ சங்க பரித்தியாகிகளைப்போல் வெளிப்புறப்பட்டு அந்தச் சுகீத த்வனி மார்க்கமாயும், மந்தமாயும் பூரித்த ஸ்தனங்கள் குலுங்கவும், கொடிபோன்ற இடை துவளவும், கூந்தல் சோரவும், மேகலை தாழவும், ஸ்ரீ கோவிந்த சந்தரிசனார்த்த குதூஹலபரர்களாய் ஸ்ரீ யமுனாநதிதீர சமீபத்தில் வந்து சேர்ந்து சந்திர கிரணங்களைக் குவித்தொத்திருக்கின்ற வெண்மணற் குன்றுகளின்மேல் அன்னங்கள் கும்பு கும்பாய் வந்து தங்கியதற் கொப்பாகவும் அவ்விடத்திருக்கின்ற சோலைகளில் விருக்ஷங்களின் கீழ் வரிசை வரிசையாய்க் கொடிகளிருப்பதற் கொப்பாகவும் நின்றார்கள்.

நற்குண விவேகசீல நரேந்திரனே! அந்த ஸ்ரீ கோகுலத்தில் இன்னுஞ் சில கிருஹஸ்தர்களாகிய மகா பாக்கியவான்களினுடைய வீட்டு ஸ்திரீகளில் சிலர் தங்கள் கிருஹஸ்தர்களுடைய ஆக்கினையினால் கிருகத்தில் நிலவறைகளுக்குள் இருக்கின்றவர்கள் வெளிப்புறப்படச் சக்கியமில்லாதவர்களாய் ஸ்ரீ கிருஷ்ண பகவத் குணங்களில் மோகித்து தங்கள் மனோவீதியில் ஸ்ரீ புருஷோத்தமனாகிய ஸ்ரீ மாதவப்பிரானைத் தங்களன்புக்குரிய ஜாரபுருஷனாகப் பாவித்து அதனாலுண்டாகியவிரஹ வேதனைக்கினிக்குச் சகிக்கமாட்டாமல் தங்கள் இருதயங்களில் சர்வ ஜகன்மோகனாகார ஸ்ரீ கிருஷ்ண திவ்ய மங்கள ஸ்வரூபத்தைக் காடாலிங்கனஞ் செய்து மனோசிதர்களாகி ஸ்ரீ பகவதனுபவ சுகலீலைகளை மானசீகமாய் அனுபவித்து மனோலயமடைந்து ப்ரகிருதி பாசபந்த நிர்மித ஜன்ம பாபபுண்யங்கள் நசிக்கத் தக்ஷணமே தேகங்களை விட்டுச் சர்வேந்திரிய நிக்ரக பரம யோகீந்திரர்களுக்கு மடைவதற்கரிய முக்திப்ரதமான ஸ்ரீ பரந்தாமமாகிய பரமபதாநந்த வைபவாதிசயங்களை யடைந்தார்களென்று சுகப்ரம்மம் கிருபையாகச் சொன்னார்.

அதைக் கேட்ட மாத்திரத்தில் மகா ராஜயோகியாகிய பரீக்ஷித்து மகாராஜன் ஸ்ரீ சுகப்ரம்ஹ யோகியைப் பார்த்து "நிர்மலாந்தக் கரண பரிசுத்த இருதய சதா ப்ரஹ்மானந் தானுபவ ஸ்ரீ சுகப்பிரம்ம ரிஷியே! நீரிப்பொழுது சொல்லிய ஸ்திரீ ஜனங்கள் ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் தங்களன்புக் குரிய இனிய போக சுகத்திற்குத் தகுந்த ஜாரபுருஷனென்று நினைத்தார்களே யல்லது அளவிறந்த நித்யகல்யாண குணங் களையுடைய சர்வ சாக்ஷிபூத ஸ்ரீ பரமாத்மாவாகிய பரப்பிரம்ம மென்று நினைக்கவில்லையே! அப்படியிருக்க இந்த ஸ்திரீ ஜனங்கள் சர்வபாப விமுக்தர்களாய் சர்வ விகாராஸ்பதங் களுக்குரிய பாஞ்ச பூதிகமான இச் சரீர ஜன்ம தோஷங்களி னின்றும் நீங்கி நிர்மலாந்தக்கரண பரிசுத்த இருதயானுபவ மோக்ஷ ஸாம்பிராஜ்ஜியத்தை யெவ்விதமாக வடைந்தார்கள். இதைச் சொல்லியருள வேண்டும்" என்று மகாபக்தி சிரத் தையுடன் துதித்துப் பிரார்த்தித்தான்.

இவ்விதமாகப் பிரார்த்தித்த அரசனைப் பார்த்து ஸ்ரீ சுக யோகீந்திரர் சொல்லுகின்றார். மகா பரிசுத்தனே! இந்தக் கோபிகைகள் முதலிய சகல ஸ்திரீகளுஞ் சாமான்ய தர்மத்தி னுலாவது ஸ்ரீ கிருஷ்ணப் பிரீத்யார்த்தத்வ மானஸர்களாய் அன்பைச் செலுத்தினார்களே? அவர்களுக்கு நித்யாநந்த பரமபதங் கிடைத்த லல்லாமற்போகுமோ? ஸ்ரீ பகவானனவர் வேதாந்தத த்வக்ஞான நிச்சயப் பொருளாகியும் சர்வத்திர சாதாரணராகியும் சர்வ பலப்பிர தாதாவாகியு மிருந்த போதிலும் மூக்கியமாய்ச் சமஸ்த பிராணிகளுடைய ஜன்மாந் திரத்திற் செய்த பாபங்களைப் போக்கி இரக்ஷிக்கின்ற பிரபாவ சிரேஷ்டரா யிருக்கிறார்.

ஆகையால் அந்தப் பகவானுடைய மகா மகிமாதிசய குணங்கள் ஸ்ரீ அநந்தராலும் வேத புருஷனாலும் அளவிட் டுத் துதிப்பதற்கு அருமையா யிருக்கின்றன. ஸ்ரீ அப்பிர மேயராகியும் தம்முடைய திவ்யாவதாரங்களில் அதிமானுஷ லீலாசேஷ்டிதங்களை யாசரித்தும் அவைகளின் பிரயோஜ னங்களைத் தான் அடையாதவராகியு மிருக்கின்றபடியால் ஸ்ரீ சுகுணமூர்த்தியாய் விளங்கா நின்ற இந்த ஸ்ரீ கோவிந்த மூர்த்தியினுடைய தியானதரிசன அனுபவங்கள் அடுத்தவர் களாகிய சமஸ்த ஜனங்களும் தேஹசம்பந்த சாமான்ய தோஷங்கள் நசிக்க மோக்ஷத்தை யடைவதற்கு ஹேதுவா யிருக்கின்றனவென்று நினைக்கக்கடவாய். பரதகுல சிரேஷ் டனே! இன்னும் இந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய அபேட்கைஷ யில்லாத சுத்த சத்வாத்மக திவ்ய கல்யாண

குணங்களை நானறிந்த மாத்திரஞ் சொல்லுகின்றேன் சாவதான சித்தமாய்க் கேட்பாயாக. இந்த ஸ்ரீ பகவானை எந்த ஜன்மிகளான போதிலும், பிதாபுத்திர பார்த்த ஸகோத்ராதி உலக சாமான்யபந்து சம்பந்தத்தினாலாவது குலசத்துருவென்று நினைத்தாவது இவருடைய ஜகன்மோகனாகார ஸ்வரூபத்தினிடத்திலும் திவ்யகுண சக்தியிலும் பிரமித்து மோகித்தாவது இவர் சௌரியாதி குணங்களுக்குப் பயந்து பீதியை யடைந்தாவது இவருடைய ஹேயகுணராகித்திய சுத்தஸத்வாத்மக பரம கிருபாதிசய நித்ய கல்யாண குணங்களுக்கு ஈடுபட்டவர்களாகிய பரம பாகவதர்களினுடைய பக்தியினாலாவது இன்னும் எந்த விதத்தினாலாவது ஸ்ரீ ஹரியாகிய பரமாத்மாவுக்குப் பக்தர்களாய் விளங்குகின்ற சமஸ்த பிராணிகளும் மோக்ஷ சாம்பிராஜ்யத்தையே யடைவார்களென்று நினைக்கக்கடவாய்.

வாராய் சுசீலகுணராஜ ரத்நமே! இந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் சர்வாத்மாக்களுக்கும் அந்தரியாமியாய் இரக்ஷித்துக் கொண்டிருக்கின்றதினால் ஸ்ரீ பரம புருஷராகியும் தர்மாதி ஜீவ சமூகங்களையும் பிரகிர்த்தியாதி பதார்த்தங்களையுமடைந்து இவ்வுலகங்களை விளங்கச் செய்தவராகையால், ஸ்ரீ அஜராகியும் சகல வேத நிர்மித சர்வ சத்கர்மங்களுக்கும் மகாயோக தபோதன மௌன விரத முதலிய சுசீலங்களினால் அணிமாதி சித்திகளையடைந்த பரம யோகீந்திரர்களுக்கும் பரப்பிரம்ம சப்தாதி நிர்ணய வேதார்த்த நிச்சய தத்வக் ஞானிகளுக்கும் இந்திராதி சர்வத்ரர்களுக்குஞ் சர்வ பலன்களையுங் கொடுக்கிறவராகையால் ஸ்ரீ யோகீஸ்வரேஸ்வரராகியும் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீ ஹரி ஸ்வரூபராய் விளங்குகின்றார். ஆகையால் இவருடைய தரிசன ஸ்பரிசனங்களை லபிக்கப்பெற்ற ஸ்தாவரங்களும் விமுக்தாத்மாக்களாய்ப் பரிசுத்தாந் தக்கரணங்களை யடைந்து மோக்ஷாநந்த வைபவங்களைப்பெற்று ஆனந்திக்கும். ஆகையால் நீ உனது சம்சய நிவாரணமடைந்து ஸ்ரீ பகவானுடைய திவ்ய சரித்திரங்களைச் செவிக்கானந்தமாய்க் கிரகித்து கிருதார்த்தத்தை யடையக்கடவாய்.

மகாநுபாவனே! இவ்விதம் ஸ்ரீ பகவானுடைய மகா கம்பீரமாதுரிய முரளீகான கீதங்களைக்கேட்டுப் பரவசர்களாய்த் தங்கள் தங்கள் கிருக கிர்த்தியங்களைவிட்டு வந்த இந்த கோபிகா ஸ்திரீகளைப் பார்த்துச் சர்வகுண சாதுரிய சுகுணாதிசய ஸ்ரேஷ்டராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் தமது வாக்வைபவங்கள் விளங்க சொல்லுகின்றார். மகா புண்யவதி

களாகிய கோபீகா ஜனங்களே! ஆயர்பாடியி லொன்றும் உபத்திரவமில்லையே? நீங்கள் இப்படிப்பட்ட இராக்காலத்தில் துஷ்ட ப்ராணிகள் வசிக்கும் இவ்வனத்தில் வரக்காரணமென்ன? அசுரர்கள் வெகுவாய்ச் சஞ்சரிக்கின்றார்கள். நீங்களினிமேலிருக்கக்கூடாது. இந்த யமுனைக்கரையில் கொடியினாற் செய்திருக்கின்ற வீடுகளிருக்கின்றன. அதில் நீங்கள் நடந்துவந்த இளப்பைத் தீர்த்துக்கொண்டு போங்கள். பயம் நாணம் அச்சம் விட்டு யதேச்சையாய் வரத் தகுமோ? நீங்கள் இவ்வனத்திற்கு வந்து விட்ட பின்பு உங்கள் தாய் தந்தைகளும் சகோதரர்களும் புத்திரர்களும் மற்ற பந்துக்களும் உங்களைக் காணாமல் வருந்துவார்கள். நீங்கள் இப்படி நடந்து கொள்ளுதல் தகுமா? கிருஹங்களுக்கு மங்கல தீபம் போன்ற நீங்கள் வெளிப்புறப்பட்டு வீட்டைப் பாழாக்கி உங்கள் பர்த்தாக்களினுடைய ஆக்ஞையைக் கடந்து, மாமி மாமனுருடைய மனதை நோகச்செய்து சகோதரர்களின் ரோஷாபிமானங்களைக் கெடுத்துத் தாய் தந்தைகளினுடைய ஆசாபாசங்களை வெறுத்து ஜாரசோர காமினிகளென வந்தீர்களே! இது உங்களுக்குத் தகாது. நல்ல குல ஸ்திரீகள் உங்களை உத்தமிகளென்று சொல்லுவார்களோ?

ஹே சுபாங்கனைகளே! ஜாரஸ்திரீகளுக்குண்டாகும் துக்கங்களை நீங்கள் அறியீர்களோ? ஒரு சோரஸ்திரீயின் நடத்தையை அவளது நாயகனறிந்தால் உடனே அந்த ஸ்திரீக்குப் பிராணஹானிவரும். நீதியுள்ள அரசனறிந்தால் கோரமாகிய தண்டனைகளை விதிப்பான். மாமியார் மாமனார் அறிந்தால் சன்மானங்களெல்லாம் அழிந்து போகும். ராஜபடர்கள் அறிந்தால் காவலில் வைத்து அவமானங்களைச் செய்வார்கள். தாய்தந்தையர்கள் அறிவார்களேயானால் தலையிரக்கங் கொள்ளுவார்கள். சகோதரர்களுணர்வார்களானால் தங்கள் சௌரியங்குலைந்து ஆணவமழிந்து நாணப்படுவார்கள், ஓரகஸ்திரீகளறிந்தால் தூற்றித் தெருவில்வைத்து ஏசுவார்கள். வயிற்றிற் பிறந்த பிள்ளைகளறிவார்களானால் ஆதரிக்கமாட்டார்கள். இஷ்ட ஜன பந்துக்கள் தெரிந்துக் கொள்வார்களானால் தங்களினங்களில் சேர்க்க மாட்டார்கள். பிறர்களுணர்வார்களாகில் அலக்ஷியஞ்செய்து காரி துப்புவார்கள். ஆகையால் இகத்தில் இந்த ஜன்மத்திலே சுகமென்பது லேசமுங் கிடைக்கமாட்டாது. பராணுபவத்திலும் ஜன்மாந்திரங்களிலும் நற்கதி சற்றும் நேரிடாது. நிர்பயானந்த சுகபோகங்கள்

இவர்களுக்கு ஒருக்காலும் லபிக்கின்றதில்லை. ஆகையால் அருமையாகிய மனுஷ்யஜன்மங்களை எடுத்த உத்தம ஸ்திரீகள் இந்த சோர அல்ப புத்தியை ஒருக்காலும் அடையத்தகாது.

வாருங்கள் புண்யவதிகளே! உத்தம குலத்திற் பிறந்த பதிவிரதா பக்தியுள்ள உத்தமியானவள் தன்னுடைய அதிருஷ்டானுகூலமாகத் தனக்கு நேரிட்டமணவாளன் உத்தம புருஷ சிரேஷ்டனா யிருந்தாலும், அல்லது தான் பூர்வஞ் செய்த தவக்குறைவினால் தனக்கு நேரிட்ட கணவன் யாதொரு நன்மார்க்க நடவடிக்கைக ளில்லாதவனாயினும், நரை மூப்புகளையுடைய வயது சென்றவனாயினும், அங்க ஈனனானபோதிலும் கேவலம் பாமரனாகியும் புத்தி ஈனனாகியு மிருந்தபோதிலும், சம்பாதிக்கத் திறமை யற்றவனாயினும், அப்புருஷனைத் தெய்வமாக நினைத்துப் பய பக்தியைச் செலுத்திச் சந்தோஷத்தை யடைந்தவளாகியே இருப்பாள். வேறுபாடு நினைத்தல் உத்தம ஸ்திரீகளுக்குத் தர்மமல்ல. இந்தச் செய்கையைக் குறித்து தெய்வம் க்ஷமிக்கமாட்டாது. தன்னுடைய புருஷனை தனக்கு தெய்வமென்று நினைத்து அவனைப் பரிபாலனஞ் செய்யாதவ ளெவளோ அவளே மகா பாபத்திற்குரிய துஷ்ட ஸ்திரீ, அந்த துஷ்ட ஸ்திரீயை ஸ்ரீ ஹரியானவர் இயமன் கையிற் காட்டிக்கொடுப்பார். புண்யவதிகளே! இந்த ஸ்ரீ யமுனா நதியானது பூர்ணமாய் ப்ரவாஹித்து இவ்வனத்திலுள்ள விருக்ஷம் கொடி-புதர் - முதலியவைகளையும் நானாவித பரிமளங்களைத் தராநின்ற விசித்திர புஷ்பச்செடிகளையும் விருத்தியடையச்செய்து அலங்காரமாகிய தளிர்களாலும் விகசித்திருக்கின்ற புஷ்பங்களாலுஞ் சோபித்து இந்தப் பூர்ணசந்திரோதயத்தினாலும் குளிர்ந்த காற்றினாலும் சர்வஜன இருதயானந்தகரமாய் விளங்குகின்றது. ஆகையால் நான் மனோவிலாசமாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றேன். நீங்களுங் கண்டு சந்தோஷித்தீர்கள். இனியாவது சீக்கிரமாக உங்கள் கிருகத்திற்குச் செல்லுங்கள். நீங்கள் எனது ஜகன்மோகனாகார லீலா குணங்களுக்கு இச்சித்து வந்தீர்கள். அதனாற் குற்றமில்லை - சமஸ்த பிராணிகளும் எனக்கு இஷ்ட வினியோகமாகவே யிருக்கும். ஆயினும் சாசுவதமான கர்மங்களைப் பேசுகின்ற பெரியோர்களின் நீதிக்கு ஒரு குறைவும் வராமல் சீக்கிரமாகச் சென்று உங்கள் பதிகளைப் பூசித்துக் கொண்டிருங்கள். இனி காலவிளம்பனம் வேண்டாம். நற்குண மடைந்தையர்களே! எனது திவ்விய குணங்களில் இச்சை கொள்ளுகின்றவர்கள் எந்தப் பிராணிக

ளாயிருந்தபோதிலும் அவர்கள் விஷயத்தில் எனக்குச் சந்தோஷமே யுண்டாகும். தியானத்தினுலாவது, உத்தம பக்தி சிரத்தையுடன் ஆநந்தத்தைகொண்டு கேள்வி செய்வதினுலாவது, எனது திவ்ய ரூபாதிசயங்களைத் தரிசிக்கின்றதினுலாவது, காலக்ஷேபமாகக் குணநுபவஞ் செய்கின்றதினுலாவது என்னை மனதினுள் வகித்துப் பக்தி செய்வார்களேயாகுல் அதுவே அவர்களுக்குச் சகலாபீஷ்ட மனோரதங்களாக விருக்கும். அவர்களுஞ் சகல பாபவிமோசனர்களாய் முக்தி பெறுவார்கள். ஆகையால் நீங்களும் மகா சுகிர்தர்களாய் சீக்கிரமாக உங்கள் கிருகத்திற்குச் செல்லுங்களென்று பகவான் சொல்லி யருளினர்.

இவ்விதம் ஸ்ரீ பகவான் உத்தம தர்மநீதி வசனங்களால் சிக்ஷித்துச் சொல்லுகின்றதைக்கேட்டு அந்தக் கோபிகைகள் யாவரும் பயந்து பெருமூச்செறிந்து முகங்கள் வாட கண்கள் நீர்சொரிய நாவுகள் வறள வார்த்தைகள் தவற கன்னங்களிற் கைகளை வைத்துக்கொண்டு துக்கசமுத்திரத்தில் மூழ்கினவர்களாய் ஸ்ரீ பகவானைப் பார்த்து சொல்லுகின்ருர்கள் :

பக்தவத்ஸலராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானே! உமது செள்லப்யாதிசய கிருபாமாத்திர பிரசந்நத்வாதி குணங்கள் எங்கள் விஷயத்தில் இவ்வளவு குரூரமாய் விளங்குமென்று நாங்கள் கனவிலும் நினைக்கவில்லையே! நாங்கள் சத்தியமாக உம்மையே நம்பி ஆஸ்ரயித்து உமது பரம கிருபையாகிற அன்பினுல் எங்கள் கிருஹ கிர்த்தியங்களை விடுத்து சர்வேந்திரியங்களையும் உமக்கே சமர்ப்பித்து அந்த சாமன்ய தர்ம கிர்த்தியங்களில் நின்றும் எளிதில் விடுபட்டவர்களாய் உமது திவ்ய ஸ்ரீ சரணுரவிந்தங்களை யர்ச்சிக்க நாங்கள் தேடியுங் காணமல் இம்முரளிகான திவ்ய ஸ்வரங்களின் மார்க்கமாக அலைந்து தேடிக்கொண்டு வந்தடைந்தோம்.

பரமசாதுஜன பரமேகாந்திகளான முமுட்சு ஜனங்களை கிருபை செய்து ரக்ஷிக்கின்றதுபோல் எங்களை உமது திவ்யாக்ஞையாகிய வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிற கர்மபலங்களைக் கொடுக்கத்தக்க வியவஹார நியதிகளைக் காட்டி அனுதரணை செய்யாமல் நாங்கள் செய்த சர்வாபராதங்களையும் மன்னித்து எங்களுடைய சர்வ தோஷங்களையும் போக்கி எங்களை அங்கீகரித்து எங்கள் மனோரதங்களைத் திருப்திசெய்து இரக்ஷிக்கக்கடவீர். தர்மஸ்வரூபராகிய ஸ்ரீ பகவானே! தேவரீருடைய உத்தம குணங்களில் ஈடுபட்ட எங்களுக்குப் பதிகளையும், புத்திரர்களையும், தாய் தந்தைகள் சகோதரர்கள் முதலிய சமஸ்த பந்துக்களையும் பரிபாலனஞ்செய்து சகல புண்யங்

களையும் சம்பாதிக்கும்படி ஆக்ஞாபித்தீர். அவை சத்தியமேயாகும். ஆயினும் எப்படிப்பட்டவர்களுக்கும் ஆஸ்ரயிப்பதற்கரிய நீர் எளியவர்களான எங்களுக்குக் கிடைத்துச் சமஸ்தமான தேஹகாரிகளும் ஸ்வரூபங்களுங் குணங்களுமாக நீரே விளங்குகின்றது மன்றியில் தேகசம்பந்தத்திற்கே யுரிய பிதா பதிபுத்திராதிகளைப் பார்க்கிலும் தேஹானு குணமாகவும் ஆத்மானு குணமாகவும் உபய தர்மத்திற் கொப்பாகிய பதி புத்திராதி சர்வ சம்பந்த திவ்யஸ்வரூபாதி நாமங்களை நீரேவகித்து தீனர்களுடைய இஷ்டபலத்தைக் கொடுக்கிறவராய் விளங்குகின்றீரென்பது எங்களுக்குத் தோன்றும்படி அறிவைத் தந்து, இப்போது பூர்வ கர்மங்களைக் காட்டி மறுப்பது என்ன தர்மமோ? பரமாத்மாவாகிய உம்மையே பரமஸாது ஸஜ்ஜனங்கள் சதா அனுபவித்துக்கொண்டிருக்கின்றார்கள். நீர் சர்வ ஜகன்மய சாதுரியமாயா மூர்த்தியாகையால் இவ்வுலகத்தில் சர்வ கர்ம தர்மங்களையும் ஸ்தாபித்தீர். உமது பக்தர்களான எங்கள் விஷயத்தில் கர்மாதிகாரிகளினுடைய தர்மங்களையும் தேஹ சம்பந்தரான புத்திரன் முதலியவர்களையுங் காட்டி ஸ்ரீ பகவானாகிய உம்முடைய விஷயத்தில் எங்களுக்கு உமது நிஷ்காரணமான கிருபையினால் உண்டான அன்பை நீரே யொழிக்க நினைப்பது என்ன தர்ம சங்கல்பமோ? ஸ்ரீ ஹரியே! எங்களைக் கிருபைசெய்து எங்கள் தாபங்களைத் தீர்த்து இரக்ஷிக்கக்கடவீர்.

ஸ்ரீ கிருஷ்ணபகவானே! உமது ஸ்ரீ பாத பத்மங்களைக் கண்டு சேவிப்பதற்கு நடையிசைகின்ற எங்கள்பாதங்கள் உமது திவ்யாக்ஞைக் கஞ்சி நாங்கள் கிருகத்தைச் குறித்துச் செல்ல நினைக்கும்போது நடக்கச் சக்தியற்றனவாகின்றனவே. உமது ஆகாரமாகிற தாமரைபுஷ்பங்களை ஸ்பரிசிக்கவேண்டுமென்று துணிகின்ற எங்கள் கைகள் இதர கிருத்தியங்களை யாசரிக்கச் சோருகின்றனவே. உமது திவ்ய வாக்கில் நின்றும் பிரவகிக்கின்ற மகா சுகுமார மதுர வசனங்களைக் கேட்டு திருப்தியடைகின்ற எங்கள் செவிகள் அன்னிய வசனங்களைக் கேட்க விசையவில்லையே. உமது சர்வ ஜகன்மோகனாகார திவ்ய சுந்தர ஸ்வரூபத்தைச் சேவித்து பிரமாநந்த மடைகின்ற எங்கள் நேத்திரங்கள் இதர அன்னிய ஸ்வரூபங்களை காணச் சம்மதிக்கவில்லையே. உமது சர்வபாப நிவாரண திவ்யநாமங்களைத் தொடுக்க விசைந்த எங்கள் நாவானது அன்ய வசனங்களைப் பிதற்றச் சந்தோஷிக்கவில்லையே. நாங்களினி என்ன செய்யப் போகின்றோம். எங்கள் சர்வேந்திரியங்களையும் மனோ தர்மங்களையுங் கிருபையாக அபகரித்த திவ்ய சுந்தரா

கார நடனமூர்த்தியே! எங்களை அங்கீகரித்து இரக்ஷிக்கக் கடவீர். உமது பரம கிருபா சம்பந்தத்தைப் பெருமல் நாங்கள் செல்கின்றதில்லை. தடாகங்களில் நன்ருய் மலர்ந்து பரிமளிக்கின்ற திவ்ய பத்ம புஷ்ப மதுக்களை யுண்டு ஆனந்தித்துக் கொண்டிருக்கின்ற வண்டினங்கள் அன்ய புஷ்பங்களை யடைந்து சுகிக்க நினைக்குமோ! அதுபோல நாங்களும் உம்மைப் பிரிய மனமில்லாதவர்களாய் அன்ய விச்சை விரும்பாதவர்களா யிருக்கின்ரும்.

ஸ்ரீ கிருஷ்ண பகவானே! ஸ்ரீ மகா லக்ஷ்மியாகிய ஸ்ரீ ரமாகாந்தாமணியானவள் வெகுகாலந் தபசுசெய்து பக்திஸ்ரத்தையுடன் நானுவிதமாகிய சுப விரதங்களை யாசரித்து, ஸ்ரீ ஹரியாகிய தேவரீருக்கே சமர்ப்பணஞ்செய்து உமது விசாலமாகிய வக்ஷஸ்தலத்தில் நித்தியமாய் வகித்துக்கொண்டிருந்தும் உமது நாமஸ்துதி பூர்வகமாக கைங்கரியங்களை யாசரித்துக்கொண்டு உமது திவ்ய பாதாரவிந்தங்களுடைய ஸ்ரீ பாததூளிகளை லபிக்கப்பெற்றுக் கொள்வதற்கு இச்சிப்பாளேயாகில் நாங்களடைய நினைப்பது குற்றமோ? ஓ சுவாமி! கிருபை செய்யக்கடவீர், உமது திவ்ய சுந்தர மந்தகாஸ முகாரவிந்தத்தில் விளங்கிய ஜகன் மாயா மோகன இள நகைக்கும் பரம கிருபையாகிய அன்பினுல் திருவாய் மலர்ந்தருளுகின்ற திவ்ய வசனுமிர்தங்களுக்கும் தமது கடாக்ஷ வீட்சண்யாதி சயங்களுக்கும் நாங்கள் பாத்ரர் ஆகும்படி கிருபைசெய்து எம்மைப் பிணிக்கும் பந்தங்களை ஒழித்து எம்மை அங்கீகரித்து உமதபிமான பிரேமாதிசயத்தைக் கொண்டு மன்மத பாணங்களால் அடிப்பட்டு அலைந்து வந்த எங்களுக்கு உமது தாஸ்ய ருசியை யருளி இரக்ஷிக்கக்கடவீர்.

புண்யபுருஷரே! இவ்வுலகத்தில் மிகவுஞ் சாதுரிய சுந்தர விட புருஷர்களினுடைய மோக பாசங்களி லகப்பட்டு அலைந்த விரகிணீ பேதைச் சிறுபெண்கள் அந்தப் புருஷர்களா லாதரிக்கப்பட்டு அவர்களுடன் சுகித்து ஆனந்த சந்தோஷத்தைக் கொள்ளவில்லையா! இந்த பேதமைக் குணங்கள் எங்களுக்குமாத்திர முண்டானதல்லவே. வாரீர் சர்வ ஜன மனோரம்ய திவ்ய சுந்தர வதனுரவிந்தரே! உமது நித்ய யோக மாயா சாதுரியாதிசயங்களுக்கு பிரம்மா முதலிய பிரஜாபதிகளும், தேவாசுர கந்தர்வாதிகளும் பெண்களைப் போல் வசப்பட்டு மோகிதர்க ளாவார்களேயானுல் சாமான்ய பேதைகளாகிய நாங்கள் வசப்பட்டலைவதும் அருமையோ? என்ன செய்யப் போகின்ரும். ஸ்ரீ புருஷோத்தமரே!

மன்மதனென்கிற அக்கினியினால் வருத்தமுறும் எங்களை ஆதரித்து ஆலிங்கனஞ்செய்து இரக்ஷிக்கக்கடவீர்.

ஸ்ரீ ஆஸ்ரிதஜன ரக்ஷாமணியாகிய ஸ்ரீ பகவானே! உமது திவ்யாகாராமிர்த வருஷங்களை எங்களுடன் கூடி எங்கள் சரீர தாபந்தீர வருஷிக்காவிட்டாலும் உமது லக்ஷ்மீ விலாச நிர்மலமான விசால வக்ஷஸ்தலத்தை எங்களுடைய குசங்களின்மீது ஸ்பரிசித்து எங்களைச் சேர்ந்தணையாவிடினும் உமது திவ்ய கரங்களினால் எங்கள் அளகபாரத்தில் சுகந்த புஷ்பமாலைகளை முடிக்காவிடினும், உமது பரம கிருபா கடாக்ஷ வீக்ஷண்யத்தினால் எங்கள் முகங்களைக் கடாக்ஷிக்காவிடினும், உமது சர்வ ஜன மனோரஞ்சனமாகிய வசனங்களினால் எங்கள் செவிகளின் கலிதீர வசனிக்காமல் அனுதாவு செய்யினும், நாங்கள் எங்கள் சரீரம் நசித்து ஒடுங்கி யழிந்து போவோமேயல்லாமல், நாங்கள் விட்டுவந்த சம்சாரபந்தங்களை மீண்டும் ஏற்றுக்கொள்வோம். இனி உம்மைத் தவிர வேறொருவரை அடுப்போமோ? எங்கள் பிரபுவே! தீனர்களாகிய எங்கள் முறைகள் கேட்கவில்லையோ? கேட்டும் உபேக்ஷை செய்கின்றீரோ! உமது முகாரவிந்த தரிசனத்தினாலும் கடாக்ஷ வீக்ஷண்யத்தினாலும் உமது திருவவதாரங்களினால் பரிசுத்தமாகப்பட்ட வேணுவில் உண்டாகிய மகா மாதுரியமான தேவகானகீதஸ்வரங்கள் எங்கள் செவிவழியாக நுழைந்து இருதயங்களைப் பேதித்துக் கலக்கப் பஞ்சபாணாக்கினிகள் எங்கள் சரீரங்களைத் தகிக்க மன்மதாக்கினி தாபஜ்வரங்களில் நாங்களகப்பட்டுத் தகிக்கப் படலாமோ. இறந்துபோகாமல் இப்பொழுதே முன்னதாய்த் திருவடித் தாமரைகளுக்குச் சரணமாகவடைந்தோம். எங்களை யாதரிக்காவிடின் சத்தியமாய் உமது சரணாரவிந்த சாக்ஷியாய் உமக்கே பிரீதியாய் எங்கள் சரீரங்களை விட்டுவிடுவோம். தேவ! எங்கள் முறையைக் கேளும். காப்பாற்றி அருளும்.

ஸ்ரீ கோபிகாசன வல்லபரே! இந்தப் பிருந்தாவனத்திலுள்ள சகல ஸ்தாவர ஸ்வரூபங்களாகிய விருக்ஷலதாகுல்மாதிகளும், சமஸ்த மிருகபக்ஷி கோகணசமூகங்களும், உம்மைத் தரிசனம் செய்தமாத்திரத்திலும் உமது கானஸ்வரங்களைக் கேட்டமாத்திரத்திலும் மனது கரைந்து உடலுருகிச் சர்வேந்திரியங்களும் லயித்துத் தங்கள் தங்கள் வியாபார சஞ்சாரங்களை யொழித்து சித்திரத்தி லெழுதிய பிரதிமைகளைப் போல உம்மையே இச்சித்து மனமுருகி நிற்குமானால், விதிபூர்வமாக ஜன்மங்களை யெடுத்து உமது கிருபைக்குப் பாத்திரர்களாய் எங்கள் சர்வேந்திரிய வியாபகங்களையும்

உமக்கே சமர்ப்பித்து உம்மையே தரிசனஞ் செய்து உமது மதுர கீத ஸ்வரங்களைக் கேட்டு ஆனந்தித்திருக்கின்ற நாங்கள் உம்மை இச்சித்தடைவ்தும் ஓராச்சரியமோ? ஸ்ரீ கிருபா சமுத்திரரே! இந்த மாரனெனவன் நம்மையொத்த புருஷர்கள் மேல் நாம் ஆண்மை செலுத்தவேண்டுமே யல்லாமல் ஸ்திரீகள்மேல் புஜபலங் காட்டலாகா தென்கிற எண்ணம் எவ்வளவுங் கொள்ளாமல் நிர்த்தயனாய் நீர் எதிரி லிருக்கிறதையும் யோசியாமல் அகங்காரியாய் எங்களைத் தகிக்கின்றானே. இதைப் பார்த்துக் கொண்டிருத்தல் உம்மு டைய சௌரியத்திற்குத் தகுமா? மகா வீரர்கள் தங்களுக்கு யாதொரு விஷயத்திலும் சம்பந்தப்படாத அன்னியர்களை வேறொருவன் வருத்தப்படுத்தக் காண்பார்களாகில் இரக்கங் கொண்டு தங்கள் சொந்தக் காரியமாய்ப் பிரவேசித்து அவனைச் செயித்து வருத்தப் பட்டவர்களைக் காப்பாற்றுவார் களே. அப்படி யிருக்கப் பந்துவாகியும் கோகுல நாதனுக் குப் புத்திரராகியும் எங்களை எல்லாந் தாஸ்யர்களாகக் கொண்டவராயும் எங்களை ரக்ஷிக்கத்தக்க சர்வ சுதந்திரங் களையு முடையவராகியும், புருஷோத்தமராகியும், அதிதீர ராகியும் இருக்கின்ற நீரிப்படிப் பார்த்திருக்கலாமா? சீக்கிர மாய் கிருபை கொண்டு ரக்ஷிக்கக் கடவீர். நீர் கிருபை செய் யாவிடில் நாங்களென்னமாய் நிர்வகிப்போம். ஸ்ரீ கமலாக்ஷ ராகிய ஸ்ரீ பகவானே! பூர்வம் தேவர்களையும் சாதுக்களையும் விரோதி நிக்கிரகஞ்செய்து இரக்ஷித்தாற்போல், இந்த அவதாரத்தில் எங்களுக் கபயஸ்தங் கொடுத்து உமது அஸ்தங்களை எங்கள் முடியினும் மார்பினும் வைத்து ஸ்பரி சித்து எங்கள் மோகன மூர்ச்சைகளைத் தவிர்த்து இரக்ஷிக்கக் கடவீர். காட்டுத் தீயானது ஜ்வாலைகளை வீசிக்கொண்டு வந்து கோபால கோபீ ஜனங்களையும் வளைத்துக்கொண்ட போது நீர் அத்தீயில் நின்றும் அவர்களை காப்பாற்றினீரே. அப்படிப்பட்ட உமக்கு இந்தச் சந்திர கிரணங்களாகிய வெண்ணெருப்பினால் நாங்கள் துன்பமடையாமல் காப்பாற் றுதலும் அருமையோ! சர்வவல்லமையுள்ள மாதவனே! பிரசண்ட காற்றுகளோடுங் கூடிய கல்மழையானது சகலப் பிராணிகளையும் ஏககாலத்தி லழிக்கும்படி யுண்டான காலத் தில், கோவர்த்தனத்தை யெடுத்துக் குடையாகப் பிடித்து பெருங்காற்றையும் கல்மழையையும் தடுத்து, எல்லாப் பிராணிகளையும் காப்பாற்றிய வுமக்கு புலிபோற் சீறும் சிறு வாடைக் காற்றையும் மன்மதனால் விடப்பட்டு எங்கள் மேல் அழல்போல் வீசும் அப்புஷ்ப மாரியையும் நீக்கி நாங்கள் உள்ளக்களிப்படைய ரக்ஷித்தலும் பிரயாசமோ? சகல புவன

தார நாதரே ! உம்மை விரும்பாத அரச வஸ்துவாகிய சிறு வேணுவின் குழலுக்கு மதுர அதராமிர்தத்தைக் கொடுக்கக் கருணைகொண்ட நீர் உம்மை அடுத்து பிரார்த்திக்கின்ற வின்பதுன்ப மறியத்தக்க எங்களுக்குப் பாவசானந்த சுக போக பவளம்போன்ற அதரமாகிற அமுதரசத்தைக் கொடாமலிருப்பதென்ன காரணமோ? கொடிய காளியனு டைய விஷ உபத்திரவங்களை நீக்கி யமுனைநதிஜலம் சகல சராசராத் மகங்களுக்கும் உபயோகமாகும்படிச் செய்த உமது முரளீகான ஸ்வரத்தைக் கேட்டதும் எங்களுக்குள் உண் டான விரகவேதனை விஷதாபத்தை நீக்கி எங்களுடைய ஆத்மாக்கள் குளிர்ச்சியைக் கொள்ளும்படித் தேவரீருடைய தாமரைபோன்ற கரத்தின் ஸ்பரிசமாகிற சீதளஜலத்தைக் கிருபைசெய்தலுங் கூடாதோ ? எங்களுடைய பரிதாப வசனங்களாகிய முறைகளைச் செவிகொடுத்து அங்கீகரியாவர் போல உபேக்ஷை செய்வது உமக்கு என்ன தர்மமோ ! இப்படி உபேக்ஷை செய்வீரானால் நாங்கள் இந்த விரகாக்கினி யில் எங்கள் தேகங்களையொழித்தாவது உம்மையே யாஸ்ர யித்து உமதனுபவங்களை நாங்களடையாமற் போகின்றதில்லை யென்று சொன்னார்கள்.

வாராய் மகாராஜனே ! இப்படிக் கோபிகைகள் யாவரும் ஏகமாய்ச் சரீரத்தை ஒழிக்க யத்தனித்து மன்மதனுடைய புஷ்பசர வருஷ பரவசர்களாய் வசனிக்கின்ற தீனவசனங் களைக் கேட்டமாத்திரத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் முக மலர்ச்சியுடன் புன்னகைசெய்து தம்மிற்றாம் திருப்தி யடைந்து நிர்மலராயிருந்துகொண்டு இந்த கோபிகை களுக்கு அன்புள்ள ரூபத்துடன் அவர்களைக் கலந்து விளங் கினார். இப்படி சர்வ ஜகதீஸ்வரராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவா னவர் இந்த கோபிகா ஜனங்களினுள் பிரசந்நரான மாத்தி ரத்தில் அவர்களும் அப்படியே அன்னிய விஷயங்களை மறந்து தாங்கள் ஒருவர்க்கொருவர் விசாரணையுமற்று ஏக காலத்தில் அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய கடைக்கண் பார்வையி லுண்டாகிய கிருபாசமுத்திரத்தில் மூழ்கினவர்க ளாய் தங்கள் ஸ்தன பந்தங்களும் அரைநூல் மாலைகளும் தனக்குத் தானே நழுவக்காடாலிங்கனங்களைச்செய்து கேளி விலாசர்களாய் மானசவியோக தாபங்கள் தீர வசனித் துத் திருவதராமிர்த பானங்களைச் செய்து திருப்தி யடைந் தார்கள். பிறகு ஸ்ரீ கிருஷ்ண பகவான் மகா சுந்தரிகளாகிய கோபிகைகள் பிரம்மானந்த முடையவர்களாய்த் தம்மைச் சூழ்ந்துகொண்டு பணிசெய்யப் பூரண சந்திரோதய கிரணங்

களை வீசும் இளநகையோடுங்கூடிய முகாரவிந்தத்தை யுடைய வராய் நக்ஷத்திரங்களின் நடுவில் பூர்ண சந்திரன் பிரகாசிப் பதுபோல அந்தக் கோபிகா ஸ்திரீகளின் நடுவில் பிரகா சித்தார்.

இந்த ஸ்திரீகள் யாவரும் ஸ்ரீ பகவானைக் குறித்து மாதுரிய குரலோசைகளோடு மதுர கீதங்களைப்பாட அந்த ஸ்வரங்களுக்கிசைந்து சந்தோஷித்து அவைகளுக்குத் தகுந்தபடி அபிநயங்காட்டி நர்த்தனஞ்செய்துகொண்டு தமது மார்பிலணிந்த ஸ்ரீ வைஜயந்தீ மாலையுடன் சர்வாபர ணங்களும் ஜ்வலிக்க அந்த பிருந்தாவனமாகிய மங்கையி னுடைய மார்பிலணிந்த பதக்கத்தில் சுற்றுத்தொங்கல் முத்து களைப்போலவும் சுற்றிழைத்த ரத்தினங்களைப் போலவும் மிகவும் யவ்வனமுள்ள கோபிகைகள் தம்மைச் சூழ்ந்து உபசரித்துக்கொண்டிருக்க அவர்களிடையில் நடுநாயக, ரத்தினத்தைப்போல விளங்கிநின்றார். செங்குமுதம் வெண் குமுதமென்னும் அல்லிகளு மலர்ந்து பரிமளிக்கச் செய் கின்ற அமுதகிரண சந்திரனுக் கொப்பாகவும் செந்தாமரை வெண்டாமரைகளை மலர்த்திச் சுகந்தம் வீசச்செய்கின்ற ஆயிரங்கிரண சூரியனைப்போலும் யாதொரு பொருளினுந் தோயாதவராய் தோய்ந்தவரைப் போலுமிருந்து நடக்கின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் சந்திரகிரணத்தைப் போலும் விளங்குகின்ற மந்தகாச சுந்தர வதனாரவிந்தத்திலுண்டாகும் புன்சிரிப்பினாலும், நடிப்பதினாலும் மகிழ்வைத் தருகின்ற மதுரமான வசனங்களை நயம்பொருந்த வுரைத்தலினாலும் தாமரை நிகர்த்த கடைக்கண் பார்வையினாலும் பலவித ஸ்பரிச விசேஷத்தினாலும் அந்தக் கோபக் கன்னிகா மணிகள் யாவருக்கும் தனித்தனிப் பேரானந்த சந்தோ ஷத்தை யுண்டாக்கினர்.

மேலும் சூத்திர தாரியாய்ச் சகலாத்மாக்களையும் நடிப் பிக்கின்ற சர்வ வல்லவராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் ஒரு ஸ்திரீயின் கூந்தலைத் திருத்தி முல்லை மாலிகையைத் தரிப்பார். ஒரு ஸ்திரீயின் முகத்திலுண்டாகிய வேர்வை யைத் துடைத்துத் திலகந் திருத்துவார். ஒரு ஸ்திரீயின் முன் நெற்றி மயிரைச் சரியாகத் தள்ளுவார். ஒருவளுக்குச் சிரோபூஷணந் திருத்துவார். ஒருவளுக்குக் கர்ணபூஷணந் திருத்துவார். ஒரு ஸ்திரியின் மார்பிலணிந்த பவழமாலை முத்துமாலை கடலைமணித் தாழ்வடம் சந்திராரா முதலியவை களின் சிக்குகளை வாங்குவார். ஒரு ஸ்திரீயின் அஸ்த பூஷணங்களைத் திருத்துவார். ஒரு ஸ்திரீக்கு இடையணி

யலங்கரிப்பார். ஒரு ஸ்திரீக்குச் சரணவணிகளை முறைப் படுத்துவார். ஒருவளுக்கு ஆடைதிருத்துவார். இவ் வண்ணம் அந்த கோபிகா வனிதைகள் யாவருடனும் விளையாடிக் கொண்டிருந்து, விசாலமாய்ப் பனிபோன்ற வெளுப்பாயும் தாமரை நெய்தல் சண்பக முதலிய மலர்க ளுடைய வாசனைகலந்த தென்றற் காற்றுடன் கூடிக்கொண் டிருக்கின்ற மணற் குன்றினிலே, சில ஸ்திரீகளின் ஸ்தனங் கள் தம்மிட மார்பினில் படும்படி ஆலிங்கனஞ்செய்து கொண்டும், சில ஸ்திரீகளுடைய ஸ்தனங்களைக் கையினுற் பிடித்துக்கொண்டும், சிலர் அறையினிற் கட்டியிருக்கிற வெண்பட்டாடைகள் தானுய் நழுவ அதைப் பார்த்து பரிகா சஞ் செய்யவும், சில ஸ்திரீகளுடைய தொடைகளை தம்மிட கைகளில் தொடவும், சிலபேருடைய ஸ்தனங்களை தம்மிட நகங்களினுல் அலங்கரிக்கவு மிப்படி விளையாடிக்கொண் டிருந்தார்.

விரக்தசீலனுகிய மகாராஜனே! இவ்விதம் ஸ்ரீ பகவ தனுபவங்களைப் பெற்றுக்கொண்டிருக்கின்ற மகா தன்னியர்க ளாகிய கோபிகைகள் ஸ்ரீ மாதவனிடத்தில் மனதுடைய மன்மத பரவசர்களாய் மதித்து, பகவானுனவர் நம்மிடத்தி லாசைகொள்ளும் ப்ராப்தம் லபிக்கப் பெற்ருேமே இனி யிவ் வனுபவங்களை யொழிவதில்லை யென்று நினைத்தார்கள். அப்படி அவர்கள் நினைத்த மாத்திரத்தில் ஜிதேந்திரியரான ஸ்ரீ பகவான் அந்த ஸ்திரீ ஜனங்களினுடைய கர்வங்கள் பங்கமாகும்படி கர்வப்படாதவளாகி யிருந்த ஒரு பூங்கொடி போன்ற மங்கையுடன் சற்றுநேரத்திற்குள் அந்தர்த்தா னத்தை யடைந்து மறைந்தருளினுர்.



## முப்பதாவது அத்தியாயம்



*கோபிகைகள் பிருந்தாரண்ய பிரதேசங்களில் ஸ்ரீபகவானைத்தேடி ஸ்ரீகிருஷ்ண குணங்களை யனுபவித்தது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் மஹாராஜனே! இவ்விதமாக ஸ்ரீ கிருஷ்ண பக வான் அந்தர்த்தானமானவுடனே இந்தச் சுகுமாரவதிக ளாகிய கோபிகா ஜனங்கள் தங்களுக்கு பிரசன்னராய்த் தங்களைக் காடாலிங்கனஞ்செய்து மதுரமாக வசனித்துக் கொண்டிருந்து மாயமாய் மறைந்துபோன ஸ்வாமியைக் காணுமல், கஜேந்திரவேஷ்டனைக் காணுத யானைப் பேடு

களைப்போல் மிகவுந் தாபமடைந்து மதனஜ்வர பீடிதர்களாய் அந்த ஸ்ரீ பகவானுடைய மஹா கம்பீர நடையழகிலும் அவருடைய விலாசப்பார்வை விளையாட்டுகளிலும் தங்கள் சித்தத்தை வைத்து, வருந்தியவர்களாய் பித்துபிடித்துத் தங்களுக்குள் தாங்களே ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பாவித்துக்கொண்டு ஸ்ரீ பகவத் குணவிசேஷ விளையாட்டுகளால் அந்த வனமெங்கும் நிர்ப்பயர்களாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள்.

இன்னும் சர்வ பிராணிகளுக்கும் அந்தராத்ம ஸ்வரூபராகிய ஸ்ரீ பரமாத்மரை இந்தக் கோபிகைகள் காளிந்தீ தீர வனாந்திரங்களில் விருக்ஷலதா குல்மாதி ஸ்தாவரங்களைப் பார்த்து யாவற்றையுந் தங்களைப்போலவே நினைத்துக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ண கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டே தேடி வெகு தூரஞ் சஞ்சரித்தார்கள். இப்படி தேடிக்கொண்டு திரிகின்றவர்களுள் சிலர் மல்லிகை முதலிய புஷ்பவனங்களே எங்கள் மானமாகிற தனங்களை யபகரித்துக்கொண்டு மறைந்துவந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானை எங்கள் விபுவை நீங்கள் கண்டிருந்தால் எங்கள்மீது கிருபைவைத்து சொல்லிக் காண்பிக்கக் கடவீர்களென்று பிரார்த்தித்தார்கள். சிலர் மிகவும் மதுபிந்துக்களையும் மகரந்தங்களையும் வருஷிக்கும் வத்ஸகஜாதி புஷ்பக்கொடிகளே! நீங்கள் மன்மதனாகிய ஸ்ரீ மாதவப் பிரானைக் கண்டதுண்டோவென்றார்கள். சிலர் மிகவும் மனோரம்மியமாகப் பரிமளம் தரா நின்ற அசோகபுஷ்பச் செடிகளே! ஸ்ரீ சுந்தரானந்தனைக் காணவில்லையோ வென்றார்கள். சிலர் அருண்மயமான இதழ்களோடுங் கூடிப் பரிமளங்களை வீசும் காஞ்சன புஷ்பச்செடிகளே! சமஸ்த பிராணிகளினுடைய சோகநிவாரண கிருபாவத்ஸலனைப் பார்க்கவில்லையோ வென்றார்கள். சிலர் வாருங்கள் ஆகாய மளாவிய விருக்ஷங்களை யாஸ்ரயித்துப் படர்ந்து புஷ்பிக்கா நின்ற குருவக புஷ்பஜாதி கொடிகளே! திவ்ய காஞ்சனமய கிரீடத்தையுடைய ஸ்ரீ கோவிந்த மூர்த்தியைத் தேடிப்பிடித்துக் காட்டுங்களென்று சொன்னார்கள். சிலர் அங்கங்கு உருவெளி தோன்றுகின்றபடியால் இதோ இதோ ஸ்வாமியென்று ஓடி ஓடித் தேடித்தேடித் திரிந்தனர். சிலர் வாராய் துளசீ பிருந்தாவன புண்யவதியே! நீ ஸ்ரீ ஹரி சரணாரவிந்தங்களுக்கு மிகவும் பிரியமானவளாகையால் ஸ்ரீ யசோதாநந்தரானவர் உன்னிடத்திற்கு வந்து வசித்துக்கொண்டிருப்பாரே, அவருக்கு எங்கள் சமாச்சாரங்களைச் சொல்லி எங்கள் இஷ்டங்களை திருப்தியடையச் செய்யென்றனர்கள்.

இப்படி எதிர்படும் ஸ்தாவரங்களையும் மிருகங்களையும் பக்ஷிகளையும் கேட்டுக்கேட்டு மனம் வருந்தித் திரிந்தனர். யமுனா நதி தீரத்தில் வெண்மணல் மயமாகிய மார்க்கங்களில் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய ஸ்ரீ பாதாரவிந்த அடையாளங்களைக் கண்டு ஆநந்தித்தவர்களாக அம் மாதர்கள் பூமி தேவியே! நீ என்னநோன்பு நோற்றனையோ! உனது பூர்வ ஜன்மத்தில் இந்த ஸ்ரீ பகவானானவர் ஸ்ரீ வராஹப்பிரானாகி உன்னை ஆலிங்கனஞ்செய்து உத்தரித்தனர். பின்பு பிரம்மசாரியாகிய ஸ்ரீ வாமனப் பிரானாகித் தமது ஸ்ரீ பாதாரவிந்தங்களால் அளந்து, இப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணராகி உமது திருமேனிக்குத் திருவாபரணங்களாகத் தமது ஸ்ரீ சரணாரவிந்த சின்னங்களா லலங்கரித்துக் கொண்டிருக்கின்றார். ஆகையால் எங்கள்மேல் தயைசெய்து நாங்களும் அந்தப் பெருமானைப் பிரியாதிருக்க நோற்கும்படி அந்த நோன்பை எங்களுக்குச் சொல்லிக் கொடுப்பாயாக. இல்லாவிட்டால் எங்களுக்குச் சர்வலோகப்பிரபு இருக்கின்ற விடத்தையாவது காண்பித்து அவர் எங்கள்மேற் கிருபை செய்யும்படிச்செய்து எங்களை ரட்சிப்பாயென்றும் பிரார்த்தித்தனர். இப்படி ஸ்ரீ பகவானைத் தேடித்திரிந்து எங்குங் காணாமல் மறுபடியும் ஸ்ரீ யமுனா தீரத்தில் வந்து அங்குள்ள வெண்மணற் குன்றுகளிலும் சிங்கார வனங்களிலுஞ் சேர்ந்து விரக்தர்களாய்ப் பரம ஏகாந்திகளான முமுட்சுக்களைப்போல ஸ்ரீ கிருஷ்ண லீலைகளை யாசரித்துக் கொண்டு ஸ்ரீ பகவதனுபவங்களை யடையலாயினர்.

அந்தச் சுந்தரவதிகளில் ஒருத்தி பூதனையைப்போல் ஸ்ரீ பகவானைத் தேடி வந்தனள், ஒருமாது ஸ்ரீ கிருஷ்ண பகவானாகிய இளங்குழந்தைப்போல அவள் மடியிலே படுத்துக் கொண்டு அவளுடைய ஸ்தனங்களைப் பிடித்துப் பாலமுதுண்டனள். அப்போது பூதனையைப் போலிருந்தவள் ஐயனே போதும்போதுமென்றனள். ஒரு வனிதை சகடத்தைப்போல் ரூபிகரித்து நின்றனள். ஒரு புண்யவதி பாலமுதுண்ணப் பசித்தழுத ஸ்ரீ பகவானைப்போல் படுத்தழுது தன் காலினாலுதைத்தனள். ஒருவள் யசோதா பிராட்டியைப் போல் உட்கார்ந்து காலை நீட்டினள். ஒரு நங்கை ஸ்ரீ கண்ணபிரானாகிய சிறு குழந்தையைப்போல் மடியிற் படுத்தனள். அப்போது யசோதையானவள் அந்தக் குழந்தையானவளை மடியில் வைத்து முத்தாடித்தரையில் விட்டனள். அப்போது ஒருவள் திருணாவர்த்த அசுரனேயாகிய சுழற்காற்றைப்போல் சுழன்றோடிவந்து எடுத்துப்போய் உயரவிருந்து அவன்

வீழ்ந்தாற்போல வீழ்ந்தனள். ஒரு சுந்தரி பகாசுரனைப்போல் ஸ்ரீ பகவானை விழுங்கப் பார்த்துக்கொண்டிருந்து வந்து அவன் மூக்காற் கொத்திய சைகையைக்காட்ட ஒரு பத்மமுகி ஸ்ரீ பத்மாக்ஷனைப்போல் ஒரு திரணத்தைப் பிடித்துக் கிழித்து அவளைத் தள்ளினள். இரண்டு புண்யவதிகள் ஸ்ரீ பலராமனைப்போலும் ஸ்ரீ ராமாநுஜராகிய ஸ்ரீ கிருஷ்ணரைப்போலும் ஏற்பட்டிருந்து கோபாலர்களைப்போலும் கோவினங்களைப்போலும் கோவத்ஸங்களைப்போலும் ஏற்பட்டிருக்கிற கோபிகா ஜனங்களுடன் நானாவித வனசஞ்சார விளையாட்டுகளை அனுசரித்து வத்ஸாசுர தேனுகாசுர பிரலம்பாசுர காளிங்க மர்த்தன முதலிய விளையாட்டுகளைச் செய்து வேணுகான ஸ்வரங்களினால் பசுக்களாக விருத்கிறவர்களை யழைத்து ஆதரித்துக் கோபாலர்களா யிருக்கிறவர்களுடன் சரசங்களைச்செய்து அவர்கள் தங்களைப் புகழ, அவர்கள் மனோபீஷ்டங்களை நிறைவேற்றினது போலவும் இன்னும் பகவானது சகல லீலைகளையும் நடித்து மகிழ்ந்து மகாவிருக்ஷ நிழல்களிலும் நதி தீரங்களிலும் சில நேரம் தங்கி யிருந்தார்கள்.

மீண்டும் தேடி வருகையில் வெண்மணற் பரப்புகளில் படிந்திருக்கிற சங்கரேகை சக்ரரேகை முதலிய சேவைகளோடுங் கூடிய மகா ராஜலக்ஷண ஸ்ரீ சரணாரவிந்தங்களினுடைய அடையாளங்களை அங்கங்கு கண்டு களித்து ஒருவர்க்கொருவர் காட்டினவர்களாய் நெடுந்தூரந் திரிந்து தேடி ஸ்ரீ பகவானைக் காணாதவர்களா யலைகின்ற ஸ்ரீ கோபிகைகளில் ஒருவள் இதோ பார்த்தீர்களோ ஸ்ரீ பகவானானவர் ஒரு நாயகி நிமித்தம் அன்புடனே புஷ்பங்களைக் கொய்து கொடுத்து அவளுக் கிதமுண்டாகச் செய்தனர், ஆகையால் அவர் ஸ்ரீ பாதாரவிந்தத்தை நன்றாயூன்றி நின்ற அடையாளந் தோன்றுகின்றது. சுபாங்கி! இவ்விடத்தில் ஒரு ஸ்திரீயைத் தமது பிரியத்தினால் சுமந்து சஞ்சரித்து லீலை செய்தனர். அதனால் ஸ்திரீ புருஷர்களுடைய பாதவடிகள் சிலதூரம் வரையில் காணப்பட்டு இவ்விடங்களில் ஸ்திரீயினுடைய பாதவடையாளம் மறைந்துபோக ஸ்ரீ பகவானுடைய பாத சின்னங்கள் மாத்திரம் விளங்கப்பட்டன. இதோ இங்கு இறக்கினாற் போலிருக்கின்றது. அந்தச் சாடைகள் இவ் வடையாளங்களாலே தோன்றுகின்றன. எனதன்புள்ள சகியே! ஸ்ரீ அச்சுதராகிய கண்ணபிரானானவர் இதோ வுட்கார்ந்து ஒரு மேன்மையை அடைந்த ஸ்திரீக்குக் கர்ப்பூர தாம்பூல ப்ரசாதத்தைத் தமது திருவதரத்தினால் கிருபைசெய்து காடாலிங்கனஞ் செய்திருக்

கின்றார். இதோ பார்த்தையா இவ்விடத்தில் ஸ்ரீ கோவிந்தனும் ஒரு கோபிகையுமாகிய இருவரும் உட்கார்ந்து சரசங்களைச் செய்தார்கள். அதனால் ஸ்ரீ பகவானுடைய பாதம் புயங்களினோரங்க ளழுந்தியதா யூன்றியிருப்பதும் அந்தச் சுந்தரி அஸ்தங்களூன்றித் தாவியிருப்பதும் இவ்விருவர்களும் சரசமாகச் சந்தோஷித்த விவரங்களுந் தோன்றுகின்றன. அடி பத்மாட்சீ! ஸ்ரீ பத்மநாபராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானவர் ஒரு சுகுணவதியோடு லீலாவினோத கிரீடைகளைச் செய்தார். அவ்விரண்டு பேரும் நடந்து வந்து யமுனா நதியில் ஜலகமாடினர்கள். இதோ அவர்க ளிரண்டுபேரும் நதியிலிறங்கின அடையாளமும் மறுபடியும் இருவரும் நதியைவிட்டு வெளிப்பட்ட அடையாளமும் இவ்விடங்களில் தோன்றுகின்றன வல்லாமல் இறங்கியதுறையும் ஏறியதுறையும் நேரடியாலும் மாற்றடியாலுங் காணப்படுகின்றன. ஸ்ரீ வேணுகான லோலராகிய ஸ்ரீ கோபால மூர்த்தியானவர் ஒரு கல்யாணியை வரித்து அவளைக் காமகேளீ விலாசங்களில் சந்தோஷிக்கச்செய்தணைந்தனர். இதோ பார்த்தையா இவர்கள் பாதவடிகளும் உத்தரீயத்தின் குச்சுகளி னடையாளமும் முன்றானையி னடையாளமும் காணப்படுகின்றன. அவற்றுள் சில குறிகள் நன்றாய்த் தோற்றுகின்றன. சில வடையாளங்கள் மறைந்தும் மறையாமலுந் தோன்றுகின்றன. அங்கக் கலப்பு அடையாளங்களுந் தோற்றுகின்றன. ஸ்ரீ நந்தகோப நந்தனராகிய ஸ்ரீ புருஷோத்தமர் ஒரு சாந்தசித்தையான காந்தாமணியுடன் மிகவும் மனோகரமாக விளையாடித் தான் பிரிந்துவர நினைக்கும்போது அந்த வுத்தமி இங்கிதமறிந்து விட்டுப் பிரிய மனமில்லாதவளாகி ஸ்ரீ பகவானுக்குத் தண்டன் ஸமர்ப்பித்து பிரார்த்தித்தாள். அதனால் அவளோடு கலந்தவராய் நடந்தனர். இதோ அவ்வடையாளங்கள் காணுகின்றன. இவ் விரண்டுபேருங் கலந்தணைந்த விடமிது பார். பின்பு ஸ்வாமி செல்ல நினைத்து எழுந்தடிவைத்த விடமிது. அவள் தண்டன் சமர்ப்பித்த அடையாளமிது. இருவரும் அமர்ந்திருந்த ஸ்தலமிது. இவை யாவும் விசித்திரமாகத் தோற்றுகின்றன. இவ்விதமாக அடையாளங்களைப் பார்த்துப் பேசிக் கொண்டார்கள்.

சத்திய சீலனாகிய மகிபாலகனே! இவ்விதம் இந்தப் பெண்கள் ஸ்ரீ பகவானுடைய ஸ்ரீ பாதாரவிந்த சின்னங்களின் அடையாளங்களைக் கண்டு அவருடைய போகாதிசயங்களை இச்சித்து ஸ்ரீ பகவத் பாதாரவிந்த மகிமாதிசயங்களைக் குணானுபவஞ் செய்தார்கள். இந்தப்படி பலபலவா

ருகப் பிரிந்து கோபிகாஜன ஸமூகங்கள் யமுனாநதி தீரங்களில் ஸ்ரீ பகவானைத் தேடிச் சஞ்சரித்துக் கொண்டு வருகின்ற சமயத்தில் அங்கொரு பிரதேசத்தில் தங்களை விட்டுப் பிரிந்து தங்களைப்போலவே ஸ்ரீ கிருஷ்ண பிரானைத் தேடிக் கொண்டிருக்கின்ற சில கோப ஸ்திரீ ஜனங்களைக் கண்டார்கள். பின்பு அவர்களும் இவர்களுங் கூடிக்கொண்டு ஸ்ரீ கோவிந்தனைத் தேடினார்கள்.

இப்படியிருக்க ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் தன்னோடழைத்துச் சென்ற அந்த சுகுமாரியினிடத்தில் மிகுந்த ஆசை யுள்ளவரைபோல அவளைச் சில தூரம் அழைத்துக் கொண்டு போய் அவளிடத்தில் புருஷ விஷய சேஷ்டாதி சரஸ தைரியங்களைக் காட்டி மோஹ பரவசையாகிய அந்தக் கோபியினது விஷயா சக்தி வெளிப்படும்படிக் கிரீடித்தனர். அப்போது அந்தக் காமினியானவள் இந்த ஸ்திரீ ஜனங்களுள் தன்னையே சிரேஷ்ட நாயகியாக நினைத்து ஸ்ரீ பகவான் தன் மோகத்தி லகப்பட்டுப் பிரியாமல் எல்லாரையுந் துறந்து தன்னிடத்திலேயே யிருக்கின்றாரென்று கர்வித்தவளாய், சுவாமியைப் பார்த்து கமலாட்சா! நான் இனி நடக்க முடியாது, கால் நோகிறது. என்னை எடுத்துக்கொண்டு உனக்கு இஷ்டமான இடங்களெல்லாங் கொண்டுபோய் ரமிக்கக் கடவாயென்று சொன்னாள்.

அதைக் கேட்டுப் பகவான் நல்லது என்மேல் ஏறிக் கொள்ளென்று குனிந்தார். அப்போது இவள் குதித்தேறப் போனாள். அந்தச் சமயத்தில் ஸ்ரீ பகவான் அந்தர்த்தானமாய் மறைந்துபோனார். அவரைக் காணாமல் இவள் மகத்தாகிய விரஹதாபங்களை யடைந்து ஆ ஸ்ரீ கிருஷ்ணா! எங்குபோய் விட்டாய். பிராணேசனே! ஆ மனோ மன்மத ரமணனே! எனக்குப் புத்தி வந்தது. இனியுனக்குத் தாசானு தாசி யாகின்றேன். என்னை வந்து காப்பாற்றென்று பலவாருகத் துதித்துத் துக்கித்துக்கொண்டிருந்தாள். அப்படி யிருக்கின்றவளைப் பார்த்து ஸ்ரீ கண்ணபிரானைத் தேடிக் கொண்டு வருகின்ற கோபி ஜனங்களுள் சிலர் ஸ்ரீ பகவத் விஷய சாதுர்யங்களுக்குப் பயந்து நின்றனர்கள். முடிவில் யாவர்க்கும் பகவான் எளிதில் பிரசன்ன ராகாததற்காக வருந்தி யாவரும் ஏகமாய்ச் சேர்ந்து ஸ்ரீ கிருஷ்ண கல்யாண குணாமிர்த திவ்ய கானங்களைச் செய்தனர்கள்.

## முப்பத்தோருவது அத்தியாயம்

*ஸ்ரீ பகவான் இந்த கோபீஜன ஹிருதயங்கள் பரிசுத்தங்களாகவும் இருக்கும்படி செய்து உடனே பிரசன்னராகி கோபிகைகளை கடாக்ஷித்தது.*

அரச சிரேஷ்டனே! இவ்விதம் ஸ்ரீ கிருஷ்ண பகவானைக் காணாமல் கோபிகா நங்கைகள் பலவகையாக துதித்தும் தங்களைப் பழித்துக்கொண்டும் வருந்தி பலவிதமாக பிரலாபித்துக்கொண் டிருக்கிற சமயத்தில், ஸ்ரீ சர்வ சகத்பிராண நாயகராகிய ஸ்ரீ ஹரியானவர் மூன்றுலகுக்கும் மோகனாகாரராகியும் சாக்ஷாத் மன்மத ஸ்வரூபராகியும் புன்சிரிப்பு விளங்க நகைத்துக்கொண்டு அந்தக் கோபீ ஜன ஸமூஹ மத்தியில் ஆச்சரியமாய்ப் பிரத்யக்ஷமாகச் சாக்ஷாத் கரித்தனர்.

ஸ்ரீ பகவான் தங்களுக்கு மத்தியில் பிரசன்னமானதை கோபிகைகள் கண்டதும் மகா ஆச்சரியமடைந்து களிப்படைந்தனர். துளித்துளியாக தேனை உண்ட இனிதாக ரீங்காரம் செய்யும் வண்டினத்தை அவர்களது கண்கள் ஒத்தன. சமுத்திரத்தினிடமிருந்து வெளிப்படும் சிவந்த சூர்யனைக்கண்ட தாமரைகளென்ன அவர்கள் முகங்கள் அலர்ந்து பிரகாசித்தன. பிறகு பலரும் பலவிதமாகத் துதிக்கலாயினர்.

மிகவும் பிரியையான கோபி ஒருவள் ஆ எனது பிராணேசரே! வாருமென்று மிகவும் பக்தி பூர்வமாகத் தன திரண்டு கைகளையுங் கூப்பி அஞ்சலிசெய்து ஸ்ரீ பகவானுடைய ஹஸ்தங்களைப் பிடித்துத் தன திரண்டு கண்களிலுமொற்றிக்கொண்டாள். ஒரு சுந்தரீ ரத்நமானவள் மிகவும் ஆவலுட னோடிவந்து ஆசீவிதேஸ்வாரே! வந்தீராவென்று இரண்டு ஸ்ரீ கராகர விந்தங்களைப் பற்றித் தனது கக்ஷங்களில் சேர்த்துக்கொண்டு ஆனந்தித்தனள். ஒரு வனிதாமணியானவள் ஆ எனது மனோ வல்லபனே! இவ்வளவு நேரஞ் சென்றதோ திருவுள்ள மிரங்குதற்கென்று கர்ப்பூர தாம்பூலாதி வாசனா திரவியங்களைத் தனது கரங்களில் வைத்துக்கொண்டு ஸ்ரீ பகவானுக்குச் சமர்ப்பித்தனள். ஒரு பிரிய சுந்தரியானவள் ஆ எனது சுந்தர பிரிய நாயகரே! கடாக்ஷியுமென்று ஸ்ரீ பகவானுடைய திவ்ய திருவடித் தாமரைகளுக்குப் பக்தியுடன் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்துத் தன திரண்டு தனங்களால் திருவடிகளாகிற தாமரை மலர்களையொற்றி விரஹதாபங்களைத் தீர்த்

துக்கொண்டனள். ஒரு புண்ய ரமாமணியானவள் ஆ எனது வரசிரேஷ்டரே! இப்படிக்குஞ் செய்யலாமாவென்று பிணங்கிய மனதுடையவளாய் நிஷ்டூர வசனங்களைப் பேசித் தனது சாய்ந்த பார்வையினால் இடைவிடாமல் பார்த்துச் சேவித்துக்கொண் டிருந்தனள். ஒரு தருணீ ஜீவரத்ந மானவள் ஆ எனது சுந்தர பிரபுவே! எழுந்தருளுமென்று ஸ்ரீ ஹரியினுடைய திவ்ய முக சுந்தராமிர்தத்தைத் தன திரண்டு கண்ணிமைகளையுஞ் சிமிட்டாமல் கண்களென்னும் வாயினாற் பானஞ் செய்து திருப்தியடையாமல் பார்த்து சேவித்துக் கொண்டிருந்தனள். ஒரு வனிதை ஸ்ரீ ஹரியினுடைய திவ்ய ஸ்ரீ பாதாரவிந்தங்களை தனது நேத்ரயுக மலர்களினால் பூசித்து சுஜன சிரேஷ்டரைப்போற் சேவித்து அசைவற்று நின்றுவிட்டனள். ஒரு நுட்பமான இடையினையுடைய ஸ்திரீயானவள் ஆ ஸ்ரீ மாதவாவென்று பெருமூச்செறிந்து பரம யோகிந்திரனைப்போல ஸ்ரீ பகவானுடைய சௌந்தர்யாதிசயங்களைக் கிரமக் கிரமமாகத் தன திரண்டு கண்களின் வழியே கொண்டுவந்து இருதயத்துக்குள் வைத்து மனது முதலிய இந்திரியங்களாகிற கொடிகளைப் பந்தித்து நிறுத்திக் கண் முதலிய ஞானேந்திரிய துவாரங்களைச் சீக்கிரமாக மூடிக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ண தியான கபாடபந்த முத்திரைசெய்து நானென்னும் அகங்காரங்களை வெளியிலே நிறுத்தி காவல் வைத்து நிர்மல கியானத்தினால் இறுகத் தழுவிக் காடாலிங்கனஞ் செய்து சரீர புளகாங்கிதையாய் பரவசமடைந்து ஆனந்தித்துக்கொண்டு நின்றுவிட்டனள். ஒரு சுந்தரமாது ஆ எனது பிராணேசரே! எங்களை யிப்படி அலையச்செய்து நீரெங்கு மறைந்து நின்றீரோ! ஈதும் உமக்கொரு தர்மந்தானோவென்று இதமும் வெறுப்பும் உண்டாக தக்கதான வார்த்தைகளைச் சொன்னாள்.

ஒரு பாலாமணியானவள் ஒரு பதுமமுகியினுடைய கையைப் பிடித்துக்கொண்டு ஆ என தன்புள்ள ஸகியே! நமது விபுவாகிய ஸ்ரீ மாதவப்பிரான் நாம் இருதய சுத்தியுடன் உறுதியாக பற்றினாலல்லது அவர் லபிக்க வரிதானவரென்று சொல்லித் தன் மனதை ஸ்ரீ பகவானுடைய திருவடியில் சமர்ப்பித்துப் பாவையைப்போல நின்றுவிட்டனள். இவ்விதம் இந்தக் கோபிகாஸ்திரீகள் ஸ்ரீ பரந்தாம மூர்த்தியைப் பிரசன்னமாக லபிக்கப்பெற்ற முத்தி பந்துக்களைப் போல ஸ்ரீ பகவானுடைய கல்யாண குணங்களையும் திவ்ய மங்கலவிக்கிரக சேவையையும் பரம கிருபையினாலே லபிக்கப்பெற்று ஸ்ரீ பகவத் குணானுபவஞ் செய்தனர்கள். அதன்

பிறகு ஸ்ரீ ரமாகாந்தரானவர் அவ் வனாந்தரத்தில் தமது யோக மாயா சாதுர்யங்களினால் அந்தக் கோபிகா ஜனங்கள் யாவரையும் அழைத்துக்கொண்டு மல்லிகை, முல்லை, மந்தாரை, குருக்கத்தி, பாரிஜாத முதலிய புஷ்பங்களின் பரிமளங்களோடுங் கூடிய குளிர்ந்த தென்றற் காற்றையும் மகா விசித்திர ரூபங்களையுடைய வண்டினங்களின் த்வனிகளையும் சரத்கால பூரண சந்திரகிரண நிழல்களையும் யமுனா நதி பிரவாகங்களில் உண்டாகின்ற அலைகளின் பிந்துக்களையும் உடையவையாகிய மகா பரிசுத்தமாயிருக்கின்ற வெண் மணற் குன்றுகளோடுங் கூடிய ஒரு ஏகாந்த ஸ்தலத்தில் வந்து சேர்ந்தனர். அந்தப் பிரதேசத்தில் வந்து சேர்ந்த பின்பு இந்தக் கோபிகா ஜனங்கள் வேதத்தில் உத்தர பாகங்களாகிய விக்ஞான காண்டங்களிலே யிருக்கின்ற ஸ்ரீ சர்வேஸ்வரனுடைய கல்யாணகுண நிச்சிதார்த்தங்களை வர்ணித்து வேத புருஷனுடைய இருதயங் களித்ததுபோல இந்த ஸ்ரீ ஹரியைச் சாக்ஷாத்காரமாய்ச் சேவித்து தங்கள் தாப ஜ்வரங்களை யொழித்தும் பரிபூரண மனதுடையவர்களாய் மிகவுங் குளிர்ந்த பார்வைகளோடுங் கூடிய நேத்திரங்களையுடைய கோபிகா ஜனங்கள் மிகவும் சந்தோஷங்களையுடையவர்களாய்ச் சிலர் தங்கள் முன்றானைகளை அந்த வெண் மணற் குன்றின்மீது நன்றாக விரித் தமைத்து ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்து சுகமாக இருக்கச்செய்து யாவருஞ் சூழ்ந்து உட்கார்ந்து அவரவர்கள் அங்கங்கு தங்கள் இருதய பீடத்திலும் தியானங்களினால் ஸ்ரீ பகவானை சுகாசீனராக வகித்தனர்கள்.

மகாராஜனே! மகானுபாவர்களாகிய பரமயோகீந்திரர்களுடைய இருதய கமல பீடங்களில் சுகாசீனராய் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவான் லக்ஷ்மீ தேவியானவள் தமது ஸ்வரூபத்தில் பிரகாசிக்க இந்தக் கோபிகா ஜனங்களின் முன்றானைகளைத் தமக்குச் சுகாசனமாகக் கொண்டு எழுந்தருளித் தேஜோமயராய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் சமஸ்தமான கோபிகா ஜனங்களும் அவரவர்கள் தங்களிஷ்டப்படிக்கு ஸ்ரீ பகவானுடைய சமீபத்திற்கு வந்து சன்மான வார்த்தைகளைச் சொல்லித் தங்கள் கண்களாற் சேவித்து நிர்ப்பயானந்தர்களாய்த் திருவடித் தாமரைகளை வருடியும் திவ்ய திருமேனியை ஸ்பரிசித்தும் ஸ்ரீ அஸ்தங்களைப் பிடித்துக்கொண்டும் மகா மதுர வசனங்களாலே இனிய சரச வார்த்தைகளைச் சொல்லியும் உபசரித்து, இனிய கோப்பிய நய வினயங்களால் ஸ்ரீ பகவா

னை நோக்கி மனது ஸமாதானமாகும்படிச் சில சந்தேக வார்த்தைகளைக் கேட்கின்றார்கள்.

கோபியர் வாக்கியம்

"வாரீர் ஸ்ரீ கோபால குமார சேகரரே! இவ்வுலகத்தில் விருத்தியடைந்து விளங்கா நின்ற தேவ-மனிதர்களில் யாவருள்ளும் செய்து வருகின்ற கர்மத்தி நிலையைக் குறித்து எங்களுக்குச் சந்தேக முண்டாயிருக்கிறது. அதைக் கேட்டருளும். தர்மத்தைச் செய்கின்ற சிலர் தங்களை அடுத்தாலும் அடுக்காமற் போனபோதிலும், சாதாரணமாய் உபகரித்துக் கொண்டே யிருக்கின்றார்கள். சில ஜனங்கள்: தங்களை அடுக்காவிடினும் பிறர்களைத் தேடி உபகரிக்கின்றார்கள். தெய்வத்தன்மையாவது பாக்யாதிசயமாவது யாதேனுமொரு அதிகாரங்களையுள்ள சிலரை அந்நிலையின்றிய சில ஜனங்களாவது ஒருவர்க்கொருவர் தங்கள் இஷ்டங்களீடேற அடுத்து உபகரித்துக் கொள்ளுகின்றார்கள். பின்னையுஞ் சிலர், தங்களை அடுத்தவர்களை ஆசாபிமானத்திற்கே அரிதாக வியர்த்தங்களாகும்படி விளங்குகின்றார்கள். ஆகையால், இக் கர்மத்தின் அதிசய மென்னவோ? அதனை எங்களுக்குக் கிருபைசெய்து சொல்லவேண்டும்" என்று மஹா கோப்பியமாகவும், உபசாரமாகவும் பிரார்த்தித்தனர்கள். இவ்விதங்களாகச் சொல்லிய கோபிகா ஜனங்களினுடைய மதுரமாகியும்-உலக ஹிதமாகியு மிருக்கின்ற வாக்கியங்களைக் கேட்டுச் சுவாமி ஒரு வாக்கியஞ் சொல்லுகின்றார்.

ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்

"வாருங்கள் கோபீசுந்தர சகீ ஜனங்களே! இந்தப் பிரபஞ்சத்தில் எனது யோகமாயா தத்வத்திற்கு ஜனித்த கர்மாதிகாரங்களுக்குத் தகுந்தபடி ஜனித்து விர்த்தியடைகின்ற தேவர் மானிடர் முதலிய பிராணிகள் ஜன்ம விமுக்தத்தின் பொருட்டாகவும், ஸ்வர்க்கத்தை யடையும் பொருட்டாகவும், ஜன்ம சௌக்கியத்தின் பொருட்டாகவும், நகரங்களை யடையும் பொருட்டாகவும், முமுக்ஷுக்கள் அல்லது பரம ஞானிகளென்றும், ஆப்தகாமர்கள் அல்லது பூர்ண காமர்களென்றும் அவித்யா ஜனிகர்கள் அல்லது அஃஞர்களாகிய பக்தர்களென்றும், கடினர்களாகிய கேவலர்கள் அல்லது சூன்ய சித்தர்களாகிய லோகத்துரோகிகளென்றும் நான்கு விதங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றார்கள். அவர்கள் யாரெனில், தங்களை அடுத்தவர்களிடத்தில் அன்பையும் - அருளையுங் கொண்டு, அவர்கள் க்ஷேமத்தையே

பார்த்துக்கொண்டு, அவர்களில் ஒரு அபேக்ஷையும் விரும்பாதவர்களாய் விளங்குகின்ற முமுக்ஷுக்களாகிய சிலர் ஆப்த காமர்களாம்.

இவ்வுலக ஜனங்களுக்கு இஷ்டத்தை நடாத்துகின்ற பிதாவைப்போலும், காருண்ய சித்தர்களாகிய சுகிர்துக்களைப் போலும், தங்களை அடுக்காதவர்களைப்போல அடுத்தவர்களை தேடித் தேடி உபகரித்து ஆதரித்துக் கொண்டிருக்கின்றவர்களாகிய பேர்கள் ஸ்வர்க்காதி மோக்ஷ சௌக்கியங்களையடைந்து சுகிக்கின்றவர்களாகிய பூர்ண காமர்களென்னும் ஆப்த காமர்களாம். ஜன்ம சௌக்கியங்களின் பொருட்டு ஒருவர்க் கொருவர் அடுத்துக்கொண்டு, தர்ம-கர்ம முதலிய உபகார-பிரத் யுபகாரங்களினால் விர்த்தி யடைந்து கொண்டிருக்கின்றவர்களாகிய சிலர் அவித்யா ஜனிதர்களாகிய அஞ்ஞர்களென்னும் பக்தர்களாம்.

தங்கள் சித்தவிருத்தியை யுணராமல் பலத்தின் அபேக்ஷையின் பொருட்டுத் தங்கள் பூர்வ ஜன்ம குண தோஷங்களினால் வந்து அடுத்தவர்கள் அபிமான சிநேகத்தையும்-தர்மாதி சுபங்களுக்கு ஏதுவாகிய பல ப்ரதங்களையும் பெறுமல், வியர்த்தர்களாய்ப் போகச் செய்கின்றவர்களே மிருகங்களை யொத்தவர்கள். அவர்களே கடினர்களாகிய கேவலர்களென்னும் சூனியர்களாம். அவர்கள் தேவமனதுடையவர்கள் யாவரெனினும் லோகத் ரோகிகளென்று நினைக்கத் தகும்.

வாருங்கள் புண்யாங்கனைகளே! இவ் வகைப்பட்ட இந் நான்குவித புருஷர்களில் நான் சேர்ந்தவனல்லன். வேறே யாரெனில், சமஸ்தமான பிரபஞ்சங்களுக்கும்-பிரஜாமணிகளாகிய பிரஹ்மாதிகளுக்கும் - இப் பிரபஞ்சங்களிலுள்ள இந் நான்குவித புருஷர்களுக்கும் காரணனாயிருக்கின்ற பரம காருண்யனு யிருக்கின்றவன் யான். இப்போது என்னிடத்தில் உங்கள் மனோவிர்த்திகள் விர்த்தியாகும் பொருட்டும், அன்னிய காம மலினங்கள் நீங்கும் பொருட்டும், அந்தர்த்தானமாய் நின்றனன். இன்னும் என்னை அடுத்து, எனது ஊழிய ருசிகளை யனுபவிக்கின்ற மஹானுபாவர்களுக்கும் எனது ஸ்வரூப சேவார்த்தங்களுண்டாக நான் பிரசன்னமாகின்றதில்லை. ஏனெனில், என்னை அபேக்ஷையில்லாத புக்தி பூர்வகமல்லாமல் எளிதில் சேவிப்பார்களேயானல், சேவித்த மாத்திரத்தில் ஸம்பூர்ண காமர்களாய்த் திருப்தி யடைந்து மதித்து, என்னையுந் தங்களையு

மறந்து, எனதருமையான சேவார்த்தங்களை யொழித்து, மறுபடியும் அன்னிய காமா பேக்ஷைகளை யடைந்து, அன்னிய சேஷங்களை அடையப்போகின்றார்க ளென்பதே. ஆதலால் என்னை விரும்பினவர்க ளெவர்களோ அவர்களை அபேக்ஷையில்லாத பரிசுத்த மனதுடையவர்களாகச் செய்து, அன்யசேஷ மலினங்களை யறுத்துப் பரம சாதுர்ய பரமே ஏகாந்த நிஷ்டா பூர்ண முமுக்ஷுக்களாக மனோதர்மங்களை யுண்டாக்கி இரக்ஷிப்பேன். அதேனெனில், தான் ஹீனனான போதிலும் ஜீவனை அபேக்ஷிப்பதே தனமாகிய தேகாபிமானம் நசித்தாலல்லது பகவத் கிருபைக்கு பாத்திரனாகை மாட்டான். அதனாலேதான் எனது அன்பர்களாகிய மகோத்தமர்கள் இவ் விதங்களாகிய பற்றுகளொழிந்து, அபேக்ஷை யற்றவர்களாய் என்னுடைய திவ்ய ரூபாதிசய வைபவங்களைக் குணானுபவஞ்செய்து, தியானித்துக்கொண் டிருப்பார்கள்.

வாருங்கள் கோபகன்யா மணிகளே! நீங்கள் என்னிடத்தில் வைத்த மனதுடையவர்களாகத் தேகாபிமானங்களை யொழித்துத் தாய்-தந்தைகள்-பர்த்தா-புத்திராதிகளை விட்டு என்னை யடைந்தீர்கள். ஆதலால், உங்களைப் பிரிந்து அலையச்செய்யத் தகாது. ஆகையால், என்னை மன்னிக்கக் கடவீர்கள். நான் எங்குஞ் செல்லவில்லை. சர்வ வியாபகனாகையால், உங்களுக்குள்ளும் புறம்புமா யிருந்து உங்களுடைய வியோக தாப வசனங்களைச் சாக்ஷி பூதனாகக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

வாருங்கள் கோபிகாஜன காமினிகளே! யாதொரு சந்நியாசிகளுக்கும் விடுகிறதற் கரிதாகிய தேககுண சம்பந்த அபிமானங்களை யொழித்துப் பற்றற்ற உங்கள் ஆத்மகுண தர்மங்களைப் பரம ஏகாந்திகளாகிய பரமயோகீந்திரர்களைப் போல் எனது பரமமாகச் சமர்ப்பித்த உங்களுக்கு பிரஹ்ம கல்ப மஹாயுகங்கள் வரைக்கும் ஆயுள் பிரமாணங்களைத் தந்து, இந்தத் திவ்ய ஸ்வரூப சுகானந்த வைபவாதிசயங்களை யடையும்படிச் செய்தபோதிலும், திருப்தியாக மாட்டாதாகையால், எனது பரமகிருபையினால் உங்களுடைய ஹிதார்த்தத்தின் பொருட்டே நான் அந்தர்த்தானமாய், நீங்கள் அன்னிய கிர்த்தியங்க ளொழிந்து பரவசர்களாகும்படிச் செய்தனன். நீங்கள் சுத்த சாதுக்களாகையால் இக் குற்றங்களை மன்னித்துத் தயாபரிபூர்ணர்களாய்க் கிருபை செய்து, என்னை ரக்ஷிக்கக் கடவீர்கள்'' என்று சொன்னார்.

## முப்பத்திரெண்டாவது அத்தியாயம்

ஸ்ரீ பகவான் கோபீஜன மத்தியத்திலிருந்துக்கொண்டு ராஜக் கிரீடை ஜலக்கிரீடை செய்ததைச் சொல்லப்படுகிறது.

வாராய் மஹாராஜனே நீலமணி வண்ணனுன ஸ்ரீ பகவான் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒவ்வொரு கண்ணனுகத் தோன்றி, புன்னை மரங்கள் பூத்து அதன் மணத்தால் உயர்ந்த மெல்லிய மணல் குன்றுகளின்மீதும், குற்றமிலாத அப்பெண்கள் அணிந்த குங்குமத்தால் நிறைந்து அதன் இனிய மணம் பரவும் சோலைகளிலும், அன்னங்களைப்போல் அசைந்து நடையாடும் பெண்களுடன் மகிழ்ச்சி மிக லீலை செய்தனன்.

சிறுபிறையைப் போலும் அழகு நிறைந்த பெண்களின் முகங்களில் நிறையும் சிறு வேர்வையைத் துடைத்தும், அவர்களுக்கு ஆபரணங்களை அணிந்தும், மலர்களைச் சூடியும், அந்தப் பெண்களோடு நெருங்கி அந்தப் பெரியவனுன பகவான் கைகோத்து ஆடிய தோற்றத்தை எடுத்து வர்ணித்துரைக்கும் சாமர்த்தியம் எவர்க்குள்ளது.

அம்பர வீதியில் நின்றும் ஸ்ரீ கிருஷ்ண லீலைகளை சேவிக்கும் சமஸ்த தேவதைகளும் தேவாங்கனைகளும் அப்சரஸ்திரீகள் முதலியவர்களும் ஆச்சரியப்படும்படி கோபிகாஸ்திரீகள் மண்டலாகாரமாக நின்று ஒருவர் தோள்களின் மீது ஒருவர் கரங்களைச் சேர்த்துக்கொள்ளவும் மற்றெரு அஸ்தங்களை ஒருவர்க்கொருவர் கோத்துக்கொள்ளவுஞ் சொல்லி அவர்கள் பதங்களையுஞ் சரியாக வகுத்து ராஜமண்டலங்களைக் கற்பித்து அவர்களைப் பத்மாகாரமாக நிறுத்தித் தான் பத்மத்தின் காயைப்போல நடுவிலெழுந்தருளிப் பிரகாசத்தோடும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் விளையாடினுர். இந்தப் பிரகாரம் நாஞவித விசித்ர கதிபேதங்களால் சஞ்சரித்து விளையாடுகின்ற இந்தச் சாதுர்ய மாயாமூர்த்தியான ஸ்ரீ பகவான் தமக்கு இருபாரிசங்களிலும் அகளங்க நிர்மல பூரணச் சந்திரோதய முகாரவிந்தங்களையுடைய இரண்டு சுந்தரவதிகள் தங்களிரண்டு கரங்களிலும் வீணைகளைப் பிடித்து மகோத்ஸாகத்துடன் சமஸ்தபிராணிகளின் மனேரஞ்சனமாக மதுரத்வனிகளோடு ஸ்ரீ ஹரியென்றுபாட, தாம் தம் இனிய புள்ளாங்குழலைத் தமது திருவதரங்களில்வைத்து அந்தச் சுந்தரீ ஜனங்களினுடைய செங்கழுநீர்ப் புஷ்ப இதழ்களை யொத்த விரல்களின் மூனைகளாலுண்டாகிய மதுர



படம் நெ. 16. பக்கம் நெ. 148-A.

ஸ்ரீ பகவான், ராஜக்கிரீடை ஜலக்கிரீடை செய்தது.

லய கதி பேதங்களுக்கு மிகவு மன்னியோன்ய ஸகாயமாய்த் தமது முரளீகான மிருது த்வனிகளைப் பூரித்துக் கானம் செய்துகொண்டிருந்தார். மேலும் ஸ்ரீ பகவானுனவர் அந்த ராஜ மண்டலாகார தாமரைப் பூவினுடைய காயாகிற மத்தியப் பிரதேசத்தில் கமலகர்ணிகா நடுநாயகமாய் நின்று கொண்டிருப்பது மல்லாமல் இன்னும் அந்தக் கோபிகா ஜனங்கள் எத்தனைபேர் இருக்கிறார்களோ அத்தனை பேருக்கும் அத்தனை மூர்த்தியாய் அந்தச் சுந்தரீ ரத்னங்களுடைய கரகமல தோள்களினது ஆலிங்கனத்துக்குள் தாமும், தமது தோள்களின் ஆலிங்கனத்துக்குள் அந்தச் சுந்திரவதிகளுமாகப் பிரகாசித்துப் பாத சாஸ்திரத்திற் சொல்லியிருக்கிறபடி நடனுதி கான வித்யாசார மண்டலங்களாகிய ராஜ மண்டலத்தை உண்டு பண்ணினுர். அதைக்கண்ட மாத்திரத்தில் ஆகாசத்தினின்றும் ஸ்வாமியினுடைய லீலைகளைப் பார்த்துக் கொண்டிருக்கிற தேவதா சமூகங்கள் யாவரும் ஆச்சரியமடைந்து ஆனந்த பரவசர்களாய் புஷ்ப வருஷங்களை வருஷித்தனர்.

இதுவுமல்லாமல் ஜகன்மோகனுகாரரான ஸ்ரீ கிருஷ்ணர் மலர்ந்த செந்தாமரைப் புஷ்பங்களின் இதழ்களுக்கொப்பாகியும் சந்திரோதய நிர்மல கிரண நகங்களுடையனவாகியும் ஸநகாதி யோகீந்திரர்களுடைய இருதய தாபங்களை நிவாரணஞ் செய்யத்தக்கனவாயும் விளங்குகின்ற ஸ்ரீ சரணுரவிந்தங்கள் அந்த மாது ஜனங்களினுடைய தளிருக்கொப்பான பாதங்களுடன் ஸமமாகப்பொருந்த நின்று அவர்கள் யாவரும் இரண்டு கரங்களையும் கூப்பி அஞ்சலி செய்துக் கொண்டிருக்க அவர்களின்மீது புஷ்பங்களை யிரைத்து அலர்ந்த கமலங்களைப்போன்ற தமது ஸ்ரீ ஹஸ்தங்களை அந்தக் கோபீஜனங்களினுடைய மனதை அரிக்கத்தக்க கண்டங்களில் அமைத்து எவ்வுயிர்களு மனங் கரைந்து உருகும்படியாக வேணுகானம் செய்து மண்டலாகார ராஜ பந்த லீலா விநோதங்களுடன் நர்த்தனங்களைச் செய்தார். இவ்விதம் சங்கபத்மம் - வஜ்ரகந்துகம்-சாதுர்முகம்-சக்ரவாளம் - சதுர்பத்திரம் - ஸௌபத்திரம் - நாக சந்தியாவர்த்தம்-குண்டலீகாரணம்-குளீரபந்தம் என்று சொல்லப்பட்ட ஒன்பதுவித லக்ஷணங்கள் காண்போர்க்குத் தோன்றும்படி ராஜக்கிரீடைகள் செய்யத்தொடங்கி ஏகபாத சமபாத முதலிய சஞ்சாரங்களுடன் உலாவித் திரிந்து வாயு மண்டலங்களிலும் சந்திர மண்டலங்களிலும் சுழன்று சுழன்றெழும்பி ஸ்தாவரங்களைப்போல நின்றும் இரத்ந கங்கண

பூஷணங்கள் ஜ்வலிக்க ஹஸ்தங்களினது அபிநய பேதங்களைத் தோன்றச்செய்தும் நடித்தார்கள்.

அந்த ராஜக்கிரீடை செய்கிற சமயங்களில் இந்த கோபிகா ஜனங்கள் தங்களுடைய மெல்லிய இடைகள் துவண்டு ஊசலாடவும், மஹாமனோஹரமாகிய முகாரவிந்தங்களில் இளஞ் சிறு நகைகள் விளங்கவும், சிறு வியர்வைகள் முத்துகளுக் கொப்பாயரும்பவும், முத்து முதலிய நவமணியிலாகிய மாலைகள் ஒன்றோடொன்று கலந்து சுழித்துச் சிக்குபடவும், உடைமேலுடுத்திய மேகலைகள் தளர்ந்து சரியவும், சுந்தர நேத்திரங்களினுடைய பார்வைகள் பிரகாசிக்கவும், அளகபாரங்களில் அணிந்த பரிமளங்களோடுங் கூடிய கதம்ப புஷ்பமாலைகளில் நின்றும் புஷ்பங்கள் ஒன்றொன்றாய்ச் சரிந்து நழுவவும், தங்கள் திருமேனிகளி லணிந்த இரத்ந பூஷணங்கள் ஜ்வலிக்கவும், ஸ்ரீ கிருஷ்ண சகிதர்களாய் யாவரும் ஆனந்த பரவசர்களாய் மதுர த்வனியுடன் பாடியும் கதிவிசேஷ லய நிதானங்கள் மாறாமல் சகல தேவ ஜன நேத்ரோத்ஸவமாக நடித்தும், நீல மேகங்களிடத்திற் றோன்றி அவற்றைச் சூழ்ந்து விளங்கா நின்ற மின்னற்கொடிகளைப் போலப் பிரகாசித்தார்கள்.

இன்னும் களங்கமற்ற கோபிகா ஜனங்கள் ஸ்ரீ பங்கஜ லோசனராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் கூடி அவருக்குச் சரியாய் லயக் ஞானங்கள் வழுவாமல் நர்த்தனங்களைச் செய்யும்பொழுது அவர்களரையிற் கட்டிய மேகலாபரணத்தில் உண்டாகிய வோசைகளும் ஹஸ்தங்களி லணிந்த கங்கணங்களின் ஓசைகளும் பதநூபுரங்களின் ஓசைகளும் ஒன்றாய்ச் சேர்ந்து லயக்ஞான முறை விளங்க சகல ஜனமனோரஞ்சன கர்ணோத்ஸவமாயிருந்தன. ஒரு கல்யாணி வீணையினது தந்திகளைமீட்டி ஸ்வரக்ஞான லய நய கதி பேதங்கள் வழுவாமல் ஒரு ராகம் ஆலம்பனஞ் செய்யத்தொடங்கி நானாவிதமாக ஆலாபித்துப் பாடினாள். அப்போது ஸ்ரீ பகவான் அந்த ராகத்தைக் கேட்டு சந்தோஷித்தார். அவ் வனத்திலுள்ள தருக்கள் யாவும் அரும்பெடுத்தன.

மற்றொரு பூஷணியானவள் மிகவுஞ் சுந்த்ரமாக நர்த்தனம் செய்து மதுர ஸ்வரங்கள் பாடித் தனது பதநூபுர சதங்கைகளும் கங்கணாதி பூஷணங்களு மிகவுமினியனவாகச் சப்திக்க ஸ்ரீ பகவானுடன்கூடித் தனது ஸ்தனபார முத்திரைகளை அவருடைய ஸ்ரீ ஹஸ்தங்களிலொத்தி யுபசரித்துச் சந்தோஷமாய்ச் சுகாநந்தத்தை யடைந்தனள்.

ஒரு சுந்தரவதி ஸ்ரீ பகவானுடைய குணங்களை யபிநயஞ் செய்து விளையாடினாள். அப்போது அவள் கொங்கை பாரங்களின்மீது அணிந்த ஆணிமுத்துகளைப் போலத் தேகத்தில் வியர்வை யரும்பினது. பால கோபாலமூர்த்தி தமது கரங்களினால் அந்த வியர்வையை நிவாரணஞ் செய்தனர். ஒரு சுந்தரவதியானவள் நர்த்தநம் செய்து அலுத்தாள். அவளுடைய பிரியராகிய ஸ்ரீ ஜனார்த்தனர் தமது அஸ்தங்களினால் ஸ்பரிசித்து இளப்பை நிவாரணஞ் செய்தனர்.

அந்தச் சமயத்தில் கோபீ ஜனங்கள் யாவரும் தங்கள் பூர்வ ஜன்ம தபோபயனாய் விளங்குகிற எம்பெருமானை ஸ்பரிசித்ததினாலே யுண்டாகிய பேரானந்தக் கடலில் மூழ்கினவர்களாய்ப் பிறவிக் கடலினின்று மோக்ஷக்கரை யேற்றுதற்குரிய தெப்பமாகிய திருவடித் தாமரைகளையுடைய அந்த ஸ்ரீ பகவானை ஸ்துதி செய்துக்கொண் டிருந்தார்கள்.

மன்னர் மன்னனே! பரம கிருபாமூர்த்தியா யெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ ஹரியானவர் ராஜக்கிரீடைகளில் திருப்தியடைந்த கோபிகைகளைப் பார்த்து அவரவர்களை ஆயாசந்தீரயதேச்சையாய் உலாவச்செய்து தாமும் இளைப்பாற்றிக் கொண்டு யமுனாநதியில் ஜலக்கிரீடைசெய்ய நிச்சயித்தவராய் அம்மகா நதியிலிறங்கினார்.

அந்தச் சமயத்தில் கோபிகா ஜனங்கள் யாவரும் ஸ்ரீ பகவானை துதித்துக்கொண்டு ஆனந்த பரவசர்களாய் அந்த நதியில் ஸ்ரீ பகவானுடன்கூட முன்னும் பின்னுமாக இறங்கினார்கள். சிலர் முழந்தாளமரும் ஜலத்தில் சிலர் தொடையளவாழத்தில் சிலர் அரையளவாழத்தில் சிலர் மார்பளவு ஜலத்தில் இப்படி நானாவிதங்களாக ஜலத்திலிருந்து ஏகவஸ்திர தரர்களாய் மங்க ளஸ்நானம் செய்தனர். அச்சலத்தில் லீலா பரவசர்களாய் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் சரச வசனங்களைப் பேசி சமீபத்தில் வந்து சலத்தை வாரிவாரி யிறைத்தும், அவரிறைக்கும்போது தப்பித்துகொண்டும் சிலர் தப்பித்துக் கொள்ளாமல் நின்றும், அச்சலத்தில் தோய்ந்து தாங்களும் பதிலுக்கிறைத்தும் ஸ்ரீ பகவானுடைய கரங்களால் அபிஷேகப்பட்டவர்களாயும் ஆழ்ந்த ஜலத்திலிறங்கிக் குதித்து விளையாடிச் சஞ்சரிக்கின்ற யானைப்பேடுகளைப் போல ஸ்ரீ பகவானுடன் அந்நதியில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். இப்படிப்பட்ட ஜலத்தையுடைய யமுனா நதியில் ஸ்ரீ பகவானுடன் இந்த பாலாமணிக ளெல்லாரும் தீர்த்தமாடி நிர்மலமான மனதுடையவர்களாய் அந்நதியைவிட்டு வெளி

யில் வந்து வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டு சுகந்த பரிமளங்களை யணிந்து சகலாபரணங்களையுந் தரித்து சர்வாலங்கார சோபிதர்களாய் மதசலத்தை அடுத்த யானைப்பேடுகள் சுகத்துடன் கிரீடிக்கின்றனபோல வெண்மையாகிய மணற்குன்றுகளினிடத்திலும் பூம்புதர்களின் சார்பிலும் விருக்ஷங்களினடிவாரங்களிலும் இருந்து நானாவித சுகபோகக் கிரீடைகளை யனுபவித்தார்கள். இந்தப்பிரகாரம் சரத்காலத்தில் ஸ்ரீ பாலகோபால மூர்த்தி இந்திரிய சலனங்களை யடையாத பகவானாயிருந்தும் இந்த ஸ்ரீ கோபிகைகளுடன் கூடி அவர்களின் இஷ்டத்தின்படி ரமித்தாரென்று சொல்வதைக்கேட்ட பரிக்ஷித்து எனும் உத்தம அரசன் வினவலாயினான் :

பரிக்ஷித்து மஹாராஜன் வாக்கியம்

வாராய் சுகப்ராஹ்ம ரிஷியே! சர்வ தருமங்களுக்கும் கர்த்தாவாகியும் போக்தாவாகியும் விளங்குகின்ற ஸ்ரீ பகவான் மகா தர்மங்களை ஸ்தாபனஞ் செய்யத் திருவவதரித்து காம போகங்களை அனுபவிக்க இசைந்தது எவ்விதத்தில் தர்மமென்பதை எனக்கு விளக்கிச்சொல்ல வேண்டுமென்றனர். சுகர் சொல்லுகின்றார் : ராஜனே! இவ்வுலகத்தில் சர்வ திரவியங்களினும் பிரவேசித்து சர்வதிரவிய போக்கிய ராகியும் அவற்றின் தோஷங்களை யடையாதவராயுமிருக்கின்ற அக்கினி பகவானைபோல பிறர் மனைவியினது சங்கம சுகபோகங்களை யனுபவிக்கினும் மஹா தேஜோமய ஸ்வரூபர்களாகிய சந்திரன் இந்திரன் முதலிய தேவதைகள் அந்த தோஷங்களை யடையார்கள். அவர்களைப்போல மானிட ஜனங்கள் பிறர் மனைவியர்கள் மேல் ஆசைகொள்ளுவார்களே யானால் தங்கள் புண்யம் நசித்து அதோ கதியை யடைவார்கள். சிவனைத் தவிர மற்றவர்கள் யாரெனினும் திருப்பாற்கடலில் வாசுகியினால் கக்கப்பட்டுவந்த ஆலகால விஷத்தைப் பானஞ் செய்வார்களாகில் சஹித்தும் பிழைப்பார்களோ? அப்படிப் போல மகா தேஜசிகளுக்குத் தவங்குன்றினாலும் மறுபடியும் மீளுவார்கள். அல்ப தேஜசிகளுடைய தவமழியுமேயானால் மறுமடியுமீண்டும் உச்சீவிப்பதரிதாயிருக்கும். நரேந்திரனே! ஸ்ரீ பகவானானவர் ஒரு பிராம்ய முகூர்த்தம் வரையில் கோப ஸ்திரீகளுக்குத் திருப்தி யுண்டாகும்படிச் செய்தபின்பு, தம்மையே மணவாளனாக நினைத்துச் சலியாமல் பார்த்துக் கொண்டு விட்டுப் பிரியமன மில்லாதவர்களா யிருந்தபோதிலும் ஸ்ரீ பகவதாக்கினையின்படி கோபிகைகள் தங்கள் மாளிகைகளைச் சேர்ந்தார்கள். ஸ்வாமியுந் தமது திருமாளிகையைச் சேர்ந்தார். அந்தக் கோகுல சிரேஷ்டர்களும் ஸ்ரீ பக

வானிடத்தில் வைத்த மனதுடையவர்களாய் இந்தக் கோபீ ஜன விருத்தாந்தங்களைக் கேட்டவர்களுமன்று. மனதில் தோற்றும்படி நினைத் தவர்களுமன்று. அவர்களும் ஸ்ரீ கிருஷ்ண குண மகிமாதிசயங்களில் மூழ்கி பிரஹ்மானந்த பரவசர்களாய்ச் சந்தோஷித்துக் கொண்டிருந்தார்கள்.

வாராய் பூபதியே! ஸ்ரீ பகவானுங் கோபிகா ஜனங்களுஞ் சேர்ந்து நடத்திய புண்ய சரித்திரங்களைக் குணுனுபவஞ் செய்து ஸ்ரீ பகவத் பக்தியை அடைகின்ற புண்ய புருஷர்கள் யாரோ அவர்கள் யாவரேனுந் தங்கள் ஜன்மாந்தரங்களிற் சம்பாதித்த பாபங்கள் நசிக்க நித்திய சுகாநந்த ஸ்ரீ பகவத் ப்ராப்தியை யடைவார்கள்.



## முப்பத்தி மூன்றும் அத்தியாயம்



*ஸ்ரீ பகவானுனவர் அம்பிகாவன உத்ஸவத்திற்கு நந்தகோபர் முதலிய சகல ஜனங்கள் போயிருந்த விடத்தில் மலைப்பாம்பின் சாபத்தை பெற்ற சுதரிசனன் சாபவிமோசனம் பெற்றதும், சங்க சூடனை வதைத்ததும் சொல்லப்படுகிறது.*

ஒற்றைக் குடை நிழலில் உலகம் புறக்கும் உத்தம கேள்! ஒருநாள் நந்தகோபர் முதலிய கோபாலர்களும் கோபீஜனங்களும் அம்பிகாவனத்தை யடைந்து அந்தப் புண்ய க்ஷேத்திரத்தில் மகா பரிசுத்தமாகப் பிரகாசிக்கின்ற சரஸ்வதி நதியில் தீர்த்தமாடி மிகவும் பக்தி சிரத்தையுடன் உமா மஹேஸ்வரர்களைத் தியானித்துக் காணிக்கைகளைச் சமர்ப்பித்து ஸ்ரீ அம்பிகாதேவி! ஸ்ரீ அம்பிகா மனோஹரா! ஸ்ரீ கௌரீ! ஸ்ரீ கௌரீபதே! ஸ்ரீ உமாதேவீ! ஸ்ரீ உமாமகேஸ்வரா! ஸ்ரீ சிவசம்போ! சங்கர மஹாதேவா! ஸ்ரீ சைல வாணீ! சாம்பவீ! மாகா காளீ! கிருபையாக எங்களை இரக்ஷிக்கக் கடவீரென்று பலவாருக ஸ்துதிகளைச் செய்து சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்தார்கள். பின்பு அவ்விடத்தில் நந்தகோபர் பிராமணர்களுக்குச் சமாராதன பூர்வகமாக அறுசுவை ரசவர்க்கத்துடன் பக்குவான்னங்களையுஞ் சமர்ப்பித்து, சந்தனபரிமள புஷ்பாலங்காரத்துடன் கோ-பூ-சொர்ன-வஸ்திர தானங்களையுஞ் செய்து ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமாக தத்தஞ் செய்தார்.

பின்பு நந்தகோபர் உபநந்தனர் சந்தனகர் முதலிய கோபால பிரபுக்களும் மற்றுமுள்ளவரும் மிகவும் பக்தி நிய

மங்களோடு ஜலத்தை மாத்திரம் பானஞ்செய்து புண்யக்ஷேத்திர உபவாசமாக அன்றிராத்திரி அவ்வனத்தில் வாசஞ் செய்துக் கொண்டிருந்தார்கள். அவ்விரவில் அவ்வனத்தில் வாசஞ்செய்துக் கொண்டிருக்கின்ற ஒரு மலைப்பாம்பானது மிகவும் பசியை யுடையதாய்ச் சுயேச்சையாகச் சஞ்சரித்துக் கொண்டு வந்து உபவாசராய் நித்திரை செய்து கொண்டிருக்கின்ற நந்தகோபரைப் பற்றி விழுங்கத் தொடங்கிற்று. அந்தச் சமயத்தில் நந்தகோபரானவர் ஆ ஸ்ரீ கிருஷ்ணா! ஆர்த்த ஜனரக்ஷாமணீ! சர்ப்பத்தினால் விழுங்கப்படும் என்னை விடுவித்து இரக்ஷிக்க ஓடிவா வென்ற அவ்வாரவாரங்களைக் கேட்டு விழித்துக் கொண்டு கோபால ஜனங்கள் யாவருங் கூக்குரலுடன் சீக்கிரமாக ஓடிவந்து நந்தகோபரைப் பார்த்து மிகவும் பரபரப்பை யுடையவர்களாய் அம்மலைப் பாம்பைக் குறைக்கொள்ளிகளாற் சுட்டார்கள், கோடாரிகளால் மோதிக் கொத்தினார்கள். அவற்றினால் மிகவும் வருத்தத்தை யடைந்தபோதிலும் அக்கொடிய மலைப்பாம்பானது நந்தகோபரை விடாமல் விழுங்கிக் கொண்டிருந்தது. அத்தருணத் ஸ்ரீ கிருஷ்ண பகவான் தீவிரமாக வந்து அந்தப் பாம்பைத் தமது திருவடித் தாமரைகளா லுதைத்தார். அம்மாத்திரத்தில் அந்தப் பாம்பானது தனது ஜன்மாந்திரத்திற் சம்பாதித்த பாபங்களினின்றும் விடுபட்டு அந்தச் சர்ப்ப சரீரத்தைவிட்டு வித்தியாதர ஸ்வரூபத்தை யடைந்து ஸ்ரீ கிருஷ்ண மூர்த்திக்குச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து மிகவும் பயபக்தி வினயத்துடன் நின்றது. அப்படி நிற்கின்ற வித்தியாதரனைப் பார்த்து ஸ்ரீ கண்ணபிரான் திவ்ய ஸ்வரூபதரனாக விளங்குகின்ற நீ யார்? உன்னுடைய நாமதேயமென்ன? உனது வாசஸ்தலமெங்கேயிருக்கின்றது? உனக்கு இந்த துஷ்ட சர்ப்பரூபம் என்ன பாவத்தினால் நேரிட்டது? என வினவ, வித்தியாதரன் விநயத்துடன் சொல்லுகிறான் :

பெரும் பாபங்களினின்றும் என்னை விடுவித்த அண்ணலே! நான் சுதரிசனனென்னும் நாமதேயமுடைய வித்தியாதரன். இந்தச் சுந்தராகாரத்துடன் மிகவும் ஐஸ்வரியத்தை யடைந்தவனாகி விமானாரூடனாகி ககனமார்க்கமாக சஞ்சரித்து வரும்போதொருநாள் குரூர ரூபிகளைப்போலத் தோற்றிய ஆங்கிரஸ மகா ரிஷிகளைப் பார்த்து ஏளனமாக நகைத்தேன். அவ்வளவில் அந்தப் புண்ய சீலர்களாகிய ரிஷி புங்கவர்கள் கோபத்தை வகித்து என்னைப் பார்த்து நீ இந்தச் சௌந்தரிய ரூபத்தைக் கொண்டிருப்பதினாலல்

லவா எங்களை யிகழ்ந்தாய். இனி இந்த ரூபத்தை யிழந்து மலைப்பாம்பாய்க் கிடக்கக் கடவாயென்று சபித்தார்கள். பின்பு நான் எனது பாப சிந்தையைக் குறித்து வியாகுலப் பட்டு அம் மஹா ரிஷிகளுடைய சரணாரவிந்தங்களுக்குச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து இரக்ஷிக்க வேண்டு மென்று ஸ்துதிகளைச் செய்தேன். உடனே அவர்கள் கிருபை கூர்ந்தவர்களாய் "ஸ்ரீமந் நாராயணர் பக்தபரா தீனராய் யதுகுலத்தி லவதரித்து எழுந்தருளியிருக்கின்ற காலத்தில் நந்தகோப்பர் முதலிய கோபால ஜனங்களுடன் தேவதா யாத்திரையி னிமித்தம் இவ் வாரண்யத்திற்கு ஓர் தினத்தி லெழுந்தருளுவார். அந்த ஸ்ரீ ஜனார்த்தனருடைய ஸ்ரீ பாதாரவிந்த ஸ்பரிசம் உனக்குக் கிடைத்ததும் நீ இந்த சாபத்தினின்றும் விடுதலை யடைவாய் என்று அருளினார் கள்" என்று பகவானை பலவிதமாக ஸ்தோத்திரம் செய்து பல தடவையும் பணிந்தெழுந்து விடைபெற்று தன் உலகு அடைந்தனன்.

பிறகு நந்தகோபர் மலைப்பாம்பின் வாயில் நின்றும் விடுபட்டு மற்றவர்களால் உபசரிக்கப்பட்டு தன் ஆயாசம் தீர்த்துக்கொண்டிருந்தார். அந்த ஜாத்ரோத்ஸவத்தை கிரமமாக நடப்பித்து யாவரும் மறுநாளுதயத்தில் பரிசுத் தர்களாய்ப் பாரணைசெய்து கர்ப்பூர தாம்பூல சுகந்த பரிமள புஷ்பங்களை யணிந்துகொண்டு அவரவர்கள் தங்களுக் கிசைந்த வாகனங்களில் ஆரோகணமாகி ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினுடைய திவ்ய கல்யாண குணங்களைக் கீர்த்தனங் கள் செய்துகொண்டு கோகுலம் வந்து சேர்ந்தார்கள்.

ஒரு நாள் இரவு பூரணசந்திரன் வானத்து ஒளிர ஸ்ரீ பலபத்திர மூர்த்தியும் ஸ்ரீ கிருஷ்ணபகவானும் ருசிரான் னங்களைப் புசித்து சகல அலங்காரத்துடன் துளைக் கருவி யாகிய புள்ளாங்குழல்களை இடையிற் சொருகிக்கொண்டு சம்பிரம வார்த்தைகளைப் பேசி உலாவிக்கொண்டே பிருந்தா வனத்திலுள்ள புஷ்பங்களால் நிறைந்த உத்தியான வனங் களுக் கெழுந்தருளி மதுரமாக ஸ்வரங்களைப் பாடுகின்ற விசித்திர வண்டினங்களி னோசைகளையும் பரிமள குளிர் தென் றற் காற்றுகளையும் நன்றாக வனுபவித்துச் சந்தோஷமாய்த் தங்கள் புள்ளாங்குழல்களைத் தமது அதரங்களில் வைத்து ஒருவர்க்கொருவர் மஹா மங்களகரமாகியும் சமஸ்த பிராணி களும் மன சந்துஷ்டி யடையும்படியும் நானாவித விசித்திர கீதங்களைச் செய்தார்கள். இந்த முரளிகான த்வனிகளைக் கேட்டு கோபிகாஜனங்களும் மனோலய மடைந்து சரீரங்களை

மறந்து அவரவர்கள் புறப்பட்டு அவ்வன வீதியில் இந்த மூர்த்திகளினுடைய ஸேவார்த்தமாக வந்து அவர்களைக் கண்டு யதேச்சையாய் சிலநேரஞ் சஞ்சரித்து பின் சித்திரத்தி லெழுதிய பாவைகளைப்போல நின்று தங்கள் கலைகள் நழுவ அளகபாரங்களி லணிந்த புஷ்பங்கள் ஒன்றொன்றாய் நழுவி யுதிர இந்தக் கான சுகாதிசயங்களை அனுபவித்துக்கொண் டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் குபேரனுடைய தோழனான சங்கசூட னென்கிற ஒரு குய்யகன் அவ்விடத்தில் சஞ்சரித்துக்கொண் டிருந்து இவர்களுடைய கானங்களையும் இந்தக் கோபிகை களினுடைய மனோலயங்களையுங் கண்டு ஆச்சரியமடைந்தவ னாய் கர்விதனாகி தன் மாயா பலத்தினால் இந்தப் பலராம கிருஷ்ணர்களால் ரக்ஷிக்கப்பட்ட கோபிகா ஜனங்கள் யாவ ரையும் அபகரித்துக்கொண்டு உத்தர திசையை நோக்கி நடந்தான்.

அத் தருணத்தில் இக்கோபி ஜனங்கள் யாவரும் ஸ்ரீ கிரு ஷ்ணனிடத்தில் பக்தி யுள்ளவர்களாகையால் அந்தக் குய்யக னுடைய மாயையி லகப்படாமல் ஸ்ரீ பகவந் நாமங்களை ஸ்மரித்து முறையிட்டுப் புலியின் வசத்தி லகப்பட்ட பசுவினங்களைப் போலக் கதறினார்கள். உடனே ஸ்ரீ பலபத்ர மூர்த்திஸகிதராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஹே கன்னியா மணிகளே! பயப்படாதேயுங்களென்று அபயப் பிரதானஞ் செய்து பலபத்திரர் ஒரு ஆச்சாமரத்தைப் பிடுங்கிக்கொண்டு கூடவரத் தாமொரு ஆச்சாமரத்தைப் பிடுங்கிக்கொண்டு கால மிருத்தியுவைப்போல அடா குய்யகனே! ஓடாதே நில் லென்று கர்ச்சித்துப் பின் தொடர்ந்தார். அம்மாத்திரத்தில் அந்தக் குய்யகன் மனங் கலங்கிப் பிராண பீதியடைந்து இந்த சுந்தரீ ஜனங்களைவிட்டு உத்தர திசையை நோக்கி ஓடத் தொடங்கினான்.

உடனே ஸ்ரீ பகவானானவர் ஸ்ரீ பலதேவரை இந்த மாது ஜனங்களுக்கு இரக்ஷகமாக நிறுத்தித் தாம் மாத்திரம் அவனைத் தொடர்ந்து அடா துஷ்டப் பயலே நீ எங்கே போகிறாய்? எங்கு சென்றபோதிலும் உன்னை விடுவதில்லை யென்று அவன் தனது மாயா வித்தைகளினால் எந்த ஸ்வரூபத்தை யடைந்து எங்கொளித்தபோதிலும் பூமி ஆகா யங்களில் எங்குஞ் சஞ்சரித்தோடி மறைந்தபோதிலும் அங்கங்கு அவனுக்கெதிரில் தோன்றி நின்றார். அப்போது அவன் வாடி யேங்கித் துக்கித்து மாயா வித்தைகளி லழிந்து பிரமித்து நின்றான்.

உடனே ஸ்ரீ பகவான் தமது கைகளை முஷ்டியாகப்பிடித்து அவனுடைய தலைபிளக்கும்படி மோதினார். அது தாங்கின மாத்திரத்தில் அவனிறந்து கவிழ்ந்து பூமியின் கண் மண் கவ்வி விழுந்தான். அத்தருணத்தில் அவன் சிரோபாகத்தில் ஒரு திவ்விய ரத்நமானது ஜாஜ்வல்ய மானதாய் திக்கு விதிக்குகள் பிரகாசிக்கும்படி ஜ்வலித்துக் கொண்டிருந்தது. அதைக் கோபீ ஜனங்கள் முதலிய யாவரும் பார்த்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீ பகவானானவர் அந்த ரத்நத்தையபகரித்து அந்தச் சங்கசூடனைச் சம்ஹரித்து அவனுடைய தலையில் நின்றுங் கிரகித்ததாகிய வேதமணி என்னுஞ் சிரோரத்நத்தைத் தமக்கு மூத்தபிராணகிய ஸ்ரீ பலராம மூர்த்திக்குக் காணிக்கையாகச் சமர்ப்பித்துச் சந்தோஷ முண்டாக்கினார். அவரும் பரம சந்தோஷராய் ஸ்ரீ பகவானைக் காடாலிங்கனஞ்செய்து திருப்தியடைந்தார். பின்பு ஸ்ரீ கிருஷ்ணர் முதலிய சகலரும் கோகுலத்திற்கு வந்துசேர்ந்து வாசஞ் செய்து கொண்டிருந்தார்கள்.



## முப்பத்தி நான்காவது அத்தியாயம்



*பகற் காலங்களில் ஸ்ரீ பகவான் வனங்களில் சஞ்சரிக்கும்போது கோபிகைகள் அவர் பிரிவை யாற்றாது வருந்துவதைச் சொல்லப்படுகிறது.*

பாகவதோத்தமனே! ஸ்ரீ பகவான் நாள்தோறும் பகற் காலங்களெல்லாம் வனங்களிலும் இராக்காலங்களில் கோபகன்னிகைகளுடனும் விளையாடிக் கொண்டிருந்தார். கோகுலத்திலுள்ள ஜனங்கள் யாவரும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய லீலா வைபவாதிசய குணங்களை ஒரு நிமைப்பொழுதும் மறவாமல் தங்கள் சகீ ஜனங்களைப் பார்த்து மனோவேதனைகளாறும்படி அவருடைய குணலீலைகளை ஒருவர்க்கொருவர் பிரீதியாகப் பேசி ஸ்ரீ ஹரியானவர் திருவவதரித்த திவசமுதல் அந்நாள் வரையில் செய்த கல்யாண லீலா காரியங்களை நினைத்து தங்கள் தங்கள் இருப்பிடங்களில் பகற்பொழுதெல்லாம் அந்த ஸ்ரீ கிருஷ்ண குண கீர்த்தனங்களைச் செய்து அவர் லீலைகளில் தாங்கள் அநுபவித்த சுகானந்தங்களையும் நினைத்து நினைத்து எப்பொழுதும் சர்வேந்திரியங்களையும் அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கே சமர்ப்பித்து ஸ்ரீ கிருஷ்ண பகவான் எழுந்தருளுகின்ற மாலை காலத்தை மிகவும் ஆதாரத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

சந்தியாகாலந்தோன்றின மாத்திரத்தில் அந்தக்கோப ஸ்திரீகள் அங்கங்குத் தனித்தனியே இனமினமாகச்சேர்ந்து பிரம்ஹானந்த சந்தோஷபார்களாய் ஒருவரை யொருவர் பார்த்து சகிஜனங்களே! அதோ பார்த்தீர்களா இதுவரைக்கும் நம்மையும் ஸ்ரீ கிருஷ்ண பகவானையும் பிரியச்செய்து நமது இருதயங்களுக்குத் தாபத்தைத் தந்த இந்தச் சூரிய பகவான் இராத்திரிகாலம் வரச்செய்யத் தக்கவராய் அஸ்தமன பருவத்தை யடைந்தார்.

நமக்கெல்லாருக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வரவைத் தெரிவிக்கின்ற அஸ்தமன காலம் தோற்றுகின்றது. அதோ அந்த பிருந்தாரண்யத்திற்கு நேரே ஆகாசவீதியில் சர்வலோக மங்களகர சுப சுகுணத்தைப்போல கோவினங்களின் பாததூளிகளெழும்பி மேகப் படலங்களைப்போல ஆகாயத்தில் நிறைகின்றன. வாவா கோவினங்களின் அம்மா வென்னும் ஆரவாரங்களும் இந்த நந்தவ்ரஜத்திலுள்ள பிரஜைகளினுடைய செவிகள் குளிர்ந்தானந்திக்கும்படியாகக் கேட்கின்றன. அந்த நாதங்களைக் கேளுங்கள்; இதோ ஸ்ரீ பகவான் எழுந்தருளுகின்றார். சீக்கிரமாக வாருங்கள். நம்முடைய கண்கள் கலிதீரச் சேவிக்கலாம். நமது பிரியராகிய ஸ்ரீ பகவானுடைய கிருபையைப்பெற்று யாவரும் உச்சீவிக்கலாம் வாருங்களென்று ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு இனவினமாய் ஆவலுடன்வந்து திவ்ய சேவையைத் தந்துகொண் டெழுந்தருளுகின்ற ஸ்வாமியைத் தரிசித்துச் சந்தோஷானந்தத்தை யடைவார்கள். ஸ்ரீ புருஷோத்தமர் சமஸ்த கோபாலர்களும் கோவினங்களுந் தம்மைச் சூழ்ந்துகொண்டு வரப் பலராம சகிதராய் கோகுலத்திற் பிரவேசித்த மார்க்கங்களில் தமது கடாக்ஷ வீக்ஷண்யாமிர்த வருஷங்களினால் சமஸ்த கோபிகா ஜனங்களினுடைய மனோ தாபங்களை யாற்றிச் சன்மானித்துக்கொண்டு நந்த கோபருடைய கிருகத்தில் பிரவேசித்து யசோதா ரோகிணி தேவிகளால் சர்வோபசாரங்களுடன் போஷிக்கப்பட்டிருப்பார்.



## முப்பத்தி யைந்தாவது அத்தியாயம்

ஸ்ரீ பகவானனவர் கோகுலத்திலுள்ள கோபாலர்களையும்-, கோவினங்களையும் நலியச்செய்த அரிஷ்டாசுரனை சம்மரித்து, யாவரையும் ரக்ஷித்ததை சொல்லப்படுகின்றது.

வாராய் பரிக்ஷித்தே கேள்! அரிஷ்டாசுரான் என்பான் ஒருவன் தனது மாயவித்தையினல் ஆகாசவீதியில் வியாபித்துப் பாவும் மேகங்கள் இனவினமாகவந்து தங்களுக்கு ஆதாரமாகத் தங்குகின்ற பர்வதத்திற்குச் சமானமான முசிப்பையும் சமஸ்த பிராணிகளுக்கும் பயத்தைசெய்து கர்ப்பங்களைக் கலக்கப்படுத்தும் மேகத்திலிருந்து வெளிப்படுகிற இடிமுழக்கங்களையும் காலபைரவ ஆரவாரங்களையு மொத்த கர்ச்சனைகளையும் சூரியகிரணங்களை மறைத்துக் காடாந்தகாரமான இருளைத் தரும்படித் தூளெழும்பத் தக்கதாய்ப் பூமிபிளக்க உதைக்கின்ற குளம்புகளுள்ள நான்கு பாதங்களையும் வேர்களையுடைய விருக்ஷங்களையும் குன்றுகளையும் பர்வதங்களையும் எதிர்முட்டி நிர்த்தூளி செய்யத்தக்க வலிபடைத்த பர்வத சிகரங்களை யொத்த இரண்டு கொம்புகளையும் காலபாசத்தை யொத்த வாலையுமுடைய விருஷபாகாரத்தையடைந்து ஸ்ரீ கிருஷ்ண பகவானை ஹிம்சிக்க நினைத்துக் கொண்டு அந்த நந்தவிரஜ ஜனங்களும் கோவினங்களும் பிராணபீதி யடையும்படியாகத் தலையெடுத்து ஊங்காரம் செய்து கர்ச்சித்தும் வாலையுயரத் தூக்கிச் சுழற்றியடித்தும் முன்னங் கால்களினல் பூமியைப் பிளந்தும் பின்னங்கால்களினல் ஒருவருங் கிட்டச் சேர வொட்டாம லுதைத்தும் பர்வதாகாரமான தனது கொம்புகளினல் வளைத்து முட்டியும் கொடிய கிருத்தியங்களைப் பலபலவாருகச் செய்து கோபாலர்களையும் கோவினங்களையும் மேல்விழுந்து வெருட்டி எங்கும் நிற்கவொட்டாமல் துரத்தி முட்டியோட அடித்துக்கொண்டு கோகுலத்தில் பிரவேசித்தான். அப்போது அவ்விடத்திலுள்ள சமஸ்த பிராணிகளும் பயந்து பிராணிபீதியையடைந்தன.

கோபாலர்களும் மஹத்தாகிய பிராணபீதி யடைந்து சகலமான கோபஸ்திரீகளுடனே பசுக்கூட்டங்கள் முதலாகிய சமஸ்த பிராணிகளுங்கூடி ஓடி தொடர ஸ்ரீ பகவானைச் சேர்ந்து ஸ்ரீ கிருஷ்ணு! தீனபந்தோ! எங்கள் யாவரையும் இரக்ஷிக்கக் கடவீரென்று சரணமடைந்தார்கள்.

அப்போது தீன ஜனரக்ஷகராகிய ஸ்ரீ புண்டரீகாக்ஷர் தம்மை நோக்கி இரக்ஷிக்க வேண்டுமென்று ஓடி வருகின்ற சமஸ்த ஜனங்களைப் பார்த்து பயப்படாதிருங்களென்று அபயப்பிரதானஞ்செய்து அவர்கள் யாவரையுந் தமக்குப்பின் தூரமாகப் போகச் சொல்லித் தாமொருவர் மாத்திரமே அந்தத் துஷ்டனுக்கு முன்னின்று அந்த ருஷப ரூபியான கொடிய அசுரனைப் பார்த்து சொல்லுகின்றார்.

அடா விருஷபாசுரனே! நினது புத்தி நன்றே யாயிற்று! சாதுஜனங்களாகியும் தீனர்களாகியு மிருக்கின்ற கோபாலர்களையும் பேதைகளாகிய ஸ்திரீஜனங்களையும் சாதுக்களாய்ச் சஞ்சரித்துக் காட்டிலுள்ள தழைகளையும் புற்களையும் மேய்ந்து திரிகின்ற கோவினங்களையும் நலியச்செய்து நீ என்ன பலனைக்கண்டாய். இந்தத் திருவாயர் பாடியை முன்போல கோபாலர்கள் வாசஞ்செய்கின்ற ரேபல்லேயென்று நினைத்தாயோ? உன்னைப் பார்க்கிலும் மிகுந்த சௌரிய தைரிய பிரதாபசாலிகளான கொடிய துஷ்டாசுரர்களாகிய மத்தகஜங்களைச் சம்ஹாரஞ்செய்து விண்ணுமண்ணுஞ் சௌக்கியங் கொள்ளச்செய்து கீர்த்தியை யடைந்த ஸ்ரீ கோபால கிருஷ்ண சிம்ஹமானது சஞ்சரிக்கிற பாடியென்று நீ நினைக்கவில்லையோ? நீ உனது அசுரமாயையினால் விருஷபாகாரத்தை தரித்துக் கொடிய சேஷ்டிதங்களைச் செய்கின்றபடியால் இப்போது உன்னெதிரில் தோற்றுகிற இந்த ஸ்ரீ கிருஷ்ண சார்த்தூலமானது நீ தப்பித்துக் கொண்டோட நினைத்தாலும் அது உன்னால் முடியவிடாதென்பதை இப்போதாவது உணர்ந்தாயோ? அடா பதரே! நீ இத்தோடு ஒழிதல்தான் தகுதி என்று ஊங்கரித்துத் தட்டியை யிழுத்துக் கட்டிக்கொண்டு மஹா பயங்கர ஸ்வரூபமாகிய சர்ப்பேந்திரனுக் கொப்பாகிய தமது புஜபாகு தண்டங்களை நீட்டி மிகவும் பிரியமுள்ள சிநேகிதன் தோளில் கையை வைத்துச் சன்மானிக்கிறதுபோல அவனுடைய கண்டத்தின் மேல் ஸ்ரீ ஹஸ்தத்தை வைத்து வளைத்து அவன் கழுத்தை யிறுக அழுத்திப் பிடித்துப் பராக்கிரமத்துடன் நின்றார்.

அப்போது அந்த அரிஷ்டாசுரனானவன் மிகவும் கோபமுடையவனாய்த் தனது கால் குளம்புகளினால் பூமி பிளக்கும்படி யுதைத்து, பெருந்தூளிக ளெழும்பச்செய்து வாலை உயரத் தூக்கிச் சுழற்றி ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற மேகபடலங்களை யெல்லாம் சின்னாபின்னப்பட்டு ஓடும்படிப் பறக்கவடித்து இரண்டு கண்களிலும் நெருப்புப்பொரிகள் சிதறத் தலையை வளைத்துக்கொண்டு அசுராந்தகராகிய

ஸ்ரீ பத்மலோசனரை முட்டித் தள்ளினான். அந்தச் சமயத்தில் யாதவ குஞ்சரராகிய ஸ்ரீ பகவான் அந்த விருஷபாசுரனுடைய பர்வத சிகரங்களைப்போன்ற இரண்டு கொம்புகளையும் பிடித்து முன்னே சில தூரமிழுத்து வலித்து வருத்தப்படுத்திப் பின்பு மத்தகஜத்துடன் மும்மதயானையானது எதிர்த்து யுத்தஞ்செய்து நெட்டித்தள்ளினாற்போலப் பதினெட்டு கஜப்ரமாண தூரத்திற் போய்ச் சுழன்று விழும்படி நெட்டித்தள்ளினார். அம்மாத்திரத்தில் அவ்வசுரனானவன் திருணத்தைப் போலப் போய்வீழ்ந்து சரீரம்வேர்த்து இந்திரியங்கள் கலங்கிப் பெருமூச்செறிந்து சற்றே நிதானித்து ஆயாசந் தீர்த்துக் கொண்டு முன்னிலும் அதிக கோபோத் தீபிதனாய் மகத்தாகிய பராக்கிரமத்துடன் ஸ்ரீ ஜனார்த்தனரை ஊங்கரித்து முட்டினான்.

அத் தருணத்தில் இந்த பகவான் மறுபடியும் அந்தத் துஷ்டவசுரனுடைய இரண்டு கொம்புகளையும் மிகவும் பராக்கிரமத்துடன் பிடித்து மீட்டும்விடாமல் சிலதூரம் நெட்டிக் கொண்டுபோய்ப் பூமியில் விழும்படித் தள்ளி அவன்மீதேறி மிதித்துநின்று இவ்வுலகத்தில் லோக கண்டர்களாய் ஜனித்திருக்கின்ற கொடியவசுரவினங்களில் ஆங்காரமாகிய கொம்புகள் முறியவும் சாதுஜனங்கள் முதலிய சமஸ்தமான தேவர்களுடைய க்ஷேம மங்களகரமாகிய கொம்புகள் விருத்தியடையவும் நேரிட்ட சுபசூசனைக்கொப்பாக இந்த வரிஷ்டாசுரனுடைய இரண்டு கொம்புகளையும் வேருடன் பறித்து அவைகளையே வச்சிராயுதமாக இரண்டு ஹஸ்தங்களிலுந் தாங்கி யுறுதியாகப் பிடித்துப் பின்பாய்ச்சல் கொண்டு கிறு கிறென்று சுழற்றி முன்பாய்ந்துவந்து மோதியடித்து உதைத்தார். அவ்வளவில் அந்த மஹா கொடிய விருஷபாசுரனானவன் மூக்கிலும் வாயிலும் உதிரத்தைக் கக்கிக்கொண்டும் கிடு கிடென்று நடுங்கி உதைத்துக் கொண்டும் பிராணபீதியை யடைந்து மூத்திர மலங்கள் வெளிப்பட ஒருதாங் கதறிப் பேரிரைச்சலிட்டு பிராணனைவிட்டான்.

அதன் பிறகு சமஸ்த பிரஜைகளும் தங்களாபத்து நீங்கிச் சந்தோஷித்தார்கள். ஆகாசத்தில் ஸ்ரீ பகவானுக்கு ஜயங்கோருகின்ற சமஸ்தமான தேவதைகளும் ஆனந்த சந்தோஷங்களை யடைந்து திவ்ய புஷ்பங்களை அவர்மேல் வருஷித்தார்கள். ஸ்ரீ பகவானானவர் ஸ்ரீ பலராமரிடத்தில் வந்து சேர்ந்தார். பின்பு இருவர்களும் ஒருவர்க்கொருவர் அன்புடன் ஆலிங்கனஞ் செய்துகொண்டு சமஸ்த கோபாலர்களும் மஹா சுந்தரவதிகளான கோபிகை

களும் தங்களிடத்தில் வந்து சந்தோஷமாகத் துதித்துக் கொண்டு வர கோகுலத்தில் பிரவேசித்து அவரவர்களையும் தங்கள் தங்கள் கிருஹங்களை யடைந்து சுகித்துக்கொண்டிருக் கும்படி யனுப்பிவிட்டு தங்கள் மாளிகை சேர்ந்து சந்தோ ஷமா யிருந்தார்கள்.



## முப்பத்தியாறுவது அத்தியாயம்

ஸ்ரீ நாரதரின் மூலம், கம்ஸன், ஸ்ரீ பகவானுடைய திவ்ய சரித்திரங்களை சந்தேகமற கேட்டு ஸ்ரீ பலராம கிருஷ்ணமூர்த்திகளை யழைத்து வரும்படி கம்ஸன் அக்ரூரரை அனுப்பியது சொல்லப்படுகிறது.

இருவினை கடியும் ஏந்தலேகேள்! ஒருநாள் திரிலோ கத்திலுஞ் சஞ்சரிக்கின்றவராகியும், ஆசாபாசங்களில்லாதவ ராகியும், செல்காலம் நிகழ்காலம் வருங்காலமாகிய முக்கால குணங்களை நன்குணர்ந்தவராகியும், மகா தபோநிதியாகியும் விளங்குகின்ற ஸ்ரீமந் நாரத பகவான் ஸ்ரீ மதுராபுரியிற் கம்ச மகாராஜனுடைய சபைக்கெழுந்தருளினர். அந்தக் கம்சன் நாரதர் வருகிறதை யறிந்த மாத்திரத்தில் எதிர் கொண்டுபோய் உபசரித்துத் தகுந்த பூசைகளைச்செய்து அழைத்து வந்து ஒரு உசிதாசனத்தி லிருக்கும்படிப் பிரார்த் தித்தான். இவர் ஆசனத்திலிருந்தார், பின்பு நாரதரைப் பார்த்துக் கம்சன் வாரீர் முநீஸ்வரரே! தாம் என்மீதில் தயைவைத்து ஈங்கு எழுந்தருளியது எனக்கு மிக மகிழ்ச்சி யைத் தருகிறது. ஏதாவததிசயங்கள் இருந்தால் சொல்ல வேண்டுமென்று மிகவும் வணக்கத்துடன் கேட்டான். நாரத பகவான் விசித்திர சமாச்சாரங்களுண்டென்று சொல்லத் தொடங்கினர்.

வாராய் கம்ச மகாராஜனே! பூர்வத்தில் ஆகாசவாணி யினுடைய வாக்கின் பிரகாரம் ஜகதீஸ்வரனுகிய ஸ்ரீ ஹரி யானவர் உனதன்புள்ள தங்கையாகிய தேவகீ தேவியினு டைய திருவுதரத்தி லவதரித்து ஸ்ரீ வசுதேவரால் நந்தவ் ரஜத்தை யடைந்து விருத்தி யடைந்திருக்கின்றார். அவ்விட த்தில் யசோதாப் பிராட்டியினுடைய கர்ப்பத்தில் ஆவிர்ப்ப வித்துப் புத்திரிரூபத்தைக் கொண்ட ஸ்ரீ விஷ்ணுயோக மாயாசத்தியாகிய பத்திரகாளியை நீ சம்ஹரிக்கத் தொடங் கினையே! அப்போது அந்தர்த்தானமாய் விட்ட அந்த மகா சத்தியானவள் உனக்குச் சொல்லவில்லையா? நானும்

உனக்குச் சொல்லவில்லையா? அவற்றை நீ யறிந்திருக்கிறாய். மேலும் இந்த மகா புண்யவதியாகிய தேவகீதேவியினுடைய ஏழாவது கர்ப்ப சங்கருஷ்ணும்ச சம்பூதர்தான் ஸ்ரீ விஷ்ணு மாயையினால் ரோகிணி தேவியினுடைய திருவுதரத்தில் அவதரித்த ஸ்ரீ பலராமர்; ஸ்ரீ ஹரியாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு மிகவும் சகாயமாயிருந்து இவ் வுலகிலுள்ள கண்டகர்களாகிய அசுர ஜனங்களைச் சம்மாரஞ் செய்து அளவிறந்த லீலைகளை செய்து வருகின்றார். இப்போது அரிஷ்டாசுரனையும் சம்மரித்தாரென்று சொன்னார்.

அவற்றைக் கேட்டுக் கம்சன் பிராணபீதி யடைந்து மனங்கலங்கித் தைரியங்கொண்டு கோபோத்தீபிதனாய்ச் சபையோர்களைப் பார்த்து இந்தக் கிழவராகிய வசுதேவர் என்னை மோசஞ்செய்து தன் வயிற்றிற் பிறந்த பிள்ளையை யொளித்தார் பார்த்தீர்களோவென்று பற்களை நறநறவென்று கடித்து உடவாளை யுருவிக்கொண்டு இன்றே அவனை துணிப்பேனென வெகுண்டு ஓடினான். ஆனால் அக்காரியத்தை அவன் செய்யமுடியாமல் கை யயர்ந்தது, அதனால் சோர்ந்து நின்றான். அத் தருணத்தில் நாரதர் அக்கம்சனைப் பார்த்து "அவரின்னம் புண்யங்களைச் செய்யவிருக்கின்றார். அவர் உனது கைக்கு அடங்கியவரல்லர். அவரை வெட்டப் போவதும் மரியாதையன்று. உனது சத்துருவை ஜயிப்பதே உத்தமம். இவரை க்ஷமிப்பாயாக வென்று நிறுத்திச் சமாதானஞ் சொல்லி அந்தர்த்தானமாய்விட்டார். பின்பு அந்தக் கம்சன் கோபம் தன்னுள் பொங்கி எழ இந்த வசுதேவ தேவகிகள் எங்கேயாவது ஓடிப்போகவிடாதபடி இவர்களை பழையபடியே காராக்ருகத்திலடைத்து விலங்கிடுங்களென்று ஆக்ஞாபித்தான். தனக்கு மிகவும் பிராண சிநேகிதனாகியும் மகா மாயாவியாகியும் சூரனாகியுமிருக்கின்ற கொடிய அசுரனாகிய கேசியென்பவனை அழைப்பித்து நந்தவ்ரஜத்தில் வளர்ந்து வரும் ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களைச் சம்ஹாரஞ் செய்து வரக்கடவாயென்று ஆக்ஞாபித்து அனுப்பினான். தன் மனதுக்குகந்த மந்திரி பிரதானிகளையும் அசுரத்தன்மையுடைய ராஜ்யாதி காரியங்களைச் செலுத்துகின்ற சாளுவ கோசலாதி அநந்த தேசாதிபதிகளையும் சாணூர முஷ்டிகாதிகளையும் வரவழைத்து உபசரித்துத் தனது சபையிலாசனங்களி லிருக்கச்செய்து சொல்லுகிறான்:

புஜபலத்தில் நிகரில்லாத என் இஷ்டர்களே! இந்தப் பூமியில் எப்படிப்பட்ட சுத்த வீரர்களும் நம்முடன் போர்

செய்தல் தகாதென நட்பு கொண்டு வாழ்ந்திருக்க, இந்த கோகுலத்தில் வசிக்கும் பசுக்கூட்டங்களை மேய்த்துத் திரிகின்ற ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களென்கிற இரண்டு சிறு பிள்ளைகள் பசுவின்பாலைக் குடித்துக் காட்டிலுள்ள கந்த மூலபலாதிகளைத் தின்று கொழுத்து மதோன்மத்தர்களாய் துஷ்டர்களை சம்ஹரிக்கிறோமென்று பௌருஷங்கள் சொல்லித் திரிகின்றார்களாம். இந்த ஆச்சரிய சமாசாரங்களைக் கேட்டீர்களோ வென்று சொல்லித் தனக்குள் ளிருக்கின்ற கோபத்தினாலே சிரித்து சாணூர முஷ்டிகர்களை யழைத்து இன்றுமுதல் இந்தச் சபாமண்டபத் துவாரத்தில் ஆயுத பாணிகளாய் ஜாக்கிரதையாக விருந்து அந்த ஸ்ரீ பலராம கிருஷ்ணர்கள் அவ்விடம் வந்து நுழைந்த மாத்திரத்தில் யுத்தஞ்செய்து அவர்களைச் சம்ஹரித்து விடுங்களென்று ஆக்ஞாபித்து அதிக ஜாக்கிரதையாகக் காவல் வைத்தனன்.

பின்னும் அந்த மதுராபுரிக்குள் ளிருக்கின்ற தன்னுடைய பட்டணத்து யானையான குவலயாபீடத்தை யடைந்து தேவாசுரர்களுக்கும் பிராணபீதி யுண்டாகச் செய்கின்ற மகா பராக்கிரமத்தோடுங் கூடிய அம்மகா மத்தகஜத்திற்குப் பாகனாகியும் மிகவும் சுத்த வீரனாகியு மிருக்கிற யானைப் பாகனை யழைத்து இன்று முதல் குவலயா பீடத்துக்கு மும்மதங்க ளொழுகும்படிக்குத் தக்க ஆகாரங்களைக் கொடுத்துப் போஷித்து மகா பராக்ரம கோபகுணங்களைக் கற்பித்து அதன் துதிக்கையில் இருப்புலக்கையைக் கொடுத்து நமது புரத்துத் துவாரத்தில் அதிஜாக்கிரதையாக வைத்துக் கொண்டிருந்து பலராம கிருஷ்ணர்கள் பட்டணத்தில் நுழைகின்ற சமயத்தில் அம் மஹா கஜசிரேஷ்டத்தை அவர்கள்மேற் செலுத்தி அவர்க ளிருவரையும் இடித்துத் தள்ளித் துவைத்துக் கிழித்துச் சம்ஹரிக்கும்படிச் செய்யக் கடவாயென்று கண்டிப்பாக ஆக்ஞாபித்தான்.

பிறகு அந்தச் சபிகர்களைப் பார்த்து வாருங்கள் சபிகர்களே! நான் மகாதேவராகிய ஸ்ரீ பசுபதிக்கு பிரீதியர்த்தமாகவும் எனக்கு அபஜயங்கள் வராமலிருக்கும் பொருட்டாகவும் இந்தச் சதுர்த்தசி புண்ய காலத்தில் தநுர்யாகஞ் செய்யத் தொடங்குகின்றேன். அந்த யாக முடியுமளவும் நீங்கள் யாவரும் ஜாக்கிரதையாக விருந்து யாகசம்ரக்ஷணஞ் செய்ய வேண்டுமென்று நல்ல வார்த்தைகளால் ஆக்ஞாபித்து அவர்களுக்கு விடைதந்தான். அவர்கள் போனபின்பு தான் ஏகாந்தனாய் அச்சபையிலிருந்து மிகவும் சாதுவாகியும் மஹா

பாகவதோத்தமராகியும் ஏகாந்த சீலராகியு மிருக்கின்ற அக்ரூரரை யழைத்துவரும்படி ஏவலாளியை யனுப்பினன். அந்த ஏவலாளி போய்ச் சொன்ன மாத்திரத்தில் அவர் வந்தார். அவர் வருவதை யறிந்து உடனே மிகவும் ஆதரத்துடன் அவருக்கு எதிர்கொண்டுபோய் அவருடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு அழைத்துவந்து அவரைச் சுகாசனத்தி லிருக்கச்செய்து கம்சன் சொல்லுகிறான்.

மஹாநுபாவராகிய அக்ரூரரே! மஹா குணசாலியான நீர் சர்வ பிராணிகளுக்கும் சௌம்யராகியும் இந்தப் போஜ வம்சத்திற்கு பாம்பரையாய் ஹிதஞ் செய்யத்தக்க மந்திரி சிரேஷ்டராகியும் எனது க்ஷேமத்தை சர்வதா கோருகின்றவராகியும் இருக்கின்றீர். ஆகையால் நான் எனது ஆந்தரியமான இந்தக் காரியத்திற்கு உம்மை அடைகின்றேன். என் விஷயத்தில் எவ்வளவும் வஞ்சனை யில்லாமல் என் காரியங்களை முடித்துத் தரவேண்டும். இந்திராதி தேவர்கள் யாவரும் எனக்குப் பயந்து ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைச் சரணமடைந்து பிரார்த்தித்தார்களாம். அதனால் அவர் இந்த வசுதேவ தேவகி கர்ப்பத்தி லுதித்து நந்தவ்ரஜத்திற் சேர்ந்து பலராம ஸஹிதராய் என்னைச் சம்ஹரிக்கும் பொருட்டு விருத்தி யடைகின்றாரென்று கேள்விப்பட்டு நான் அநேக மாயாவிகளைக்கொண்டு அனந்த தந்திரங்களைச் செய்வித்தேன். என்ன செய்வித்தும் அவர்கள் நசிக்கவில்லை. ஆகையால் இப்போது நீரவ்விடத்திற்குப்போய் நந்தகோபரிடத்தில் கப்பம் வாங்கிக்கொண்டு மஹாராஜா தனுர்யாகஞ் செய்யப்போகிறார். நீங்கள் யாவரும் ஆபாலவிருத்த கோபால ஜனங்களுடன் வரக்கடவீர்களென்று ஆக்ஞாபித்து அகத்தியம் உமது இரதத்தின் மீது ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களாகிய அவ்விரண்டு சிறுவர்களையும் ஏற்றிக்கொண்டு வந்து நமது பட்டணத்திற் சேர்த்து விடவேண்டும். இவ்வளவு நீர் செய்வீரானால் நமது பட்டத்தானையாகிய குவலயா பீடத்தைக் கொண்டு சம்ஹரித்துப் போடலாம். அதற்குந் தப்பினால் மிகவும் கடினர்களாய்க் கோர கிருத்தியங்களோடுங் கூடிய மல்லஜட்டிகளாகிய சாணூரமுஷ்டிகர்களைக் கொண்டு அவசியம் சம்ஹரித்துப் போடலாம். அவர்களுக்குந் தப்பிப் பிழைத்தால் அப்போது உடனே எனது சக்கிராயுதத்தினால் வெட்டி யெறிந்துவிட்டு ஜன்மப் பகையைத் தீர்த்துக்கொண்டு இந்த வசுதேவரையும் நசிக்கச்செய்து யது - விருஷ்ணி - போஜ- அந்தக- ஜைனதாஸர்களான ராஜவம்சங்களை நாசஞ் செய்து யெனது தகப்பனாகிய உக்ரசேனரையும் அவர் தம்பி

தேவகரையும் பக்ஷபாதமான குணங்களழியும்படி விலங்கி லிட்டுக் கர்வத்தையடக்கி எனது மாமனாகிய ஜராஸந்த மஹாராஜாவையும் எனக்கு மிகவும் பிராண சிநேகிதர்களாகிய நரகாசுர-பாணாசுர-சம்பராசுர முராகாசுரர்கள் முதலான இன்னும் அனந்த தைத்தியாதிகளையும் சிசுபால-தந்தவக்கிர-ருக்மி-சுயோதன - பண்டர-சாளவ-யவன - கோசலா பதிகளாகிய அனந்தமாயிரந் தேசாதிபதிகளையும் எனக்குச் சகாயமாக வைத்துக்கொண்டு தேவேந்திராதி தேவதா பக்ஷமாகவிருக்கின்ற மற்றத்தேசாதிபதிகள் யாவரையும் ஹதஞ்செய்து அவர்களுடைய இராஜ்யங்களை என் சிநேகிதர்களுக்கு வெகுமதியாகக் கொடுத்துத் திக்குவிதிக்குகள் யாவும் ஜயித்துச் சத்துருபக்ஷ நாமதேயங்கள் எந்த லோகத்திலு மில்லாமல் கருவறுத்துப்போட்டு இந்தப் பூமண்டலத்தை எனது ஒரு குடை நிழலின்கண் அடங்கப் பெற்றுக்கொண்டு ஏக சக்கிராதிபதியாய் சுக போகங்களை அநுபவிப்பேன்.

புண்ய குணங்களில் சிறந்த அக்ரூரரே! இப்படிப்பட்ட பாக்கியாதி சயங்களை நான் அநுபவிக்கவேண்டிய நற்காலம் எனக்கு நேரிட்டிருக்கின்றபடியாலேதான் எனக்குள் இந்த நிச்சயம் பிறந்தது. ஆகையால் மகா புருஷராகிய நீரே என் மனோ நிச்சயத்தை யறிந்து நிறைவேற்ற வேண்டும். நீர் சீக்கிரமாகச் சென்று உமது புத்தி கோசரத்தால் யாக சமாசாரங்களைச் சொல்லி அந்த வசுதேவ புத்திரர்களாகிய பலராம கிருஷ்ணர்களை எந்தவித தந்திரங்களாவது செய்து அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

எனது இஷ்டராகிய கம்ஸமஹாராஜனே! எனக்கு மிகவும் ஆப்தராகிய உமதாக்ஞையின்படி நடக்க ஒரு தடையுமில்லை. ஆயினும் என்னுடைய வாக்கியத்தைக் கேளும். இவ்வுலகத்திலுள்ளவர்கள் தங்களையும் பிறரையும் யோசித்தறிகின்றதுமில்லை. தெய்வ சங்கல்பங்களை இத்தன்மைய தென அறியவும் முயற்சியார்கள். மனிதர்கள் எவ்வளவுதான் வல்லவர்களானாலும் பகவத் சன்னிதானத்தில் ஒரு சிறு காரியத்தையும் தன் இச்சையின்படி செய்து முடிக்க வல்லர் ஆகார்கள். எல்லாம் இறைவனது இச்சையின்படியே நடந்து முடிகிறதாகையால் நான் இவ்வளவு சொல்லதும் யுக்தமல்லாதது என காண்கிறேன். இனி நான் விடைகொள்கிறேன். உம திச்சையின்படி ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களை எனது ஸாகஸத்தினால் அவஸ்யம் அழைத்துக் கொண்டு வருவேனென்று அக்ரூரர் விடை பெற்று மீண்டனர்.

பிறகு அந்தச் சபையில் தனதேகாந்த சீலர்களாயிருந்த சில ஆலோசனைக் கர்த்தர்களாகிய மந்திரிகளையும் அனுப்பி விட்டு இந்தக் கம்ஸராஜனும் தனது அந்தப்புரத்தை யடைந்தான்.



## முப்பத்தேழாவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவான், கம்ஸனால் ஏவப்பட்ட கொடிய அசுரனாகிய கேசி வியோமன் எனும் இரு அசுரர்களை வதைத்தது சொல்லப்படுகிறது.*

வாராய் சாது ஜனோத்தமனே! முன் அந்தக் கம்ஸனால் ஏவப்பட்ட மிருந்த கொடிய துஷ்டாசுரனாகிய கேசி யென்பவன் அசுவ ரூபத்தைத் தரித்து லோக பயங்காராகாரமான கோர கிர்த்தியங்களைச் செய்துகொண்டு தனது சண்டப்ர சண்ட கதிவேகத்தோடு நடக்கத்தக்க நான்கு பாதங்களிலு முள்ள குளம்படிகளினால் பூமியைப் பிளந்து தூளிகளை ஆகாசத்தி லெழுப்பி எங்குங் காடாந்தகாரமாகிய இருளை யுண்டாக்கி இந்தப் பூமியெல்லாம் கிடுகிடென்று நடுங்கவும் ஸ்ரீ ஆதிசேஷ பகவான் பணாமுடிகளைச் சாய்க்கவும் சமஸ்த பிராணிகளும் பிராணபீதி யடைந்து திக்குகள் தெரியாமல் சிதறியோடவும் ஆகாசத்தில் சஞ்சரிக்கின்ற மேகங்களும் தேவதா விமானங்களும் அலைந்து சிதைந்து பர்வத சிகரங் களிலுங் குகைகளிலும் போயொளிக்கவும் தனது பற்கள் தோன்ற வாயை விரித்துக் கனைத்துப் பிரளயாக்கினியைப் போல நெருப்புப் பொரிகள் சிதறி மின்னக் கண்களை விழித்து மிருத்தியுவினுடைய காலபாசமோ இதுவென்று சமஸ்தப் பிராணிகளினுடைய இருதயங்களும் பேதிக்கப்பட்டுத் திகி லடையும்படி நீண்டிருக்கின்ற வாலசைவினாலே பிரளய ஊழிகால வாயுவுக் கொப்பாகிய பெருங்காற்றை யுண்டாக் கிக்கொண்டு மிகவுங் கொடுமையாகிய இரைச்சலோடும் கோகுலத்தில் வந்து பிரவேசித்தான். அத் தருணத்தில் அந்த நந்தவ்ரஜத்திலுள்ள யாவரும் அவ்வசுரனுடைய ஆரவாரத்தினால் ஒன்றுந் தோன்றாமல் ஏதோ ஆபத்து நேர்கிறதென்று மிகவும் பயந்து ஸ்ரீ கண்ணபிரானை அடுத்து துதித்தார்கள்.

அவ்வசுரக் கொடியனும் மற்ற கோபாலர்கள் முதலிய வர்களை துரத்திக்கொண்டு ஸ்ரீ பகவான் எங்கிருக்கின்றா ரென்று தேடி வந்தான். அப்படி வரும் தூர்த்தனைப் பார்த்து

சமஸ்த கோபாலர்களேயுந் தன் பின்னே யிருக்கும்படி நிய மித்துத் தான் முன்னின்று ஸ்ரீ கோபால சூடாமணியான பகவான் மிருகராசனைப்போல மகா பிரதாப சௌரிய தைரிய பராக்கிரமத்துடன் அடா துராத்மாவே! நீ யாரைத் தேடு கின்றனே. உனது ஆவியை கொள்ளைகொண்டு காலன் வசமாக்கக் காத்திருக்கும் யான் இங்கிருக்க சாதுக்களை ஏன் வருத்துகின்ருய்? இனி நீ யெங்குஞ் செல்ல முடியாது நில்லென்று தமது விசித்திர உத்தரீயத்தையும் கச்சையையும் இறுக்கிக் கட்டிக்கொண்டு யுத்த சன்னுத்தராய் நின்ருர்.

அப்போது அவ்வசுரன் அவரைக் கண்டு மஹா பயங் கரமான சிம்ம நாதத்துடன் ஆ வென்று வாயைத் திறந்து சமஸ்த அண்டங்களேயும் ஓர் கவளமாக விழுங்கித் தமது திருவுதரத்தில் சாசுவதமாக வைத்து ரக்ஷிக்கின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவானை விழுங்கவுங் கடித்து ஹிம்சிக்கவும் நினைத்து அவர்மேற் பாய்ந்து வந்தான். அப்படி வரும் போது ஸ்ரீ பகவான் அந்தக் கடியை தப்பித்துக்கொண்டார். அவ்வளவில் இந்தக் குரூர ஸ்வரூப தானவன் தனது கால் களிஞலவரை யுதைத்தான். அவர் அதையுந் தப்பித்துக் கொண்டு மிகவும் பராக்ரமத்துடன் பிருகஸ்லாம வித்யா விசேஷத்தால் அவன் கையில் தானகப்படாமல் அவனை இடசாரி வலசாரியாகச் சுழன்று அலையும்படிச் செய்து சமயம் பார்த்து அவனுடைய கால்களைச் சேர்த்துப் பிடித்து வாரித் தூக்கிக் கிறுகிறென்று சக்ராகாரமாகச் சுழற்றி வீசி யெறிந்தார்.

அப்போது நெடுந்தூரத்திலே போய் விழுந்த அவ்வசு ரன் மறுபடியும் புரண்டெழுந்திருந்து முன்னிலும் அதிக உக்கிரகத்தைக் கொண்டு ஊங்கரித்து நாணமில்லாமல் மஹா பராக்கிரமத்துடன் மேல் விழுந்து வந்தான். அதைக் கண்ட மாத்திரத்தில் ஸ்ரீ பகவான் மதயானையின் துதிக்கைபோலும் தமது கையை அந்த அசுரனுடைய வாயில் நிறையும்படி நுழைத்தார். அந்த கேசியானவன் மகத்தான ரோஷத்தை யடைந்து தனது பற்களால் நறநறவென்று கடித்தான். அப்போது ஸ்ரீ ஹரியானவர் தமது புஜதண்டத்தை வஜ்ர தண்டம் போலச் சலியாமல் நுழையும்படி அவனுடைய கர்ப்பத்தில் நுழைத்து அவன் குடலைப்பற்றினுர். அப்போது அவனுடைய பற்கள் யாவும் வஜ்ரத்தைக் கடித்தாற் போலச் சூர்ணங்களா யுதிர்ந்தன. அந்தச் சமயத்தில் ஸ்ரீ பகவா னுடைய ஸ்ரீ ஹஸ்தமானது அவன் வயிற்றிலுள்ள உறுப்பு களைப் பற்றிக்கொண்டு வர வர அவனுடைய உதரத்திலேயே

விருத்தியடைந்தது. அப்போது அவ்வசுரன் சரீரத்தில் வாயுஸ்தம்பன முண்டாகிக் குன்ம வியாதி சம்பவித்தது போலப் பிராணவஸ்தைகளை யடைந்து வீராவேசங்கள் குன்றிக் கர்வங்க ளழிந்து முன்பின் தோன்ருமல், இனி என்ன செய்வோமென்று ஏக்கமடைந்து விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கின்ற கண்மணிகள் பிதுங்கி வெளிவரச் சரீரமெங்கும் வியர்வைகள் ஒழுகக் கால்களை யுதறி உதைத்துக்கொண்டு பிராணபீதியடைந்து பெருங் குரலிட் டிறைக்கவுங் கூடாமல் வெள்ளரிபழம்போல் வயிறு விரிந்து வெடிக்கப் பிராணனைவிட்டான். அவன் மரணமடைந்த பின்பு இந்த ஸ்ரீ மாயா மனுஷ பாலகராகிய ஸ்ரீ ஜகதீஸ்வரர் தமது ஸ்ரீ ஹஸ்தத்தை வெளியில் வாங்கிக்கொண்டார்.

கேசி மரணமடைந்ததைக் கண்டு ஆகாசவீதியில் விமானங்களில் நின்று இவருடைய ஜயத்தைக்கோறிக் கொண்டிருந்த சகல தேவர்களும் புஷ்ப வருஷங்களை இவர்மேல் வருஷித்து இந்த ஸ்ரீ கிருஷ்ணனுக்கு மங்களமுண்டாகக் கடவதென்று துதித்தார்கள். அந்தச் சமயத்தில் உடனே ஸ்ரீ பரம பாகவதோத்தமராகிய ஸ்ரீமந் நாரதபகவான் அவ்விடத்திற் கெழுந்தருளி மிகவும் ஆச்சரிய திவ்ய கல்யாண குணங்களையுடைய இந்த கோவிந்த மூர்த்தியைத் தரிசனஞ் செய்து பலவிதமாக அவரது திவ்ய கல்யாண குணங்களைத் துதித்து பின்னால் நடக்கவிருக்கும் கம்சனது துஷ்டக்ருத்யங்களையும் அவைகள் சம்பந்தமான பகவத் லீலாகார்யங்களையும் எடுத்துக்கூறி புகழ்ந்து மகிழ்ந்து விடைகொண்டு மீண்டனர்.

ஒருநாள் ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலிய சமஸ்த கோபாலர்களும் பிராதக்காலத்தில் கோவினங்களை யோட்டிக் கொண்டு பிருந்தாரண்யத்தைச் சேர்ந்து சில நேரம் பசுக்களை மேய்த்து அவைகள் திருப்தியடைந்த பின்பு அவைகளை ஒரு விடத்தில் மந்தையாகச் சேர்த்துவிட்டு யாவருங் கூடி ஒரு பர்வதத்தி னடிவாரத்தில் விளையாடிக்கொண்டிருந்து பின்பு ஒருவிதமான யோசனைசெய்து சாக்ஷாத் ஸ்ரீ பகவான் அரசனாகவும் சில கோபகுமாரர்கள் காரியக்காரர்களாகவும் சிலர் ஆடுகளாகவும் சிலர் சோரர்களாகவும் ஏற்பாடு செய்துகொண்டு விசித்திரமாக விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அது சமயம் மாயாசுரனுடைய பிள்ளையான மஹா மாயாவியும் பல பராக்கிரமசாலியுமான வியோமாசுரனென்

பவன் இந்தச் சோர கோபாலர்களுக்குள் தானுமொருவனைப் போல உருத்தாங்கி வெகுநேரம் விளையாடிக்கொண்டிருந்து ஆடுகளைப்போலும் உருவமாயிருக்கின்ற கோபால சிறுவர் களில் நாலைந்துபேர் தவிர மற்றவர்களை ஒருவரொருவராகக் கொண்டுபோய் ஒரு மகாபர்வதக் குகையிலொளித்துத் தனது பலாதிசயத்தினால் பெரும்பாறையைக் கொண்டுவந்து அந்தக் குகையின் துவாரத்தை மூடிவிட்டு, ஒன்று மறியாதவனைப் போல வந்து சோரர்களாயிருக்கிற கோபாலகுமாரர்களுடன் கலந்திருந்தான்.

இவனையும் இவன் செய்த கிர்த்தியங்களையும் அறிந்தும் ஒன்றும் அறியாதவரைப் போலிருக்கின்ற சர்வக்ஞராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் புன்சிரிப்பைக்கொண்டு மாயாவி யாகிய சோரனைப் பார்த்து அட இராக்ஷஸத் திருடனே! உன்னைப்போல இவ்வுலகத்தில் யாவரும் இவ்வளவு சாதுரிய மாய்த் திருடவல்லமை கொண்டவர்களில்லை. நீ வெகு சாமர்த்தியமாய் திருடி யாவரையுங் குகையி லொளித்தாயல் லவா? மற்றவர்களை ஏன் விட்டுவிட்டாய் என்று பேசிக் கொண்டே அவனருகிற் சென்று மிகவும் பராக்கிரமமுள்ள ஒரு புருஷ சிம்ஹமானது ஒரு அற்ப மிருகத்தைப் பிடிப்பது போல அந்த வியோமாசுரனுடைய கண்டத்தை உறுதி யாகப் பிடித்துக்கொண்டார். தப்பித்து கொள்ளச் சக்தி யில்லாமல் அகப்பட்டுக்கொண்ட அந்தத் துஷ்டசோரனாகிய வியோமாசுரனுக்குக் கண்கள் பிதுங்க மூச்சுப் புறப்பட மாட் டாமல் உள்ளடங்க பிராணாவஸ்தையான மிக வருத்தமுண் டாயிற்று. அதனால் அவன் மாயாரூபத்தைவிட்டுக் கோரா காரமாகிய நிஜரூபத்தை யடைந்து வெகு பராக்கிரமங்களைக் காட்டியும் விடுவித்துக்கொண்டு பிழைக்கத் தன்னாலாகாமல் கால்களை யுதறிக்கொண்டு ஒருதரங் கதறி பிராணனை விட் டான். ஆகாய வீதிகளில் நின்ற தேவர்கள் ஸ்ரீ பகவானுக்கு மங்களங்கள் கூறி புஷ்பமாரி பெய்தனர். ஸ்ரீ ஜனார்த்தனர் அந்தப் பர்வதக் குகையருகிற்போய் அப்பெரும் பாறையைக் காலாலுதைத்துத் தள்ளிவிட்டு அதனுள்ளிருந்த கோபாலர் களை அழைத்துக்கொண்டு வந்து வெளியில் விட்டார். பின்பு அவர்கள் யாவரும் பகவானை துதித்துத் துதித்து பரவசமடைய யாவரும் பசுக்கூட்டங்களை யோட்டிக்கொண்டு கோகுல மடைந்தார்கள்.



## முப்பத்தெட்டாவது அத்தியாயம்

*மஹா பாகவதோத்தமராகிய அக்ரூரர் கோகுலத்தை யடைந்து பூசிக்கப்பட்டதைச் சொல்லப்படுகிறது.*

பரம தன்யனுகிய பாண்டவாம்ச மஹா ரத்நமே! அக்குரூரானவர் அன்றையத்தினம் இராத்திரி மதுராபுரியில் வாசஞ்செய்து, மறுநாள் சூர்யோதய காலத்தில் ஸ்ரீ பகவத் பக்தி நியதராய், ஸ்ரீ கிருஷ்ணபகவானை மனதில் தியானஞ் செய்துகொண்டு வந்து, ஓர் இரதத்தின்மீது ஏறி, நந்தவ்ரஜத்தைக் குறித்துப் பிரயாணமாய் வரும்போது, மார்க்கத்தில் தமக்குள் சிந்தனை செய்துகொண்டு, சந்தோஷசித்தராய்த் தமது மனதை யுத்தேசித்து, "வாராய் ஸ்ரீ பகவத் தரிசனார்த்தத்திற்குரிய எனது நன்மனதே! பூர்வ ஜன்மங்களில் அருமையான தவஞ்செய்ய நினைத்த எனக்கு நீ எப்படிப்பட்ட சகாயமாயினையோ? வாராய்! எனது கர்ணேந்திரியமே! ஸ்ரீ பகவானுடைய திருக்கல்யாண குணுனுபவ திவ்ய சரித்திரங்களைக் கேட்க மகிழ்ந்தனையோ! வாராய் நேத்ரேந்திரியமே! ஸ்ரீ பகவத் விரஹ மகோத்ஸவங்களையும் - மஹானுபாவர்களையும் சேவித்துத் தன்யத்தை யடைந்தனையோ? வாராய் அஸ்த இந்திரியமே! தீனஜனேத்தமர்களுக்கு எப்படிப்பட்ட தனங்களைத் தானஞ் செய்தனையோ?" என்றிவை முதலிய தமது பூர்வ ஜன்ம தபோ சத்ய கர்மங்களைத் தியானித்து, இச்சன்மத்தில் பகவானைத் தரிசிக்கப்பெற்ற தமது மனமுதலிய கரணங்களையெல்லாந் துதித்துக்கொண்டு, அகில சாஸ்திரார்த்தங்களை நன்ருக யுணர்ந்தவராகையால், பரமமுநீந்திரர்களுடைய ஹிருதயார விந்தங்களில் எழுந்தருளி யிருக்கின்ற அந்தராத்மஸ்வரூபராகிய ஸ்ரீ பகவானைத் தமது யோக திருஷ்டியினுலறியவல்ல இவர், அறிவுக்கு அறிவாய் விளங்குகின்ற பரப்பிரஹ்ம அம்சராகிய ஸ்ரீ ஹரியைப் பிரத்தியக்ஷமாய் சேவித்துத் தரிசனஞ் செய்யத் தமது ஜன்மமும் மனமுதலிய கரணங்களும் லபிக்கப்பெற்றனவே என்று அவற்றைச் சிலாகித்துத் துதித்துக்கொண்டு வந்தார்.

வாராய் மஹீபதியே! இப்படி வருகின்ற அக்ரூரானவர் தமக்குள் யோசித்துப், 'பரிசுத்த மானஸர்களாகிய நித்ய சூரிகளைத் தமது கிருபா நியமனத்தில் இவ்வுலக முய்யும் பொருட்டுத் திருவவதாரங்கள் செய்யச்செய்து, சர்வலோக சரண்யராகியும் - ஸ்ரீ மஹா விபுவாகியும் - ஸ்ரீ அச்சுதமூர்த்தியாகியும் விளங்குகின்ற தம்முடைய நித்யசோபன ஆநந்தங்

கோடி ரவிப்பிரகாச பிரபாகரணங்களையுடைய ஸ்ரீ பாதார விந்தங்களை யடைந்திருக்கின்ற ஸ்ரீ பகவான் யாரோ அந்தத் தேவதேவ தேவதா சக்கரவர்த்தியை யழைத்து வரவேண்டு மென்று நிஷ்காரணமாக இந்தக் கம்ச மஹா ராஜனனவன் நமக்கே நியமித்தானல்லவா? இப்படிப்பட்ட மகோபகாரத் திற்கு பிரதியாய் நம்முடைய எத்தனை கோடிஜன்ம தபோபல ங்களை இவனுக்குத் தத்தஞ் செய்தபோதிலும் நிகராகுமா? ஆகிலும், இவ்வுலகத்தில் ஸ்ரீ பகவத் தரிசனார்த்தம் கிடைக் கச்செய்த இந்தக் கம்ச மஹாராஜனையொத்த அருந்துணைவ னாகிய சஹா எவ்வுலகத்திலாவது எனக்குக் கிடைப்பானோ? என்று மகோபகாரமாகத் துதித்தார்.

வாராய் உத்தராநந்தனனே! இந்த அக்ரூரரானவர், பின்னும் தமது இருதயத்தில், 'சர்வதந்திரராகிய ஸ்ரீ பக வானனவர் இந்தக் கம்சனுடைய ஏவலினால் அவனுக்குச் சகாயமாய் நம்மை யழைத்துக் கொண்டுபோய் காட்டிக் கொடுக்க வந்தானே, ஆதலால், இவனும் ஒரு துஷ்டன் தான்' என்று ஒருவேளை நினைப்பாரோ என்னமோ என்று நிமிஷ மாத்திரத்தில் மனந் தளர்ந்து, ஐயுற்று, உடனே 'ஐயையோ! பேதை நெஞ்சமே! ஏன் நினைத்தனை? ஸ்ரீ பகவானனவர் சகல சேதன அசேதனாத்மக சர்வபூத சமூகங்களில் உள்ளும் புறம்பும் வியாபித்துச் சர்வரூப சர்வ சாக்ஷியாகியும், சர்வக்ஞராகியும், பரம காருண்யராகியும் விளங்குகின்ற தயாநிதி யென்கிறதை மறந்தனையோ? வாராய் நன்னெஞ்சமே! ஸ்ரீ பகவானனவர் என்ன நினைப்பாரோ, என்ன ஆக்ஞாபிப்பாரோ, நமது பாக்யாதிசயம் எப்படிப் பட்டதோ என்று நீ சிந்திக்கவேண்டாம்' என்று தீரமுற் றுத், தமது ரதத்தை மந்தகமனமாகச் செலுத்திக்கொண்டு, அம் மார்க்கங்களில் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற வன மிருகங்களின் அம்சத்திற்கு ஆநந்தித்து, 'வாராய் எனது ஜன்ம தன்யமான நற்காலமே! நிரவதிக தோஜோமயரா யிருக்கிற ஸ்ரீ ஸ்வாமியினுடைய அமிர்தங்களாகிய அமிர்த கிரணங்களையுடைய நிஷ்களானந்த திவ்ய சந்திரபிம்பமா யும், அப்போதுதான் அலர்ந்த செந்தாமரைப் புஷ்ப இதழ்களைப்போன்ற திவ்ய நேத்ரங்களையும், இரத்தின குண்டலங்களாய்ச் சோபிதங்களான காதுகளையும் படைத்த தாகியும் விளங்குகின்ற திவ்ய லக்ஷணங்களோடுங் கூடிய சுந்தரவதனர விந்தத்தைச் சத்யமாகச் சேவித்து உஜ்ஜீவிக்கச் செய்தனையோ? வாராய் எனது சுகிர்த ஹிருதயமே! இன் றைய தினம் இராத்திரி நான் நந்தவ்ரஜத்திற்குச் சென்று

ஸ்ரீ மாதவப் பிரானுடைய திருவடித் தாமரைகளுக்குச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்த மாத்திரத்தில், அவர் சர்வ மங்களகரமாயும்-சர்வப் பிராணிகளினுடைய ஊழ்வினைப் பயனாகிய காலபுஜங்க துஷ்ட நிவாரணமாகியும் விளங்குகின்ற ஆஜாநுபாகு விளம்பனமாகியும் விளங்குகின்ற கராப்ஜத்தை எனது சிரசின்மீது வைத்து அபயப் பிரதானஞ்செய்து, கிருபையாக என்னைக் கடாக்ஷித்து பக்ஷிக்காமல் பராமுகஞ் செய்வாரென்று நினைக்கவேண்டாம்' என்றார்.

இவ்விதங்களாக அக்ரூரரானவர் ஸ்ரீ கோவிந்த சந்தர்சன சந்தோஷ மனதுடையவராய்த் தமது திவ்யாலங்கார சித்திரரதத்தை மிகவும் மெதுவாக நடத்திக்கொண்டு, அடிக்கடி ஸ்ரீ பகவானைத் தியானஞ்செய்து, பிரஹ்மாநந்த பரிதராய்ச் செல்லும்போது, தமக்கு எதிரில் ஸ்ரீ மஹா லக்ஷ்மியினுடைய உத்யான வனத்தைப்போலப் பிருந்தாவனமானது காணப்பட்டது. அதைக் கண்டு சந்தோஷ சித்தராய், அதனுட் பிரவேசித்து, அங்கிருக்கிற சந்தனச் சோலைகளையும், மராமரம் மாமரம்-பலாமரம்-அகில்விருக்ஷம்-குங்குமவிருக்ஷம்-காறவிருக்ஷம் ஆகிய இவைகளால் நிறைந்த தோப்புகளையும், நாநாவிதப் புஷ்பங்களைத் தாரநின்ற பூம்புதர்களின் சாலைகளையுடைய சோலைகளையும், யமுனாநதிப் பிரவாகங்களையும், அநேக தாமரைத் தடாகங்களையும், கிணறுகளையும், சித்ர விசித்ர மிருக பக்ஷி சமூகங்களையும், இன்னும் அவ்விடத்தில் விளங்குகின்ற சேதன அசேதனாத்மக சமஸ்த ஜந்துக்களும் ராகத்வேஷங்களற்று அன்யோன்யங்களாய்ச் சஞ்சரிக்கின்ற திவ்ய லக்ஷணங்களையும் பார்த்துக்கொண்டு, அந்த வனங்களிலும்-மனோரம்யமாகிய வெண்மணற் குன்றுகளின் மீதும் தரிசனம் தருகின்ற ஸ்ரீ கோவிந்த சரணாரவிந்த திவ்ய ரேகாங்கிதங்களை நேத்திரங்களாற் சேவித்து ஆநந்தித்துக்கொண்டு, கோகுலத்திற்குச் சமீபமாகவே வந்தார்.

அங்கு வரும்போது சூர்யபகவானும் அஸ்தமான பர்வதத்திற்குச் செல்ல உத்யோகித்தான். அந்தச் சாயங்கால சமயத்தில் பசுவின் கன்றுகள் யதேச்சையாக மேய்ச்சலின் மீதும் ஆவலாய்ப், பள்ளங்கள் - மேடுகள் - புதருகளாகிய இவைகளிற் பிரவேசித்து, வெகுதூரஞ் சஞ்சரித்து, நேத்திரங்களுக்கு அகப்படாமல் இருக்கின்றபடியால், அவ்விடத்திலுள்ள கோபால சிறுவர்கள் நான்கு திக்குகளிலும் ஓடித் தேடி, அவைகளின் நாமதேயங்களைச் சொல்லிச் சாதிய சப்தங்களால் அழைக்கின்ற அந்தக் குரலோசைகளையும், பசுக்

கூட்டங்கள் மிகவும் மிருதுவாகிய புல்லுகள் முதலியவைகளை மேய்ந்து திருப்தியடைந்து திரும்பும்போது கன்றுகளின் வரவைக் காணாமல் மிகுந்த ஆதராதிசயத்தினால் தேடிப் பாய்ந்து 'அம்மா' என்கிற அரவங்கள் செய்கின்ற அவ்வோசைகளையுங் கேட்டுக்கொண்டு கோமயங்களை விட்டுக்குக் கொண்டு-கன்றுகளை நினைத்து ஓடுகின்ற பசுக்கூட்டங்களையும், அவைகளை யநுசரித்துக் கொண்டு தங்கள் கைகளிற் கோல்களையும் கயிறுகளையும் எடுத்துக்கொண்டு திரிகின்ற கோபாலர்களைப் பார்த்துக்கொண்டும், சில கோபாலர்கள் பசுமந்தைகளுக்கு இருபாரிசங்களிலும் ரக்ஷகர்களாய், வேல்-வாள்-குந்தம்-தோமரம்-குடாரம்-பாணம்-சராசன மிவை முதலிய ஆயுதங்களைத் தாங்கிக் காவலாகச் செல்லுகின்றதையும், அக் காவலைக் கடந்து நாநாவிதங்களாகிய புற்களை அபேக்ஷித்துப் பயந்தோடித் திரிகின்ற பசுக்கூட்டங்களையும், அப் பசுக்களை மோந்துக்கொண்டு-பாலை யுண்டுத் துள்ளி விளையாடித் திரிகின்ற கன்றுகளையும், பொலிப்புள்ள பசுக்களின்மேல் தாவி ஒன்றுக்கொன்று சரசலீலாக் கிரீடைகளினிமித்தம் எதிர்த்து முட்டிக்கொண்டு யுத்தங்களைச் செய்கின்றமற்ற ரிஷபங்களையும், பசுக்கூட்டங்கள் பாடிக்குச் சமீபமாக வரும்போது உண்டாகின்ற ஆரவாரங்களைக் கேட்டுத் தாய் வருகின்றதென்கிற பேராசையினாலே கொட்டாரங்களில் கட்டியிருக்கின்ற கன்றுகள் சிறுதும்புகளை யறுத்துக்கொண்டு புதருகளையும் வேலிகளையுந் தாண்டிப் பசுக்கூட்டங்களையடைந்து-பாலையூட்டி முட்டி யுண்கிறவேடிக்கைகளையும், அந்த கன்றுகளைப் பார்த்து மிகவுஞ் சீக்கிரமாகப் பிடிக்க ஓடுகின்ற கோபால சிறுவர்களையும், அவர்களுக்கு அந்தக்கன்றுகள் அகப்படாமையினால் தங்கள் பெரியோர்களாகிய கோபாலோத்தமர்களை மிகவும் அவசரமாக அழைக்கின்ற அச்சிறுவர்களின் குரலோசைகளையும், அந்த ஆயர்பாடிப் பிரதேசங்களில் பாலின் கலசங்களைக் கொண்டுபோய் வைத்துக்கொண்டு பசுக்கூட்டங்களை யழைத்து வந்து ஓரிடத்தில் நிறுத்திக் கன்றுகளையும் அவிழ்த்து விடுகின்றவர்களையும், கால்களோடு கன்றுகளை யணைத்துக் கீதங்களைப் பாடிக்கொண்டு கறக்கின்றவர்களையும், சிறு கன்றுகளை யணைத்துக் கறந்து பின் அவிழ்த்துப் பாலூட்டிவிட்டு ஊட்டியானபின் அந்தக் கன்றுகளைப் பிடித்துக் கட்டுகின்றவர்களையும், பால் கலசங்களைத் தங்கள் கிருகங்களுக்கு எடுப்பித்து அனுப்புகின்றவர்களையும், ஸ்ரீ பகவத்குண கீர்த்தனங்களைப்பாடியும்-ஆடியும்-குழல்களை யூதியும்-கிரீடித்துச் சந்தோஷமானவர்களாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற தேவதாம்ச புண்ய

புருஷர்களாகிய கோபாலர்களையும், தங்கள் தங்கள் அருந்த வப்பேற்றால் ஜனித்து விர்த்தியடைகின்ற புத்திரர்களையும்- மித்திரர்களையும் - மைத்துனர்களையும் - மகிழ்நர்களையும்-அம் மான்களையும்-சகோதரிகளையும்-தாய் தந்தைகளையும் -மற்று முண்டான சர்வ சுகிர்த பந்து ஜனங்களையும் மறந்து, க்ருஹ கிர்த்தியங்களில் கைசோர்ந்து, அக்ஷணம் ஸ்ரீ மாதவனிடத் தில் வைத்த மனதுடையவர்களாய்க் கூட்டங் கூட்டமாகச் சேர்த்து, அங்கு ஒரு சங்கேத ஸ்தலங்களில் வந்து நின்று, பிருந்தாவன மார்க்கங்களை எதிர்பார்த்து, ஸ்ரீ கிருஷ்ண மஹிமாதிசயங்களைப் பேசிக் கொண்டிருக்கும் புண்யவதி களாகியும் - அளவிறந்தவர்களாகியும் - தேவ அரம்பையர் களுக்குச் சமானமானவர்களாகியும்-தேவதாம்சர்களாகியும் விளங்குகின்ற கோபிகாஜன சமூகங்களின் கூட்டங்களையும், பசுக் கூட்டங்கள் வனசஞ்சாரங்களை யொழித்துத் திருப்பி ஆயர்பாடியைக் குறித்து வரும்போது அந்தமார்க்கங்களில் அந்தப் பசுக் கூட்டங்களின் குளம்படிகளினால் ஆகாயத்தி லெழும்பி மேக படலங்களைப்போல எங்கும் வியாபித்து மறை கின்றதையும், அத்தப்பசுக் கூட்டங்கள் அங்கங்குத் தடாகங் களில் ஜலபானங்களைச் செய்து-சரீரங்களை நனைத்து உதறிக் கொண்டு வருகின்றதையும், அதனால் மார்க்கங்கள்தோறும் சேறுபடுகின்ற கோதூளிமயமாகிய அள்ளல்களையும் அங்கங் குத் தங்குமிடந்தோறும் அந்தப் புண்ணிய புருஷ கோபால ஜனங்கள் கோவினங்களை நிறுத்திப் பால் கலசங்களை யிறுக் கிப்-பசுக்களின் முலைகளைப் பற்றிக் கறக்கின்றதையும், அச்சம யத்தில் அந்தப் பால் முத்தாரைகள் அந்தத்தப் பாற்கலசங் களில் வீழ்ந்தொலிக்கின்ற ஓசைகளையும், அந்த நந்தகோஷ அநந்தக்ருக மந்திரத்வார உன்னதஸ்தம்பங்களில், ஆட்டி னங்களுக்கும்-மாட்டினங்களுக்கும் காவலாய் இரும்புச் சங் கிலிகளினால் கட்டப்பட்டிருக்கின்ற நாய்கள் பாதைசாரிகளா கிய நூதன ஜன கிர்த்தியங்களைக்கண்டு சிலிர்த்துக் கோபித் துக் குறைத்துக்கொண்டிருக்கின்ற சப்தங்களையும் பார்த்துக் கேட்டு ஆநந்தத்தை யடைந்தவராய் வருகின்றார்.

அப்படி வருகின்ற அக்ரூரரானவர்: ஸ்ரீ பலராம-கிரு ஷ்ணபுஜபலபராக்ரமபாஹுசம்ரக்ஷத்தினால் லலங்கிருதமாய் விளங்குகின்ற ஸ்ரீ கோகுலமாகிற திருவாயர்பாடியைச் சற்று தூரத்திற் கண்டு சேவித்து, ஆநந்த பரவசராய், வரவரச் சமீபமாக வந்தார். அப்படி வரும்போது ஸ்ரீ பகவானுடைய பாதாரவிந்தங்களினது அடையாளங்கள் அங்கங்கு வெண் மணற் குன்றுகளிற் பிரகாசங்களாகப் பூமஹா லக்ஷ்மியினு

டைய திருமேனிக்கு மிகவும் நித்ய சோபன மங்கள அலங்கிருதங்களான பூஷணங்களைப் போலத் தோற்றுகின்ற விடமெங்கும் இரதத்தை விட்டு இறங்கித், தமதிரண்டு கண்களுங் குளிரத் தரிசனஞ்செய்து, மனங் களித்து, ஆநந்த பாஷ்பங்களொழுக அப்படியே தியானித்துச் சேவித்து வீழ்ந்து புரண்டு, அந்தச் சாரணாவிந்தத்தூள்களை யெடுத்து மேலே தூவிக்கொண்டு, பல இச்சை மோகங்களைக் கெடுத்து, ஸ்ரீஹரி என்று புளகாங்கிதராய்ச் சற்றுநேரந் துதித்து, அங்கிருந்து புறப்பட்டுரதத்தின்மீதேறி 'ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திகளைத் தரிசிக்கவேண்டும்' என்கிற மிகவுமகத்தான ஆதராதிசயத்துடன் ஸ்ரீ கிருஷ்ணபதத்தில் பக்தியை யுடையவராய் நந்தவிரஜத்திற்குச் சமீபமாக வந்து கொண்டிருக்கின்றார்.

அந்தச் சாயங்கால சமயத்தில் அளவிறந்த புண்ய புருஷர்களாகிய கோபாலஜனங்களுடனும், அநேகமாயிரங் கோவின் கன்றுகளுடனும், ஸ்ரீ பலராம கிருஷ்ணர்களிருவரும் விசால நேத்திரங்களை யுடையவர்களாகியும்-தங்கள் திருமேனியெங்கும் கோதூளிகளால் மறைந்த சுந்தர அவயவங்களை யுடையவர்களாகியும்-சர்வாபரண பூஷிதர்களாகியும்-பீதாம்பரத்தையும் நீலாம்பரத்தையுமுடித்துக் கொண்டிருக்கின்றவர்களாகியும்-அநந்தவிதங்களான புஷ்பமாலைகளைத் தரித்துப் பருத்து அகன்று விளங்குகின்ற புஜங்களையும் மார்புகளையு முடையவர்களாகியும், சர்வஜன மனோகரர்களாகியும், கோகுல கோபிகா ஜனங்களினது இச்சைகளைப் பூர்த்தி செய்கின்றவர்களாகியும் பிரகாசித்துக்கொண்டு, இவ்வுலகமாகிய ஸ்ரீ மகாலக்ஷ்மி தேவிக்கு நேத்ரோத்ஸவமாக எழுந்தருளுகின்றார்கள்.

அப்படி எழுந்தருளுகின்ற இந்த மூர்த்திகளிருவரையும் அக்ரூரரானவர் கண்டு, தமதிரண்டு கண்களுங் குளிரச் சேவித்து, ரதத்தைவிட் டிறங்கி, அந்தக் கோபாலகோவின் சமூகங்களில் நுழைந்து. இந்த மூர்த்திகளின்சமீபத்தில் வந்து விநயகாத்திராய் மிகுந்தபக்தியுடன் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து, ஸ்ரீ பகவான் மூர்த்திகளினுடைய அநுக்ஞையைப்பெற்று எழுந்திருந்து, தமது சரீரமெங்கும் புளகாங்கிதங் கொண்டவராய், நேத்திரங்களில் நின்று ஆநந்த பாஷ்பங்களொழுக அவ்விருவர்களையும் பார்த்து, "வாருங்கள் திவ்யமங்கள மூர்த்திகளே! நீங்கள் சர்வஜகத் காரணர்களாகியும், சர்வஜகத் பதிகளாகியும், நியாமகர்களாகியும், சர்வ வியாபகர்களாகியும், சர்வ பூதேஸ்வரர்களாகியும், சமஸ்த சாதுஜன-கோபிராஹ்மணப் பிரியர்களாகியும், பிர

மன் முதலிய சகலதேவதா பிரார்த்தன பூபார நிவாரணார்த்த மாக எங்கள் ஸ்ரீ வசுதேவ தேவகிதேவியினது திவ்யோதர பிரகாசவதார ஸ்ரீ பகவத் பிம்பமூர்த்திகளாகியும் விளங்கு கின்ற உங்கள் சரணாரவிந்தங்களுக்கு அநந்தமான நமஸ் காரங்கள் சமர்ப்பிக்கிறேன்'' என்று துதித்து நின்றார்.

கேளும் மஹாராஜனே! ஸ்ரீ பக்தவத்சலராகிய ஸ்ரீ பக வானனவர் சகலசேதன சேதனங்களோடுங் கூடிய சமஸ்தப் பிரபஞ்சங்களிடத்திலும் இராக-த்வேஷங்களற்று, மாயா விக்ருதிகள் தொடாமல் இரக்ஷிக்கின்றாற்போல், ஸ்ரீ மஹா பாகவதோத்தமராகிய அந்த அக்ரூரரைத் தமது சக்கராங் கிதமுடனே ஸ்ரீ பலராமரும் தங்களுக்குப் பிரணாமஞ்செய்து நிற்கின்ற இந்த மகானுபாவராகிய அக்ரூரரைக் காடாலிங்க னஞ் செய்து, மிகவும் பிரீதியுடன் ஸ்ரீ கிருஷ்ண சகிதராய் அவரை யழைத்துக்கொண்டு கோகுலத்திற் பிரவேசித்துத் தங்கள் திருமாளிகையாகிய நந்த கிருகத்திற்குப் போய், நந்த கோபருக்குத் தெளியச்செய்த மாத்திரத்தில், அவருஞ் சீக்கிர மாக எதிர்கொண்டு உபசரித்து, க்ஷேமங்களை விசாரித்துக் கை-கால்கள் சுத்திசெய்ய ஜலங்கொடுத்து, உசித ஆசனத்தி லிருக்கச்செய்து, அர்க்கிய ஆசமனந் தந்து, மதுவர்க்கங் களையுங் கோதானத்தையுஞ் சமர்ப்பித்துப் பொற்றாம்பாளத்தி லவருடைய திருவடித் தாமரைகளுக்குத் திருமஞ்சனஞ் செய்து, ஸ்ரீ பாத தீர்த்த முட்கொண்டு, சற்றுநேரம் லோகோபகாரமாகிய சில தர்மங்களைப் பேசிக்கொண்டிருந்து உடனே ஸ்நானத்திற்கு விடைதந்து, அவரைத் தீர்த்த மாடச்செய்து, அறுசுவை ரஸவர்க்கங்களோடு போஜனஞ் செய்வித்துத் திவ்ய பரிமள கர்ப்பூர தாம்பூல முதலிய வஸ்திர சந்தன புஷ்பமாலையாதிகள் சமர்ப்பித்து அவர் சந்தோஷ மனோரதங்களை யடைந்த பின்பு, அந்த அக்ரூரரைப் பார்த்து நந்தகோபர் ஒரு வார்த்தை சொல்லுகின்றார்:

ஸ்ரீ நந்தகோபர் வாக்கியம்

"வாரீர் பரம பாகவதோத்தமராகிய அக்ரூரரே! நீங்கள் யாவரும் க்ஷேமமா? நமது கம்ச மஹாராஜா தமது அன்பு வாய்ந்த தங்கையாகிய தேவகிபிராட்டியினுடைய அருந்தவப் புத்திரர்களாகிய சிறுவர்களை யெல்லாம் மரண மடையும்படி பலிசெய்து குரூரகிர்த்தியராய் க்ஷேமத்தை யடைந்திருக்கும் போது, அந்தத் தேவகி-வசுதேவர்களுக்கும், ஸ்ரீ பகவத்பக்த சிரோமணியாகிய உங்களுக்கும் மற்றுமுள்ள யது-விருஷ்ணி- போஜ-அந்தகாதி பந்து ஜனங்களுக்கும், எப்படி க்ஷேம

மூண்டாக்கும்? உங்கள் யாவர்க்கும் அந்தக் கொடிய துஷ்ட குணத்தையுடைய கம்சபீதியில் நின்றும் விடுதலையுண்டாக்கி, மிகவும் சாதுசம்ரக்ஷணார்த்த உலக அரிஷ்ட நிவாரண பரம கிருபாநிதியாயிருக்கின்ற ஸ்ரீ ஹரியினுடைய கிருபையினால் சீக்கிரமாக க்ஷேமகரமாகி, மங்கள மூண்டாகக் கடவது" என்று சொன்னார்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் மஹாராஜனே! இந்தப் பிரகாரஞ் சொல்லிய நந்தகோபரானவர், பின்னர் ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்து, அக்ரூரரைப் பார்த்து, மார்க்க ஆயாசத்தினால் சிரமங்களை யுடைத்தாயிருக்கின்றீர். சயனித்துச் சுகநித்திரை செய்யும் என்று சொல்லி, அவரிடத்தில் தாம் செலவு பெற்றுக் கொண்டு சயன கிருகத்திற்குச் சென்றார். இந்த அக்ரூரரும் ஸ்ரீ நந்தகோபருடைய சாதுர்யமான வசனங்களால் திருப்தி யடைந்து மார்க்க ஆயாசங்க ளொழிந்து சந்தோஷமாக விருந்தார்.



## முப்பத்தொன்பதாவது அத்தியாயம்

ஸ்ரீ பகவானானவர் ஏகாந்தமாய் சில குசலப்பிரச்னங்கள் செய்து மதுரைக்கு பிரயாணமானதும், வழியில் அக்ரூரருக்கு நாராயண ஸ்வரூப தரிசனம் தந்ததை சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பாண்டவர் குலத்தோன்றலே! அந்த அக்ரூரர் ஒரு சுகுமார சயனத்தில் ஏகாந்தராய்ச் சயனித்துக்கொண்டிருக்கின்ற சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவரிடத்திற்கு வந்து அவாருகில் உட்கார்ந்து மிகவும் உபசார வார்த்தைகள் பேசி பின் அந்தரங்கமாக சில வார்த்தைகள் பேசலாயினர். எங்கள் வம்ச சிரேஷ்டராகிய அக்ரூரரே! மிகவுஞ் சுகிர்த்துக்களாகவுந் தீனர்களாகவு மிருக்கின்ற என்னுடைய தாய் தந்தைகளாகிய வசுதேவ தேவகிதேவி களும் உக்ரசேன மஹாராஜா முதலாகிய மாதா மகர்களும் க்ஷேமமா யிருக்கின்றார்களோ? நான் ஜனிக்கப் போகிறே னென்ற வியாஜ்யத்தை மனதில் தீர்க்க வைரமாக நிறுத்தி என்னம்மானாகிய கம்ஸமகாராஜன் தீனர்களாகிய என் தாய் தந்தைகளைக் காராகிருகத்தி லடைத்து இன்னமும் நலியச்

செய்கின்றனல்லவா? அவர்களென்பொருட்டு இப்படிப் பட்ட மனத் துயரங்களை யனுபவித்துக்கொண்டு என்ன மாய்ப் பிழைத்திருக்கின்றார்களோ? எங்களுக்கு ஆப்த பந்துவாகியும் தாதாவாகியு மிருக்கின்ற அக்ரூரரே!, மிகவுந் துஷ்டனாகியும் குலதுரோகியாகியும் துராத்மாவாகியு மிருக்கின்ற அந்தக் கம்சன் உம்மை இவ்விடத்திற்கு பிரயாணப் படுத்தி யனுப்பும்போது என் தாய் தந்தைகளறிந்து மிகவும் புத்திர வாத்சல்யத்துடன் என்னுடன் சொல்லும்படியான ஆப்த சமாச்சாரங்களேதாவது சொன்னார்களோ? மிகவுந் தீனர்களாய் இனி என்ன செய்கின்றதென்று வெறுத்தவர்களாய் ஸ்ரீ ஹரி நம்மை இரக்ஷிப்பாரோ உபேக்ஷை செய்வாரோவென்று துக்கித்துத் தங்கள் இருதயங் கலங்கி எப்படிப்பட்ட துன்பமுற்றிருக்கின்றார்களோ? விசிதமாக எனக்குத் தயா பரிபூரணராய் தெரிவிக்கக்கடவீர். மிகவும் ஆப்தராகிய உமது தரிசனந் தெய்வாதீனமாக எங்களுக்கு ஸ்ரீ ஹரியினுடைய கிருபையினால் கிடைத்ததன்றோ! ஆகிலும் அந்தக் கம்சன் என்ன காரியார்த்தமாக தம்மை இங்கே அனுப்பிவித்தனனோ அதைத் தெரியச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தார். இவ்விதம் ஸ்ரீ பகவான் மிகவும் கிருபா பரிபூரணராய் ஆதரவுடன் கேட்டதும் அக்ரூரர் ஸ்ரீ பகவானுடைய சௌலப்யாதிசய மஹா மஹிமை குணங்களுக்கு ஆச்சரியப்பட்டுத் தமது இரண்டு நேத்திரங்களினின்றும் ஆனந்தபாஷ்பம் ஆறாகப் பெருக மிகவும் பயபக்தி பிரீதி அதிசய மானஸராய் சொல்லுகின்றார்:

அக்ரூரர் வாக்கியம்

பக்த ஜனங்களை இருவினைத் துன்பங்களினின்றும் காப்பாற்றி யாட்கொள்ளும் அண்ணலே! அந்தத் துராத்மாவாகிய கம்சராஜனானவன் யது-விருஷ்ணி-போஜாந்தகாதி வம்சத் தலைவர்களைத் துன்பமுறச் செய்து வைரஞ் செலுத்துவதை என்னாற் சொல்லிமுடியாது. ஒருநாள் ஸ்ரீமந் நாரத பகவான் கம்சனுடைய சபைக்கு வந்து வசுதேவருக்குப் புத்திரர்களாய் நீங்கள் திருவவதரித்த உத்தம சரித்திரங்களையும் திவ்ய லீலா மகிமாதிசயகல்யாண குணங்களையும் யாதவர்களுடைய தேவதாம்ஸ ரஹஸியங்களையும் கம்சன் முதலிய அசுராம்ஸ விவரங்களையும் சொன்னார். அதை கேட்டதும் ஸ்ரீ வசுதேவர் முதலியவர்களைக் கொலைசெய்ய நினைத்துப் பின்பு கொல்லாமல் விட்டு அவர்களைக் காலாக்கிருகத்தில் பந்தனஞ் செய்திருக்கின்றான். மேலும் தனக் கிஷ்டர்களாகிய துஷ்ட நரபதிகளை யழைத்து மந்திராலோசனை

செய்து தனுர்யாகத்திற்கு யத்தனஞ்செய்தான். தனது சத்துருக்களாகிய உங்களை நலியச் செய்வதற்கு மத்தகஜ மாகிய குவலயாபீடத்தையும் சாணூர முஷ்டிகாதி துஷ்ட மல்ல ஜெட்டிகளையும் கிருத கிர்த்தியர்களா யிருக்கும்படி நியமித்து வைத்திருக்கின்ருன். என்னை அழைத்து உங்க ளிருவர்களையும் நந்தகோபர் முதலாகிய ஜனங்களையும் கப்பத் துடன் அழைத்து வரும்படியாயும் ஆக்ஞாபித் தனுப்பினு னென்று சொன்ஞர்.

இவ்விதம் அக்ரூரர் சொன்னதும் கிருஷ்ண பகவா னும் இவாருகிலிருந்த பலராமரும் கேட்டு, மந்தகாசர்களாக நகைத்து, அவரை யுபசரித்துச் சுக நித்திரை செய்யச் செலவுகொடுத்துத் தாங்களும் அன்றிராத்திரி நித்திரை செய்து மறுநாளுதயத்தில் தங்களன்புள்ள பிதாவாகிய நந்த கோபருக்குக் கம்ஸ மகாராஜன் தனுர் யாகத்திற்கு வரச் சொன்ன சமாச்சாரங்களை யறிவித்தார்கள். அதைக் கேட்ட தும் நந்தகோபர் கோகுலத்திலுள்ள கோபாலர்கள் யாவரை யும் அழைப்பித்து சொல்லுகின்ருர் :

ஸ்ரீ நந்தகோபர் வாக்கியம்

குன்ருத கீர்த்தியுடைய கோபால யகா ஜனங்களே! நம்முடைய அரசனுகிய கம்ஸ மஹாராஜன் தனுர் யாகஞ் செய்கின்றதாய் நம்மை யாவரையும் வந்து சேரும்படி ஆக்ஞா பித்திருக்கின்ருர். நாம் யாக தரிசனூர்த்தமாகப் போகவேண் டும், அதனுல் அவரவர்களுக்குத் தகுந்தபடி பாற்கலசங் களும் தயிரமுது குடங்களும் வெண்ணெய்ப்பாத்திரங்களும் நெய்ப் பாண்டங்களுமாகிய வஸ்துக்களையும் அரசனுக்கு செலுத்தவேண்டிய கப்ப காணிக்கைகளையுங் கொண்டுவாருங் கள். நாமெல்லாரும் நாளை யுதயத்தில் மதுரா நகரத்திற்குப் பிரயாணமாய்ப் போய் வரவேண்டுமென்று சொன்ஞர்.

யாவருக்கும் இவ்விதம் ஆக்ஞாபித்து நந்தகோபர் தாமும் பிரயாணமா யிருந்தார். அன்றையதினமே அக்ரூ ரர் நந்தகோபரால் பூஜிக்கப்பட்டு ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திக ளிருவரையும் தமது ரதத்தின் மீது ஆரோகணிப் பித்து அழைத்துக்கொண்டு போகும்படி அந்த நந்தகோப ரிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு தன் இரதத்தை அலங் காரஞ் செய்துகொண்டிருந்தார். அக்ரூரர் ஸ்ரீ கிருஷ்ண பகவானையும் ஸ்ரீ பலராம மூர்த்தியையும் மதுரா நகரத்திற்கு அழைத்துக்கொண்டு போகிற சமாச்சாரத்தை யறிந்து கோகுலத்திலுள்ள ஸ்ரீ ஹரி பிரியர்களாகிய சமஸ்தமான



படம் நெ. 17. பக்கம் நெ. 178-A.

ஸ்ரீ பகவான் மதுரைக்கு பிரயாணமானது.

கோபிகா ஜனங்களும் மனங் கலங்கினவர்களாய் அவரவர்கள் தங்கள் ஸ்ரீ பகவதனுபவங்களை நினைத்துக்கொண்டு ஏகாந்த ஸ்தலங்களில் இனவினமாய்ச் சேர்ந்து குணானுபவமாகப் பிரலாபிக்கத் தொடங்கி ஒருவரையொருவர் பார்த்து, அடி புண்யாங்கனைகளே! ஸ்ரீ பகவானானவர் இந்த நந்தவ்ரஜத்தில் திருவவதரித்த நாள்முதல் இன்றைய வரைக்கும் ஒரு நாளாவது நம்மைவிட்டுப் பிரிந்தவரல்லவே? இப்போது பிரிந்து போகின்றாரே? அவ்ரது பிரிவை நாமென்னமாய் சகித்திருப்போமென்று சொல்லி ஸ்ரீ பகவானுடைய சுந்தர முகாரவிந்த சேவாதிசயங்களையும் சிறு நகைகளையும் மகா மாதுர்யமான சாதுர்யாதிசயங்களையும் ஸமஸ்த பிராணிகளினுடைய மனது தாபங்க ளாறும்படியான கிருபா கடாக்ஷ வீக்ஷண்யாதிசயங்களையும் லீலாகுண வைபவாதிசய அதிமானுஷ சேஷ்டிதங்களையும் பரம தயாகுண விசேஷங்களினா லுண்டாகின்ற சத்காரியங்களையும் அவருடைய கரமாகிற தாமரை பரிசங்களினா லுண்டாகின்ற தங்கள் சன்ம சாபல்யமான சுகானந்தங்களையும் அங்கங்கு அந்தந்த விடங்கள்தோறும் ஒருவருடனொருவர் சொல்லிக்கொண்டு சிந்தாக்கிராந்தர்களாய் ஸ்ரீ பகவானைப் போகவொட்டாமல் நிறுத்திக்கொள்வதற்கு யாதொரு உபாயமுந் தோற்றவில்லையே யென்று முகமண்டலங்கள் வாடி மனந்தளர்ந்து விசனப்பட்டார்கள்.

இந்த நந்தவிரஜத்திலுள்ள கோபீகா ஜனங்கள் யாவரும் துக்காக்கிராந்தர்களாய்த் தங்கள் நாணமிழந்து வெறிகொண்டவர்களைப்போல் தங்கள் ஹஸ்தங்களைக் கன்னங்களில் வைத்து ஊன்றிக்கொண்டு கண்களில் ஜலம் தாரைதாரையாய் வருஷிக்க கொழுக்கொம்பற்ற பூங்கொடிகளைப் போல மனமலைந்து துதித்துக்கொண்டு தங்களை மறந்து வாய்களைத் திறந்து ஹா ஸ்ரீ கிருஷ்ணா எங்களைக் கிருபையாக இரக்ஷிக்கக் கடமையல்லையோ? ஸ்ரீ கோவிந்தா! மாதவா! தாமோதரா! எங்கள்மேல் கிருபையில்லையோ வென்றரற்றிக் கூச்சலிட்டு சுவாமி விஷயமான கீதங்களால் பரிந்து பாடித் துதித்தார்கள்.

மேலும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி திருவவதரித்த நாள் முதல் அன்றையவரைக்கும் சாது சம்ரக்ஷணார்த்தமாகவும், பூபார நிவாரணமாகவும், சர்வ ஜகன்மோகனார்த்தமாகவும் வகித்த கோமளமாகிய சுந்தராகாரத்தையும் மஹா மதுர பாஷணங்களையும் புன்முறுவலையும் மஹா மனோஞ்சனமாகவும் நேத்திரோத்ஸவமாகவும் மார்க்கங்களில் சஞ்சரித்து

உலாவுகின்ற கதிபேதங்களோடுங் கூடின நடையினழகையும் ஸ்ரீ பகவானுடைய சேஷ்டிதங்களையும் ஒருவர்க்கொருவர் வியசனுக்ராந்தர்களாய் பேசிக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ண விரஹ பீடிதர்களாய் ஸ்ரீ கிருஷ்ண பகவான் பலராம சகிதராய் அனந்தமான கோபாலர்களும் கோவின கோவத்ஸங்களுங் கூடித் தங்களிருவரையுஞ் சூழ்ந்துவர அந்தப் பசுவினங்களுடைய குளம்படிகளின் தூளிகள் தங்கள் திருமேனியெங்கும் பதிந்து பூஷிக்கப்பட்டு முன்னெற்றி மயிர்கள் காற்றுகளால் அலைக்கப்பட்டுச் சுந்தர லலாடத்தில் மனோஹரமாக பிரகாசிக்க வேணுகானஞ் செய்துக்கொண்டு சாயங்கால சமயங்களில் இந்தக் கோகுலத்தில் புன் முறுவலோடும் கடைக்கண் பார்வைகளோடும் சர்வ கோபிகாஜன மனோகரமாகவும் பிரவேசிப்பாரே அந்த நேத்திரோத்ஸவங்கள் இனி நமக்கு லபிக்கப்போகின்றனவா வென்று அந்த நந்த விரஜமெங்குக் கூடிக்கூடி ஸ்ரீ கிருஷ்ண குணமிர்த கீதங்களைப் பாடிக்கொண்டு பிரலாபித்தார்கள். இவ்விதம் அந்தக் கோபீகா ஜனங்கள் யாவருந் தங்களன்னியதா சித்தவிர்த்திகளையும் கிருககிருத்தியங்களையும் விட்டு லச்சையொழிந்து ஸ்ரீ மாதவா வென்றழைத்து மதுரமான ஸ்வரத்துடன் கீதங்களைப் பாடி வியசனப்பட்டு ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் கூடித் தாங்களும் மதுரா யாத்திராபிமுகர்களாய்ச் செல்வதற்கு சித்தமாய்க் காத்திருந்தார்கள்.

மறுநாள் சூரியோதய காலத்தில் அக்ரூரரானவர் தமது நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு இரதாலங்காரஞ்செய்து புறப்படுகின்ற சமயத்தில் ஸ்ரீ பகவான் தம்மைவிட்டுப் பிரியமனமில்லாமல் தம்முடன் கூடவர யத்தனமாய் பிரலாபித்துக்கொண் டிருக்கின்ற அந்தக் கோபீகா சுந்தரிகளை ஒருக்கால் தமது கிருபாகடாக்ஷ வீக்ஷண்ணியத்தால் கிருபையாகப் பார்த்து "இதோ சமீபத்திலிருக்கின்ற மதுரா நகரத்திற்குபோய்த் தனுர்யாக சந்தரிசனஞ் செய்து அந்நகரத்தையும் அந்நகரத்திலுள்ள பந்து ஜனங்களையும் பார்த்து அவர்களைச் சந்தோஷிக்கச் செய்து மறுபடியும் சீக்கிரமாக வந்து சேருகின்றேன். இதற்கு நீங்களேன் வியாகூலப்படுகின்றீர்கள். நீங்கள் தைரியத்துடனின்று மனஸ்ஸமாதானபரர்களாய்ச் செலவு கொடுத் தனுப்புங்கள்" என்று அவர்களுடைய இருதயங்களைத் திருத்தி வியாகூலங்களையாற்றி அவர்கள் ஒருவித சமாதானமாக விடைகொடுக்க ஸ்ரீ பலராம ஸகிதராய் ஸ்ரீ கிருஷ்ண பகவான் ரதாரோஹணஞ் செய்தார்,

அத் தருணத்தில் நந்தகோபர் முதலிய கோபாலர்கள் யாவரும் தனுர்யாகத்திற்கு வேண்டிய நெய் பால் தயிர் முதலியவைகளைச் சகடங்களிலேற்றிக்கொண்டு அரசனுக்குக் கட்டவேண்டிய காணிக்கைகளையும் கப்பங்களையும் எடுத்துக் கொண்டு அவர்களும் பிரயாணமாய்ப் புறப்பட்டு வந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திகளிருவரும் அக்ரூராது இரதத்தின் மீது அமர்ந்து இரதத்தை நடத்திக் கொண்டு சென்றார்கள். அச்சமயத்தில் இந்த நந்தவிரஜத்தி லுள்ள கோபிகாஜனங்கள் யாவரும் இனவினமாகச்சேர்ந்து இந்த ரதஞ் செல்லுகின்ற அலங்காரத்தையும் ஸ்ரீ பகவன் மூர்த்திகளினுடைய பின்னடி சேவையையும் சேவித்துக் கொண்டு ஒருவருக்கொருவர் அந்த திவ்ய ஸேவார்த்தங்களைக் குறித்து வஸ்து பூர்வமாக சொல்லித் திருப்தி யடைந் தார்கள்.

ஸ்ரீ பகவான் ஸ்ரீ பலபத்திர மூர்த்தி சகிதராய் இரதத் தின்மீது வீற்றிருக்க அக்ரூரர் வாய்வுவேகமாக இரதம் செல்லும்படி மிகவும் பிரம்ஹானந்தத்துடன் சாரத்யஞ் செய்து வெகு தூரமாகிய பிருந்தாரண்ய மார்க்கத்திலிருக் கின்ற மஹா பாப விநாசனியாகிய யமுனாநதி தீரத்திற்கு வந்து சேர்ந்தார். அவ்விடத்தில் வந்தமாத்திரத்தில் ஸ்ரீ பக வான் அக்ரூரரை யழைத்து இரதத்தை நிறுத்தச்சொல்லி ஸ்ரீ பலராம சகிதராய் இரதத்தை விட்டிறங்கி அங்கிருக்கின்ற மகா விருக்ஷங்களின் நிழல்களில் நடந்துவந்து மிகவுந் தெளிந்து பிரவகிக்கின்ற காளிந்தீ நதியிலிறங்கி இந்த இரண்டு மூர்த்திகளும் ஸ்ரீ சாணகாரந்தங்களைச் சுத்திசெய்து தீர்த்த பானம் செய்து வெளியில் வந்து அந்த மஹா விருக்ஷ நிழலில் சற்று நேரமிருந்து சந்தோஷத்துடன் இரதத்தி னருகில் வந்து ரதாரோகணஞ் செய்தார்கள்.

உடனே அக்ரூரரானவர் அந்த மூர்த்திகளுக்குத் தண் டன் சமர்ப்பித்து இரதத்தை யவர்களிடத்தில் ஒப்புவித்து விடைபெற்றுக்கொண்டு அந்த மஹா புண்ணிய நதியிற் பிர வேசித்துச் சுத்தாசமனங்கள் செய்து விதி பூர்வகமாகிய வேதமந்திரங்களை ஜபித்து ஸ்ரீ கிருஷ்ண கிருஷ்ணவென்று சங்கல்ப மந்திரத்தைச் சொல்லி அந்தக் குளிர்ந்த தீர்த்தத் தில் ஸ்ரீ பகவத் பக்தி பரவசராயிறங்கி ஸ்ரீ கேசவாயநமா வென்று ஸ்நானஞ் செய்தார். மூழ்கின நிமிஷ மாத்திரத்தில் அக்ரூரர் அச்சலத்தினுள் இந்த ஸ்ரீ பலராம கிருஷ்ணர் களாகிய திவ்ய மூர்த்திகளிருவரும் பிரத்தியக்ஷமாக விளங்கி யிருக்கக்கண்டு திடுக்கிட்டு ஆச்சரியத்தை யடைந்து, ஒழுகும்

தன்மையுடைய இனிய நீரினிடை ஸ்ரீ கண்ணபிரான் வந்த தேன் என நினைந்து நீரைவிட்டு எழுந்து செழுமையான ரத்னங்களால் அலங்கரிக்கப் பெற்ற ரதத்திலுள்ள பீடத்தை நோக்க, அழகே பழுத்து ஒழுகுவதுபோலும் மேக நிறத்தை யுடைய பகவான் அந்த அழகிய தேரிலும் பிரகாசிக்க காணப்பட்டான். ஜலத்தினிடை கண்டதைப் போலவே அழகிய கொடியை யுடைய தேரினிடத்தும் இருந்தனன் அஷ்ட ஐஸ்வர்ய சம்பன்னனான கோபாலன் என உணர்ந்த மனதினை யுடையவரும் மது நிறைந்த அழகிய மாலையை தரித்தவருமான அக்ரூரர் மறுபடியும் நீரினில் மூழ்கினார்.

அந்தத் தீர்த்தத்தில் முன்போலவே அந்தத் திவ்ய மூர்த்திகளைச் சேவித்துச் சந்தேஹ மனதுடன் கூடினவ ராய்ப் பலதிறம் அங்குமிங்குமாகத் தரிசனஞ்செய்து, மனந் திகைத்து மிகவும் ஆச்சரியானந்த பரிதராய் இந்தக் கல் யாண சரித்திராதிசய மஹத் குணங்களையுடைய புருஷ சிரேஷ்டர்களை இப்படிக்குச் சேவிப்பது இவர்களுடைய கிரு பாதிசய மகிமைதானென்று நன்கு யூகித்துக்கொண்டு பிரம் மானந்த பரவசத்தி லழுந்தி அடிக்கடி வந்து பார்ப்பதை யொழிந்து சர்வேந்த்ரிய நிக்ரகராய் அந்நதியில் மூழ்கி அத் திவ்ய புருஷர்களை மானசீக நேத்திரங்களால் சேவிக்கும் போது அந்த ஜலப்ரவாகத்தின் மத்தியில் ஸ்ரீ பலராமர் அனந்த பணாமண்டல மாணிக்கங்களோடுங்கூடிய சிரோ பாகங்களையுடைய ஸ்ரீ ஆதிசேஷ பகவத் ஸ்வரூபத்துடன் நீலாம்பரதாராய்ச் சித்த சாரணாதிகளும் சர்ப்ப சிரேஷ்டர் களும் ஸ்துதிக்கும்படியாய் பிரகாசித்துக் கொண்டிருக்கவும், அவரது மடியாகிய சீரிய ஆசனத்தின்மீது ஒரு நீலரத்ன பர்வதத்தைப்போல நீலமேக சியாமள சுந்தர ஸ்வரூப ஸ்ரீ பகவான் பொற்பீதாம்பரதராகியும் மரகத வர்ண விசித்ர ஸ்வர்ணரேகைகளோடுங் கூடிய பச்சைப் பட்டிழைக ளால் விளங்கிய உத்தரீயங்களை யுடையவராகியும் திவ்ய மணி களாலங்கிருத கிரீட பிரகாச சுந்தரப்ரசந்ந முகார விந்தத்தை யுடையவராகியும், ஆஜானு பாகுவாய் நான்கு புஜங்களை யுடையவராகியும் முக்தாமாணிக்க வனமாலிகையும் ஜாஜ் வல்யமான ஸ்வர்ண ஸ்வரூபாகார ஸ்ரீ தேவியும் ஸ்ரீ வத் ஸமும் ஸ்ரீ கௌஸ்துவமணியும் பிரகாசிக்கும் விசால மார்பை யுடையவராகியும் சதுர்முக பகவானுக்கு சேதனா சேதன சர்வ ப்ரபஞ்சங்களுக்கும் ஜன்மஸ்தானமாகிய நாபிக் கமலத்தை யுடையவராகியும் மகா ராஜலக்ஷண சோபிதராகி யும் திவ்ய ரேகாலங்கிருத ஸ்ரீ பாதாரவிந்தங்களையும் உபய

பாரிசத்தில் ஸ்ரீ அஸ்தங்களில் சங்க சக்ர சாரங்காதி பஞ்சாயுத தாராகியும் சர்வப் பிரபஞ்சத்திற்கும் இன்பமாகிய கடாக்ஷ வீக்ஷண்யங்களை யுடையவராகியும் பிரம்ம ருத்ர ஸனக ஸநந்தன சனத்குமார ஸனத்ஸுஜாதாதி முநீந்திர சமூகங்களும் தேவேந்திராதி தேவதா சமூகங்களும் அஷ்ட வசுக்களும் அசுவினி தேவதைகளும் மருத்கணங்களும் ஏகாதசாதி ருத்ர கணங்களும் பிதுர் தேவதைகளும் தேவரிஷிகளும் பிரம்ம ரிஷிகளும் ராஜரிஷிகளும் மனுவாதிகளும் சித்த சாத்திய சாரண கருட கந்தர்வ உரகாதி தேவ கணங்களும் தேவ தைத்ய தானவ யக்ஷ ராக்ஷசாதி அசுர தமோ கணங்களும் ஸ்ரீ பரமக்ருபாநிதியேயென்று சூழ்ந்து துதித்துக்கொண்டிருக்கவும், பிரம்ம ருத்ர வாசவாதி லோகேச லோகபாலர்கள் மிகவும் விநய விதேயர்களாயும் ஸ்ரீ புருஷ சூக்த வாக்கியங்களினால் நமோ நமோ ஸ்வரூபாயா வென்றும், பிரகலாத நாரத சனகாதி திவ்ய முநீந்திரர்கள் நமோ நமோ விலக்ஷண விசிஷ்டக்ஞான ஸ்வரூப ஸ்ரீ பரம புருஷாய வென்றும், ஸ்ரீ வசிஷ்டாதி பிர்ம்மரிஷிகள் நமோ நமோ ஸ்ரீ யோகீஸ்வ ரேஸ்வராய வென்றும் மனுமாந்தாதா கயாம்பரீஷாதி ராஜரிஷிகள் ஸ்ரீ பகவதே ஸர்வ பல பிரதாய நமவென்றும், பஞ்சபூதங்களும் பூதாதி தேவதைகளும் சர்வ ப்ரபஞ்ச ஸ்வரூபஜன்ய மூலப்பிரகிருதி தத்வாத்மகாய நமவென்றும், நானுவித விசித்திர தத்வ ஸ்துதிகளோடு அர்ச்சித்துச் சேவித்துக் கொண்டிருக்கவும், எழுந்தருளியிருந்தார்.

இப்படி தம் பரம கிருபையால் அதி ஆஸ்சர்யகரமாக பிரசன்னரான ஸ்ரீ பரமேஸ்வரராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானை அக்ரூரர் ப்ரம்மானந்த பக்தி சம்ப்ரமத்துடன் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து எழுந்திருந்து தமதிரண்டு கைகளையுங் கூப்பிக்கொண்டு சரீரம் புளகித்து ரோமம் சிலிர்ப்ப தமதிரண்டு நேத்ரங்களில் நின்றும் ஆனந்த பாஷ்பங்கள் தாரை தாரையாய்ப் பெருக மிகவுந் தழை தழைத்த வசனங்களினால் ஸ்ரீ புருஷசூக்தாதி சுருதி வாக்கியங்களைக் கொண்டு ஸ்துதி செய்யத் தொடங்கினர்.



## நாற்பதாவது அத்தியாயம்



*பரம பாகவதோத்தமராகிய அக்ரூரர் தன்னை சாக்ஷாக்கரித்து ப்ரசன்னமான ஸ்ரீ பகவானை ஸ்தோத்ரம் செய்தது.*

### அக்ரூரர் ஸ்துதி

வாரீர் ஸ்ரீ பெரிய பிராட்டியாகிய ஸ்ரீ மகா லக்ஷ்மீ தேவியினுடைய மானசாபகார நித்தியமங்கள சோபித திவ்ய மங்கள விக்ரக சுபாகா சுஷ்லோக ஸ்வரூப விபுவே! ஸமஸ்த ஜகங்களுக்கும் ஜகத்பதிகளுக்குங் காரணராகியும் சர்வ சேதனு சேதனப் பிரபஞ்சங்களையும் ஹஸ்தாந்தரக்தமான பொருள்களைப் போலத் தமது திருமேனி தத்வங்களுள் ஒடுக்கிக்கொண்டு சமஸ்த லோக பயங்கராகாரமாய் மகா ஆரவாரங்களுடன் மோதியடித்து வீசாநின்ற அலைகளோடுங் கூடிய மஹா தீரத்தில் கேளீ விலாசமாய் வடசமுத்திரத்தின் மீது யோக நித்திரை செய்கின்ற ஸ்ரீமந் நாராயணரான உமக்குப் பிரணாமங்களைச் சமர்ப்பிக்கின்றேன். க்ஷீராப்தி நாதராகிய ஸ்ரீ புண்டரீகாக்ஷரே! உமது நாபிக் கமலத்தில் இந்தப் பிரபஞ்சங்களினுடைய சிருஷ்டி கார்ய நிர்வாகராகிய சதுர்முக பகவானும், மஹதஹங்கார மாயா ஸ்வரூப சக்தி தத்வங்களும் அவற்றின் அதி தேவதைகளும், பஞ்சபூத மயங்களாகிய ஆகாச வாயுவாக்கினி ஜல பூமி தத்துவங்களும், பஞ்சபூதாதி தேவதைகளும் மன முதலிய அந்தக்கரண சதுஷ்டயங்களும், அவற்றின் அதிதேவதைகளும், மானசாதி ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும் இந்திரியாபிமான தேவதைகளும், அவ் விந்திரியங்களின் விஷய தத்துவங்களும், விஷயாபிமான தேவதைகளும் ஆகிய உலக காரணங்களாகிய தத்வபீஜங்கள் யாவும் ஏகதேசமாகிய உமது திருமேனியினுடைய அவயவ ஸ்தான மூலப்ரகிருதி அம்சத்தில் ஜனித்த அகங்கார தத்வாம்ச வேதாம்ச சித் அசித்துகளுக்குக் காரணமாகிய சத்வ ரஜஸ் தமோ குண தத்துவங்களும் அவற்றின் கார்யங்களாகிய சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதி பிரபாவங்களும் இந்திரியகுணாத்மக கர்த்ருத்வாதிகுண பூதேஸ்வராகிய உம்முடைய குணாதிஷ்டான தேவதைகளாகிய ஹரி ஹரப் பிரம்ஹேந்திர சூர்ய சோம அக்கினி முதலிய சுராசுர கணங்களும் இவர்களுடைய கர்ம ஜனித லோகலோக அனந்தகோடி பிரம்மாண்டங்களும் ஜனித்தன.

இப்படிப்பட்ட பிரம்மாண்ட கடாகங்களில் தோன்றிய ஆத்மாக்கள் கிரமக் கிரமமாய்த் தங்கள் சுபாசுப கர்மவசத்தினுல் பந்தத்தா லகப்பட்டுத் தேவாசுர மனித பசு பக்ஷி ஸ்தாவராதி ஜன்மங்களை யடைந்தும் மகா ரிஷி சிரேஷ்ட தபோ யோகமோன வ்ரத-யக்ஞ-யாக-ஜப-தான-சத்ய-சௌஸ சீலாதிகளை யுடையவர்களாயும் மனுவாதி லோகநீதி தண்டநீதி விதி அதிகார புருஷ சிரேஷ்டர்களாகியும் பிரம்ஹ-க்ஷத்ரிய-வைஸ்ய, சூத்ராதி நாநாவித விசித்திரசாதி பேதங்களுள்ளவர்களாகியும், உமது யோக மாயா பிரபாவங்களால் ஜனித்து விருத்தியடைந்து தங்கள் தங்கள் கர்மவசத்தில் மோஹிதர்களாகியும் பிரகிருதி பாசபந்த வசத்தர்களாகியும், சுபாசுப கர்மங்களால் இகபர லோக ஸ்வர்க்க நரக முதலிய ஸ்தானங்களை யடைந்து மூட ஸ்வரூபர்களாகியும் பிரம்மாதி சீவஜாதர்களுக்கும் லோக பாலர்களுக்கும் மற்றுமுள்ள மகா ஜனங்களுக்கும் சர்வாத்மக பீஜத்தைக் கொடுக்கிற சர்வ காரண - சர்வசக்தி - ஸ்வதந்திர - சர்வ வியாபகாதிஷ்டித-சர்வம்ய-சர்வாதார-சர்வரக்ஷண கர்த்ருத்வமாய் விசிஷ்டேகாத்ம பரமாத்ம ஸ்வரூபியாய் விளங்குகின்ற உம்மை யறிந்து உய்யும்படியான ஞானசக்தி யாதிக ளில்லாதவர்களாகியும் இவ்வண்ட கோசங்களில் நித்திய பிரவாக ரூபர்களாய்த் தோன்றியும் விருத்தி யடைந்தும் லயித்துக்கொண்டும் நித்தியமாக விளங்கிக்கொண் டிருக்கின்றார்கள். இவர்களுள் சிலர் உம்மை அம்போஜ கர்பாதி லோகேஸ்வரர்க ளிடத்திலும், ஸமஸ்தமான பூத சமூகங்களிலும், இவ் வுலகங்களுக்குப் பலத்தைக்கொடுக்கிறவர்களாகிய அனந்தமான தேவதா ஸ்வரூபங்களிலும் சதா சர்வ சாக்ஷியாக விளங்கி கொண் டிருக்கின்ற சர்வாந்தரியாமித்வ ஸ்வரூபராகிய ஸ்ரீ சர்வேஸ்வர ஸ்வரூபாய நமாவென்று தியானித்து பிரணாமங்களைச் சமர்ப்பிக்கின்றார்கள்.

சிலர் மூன்றுவித ஸ்வரூப வேத வேதாங்க விதிப்படி உம்மைத் தேவேந்திராதி தேவதா ஸ்வரூபிக ளிடத்திலும் சர்வக்ஞாயக தவத்தின் பயன்களைக் கொடுக்கிறவரென்று துதித்து ஸ்ரீ சர்வ பலபிரதாய நமாவென்று பிரணாமங்களைச் சமர்ப்பிக்கின்றார்கள். சிலர் லோகோபகார விருத்தி லயாதி பல ஸ்வரூபங்களைக் குறித்து ஸ்ரீ சர்வ வியாபகத்வ ஸ்ரீ வாசுதேவாதி பேத குணபின்ன ஸ்வரூபராகியும் உமது விசித்ர மாயா மோஹன சைவ பாசுபத ஆர்ஹத சார்வாக சாக்தேய பௌத்தாதிமதானு தேவதா ஸ்வரூபராகியும் விளங்குகின்ற உம்மைத் தங்கள் விதிவசத்தர்களாய் அபிமா

ணித்து ஏத்தித் துதித்துப் பிரணாமங்களைசெய்து சோதிடவாகடாதி மந்திர யந்திர தந்திரஜாதாதி சித்திகளை யடைந்து பெருமைகளை வகித்துக் காம்ய ஜனங்களால் பூசிக்கப்பட்டு விதிப்படி அந்தந்த சாயுஜ்யங்களை யடைகின்றார்கள். சிலர் ஸ்ரீ ஹரியாகிய உம்முடைய நிர்ஹேதுக ஜாயமான பரம கிருபா கடாக்ஷ லப்தர்களாய்த் தங்கள் ஜன்மாந்தரங்களினுடைய ஆரூட கர்மங்களை நசிக்கச்செய்து ஜனன மரணாதி ஸம்ஸார பீஜபலப் பிரதத்வ வாஞ்சா மனோ மலினங்களை வெறுத்து நிரபேக்ஷ நிர்விகார பரிசுத்த மானச விலக்ஷணாத்மபரமாத்மா தத்வப் பிரதிபாத்திய மானசர்களாய் நிஷ்காமர்களையும் சந்யாசிகளையும் சதாசார்ய சம்பந்த பிரதிபாத்தியமான விசிஷ்ட க்ஞானோபதேசங்களையும் சதாசார்ய சமாசிரயணங்களையு மடைந்து ஸ்ரீ பாஞ்சராத்ரானு சாரமாக ஸ்ரீ வாசுதேவ திவ்ய ஸ்வரூப பேதங்களாகிய ஸ்ரீ வாசுதேவ சங்கர்ஷணப் பிரத்யும்ன அநிருத்தாதி அனந்த திவ்விய சுபாசிரய ஸ்ரீ பகவத் பிம்பாகார திவ்ய மங்கல விக்ரக ஸ்வரூபாராகிய உம்மைப் பரம வைதீக விதிப்படி திருவாராதனத்துடன் குணானுபவங்களைச் செய்து ஸ்ரீ பகவதபிமானங்களை யடைந்து ஸ்ரீமந் நாராயண வெனும் மகா மந்திர தத்பரர்களாய் ஸ்ரீமதே நாராயணாய நமவென்று சர்வ காலத்திலும் அனுசந்தித்து பிரணாமங்களைச்செய்து சுத்த தத்வாத்மக அப்ராக்ருத திவ்யாவயவ ஸ்வரூபத்துடன் ஸ்ரீ பரந்தாம லோகவாசிகளாய் உம்மை யடைந்து பிர்ம்மானந்த பரர்களாய்ச் சாசுவதாநந்த நித்ய சுகத்தை யடைகின்றார்கள்.

இந்த எளியனாகிய என்னை சம்சார ஆர்ணவத்தினின்றும் ரக்ஷிக்கும் இறைவரே! உம்மை இவ் வுலகத்திலுள்ள பக்த கேவல ஸ்ரூபர்களாகிய மற்ற ஜனங்கள் நானாவித சாஸ்திர மார்க்கங்களைக்கொண்டு தங்கள் ஜன்மசௌக்கிய பயன் கொடுக்கிறவைகளைக் குறித்து உம்மை அனந்த தேவதாந்தர ஸ்வரூபங்களாகப் பூசித்தும் சர்வ தேவதாஸ்வரூபாய நமாவென்று தியானித்துப் பிரணாமங்களைச் சமர்ப்பிக்கின்றார்கள். சிலர் சாஸ்திரங்களிலுண்டான சப்த அர்த்த பேதங்களாய் சந்திர பிம்பமானது ஜலகடாகாசங்களில் பிரதிபிம்பித்து சலனத்தை யடைந்து தோன்றுகின்ற சந்திரனைப்போலவே இவ் வாத்மாவுக்கு அந்தர்யாமியான பரமாத்ம பிரதிபாத்தியம் பிராமிகமென்றும் பிராமிகந்தெளிந்த கேவல ஆத்ம ஸ்வரூபமே முக்கியமென்றும் நிர்க்குண பிரதிபாத்திக ஸ்ரீ பகவதனுபவ சூன்யமே புருஷார்த்த மென்றும் உமது பாவசூன்யமாகிய சத்வசூன்ய நிராசிரய பாவத்தைக்கொண்டு

ஆகாசாந்தர்க்கத அக்கினி மாத்ரத்தைப்போலப் பாவ சூன்யப் பெரும்பாழை யடைகின்றூர்கள்.

வாரீர் சர்வ பிரபஞ்ச ஸ்வரூபராகிய ஸ்ரீ விஸ்வா தாரரே! இவ்வுலகத்தில் பரிசுத்தமாய் பிரவகிக்கின்ற நதிகளானவை வெள்ளத்துடன்கூடிச் சமுத்திரத்தை யடைகின்றூற்போலச் சர்வப் பிரபஞ்ச கர்ம தர்மங்களும் உமது திருமேனி தத்வ ஸ்ரூபங்களி லடைந்து உமது சங்கல்ப காலாந்தரங்களில் தோற்றுகின்றன. ஸ்ரீ வாசுதேவரே! உமக்குச் சர்வ தர்ம கர்ம யக்ஞாதி ஸ்வரூபராகிய அக்நி பகவான் முகாரவிந்த ஸ்வரூபியாகியும், சோமசூர்யர்கள் நேத்திரங்களாகியும், திக்கு விதிக்குகள் கர்ணேந்திரியங்களாகியும், பூமி திருவடித் தாமரைகளாகியும், ஸப்த சமுத்திரங்களும் கர்பஜலமாகியும், பர்வதாதிகள் சல்லிய ஸ்வரூபங்களாகியும், விருக்ஷ லதாதிகள் உரோமங்களாகியும், இவ்வுலக வியாபகமான வாயுவானது உஸ்வாஸ நிஸ்வாஸங்களோடுங்கூடிய பிராணேந்திரியங்களாகியும், இந்திராதி தேவதா ஸ்வரூபிகள் புஜங்களாகியும், மேக சமூகங்கள் கசங்களாகியும் வீரியங்களாகியும் ஆகாச வீதிகள் நாபீ பிரதேசமாகியும், இரவும் பகலும் கண்ணிமையின் ஸ்வரூபமாகியும், பிர்ம்மாவானவர் குஹ்யேந்திரியமாகியும், ஸ்ரீ ருத்திர பகவான் உமது சௌர்யஸ்தைர்யமாகியும், அண்டமுகடு சிரசாகியும் விளங்குகின்றன. இவை முதலிய விசுவ தத்வங்களும் லோக பாலர்களாகிய விசுவ புருஷர்களும் உமது திருமேனி தத்வாங்க ஸ்வரூபர்களாய் விளங்கிக் கொண்டிருக்கிறூர்கள். இவ்விதம் சேதனு சேதன ஜந்து சமூகங்களினுல் சம்பூர்ணமான அனந்தகோடி அண்டகடாஹங்களும் மஹா பிரவாஹப் பிரளய சமுத்திரத்தில் நிரை நிரையாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற ஜலராசிகளைப் போலவும், அத்திமரத்திற் றெற்றிய கனி சமூகங்களைப் போலவும், எண்ணில்லாத உமது திருமேனியினது ரோமகூப தத்துவ ஸ்வரூபங்களாகவும், சிருஷ்டி திதி லயாத்மகமாகவும், பிரவாக ரூபத்தினுலே நித்தியமாகவும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட மஹா மஹிமாதி விசித்திர தத்வ ஸ்வரூபராகிய உமக்குப் பிரணுமங்களைச் செய்கின்றேன்.

அக்ரூரர் இவ்விதம் பலவாக மனதார துதித்தும், பூமியில் தர்ம சம்ஸ்தாபனத்தின் பொருட்டும் துஷ்டர்களை சிக்ஷித்து சிஷ்டர்களைப் பரிபாலிக்கும் பொருட்டும் காலந்

தோறும் வகித்துவரும் அவதார லீலா வைபங்களை வர்ணனை செய்து ஏற்றியும் போற்றியும் எக்களிகொண்டாடினர்.



## நாற்பத்தொன்றுவது அத்தியாயம்



ஸ்ரீ கண்ணபிரான் மதுரைக்கெழுந்தருளியதும், நடு வழியில் வண்ணானைச் சம்ஹாரித்ததும் சுதர்மாவென்கிறவனுக்கு வரங்கொடுத்ததும் சொல்லப்படுகிறது.

தர்ம பரிபாலனம் செயும் அரச சிரேஷ்டரே கேளும்! இப்படி அக்ரூரரால் துதிக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணன் வேஷதாரியைப்போல மறைந்து விட்டார். அப்பால் அக்ரூரர் ஜலத்தைவிட்டுக் கரையில் வந்து சந்தியா வந்தன முதலிய கர்மங்களை நிறைவேற்றி ஆச்சரியத்துடன் ரதத்தில் உட்கார்ந்த அக்ரூரரை நோக்கி ஓ அக்ரூரரே! தாம் ஏதோ ஒரு ஆச்சரியத்தைக் கண்டவரைப்போல விளங்குகிறீர் என்று கூறின சுவாமியை நோக்கிப் பூமியிலும் ஆகாயத்திலும் சகல லோகங்களிலும் என்ன ஆச்சரியமுண்டோ அவைகளையெல்லாந் தேவரீரிடத்தில் தான் கண்டேனென்று விக்கியாபனஞ் செய்து ரதத்தில் குதிரைகளைக்கட்டி அதிவேகமாய்த் தேரூர்ந்து மதுரையினுடைய சமீபத்தில் வருகையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவரையும் வழியிலிருக்கிற கிராம வாசிகள் கண்டு பணிந்து திருப்தி யடையாமல் கூடவே ஓடி வந்தார்கள்.

அப்போது நந்தகோபர் முதலியவர்கள் மதுரைக்கு சமீபத்திலிருக்கிற நந்தவனத்தில் முன்னதாகச் சென்று சுவாமியை வழிபார்க்கையில் அப்போது சுவாமி அவ்விடம் வந்து தேரைவிட்டுக் கீழே யிறங்கி அக்ரூரருடைய கையைப் பிடித்து அவரை நோக்கி இன்றைக்கிவ்விடத்தி லிருந்து நாளையதினம் மதுரைக்கு வருகிறேன், நீர் மாத்திரம் போமென, அக்ரூரர் தேவரீரை விட்டு நான் எவ்விதம் போக முடியும்? பக்தவத்ஸலராகிய தேவரீருடைய பக்தனை அடியேனை ஒழிக்கவேண்டாம். யாதொருவருடைய திருவடி தீர்த்தத்தைச் சிவன் சார்வகாலமும் சிரசில் தரித்து பரிசுத்தரானாரோ அப்படிப்பட்ட திருவடிகளையுடைய தேவரீர் பலராமருடன் அடியேன் குடிசைக்குப் பொன்னடி சாத்தி கிருதார்த்தனாகச் செய்யவேண்டுமென்று பணிந்துரைத்த அக்ரூரரை நோக்கி "தாம் தற்சமயம் எம்மைப் பிரிந்து தம் இல்லம்

அடைவதுதான் தகுதி. கம்சனை சம்மரித்து மீளும்போது யாங்கள் அனைவரும் தம் புனித கிருகத்திற்கு வருவோம்" என்று அருளிய ஸ்வாமியை பிரிய மனமில்லாமல் பிரதக்ஷண நமஸ்காரஞ் செய்து பிரிந்து மதுரைக்குப்போய் கம்சனுடன் கண்ணன் எழுந்தருளிய செய்தியை யறிவித்து தம் இல்லம் அடைந்தார்.

பின்பு ஸ்ரீ கிருஷ்ணர் அன்றைய தினம் அந்த வனத்திலிருந்து மறுநாள் சாயங்காலத்தில் பலராமர் முதலிய கோபாலர்களுடன் ஆகாயத்தை அளாவின் படிக மயமான கோபுரங்களும், மிகவும் விசாலமாகிய கதவுகளும், பயங்கரமான அகழிகளும், சொர்ன்மயமான மதில் சுவர்களும், நானாவித நந்தவனங்களும், அமராபதிக் கொப்பாக வீதிகள் தோறும் மகர தோரணங்கள் முதலியன கட்டியும் தூபதீபங்களா லலங்கரித்தும் வாசற்படிக்கு இரண்டு பக்கத்திலும் புண்ணிய கும்பங்களினாலும் நானாவித புஷ்பங்களினாலும் அழகுபெறச் செய்திருக்கிற மதுராபுரியை நாலு பக்கத்திலும் சுற்றிப்பார்த்துக் கொண்டு பலராம சகிதராய் கோபாலர்களுடன் பகவான் அடைந்தார். இந்தச் சமாச்சாரத்தைப் பட்டணத்து ஜனங்கள் கேட்டு மிகவும் ஆனந்த மடைந்தவர்களாய் வீதிகளிலும் மெத்தை மேடைகளிலும் நின்று மலர்மாரி பெய்து சந்தோஷ ஆரவாரம் செய்து வந்தனை வழிபாடுகளைச் செய்தார்கள்.

அப்போது பிராம்மணோத்தமர்கள் தயிர் பால் புஷ்பம் சந்தனம் பூரணகும்ப முதலியவைகளால் பூஜித்து கூட்டங் கூடி யிப்படி நரலோகத்தில் மகோற்சவம்போல் எழுந்தருளுகிற ராமகிருஷ்ணர்களைச் சேவித்து திருப்தி அடையாமல் இவர்களுடன் சதாவாசஞ் செய்யும் இந்தக் கோபாலர்களுங் கோபிகைகளும் என்ன தவஞ்செய்தார்களோ அறியோமென்று மிகவுங் கொண்டாடினார்கள்.

இப்படிச் சகலமானவர்களுக்கும் ஆனந்தத்தை யுண்டு பண்ணிக் கொண்டு இராஜ மார்க்கத்தில் வருகிறபோது வஸ்திரங்களை நன்றாய் வெளுக்கப் பண்ணுகிறதிலும் சாயம்போடுவதிலும் கெட்டிக்காரனும் கம்சனுடைய வேலைக்காரனாகியு மிருக்கிற வண்ணானைக் கண்டு சுவாமியானவர் அவனை நோக்கி நீ மிக நல்லவன். வஸ்திரங்களை வெளுக்கப் பண்ணுகிறதில் வெகு கியாதியுள்ளவனானபடியால் எனக்கும் என் தமயனுக்கும் யோக்கியமான வஸ்திரங்களைக் கொடுத்தால் நீ வெகு சிறப்பை அடைவாயென்று மெதுவாய்க் கேட்ட

சுவாமியை நோக்கி வனங்களிலும் பர்வதங்களிலும் சஞ்சரிக்கின்ற கோபாலர்களுக்கு இந்த ராஜயோக்கியமான வஸ்திரங்கள் யோக்கியமா? நீங்கள் கர்வத்தினால் பதட்டமாய்ப் பிதற்றினீர்கள். என்னை வஸ்திரங் கேட்ட சங்கதியைக் கம்ச மகிபதி கேட்டால் உங்களைக் காவற்படுத்துவார்; ஆகையால் இங்கிராமல் ஓடிப் பிழையுங்களென்று சொல்லுகிற வண்ணானை தக்ஷணம் ஸ்ரீ கிருஷ்ணன் தமதிரண்டு திருக்கைகளினாலும் பிடித்துக் கிழித்தெறிந்து போட்டார். அப்போதவனுடன்கூட வந்தவர்கள் வஸ்திர மூட்டைகளைப் போட்டுவிட்டோடிப் போனார்கள். அப்பால் தம்மிட மனதுக் கிஷ்டமான வஸ்திரங்களைத் தோழன்மார்களுக்குக் கொடுத்து மற்றதை அங்கேயே போட்டுவிட்டுப் போகையில் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் மிகவும் பக்தியுள்ள ஒரு சேணியன் ஸ்ரீ ராமகிருஷ்ணர்களை நல்ல வஸ்திரங்களால் அலங்கரித்தான்.

அப்போது ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள் கறுப்பும் வெளுப்புமான ஆனைகளைப்போலப் பிரகாசித்து அந்தச் சேணியனை நோக்கி நீ இவ்வுலகத்தில் சகல சம்பத்துகளும் அடைந்து பரத்தில் சாஸ்வதமான பதத்தை அடைவாயென்று அனுக்கிரகித்து, சுதாமாவென்கிற புஷ்பக்காரன் வீட்டிற்குப் போனார்கள்.

அப்போது அந்த சுதாமா வென்கிறவன் தனது கிருகத்திற் கெழுந்தருளிய ஸ்ரீ ராமகிருஷ்ணர்க ளிருவரையுங் கண்டு அதி வேகமாக ஓடிவந்து சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு அர்க்கியபாத்திய முதலியவைகளாற் பூஜித்து ஆசனஞ் சமர்ப்பித்து அதிலெழுந்தருளின பின்பு சர்வோத்தமமான வாசனையுள்ள புஷ்பமாலைகளை யணிந்து திரும்பவுந் தண்டனிட்டு சுவாமியை நோக்கி விக்கியாபனம் பண்ணுகின்றான்.

தேவரீர் அடியேனது குடிசைக்கு எழுந்தருளியதால் அடியேனுடைய வம்சஸ்தர்களும் யானும் பரிசுத்தர்களாயினோம். சகல லோகங்களுக்கும் மூல காரணராகியும் சகல பூதங்களிடத்திலும் அந்தரியாமியாகியு மிருக்கின்ற தேவரீரை ஒருதரம் ஸ்மரித்த மாத்திரத்தில் ஒருவன் சகல பாப விமோசனனாய் மோட்ச மடைவான். அப்படிப்பட்ட மகிமையுடைய கருணைக் கடலான தேவரீர் அப்பிரயோசகனான வடியேனுக்கு தேவரீருடைய அன்பர்களான பாகவதர்களினது சகவாசமும் தேவரீரிடத்தில் பக்தியும் நிரந்தரமா யிருக்கும்படி கிருபைசெய்யவேண்டு மென்று தண்டனிட்டு திரும்பவும் திவ்விய பரிமளத்துடன் கூடின



படம் நெ. 18. பக்கம் நெ. 793-A.

ஸ்ரீ பகவான், கம்ஸனை வதைத்தது.

புஷ்பமாலைகளைச் சமர்ப்பித்தனன். அதை அங்கீகரித்துப் பலராமனுந் தாமும் அலங்கரித்துக்கொண்டு தோழர்களுக்குங் கொடுத்து வெகு சந்தோஷத்துடன் அந்தச் சுதாமனை நோக்கிச் சந்திர சூரியர்களுள்ளவரையில் உன்னுடைய சந்ததியானது பூமியில் பிரபலமாகி உன்னுடைய கோரிக்கைகள் ஈடேறும்படி அனுக்கிரகித்தேனென்று சகல கோபாலர்களுடன் அவனது வீட்டை விட்டு ராஜமார்க்கத்திற்கெழுந்தருளினர்.



## நாற்பத்திரண்டாவது அத்தியாயம்



*ஸ்ரீபகவானனவர் கம்ஸனுக்கு சந்தனம் கொண்டுபோகின்ற கூனியினிடத்தில் சந்தனம் வாங்கி பூசிக்கொண்டு அவளுடைய சரீரத்திலிருந்த கோணலை நிமிர்த்தினதும் தனுசாலையிற்போய் வில்லை முறித்ததும் சொல்லப்படுகிறது.*

அச்சுதன் அடியை பக்தியால் பூசிக்கும் ஆரியரே! பூபார நிவாரண கார்யங்களை அதி ஆஸ்சர்ய கரமாகவும் தீவிரமாகவும் இயற்றிவரும் ஸ்ரீ கிருஷ்ணன் முதலியோர் ராஜமார்க்கத்தில் வருகிறபோது மிகவும் சௌந்தரியமுள்ள முகத்துடன் திவ்விய பரிமளத்துடன் கூடின சந்தனங் கொண்டு போகிற ஒரு ஸ்திரீயைக்கண்டு, அவளை நோக்கி ஸ்ரீ கிருஷ்ணன் மாதே! நீயாருக் கிப்படிப்பட்ட திவ்யமான சந்தனங் கொண்டுபோகிறாய், அதை எங்களுக்குக் கொடுத்தால் உனக்கு க்ஷேமமுண்டாகுமென்று கண்ஜாடை காட்டிக் கேழ்க்க, அவள் ஸ்ரீ பகவானைச் சந்தோஷத்துடன் பார்த்து சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டு "சுவாமீ! அடியேன் கம்சனுடைய ஊழியப் பெண்; என் பேர் திருவக்கிரையென்று சொல்வார்கள். கம்சனுக்கு சந்தனம் நான் கொடுத்தாலன்றி மற்ற எவர் கொடுத்தாலும் இஷ்டமாகாது. அப்படிப்பட்ட சந்தனந் தேவரீருக்கே பூசிக்கொள்ள யோக்கியமானது. நீர் திருவுள்ளம் பற்றவேண்டுமென்று அந்தச் சந்தனத்தைச் சுவாமிக்குச் சமர்ப்பித்தனள்.

அவாதை வாங்கிப் பலாாமருந் தாமும் பூசிக்கொண்டு சந்தோஷத்துடன் அந்த ஸ்திரீயினுடைய சரீரத்தின் கூனை நிமிர்த்துகிறதற்கு தம்முடைய இரண்டு பாதங்களினாலே அவளுடைய கால்விரலை அழுத்திக்கொண்டு தமது கைவிர

லால் உதட்டைப்பிடித்து உயரத் தூக்கினர். உடனே உடம்பின் மூன்று கோணல்களும் நிமிர்ந்து சர்வ லக்ஷண சம்பன்னையாய் அவள் ஒரு அப்சர ஸ்திரீயைப்போலானாள். அதை சமஸ்த ஜனங்களுங் கண்டு ஸ்ரீ கிருஷ்ணனைத் தோத்திரஞ் செய்து பூஜித்தார்கள்.

அப்போதந்தக் கூனியானவள் ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமியினிடத்தில் கொஞ்சம் புத்தி சபலித்து அவருடைய அங்க வஸ்திரத்தைப் பற்றிக்கொண்டு ஒரு வார்த்தை சொல்லுகின்றனள்: கேளீர் சுவாமீ ! ஆயிரம் மன்மதனுக்கொப்பான தேவரீரை விட்டு இனி ஒரு நிமிஷமேனும் பிரிந்திருக்க மாட்டேன். ஆகையால் அடியேனுடைய சிறு குடிசைக் கெழுந்தருளிப் பின்பு போகலாமென்று சொல்ல, அவளை நோக்கி பகவான் புன்னகையுடன் சொல்லுகிறார்:

ஓ மாது சிரோன்மணீ! நான் எனது பந்து ஜனங்களுக்கு உபகாரஞ்செய்ய ஒரு விடத்திற்குப் போகின்றேன். அந்தக் காரியமானவுடன் அவஸ்யம் உனது வீட்டிற்கு வருகிறேன். நீ எனக்கு மகத்தான உபகாரஞ்செய்தாய். நீ மனைவியில்லாமல் வழி நடந்து இளைப்புடன் வருகிறவர்களுக்கு பணிவிடை செய்யென்று பரிகாசமாய்ச் சொல்லி சுவாமியானவர் தம்மிட தோழன்மார்களுடன் இராஜ மார்க்கத்தில் சமஸ்தர்களாலும் துதிக்கப்பட்டுகொண்டு இந்திர தனுசுக்கொப்பாயும் கந்த புஷ்பம் முதலியவற்றால் பூசிக்கப்பட்டு வெகு ஜனங்களால் இரக்ஷிக்கப்பட்டுமிருக்கிற தனுசாலைக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர்க ளிருவரும் வரும்போது அவர்களை உள்ளே போக ஒட்டாமல் அவ்விடத்திய காவற்காரர்கள் தகைந்தார்கள்.

அப்போது அவர்களை நிராகரித்து அவ்விடத்திலிருந்த வில்லை யெடுத்து கருப்பங்கழியை ஆனை முறிப்பதுபோல விளையாட்டாக முறித்துப் போட்டார். அந்தத் தொனி எட்டுத் திசைகளும் நிறைந்தன. அப்போதவ்விடத்தி லிருக்கிறவர்களும் மூர்ச்சித்து ஒரு முகூர்த்தத்திற்குப் பின் தெளிந்தெழுந்து சிலர் ஸ்ரீ கிருஷ்ணனை அடிக்கவேண்டுமென்று சிலர் கொல்லவேண்டுமென்றும் சொல்லிச் சூழ்ந்துக்கொண்டார்கள்.

அப்போது ஸ்ரீ ராமகிருஷ்ணர்க ளிருவருங் கடுஞ்சின மடைந்து தாங்கள் ஒடித்திருந்த வில்லை இரண்டுபேருங் கைக்கொண்டு அவர்களைச் சின்னபின்னமாக அடித்துத் துரத்தி சகல கோபாலர்களுடன் நந்தகோபரிருக்கிற உத்தி

யான வனஞ்சென்று கால போஜனஞ் செய்து அந்தக் கம்சனுடைய செய்கையைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற யோசனையாக அந்த வனத்தில் வீற்றிருந்தார்கள். இப்பால் மதுராபுரி ஜனங்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணர்களுடைய பராக்கிரமத்தையும் சௌந்தரியத்தையும் பார்த்து திருப்தியடையாமல் வியப்புடனிருந்தார்கள்.

அப்போது கம்சனுக்கு கனவிலும் கண்ணாடியிலும் ஜலத்திலும் தன் சரீரத்தில் சிரசில்லாததாயும், சந்திரன் நாலைந்து துணுக்கைகளாகவும், விருக்ஷங்கள் இலையில்லாமல் சூனியமாகவும், உட்கார்ந்த விடத்தில் பூமி பள்ளமாகவும், நித்திரையில் பிணத்தை ஆலிங்கனஞ் செய்து கொள்வது போலும், கழுதை மேலேறி சஞ்சரிக்கிறது போலும், தாமரைத் தண்டுகளைப் பக்ஷிக்கிறது போலும், சப்பாத்திப் பூமாலையைக் கழுத்தில் அணிந்து கொண்டது போலும், தைலாப்பியங்கனஞ் செய்துகொண்டது போலும், அநேக துற்சொற்பனங்களைக் கண்டும், ஸ்ரீ ராம கிருஷ்ணர்கள் வில்லை யொடித்துக் காவலாளிகளைத் துரத்தினதைக்கேட்டும் மனம் நடுங்கி இராத்திரியெல்லாந் தூங்காமல் விசனப்பட்டுக் கொண்டிருக்கையில் சூரியோதய மாயிற்று.

பின்பு கம்சனுனவன் மல்ல யுத்தஞ் செய்வதற்கு இடஞ் சிங்காரித்து பட்டணத்திலுள்ள நான்கு வர்ணத்தாரையும் வரவழைக்க அவர்களில் பிராமணர்கள் ஆசீர்வதிக்க மற்றவர்கள் துதிக்க சகல மந்திரி வர்க்கங்களுடன் பந்துக்கள் புடைசூழ அவரவர்களுக்குத் தகுந்த ஆசனங் கொடுத்து உட்காரவைத்து, தூதர்களை யனுப்பி நந்த கோபரை வரவழைக்க, அவரும் சகல கோபாலர்களுடன் இராஜாவுக்குக் காணிக்கை கொடுத்து ஜயவிஜயீபவா வென்று சொல்லி ஒரு ஆசனத்தி லிருந்தார். அப்போது பேரி முதலிய சகல வாத்தியங்களுந் தொனிக்க அந்தச் சபை நடுவிலிருக்கையிலும் கம்சனுனவன் மிகவும் பயத்துடன் நடுக்கமுற்றிருந்தான். மல்லக ஜெட்டிகளிற் சிறந்தவர்களான சாணூரன் முஷ்டிகன் முதலியவர்கள் யுத்த மண்டபத்திற்கு வந்து வீர கோஷங்களைக் கோஷித்தார்கள்.



## நாற்பத்திமூன்ருவது அத்தியாயம்

இராம-கிருஷ்ணர்களிருவரும் மல்யுத்தம் செய்ய பிரயாணமாய் வரும்போது குவலயாபீடம் என்கிற யானையை வதைத்தது.

வாராய் ஹே புண்ய புருஷனே உமது இருவினைத் துன் பங்கள் மாயும்படி அந்த ஸ்ரீ மாதவனது லீலா சரிதங்களை இன்னும் கேளும்! ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவருங் கோபாலர் களை அழைத்துக்கொண்டு மல்லயுத்தஞ் செய்வதற்கு ஆயத்த மாய் பேரி அடிக்கிற விடத்திற்குச் செல்லும்போது ஆயிரம் யானைகளுக்குச் சமானமான பலமுடையதாயும் பர்வதம்போல ஆகாரமுடையதாயு மிருக்கிற குவலயாபீடமென்கிற யானை குறுக்காக இருக்கக்கண்டு மாவெட்டிகாரனை நோக்கி இந்த யானையை வழியை விட்டப் புறம் ஓட்டு. இல்லாவிடில் உன் னையும் இந்த ஆனையையும் யமபட்டணத்திற்கு அனுப்புவே னென்று சுவாமி சொல்ல, அவன் கேட்டு கோபங்கொண்டு அந்த யானையை ஸ்ரீ கிருஷ்ணனை எதிர்க்கும்படி ஏவினுன்.

அப்போதந்த மதயானை ஓடிவந்து ஸ்ரீ கிருஷ்ணனை துதிக்கையினுலே பிடித்திழுக்க அதை விடுவித்துக் கொண்டு அந்த கஜத்தைக் காலாலுதைத்து அதின் காலின்தானே மறைந்து கொண்டார். அப்போது யானை வெகு கோபங் கொண்டு காலின்கீழே மறைந்திருக்கிற சுவாமியை திரும்பவும் துதிக்கையால் பிடித்திழுக்க அதையும் இலகுவாய் தப்பித்துக் கொண்டு பின்பக்கத்திற் சென்று வாலைப் பிடித்து இருபத் தைந்து விரற்கிடை தூர மிழுக்கத் திரும்பவும் அது சுவாமி யைப் பிடிக்க வலப்பக்கமாய் வர அப்போது அவர் வாலோடே கூடவே ஓட்டிக்கொண்டு இடப்பக்கமாய் யிழுத் தார். அப்போதந்த யானை, இடத்தில் திரும்பினுல் வலத் திலும் வலத்தில் திரும்பினுல் இடத்திலுமாகச் சற்று நேரம் அந்த கஜத்துடன் விளையாடிப் பின்பு அந்த கஜத்திற் கெதி ராக ஓடிவந்து அதின் தலைமீதில் குத்தி அதின் கையிலகப் படாமல் ஓடிப்போனவர் போல் க்ஷணப்போது கீழேபடுத்துக் கொள்ள, அதைப் பார்த்து அந்த யானையானது மீட்டும் ஓடி வந்து இரண்டு கொம்பினுலும் முட்ட அதையும் உபாயமாய் தப்பித்துக் கொண்டு பின்னங் கால்பக்கம் மறைந்து கொள்ளு கிறதும் அது கண்டுபிடித்தால் முன்னே ஓடிவந்து தலையின் மீது குத்தி காலின்சந்தில் மறைந்து கொள்ளுகிறதும் இவ் விதமாக அந்த யானையின் பிரயத்தனம் ஒன்றுஞ் சாயவொட் டாமற் செய்தார். அப்பால் அந்த கஜமானது மாவெட்டிக்

காரனு லேவப்பட்டு மிகவும் கோபத்துடன் சுவாமியைத் தூரத்துகிறபோது சுவாமி எதிரேவந்து இரண்டு கைகளாலும் அதன் துதிக்கையைப் பிடித்துக் கீழே தள்ளி இரண்டு கொம்புகளையும் முறித்துக் கொன்று போட்டார்.

பின்னும் அதனுடன் வந்த யானையையும் மாவெட்டிக்காரர்களையுங் கொன்றுபோட்டு உதிரத்தாலும் மதஜலத்தாலும் சரீரமெல்லாம் நனைக்கப்பட்டு அந்த யானையின் கொம்பைத் தோளில் சாத்திக்கொண்டு ஸ்ரீ ராம கிருஷ்ணர்களிருவரும் சகல கோபாலர்களுடன் நக்ஷத்திரங்களாற் சூழப்பட்ட சந்திரன் போலும் கம்சனுடைய சபையில் மல்லயுத்தஞ்செய்ய வந்தவர்களுக்கு வஜ்ஜிராயுதம்போலும் வெளிப்பட்டார்கள். பார்க்க வந்தவர்களுக்கு மனோகரமாகியும் அந்தப்புர ஸ்திரீகளுக்கு மன்மதன்போலும் தேவகீ வசுதேவர்களுக்கு பாலனாகியும் கோபாலர்களுக்குத் தோழனாகியும் கம்சனுக்கும் அவனைச்சார்ந்தவர்களுக்கும் யமன்போலும் கியானமில்லாதவர்களுக்கு மனிதனாகவும் யோகிகளுக்குப் பரதேவதையாகவும் யாதவர்களுக்கு ஈஸ்வரனாகியு மிருக்கின்ற சுவாமியானவர் குவலயாபீடமென்கிற யானையைச் சங்கரித்துத் தடையில்லாமல் சபையில் வருவதைத் தூதர்கள் மூலமாய்க் கம்சன் கேள்வியுற்று மிகவும் பயத்தை யடைந்தனன்.

அப்பால் சபையிலிருக்கிற ஜனங்கள் சுவாமியினுடைய திவ்ய சௌந்தர்யத்தைப் பார்த்து சிலர் சுவாமியைத் தியானஞ்செய்துகொண்டும் சிலர் அந்தச் சுவாமியின் சரித்திரங்களை நாவினுல் சொல்லிக் கொண்டும் சிலர் கண்ணுற் பார்த்து ஆலிங்கனஞ் செய்துக்கொண்டும், சிலர் கோகுலத்தில் செய்த திவ்ய சரித்திரங்களெல்லாங் கேட்டிருப்பீர்களே; அதுவும் போதாமல் இவ்விடத்திற்கு வந்து ஒருவராலும் அசைக்கவொண்ணுத வில்லை யொடித்ததும் மலைக்கொப்பான குவலயாபீடமென்கிற யானையைச் சங்கரித்ததும் பிரத்யக்ஷமாய்ப் பார்த்திருக்கின்றோம். ஆதலால் இந்த ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்ரீமந் நாராயணராகவும் ஸ்ரீ பலராமன் ஆதிசேடனுகவுமிருக்க வேண்டுமென்றும் மதுராபட்டணத்து ஜனங்கள் சொல்லிக்கொண் டிருக்கையில் அந்தச் சபையில் நானுவித வாத்தியங்களுடன் வந்திருக்கிற முஷ்டிகனும் சாணூரனும் ஸ்ரீ கிருஷ்ணனை நோக்கி நீங்களிருவரும் கைச்சண்டையில் மெத்தக் கெட்டிக்காரர்களென்று இராஜா கேள்வியுற்று உங்களை வரவழைத்தார். நீங்களும் நாமும் கைச்சண்டை போடுவோம். அதைப் பார்த்து கம்சன் சந்தோஷிக்கட்டுமென்று

சொல்லுகின்ற சாணூரனை நோக்கி ஸ்ரீ கிருஷ்ணன் நாங்களிருவரும் பாலர்களாகியும் யுத்த சிக்ஷை யில்லாதவர்களாயுமிருப்பதால் எங்களுக்குச் சமானமானவர்களுடன் நாங்கள் யுத்தஞ் செய்கிறோமென்று கூற ஸ்வாமியை நோக்கி மகா பிரபலமான வில்லை வளைத்து இருதுண்டாக ஒடித்து மலைபோன்ற குவலயாபீடத்தைப் பரிகாசமாய்ச் சங்கரித்ததினாலே உங்கள் பலத்தைத் தெரிந்து கொண்டேன். பலராமனுடன் முஷ்டிகனும் என்னோடே நீயும் யுத்தஞ் செய்யவேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து சாணூரன் வீர வார்த்தை பேசினான்.



## நாற்பத்திநான்காவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ணன் சாணூரனுடனும், பலராமன் முஷ்டிகனுடனும் போர் செய்து அவர்களை கொன்று பிறகு கம்சனையும் வதைத்து, தேவகி-வசுதேவர் முதலியவர்களை விடுவித்தமை சொல்லப்படுகிறது.*

கேளும் பரதவம்ச பவித்ரனே! சாணூரனது சொற்களைக் கேட்டு நல்லது நல்லது உமதிஷ்டப்படியே நடக்கட்டுமென்று ஸ்ரீ பலராம கிருஷ்ணர்கள் அந்த துஷ்டர்களை முதலில் ஒழிக்கத் தீர்மானித்து, அவர்களோடு யுத்தம் செய்ய பிரயத்தனப்பட்டார்கள். அவர்களைப் பார்த்து கைகளைத் தட்டித் துடைகளை அறைந்து தோள்களைத் தட்டிக் கொண்டோடி வந்து ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவரையும் இரண்டு கைகளினாலே கட்டிப்பிடித்து இறுக்கி இழுத்துக் கொண்டும் விட்டும் ஒருவர்க்கொருவர் இடசாரி வலசாரியாய்ச் சுற்றி வெகுவாய்க் கட்டி யிழுத்துக்கொண்டு கால்களால் கால்களையுங் கைகளால் கைகளையும் பின்னி, அவைகளை ஒருவர்க்கொருவர் லாகவமாய் விடுவித்துக்கொண்டும் ஒருவரை யொருவர் கொல்லவேண்டுமென்று சந்தி பார்த்து ஒருவருடைய கருத்தை ஒருவருக்குத் தெரியவொட்டாமல் தலைகளால் தலைகளை முட்டியும் முழங்கால்களால் முழங்கால்களை இடித்தும் மாரோடே மார்பொருத்தி முஷ்டியினால் குத்தியும், ஒருவர்க்கொருவர் வெகுதூரம் தள்ளியும், ஒருவர்க்கொருவர் ஆகாசத்தில் தூக்கிக் கீழேபோட்டும் கைகளால் சலியாமல் பிண்டாகாரமாய்க் கட்டிக்கொண்டுமொருவனை யொருவன் பலத்தினால் திமிரியும் சரீரமெல்லாம் வேதனை யுண்டாகும்படியாக திவ்ய சௌந்தரியமுள்ள

ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவரும் மல்யுத்தஞ் செய்கிறதைப் பட்டணத்து ஸ்திரீகள் கண்டு ஒருவர்க்கொருவர் இந்த ராஜ சபையில் வந்திருக்கிறவர்கள் மிகவும் அன்னியாயம் பண்ணு கிறார்கள், வஜ்ஜிராயுதம்போலக் கடினமாயும் மலைபோல பருத்துமிருக்கிற சரீரத்தையுடைய மல்லர்களுக்கும் 'மெது வாய் திவ்விய சௌந்தரியத்தோடேகூடிய மூசத்தையுடைய ஸ்ரீ ராமகிருஷ்ணர்களுக்கும் யுத்தம் சரிப்படுமோ ? இப்படிப் பட்ட அனியாயத்தை இராஜாவானவன் செய்யச்சொன்னால் அதை இந்தச் சபையிலிருக்கிறவர்கள் வேண்டாமென்று சொல்லாமல் உபேக்ஷை செய்கிறார்களே. இவர்களுக்கு மகத்தாகிய பாபமுண்டு. சபையிலிருக்கிறவர்கள் ஞான வைராக்கியத்துடனும் பக்ஷபாத மில்லாமலும் வித்தியா வான்களாயும் சத்தியவந்தர்களாயும் அகங்கார முதலியவைக ளில்லாதவர்களாயும் தர்மா தர்மங்களை உபதேசிக்கத்தக்க வர்களாயு மிருக்கவேண்டும். இது மகா அநியாயம். இதைக் கண்ணால் காண்பதைவிட போய்விடுவதே மேலென்று விசனப்படுகிற ஸ்திரீகளின் வார்த்தைகளை வசுதேவ தேவகீகள் கேட்டு புத்ரர்களுக் கெங்கே அபாயம் நேரிடுகிற தோவென்று மிகவும் விசனப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் சாணூரனை சுவாமி ஒரு குத்து குத்தி னார். அப்போதவன் மிகவுமிளப்படைந்து பெருமூச்சு விட்டு கண் தெரியாமல் மூர்ச்சித்து அப்பால் சமாளித்து கைகளை உருட்டிப் பிடித்து மிகவும் வேகத்தோடே பருந் தானது மாமிசத்தைத் தூக்குவதுபோல ஓடிவந்து சுவாமியி னுடைய மார்பில் குத்தினான். அதைப் புஷ்பமாலையா லடிக்கப்பட்ட யானையைப்போல் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சட்டைபண்ணாமல் அவனை இரண்டு கைகளையும் பிடித்துத் தூக்கி கிறுகிறுவென்று சுழற்றி பூமியில் மோதினார். அந்தச் சாணூரன் வாயினில் ரத்தங் கக்கிக்கொண்டு கண்விழி பிதுங்கி நாக்கைக் கடித்துப் பிராணனையிழந்து விழுந்தனன். முஷ்டிகனும் பலராமனால் மார்பினில் குத்தப்பட்டு இரத்தங் கக்கி கீழேவிழுந்து ஹதமானான். அவர்களோடிருந்த கூட னென்கிற மல்லனை பலராமனும் சலபனையுந் தோசலனையும் ஸ்ரீ கிருஷ்ணனுமாக கால்களைப் பிடித்துக் கிழித்துப் போட் டார்கள். பின் அவர்களுக்கு பக்க பலமாக வந்தவர்கள் பயத்தை யடைந்து பிராணனிருந்தால் போதுமென்று திக்குகள்தோறும் ஓடிப்போனார்கள்.

பின்பு ராமகிருஷ்ணர்க ளிருவருங் கோபாலர்களோடே விளையாடிக் கொண்டிருக்கிறதைச் சகலரும் பார்த்து சந்தோ

ஷித்தார்கள். அப்போது ராஜாவான கம்சன் மிகவும் பயத்தை அடைந்து படர்களை நோக்கி துஷ்டர்களான வசுதேவ குமாரர்களை அவர்களுடைய தோழன் மார்களுடன் இந்தப் பட்டணத்தை விட்டுத் துறத்தி அவர்களுடைய சொத்துகள் யாவையும் பிடுங்கிக்கொள்ளுங்கள். புத்தியில்லாத நந்தகோபனைக் காவற்படுத்தி சாதுவைப்போலிருக்கிற வசுதேவரையும் உக்கிரசேனரையுங் கொல்லுங்களென்று ஆக்கியாபிக்க, ஸ்ரீ பகவான் மிகவுங் கோபத்துடன் யுத்தரங்கத்தைவிட்டு ஆகாயத்தில் கிளம்பி கம்சன் உட்கார்ந்து கொண்டிருக்கிற ஆசனத்தில் குதித்தார். அவரைக் கம்சன் கண்டு பயந்து தனக்கு மிருத்தியு சமீபித்ததென்று தெரிந்து அந்த ஆசனத்தை விட்டு எழுந்திருந்து கத்தி கேடயத்தைக் கையிலெடுத்துக்கொண்டு பருந்தானது ஆகாயத்தில் இடது பக்கமாயும் வலது பக்கமாயுஞ் சுற்றுவதுபோலப் பூமியில் சுற்றிக்கொண்டிருக்க ஒருவராலும் சகிக்க வொண்ணாத வேகத்துடன் கூடின சுவாமியானவர் அவனைப் பலவந்தமாய்ப் பிடித்துக் கிரீடத்தைக் கீழேதள்ளித் தலைமயிரை கையிற்சுற்றிக்கொண்டு புற்றிலிருந்து வெளிப்பட்ட மகா நாகத்தைக் கருடன் அபகரிப்பதுபோல் அந்த துஷ்டனை கம்சனைப் பிடித்து யுத்த பூமியில் இழுத்துத் தள்ளினார். அப்போது கம்சன் அந்த வேகம் பொறுக்கமாட்டாமல் பிராணனை யிழந்தான்.

தேன் பரவி ஒழுகும் பசுமையான மாலையையும் வீரமணிகளையும் தரித்த கம்சன் பயந்து, சிநேகமென்பதும் விரோதமென்பதும் இலாத ஸ்ரீ கிருஷ்ண பகவானை பிரதி தினமும் நினைத்துக் கொண்டிருந்தபடியால், கருடக் கொடியுடைய ஸ்ரீமந் நாராயணனது அழகிய அணிகள் நிறைந்த வலிய பாதங்களை தேவர்களும் ஆச்சரியமடையும்படி வேகமாய்ச் சென்று அடைந்தான்.

அப்போது சபையிலிருக்கிறவர்களெல்லோருங் கம்சன் இறந்துபோனதற்கு ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இப்படி கம்சன் இறந்துபோன சங்கதியை அவன் சகோதரர்கள் எட்டுப்பேருங் கேள்வியுற்று சகிக்கமாட்டாமல் ஸ்ரீ ராமகிருஷ்ணர்களுடன் யுத்தத்திற்கு வந்து சூழ்ந்து கொண்டார்கள். அப்போது பலராமர் பரிகமென்கிற ஆயுதத்தினால் க்ஷணப்போதில் அவர்களைச் சங்கரித்துப் போட்டார். அப்போது பிரம்மன் உருத்திரர் முதலிய தேவர்கள் புஷ்பமாரி சொரிந்து துந்துபி வாத்திய மடித்து கோலாகலமாய்ச் சந்தோஷித்தார்கள்.

அப்போது ராமகிருஷ்ணர்களிருவரும் யுத்த பூமியில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். பிறகு கம்சன் முதலியவர் களுடைய மனைவியர்கள் எல்லாருந் துக்கப்பட்டுக்கொண்டு யுத்த பூமிக்கு வந்தார்கள். அவர்களில் கம்சனுடைய மனை வியர்கள் மிகவும் துக்கத்தோடு ஆரவாரித்து அந்த கம்சனை நோக்கி எங்களுக் கிஷ்டனுகியும் சகல தர்மங்களையும் அறிந்த நீர் ஒரு அபராதமுஞ் செய்யாதிருந்த சிசுக்களைச் சங்கரித்த தோஷத்தாலிந்த ஆபத்தை யடைந்தீர். உம்மைப் பறிகொடுத்து இராஜ்ஜியத்தையு மிழந்து வைதவ்யத்தை யடைந்த நாங்களும் மரித்தவர்களே யன்றி வேறில்லை என்று நாநாவிதமாகச் சொல்லிக்கொண்டு விசனப்படுகிறவர் களை ஸ்ரீ கிருஷ்ணன் சமாதானஞ்செய்து, மரணத்தை யடைந்தவர்களுக்கு சமஸ்கார முதலியவைகள் செய்யச் சொல்லி ஆக்யாபித்து தம்மிட தாய் தந்தை முதலியவர்களைக் காவலில் நின்றும் விடுவிக்கும்படி பணித்தார்.

ஆயிரம் வாய்களையுடைய ஆதிசேஷன் மீது யோக நித்திரைகொள்ளும் தாமரைக் கண்களையுடைய மாயவனுன ஸ்ரீ கிருஷ்ணனும் வெண்மையான உருவமுடைய பலராம னும் தேவகி தேவிக்கும் வசுதேவருக்கும் கால்களில் தரித் திருந்த விலங்குகளை ஒழித்து, தாய்-தந்தையரான அவர்களது பாதங்களில் தாமரை மலர்களை சாத்துவதைப்போல பொன் கடகங்களை யணிந்த சிவந்த கரங்களை சிரமேல் கூப்பியபடி வணங்கி எழுந்து வந்தித்து நின்ருர்கள்.

இப்படி பயபக்தியுடன் நிற்கிற ஸ்ரீ ராமகிருஷ்ணர்களை வசுதேவரும் தேவகியும் இதேது இவர்கள் பகவத் அவதார புருஷர்களே யாகவேண்டும். சாதாரண மனிதராயின் இப் புவியில் நினைப்பதற்கும் அரிதான அசாத்ய கார்யங்களை விளையாட்டாக செய்து முடிப்பது கூடுமோ? ஒருவருக்கும் அடங்காதவனும் பிறரால் வெல்ல முடியாதவனும் நம் யாவ ருக்கும் நமனைப்போன்றவனுமான கம்சன் ஒரு கணப் போதில் மடிந்தானே! என்று பலவிதமாக நினைந்தபடி மிகவும் பயபக்தியுடனிருந்தார்கள்.

அதை சுவாமி தெரிந்துகொண்டு இவர்களுக்கிப்போதே நம்மிடத்தில் ஈஸ்வரபக்தி உண்டாயிற்ருனல் இல்லற வாழ்க் கையைவிட்டு யோகமார்க்கத்தை அனுசரிப்பார்கள். இவர் களுடைய கியானத்தை மாயையால் மறைக்கச் செய்யவேண்டு மென்று கருதி அவர்களை நோக்கி மதுரமாய் ஒரு வார்த்தை அருளிச் செய்கிருர்; கேளீர் மாதாபிதாக்களே! உங்களுடைய

கர்ப்பத்தில் நாங்களிருவரும் புத்திரர்களாக ஜனித்தும் எங்களாலுங்களுக் கொருவிதத்திலும் சௌவுக்கிய மில்லாமற் போயிற்று. அதுதானில்லாவிட்டாலும் எமது பால்ய லீலா கார்யங்களை நீங்கள் கண்ணுற் பார்க்கவு மில்லையே, என்று பலவிதமாக உலக ரீதியாக அன்பு மிகுந்தவராக பேச அவர்களை வாரியெடுத்து மடியில் வைத்துக்கொண்டு ஆனந்த பரவசம் அடைந்தார்கள்.

இப்படி இவர்களுக்குத் தங்களுடைய சொரூப கியாபகம் வராமலிருக்கும்படியான வார்த்தைகளைச் சொல்லி சமாதானஞ்செய்து மாதாமகனை உக்கிரசேன மகா ராஜாவின் அருகிற்சென்று அவரை நமஸ்கரித்து அவரைநோக்கி உம்முடைய புத்திரன் அசுரனுகையால், அநேகம் பசுக்களையும் பிராம்மணர்களையும் சிசுக்களையும் சங்கரித்த தோஷத்தால் அற்பாயுளை யடைந்தான். அவனுக்காகத் துக்கிக்கவேண்டாம். நீரினிமேல் இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்யவேண்டுமென்று மிகுந்த வணக்கத்துடன் சொல்லி, அவரைச் சிங்காதனத்தி லிருக்கச்செய்து பட்டாபிஷேகஞ்செய்து, யாதவர்களுக்குச் சிங்காதனமில்லாமற் போகக்கடவதென்று யயாதி மகாராஜா சபித்திருந்தாலும் என்னைப்போலொத்த சேவகன் உமக்கிருக்கும்போது அந்தச்சாபம் உம்மை இனி யணுகாது. இந்திரன்கூட கப்பங் கட்டுவானென்று சொல்லி உக்கிர சேனருக்கு எதிராகவே வாயுபகவானை வரவழைத்து நீ தேவந்திரனிடத்திற் சென்று நான் சொன்னதாக உக்கிர சேன மகாராஜாவுக்கு சுதர்மமென்கிற சபை வேண்டி யிருக்கிறதென்று சொல்லி கொண்டுவா வென்றுக்கியாபிக்க, அவனுமப்படியே இந்திரனிடத்திற் சென்று ஸ்ரீ கிருஷ்ண சுவாமி ஆக்கியாபித்த சங்கதியைச் சொல்ல, அதைக்கேட்டு தேவேந்திரன் ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமியினுடைய பிரபாவத்தை யறிந்தவனுகையால் அப்படியே வாயு பகவானிடத்தில் அநேக யோசனை தூரம் விசாலமாகிய நவரத்தின ஸ்தம்பங்களோடுங் கூடிய எவ்விடத்தில் வைத்தாலும் அந்த இடத்திற்குத் தகுந்தபடி பொருந்தும்படியான தன்மையுள்ள தேவ நிர்மாணமான அந்தச் சுதர்மமென்கிற சபையை கொடுத் தனுப்பினுன். வாயுபகவானும் அந்தச் சபையை உக்கிரசேன மகா ராஜாவினது அரண்மனையிற் கொண்டு வந்து வைத்தான்.

பிறகு உக்கிரசேன மகா ராஜாவும் அந்தச் சுதர்மமென்கிற சபையிலிருந்து ஸ்ரீ கிருஷ்ண சுவாமியினது உதவியின் பேரில் அரசாக்ஷி செய்துகொண்டு வந்தார். ஸ்ரீ ஜனார்த்த

னர் கம்சனுடைய பயத்தினால் தேசாந்திரம் ஓடிப்போன பந்துக்களை வரவழைத்துக் கம்சனால் அபகரிக்கப்பட்ட சொத்துக்கள் யாவையும் அவர்களுக்குக் கொடுத்து சந்தோஷிக்கச் செய்தனர்.

பின்பு ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள் நந்தகோபரிருக்கிற உபவனத்திற்குச் சென்று அவரை ஆலிங்கனஞ்செய்து கேளீர் பிதாவான நந்தகோபரே! கம்சனுடைய பயத்தால் வசுதேவர் என்னை உங்கள் கிருகத்தில் கொண்டுவந்து விட்டார். அதுமுதல் உம்மாலும் மாதாவான யசோதா தேவியாலும் உங்களாத்மாவைக் காட்டிலும் விசேஷ அன்பு வைத்து எங்களைப் போஷித்தபடியால் நீங்களே தாய் தந்தையரானீர்கள். ஆகையால் உங்களை நான் ஒருக்காலும் மறக்கமாட்டேன். நீங்க ளிப்போது கோகுலஞ் செல்லுங்கள். நான் சில நாள் சென்று வருகிறேனென்று சொல்லி அவர்களுக்கும் அவர்களோடு கூடவந்த கோபாலர்களுக்கும் திவ்ய ஆடையாபரணங்களைக் கொடுத்து ஆலிங்கனஞ் செய்தனர். நந்தகோபர் ஸ்ரீ ராம கிருஷ்ணர்களை மடியில் வைத்து உச்சிமுகந்து ஆலிங்கனஞ்செய்து அவர்களாலனுபவிக்கப் பட்டுக்கொண்டு சகல கோபாலர்களுடன் பிறிவை சகியாதபடி வருந்திய வண்ணம் கோகுலஞ் சென்றனர்.



## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்



*ஸ்ரீ வசுதேவர் கர்காசாரியரை வரவழைத்து ஸ்ரீராம-கிருஷ்ணர்களுக்கு உபநயனம் செய்வித்து, சாந்தீப முனிவரிடத்தில் வித்யாப்பியாசம் செய்ய அநுப்பியதும், ஸ்ரீ பகவான் இறந்துபோன அவருடைய புத்திரனை கொண்டு வந்து கொடுத்ததும் சொல்லப்படுகின்றது.*

பிறகு வசுதேவர் யாதவர்களுக்கு புரோகிதரான கர்காசாரியரை வரவழைத்து ஸ்ரீ ராமகிருஷ்ணர்களுக்கு உபநயனஞ்செய்து பிராமணர்களுக்கு அநேக பசுக்களும் சொர்ணங்களும் வஸ்திரம் பூரி முதலியவைகளும் அபரிமிதமாகக் கொடுத்து போஜனஞ் செய்வித்தும் கர்காசாரியருக்கும் அநேக ஆடையாபரணங்களைக் கொடுத்து போஜனஞ் செய்வித்தும் திருப்தி செய்தனர். பிற்பாடு ஸ்ரீ ராம கிருஷ்ணர்க ளிருவரும் பிரம்மசரிய விரதத்தை அநுசரித்து

கற்காசாரியருக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கும் போது குருகுலவாசஞ் செய்து வித்தியாப்பியாசஞ் செய்ய நிச்சயித்து, அவந்தி தேசத்தில் வாசஞ் செய்கிறவராகியும் வேதங்களேயும் சாஸ்திரங்களேயும் உபநிஷத்துக்களேயும் தனுர்வேதம் முதலிய சகல கலேகளேயு முணர்ந்த சாந்தீபினி யென்னும் பிராமணரை யடுத்து நான்கு வேதங்கள் ஆறு சாஸ்திரங்கள் சகல உபநிடதங்கள் பிரயோக சாஸ்திரம் ஐன்னூறு உபசங்கார சாஸ்திரம் ஐன்னூறு அதினுடைய மந்திரங்கள் மனுஸ்மிருதி முதலிய ஆறுவித இராஜ நீதிகள் முதலியவைகளே ஒருதரஞ் சொல்ல, அதிக கூர்மை பொருந் திய புத்தி யுள்ளவர்களாகையால் ஒரு நாளேக்கு ஒரு வித்தை யாக சகலமும் கற்றுத் தேர்ந்தனர்.

பின்பு ஸ்ரீராமகிருஷ்ணர்களிருவரும் அந்தச் சாந்தீப முனியை நோக்கி சுவாமின்! தேவரீருடைய அனுக்கிரகத்தி ஞல் சகல கலேகளேயுங் கற்றுணர்ந்தோம். இனிமேலெங்க ளிடத்தில் கிருபைகூர்ந்து தேவரீருக்கு வேண்டியதைக் கேட்கவேண்டுமென்றனர். ஸ்ரீ ராம கிருஷ்ணர்களுடைய முகத்தை யுற்றுப்பார்த்து சாந்தீப முனியானவர் அவர்க ளுடைய வார்த்தைகளேயும் அதிமானிட கிருத்தியங்களேயும் யோசித் துணர்ந்து "எனது அன்பின் மிகுந்த சிறுவர் களே! எனது புத்திரன் பிரபாக தீர்த்தத்தில் மரணத்தை அடைந்தான். அவனேக் கொண்டுவந்து கொடுப்பதே குரு தக்ஷிணேயாகும்" என்று சொல்ல, அதற்கிசைந்து, உத்தரவு பெற்றுக்கொண்டு, ஸ்ரீ ராம கிருஷ்ணர்கள் இரதத்தின் மீதேறிக்கொண்டு பிரபாக தீர்த்தத்திற்கு வந்து நின்ருர்கள்.

இதையறிந்த வருணன் அதிவேகத்தோடு ஓடிவந்து அர்க்கியபாத்தியம் முதலியவற்ருல் பூஜித்துக் கைகளேக் கூப்பிக்கொண்டு நிற்க, அவனேப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் அருளிச்செய்கின்றனர்: வருணதேவரே! முன்பு பிரபாக தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யவந்த சாந்தீபினியினது குமா ரன் இறந்துபோனுனே, அவன் எனது குருபுத்திரன் ஆகை யால் அவனே குரு தக்ஷிணேயாகக் கொடுக்கவேண்டுமென்று சொல்லி, அவனேச் சீக்கிரத்திற் கொண்டுவந்து விடவேண்டு மென்று சொல்ல; அந்த வார்த்தையைக் கேட்டு வருணன் ஸ்ரீ புண்டரீகாக்ஷனை கண்ணபிரானே நோக்கி தேவரீ ருடைய குருபுத்திரனே நான் காணவில்லே. சமுத்திரத்தில் சங்கு உருவமா யிருக்கின்ற பஞ்சஜனென்கிற அசுரன் அவ னேச் சங்கரித்தான். அவ்வசுரனேச் சம்மரிக்க என்னுலாகாது. தேவரீரே அவனேச் சம்மரிக்க வேண்டுமென்று சொல்ல,

வருணனுடைய வார்த்தையைக் கேட்டு பலதேவரை இரதத்தி லேயே நிறுத்திவிட்டு சர்வ லோகேஸ்வரனான ஸ்ரீ கிருஷ்ணர் கீழேயிறங்கி சமுத்திரத்திற் பிரவேசித்து அந்தப் பஞ்சஜனைச் சங்கரித்துக் கிழித்துப் பார்க்கையில் தம்மிட குரு புத்திரன் அவனிடத்தில் தோற்றவில்லை. அவனுடைய சரீரமாகிய சங்கை எடுத்துக்கொண்டு திரும்பவும் இரதத்தின் மீதேறி பலபத்திருடன் சையம்நீ என்கிற யமபட்டணத்திற்குச் சென்று பாஞ்சசன்னியமென்கிற சங்கத்தைப் பூரித்தார். அந்தத் தொனியைக் கேட்டு யமதர்மராஜன் ஓடிவந்து அர்க்கியபாத்தியாதி பூஜையால் உபசரித்துத் தண்டனிட்டு துதி செய்து சுவாமியைப் பார்த்துத் தேவரீரெழுந்தருளின காரியத்தை இன்னதென்று அடியேனுக்கு ஆக்கியாபிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, யமதர்மனை நோக்கி வாராய் தர்மராஜனே! எனது குருவாகிய சாந்தீப முனியின் குமாரன் பூர்வத்தில் தன் கர்ம வசத்தால் மரணத்தை யடைந்திருந்தாலும் என்னுடைய அருளால் பிழைத்திருப்பான். அவனைச் சீக்கிரத்தில் கொண்டு வரவேண்டுமென்று ஆக்யாபித்தனர். அந்தக்ஷணம் யமதருமனும் அந்தப்புத்திரனை யழைத்து வந்து சுவாமியினுடைய சமீபத்தில் விட்டனன். அவனையும் இரதத்திலேற்றிக் கொண்டுவந்து சாந்தீப முனியின் அருகிற் சென்று பிரதக்ஷணஞ் செய்து நமஸ்கரித்து கைகூப்பி உமது கிருபையால் பிரபாக தீர்த்தத்தில் இறந்துபோன குமாரனைக் கொண்டுவந்தோம். அங்கீகரிக்கவேண்டுமென்று குருதக்ஷணையாகக் கொடுத்து இன்னமும் வேண்டியதைக் கேளுமென்ன, இறந்துபோன எனது புத்திரனைக் கொண்டுவந்து கொடுத்ததே போதுமானதென்று சந்தோஷித்து உங்களுக்குக் கீர்த்தியும் நன்மையும் ஆரோக்கியமும் மென்மேலுமுண்டாகக் கடவதென்று அனுக்கிரகித்து, இனி உங்கள் கிருகத்திற்குப் போகலாமென்று குரு விடைகொடுக்க, அவரது உத்தரவின்படி மதுரைக்கு மீளும் வர புத்ரர்களை ஜனங்கள் வெகு ஆரவாரத்தோடு வரவேற்றனர்.



## நாற்பத்தி ஆறுவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமக்கு அந்தரங்க பக்தரான உத்தவரை கோகுலத்திற்கு அனுப்பி நந்தகோபர் முதலிய கோபாலர்களையும் யசோதை முதலிய கோபிகைகளையும் சமாதானஞ் செய்தது சொல்லப்படுகிறது.*

வாராய் பரிக்ஷித்து மஹாராஜனே! இல்லற வாழ்க்கையை விட்டு தம்மிடத்தில் அன்பு செலுத்துகிறவர்களுடைய யோக க்ஷேமத்தை வகிப்பதே சுபாவமாகவுடைய ஸ்ரீ கிருஷ்ணர் கோகுலத்திலிருக்கிற நந்தகோபரிடத்திலும், யசோதாப் பிராட்டியாரிடத்திலும் இல்வாழ்க்கையை விட்டு தம்மிடத்தில் பரதேவதா பக்தி பண்ணுவிட்டாலும் பர்த்தாவென்கிற புத்தியால் சர்வகாலமுந் தியானித்துக்கொண்டிருக்கின்ற கோபிகளிடத்திலும் அன்பு கூர்ந்து, அவர்களுக்குச் சந்தோஷம் வரும்படியாய்ச் சமாதானஞ் சொல்லி அனுப்பவேண்டுமென்று கருதி, யாதவர்களுக்கெல்லாம் சிறந்தவராயும் பிரகஸ்பதிக்கு சிஷ்யனுயும் புத்திமான்களுக்குள் சிரேஷ்டராயும் தமக்கு மந்திரியாயும், அந்தரங்க தோழனுயு மிருக்கின்ற உத்தவரை ஏகாந்தத்தில் அழைத்துக்கொண்டு போய், புன்னகையுடனுங் கொஞ்சம் சங்கோசத்துடனும் அவரைப் பார்த்து அருளிச்செய்கின்றனர்.

கேளும் உத்தவரே! நீர் கோகுலத்திற்குச் சென்று என்தாய் தந்தையர்களையும் நம்மை விட்டுப்பிரிந்து கிலேசப்படுகிற கோபஸ்திரீகளையும் நான் இன்னங் கொஞ்ச நாளிலே வருகிறேனென்று சொன்னதாய்த் தேறுதல்கள் சொல்லி வரவேண்டுமென்று ஆக்யாபித்தனர். ஸ்ரீ பகவானுடைய கருத்தை யுணர்ந்த உத்தவர் பிரயாண சித்தராய்த் தேரின் மீதேறிக்கொண்டு சூரியாஸ்தமான காலத்தில் கோகுலத்தை யடைந்தார்.

உத்தவருடைய வருகையை யுணர்ந்த நந்தகோபர் மிகவும் சந்தோஷத்தோடே எதிர்கொண்டுவந்து ஸ்ரீ கிருஷ்ண தூதனென்று தெரிந்து ஆலிங்கனஞ்செய்து கிருகத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் அவரை ஸ்ரீ கிருஷ்ணனுகப் பாவனைபண்ணி சகலவித பூஜைகளுஞ் செய்து மிகவும் பரிசுத்தமான போசனங்களினுலே திருப்தி செய்வித்து கந்த புஷ்பங்களினுல் அலங்கரித்து அந்த உத்தவரைப் பார்த்து நந்தகோபர் சொல்லுகிருர்.

வாரீர் தோஷரகிதராயும் பாகவதோத்தம ராகியுமிருக் கிற உத்தவரே! எனக்குத் தோழராகியும் சூர்ய குலோத்துங்க ராகியுமிருக்கிற வசுதேவர் பந்தனத்தில் நின்றும் விடுபட்டு புத்திரர்களோடே சுகமாக வசிக்கின்றாரா? மகா பாவியான கம்சன் தான் செய்த பாபவசத்தினால் மரணமடைந்தா னல்லவா? ஸ்ரீ கிருஷ்ணர் யசோதையையும் என்னையும் மற்ற கோபாலர்களையும், இந்தக் கோகுலத்தையும், பசுக்களையும் இன்னும் மற்றுமுள்ளவைகளையும், பிருந்தாவனத்தையும் கோவர்த்தன பர்வதத்தையும், எப்போதாகிலும் நினைத்தாரா? எங்களைப் பார்க்கிறதற்காக இன்ன மொருதரம் இவ்விடத் திற்கு எழுந்தருள்வாரா? அப்போதாகிலும் நாங்களந்த சுவாமியை கண்ணாற் பார்ப்போமா? தவாக்கினியால் வந்த இடறிலும், பெருங்காற்றினா லுண்டான உபத்திரவங்களி லும், இந்திரனால் நேர்ந்த ஆபத்திலும், நாங்கள் மரண மடைந்தே யிருப்போம். அப்படிப்பட்ட சமயங்களில் இடை யூறு வராமல் எங்களை இரக்ஷித்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித் திரங்களையும் புன்னகையுடன் கூடிய முகாம்புஜத்தையும் சர்வகாலமும் நினைத்துக் கொண்டிருக்கின்ற எங்களுக்கு அந்த சுவாமி விளையாடின பூமியில் திருவடிகளழுந்தி யிருப் பதையும் பார்க்கிறபோது மெய் மறந்து அந்தச் சுவாமியி னிடத்திலேயே மனது லயித்துப்போகின்றன. ஒப்பில்லாத சரித்திரங்களை யுடையவர்களான ஸ்ரீ ராம கிருஷ்ணர்கள் அந்த மதுராபுரிக்குபோய் அவ்விடத்தில் பதினாயிரம் யானை பலமுள்ள கம்சனையும் மஹா பலசாலிகளான மல்லர்களையும் குவலயா பீடமென்கிற கஜத்தையும் பின்னும் அநேக இராக்கதரையும் சங்கரித்து கம்சனால் பூஜிக்கப்பட்டிருந்த வில்லையும் முறித்துப் போட்டார்கள்.

இப்படிப்பட்ட ஆச்சரியமான காரியங்களை விளையாட் டாக செய்து முடிக்கும் அத் தெய்வபுத்ரர்கள் கற்காசாரியர் சொன்ன வண்ணம் சர்வேஸ்வரர்களென்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லையென்று உத்தவரைப்பார்த்து சொல்லி, அந்த சுவாமியினிடத்தில் மிகவும் அன்பு செலுத்தினவ ராகை யால் அவரை விட்டுப் பிரிந்திருக்கிறோமே யென்று விபசன முற்று சோகமேலிட்டு வாய்விட்டு அழுகின்ற நந்தகோப ருடன் யசோதா பிராட்டியாரும் மிகவும் துக்காக்கிராந்தை யாய் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சரித்திரங்களை நினைத்துக் கொண்டு கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகவிட்டழுதனள். இவைகளைப் பார்த்த உத்தவர் மனம் சகிக்கமாட்டாமல் தாமுங்கொஞ்சம் விபசனமுற்று கிருஷ்ணசுவாமி யருளிச்

செய்த சமாதான வார்த்தைகளை அவர்களது சோகந் தீரும்படி உரைக்கலுற்றார்:

மகா புண்ணியசாலிகளான நந்தகோபரே! யசோதை யம்மையே! எண்ணில்லாத நற்குணங்களையுடையீர் பிறர் துக்கித்தால் தேறுதல் சொல்ல வல்லவர்களான நீங்களே யிப்படி துயரப்படலாமோ? பூமிக்குப் பாரமாயிருக்கின்ற அசுரர்களில் சிலர் தேவர்களால் சாதலில்லாமல் வரம் பெற்றிருப்பதால் அவர்களைச் சங்கரிக்கவேண்டி ஸ்ரீமந் நாராயணனே வசுதேவ தேவகீயினிடத்தில் மனிதராக அவதரித்து நீங்கள் தாழ்ந்த ஜாதியாயிருந்தாலும் பூர்வஞ்செய்த அருந்தவப்பேற்றால் உங்களிடத்தில் வாசஞ்செய்தனர். அதுவும்போதாமல் இப்பவுஞ் சுருதிகளாலும் உபநிஷத்துக்களாலுந் தேடிக் கண்டுபிடிக்கக்கூடாத ஜகதீசனிடத்தி லிடைவிடாமல் பக்தி செலுத்துகிறபடியால் உங்களுக் கினிமேல் சம்பாதிக்கவேண்டிய புருஷார்த்தம் ஒன்றுமில்லை. சமஸ்த பிராணிகளுடைய இருதயங்களில் வாசஞ் செய்கின்ற சர்வாந்தரியாமி யாகையால் உங்களுடைய கிலேசங்களையு முணர்ந்து அவர் சீக்கிரத்திலேயே வருவார். நந்தகோபரே! சமஸ்த பிராணிகளுடைய இருதயத்தில் வாசஞ்செய்கிறது நிஜமானால் எல்லாருக்கும் சமமாகப் பிரத்தியக்ஷ மாகலாமே யென்றால் தீக்கடைக்கோலில் எப்பொழுதும் அக்கினி யிருந்தும் கடைந்தாலன்றி உதவமாட்டாததுபோல ஸ்ரீ பகவானும் தியானஞ் செய்தாலன்றி பிரத்தியக்ஷமாகமாட்டார்.

அப்படிப்பட்ட சுவாமியானவர் வேதங்களாலும் பிரமன் முதலிய தேவர்களாலும் அறியவொண்ணாத மகிமையை யுடையவராகையால் தம்முடைய பக்தர்களான ஜனங்களெல்லாம் எப்படி அறிந்து கடைத்தேறப் போகிறார்களென்று திருவுள்ளங்கொண்டு மச்சாவதார முதல் இந்த ஸ்ரீ கிருஷ்ணாவதாரம் வரையிலே யெடுத்த அவதாரமும் கர்மமும் நாமமும் ரூபமும் இவைகளெல்லாம் லீலார்த்தமாகக் கிரகித்து துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்தனர். அப்படிப்பட்ட ஈஸ்வரன் உம்முடைய கிருகத்தில் புத்திராக வந்திருந்ததினாலே மகிமையுள்ள பாமமித்திரான ஸ்ரீ கிருஷ்ணர் உம்மைப் பார்க்கிறதற்காகச் சீக்கிரமாக இந்தக் கோகுலத்திற் கெழுந்தருளப் போகிறாரென்று உத்தவர் நந்தகோபருக்கும் யசோதா பிராட்டியாருக்கும் சமாதானஞ்சொல்லித் தேற்றி அன்றிரவைப் போக்கி மறுநாளுதயமாவதற்கு முன்னம் பரம பாகவதோத்தமர்களான கோபகன்னிகைகளெழுந்திருந்து கைத்தீபங்கொண்டு தங்கள் கிருகங்கள் தோறும்

கோமய ஜலங்களினாலே சுத்திசெய்து மொக்கு முதலியவை களால் அலங்கரித்து தீபங்களைச் சமீபத்தில் வைத்துக் கொண்டு தயிர் கடைய அப்போது தீபவொளியினால் பிரகாச முள்ள நவரத்தினங்களாற் செய்த குண்டலங்களும் கைகளி லணிந்திருக்கிற கடகங்களுமசைய தலையிற் சூடிய புஷ்பங் களவிழ மிகவும் பருத்திருக்கிற கொங்கைகள் குலுங்க மார்பி லணிந்திருக்கிற முத்துச் சரங்கள் சிக்குப்பட உத்தரீயங்கள் ஊசலாட இரண்டு கன்னங்களிலும் சிறுமுத்துபோல வியர் வை யுண்டாக ஆரவிந்த லோசனரான ஸ்ரீ கிருஷ்ண பகவா னுடைய பரம விசித்திரமான கீர்த்தியைக் கானஞ்செய்கிற ஸ்வரமுந் தயிர்கடைகிற தொனியும் உத்தவரின் செவிகளில் புக மனமகிழ்ச்சிகொண்டு பொழுது விடிந்ததும் காலையிற் செய்யவேண்டிய நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு மிக வும் உயர்ந்ததாகியும் சூரியனை நிகர்த்த காந்தியுடனுமிருக் கிற இரதத்தின்மீது வருகிறபோது அதைக் கண்ட சில கோப கன்னிகாமணிகள் இந்த இரதம் எவருடையதோ வென்று சங்கையுற்று பலவிதமாக பேசிக்கொண்டார்கள்.



## நாற்பத்தி ஏழாவது அத்தியாயம்



*உத்தவர் கோபிகைகளைக் கண்டு அங்கு சிலநாள் தங்கி பகவத் தத்வார்த் தங்களை போதித்து, விடைப்பெற்று, கோகுலத்தாருடைய குசல சமாச்சாரங்களை ஸ்ரீ பகவானுக்கு விண்ணப்பம் செய்தா ரென்பதை சொல்லப்படுகின்றது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் மஹாராஜனே கேளும்! உத்தவர் சர்வாலங்கார பூஷிதராய் புறப்பட்டு சமீபத்தில் ஒரு குளிர்ந்த சோலையை நோக்கி யெழுந்தருளுகின்றதை அந்த ஸ்ரீ கோகுலத்தி லுள்ள புண்ணியாங்கனைகளாகிய ஸ்ரீ கோபிகா ஜனங்கள் யாவருங்கண்டு அதிசந்தோஷ மானஸர்களாய் வாருங்கள் சுபாங்கனைகளே! இந்த மகா புருஷசிரேஷ்டரானவர் நமது ஸ்ரீ கண்ணபிரானாகிய ஸ்ரீ அச்சுதருக்குச் சமானமான திவ்ய சுந்தர ஸ்வரூபத்தையுந் திவ்ய பூஷணாதி பீதாம்பரங்களை யுடையவராயும் மிகவுஞ் சௌமியராயும் தீரோத்தமராயுந் தோன்றுகின்றார். மேலும் இந்தத் தந்நியருடைய அனுஷ் டான நடக்கைகளை யோசிக்குமளவில் ஸ்ரீ பகவானுக்கு மிகுந்த ஆப்தராயும் பிரியராயும் ஸ்ரீ கிருஷ்ண பாதாரவிந்தங் களை ஆஸ்ரயமாக வுடையவராயுந் தோற்றுகின்றார் என்று

பலவாருகப் பேசிக்கொண்டு ஸ்ரீ உத்தவருடைய சமீபத்திற்கு வந்து சிரத்தா பக்தி வினய உபசாரங்களைச் செய்து நன்ருக அர்ச்சித்துத் தண்டனிட்டு அவருடைய மாதுரிய வசனங்களாலே அவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு மிகவும் ஆப்த ஸ்நேகிதரென்றும் அவரானுக்ஞையினுலெழுந்தருளின புருஷாகார ஸ்வரூப மஹானுபாவரென்றுந் தங்கள் மனதுகளங்கமறத்தெளிய வறிந்துகொண்டு அவருடைய விலக்ஷண ஸ்வரூப நாமதேயத்தையும் நன்ருக விசாரித்துக்கொண்டு ஸ்ரீ கோபிகா ஜனங்கள் யாவருங் ஸ்ரீ கிருஷ்ணகுண தத்வமானவர்களாய் இள நகையாக நகைத்துக்கொண்டு மிகுந்த லச்சையுடன் தங்களினிய மதுர வார்த்தைகளால் ஸ்ரீ உத்தவரைப் பார்த்து சொல்லுகிருர்கள்.

### ஸ்ரீ கோபிகாஜனங்களுடைய வாக்கியம்

மகாநுபாவராகிய ஸ்ரீ உத்தவரே! பரம புருஷராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் மஹா சுகிர்துக்களாகிய தமது தாய் தந்தையர்களைக் குறித்தாவது அவர்களுடைய க்ஷேம சுகாநந்தாதிசயங்களைத் தாமறியும்பொருட்டும் தம்முடைய குசலங்களை அந்தத்தாய் தந்தைகளறிந்து தங்கள் ஹிருதய தாபங்களாறி மனது குளிர்ந்து சுகிக்கும்பொருட்டும் ஏழைகளாகிய நாங்கள் வாசஞ்செய்கின்ற ரேபல்லேயைக் குறித்தும் இந்த ஸ்ரீ கோகுலத்திலே ஒருநாளும் பிரவேசியாத மஹாத்மாவாகிய உம்மை யனுப்பி எங்களுக்கும் புண்ணிய புருஷ தரிசனங் கிடைக்கும்படி கிருபைசெய்தனரென்று நினைக்கின்ருேம். நாங்களும் பூர்வம் ஒருக்காலும் இவ்விடத்தில் உம்மைத் தரிசனஞ் செய்ததேயில்லே. நீர் சர்வலோகப் பிரியராகிய ஸ்ரீ பகவானுக்கு ஆப்த பந்துவாகவும் அத்தியந்த பிரிய சஹாவாகவும் எங்களுக்குத் தோன்றுகின்றீர். நாங்களும் பரமகாருண்யராயும் சர்வதோஷ பரிஹார திவ்யகுண போக்தராயு மிருக்கின்ற ஸ்ரீ பகவானே எங்கள் சர்வேந்திரிய வியாபகங்களேயும் ஸமர்ப்பித்து ஆஸ்ரயித்திருந்தோம். அந்த ஸ்ரீ சர்வாஸ்ரயரான ஸ்ரீ பகவான் தம்முடைய திருவுள்ளத்தில் என்ன சங்கல்பித்திருக்கின்ருரோ எங்களுக்குத் தெரியாது. இப்போது ஸ்ரீ பகவான் மிகவும் பிரியாஸ்ரிதர்களாகிய எங்கள் விஷயத்திலே இந்தப் பிரபஞ்சத்தி லுள்ள தரும நிலேப்பிரகாரம் ஆதரித்தனரென்று எங்கள் தோஷ குணத்தினுல் நாங்கள் சிந்தித்துக் கொண்டிருக்கின்ருேம்.

ஸ்ரீ பகவான் எங்களுக்கு என்ன விசேஷ செய்தி விடுத்தனர்? பகவான் எங்களேப் பிரிந்து எங்களுக்கு மனேதாப

ஜ்வரங்களைக் கற்பித்துக் கொண்டிருப்பதும் ஒரு திவ்ய சங்கல்பந்தானோவென்று தங்கள் நேத்திரங்களில் ஆனந்த பாஷ்பங்களை வருஷித்துக்கொண்டு ஸ்ரீ பகவானுடைய திருவவதார முதல் பால்ய யௌவன கௌமார கால விசேஷங்களில் ஆஸ்ரயித்த அதிமானுஷ சேஷ்டித திவ்ய லீலா விநோதாதிசய கல்யாணகுண சரித்திரங்களையும் திவ்ய ஸ்வரூப ஸேவார்த்தங்களையும் அம்மஹாத்மாவினிடத்தில் விண்ணப்பஞ்செய்து அந்நியதா சிந்தா ஸ்மரணையில்லாதவர்களாய் ஸ்ரீ பகவானை நினைத்து நினைத்து துக்கித்துக்கொண்டிருக்கின்ற சமயத்தில் ஸ்ரீ உத்தமர் வாருங்கள் ஸ்ரீ கோபிகாஜன ரத்தினங்களே! உங்களை நான் தரிசனஞ்செய்து உங்களுடைய திவ்வியகுண பூர்த்திகளை யோசிக்குமளவில் எனக்கு மிகுந்த ஆச்சரியாநந்தகரமாயிருக்கின்றது. ஏனெனில் இவ்வுலகத்தினிடத்தில் மஹா மஹநீய மூர்த்திகளாய் அவதரித்திருக்கின்ற பரம யோகீந்திரர்களும் பரமாசாரிய குரு ஜனங்களும் ஸ்ரீ பரந்தாமனாகிய பரமாத்ம ஸ்வரூப பரப்பிரம்ஹத்தை ஆஸ்ரயித்து அனுபவிக்கத்தக்க குற்றமற்ற திவ்ய குணங்களைப் பெறுவதற்கு மிகச் சுசீல சம்பந்நர்களாய் ஜபங்களைச் செய்துந் தானவிரத ஹோமாதிகளைச் செய்தும் பஞ்சாக்கினி மத்தியில் நின்று மிக அருமையாகிய தவங்களைச் செய்தும் ஸ்வாத்தியயனாதி வேதங்களையும் மஹா புண்ணிய சாஸ்திராகம புராணாதிகளையும் அவற்றின் சாராம்ஸங்களாகிய திவ்ய ரஹஸ்ய கிரந்தங்களையும் காலக்ஷேபமாகக் குணானுபவங்கள் செய்தும் பெருந்தவர்களாய் ஸ்ரீ பகவானுடைய நிர்ஹேதுக கிருபாகடாக்ஷத்தையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

வாருங்கள் புண்ணியாங்கனைகளே! நீங்கள் ஸ்ரீ சர்வேஸ்வரராயும் அகில லோக ரக்ஷாமணியாகிய விஸ்வம்பர விஸ்வாகார விஸ்வ மூர்த்தியாயும் சர்வாந்தரியாமியாயும் விளங்கி ஆஸ்ரித விரோதி நிரஸனஞ்செய்து சகல புவனங்களையும் சாது சஜ்ஜனங்களையும் ரக்ஷிப்பதற்தாக தமது பரம காருண்யத்தால் மஹா மகிமாவதார மூர்த்தியாய்த் திருவவதரித்தருளின ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய கல்யாண குணங்களை யாஸ்ரயித்துச் சர்வ காலங்களிலும் அதி சுலபமாக அனுபவிக்கப்பெற்ற உங்கள் சுகுணாதிசயங்களைக் குறித்து உங்களுக்குத் தாஸபூதனாய் ஸ்ரீ பகவானுடைய பரமகிருபாதிசய திவ்ய சௌலப்பிய குணங்களுக்கு ஊழிதோறுந் தண்டன் சமர்ப்பிக்கிறேனென்று சொல்லி, நீங்கள் ஸ்ரீ பகவானுடைய ஸேவார்த்தங்களைக் குறித்துச் சந்தேகங்

கொண்டு வியாகுலம் அடையவேண்டுவதில்லை. ஸ்ரீ கிருஷ்ண பகவான் என்னையழைத்து உங்களிடத்திற்குப்போய் வரும்படி நியமிக்கும்போது அவருங்களைக் குறித்துக் கிருபையாகத் திருவாய்மலர்ந்தருளிய வார்த்தாமிருதங்களை கேட்டு ஆனந்தமடையுங்களென்று ஸ்ரீ க்ருஷ்ணாது வாக்யங்களை சொல்லத் தொடங்கினார்.

நீங்கள் என்னைச் சாமான்ய பிரிய நாயகனென்று ஒருக்காலும் நினைக்க வேண்டுவதில்லை. நான் உங்களுக்கு எனது பரம காருண்ணிய வியாபகாதிசயங்களை அனேகவிதமாக முன்னமே உங்கள் மனது தெளியச்சொல்லி யிருக்கின்றேன். இப்போது சாதுசஜ்ஜன யதார்த்தமாகவும் லோக தர்ம ஸ்தாபனத்திற்காகவும் திருவவதரித்த ரகஸ்யங்களினிமித்தமாக ஸ்ரீ மதுரா நகரத்தில் வந்திருக்கின்ற நான் இந்த சர்வ பிரபஞ்சங்களினுடைய சமஸ்தகாரிய காரணங்களுக்கும் பிரதான புருஷ ஸ்வரூப காரணாத்மகமா யிருக்கின்றேன். மேலும் இந்த சர்வப் பிரபஞ்சங்களிலுள்ள சராசரங்கள் நானுவிதமாக ஸ்வரூபித்து விருத்தி லயங்களை யடைவதற்கு எனது மகா மகிமாதிசய சங்கல்பத்தினு லுண்டாகிய பிரகிருதியின் காரியமாகாமல் பஞ்ச பூதங்கள் அந்தச் சராசர காயகரணங்களாய் வியாபித்திருக்கின்றதைப்போல, நானும் சர்வாத்ம வியாபகனாய்ச் சர்வ பூதங்களினுடைய மனப் பிராண புத்தீந்திரியாதிகளும் வியாபித்து அவைகளுக்கு ஆதார ஆஸ்பயனு யிருந்துகொண்டு சகலாத்துமாக்களும் எனக்குத் தேகமாவும் நான் அவைகளுக்கு ஆத்ம ஸ்வரூபனாகவும் சலியாமல் நித்தியாஸ்ரயனாய் ஸ்ரீ அச்சுதனாய் விளங்கி சர்வ சாக்ஷிபூதனாய் சர்வ சராசரங்களையும் படைத்தளித்தழித்துக் கொண்டிருக்கின்ற நான் இல்லாத விடங்களில்லை யாகையால் ஸ்ரீ நந்தவ்ரஜத்தை விட்டு தூரஸ்தனாய் பிரிந்திருக்கிறேனென்கிற பிரகிருதி காரிய மனோவிருத்திகளை என் விஷயத்தில் செலுத்தாமல் தியானமாத்திர சமீபஸ்தனாய் நினைக்கக் கடவீர்களென்றார்.

வாருங்கள் ஸ்ரீ கோகுலவாஸ புண்ணியாங்கனைகளே! இவ்வுலகத்தில் இந்திரிய சுகங்களையே நித்தியமென்றனுபவித்துக் கொண்டிருக்கின்ற சில சித்த சஞ்சலங்களையுடைய ஜனங்கள் தாங்கள் நித்திரைசெய்யும்போது கண்ட சொப்பன பதார்த்தங்களை நித்திரை தெளிந்தெழுந்தபோது பிரத்தியக்ஷமாகக்காணுமையைத் தங்கள் பிராப்தி ஈனமென்று நினையாது பொய் பொருளென்றும் அந்தச் சொப்பன பதார்த்தத்தைத் போல இவ்வுலகத்தையும் பொய்யென்று விபரீத கியானத்

தால் நினைத்துக் கொண்டிருக்கின்றார்கள். அதுவுமெனது மாயாசங்கல்பமென நினையுங்கள். நீங்களப்படி நினைக்கவேண்டுவதில்லை. சகலேந்திரிய விஷய வியாபாரங்களை நிக்கிரகித்து விட்டுப் பரிசுத்தர்களாகிய பரம யோகீந்திரர்களுடைய யோக மார்க்க துல்லிய மானசீகங்களில் இவ்வுலகத்தினது விருத்தி லயாத்மகமான விசித்ராதிசயங்கள் முன்னதாகத் தோன்றிப் பின்பு அந்தந்தக் கால லக்ஷணத்துக் கேற்றபடி பிரத்தியக்ஷமாகத் தோன்றிக் கொண்டிருப்பதுபோல என்னையும் எனது சர்வ வியாபகங்களுக் குரியனவாயென்னை ஆஸ்ரயித்துக் கொண்டிருக்கின்ற சகல சேதனா சேதனாத்மகமாக பிரபஞ்சங்கள் சிருஷ்டி ஸ்திதி லயாத்மகமாக விளங்கிக் கொண்டிருப்பினும் பிரவாகரூபம்போல நித்தியமென்றே அவைகளையும் நீங்கள் நினைக்கக்கடவீர்கள். இவ்வுலகத்திற்கும் எவ்வுலகத்திற்கும் நான் தூரஸ்தனல்ல ஞைகயால் உங்களை விட்டுப் பிரிந்தவனாக என்னை நீங்கள் நினைக்கவேண்டுவதேயில்லை என்றார்.

வாருங்கள் ஸ்ரீ பத்மநாபருடைய பாத சேவையில் நிகரில்லாத புண்யவதிகளே! இந்தப் பிரபஞ்சத்தில் உலக உபகாரார்த்தமாக எனது திவ்ய சங்கல்பத்தினால் மேகங்களானவை வருஷிக்க அவ்வருஷ ஜலங்களைக் கொண்ட நதிநதங்களானவை அங்கங்கு உலகத்தவர்களுக்கு வேண்டியவரைக்கும் ஜலப்பிரவாகத்தைத் தந்து பாய்ந்தோடி மகா ஜலதியை ஆஸ்ரயித்து வந்தடைவதைப்போல மகா யோகீந்திரர்கள் தங்கள் இருதயங்களை இயம-நியமாதி-சத்திய தபோ தருமங்களிடத்தில் சலியாமல் நிருத்தி மனோ பரிசுத்தர்களாகியும் நிகில லோகோபகாரர்களாயும் விளங்கி நிரபேக்ஷா பரிசுத்த மானசர்களாய் என்னொருவனையே தியானித்து என்னையே யடைகின்றார்க ளாகையால், நீங்களும் அவர்களைப்போல எனது பாதாரவிந்தத் தியான மானஸ பரிசுத்த இருதயர்களாய் மனக்குறை யற்று உங்கள் பக்தி யோக தர்மத்தை விருத்திசெய்து என்னையே யடையக் கடவீர்களென்றார். வாருங்கள் ஸ்ரீ ஜனார்த்தனருடைய திவ்ய குணானுபவாதிசயப் பிரியாங்கனைகளே! இவ்வுலகத்திற்கு மங்கள தீபங்கள் போன்ற நல்ல உத்தம ஸ்திரீகளானவர்கள் தேசாந்தரகதரான தங்கள் நாயகனிடத்தில் தங்கள் இருதயங்களைச் செலுத்தித் தியானித்துக்கொண்டிருப்பார்கள் அல்லவா? அவர்களைப் போல நீங்களும் என்னையே தியானிக்கும்பொருட்டும் உங்களைப் போலொத்த சில ஆஸ்ரித ஜனங்களை ரக்ஷிக்கும் பொருட்டும் ஸ்ரீ மதுரா நகரத்திற்கு வந்தேனே யல்லது

வேறன்று. ஆகையால் உங்களுக்கு நான் தூரமாயிருக்கிறே னென்று நினையாமல் உங்களுடைய நித்திய தியான பரிசுத்த மானஸங்களினால் என்னையே யடையக் கடவீர்களென்றார்.

பரிக்ஷித்து மஹா ராஜனே! பாகவதோத்தமராகிய ஸ்ரீ உத்தவர் மஹா புண்ணியவதிகளாகிய ஸ்ரீ கோபிகா ஜனங்களைப் பார்த்து ஸ்ரீ பகவானானவர் நியமித்தபடிக்கு ஸ்ரீ பகவத் வாக்கியங்கள் யாவற்றையும் சம்பூர்ணமாக அந்த ஸ்ரீ கோபிகா ஜனங்களுக்குச் செவிகுளிர்ந்து மன முருக ஸ்ரீ பகவானே எதிர் முகமாக நின்று திருவாய்மலர்ந் தருளியதாகச் சொன்ன மாத்திரத்தில் அவர்களும் ஸ்ரீ பகவா னுடைய வார்த்தாமிர்தத்தினால் ஸ்ரீ கிருஷ்ணப் பிரம்ஹா னந்த பாவச மானவர்களாய்ச் சந்தோஷித்துச் சர்வலோகங் களும் தரிசனமாத்திரத்தில் மோகிக்கும்படியான ஸ்ரீ புரு ஷோத்தமருடைய அதிரூப சவுந்தரிய திவ்ய மங்கள ஸ்வ ரூபத்தைக் கண்ணாரக் கண்டு நானுவித சுகாநந்தங்களை நெடு நாளனுபவித்தவர்க ளாகையால் இந்த ஸ்ரீ உத்தவரைப் பார்த்து மேலும் சில வார்த்தைகள் சொல்லுகின்றார்கள்.

எங்கள் மனம் களிக்கும்படி ஸ்ரீ பகவத் வாக்கியங்களை எடுத்துரைத்த ஸ்ரீ உத்தவரே! சர்வலோக நாதராகிய ஸ்ரீ ஹரியானவர் ஸ்ரீ மதுரா நகரத்தில் ஷேமமாயிருக் கின்றாரா? இவ்விடத்திற்கு எப்போது தாம் விஜயஞ் செய்யச் சங்கல்பித்திருக்கின்றார்! தாம் பரமகாருண்யராகையால் ஒரு வேளை ஸ்ரீ கோகுலத்தைக் குறித்து எழுந்தருள வேண்டு மென்று வருகின்ற சமயத்தில் அவ்விடத்திலுள்ள நிஜாஸ் ரித ஜனங்களும் நகர ஸ்திரீ ஜனங்களும் ஸகித்துத் தடுக் காமலிருப்பார்களோ? நாங்கள் இனி யென்ன செய்யப் போகின்றோம். ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குச் சமர்ப்பித்த எங் கள் மனது வேறு பதார்த்தங்களில் நிற்கவில்லையே! ஸ்ரீ பக வானாகிய பிர்மதேவன் தயா ஈனனாய் எங்களை இவ்வுலகத் தில் ஜன்மிக்கச்செய்து ஸ்ரீ பகவானைப் பிரிந்திருக்கச் செய் தது என்ன தருமமோ? வென்று விதியை வெறுத்து துக்கித் துக்கொண்டு முறையிட்டார்கள். இப்படிப் பலபலவாக ஸ்ரீ பகவானைப் பிரிந்திருக்க முடியாமல் நாள்தோறும் அனு பவிக்கு மனோவியாகூலங்களை ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு விதமாக எடுத்துக்கூறி வருந்தி பின்னும் சொல்லுகிறார்கள்.

ஏழைகளாகிய எங்கள்மீது கிருபைசெய்து ஸ்ரீ பகவா னானவர் இந்த ஸ்ரீ கோகுலத்திற்குச் சீக்கிரமாக எழுந்தருளி எங்கள் யாவரையும் கடாக்ஷித்து ரக்ஷிக்கும்படி நீர் புருஷோ

காரஞ் செய்யவேண்டும். எங்களாப்த பந்துவாயும் எங்கள் பிராணேசராயும் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீ கோபால பாலகிருஷ்ண சுவாமியானவர் எங்களை இரக்ஷிக்கும் பொருட்டுச் சீக்கிரமா யெழுந்தருளாவிடின் எங்கள் சரீரங்கள் இவ்வுலகத்தின்கண் நிற்பதரிதென்று தாங்கள் அன்புகூர்ந்து விண்ணப்பஞ் செய்யுங்கள். எங்கள் சரீரங்கள் நசிப்பதற்கு முன் மனோதைரியங்க ளழிந்து விடுமென்றும், அம் மனோதைரியங்க ளழிவதற்கு முன் எங்கள் சித்தங்கள் இளைத்துத் தத்தளித்துத் தபித்து விடுமென்றும், அச்சித்தங்கள் தபித்து விடுவதற்கு முன் எங்கள் பிராணன் பிரிந்துபோய் விடுமென்றும் சொல்லக்கடவீர். அப்படி எங்கள் பிராணனொழிந்த பின்பு சர்வப் பிராணி சம்ரக்ஷகராகிய எங்கள் பிராண விபுவானவர் இவ்விடத்தில் எழுந்தருளுவாராகில் இவ்வுலகத்திலுள்ள மற்றப் பிராணிகள் யாவரும் இந்த ஸ்ரீ பகவானை நிர்த்தயரென்று நிந்திப்பார்களென்பதற்குச் சந்தேகமிராது. அப்போது அவர்களுக் கிவர் என்ன சமாதானஞ் சொல்லியருளுவர், ஆகையால் சீக்கிரமாக எழுந்தருளி ஆர்த்த போஷகராய் இரக்ஷிக்கும்படி எங்கள் விண்ணப்ப வார்த்தைகளைச் சொல்லி அழைத்து வரவேண்டியதென்றும் பிரார்த்தித்தார்கள்.

ஸ்ரீ உத்தவரானவர் ஸ்ரீ கோபிகாஜன இருதயானுபவத்திற்கு ஆச்சரியாநந்த குதூஹலத்தை யடைந்து அந்த ஸ்ரீ நந்தவிரஜத்தில் சிலநாள் வாசஞ்செய்து கொண்டிருந்து தாமும் அந்த ஸ்ரீ கோபிகா ஜனங்களுடைய ஸ்ரீ பகவத்தியான நிஷ்டாதிசயங்களை ஆஸ்ரயித்து அவர்களுக்கு வேத வேதாந்தார்த்த கௌரவங்களினால் ஸ்ரீ கிருஷ்ண குண லீலா வர்ணனைகளைக் குணானுபவஞ்செய்து விசேஷ ரஹசியார்த்தங்களையும் போதித்து அவர்கள் மனது ஒருவாறு திருப்தி யடைந்தபின்பு அந்த ஸ்ரீ கோபிகா ஜனங்களிடத்திலும் ஸ்ரீ நந்தகோபர் முதலிய கோபாலர்களிடத்திலும் ஸ்ரீ யசோதாபிராட்டி முதலியவர்களிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு அவர்கள் சமர்ப்பித்த காணிக்கைகளை அங்கீகரித்துத் திவ்ய ரதாரோஹணஞ்செய்து ஸ்ரீ பகவானைத் தியானித்துக்கொண்டே ஸ்ரீ மதுராபுரியிற் பிரவேசித்துச் சர்வலோக சமஸ்தஜன பாபஹாரியாயும் ஸ்ரீ மதுரா நகர விஹாரியாயும் சர்வ சத்துருஜன்ம தாபஹாரியாயும் விளங்குகின்ற ஸ்ரீ சௌரியாகிய ஸ்ரீ கிருஷ்ண ஸ்வரூபாநந்த ஹரியைத் தரிசனஞ்செய்த மாத்திரத்தில் யதோசித தேவோபசாரங்களைச் செய்து சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து

ஸ்ரீ நந்தகோபர் முதலிய பக்த ஜனங்கள் சமர்ப்பித்த காணிக்கைகளை ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திக ளிருவருக்கும் சமர்ப்பித்துவிட்டு உக்கிரசேன மஹா ராஜருக்குக் கொடுத்த காணிக்கைகளை அவரிடத்திலே சமர்ப்பித்து ஸ்ரீ பகவானால் ஆதரிக்கப்பட்டுச் சந்தோஷசித்தராய் எழுந்தருளியிருந்தார்.



## நாற்பத்தி எட்டாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய க்ருபையினால் சௌந்தர்ய ரூபத்தை அடைந்த குப்ஜையினுடைய கிருகத்திற்கு எழுந்தளியதும் ஸ்ரீ அக்ரூரரது திருமாளிகைக்கும் எழுந்தருளி அக்ரூரரை அஸ்தினபுரத்திற் கனுப்பியதும் சொல்லப்படுகிறது.*

வாராய் பரிக்ஷித்து மஹா ராஜனே! ஸ்ரீ பகவான் பூர்வம் இந்த ஸ்ரீ மதுரா நகரத்தில் பிரவேசித்தபோது தமக்கு பரிமள திரவியங்களைத் தந்து சந்தோஷிப்பித்துத் திவ்ய சுந்தர ஸ்வரூபத்தை யடைந்த சைரந்திரி ஸ்திரீயாகிய அந்த குப்ஜைக்குத் தாமருளிய வார்த்தையை கடவாமல் தாம் சர்வக்ஞமூர்த்தி யாகையால் அவள் இருதயத்தை யறிந்து அதற்குத் தகுந்தபடி ஜகன்மோகன சுந்தராகார ஸ்வரூபத்தை வகித்து ஸ்ரீ உத்தவரை அழைத்துக்கொண்டு திவ்ய பரிமளத்தைத் தரா நின்ற தூபதீபாதிகளாலும், பூர்ண கும்பங்களாலும், நானாவித திவ்ய புஷ்பமாலைகளாலும், அநந்த விசித்ர ஸ்வரூப காம கேளி விலாச பிம்பங்களாலும், அங்கங்கு நிலைக்கண்ணாடிகளாலும், உல்லாசமாய் வாசஞ் செய்யு மிடந்தோறும் குளிர்ந்த சந்திர காந்த மேடைகளாலும் வீற்றிருப்பதற்குத் தகுந்த ஆஸனங்களாலும் ஊஞ்சல்களாலும் சப்பிரகூட மஞ்சங்களாலும் அலங்கரிக்கப்பட்டு ஸ்ரீ கிருஷ்ணபகவான் எப்போதெழுந்தருளுவரோ வென்று பிரார்த்தித்து எதிர் பார்த்துக் கொண்டிருக்கின்ற கூனியினுடைய சித்திர விசித்திரமாகச் சுவர்ன ரத்தின கசித மங்கலமாகிய கிருகத்தைக் குறித்து எழுந்தருளினர்.

அந்தத் தருணத்தில் அந்தத் திவ்ய மோகன சுந்தராவதியானவள் அவ்விசித்திர மோஹனாகார சுந்தர கிருகத்தில் திவ்ய தேஜோமய மன்மதனுக்கு ஒருமங்கல தீபம்போலவும் அம்பரத்தில் மின்னுகின்ற ஒரு மின்னற்கொடி போலவும் சர்வ ஜகன்மோகினி தேவதையைப்போலவும் விளங்கி ஒரு பொன்னுஞ்சலில் ஊசலாடிக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண கீர்த்த

னங்களைச் சகிகள் பாடக்கேட்டு ஆநந்தித்துக் கொண்டிருந்தாள். ஸ்ரீ பகவான் ஸ்ரீ உத்தவ ஸகிதராய் அந்தச் சுந்தா கிருகத்தில் நுழைந்தமாத்திரத்தில் அந்தச் சுந்தாவதி மேகத்தின் வரவைக் கண்ட நீண்ட கலாப மயிலைப்போல மஹா சம்பிரமவானந்த குதூஹலத்தை யடைந்தவளாய் அப்பொன்னூசலைப் பொருக்கென விட்டிழிந்து திவ்யாபரண பூஷிதைகளான அநந்தமான சுந்தா சகிஜனங்கள் தன்னைச் சூழ்ந்துவர ஒரு பூங்கொம்பானது நடை கற்பதுபோல எதிர்கொண்டு நடந்துவந்து நாஞவித திவ்யோபசாரங்களைச் செய்து சுவர்னமணிமய சுந்தராகார திவ்ய பஞ்ச சயனத்தையுடைய ரத்தினமய திவ்ய மஞ்சத்தில் ஸ்ரீ பகவானை எழுந்தருளச் செய்துவிட்டு மஹாத்மாவாகிய ஸ்ரீ உத்தவரை ஒரு திவ்ய மணிமயாசனத்தில் சுகாசீனராய் வீற்றிருக்கச்செய்து அர்க்கிய பாத்தியாதி விநய விதேய உபசாரங்களால் பக்தியாகப் பூசித்து அவரிடத்தி லனுக்ஞை பெற்றுக்கொண்டு அந்தத் திவ்ய புண்ணிய தாசியானவள் தாசீ ஜனங்கள் தனக்கு விகிதோபசாரங்களைச் செய்து பணிமாற மங்கல ஸ்நானஞ் செய்து சுவர்ன வஸ்திரத்தையும் நாஞவித திவ்யாபரணங்களையும் எடுத்து அலங்கரித்துக்கொண்டு லலாடத்தினிடத்தில் கஸ்தூரி திலகந் தீட்டித் தனது திவ்ய மேனியில் மிகவும் பரிமளங்களை வீசா நின்ற கஸ்தூரி-புனுகு-ஜவ்வாது முதலிய ஸ்ரீ சந்தனங்களை அணிந்து திவ்ய சுகந்த கதம்பப் புஷ்ப மாலைகளை அளகபாரத்தில் சூடிக்கொண்டு ஸ்ரீ பகவானுக்குப் பொற்ரும்பாளங்களில் நாஞவித திவ்ய ரச பூபங்களையும் மஹா ருசிவர்க்கங்களாகிய பக்குவ பல லட்டுகங்களையும் அமைத்து ஏந்திக் கொண்டு வந்து ஸ்ரீ பகவானெழுந்தருளி யிருக்கின்ற திவ்ய அறைவீட்டில் வைத்து திவ்ய கந்த புஷ்ப மாலிகாபரணங்களால் அவரை அலங்கரித்துத் தேவோபசாரங்களைச் செய்து ஏகாந்தத்தில் கர்ப்பூர தாம்பூலாதிகளை மடித்துக் கொடுத்து உடனே ஸ்ரீ கிருஷ்ணசரித கர்ணுமிர்த கீர்த்தனங்களை வீணுதிகளாற் பாடி ஸ்ரீ பகவானுடைய திவ்ய மோகன ஸ்வரூப சுந்தராகார அவயவாதிசயங்களைக் கண்டு அடிக்கடி ஆச்சரியமாக ஸேவித்து மிகுந்த சரச வசனங்களைப் பேசி லஜ்ஜை யுடையவளாய் அருகில் நின்று ஸ்வாமி திருவடித் தாமரைகளைத் தனது காரார விந்தங்களினுல் வருடித் திவ்ய விசிறியினுல் மெல்லிய காற்று வரும்படி வீசி உபசரித்தாள்.

அவரனுக்ஞைக்குக் காத்திருந்த இந்தத் தன்னியவதியாகிய சைரந்திரியைச் சதுர்வித புருஷார்த்தங்களையும்

தன்னைச் சரணாகதஞ் செய்கின்றவர்களுக்குத் தயைசெய்கின்ற ஸ்ரீ பகவானானவர் கடாக்ஷித்து இவள் மனோரத மீடேறும் படிச் சவுஜ்ஞையினால் மஞ்சத்தி லிருக்கச்செய்து மதன கேளி விலாசா கிரமாலங்காரத்தோடு அந்த திவ்ய தாசியினுடைய இருதய புண்ணிய பலானுபவமாக ஸ்வரூபித்துக் கடாலிங்க ஞாதி சேஷ்டித சம்பாவித விசேஷங்களால் அந்தப் புண்ணிய ஸ்திரீயினுடைய இருதயமானது பரம விலாஸ மதனோ வுல்லாஸ விசித்திர விப்பிராநந்த லீலைகளால் கிரீடித்தனர். ஸ்ரீ பகவான் மதனகளா சாஸ்திரோக்த கிரமமாக அந்தத் திவ்ய தாசீ ரத்தினத்தினுடைய ஜாதி லக்ஷணத்தையும் அவள் பருவத்திற்குத் தகுந்த காலக்கிரமத்தையும் அவள் காமகளா பாகத்துக்குத் தகுந்த லீலா ரதி விசேஷங்களையும் அக்கால தேசத்திற்குரிய சேஷ்டிதங்களையும் அவளுடைய தாதுவிருத்திக்கும் வயதினளவிற்கும் குணங்களின் கௌரவத் திற்கும் மன முதலிய இந்திரியங்களின் சஞ்சலமான குறி களுக்கும் அவள் இருதய நிதானத்திற்கும் தகுந்தபடி ஸ்ரீ சர்வஜ்ஞ மூர்த்தியாகையால் அவள் அவாவினளவை யறிந்து நானாவித திவ்யாதிசயங்களான அதிமானுஷ சேஷ்டிதங்களால் மதன லீலா விசித்திர கிரீடாதி ரதிபோக சுகாநந்தங்களைத் தந்து சம்பூர்ணமான மனோரத திருப்தி அடைவித்தார்.

அந்தச் சைரந்திரியுந் தனக்கு வெகுகாலமா யுண்டா யிருந்த ஸ்ரீ கிருஷ்ண ஸ்வரூப லாவண்ணியாதிசயங்களில் மோகித்திருந்த மோஹ தாப ஜ்வரானலங்க ளாறும்படித் தனது இரண்டு கராப்ஜங்களாலுந் தழுவி ஸ்ரீ பகவானைக் கடாலிங்கனஞ்செய்து அத்திவ்ய திருமேனி ஸ்பரிசத்தினால் தனது அநந்த ஜன்மார்ஜித பாபதாபங்களையும் இந்தச் சன்மத்திலுண்டாகிய மோகதாபங்களையும் தீர்த்துக்கொண்ட வளாய்ச் சம்பூர்ண மனோரதத்தை யடைந்து தனது பூர்வ ஜன்மத்தில் ஸ்ரீ பகவானுடைய பூர்வாவதார ஸ்வரூப சௌந்தரியத்தில் மோகித்து இந்தச் சென்மத்தில் தேவாரம் பையினுடைய அம்சத்தை யடைந்து சன்மித்தவளாகையால் பரம தபோதன மௌனீந்திரர்களாகிய ஸனகாதி திவ்ய யோக மஹாத்துமாக்களாலும் அடைந்துய்வதற்கரிய சர்வ லோகப் பிரபுவாகியும் லோகராட்டியராகியும் பக்த ஜனங் கள் வேண்டிய திருவுருவங்கொண்டு அவர்களுடைய மனோ ரதங்களைத் திருப்தி செய்கின்றவராயும் திருவவதரித்துத் தனக்குப் பிரசன்னமான ஸ்ரீ பகவத் ஸ்வரூபத்தை யணைந் தும் பரமைஸ்வர்ய பரம லாப நித்திய சுகானந்த நிர்வாண

விபூதியிலுண்டாகிய பிரம்ஹானந்த ஆத்ம இதார்த்த நித்திய சுகத்தைக் கோராமல், அந்தத் திவ்விய சுந்தரீ ரத்தினமானவள் ஆ திவ்ய மோகன ஸ்வரூபானந்தரே! நானும்மை விட்டுப் பிரியமாட்டேன். எனக்கு இவ்வதிசயங்களையுடைய பேரானந்தத்தை இன்னமுஞ் சிலநாளிங்கே யெழுந்தருளியிருந்து என் மனது திருப்தியடையத் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தாள். ஸ்ரீ பகவானும் அவள் மனோரதப்படிக்கு வரத்தைத் தந்து சில நாளங்கே யெழுந்தருளியிருந்து அவளால் பூசிக்கப்பட்டு மஹாத்மாவாகிய ஸ்ரீ உத்தவருந் தாமுமாய் அந்தச் சுந்தரீ கிருகத்தில் நின்றும் புறப்பட்டுத் தமது திவ்ய திருமாளிகைக்கு வந்து சேர்ந்தார்கள்.

நான் ஜன்ம சாபல்ய மடைந்து வாழ்ந்தருளுமாறு கிருபை கூர்ந்தருளும் ஸ்ரீ சுகப் பரம்ம தேவ! மகா மகிம பரம கிருபாதி சயானந்த அநந்த கலியாண குணங்களையுடையவராயும் பரம யோகீந்திரர்களாலும் அடைவதற்கரிய ஸ்ரீ பரந்தாமராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானை அந்தச் சைரந்திரி சேவித்துய்ந்து எளிதிலணைந்தனுபவித்தும் நித்ய சுகாநந்த ஸ்ரீ பகவத்லாப முக்தமார்க்கத்தைக் கோராமல் அஸ்திரகால சௌக்கியத்தை தராநின்ற அல்பபோகமாகிய சுகத்தையே விரும்பி வரத்தையடைந்தனளே! அகோ அந்தச் சுந்திரியினுடைய பூர்வசன்ம கர்மமிருந்தவாறென்னே! எனும் பரிக்ஷிசித்தை நோக்கி ஸ்ரீ சுகர் அருளுகின்றனர்.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

ஸ்ரீ பகவானுடைய பூர்வாவதாரங்களில் தண்டகாருண்யவாசிகளான ரிஷிகளும் தாருகாவனவாச ரிஷிகளும் அவ்வவதார ஸ்வரூபங்களைக் கண்டு சகியாதவர்களாய் பெண்ணுடை யுடுக்கவும் பெறவும் அப்போது லபியாதவர்களாய் ஸ்ரீ பகவதாக்ஞையினால் காலாந்தரமான இந்தத் திவ்யாவதார காலத்தில் அடைந்துய்ந்தார்களன்றோ! அப்படியே இந்தப் புண்ணியாங்கனையானவள் பூர்வஜன்ம காரணத்தால் இந்த ஜன்மத்தில் தேவ அரம்பையினுடைய அம்சத்தை வகித்து அந்த வாசனை விதிப்பிரகாரம் அந்த ரதியைக் கோரி நின்றனள். ஸ்ரீ தேவதேவனும் சர்வ பலப்பிர தாதாவாயும் மோக்ஷபலத்திற்கேயுரிய ஸ்ரீ பரந்தாமனாயும் விளங்குகின்றவரை யடைந்தபடியால் அந்தப் புண்ணியாங்கனைக்கு இந்த ஸ்ரீ பகவத் ஸ்பரிசம் வீணாவதில்லை. அவருடைய நிர்யேதுக பரம காருண்ணியாதிசயத்தினால் காலாந்தரத்தில் கிரம மூக்தி மார்க்கத்திற்குச் செல்ல சந்தேகமிராதென்று அந்த

நரேந்திரனுடைய மனது திருப்தியடையும்படிச் சொல்லி யருளினார்.

அநந்தரம் சர்வக்ஞ மூர்த்தியாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் பூபார நிவாரணஞ் செய்யத் திருவுள்ளத்தில் சங்கல்பித்துக் கொண்டவராய்த் தமக்கு மிகுந்த ஆப்தராகிய ஸ்ரீ அக்ரூரரை ஹஸ்தினாபுரிக்கு அனுப்ப வேண்டுமென்று ஸ்ரீ உத்தவரையும் பலராமரையும் அழைத்துக்கொண்டு ஒரு திவ்விய தினத்தில் ஸ்ரீ அக்ரூரர் திருமாளிகைக்கு எழுந்தருளினார். மஹாத்மாவாகிய ஸ்ரீ அக்ரூரரானவர் தமது திருமாளிகையைக்குறித் தெழுந்தருளி ஸ்ரீ உத்தவ ஸகித ஸ்ரீ பலராமகிருஷ்ண மூர்த்திகளைக் கண்ட மாத்திரத்தில் பிரம்ஹானந்த சந்தோஷபரிதராய்ப் பொருக்கென எழுந்து எதிர்கொண்டு நமஸ்கரித்து அஞ்சலி பந்தராய்த் துதித்துச் சர்வோபசாரங்களையுஞ் செய்து அழைத்துக்கொண்டு போய்த் திவ்விய மணியாசனங்களி லிருக்கச்செய்து அர்ச்சித்து ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திகளுக்கு மீண்டும் நமஸ்கரித்து ஸ்ரீ உத்தவரை ஆலிங்கனாதி உபசாரங்களால் சந்தோஷிப்பித்து மிகுந்த பக்தியோடு இவர்களுடைய ஸ்ரீ பாத தீர்த்தங்களை ஸ்வீகரித்துப் பிரம்ஹானந்த சந்தோஷராய் ஸ்துதித்துக்கொண்டு நின்றார். அப்படி நிற்கின்ற ஸ்ரீ அக்ரூரரை ஸ்ரீ பகவான் இருக்கும்படி நியமிக்க, அவரும் அருகில் உட்கார்ந்து வேதவேதாந்தங்களிலே நடிக்கின்ற ஸ்ரீ பகவானுடைய திருவடித் தாமரைகளைத் தமது மடியிலேற்றி மிருதுவாக வருடிக்கொண்டு சொல்லுகின்றார்.

தேவ தேவ புருஷோத்தமர்களே! இந்த ஏழையின் குடிசை சீர்பெறும் பொருட்டும் அடியேன் பிழைத்துய்யும் பொருட்டும் எழுந்தருளினீர்கள். இந்தப் பரம காருண்யத்திற்கு பிரதியாகயான் என்ன செய்ய இயலும். இந்தப் பிரபஞ்சத்திற்குப் பாபாரிஷ்ட ஸ்வரூபிகளாயும், மகா கடின சித்தர்களாயும், லோகத்துரோக கிருத்தியங்களை யுடையவர்களாயும் ஜன்மித்திருந்த கம்ஸன் முதலிய அநேக ராக்ஷஸர்களை அவர்கள் துணைவர்களோடு அதமாக்கும்படிச் சம்ஹரித்து யமபுரத்திற் கனுப்பி உங்களுடைய பாகுபல பராக்கிரமாதிசயத்தினாலும், பரம காருண்யத்தினாலும், தேவதாம்ஸர்களாகிய சகல யாதவ வம்சங்களையு முத்தரித்து, இடரைத் தீர்த்து, யாவரையும் நித்தியானந்த சுகபோகத்தை யடைந்துய்ந்து சுகிக்கும்படி இரக்ஷித்தீர்கள். வாருங்கள் ஸ்ரீ ஹரியினுடைய திவ்யாம்ஸ பரமாத்ம ஸ்வரூபாவதார மகானு

பாவர்களே! சமஸ்தப் பிரபஞ்சத்திற்கும் விஸ்வாதி புருஷர்களாயும், விஸ்வ மயர்களாயும் விளங்குகின்ற உங்களுக்கு ஸ்வயமாக ஒரு காரிய காரணங்களுமில்லை. சர்வ லோக காரிய காரணங்களுக்கும் உங்களைத் தவிர வேறொரு ஆதார ஆஸ்ரித பூதருமில்லையென்று இந்தப் பிரகாரம் சில்நேரம் ஸ்துதிசெய்து ஸ்ரீ கண்ணபிரானுடைய திவ்யமங்கள விக்கிரகத்தைத் தனது கண்கள் கலிதீர நேத்ரோத்ஸவமாக நன்ருகச் சேவித்து பக்தி யோக பரவசானந்த குதூகுலராய் மீண்டும் துதிக்கின்ருர்.

வாரீர் ஸ்ரீ பரமேஸ்வரரே! உமது ரசோகுணப் பிரபாவாதிசயத்தினுல் சமஸ்தலோக ஸ்வரூபங்களாகிய நிகில சராசரங்களையும் சிருஷ்டித்து அவைகளின் விருத்தியின் பொருட்டுச் சத்வ குணப்பிரவாதிசயத்தினுல் சர்வ வேதமய காரண நிஜஸ்வரூபத்தை வகித்து விதி நிஷேத வைதீக மார்க்கங்களினுலே சமஸ்த பிரபஞ்சங்களையும் சுஸ்திரமாக ரக்ஷித்துக் கொண்டிருக்கிறீர்கள். ரசோகுண பிரபாவத்தினுல் உமது காரிய ரூபாத்மகமாகிய சராசராத்மக சரீர ஸ்வபாவங்களுக்குத் தோற்ற வொடுக்கங்களைச் செய்து கொண்டிருக்கின்ற சத்வ சூன்யாத்மகமாகிய காலமாய் அசித்ரூபாத்மகமான மகதாதி பஞ்ச பூதாகார தேஜஸ்வரூபங்களை வகித்து அவைகளுக்குரிய ஸ்வரூபங்களான சகல விஸ்வங்களையும் உமது விஸ்வாகார விராட் ஸ்வரூபத்திலொடுங்கச் செய்து நீரொருவராகவே பிரகாசித்துக் கொண்டிருக்கின்றீர். அப்படிப்பட்ட உமக்கும் காரிய காரணங்களுண்டோ? சர்வ காரிய காரணங்களுக்கும் நீர் விபுவாயிருக்கின்றீர். நீர் சர்வாத்மாக்களிலும் அந்தர்க்கதரா யிருந்துகொண்டு சர்வ விஸ்வங்களையும், விஸ்வ புருஷ விஸ்வாதிகாரிகளையும், சமஸ்த சராசராத்மகமான பூதங்களையும், அநந்த விசித்திர நானுபேதங்களாக உமது லேஸாம்ஸ சக்திப் பிரபாவத்தினுல் சிருஷ்டி ஸ்திதி லயங்களை ஆசரித்துக் கொண்டிருக்கின்றீர். நீர் ஸ்ரீசர்வக்ஞ விக்ஞான மூர்த்தியாகையால் உமது லேஸாம்ஸசகித பூதர்களான லோகபாலர்களாகிய சதுர்முக பஞ்சமுகாதி ஜீவ சமூகங்களைப் போல பிரகிருதி குண கரும பாச பந்தமோகிதங்களை அடையாமல் மார்த்தாண்டனைப் போலச் சாக்ஷாத் சர்வக்ஞத்துவ விவேகோதய க்ஞானசமூர்த்தியாய் ஸ்ரீ பரமாத்ம ஸ்வரூபராய் நிரவதிக தேசோமயராய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றீர்.

வாரீர் எங்கள் பரம தெய்வமாகிய ஸ்ரீ பரந்தாம மூர்த்தியே! உமது திவ்ய சங்கல்பத்தினு லுண்டாகிய இந்த சர்வப்

பிரபஞ்சங்களினுள் விருத்தி லயங்களுக்குச் சம்பந்தித்துக் கொண்டிருக்கின்ற நித்திய பரிசுத்த சித்த புருஷ நாமதேய ஜீவாத்ம ஸ்வரூபமே எக்காலத்திலும் கிரமக் கிரமாதிகார காலங்களிலும் அநேக பேத தேகங்களைப் பரிக்கிரகித்தும் அவற்றின் கர்ம குண பேதங்களுக் குரிய பந்த மோக்ஷங்கள் தன்னை யொட்டாமல் நித்ய சுத்த தத்வத்தோடு பிரகாசித்துக் கொண்டிருக்குமேயாகில், அந்தச் சர்வாத்மாக்களுக்கும் அந்தரியாமியாய்த் திவ்ய விபுவாயும் ஸ்ரீபரமாத்ம ஸ்வரூபியாயும் விளங்குகின்ற சாக்ஷாத் ஸ்ரீ பரமேஸ்வரனாகிய உம்மை அப்படிப்பட்ட ஜன்ம கர்மங்களும் பந்த மோக்ஷங்களும் ஸ்பரிசிக்க மாட்டாதெனச் சொல்லவும் வேண்டுமோவென்று சகலவேத வேதாந்த அபிப்பிராயங்களை யுணர்ந்த மகாத்மாக்கள் ஸ்துதித்துக் கொண்டிருக்கின்றார்கள்.

புருஷோத்தமரே! அதர்மத்தை வேரோடு களையவும் தர்மத்தை ஸ்திரமாக ஸ்தாபிக்கவும் காலந்தோறும் பூமியில் சாதாரண ஜீவர்களைப்போன்று அவதரிக்கும் உம்மைச் சர்வ லோக இதார்த்தமாய் அவதரித்திருக்கின்ற பரம குரு ஜனங்களாகிய பரமாசாரியர்கள் வேதோக்தக் கிரமமாக அர்ச்சித்து உமது பரம கிருபைக்குப் பாத்திரர்களாய்ச் சுத்த சத்வாத்மகமான அப்பிராக்கிருத விக்கிரஹ ஸ்வரூப திவ்யானந்த பதவியை அடைகின்றார்கள்.

வாரீர் ஸ்ரீ சர்வலோகைக நாதரே! எங்கள் ஜன்மாந்தர காலங்களில் எப்படிப்பட்ட புண்ணிய தவங்களைச் செய்தோமோ தெரியாது இந்த ஜன்மத்தில் உமது நிர்ஹேதுக கிருபா கடாக்ஷத்தினால் இவ்விடத்தில் உமது சரணாரவிந்த சேவா மஹிமாதிசயங்களை அடைந்து மிகுந்த கிருதார்த்தர்களாய் உய்ந்தோம். நீர் எங்களைக் கிருபைசெய்து உமது பக்த ஜனங்களாகிய ஸ்ரீ மகா பாகவத கோஷ்டியில் சத்ஸஹவாஸத்தை யுண்டாக்கி உமது திருவடித்தாமரைகளில் சமர்ப்பிக்கப்பட்ட எங்கள் சித்தவிருத்தியைச் சலிக்கவொட்டாமல் திடமாக விருக்கும்படி ரக்ஷிக்கக் கடவீரென்று ஸ்துதித்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீ மகா பாகவதோத்தமராகிய ஸ்ரீ அக்ரூருடைய மஹா மதுரவசன திவ்ய ஸ்துதிகளை யங்கிகரித்து ஸ்ரீ பகவானனவர் அதி சுந்தர மந்தஹாச வதனாரவிந்தராய்ச் சம்சார பந்த சம்பந்தங்களான பிரேமாதிசய மோகங்களைத் தரும் சில வார்த்தைகளைச் சொல்லுகின்றார்.

ஸ்ரீ பகவான் வாக்கியம்

எங்களாப்த பந்துவாகிய ஸ்ரீ அக்ரூரரே! நீர் எங்களுக்குச் சர்வவித பந்துவாயும் எங்களைப் போஷிக்கும்படி பிதாஸ்வரூபராயும் மிகுந்த பிரியமுள்ளவராயும், எங்கள் குல தன்ய சிரேஷ்டராயும் விளங்கிக்கொண்டிருக்கின்றீர். நாங்கள் நீர் போஷிக்கத்தக்க உமது கிருபைக்குப் பாத்திரர்களாகிய புத்திரவர்க்கங்களாக விருத்தி யடைந்து கொண்டிருக்கின்றோம். வாரீர் ஸ்ரீ ஹரிபதத் தியான மானஸோத்தமராகிய ஸ்ரீ அக்ரூரரே! இவ்வுலகத்தில் வேதோக்த தரும சாஸ்திர ஜந்நியஞான சீலர்களாகிய சில புண்ணிய ஜனங்களும் பண்டித பாமர ஜனங்களும் உய்யும்படி சூரிய சோமாதி கிரஹ நக்ஷத்திர கால ஸ்வரூப தேவதா கணங்களையும், பிரம்ஹ ருத்திர வாசவாதி தேவ விபுத்வ கணங்களையும், அஷ்டவசுக்கள்-மருத்கணங்கள் அசுவினி முதலிய தேவ கணங்களையும் ஹவ்ய கவ்யாதி-யக்ஞ-யாக-தபோ-ஜப-மௌந-விரத-தான-சத்கர்மங்களால் திருப்தி செய்து உபாசிக்கவும், தக்க பலனைப்பெறவும் நியமித்தபடியே அநந்த தேவதாஸ்வரூபிகளும் அப்படியே ஜன்மாந்தரத்திலுங் காலாந்தரத்திலும் அவரவர்கள் செய்யும் கிருத்திய சத்கர்மங்களுக்குத் தகுந்த பலத்தைக் கொடுத்து ஜன்ம சௌக்கியத்தை யுண்டுபண்ணுவார்கள்.

வாரீர் விரதசீலராகிய ஸ்ரீ அக்ரூரரே! இவ்வுலகத்தைப் பாவனஞ் செய்வதற்கு ஸ்ரீ பகவத் ஸங்கல்பத்தினலுண்டாயிருக்கிற மகா புண்ணிய நதிகளும் அந்த நதி தேவதா ஸ்வரூபிகளும் தங்களைக் குறித்துச் சாந்திராயணமாகப் புண்ணிய தீர்த்த யாத்திரைகளைச் செய்து நன்றாக அர்ச்சித்து புண்ணியவான்களுக்கு ஜன்மாந்தரத்திலேயே புண்ணிய சிந்தையையும் புண்ணிய போக சுகங்களையும் உண்டுபண்ணக் கடவனவா யிருக்கின்ற சில மாய தேவதா ஸ்வரூபிகளும் ஸ்ரீ பகவத் பிம்ப திவ்ய அர்ச்சாவதார ஸ்வரூபிகளும் இவ்வுலகத்திலுள்ள சேதனு சேதன ஸமஸ்தப் பிராணிகளு முய்யும் பொருட்டு அஜ ருத்திர இந்திராதி தேவகண விபுக்களாலும் தேவ-கருட-காந்தர்வ-சித்த-உரகாதிகண விபுக்களாலும் பரம யோகீந்திரர்களாகிய பிருகு மார்க்கண்டேயாதி ரிஷி சிரேஷ்டர்களாலும் மனுவாதி ராஜ ரிஷிகளாலும் மகா புண்ணிய புருஷ சிரேஷ்டர்களாலும் வேதார்த்தங்களையும் வேத மந்திரங்களையும் ஆராய்ந்தறிந்து அவ்வேதத்தினுள் அநாதியாய் விளங்கிக் கொண்டிருக்கின்ற வேதமய ஸ்வரூப அர்ச்சாவதார மந்திர பிம்பங்

களைத் தங்கள் தங்கள் இஷ்ட தேவதா சந்தரிசனார்த்தமாக வும் ஸ்ரீ பரமாத்ம புத்ருசியடாகவும் வேதவிதிப்படி அந்தத் தெய்வங்களுக்குரிய உபசாரங்களாய் விமான மண்டபப் பிரகார - கூப தடாக உத்தியானவன - சோலைகளையுடைய-திவ்யாலயங்களை நிர்மித்து அதற்குக் கர்ப்ப-கிரஹ-அர்த்த மண்டப - மஹா மண்டபாதி ஸ்தல விசேஷங்களையும் ஏற்படுத்திப் பிரம்ஹ ஸ்தலமாகிய அதிகார ஸ்தலங்களில் திவ்ய பிம்ப மூர்த்திகளையும் பரிவார த்வாரபாலகாதி அதி தேவதைகளையும் ஆவாஹனஞ் செய்து நித்தியோத்ஸவ பிரம்மோத்ஸவாதி திவ்ய தேசோபசாரங்களால் வைகானஸ ஸ்ரீ பாஞ்சராத்திரானு ஸாரமாக அர்ச்சித்தவர்களுக்கும் சேவித்தவர்களுக்கும் அந்த திவ்ய பிம்பதேவதா மூர்த்திகள் அவரவர்கள் மானஸ சித்தத்ருட அவஸ்தியாவஸ்யங்களுக் குத் தகுந்தபடி அன்றைக்கன்று பாபவிநாசங்களையும் சத் கர்ம-சத்ஸங்க-சத்புண்ணிய-சத்புத்தியோகங்களையும் அருளி ஜன்மகர்ம சுகிர்தங்களையும் ஆரோக்கியங்களையும் திவ்ய தேகங்களையுந் தந்து ஜன்மாந்தர காலாந்தர தேஹாந்திரங் களில் தாபத்திரயாதி துக்கங்களை நிவாரணஞ்செய்து சதுர் வித புருஷார்த்த பலப்பிரத முக்திகாரண பிம்ப ஸ்வரூபிக ளாய் ரக்ஷித்துக்கொண் டிருக்கின்றார்கள்.

மஹாத்மாவாகிய அக்ரூரரே! இவ் வுலகத்திலுள்ள சகல பிராணிகளும் ஸேவித்துப் பக்தியுடன் ஆஸ்ரயித்த மாத்திரத்தில் தங்கள் ஜன்ம பாவங்க ளொழிந் துய்யும் பொருட்டுத் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீ பகவத்பதத்தியான மானச பக்த யோக நிஷ்டர்களாகிய நீரும் உம்மைச் சார்ந்த வர்களும் தரிசன ஸ்பரிச போதனாத்மகமான சத்ஸஹ வாஸங்களினால் இவ்வுலகத்தவர்களுடைய பாபங்களை நசிப் பித்து உடனே பிரகிருதிபந்த விமுக்தமாயும் பகவதனுபவங் களை யுடையதாயும் இயங்குகின்ற பரமபதத்திற் குரியவர்க ளாகும்படித் திவ்யார்த்தங்களை யருளுகின்றீர்கள். அப்படிப் பட்ட ஸ்ரீ பாகவதோத்தமராகிய நீர் எங்கள் மனோபீஷ்டங் களையும் நிறைவேற்றி லோகோபகாரங்களைச் செய்தருளக் கடவீர்.

அதென்னவெனில் நமக்கு மிகவுஞ் சரீர சம்பந்தமுள்ள ஆப்த பந்துவாகிய பாண்டு மஹாராஜர் பரலோகத்தை யடைந்தபின்பு எங்கள் நல்லத்தையாயும் வீரபத்தினியாயும் விளங்குகின்ற குந்திதேவி மிக்க தீனையாய்த் திருதராஷ்டிர மகாராஜனுடைய உத்தரவினால் பாண்டவர்க ளைவரையும் அழைத்துக்கொண்டு அஸ்தினாபுரியில் வந்து வாசஞ்செய்து

கொண்டிருக்கின்றுளாம். அந்த அந்தக நிருபர் தனது புத்திர பாசவஸ்யராய் துஷ்ட துரியோதனுதிகளுடைய துர்ப்போதனைகளைக் கேட்டு அந்தப் புண்ணிய புருஷர்களாகிய பாண்டவர்கள் தனது பிள்ளைகளைப்போலச் சகல சௌக்கியங்களையும் பெறும்படி நடப்பிக்கவில்லையென்று தோற்றுகின்றபடியால் அவர்களைப் பிரத்தியக்ஷத்தில் கண்டு அவர்களுடைய குசலப் பிரஸ்னைகளை விசாரித்து மிக தந்நியசீலையான குந்திதேவிக்கு வேண்டியசமாதானங்களைச்சொல்லி மனவியாகூலங்களைத் தீர்த்து அவ்வரசனுக்கும் மற்றுமுள்ளவர்களுக்கும் பாண்டவர்களைக் குறித்து வேண்டிய தர்மங்களைச் சொல்லி, அவர்களுடைய இருதயத்தின் நிலையை நீர் நன்றுயறிந்து வந்த பின்புதான் அவர்கள் க்ஷேமத்தை யடையவேண்டிய விதத்தை ஆலோசிக்கவேண்டும். மேலும் அவர்களை யாதரிக்கவேண்டிய கடமை நம்முடைய தாதலால் நீரந்தக் கஜபுரிக் கெழுந்தருளி வரவேண்டுமென்று நியமித்துவிட்டு ஸ்ரீ பகவான் ஸ்ரீ பலராம உத்தவ ஸகிதராய்த் தமது திருமாளிகைக் கெழுந்தருளி வந்துவிட்டார்.



## நாற்பத்தொன்பதாவது அத்தியாயம்

ஸ்ரீ அக்ரூரர் பகவான் நியமனத்தினுல் கரிககாத்திற்கு எழுந்தருளி மீண்டது சொல்லப்படுகின்றது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாரீர் பாண்டவர் வம்ச கொடி படா 'உதவும் பரிக்ஷித்தே! ஸ்ரீ பகவானது துஷ்ட சிஷ்ட பரிபாலனுர்த்த கார்யம் இயங்கும் தன்மையை இன்னும் கேளும்! ஸ்ரீ மகா பாகவதோத்தமாகிய ஸ்ரீ அக்ரூரர் ஸ்ரீ பகவானுடைய நியமனப்படித் திவ்ய ரதாரூடராய்க் கௌரவ ராஜதானியாகிய கஜநகரத்திற் கெழுந்தருளிவந்து சேர்ந்தார். அப்படி சேர்ந்து அவ்விடத்தி லிருக்கின்ற திருதராஷ்டிர மஹாராஜனையும் பீஷ்மாசாரியையும் ஸ்ரீ விதுரரையும் சோமதத்தரையும் பாகிலி மஹாராஜனையும் துரோணு சாரியையும் கிருபாசாரியரையும் அஸ்வத்தாமாவையும் கர்னன் சகுனி துரியோதனன் துஸ்ஸாஸனர்களாகிய துஷ்ட சதுஷ்டயர்கள் முதலிய கௌரவாதி பந்துக்களையும் வீரமாதாவாகிய குந்தி தேவி தர்மராஜா பீமார்ச்சுன நகுல ஸஹாதேவாதி மற்ற பந்துக்களையும் தமக்கிஷ்ட ஜனங்களாகிய சிநேகிதர்களையுங் கண்டு, இவர்களால் யதா யோக்கியமாக அர்க்கிய பாத்திய

வந்தனாதி சத்கார பூசைகளை அங்கீகரித்துத் தம்மை யாவரும் குசலப் பிரஸ்னை செய்ய, அவர்களுக்குத் தம்முடைய க்ஷேமாதிசயங்களையும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சௌர்ய தைரிய சௌலப்யாதிசய திவ்ய குணங்களையுஞ் சொல்லிச் சந்தோஷ முண்டாக்கி அந்த பந்துக்களுடைய குசலப் பிரஸ்னைகளைத் தாமும் விசாரித்துச் சந்தோஷத்தையடைந்தவராய் இவ்விடத்திலிருக்கின்ற திருதராஷ்டிர மஹாராஜா முதலிய கௌரவ பாண்டவர்களுடைய தர்மாதர்ம இருதயங்களை அறியவேண்டிச் சில நாள் அந்தக் கௌரவ ராஜதானியாகிய அத்தி நகரத்திலே வாசஞ்செய்துக்கொண்டிருந்தார்.

அப்படி வசிக்கின்ற தினங்களிலொருநாள் ஸ்ரீ விதுரரும் ஸ்ரீ அக்ரூரரும் ஒரு ஏகாந்தப் பிரதேசத்தில் ஸ்ரீ பகவானுடைய கலியாண குண மகிமாதிசயங்களைப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவ்விடத்திற்கு மிகுந்த சாந்த சீலையான குந்திதேவி வந்து ஸ்ரீ மஹா பாகவதோத்தமராகிய ஸ்ரீ அக்ரூரரைப் பார்த்து ஸ்ரீ விதுரரை முன்னிட்டுக்கொண்டு சொல்லுகின்றாள் :

எனது பிராதாவாயும் பிரிய பந்துவாயு மிருக்கின்ற ஸ்ரீ அக்ரூரரே! ஸ்ரீ மதுரா நகரத்தில் எனது தாய் தந்தைகளும் பிராதாக்களும் சகோதரிகளும் அதிக சுசீல சம்பன்னரும் எனது பிராதாவுமாகிய ஸ்ரீ வசுதேவருடைய புத்திரர்களாயும் ஸ்ரீ பகவத் ஸ்வரூபர்களாயும் விளங்கிக் கொண்டிருக்கின்ற மருமகப்பிரான்களாகிய ஸ்ரீ பலராம கிருஷ்ண மூர்த்திகளும் எனது சகீ ஜனங்களும் நமது பந்துக்கள் யாவரும் க்ஷேமமாயிருக்கின்றார்களா? நீர் இவ்விடத்திற்கு வரும்போது நமது தாய் தந்தைகளும் பிராதாக்கள் முதலிய பந்து ஜனங்களும் எங்கள் க்ஷேமத்தைக் குறித்து ஏதேனுஞ் சொல்லி யிருந்தால் கிருபைசெய்து சொல்லக்கடவீர். நானும் எனது சந்ததிகளாகிய பாண்டவர்களும் செந்நாய்களிருக்கின்ற வனத்தில் வாசஞ்செய்கின்ற மானினங்களைப் போல இந்தக் கௌரவ ராஜதானியில் வாசஞ்செய்துக் கொண்டிருக்கின்றோம். ஏனிப்படிச் சொல்லுகின்றேனென்றால் உமது மருமகர்களாகிய பாண்டவர்களுடைய தேஜோ வித்யா பல பராக்கிரமாதிசய நற்குணங்களைக் குறித்தும் சமஸ்த பிராணிகளுக்கும் அவர்களினியவர்களாயுஞ் சாதுக்களாயும், சத்ய தர்ம சீலாதி புண்ய குணங்களை யுடையவர்களாயு மிருக்கின்றதைப் பற்றியும், இந்த துஷ்டர்களாகிய துரியோதனாதிகள் சகிக்க மனமில்லாதவர்களாய் உதட்டிலுறவும் நெஞ்சிற் பகையுமாக இவர்களோடு வஞ்சனையாய்ச்

சிநேகித்து இவர்களுக்கு அபாயத்தை விளைவிக்க வேண்டு மென்னுங் கருத்துடையவர்களாய்த் தக்க சமயம் பார்த்துக் கொண்டு சில நாள்களுக்கு முன் கிருஷ்ண சர்ப்பங்களை யழைப்பித்துக் கடிப்பித்தார்கள். நித்திரை செய்யும்போது மணிக்கயிறுகளால் இறுகக்கட்டி அகாதமான ஆழத்தை யுடைய கங்கா நதியில் கவிழ்ந்து வீழ்ந்திறக்கும்படி தள்ளி ஞர்கள். பின்பு மிகுந்த அந்நியோந்நியமாய்ச் சிநேகித் திருந்து விஷத்தைவிட்டுக் கொல்ல நினைத்தார்கள். தன்னை மறந்து கடாநித்திரை செய்யுந் தருணத்தில் மிக்க கூர்மை யுள்ள ஆயுதங்களால் குத்திக் கொலைசெய்யவும் நினைத் தார்கள். இப்படி யெல்லாம் செய்தும் இவ்வாபத்துக்களில் நின்று நீங்கி நம்முடைய சிறுவர்கள் பிழைத்திருக் கின்ருர்கள்.

ஸ்ரீ பகவதம்ச திவ்ய புருஷ சிரேஷ்டர்களாகிய ஸ்ரீ பல ராம கிருஷ்ண மூர்த்திகளிருவரும் ஒவ்வொரு விசேஷங் களிலாவது மற்ற எப்போதாவது நல்லத்தைக் குமாரர்க ளாகிய பாண்டு புத்திரர்களையும் மகா தீனத்துவ மடைந் திருக்கின்ற என்னையும் நினைப்பார்களா? அநாதர்க ளாகிய எங்களுக்கு க்ஷேமத்தைச் செய்து ரக்ஷிக்க வேண்டுமென்று கிருபையாகச் சொல்லுவார்களா? அவை களையும் எனக்குத் தயைசெய்து சொல்லக் கடவீர். வாரீர் மஹா சௌமியராகிய சகோதரரே! ஸ்ரீ புண்டரீகாக்ஷ ராயும் ஸ்ரீ பக்த வத்ஸலராயும் விளங்குகின்ற ஸ்ரீ ஹரி யானவர் இந்தப் பூமி பார நிவாரண நிமித்தமும் சாது சஜ் ஜனங்களை ரக்ஷிக்கும் பொருட்டும் நமது யது வம்சத்தில் திருவவதாரஞ் செய்திருக்கின்ருரொன்றும் மகாத்மாக்களும் வேத வேதாந்தார்த்தங்களை யுணர்ந்த பரம தபோ நிதிகளுஞ் சொல்லுகின்றபடியினுல் தீனர்களாகிய என் பிள்ளைகளுடைய க்ஷேமத்தைக் குறித்துச் சகாயமாய் இருந்து இவர்கள் பிதுர் பாகமான ராஜ்ஜியத்தை இவர்கள் பெறும்படிச் செய்து ரக்ஷிக்கமாட்டார்களா வென்று மிகுந்த தீனையாய் நேத்திரங் களில் வியாகுல ஜலந் ததும்ப ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தன் மனத்தில் தியானித்து நமஸ்கரித்து ஸ்ரீ பகவன் நாம ஸ்லோகங்களாகிய திருநாம சங்கீர்த்தனங்களால் கலியாண குணுனுபவங்களைச் செய்து சர்வ பிரபஞ்சாத்மக ராயும் சர்வ லோக பாலக சநாதநராயும் சர்வாந்தரியாமித்வ சர்வ சாக்ஷி யாயும் தீன ஜனரக்ஷகராயும் துக்கஹர சரணுகத வத்ஸல ராயுந் திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணு யதுகுல நந் தனு! ஸ்ரீ கோவிந்தா! மாதவா! தாமோதராவென்ரு தன்

இரண்டு நேத்திரங்களாலும் ஆனந்த பாஷ்பங்கள் ஆருய்ப் பெருகச் சிந்தாக்கிராந்தையாய் இதோ சரணமடைந்த என்னை இந்தச் சம்சாரத் தாபத்திரயத்தினு லலையப்பண்ணு மலும் சத்துருக்கள் மத்தியில் அகப்பட்டுத் துக்கத்தை அடையாமலும் ரக்ஷிக்கக் கடவீர். உமது பக்த ஜனங்களாகிய பாண்டவர்களையுங் கைவிடாமற் காப்பாற்றக் கடவீர் என்று இவ்விதமாகத் துதித்துத் தூக்கிக்கின்ற குந்தி தேவியை ஸ்ரீ அக்ரூரர் பிரிய வசனங்களால் வேண்டிய சமாதானஞ் செய்து வாரீர் வீரமாதாவாகிய எங்களன்புக்குரிய ச்கோ தரியே! நீர் மஹா தந்நிய புண்ணியாங்களை யாகையால் உமக்குத் தேவதாம்ஸர்களாகிய திவ்விய புத்திரர்கள் ஜனித் திருக்கின்ருர்கள். அவர்களுக்கு ஸ்ரீ பகவானுடைய கிருபை பூரணமாய் லபித்திருக்கின்றது. அவர்களும் இனிமேல் மஹா கீர்த்தி சம்பத் விபவாதிசயத்தை யடையப்போகின்ருர் கள். நீர் ஒன்றுக்குஞ் சிந்தனை செய்யவேண்டிய தில்லையென்று சுப சகுணங்களான நல்ல வார்த்தைகளால் மனது திருப்தி யடையச் சொல்லி அந்த ஸ்ரீ அக்ரூரர் ஸ்ரீ மதுரா நகர யாத்ராபிமுகராய்ச் சகல பந்து மித்திர சுஜனங்களால் சூழப் பட்டிருக்கின்ற திருதராஷ்டிர மகாராஜனிடத்திற்கு சென் ருர். அவரும் இவரை மிகவும் பூஜிதமாக அங்கீகரித்து திவ் வியாசனத்தை யமைத்து இருக்கச் சொல்ல, இவரும் சுகா சீனராயிருந்து அந்த அம்பிகா புத்திரரைப் பார்த்து சொல்லுகின்ருர்.

வாரீர் கௌரவகுலாதிபதியான மகாராஜரே! மகா சுத்த வீரப்ரதாப சிகாமணியாயும் சத்தியதர்ம பரிபாலக நற்குண சிரேஷ்டராயுமிருந்த உமது அன்பிற்குரிய சகோதரராகிய பாண்டு மகாராஜர் மனுதர்மப் பிரகாரம் உமக்கு ராஜ்ஜியா பிஷேகஞ் செய்து தாம் யுவராஜராயிருந்து சகல சத்துருக் களையும் ஜயித்துச் சமஸ்த பிராணிகளுந் தர்மார்த்த காமாதி களை யடைவதில் ஒரு குறைவும் நேரிடாமல் ரக்ஷித்துக்கொண் டிருந்து தெய்வீகமாய் பரலோகத்தை யடைந்தார். அப்படிப் பட்ட உத்தம சகோதரராகிய துணைவரை யிழந்த நீர் உமது நற்குணுதிசயங்களாலும் மஹா மேதாவிகளாகிய பீஷ்ம விதுராதிகளாலும் மஹா புத்தி பலத்தையுடையவராய் இக் குரு குலத்திற்குக் கீர்த்தியுண்டாகும்படி சமஸ்த பிரஜைகளை யும் யாதொரு தீங்குமின்றிச் சந்தோஷிப்பித்துச் சமஸ்த பிராணிகளிடத்திலுஞ் சத்திய தருமமாக நீதிகளைச் செலுத்தி உமது சந்ததிகளைப் போலவே அவர் புத்திரர்களையும் நினைத்து மஹா கௌரவத்துடன் சமபாவ சித்தராய் அரசு

செலுத்தி ரக்ஷிப்பீரானால் விண்ணுலகங்களிலும் மண்ணுலகத்திலும் வாசஞ்செய்கின்ற சாது சஜ்ஜனங்களால் புகழப்பட்டு மிகுதியும் அருமையான சுகபோகாநந்தத்தையும் சத்கீர்த்தியையும் வம்ச விருத்தியையு மடைந்து சுகிப்பதற்குச் சந்தேகமில்லை. இந்த நற்குணங்க ளில்லாவிடில் இவையாவு மிழந்து விடுகிறதுமில்லாமல் சமஸ்த பிராணிகளினாலும் நிந்திக்கப்பட்டு மீளா நரக துக்கத்தை யடையவேண்டியதாயிருக்கும். ஆகையால் நீர் உமது புத்திரர்களிடத்திலும் பாண்டு புத்திரர்களிடத்திலும் சமமான அன்புடையவராய், அவர்களைப் போஷித்து, உமது இராஜ்ஜிய சம்பத்துகளைப் பாகித்துக்கொடுத்து, நல்ல விவேக தருமங்களை யறிந்துய்யும்படி நல்ல சஹவாசங்களை ஏற்படுத்தி ரக்ஷிக்கவேண்டிய கடமை உம்முடையதன்றோ? இவ்வுலகத்தில் ஜனன மடைந்தவர்களில் ஒருவருக்காவது தம்முடைய சம்சார பந்தங்களுக்குரிய தார புத்திராதிகளும் பந்துக்களும் கிருஹ க்ஷேத்திர தன தான்யாதி சம்பத்துகளால் நிறைந்த ராஜாதிகார போகைஸ்வர்யங்களும் சதமல்லவே. ஒருவன் ஜனிக்கவும் மற்றொருவன் மரணத்தை யடையவும், ஒருவன் சுகிக்கவும் மற்றொருவன் துக்கிக்கவும் ஒருவன் புண்ணியவானாகவும் மற்றொருவன் பாவியாகவும், இவ்விதமாக இவ்வுலகத்திலுள்ளவர்களெல்லாம் தங்கள் கர்மானுஸாரமாக ஸ்வர்க்க நரக சுக துக்கங்களை யனுபவித்துக் கொண்டிருக்கின்றார்கள்.

மச்சங்கள் ஜலப்பிரவாகத்தி லுற்பவித்து அந்தச் சலமே சீவனமாக விருத்தியடைந்து வெகு சந்ததிகளையுடையவைகளாய்ப் பெருகி அந்தச் சந்ததிகளும் அந்த ஜலத்தையே உண்டு ஜீவிக்க இவ்வாறு அவைகள் தங்கள் ஜீவனத்தையே விரும்பி யிருப்பதுபோல மூட ஜனங்கள் தாங்களார்ச்சித்த தனங்களைச் சத்பாத்திரர்களுக்குதவாமல் தங்கள் துஷ்ட சந்ததிகள் அபகரிக்கக் கொடுத்துவிட்டுத் தங்களுக்கு யாதொரு புண்ணிய கீர்த்தியும் தேடிக் கொள்ளாமல் பிதா புத்திராதி சம்பந்தங்களையும் அற்றவர்களாய் நாசந்தை யடைகின்றார்கள்.

வாரீர் மகிபதியே! நீர் இப்படிப்பட்ட மூட மானஸ விவேகத்தை யுடையவராய் உம்மாலார்ஜ்ஜிக்கப் பட்டிருக்கிற திரவியங்களையும் பாரம்பர்யமாய் விருத்தியடைந்து வருகின்ற இராஜ்ஜியாதிகார சம்பத்துக்களையும் சத் புத்திரர்களாகிய பாண்டவர்களை வஞ்சித்து உமது புத்திரர்களுக்கு மாத்திரங் கொடுப்பீரானால் சர்வப் பிரபஞ்சத்தவர்களாலும் நிந்திக்கப்பட்டு இகபர சௌக்கியாதிசயங்களுக்கும் தூர

ஸ்தராக விருப்பீரேயல்லது வேறில்லை. ஆகையினால் நீர் அப்படிப்பட்ட நிந்தனைகளைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டுவதில்லை. ஏனெனில் இந்தச் சரீரத்திற்கு ஒரு நிலையில்லை. நதிப் பிரவாகம்போலத் தீர்க்க நிலையில்லாத இந்தத் தேகத் தருமமானது ஜனன மரணங்களை யடைந்துகொண் டிருக்கின்றது. இந்த நிலையில்லாத தேக சம்பந்தமாகிய தாரா புத்திரர்கள் ஒரு புருஷனுக்குச் சதமாவர்களோ ? அல்லது அவனுடைய சம்பத்துக்களை ஸ்வதந்திரமா யபகரித்து அனுபவிக்கின்றதுபோல அவன் ஆர்ஜ்ஜித்த பாபங்களையும் பாகித்துக் கொள்ளுவார்களோ ? நீர் உம்முடைய விவேக சட்சுவினால் நன்று யாலோசிக்கக்கடவீர் என்று சொன்ன ஸ்ரீ அக்ரூரரைப் பார்த்து திருதராஷ்டிர மகாராஜாவானவர் சொல்லுகிறார் :

எங்கள் பிரிய பந்துவாகிய ஸ்ரீ அக்ரூரரே ! இப்போது எனக்கு பரம தருமமாக நீர் எடுத்துச் சொல்லிய வார்த்தைகள் யாவும் நிச்சயமே யாகும். மிகவுஞ் சபல சித்தத்தை யுடையே னாதலால் எனது இருதயத்தில் நீர் சொன்னவைகளிலொன்றும் ஸ்திரமாக நிற்கவேயில்லை. பளிங்குப்பாரைகளுள்ள பர்வதத்தின்மீது தோன்றிமறைகின்ற மின்னலொளியைப்போலவும், தேவாமிர்தங் கிடைத்து அதைப் புசித்து தேவாமிர்தமென் றறிந்து சந்தோஷிக்காத மூடனைப்போலவும் யாது காரணமோ எனது இருதயமானது புத்திர பாச பந்த பரவசமாய் அடிக்கடி சித்தஞ்சலிக்கின்றது. ஈஸ்வராக்ஞையைக் கடந்து நடக்கவும் விதியை தப்பித்துக்கொள்ளவும் ஒருவர்தரமோ ? ஸ்ரீ சர்வ லோகநாதராயும் சர்வக்ஞமூர்த்தியாயும் விளங்கிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ ஹரி இவ்வுலகங்களைச் சிருஷ்டித்தும் இரக்ஷித்தும் பிரளயத்தைச்செய்தும் அந்தந்தக் காலானுகுணமாக அவற்றினுள் வியாபித்துச் சர்வ மயராயிருந்தும் இப்போதிந்தக் காலத்திற்குத் தக்க தருமங்களை நிலைநிறுத்தவும் பூமிபார நிவாரணஞ்செய்து சாது சஜ்ஜனங்களை ரக்ஷிக்கவும் ஸ்ரீ தேவகி தேவியினுடைய திருவுதரத்தில் திருவவதாரஞ் செய்திருக்கின்றார். அந்த சர்வேஸ்வரனுக்கு இதன் காரணங்கள் உணரத்தக்கதேயல்லாமல் மற்ற யாவராலு முணர்தற்கரியது. அந்த ஸ்ரீ பகவானுடைய மாயா விலாசத்தை அறிந்துய்ந்து நடக்க என்னாலாகவில்லையே ? அதற்கு யானென்ன செய்வேன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு அனந்த தேவோபசாரங்களோடு அனந்தமாயிர நமஸ்காரங்களைச் செய்கின்றே னென்று சொன்னான்.

ஸ்ரீ அக்ரூரர் இந்தப் பிரகாரம் அந்தத் திருதராஷ்டிர மகாராஜனுடைய அபிப்பிராயத்தை யறிந்து கொண்டு அவராலும் மற்றுமுள்ள பீஷ்ம விதுராதி பந்துக்களாலும் கிருபத் துரோண அஸ்வத்தாமா முதலிய மித்திரர்களாலும் பூஜிக்கப்பட்டு அவர்களிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு திவ்ய ரதாரோகணஞ்செய்து ஸ்ரீ மதுரா நகரத்திற்கு வந்து சேர்ந்தார். பின்பு மறு நாளுதயத்தில் ஸ்ரீ பகவானுடைய சந்நதியை யடைந்து தாம் அஸ்தினு புரத்திற்குப் போய் அவ்விடத்திலுள்ள கௌரவ பாண்டவர்களுடைய க்ஷேம சமாச்சாரங்களையும் குந்திதேவியினது விண்ணப்பத்தையும் திருதராஷ்டிர மகாராஜனுடைய மனநிலையையும் ஸ்ரீ பலராம கிருஷ்ண திவ்ய மூர்த்திகளுக்கு மிகுதியும் விசிதமாகத் தெரிய விண்ணப்பம் பண்ணினார்.



## ஐம்பதாவது அத்தியாயம்



*ஸ்ரீபகவான் ஜராசந்தனோடு போர் புரிந்ததும், துவாரகாபுரியை நிருமித்ததும் சொல்லப்படுகிறது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! ஜராஸந்தனுடைய புத்ரிகளான அஸ்தி பிராப்தை யெனும் இருவர்களை கம்சன் விவாகஞ்செய்திருந்தான். அவர்களிருவருந் தங்களுடைய பர்த்தாவான கம்சனை ஸ்ரீ கிருஷ்ணபகவான் கொன்றதினால் மிகவும் விசனத்துடன் தங்களுடைய பிதாவான ஜராசந்தனண்டையிற் சென்று கம்சனுடைய வதத்தைச்சொல்லி விசனப்பட்டார்கள். அதைக்கேட்டு ஜராசந்தன் சகிக்கமாட்டாமல் பூமியில் யாதவர்களென்கிற நாமதேயமே யில்லாமல் செய்கிறேனென்று பிரதிக்ஞைசெய்து மிகவுங் கோபத்தோடு இருபத்து மூன்றக்குரோணி சேனைகளைக் கூட்டிக் கொண்டு மதுரையை நான்கு பக்கத்திலும் வந்து சுற்றிக் கொண்டான்.

அதை யாதவர்கள் பார்த்து நடுங்கினார்கள். ஸ்ரீ கிருஷ்ண பகவான் தாம் அவதாரஞ்செய்தது பூமிபார நிவாரணஞ் செய்யவாகையால் ஜராசந்தனைக் கொல்லாமல் சேனையை மாத்திரங்கொன்று போட்டால் மறுபடியு மிந்த ஜராசந்தனால் மற்றுமுள்ள சேனைகளும் சேகரிக்கப்பட்டு வரப்படுமாகையால் சேனைகளைத்தானே சம்மாரஞ் செய்வோமென்று

நினைத்துக் கொண்டிருக்கையில், இரண்டு சூரியனுக்கொப்பான ஒளியுடன் நவரத்தினத்தா லிழைக்கப்பட்டு சர்வாலங்கார சோபிதமாயும் மிகவும் உயர்ந்த துவஜத்துடன் கூடியும் வாயுவுக்குச் சமானமான வேகத்துடன் கத்தி-சத்தி-கதை-சங்கு-சக்கரம் அம்புருத்தூணி முதலிய ஆயுதங்களினால் நிறைந்தும், மகாசமத்தர்களான சாரதிகளை யுடையதாயுமிருக்கின்ற இரண்டு இரதங்கள் சுவாமிக்கெதிரே வந்தன. அதைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணர் சமீபத்திலிருக்கின்ற பலதேவரை நோக்கி "தேவரீர் அண்ணா அவர்களின் அடி பணிந்து அடியேன் விண்ணப்பித்துக் கொள்வதாவது: பூமி பார நிவாரணார்த்தம் அவதரித்திருக்கும் தாம் தற்சமயம் யாதவர்கட்கு நேர்ந்திருக்கும் ஆபத்தினின்றும் அவர்களைக் காக்கும்பொருட்டு தெய்வகதியாய் தமக்காக வந்திருக்கும் ரதம் முதலியவைகளை ஏற்றுக்கொண்டு சமர்க்கு எழுந்தருளவேண்டும் என்று அருளிச்செய்ய, அவரது வார்த்தைக் கிசைந்து அவருடைய மதுரவார்த்தைகளைச் சிலாகித்து யுத்தத்திற்குப் போக இரண்டு பெயரும் கவசங்களைப் பூண்டுகொண்டு இரதத்தின் மீதேறித் தங்களுடைய திவ்வியாயுதங்களை யெடுத்துக் கொண்டு நகரத்தை விட்டு வெளிப்பட்டு வந்தார்கள்.

இப்படி இராம கிருஷ்ணர்களிருவரும் வெளிப்பட்டு வந்து சுவாமி சந்திரன்போன்ற வெண்மையுடைய சங்கத்தை யெடுத்துப் பூரித்தார். அந்தத் தொனியை ஜராசந்தனுடைய சேனைகள் கேட்டு காதுகளடைபட்டும் குதிரைகள் பயந்து மல மூத்திரங்களைப் பெருகிக்கொண்டும் ஆகாயத்தில் பறக்கின்ற பறவைகள் கீழே சுழன்று விழுந்தும் வருந்தின. ஜராசந்தனும் ஒரு முகூர்த்தம் சோர்வடைந்து பின்பு ஸ்ரீ ராமகிருஷ்ணர் ளிருவரையுங் கண்டு மிகவுங் கோபத்தோடு சொல்லுகின்றான்: அடா கிருஷ்ணா! இதுவரையில் காட்டிலும் மலைகளிலுந் திரிந்து காலங்கழித்த நீங்களா யுத்தஞ் செய்ய வல்லவர்கள். இது விந்தையே! ஆனாலும் நீ மிகவும் பாலனாயும் அவிவேகியாயு மிருக்கின்றமையால் உன்னுடன் நான் யுத்தஞ் செய்கிறதில்லை யென்று பலராமனைப் பார்த்து அட அவிவேகியே! நீ என்னோடே யுத்தஞ் செய்ய வந்தா யல்லவா? என்னுடைய பலந் தெரியாமல் வந்துவிட்டாய். இதோ ஒரு க்ஷணத்திற்றானே மார்பு பிளக்க இரத்தங் கக்கிக் கொண்டு கீழேவிழுந்து பிராணனைவிட்டு நீ வீரசொர்க்கத்தை யடையும்படி செய்கின்றேன். உனக்குப் பிராணனிடத்தில் ஆசையிருக்குமாகில் இதை விட்டுச் சீக்கிரமாக ஓடிப்போய் விடு; எந்தக் காலத்திலாவது யாதவர்கள் யுத்தஞ்செய்து

ஜயித்தார்களென்ற பெயருண்டோ? நீங்களிரண்டு பேரும் பாலர்களாயுங் கோகுலத்தில் இடையன் வீட்டினில் நன்ருய்த்தின்ற கொழுப்பினுல் உங்களை நீங்கள் மறந்து யமனைப்போலிருக்கின்ற என்னோடு எதிர்த்து யுத்தஞ்செய்ய வந்தீர்கள். என்று கர்ஜித்தான்

ஜராசந்தனுடைய வார்த்தையைக்கேட்டு ஸ்ரீ கிருஷ்ண பகவான் புன்னகைகொண்டு "அடா ஜராசந்தா! உலகத்தில் சூரர்கள் இப்படி ஒருவரும் வாயினுற் பிதற்றமாட்டார்கள். செய்கையில் தன் சமர்த்தைக் காட்டுவார்கள். உன்னுடைய வன்மையை நான் நன்ருய்த் தெரிந்துகொண்டேன். நீ ஒரு நாழிகையில் யமபுரத்தை அடையப்போகிருய். நீ எனக்கு சுத்த வீரனுகத் தோன்றவில்லை" யென்று சொன்னுர்.

அந்த வார்த்தைகளைக் கேட்டு ஜராசந்தன் கண்களை உருட்டி விழித்துப் பார்த்து சகல சேனைகளோடுங் கூட ஸ்ரீ ராம கிருஷ்ணர்களிருவரையும் நான்கு பக்கத்திலும் சூரியனை மேகம் சூழ்ந்து கொள்வதுபோல வந்து சுற்றிக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய இரதத்தில் கட்டியிருக்கின்ற கருடத்துவஜமும் ஸ்ரீபலராமருடைய இரதத்தில் கட்டியிருக்கின்ற சொர்ண பனைக்கொடியும் தெரியாமல் மறைந்துபோகும்படி பாண வருஷங்களை பெய்தான். அதை மதுரா பட்டணத்தில் கோபுரங்கள் பேரிலுங் கொத்தளங்கள் பேரிலும் ஏறி வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கின்ற மாதர்கள்கண்டு மிகவு மனவருத்தமுற்று அயர்ந்தார்கள். பின்னும் ஜராசந்தனுடைய சூரர்கள் பாணங்களை ஓய்வில்லாமல் விடுத்து யாதவசேனைகளைச் சின்ன பின்னமாய்த் தலை வேறு கால்வேறு கைகள்வேறு உடல்வேருக அறுபட அடித்துத் துன்பஞ்செய்வதை ஸ்ரீ கிருஷ்ண பகவான் பார்த்து சாரங்கமென்கிற தமது வில்லை எடுத்து நாணேற்றி பாணங்களைச் சொரிய பலம்பொருந்திய ஆனைகள் கால்களொடிந்து தலைகள் பிளந்தும் துதிக்கைகளறுந்தும் மலைகளைப்போலக் கீழே விழுந்தன, குதிரைகளின் தலைகள் வெட்டுண்டும் சரீரம் அறுபட்டும்போய் விட்டன. காலாள்களிலும் தலைபோனவர்களும் கால்போனவர்களும் மார்பு பிளந்தவர்களுமாகி யுத்தபூமியில் விழுந்து நிறைந்து போயினர். இரதங்களும் குத்துக்கால் முறிந்து அச்சுகள் பிளந்து வண்டிகள் முறிந்து துவஜங்களறுபட்டு குதிரைகளும் போய்ச் சாரதிகளும் அதமாயினர்.

அப்போது சுவாமி கையிலிருந்த வில் அக்கினியைக் கக்கிக்கொண்டு மண்டலாகாரமாகச் சுழன்றுக் கொண்டிருந்த தாக தோன்றியதேயன்றி பாணப்பிரயோகஞ் செய்வதாய்ப் பிறருக்குத் தெரியாமலே யிருந்தது. ஜராசந்தனுடைய இருபத்து மூன்றக்குரோணி சேனைகளையும் சங்கரித்து ஜராசந்தனுடைய இரதம்-குதிரை-சாரதி - துவஜம்-வில் முதலிய எல்லாவற்றையும் அறுத்துப் பங்கஞ்செய்து பலராமரானவர் அவனைப் பிடித்துக்கொள்ள, அதை ஸ்ரீ கிருஷ்ண பகவான் பார்த்து இன்னம் அவனால் அநேக காரியமாக வேண்டுமென்று அந்த ஜராசந்தனை விட்டுவிடச் சொன்னார். இப்படிக்கு இராம கிருஷ்ணர்களால் விடுபட்ட ஜராசந்தன் வெகு துயரமுற்று மிகுந்த அவமானப்பட்டு மறுபடியும் தனது இராஜ்ஜியத்திற்குப் போகிறதா வென்று மிகுந்த வெட்கத்துடன் வனத்தை நோக்கித் தவத்திற்குப்போகப் பிரயத்தினஞ்செய்ய அப்போது சில இராஜாக்கள் கூடி அவனை மறித்து நயவார்த்தைகளினாலே சமாதானஞ்செய்து பட்டணத்திற்கு அழைத்து வந்தார்கள்.

ஸ்ரீ ராம கிருஷ்ணர்களிருவரும் யாதவர்களுக்கோர் உபத்திரவமின்றி சம்ரக்ஷித்து தேவர்கள் புஷ்பமாரி சொரிய, கந்திருவர் கானஞ்செய்ய, அப்சரஸ்திரீகள் நடிக்க, ரிஷிகள் வேதபாராயணஞ் செய்ய, சங்க முதலிய அநேக வாத்தியங்கள் முழங்க, மார்க்கங்களில் தோரணங்கள் கட்டி, தீபஸ்தம்பங்களை நட்டு வீதிகளிற் புஷ்பங்களிறைத்து நான்கு பக்கத்திலும் விசேஷ தீபங்கள் தூபங்கள் போட்டு வீடுகள்தோறுந் துவஜங்களெடுத்துக் கட்டி சர்வாலங்காரமுஞ் செய்து, வேதியர்கள் சுவஸ்திவசனங் கூற, விருஷ்ணிகள் முதலிய யாதவர்கள் மாதவர்களோடேகூட பூரண கும்பங்களையும் புஷ்பங்களையு மெடுத்துக்கொண்டு காணிக்கை கொடுக்க, மற்ற நாகரீக ஸ்திரீகள் யாவருங் கடைக்கண்ணாற் பார்த்து பரமானந்தத்தை அடைய, மிகுந்த சந்தோஷத்தோடே ஸ்ரீ கிருஷ்ண பகவான் பலராம சகிதராய் மதுராபுரியிற் பிரவேசித்து ஜராசந்தனுடைய சேனையில் நின்றும் வந்த பூஷணங்கள் யாவும் உக்கிரசேன மஹா ராஜனுக்குக் கொடுத்து விட்டுத் தமது கிருகத்திற் கெழுந்தருளினார்.

அந்த ஜராசந்தன் இப்போது எத்தனை அக்குரோணி சேனையுடன் யுத்தத்திற்கு வந்தானோ அத்தனைச் சேனைகளுடன் பதினேழுதரம் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் யுத்தஞ் செய்ய வந்து அந்தச் சுவாமியினுடைய பிரபாவத்தினால் ஜராசந்தன் பராரியாய்ப் போய்விட்டனன். பிறகு பதினெட்

டாவது தரம் அந்தப்படி சேனைகளை அவன் தோழன் காலயவனென்னும் அசுரனுடைய மூன்றுகோடி மிலேச்சர்களுடன்கூட வந்து மதுராபுரியைச் சுற்றிக்கொண்டான். அதை யறிந்த ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியானவர் பலராமனைப் பார்த்து "தேவ! இந்த யாதவர்களுக்கு நம்மைப் பற்றி அநேக ஆபத்துகள் வந்தன. அவைகளெல்லாந் தேவரீருடைய கடாக்ஷத்தினால் நிவர்த்தியாயின. இப்போது சூரனை காலயவன் பட்டணத்தை வந்து சுற்றிக்கொண்டான். ஜராசந்தனும் இன்றைக்கோ நாளைக்கோ வரப் போகிறான். நாமிருவரும் இந்தக் காலயவனுடன் யுத்தஞ் செய்கிற தருணத்தில் அந்த ஜராசந்தன் நம்முடைய பந்துக்கள் யாவரையும் சங்கரித்துப் போடுவான். அல்லது தனது பட்டணத்திற்காவது கொண்டு போய் விடுவான். ஆதலால் மனிதர்கள் பிரவேசிக்க வொண்ணாத ஒரு துர்க்கம் உண்டு பண்ணி அதில் யாதவர்களை வைத்துவிட்டுப் பிறகு இந்தக் காலயவனுடன் யுத்தஞ் செய்வோமென்ன, இருவரும் யோசித்து மேற்றிசையிலுள்ள சமுத்திர மத்தியில் தெற்கு வடக்கு பன்னிரண்டு யோசனை யகலமும் கிழக்கு மேற்கு இருபத்துநாலு யோசனை நீளமு முள்ளதாக ஒரு துர்க்கம் நிர்மாணஞ்செய்ய விசுவகர்மனுக்கு ஆக்யாபித்தனர். அவனுந் தன்னுடைய முழு சமர்த்தையும் அந்தப் பட்டணம் நிர்மிப்பதில் செலுத்த வேண்டுமென்று நினைத்து மேக மண்டலத்தை யளாவிய உப்பரிக்கைகள் நிறைந்த அமராவதி பட்டணத்திற் கொப்பானதோர் நகரத்தை நிருமித்து அதன் மத்தியில் சர்வ சிரேஷ்டமாக இராஜகிருக மூண்டு பண்ணி ஸ்ரீ கண்ணபிரானுடைய சமீபத்திற்கு வந்து தண்டனிட்டு ஜகத்பதியான சுவாமீ! அடியேனால் ஒரு பட்டணம் நிருமிக்கப்பட்டது. துவாரகையெனும் அந்தப் பட்டணத்திற்கு தேவரீர் கிருபைசெய்து எழுந்தருள வேண்டுமென்று விக்கியாபனஞ் செய்ய, ஸ்ரீ கிருஷ்ண பகவானு மப்படியே அங்கீகரித்தனர்.

பிறகு தேவேந்திரனனவன் முன்பு தான் மதுரைக்கு அனுப்பியிருந்த சுதர்ம மென்கிற சபையை இப்போது துவாரகைக்கு எடுத்தனுப்பிவிட்டு ஒரு காது பசுமையாய் மற்ற அவயவங்கள் வெண்மை பொருந்தியதா யிருக்கின்ற ஆயிரங் குதிரைகளைச் சுவாமிக்கு வெகுமதியாகத் துவாரகைக் கனுப்பக் குபேரனும் அந்தப் பட்டணத்தை நவநிதிகளால் நிறைத்துப்போட மற்ற லோகபாலர்களும் தங்கள் லோகங்களில் அரிதாயிருக்கின்ற வஸ்துக்களை கொண்டு

வந்து அந்தப் பட்டணத்தை நிறப்ப, இவைகளை அங்கீ கரித்து ஜகத் குருவான ஸ்ரீ வாசுதேவரானவர் தமது யோக சக்தியினால் மதுரையிலுள்ள சகல பந்து ஜனங்களையுங் கொண்டுவந்து துவாரகா பட்டணத்தில் சேரச்செய்து பல ராம சகிதராய் மதுரைக் கெழுந்தருளி, அந்தப் பட்டணத் தில் நின்றும் வெளிப் புறப்படுகிறவர்போல நிராயுதராய்ப் புறப்பட்டார்.



## ஐம்பத்தோன்றுவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ண பகவான் காலயவனை முசுகுந்தனால் சம்ஹரிப்பித்து அந்த முசுகுந்தனுக்கு மோக்ஷப் பிரதானஞ் செய்து துவாரகாபுரிக்கு எழுந்தருளினாரென்று சொல்லப்படுகின்றது.*

பார்த்தனது பௌத்ரனே! ஒருநாள் யாதவர்களுக்குப் புரோகிதரான கற்காசாரியர் வைராக்கியத்துடன் இந்திரிய நிக்கிரகஞ் செய்தவராகி யாதவர்களுடைய சபையிலிருக்கை யில் அவருடைய மைத்துனன் இந்தக் கற்காசாரியரை நபும்சகனென்றும் இவரால் ஸ்திரீகளுக் கொன்றும் பிரயோ ஜன மில்லையென்றும் பரிகாசஞ் செய்தனன். அவனை யாதவர்கள் யாவரும் சொல்லவேண்டாமென்று தடுக்காமல் தாங்களும் அவ்வண்ணம் பரிகாசஞ் செய்தார்கள். இது கண்டு கற்காசாரியருக்குக் கோபமீறி யாதவர்களை நோக்கிக் கேளீர் யாதவர்களே! நீங்களுங் கொஞ்சங்கூட பயமில்லாம லிப்படிக் கென்னைப் பரிகாசஞ் செய்தபடியால் உங்களை நாசஞ் செய்ய ஒரு புத்திரனை யுண்டு பண்ணுகிறேனென்று பரம சிவனைக் குறித்து உக்கிரமான தவஞ்செய்து அந்த உமா ஹேஸ்வரனுடைய அனுக்கிரகம் பெற்று தமது மனைவி யிடத்தில் புத்திரோற்பத்தி செய்ய வரும்போது அவரை நெடுங்காலம் புத்திரனில்லாத யவன தேசத்தரசனானவன் கண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்து, மிகவும் நயமுறப் பேசி தனது பத்தினியினிடத்தில் புத்திரோற்பத்தி செய்யவேண்டு மென்று விரும்பினன். அவ்வண்ணமே அந்த இராஜாவின் மனைவியிடத்தில் புத்திரோற்பத்தி செய்தனர். அந்த புத்தி ரனே இந்தக் காலயவனானவன் தோழனான ஜராசந்தனுக் குச் சகாயமாக யாதவர்களைக் கொல்ல வேண்டுமென்று மதுராபுரியை வந்து சுற்றிக்கொண்டான்.

இந்த மர்மந் தெரிந்த ஸ்ரீ பகவான் துவாரகையில் யாதவர்களை வைத்துப்போட்டு தாம் பலராம சகிதராய் மதுரையிலிருந்து வருபவர்கள்போல் நிராயுத ராயும் பூரணச்சந்திரன் போன்ற முகத்தினையுடைய திவ்விய பீதாம் பரதாராய் ஸ்ரீ வத்சமறுவோடு கௌஸ்துவாபரணத்துடன் விளங்குகின்ற கண்டமும் முழங்கால் வரைக்குந் தொங்கு கின்ற நான்கு கைகளும் மிகவும் சுந்தரமுள்ள திருக்கண்க ளும் கஸ்தூரி திலகமுந் தரித்து திவ்ய லக்ஷண சம்பன்ன ராய் புன்னகையுடன் கால் நடையாகப் புறப்பட்டு வருகின்ற ஸ்ரீ கிருஷ்ணனை முன்னால் தனக்கு நாரதர் சொல்லியிருந்த குறிகள் சரியாக விருக்கக் கண்டு இவனே கிருஷ்ணனாக வேண்டுமென்று கருதி அந்த தேக சௌந்தரியத்தைப் பார்த்துத் திருப்தியடையாமல் ஆச்சரியமுற்று தானும் கால் நடையாகவே அவரோடு யுத்தஞ் செய்யவேண்டுமென்று எதிராகவோடி வந்தான்.

அவனைப் பார்த்து பகவான் பயந்தவரைப்போல ஓடி னார். அப்போதந்த காலயவன் தனக்குப் பயந்து ஓடின தாகவே எண்ணிக்கொண்டு அடா கிருஷ்ணா! உனது பராக்கிரமம் இவ்வளவுதானா? சூரனான நீ இப்படி ஓட லாமா? வென்று சொல்லிக்கொண்டு துரத்தினான். அப் போது சுவாமியானவர் கையிலகப்படுகிறவர் போல வெகு தூரம் ஓடி முசுகுந்தச் சக்கிரவர்த்தி தூங்குகின்ற குகை யினிற் புகுந்து மறைந்துகொண்டார். அந்தக் காலயவனுங் குகையினிற்சென்று அதில் சகலாலங்காரத்துட னிருக்கின்ற ஓர் கட்டிலின்மீது மலைபோன்ற சரீரத்துடன் நித்திரை செய்கின்ற முசுகுந்தச் சக்கிரவர்த்தியை ஸ்ரீ கிருஷ்ணனாக வெண்ணிக் கோபத்துடன் காலாலோங்கி மார்பினி லுதைத் தனன். அப்போதந்த முசுகுந்தன் அநேக நாளாய் நித்தி ரைப் பண்ணிக்கொண்டிருந்தவ னாதலால் மெல்லென வெழுந்து கண்களை விழித்து நான்கு திசையிலும் நோக்கிப் பார்க்கையி லருகாமையி லிருக்கின்ற காலயவன் கண்ணிற் பட்டான். அப்போது தன்னுடைய வயிற்றினிலிருக்கின்ற ஜடராக்கினியால் காலயவன் பஸ்பமாய் தகிக்கப்பட்டான்.

முசுகுந்தனது சரித்திரத்தை அறிய விரும்பிய பரிக்ஷித்துவின் மனம் களிக்க, சுகர் அருளுகின்றார். இக்ஷு வாகு வம்சத்தில் மகா புண்ணியசாலியாகிய மாந்தாதா வென்றொரு அரசனிருந்தான். அவனுடைய மைந்தன் முசுகுந்த னென்கிறவன் சக்கரவர்த்தியாய் மிகவுந் தர்ம சிந்தை யுடையவனாய் பகவத் பக்தர்களுக்குள் சிறந்தவனாய்

தேவேந்திரனுக்கொப்பான பராக்கிரமத்துடன் அயோத்தியா பட்டணத்தை அரசுசெலுத்தி வந்தான். ஒரு காலத்தில் தேவர்கள் அசுரர்களாலடிக்கப்பட்டு அந்த வருத்தம் பொறுக்க மாட்டாமல் மகா தயாளுவான முசுகுந்தனன்டையிலோடிவந்து இரக்ஷிக்கும்படி முறையிட்டார்கள். அப்படியே அத் தேவர்களோடே சொர்க்கலோகத்திற்குச் சென்று அசுரர்கள் யாவரையும் சங்கரித்து தேவர்களுடைய பயத்தை நிவாரணஞ்செய்து ஸ்ரீ சுப்பிரமணியர் தேவ சேனாதி பத்தியத்திற்கு வருமளவும் தான் சேனாதிபதியாக அந்தச் சொர்க்கத்திற்றானே வாசஞ் செய்தனன். பின்பு சகல தேவர்களுடன் தேவேந்திரன் மிக மகிழ்ந்து முசுகுந்தச் சக்ரவர்த்தியே! உம்மால் யாங்கள் அசுரர்களுடைய துன்பத்தில் நின்றும் நீங்கி இரக்ஷிக்கப்பட்டோம். எங்கள் நிமித்தம் உம்முடைய இராஜ்ஜியத்தையும் பெண்டீர் புத்திரர்களையும் பந்துக்களையும் சுகத்தையும் நித்திரையையும் ஒழித்து வெகு கஷ்டப்பட்டீர். ஆதலால் உமக்கு வேண்டுவதைக் கேளுமென்று கேட்க முசுகுந்தன் "இப்போதெனக்கு மிகவும் ஆயாசமாயிருக்கின்றது. நன்றாய் நித்திரை செய்யவேண்டும்" என, தேவர்கள் அப்படியே நித்திரை செய்க, உம்மை மத்தியிலெழுப்பு மெவனாலும் சாம்பராய் போகக் கடவனென்று அனுக்கிரகஞ் செய்தனர். அந்தப் பலத்தினால் காலயவன் தகிக்கப்பட்டான்.

உடனே ஸ்ரீ கிருஷ்ணர் முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு விராட்புருஷ லக்ஷணரூபமாகப் பிரத்தியக்ஷமாய் சேவை தந்தனர். அப்போதவரைப் பார்த்து ஆச்சரியமடைந்து "வாகனாரூடராய்ச் சஞ்சரிக்கத்தக்க தேவரீ ரிவ்வனத்தில் இருளடைந்த குகையிலுந் துர்க்கங்களிலுங் கால்நடையாக என்ன நிமித்தமாகச் சஞ்சரிக்கின்றீர். ஒளிக்குளொளியாகிய சூரியனோ? அக்கினியோ? சந்திரனோ? தேவேந்திரனோ? தேவனான ஸ்ரீ யப்பதியோ? தேககாந்தியால் இக்குகையினிலுள்ள இருளை நாசமடையச் செய்கின்ற தேவரீருடைய ஜன்ம கர்மங்களை விசிதமாகத் தெரிந்து கொள்ள அன்பு மேலிட்டும் உம்மிட சொரூபத்தினால் பயமுண்டாய் சோர்வுறச் செய்கின்றது" என்று சொல்ல, அவனைப் பார்த்து புன்னகையுடன் மேகம்போலக் கம்பீரமாய் பகவான் அருளிச்செய்கின்றார்.

ஹே ப்ரிய! என்னுடைய ஜன்ம கர்மங்களை ஒருவருமறியமாட்டார்கள். ஜகத்தைச் சிருஷ்டித்தல் இரக்ஷித்தல் சங்கரித்தல் இவைகளிலெனக்கு ஜன்மமுங் கர்மமுமிருக்கும்.

அதைச் சொல்ல ஆரம்பித்தால் உனக்குக் கேட்க ஆயுளு மில்லை. அறிவதற்குக் கியானமுமில்லை. ஆயினும் சங்கிரம மாகச் சொல்லுகிறேன், கேள். இப்புவியில் அசுரர்கள் மேலிட்டு சகல ஜனங்களையும் துன்புறச்செய்து கொண்டிருந் தார்கள். அவ் வசுரபாரத்தைப் பொறுக்க மாட்டாமல் பூமி தேவி பிரமனிடத்தில் முறையிட்டனள். பிரமன் அப்பூமி தேவியை சகல தேவர்களுட னழைத்துக்கொண்டு என்னைக் குறித்துத் துதிசெய்து பூமி பாரத்தைத் தீர்க்கவேண்டு மென்று பிரார்த்தித்தார்கள். அவர்களிஷ்டத்தைப் பூர்த்தி செய்வதற்காக நான் வசுதேவருக்குப் புத்திரனாக அவதரித் தேன். என்பெயர் வாசுதேவனென்று சொல்லுவார்கள். காலநேமி யென்கிற அசுரன் கம்சனாய்ப் பிறந்திருந்தான். அவன் என்னால் பரிவாரத்துடன் கொல்லப்பட்டான். நீ முன்பு என்னை மிகுந்த பக்தியுடன் ஆராதனஞ் செய்திருந்தா யாதலால் உனக்குப் பிரத்தியக்ஷமாய் அனுக்கிரகஞ் செய்ய வேண்டியும் இந்தக் கண்டகனான காலயவனைக் கொல்ல வேண்டியும் இக்குகையிற் பிரவேசித்தேன். அந்தக் காலய வனும் நாசமானான். என்னை யாராதித்த எவனும் நன்மை யை யடைவானாதலால் உனக்கு வேண்டுவதைக் கேட்டுக் கொள்ளென்று அருளிச்செய்ய, ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய அமிர்த வார்த்தைகளைக் கேள்வியுற்று முசுகுந்தன் சந்தோ ஷத்துட னெழுந்திருந்து ஸ்ரீ கண்ணபிரானை சாஷ்டாங்க மாக சேவித்து அஞ்சலிகூப்பி பக்தியுடன் விக்ஞாபனஞ் செய்கின்றான் :

தேவ தேவா! தேவரீர் ஸ்ரீமந் நாராயணனென்று இப்போது தான் தெரிந்துகொண்டேன். அடியேன் அரசாக்ஷி செய்யுங் காலையில் விருத்த கார்க்கரென்கிற ஒரு மகாரிஷி இருபத்தெட்டாவது சதுர்யுகத்தில் ஸ்ரீமந் நாராயணன் திருவவதாரஞ் செய்து உனக்குப் பிரத்தி யக்ஷமாகப் போகிறாரென்று சொல்லி யிருந்தார். அவ் வண்ணமே தேவரீரை இப்போது பிரத்தியக்ஷமாய்ச் சேவித்து கிருதார்த்தனானேன். அடியேன் இதுவரை யில் உத்தமமான மானிட ஜன்மத்தை யடைந்திருந்தும் அதற்குரிய மோக்ஷத்திற்குக் காரணமான தேவரீருடைய திருவடியையும் பாகவதர்களுடைய சகவாசத்தையும் மறந்து நரகத்திற்குக் காரணமான சமுசாரத்தை பரம புருஷார்த்த மென்று நினைத்து மோசம்போனேன். இனிமேலுமப்படி மோசம்போகாமல் சாசுவதமாகியும் ஆனந்தமயமாகியு மிருக் கின்ற மோக்ஷத்தைத் தாநின்ற தேவரீருடைய திருவடி

யில் பக்தியும் பாகவதர்களுடைய சகவாசமும் நிரந்தரமா யிருக்கும்படி கிருபை செய்யவேண்டும் என்ன, பகவானவர் கபடமாய் முசுகுந்தனைப் பார்த்து உனக்கு வேண்டியதைக் கேளுமென்று சொன்னால் வேறொன்றையும் விரும்பாமல் என்னுடைய திருவடியில் பக்தியிருக்கவேண்டுமென்று கேட் கின்றாய். அதனாலென்ன பிரயோசனத்தை அடையப் போகின்றாயென்று அருளிய ஸ்ரீ கண்ணபிரானைப் பார்த்து முசுகுந்தன் சொல்லுகின்றான்.

கேளீர் தீனபந்துவான சுவாமீ! அடியேன் பூர்வஞ் செய்த கர்மவினையால் வெகு கிலேசங்களை யனுபவித்து பஞ்சேந்திரியங்களையும் வெல்லமாட்டாமல் அவைகளால் நானாவிதமாக இழுக்கப்பட்டு மகா பிரயாசையினால் தேவரீ ரைக் கண்டு சரணமடைந்தேன். இப்போதும் உபேக்ஷை செய்யாம லடியேனை எவ்விதமாவது இரக்ஷிக்கவேண்டு மென்று சுவாமியினுடைய இரண்டு திருவடிகளையும் பற்றிக் கொள்ள, அவனைப் பார்த்து ஹே பக்தசிரேஷ்ட! நின் விருப்பின்படி நித்ய சுகம் நினக்கு லபிக்கட்டும். ஆனால் இந்த ஜன்மத்தில் நீ க்ஷத்திரிய தர்மத்திலே யிருந்து தவஞ் செய்து, மறு ஜன்மத்தில் பிராமணனாய்ப் பிறந்து எனது பதவியை அடைவாயென்று பகவான் அநுக்ரகஞ் செய்தனர்.

இப்படி ஸ்ரீ கிருஷ்ண பகவானால் முசுகுந்தன் அனுக் கிரகிக்கப் பட்டுக்கொண்டு அவரைப் பணிந்து விடைபெற்று பர்வத குகையில் நின்றும் வெளிப்பட்டு குறுகிய அற்ப பலமு டைய மனிதர்களையும் அற்ப க்ஷீரங்களையுடைய பசுக்களையும் மற்ற உலகப் பொருள்களையும் பார்த்து வைராக்கியம் பிறந்து ஸ்ரீ பகவானுடைய திருவடிகளில் மனதைச் சலிக்கவொட் டாமல் தியானித்துக்கொண்டு போய்க் கந்தமாதன பர்வதத்தி லிருக்கின்ற நரநாராயண பதரிகாசிரமத்தில் தவஞ் செய்ய லானான். பிறகு ஸ்ரீ கிருஷ்ண பகவான் பர்வத குகையினி லிருந்து வெளிவந்து மதுராபுரத்திற்குப் போய் காலயவ னுடன்கூட வந்த மூன்றுகோடி துலுக்கரை ஏககாலத்தில் சங்கரித்து சந்தோஷமாய் மதுரையிலிருக்கையில் சராசந்தன் திரும்பவும் இருபத்து மூன்றக்குரோணி சேனைகளோடே மதுரையை வந்து வளைத்துக்கொண்டனன். அப்போது ஸ்ரீ பகவானவர் அந்த ஜராசந்தனையும் சேனையையும் பார்த்து பயந்தவரைப்போல பலராமருடன் கோமந்த பர்வதம்நாடி யோடினார். அவர்களைப் பார்த்து சராசந்தன் பரிகாசஞ் செய்து பின் தொடர்ந்தோடினான்.

அப்போது ராமகிருஷ்ணர்களிருவரும் மலையின் பின்புறத்தி லொளித்துக்கொண்டார்கள். ஜராசந்தன் பதினொரு யோசனை அகலமும் உயரமுமுள்ள அம்மலையின் ஆதியந்தந் தேடியும் அவ் விருவர்களையும் கண்டுபிடிக்க மாட்டாமல் அம்மலையை அநேககோடி விறகு சுமைகளைக் கொண்டுவந்து சுற்றிலும்போட்டுத் தீமூட்டினன். அம்மலையில் நான்கு திசையிலும் தீபற்றிக்கொண்டு பிரளயகால அக்கினியைப் போல விளங்கியது. அப்போது ஸ்ரீ ராம கிருஷ்ணர்களிருவரும் ஆகாய மார்க்கமாக வெளிவந்து ஜராசந்தனுடைய சேனைகளைச் சங்கரித்துப்போட்டு ஏகாந்தமாய் துவாரகா பட்டணத்திற்குச் சென்றனர். பிறகு ஜராசந்தன் ஸ்ரீ ராம கிருஷ்ணர்கள் அக்கினியில் மாண்டார்களென்று நிச்சயித்து திரும்பிவந்து பார்த்து தனது சேனைகளெல்லாம் மாண்டிருப்பது கண்டு மனந் தளர்ச்சியுற்று ஆச்சரியத்துடன் தனது பட்டணத்திற்குச் சென்றான்.



## ஐம்பத்திரண்டாவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவான் துவாரகாபுரத்திற்கு எழுந்தருளியதும், ஸ்ரீ ருக்மணீதேவி ஸ்ரீ கிருஷ்ணருக்கு லிகிதம் எழுதி ஒரு பிராஹ்மணன் மூலமாய் தூதனுப்பியதும் சொல்லப்படுகின்றது.*

வாராய் பரிக்ஷித்து வேந்தே! இப்படி துவாரகா பட்டணத்திற்குப் போய் ஸ்ரீ ராம கிருஷ்ணர்கள் சுகமாயிருக்குங் காலையில் ஆனர்த்ததேசத்திற் கரசனான ரைவதகனெனும் பெயருடைய மஹாராஜன் பிரம்ம தேவனுடைய அனுக்கிரகத்தாலுண்டான ரேவதியென்கிற தனது கன்னிகையை பலராமருக்கு விவாகஞ் செய்து கொடுத்தனன். இனி ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஸ்ரீ ருக்மணி தேவியை ஆசுர விதியினால் விவாகஞ்செய்ததை கேட்பீராக.

விதர்ப்பதேசத்தில் மகா தர்ம சிந்தையுள்ள பீஷ்மகனென்கிற மகாராஜன் அரசுசெலுத்தி வந்தான். அவனுக்கு உருக்குமி, உருக்குமிரதன், உருக்குமிபாகு, உருக்குமிகேசி, ருக்குமி நேத்திரன் எனும் ஐந்து குமாரர்களும் ஸ்ரீ மகாலக்ஷ்மியினுடைய அம்சையாய் சகல லக்ஷண சம்பன்னையான உருக்குமினிதேவி யென்றொரு பெண்ணும் பிறந்திருந்தனள். ஸ்ரீ ருக்மணிதேவி தனது கிருகத்தினில் வரப்பட்ட பெரியோர்கள் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திவ்விய கல்யாண

குணங்களைச் சொல்லக் கேள்வியுற்று, பரமாநந்த மடைந்து அந்தக் கண்ணபிரானை பகவானையே தனக்கு உகந்த நாயகராக நினைத்து அவருடைய திருவடிகளைச் சார்ந்த மனமுடையவளாய் தியானித்துக் கொண்டிருந்தாள். அக் கருத்தைத் ஸ்ரீ ருக்மணி தேவியினுடைய தாய் தந்தையர்க ளறிந்து அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கே விவாகஞ் செய்து கொடுக்கச் சம்மதித் திருந்தனர். இவ்வாறே ஸ்ரீ கிருஷ்ண பகவானும் இந்த ஸ்ரீ ருக்மணி தேவியினது சௌந்தரியங்களையும் நற்குணங்களையும் கேள்வியுற்று அவளே தமக்கு உயர்ந்த நாயகியென்று கருதி விவாக காலத்தை எதிர்பார்த்திருந்தனர். இப்படி யிருக்கையில் அந்த பீஷ்மக னுடைய முதற் புத்திரனும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு விரோதியாயு மிருக்கின்ற உருக்மியென்பான் அந்த ஸ்ரீ கிருஷ்ணனுக்கு இந்த ஸ்ரீ ருக்மணி தேவியைக் கொடுக் கக்கூடாது, சேதி தேசத்திற் கரசனை சிசு பாலனுக்கே கொடுக்கவேண்டு மென்று நிச்சயித்திருந்தனன். அதை யறிந்த ஸ்ரீ ருக்மணி தேவியானவள் இதைச் சுவாமிக்கு விக் யாபனஞ் செய்யவேண்டுமென்று கருதி ஒரு பிராம்ஹணரை வரவழைத்து அவருட னிந்தச் சங்கதிகள் யாவற்றையுஞ் சொல்லி அவருக்கு வேண்டிய வெகுமதிகளைக் கொடுத்து ஒரு பத்திரிகையு மெழுதிக்கொடுத்து அனுப்பினாள்.

அவ் வேதியரும் தக்ஷணமே விதர்ப்ப தேசத்தினின்றும் புறப்பட்டு துவாரகா நகரத்திற்குச் சென்று ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திருமாளிகையின் அருகினிற்போய் அவ்விடத் திலுள்ள காவலாளிகளுடன் தாம் விதர்ப்பதேசத்திலிருந்து அரவிந்தாக்ஷனைச் சேவிக்க வந்ததாகச் சொல்லி யனுப்ப, அவர்களுமப்படியே விக்யாபனஞ்செய்ய, அதைக்கேட்ட ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியும் அவ்வந்தணரை அந்தப்புரத்திற் கழைத்து வரச்சொல்லி தானும் எதிர்கொண்டுவந்து அந் தப் பிராமணரை விதிப்படி பூஜித்து அழைத்துப்போய் ஆசனத்தமரச்செய்து அனேக கனிவர்க்கம் முதலியவற்றால் திருப்தியும் கந்த புஷ்பங்களால் அலங்காரமுஞ் செய்வித்து தாம்பூலங் கொடுத்து கட்டிலின் மீதவரைப் படுக்கச்சொல்லி அவருடைய பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு அவரைப் பார்த்து அருளிச் செய்கின்றனர் :

பூசுரோத்தமரே! தாம் யாவர்? எந்த திவ்ய பதியில் தாம் வசிக்கின்றீர்கள்? என்னை நாடி தாம் எழுந்தருளிய கார் யம் யாது? தம் நித்ய தர்மங்கள் குறைவிலாமல் நடந்து தமக்கு சந்துஷ்டியை விளைவிக்கின்றனவா? என்றிவ்விதம்

ஆதரவாய் கேட்கும் அந்த பகவானைப் பார்த்து அவ்வேதியர் சொல்லுகின்றனர் : கேளீர் சுவாமி அரவிந்தாக்ஷரே! அடியேன் விதர்ப்ப தேசத்துள்ளதோர் வேதியன். தேவரீருடைய அனுக்கிரக பலத்தினால் சகல தர்மமும் ஒரு குறைவு மில்லாமல் நடந்து வருகின்றது. எமது அரசரான பீஷ்மகருக்குத் திருமகளே ஓர் ஒப்பற்ற தவமகளாக பிறந்திருக்கிறாள். ஸ்ரீ ருக்மணி யெனும் அத்தேவி தம்மைத் தவிர பிறரை மணப்பதில்லையென தீர்மானித்து, அல்லும் பகலும் தம் பதபத்மங்களையே தன் மனதில் இருத்தி இயற்றும் பூஜையை என்னென்றுரைக்க வல்லேன். இதையறிந்த அவனது தாய் தந்தையரும் அச்செல்வியை தேவரீருக்கே கன்னிகாதானஞ் செய்து கொடுக்க இசைந்திருக்கிறார்கள். ஆனால் ருக்மி எனும் அத்தேவியினது தமயனோ அவளை சிசிபாலனெனும் ஓர் தூர்த்தனுக்கே மணம் செய்விப்பதா யிருக்கின்றான். இதைக் கேட்க சகியாத ஸ்ரீ ருக்மணியம்மை தமக்கு இவ்விருத்தாந்தத்தை யறிவித்து தம்மை வந்து ஆட்கொளும்படி வேண்டி நிற்கின்றனள்.

திருமண நாளுக்கு முன் நாள் மலைமகளாகிய ஸ்ரீ கௌரி தேவியை வணங்கும் பொருட்டு நான் செல்வேன். அங்கு வந்து என்னை ஸ்ரீ பகவான் கொண்டு போகாவிட்டால் நெருப்பிலே என் உயிரை மாய்த்துக் கொண்டு மீண்டும் ஜன்மங்கொண்டு அந்த ஸ்யாமள வண்ணனான தேவனது சிவந்த அழகிய மலையை நிகர்த்த மார்பினை அணைவேன் என்று ஸ்ரீ ருக்மணி தேவி யுரைத்தனள்.

இதோ அந்தத் திருமகள் தன் கைபட எழுதிய பிரார்த்தனைப் பத்திரிகை. தாம் அருள் கூர்ந்து திருக்கண் சாத்துக என்று அப் பத்திரிகையை பகவானிடம் நீட்ட பகவான் அப்பிராமணரையே வாசிக்க வேண்டினர். அவரும் பின் வருமாறு வாசிக்க லாயினர் :

“தேவ தேவனான ஸ்ரீ பகவானே! விதர்ப்ப தேசாதிபனான பீஷ்மனுக்கு பெண்ணாகிய உருக்குமணியெனும் பெயருடைய வடியேனுக்கு விவாக காலஞ் சமீபித்திருக்கின்றமையால் தேவரீர் சராசராத்மகமான இம்மூவுலகிலும் மிகுந்த சௌந்தர்ய முடையவரென்றும் அச்சுதரென்கிற திருநாமத்துடன் விளங்குகின்றவரென்றும் கேள்வியுற்று தேவரீரைச் சீக்கிரத்தில் அடைதற்கில்லாமல் காலதாமதமா யிருக்கின்றதே யென்று மனது வெப்பங்கொண்டு தேவரீருடைய சரித்திரங்களாகின்ற அமுத தாரையைச் செவியின் வழியாக கிர

கித்து அந்தத் தாபத்தைப் போக்கடித்துக் கொள்ளுகின்றேன். அப்படிப்பட்ட மகிமையையுடைய தேவரீருக்குக் கொஞ்சமேனும் இசைந்தவ ளாகாவிடினும் தாம் தயாபரிபூரண சுவாமி யாதலால் கிருபை கூர்ந்து என்னை அங்கீகரிப்பீரென்கிற வாசையால் சரணடைகின்றேன். சிங்கத்துக்கொப்பான தேவரீருக்காக சிருஷ்டித்திருக்கின்ற வடியேனை நரிக்கொப்பான சிசுபாலன் வந்து தொடுதற்கு முன்னம் தேவரீர் என்னை ஆட்கொண்டு விடவேண்டும். விவாகஞ் செய்வதற்கு முன்னதாக பார்வதி பூஜை செய்கிறதற்காக அடியேன் அந்தப்புரத்தை விட்டுத் தோழிகளுடன் கால் நடையாக வெளியினில் வருவேன். அப்போது அடியேனை தேவரீர் ஏற்றுக்கொள்ளக் கடவீர். அப்படி அடியேனுடைய கோரிக்கை யீடேறுவிட்டால் தேவரீருடைய திருவடியிற்றனே மனதை வைத்து சரீரத்தை மாத்திரம் விட்டுவிடுவேன். அப்படிச் செய்கின்றபோது தேவரீர் தானே அடியேனிடத்தில் கிருபைகூர்ந்து அனுக்கிரகிக்கப் போகின்றீர். இந்த எளியளான எனது பரிதாப நிலைமையை பக்தவற்சலரான தம்மிடம் விண்ணப்பித்துக் கொண்டேன். இனியென்னை ஆட்கொள்வது தம் சித்தத்தைப் பொறுத்தது. உடல்-பொருள்-ஆவி ஆகிய மூன்றையும் தமக்கே சமர்ப்பித்தேன். "அன்புகூர்ந்து என்னை ஆட்கொள்ள எழுந்தருள்க" என்று இவ்விதம் பத்ரிகையை வேதியர் படித்து முடித்தார்.



## ஐம்பத்தி மூன்றுவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ண பகவான் ருக்மணிதேவியின் கருத்தின்படி நிறைவேற்றுகிறேனென்று அந்த பிராமணனுக்கு சொல்லி விடைகொடுத்தனுப்பியதும், ஸ்ரீ ருக்மணி தேவியைக் கவர்ந்துகொண்டு போனதும் சொல்லப்படுகின்றது.*

உலக விவகாரங்களை யொழித்து உஜ்ஜீவனம் பெற நினைந்த உத்தமை குமாரனே! அந்த ஸ்ரீ ருக்குமிணி தேவியினது கருத்தைப் பிராம்மணனால் கேள்வியுற்று ஸ்ரீ பகவான் கொஞ்சம் புன்னகையுடன் அம் மறையோனை நோக்கி "சுரோத்தமரே! அந்த ஸ்ரீ ருக்குமிணி தேவியினது கருத்தின் வண்ணம் யானும் இராப்பகல் நித்திரை யில்லாம லிருக்கின்றேன். உருக்குமி என்பவன் தனது தங்கையாகிய ஸ்ரீ ருக்குமிணி தேவியை சிசுபாலனுக்குக் கொடுக்க வேணு

மென்று நிச்சயித்திருப்பதும் அந்தச் சுயம்வரத்தினில் வந்திருக்கிற சகல வரசர்களேயும் விட்டு ஸ்ரீ ருக்குமிணிதேவி யானவள் என்னையே தியானித்துக் கொண்டிருப்பதும் யானறிவேன்! தீக்கடைக்கோலைக் கடைந்து நெருப்பை எடுப்பதுபோல சகல வரசர்களேயும் ஜயித்து அந்த ஸ்ரீருக்கு மிணி தேவியைக் கொண்டு வருவேனென்று அந்தப் பிராம் மணனுடன் சொல்லி பிறகு தமது சாரதியான தாருகனைப் பார்த்து தேரை அலங்கிருதஞ் செய்துகொண்டு வரும்படி ஆக்கியாபிக்க, அவ்வாறே சைனியம்-சுக்கிரீவம்-மேகபுஷ் பம்-வலாஹமெனும் பெயர்களேயுடைய நான்கு குதிரை களை இரதத்தில் பூட்டி அலங்கரித்து அரண்மனை வாசலில் கொண்டுவந்து நிறுத்தி, சுவாமி சந்நதியில் வந்து அவன் விக்கியாபனஞ் செய்ய, அவர் அதுகேட்டு ஸ்ரீ ருக்குமிணி தேவியா லனுப்புவிக்கப்பட்ட பிராம்மணனுடன் இரதத்தின் மீதெழுந்தருளி துவாரகா புரத்தை விட்டு ஒரு இராத்திரியிற் றனே விதர்ப்பதேசத்திற்கு வந்து சேர்ந்தனர்.

அந்த விதர்ப்ப தேசத்திற் கதிபனுன பீஷ்மகன் தனது குமாரனுன உருக்குமியினுடைய வார்த்தையை அதிக்கிர மிக்க மாட்டாமல் சிசுபாலனுக்கே தனது அருந்தவப் பெண் ணுகிய ஸ்ரீ ருக்குமிணி தேவியைக் கொடுக்க வேண்டுமென்று நிச்சயித்து, தெருக்களெல்லாம் ஜலம் தெளித்து புஷ்பங்க ளிறைத்து நான்கு பக்கங்களிலுந் தீபங்களைப் போடுவித்து வீதிகளில் துவஜங்களுந் தோரணங்களுங் கட்டிவைத்து, பிதுர்க்களேயும் தேவர்களேயும் பிராஹ்மணர்களைக்கொண்டு விதிப்படி பூஜித்து அநேக பிராம்மணர்களுக்கு போஜனஞ் செய்வித்து ஸ்ரீ ருக்குமிணி தேவிக்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்து விலையுயர்ந்த நூதன வஸ்திரங்களாலும் பூஷணங்களாலும் அலங்காரஞ் செய்து, நான்கு வேதங்க ளாலும் பிராஹ்மணர்களைக் கொண்டு இரக்ஷா பந்தனங்களும் புரோகிதர்களால் அதர்வணவேத மந்திரத்தினுல் ஓமமும் மற்ற கிரகசாந்தி முதலிய கர்மங்கள் யாவற்றையும் கிரமப்படி செய்வித்து, பிராம்மணர்களுக்கு அனேக சொர்னங்கள் வஸ்திரங்கள் பூஷணங்கள் தாம்பூலம் பசு பூமி முதலிய தானங்களைக் கொடுத்தான். அப்போது பட்டினத்திலுள்ள சகல ஜனங்களும் பரிசுத்தமாக ஸ்நானஞ்செய்து கந்தபுஷ் பங்களா லலங்காரஞ் செய்துகொண்டு சர்வாபரண பூஷிதர் களா யிருந்தார்கள்.

அப்போது சேதி தேசத்திற் கதிபனுன சிசுபாலன் அனேக அந்தணர்கட்கு வஸ்திரம்-பூஷணம்-தனம்-பசு

முதலிய அநேக தானங்களை வெகுவாகக் கொடுத்துத் தனது இரத கஜ துரக பதாதி சேனைகளோடே கூடி சேதி தேசத்தை விட்டுப் புறப்பட்டுக் குண்டினபுரத்திற்கு வந்து சேர்ந்தனன். அப்போது பீஷ்மகன் அந்தச் சிசுபாலனை அர்க்கிய பாத்திய முதலியவற்றால் பூசித்து தனது அரண் மனையிற்றானே நேமித்த விடுதியி லிருக்கச்சொல்லி, பிறகு அவனுடன் கூடவந்த சாலவன் ஜராசந்தன் முதலிய வரசர் களையும் பூஜித்தனன்.

இப்படி நானாதேசத் தரசர்கள் வந்திருப்பதை ஸ்ரீ பலராமர் தெரிந்துகொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் ஒன்றியாய்ப் போயிருப்பதால் ஒருவேளை பிரமாதம் வருமென்று யோசித்து யாதவ சேனைகளைக் கூட்டிக்கொண்டு அவரு மொரு பக்கலில் வந்து சேர்ந்தனர்.

அப்போது ஸ்ரீ ருக்குமிணி தேவியானவள் தான் துவாரகைக்கு அனுப்பின பிராஹ்மணன் வராமையால் மிகவும் ஏக்கமுற்று ஒன்றுந் தோன்றாமல் மனக் கவலை கொண்டு பலவாறாகச் சிந்திக்கின்றனள்: நாம் அனுப்பின பிராஹ்மணன் துவாரகைக்குப் போய்ச் சேர்ந்தாரோ வழியில் நின்றுவிட்டாரோ! இல்லை அந்த நிர்த்தோஷரான ஸ்ரீ கிருஷ்ண பகவான் தாய் தந்தையர்க ளிருக்கையில் நாமெழுதியதைக் குற்றமாகவெண்ணி அதனால் விவாஹஞ் செய்யக்கூடா தென்று திருவுள்ளத்திற் றோன்றினதோ! அல்லது தாம் பிரயாணமாய் வருகிறவரா யிருந்து இந்தப் பிராஹ்மணரையுங் கூடப் போகலாமென்று நிறுத்திக் கொண்டாரோ! அல்லது என்னுடைய துர்ப்பாக்கியத்தால் பிரயாணமாய் வரும்போது மார்க்கத்தி லேதேனும் உபத்திரவம் வந்ததோ! பாக்கிய ஈனையான வென்னிடத்தில் ஈஸ்வரனுக்கு அனுக்கிரகஞ் செய்ய மனமில்லையோ! அந்தோ போன பிராஹ்மணனும் வரவில்லையே. விவாக காலமும் சமீபித்ததே. இந்தப் பார்வதீ தேவிக்கும் என்னிடத்தில் அருளில்லையோ! என் பாக்கிய மென்னமா யிருக்கின்றதோ தெய்வமே யென்று பலவாறாக நினைத்து மிகவுந் துயரத்தை யடைந்து மனஞ் சோர்ந்திருக்கையில் தன்னுடைய இடது பக்கம் கண் கரம் தொடை கால் முதலியவைகள் துடிக்க அவைகள் நற் சகுனமாக விருப்பதை யுன்னி யோசித்திருக்கிற அந்தச் சமயத்தில் தன்னா லனுப்பப்பட்டிருந்த பிராஹ்மணர் ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தில் விடைபெற்று மிகவும் சீக்கிரமாக ஓடிவந்து அந்தப்புரத்தினிற் பிரவேசித்து விசனப்பட்டிருக்கின்ற ஸ்ரீ ருக்குமிணீ தேவியைக் கண்டார்.

அப்போ தந்த அந்தணருடைய முகக்குறியை ஸ்ரீ ருக்குமிணீயானவள் கண்டு, போன காரியத்தை அனுகூலஞ் செய்துகொண்டு வந்தவராக நினைத்து, நமஸ்கரித்து உபசாரத்துடன் கொஞ்சம் புன்னகைகொண்டு நாணத்துடன் ஒரு வார்த்தை சொல்லுகின்றனள் :

என் ஆபத்துக்குதவிய ஐயரே! அருள் வடிவமான அந்தண சிரேஷ்டரே! அந்த தீனதயாளுவான ஸ்ரீ கண்ணபிரான் யாதுரைத்தனர். என் பிரார்த்தனையை ஒரு பொருளா யெண்ணி என்னை ஆட்கொள்வான் இங்ஙனம் எழுந்தருளினரோ வென்று மெல்லிய தொனியுடன் கேட்க, ஸ்ரீ ருக்குமிணீ தேவியைப் பார்த்து அந்தப் பிராஹ்மணர் "அம்மணி! நீ எதற்கும் அஞ்சுதல் வேண்டாம். அடுத்தாரை ஆட்கொளும் அச்சுதன்! அந்த கோலமாமணி கொண்டல் வண்ணன்! கோவிந்தன்! கம்சனாதிய கண்டகர்களை கருவறுக்க உதித்த அந்தக் கமலக்கண்ணன்! உன் பொருட்டு ஈங்கு அருளொடு எழுந்தருளினன். உன் முறைக்கிறங்கி சிசுபாலன் ஜராசந்தன் முதலியவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவர்கள் நாணி அழியும்படி உன்னைக் கவர்ந்து செல்வதாக தீர்மானித்திருக்கின்றனன். இனி நீ யுன் கவலை யொழிந்து கண்ணனை எதிர்பார்த்திரு" என மொழிந்தனர். அதுகேட்டு ருக்மிணீ தேவி ஆனந்த சமுத்திரத்திலாழ்ந்து இப்படிப்பட்ட சந்தோஷ மொழியை யுரைத்த மறையோனுக்கு என்ன வெகுமதி செய்யலாமென்று தேடி அதற்கிசைந்ததாகத் தனக்கு யாதுங் கொடுக்கத் தோற்றாமல் தன்னுடைய கடாக்ஷமெவனுக் கிருக்கின்றதோ அவனுக்கு சகல செல்வமும் மென்மேலும் உண்டாகின்றதல்லவா? அப்படிப்பட்ட மகிமையையுடைய நாமே இவரைப் பணிந்தால் இவருக்கு யாதும் குறைவின்றி யிருப்பாரென்று கருதி, அவ்வந்தணரைப் பக்தியுடன் பிரதக்ஷணஞ் செய்து சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்தனள்.

இப்படி யிருக்கையில் விதர்ப்பதேசத் தரசனான பீஷ்மகன் ஸ்ரீ ராமகிருஷ்ணர்க ளிருவரையுங் கண்டு மிகுந்த களிப்புடன் அர்க்கிய பாத்திய முதலியவற்றாற் பூஜித்து தனது அரண்மனையில் விடுதிவிட்டு வெகு மரியாதையுடன் அவர்களுடன்கூட வந்த யாதவர்களுக்கும் தகுந்த உபசாரத்துடன் அவ்வவர்களுக்கு யோக்கியமான விடத்திலிருக்கச் சொல்லி நியமித்து தனது அரண்மனைக்குச் சென்றனன்.

அப்பட்டணத்திலுள்ள ஜனங்கள் யாவரும் தாங்கள் கண்கள் படைத்ததற்குப் பிரயோஜனம் இன்றைக்குத்தான்

வாய்த்ததென்று புருஷ சிம்மனுயும் மகா சௌந்தரியவானுயு மிருக்கின்ற ஸ்ரீ கண்ணபிரானுடைய முகாரவிந்தத்தை நன்குய்ச் சேவித்துணர்ந்து ஒருவர்க்கொருவர் 'நமக்குக் கொஞ்ச மேனும் புண்ணியமுண்டென்கிறது நிஜமானல் இந்தத் தாமரைக் கண்ணனை ஸ்ரீ கிருஷ்ண பகவான் நமது மாது சிரோமணியான ஸ்ரீ ருக்மணி தேவியை மணம்புரியக் கடவர் என்று சொல்லிக்கொண்டார்கள்.'

அப்போது அன்னம் போன்ற நடையினை யுடையவளும் மின்னற் கொடியை நிகர்த்த மெய்யினை வாய்ந்தவளும் குயிலினது தொனியினை வாய்ந்த வாக்கினை யுடையவளுமாகிய ஸ்ரீ ருக்குமணீ தேவி கௌரீ கோயிலுக்குப் போகும்படி பிரயாணமாயினள். இப்படி பவளம் போன்ற உதடும், வலம்புரிச் சங்கம் போன்ற கழுத்தும், சந்திர பிம்பம் போன்ற முகமும், இருண்ட மேகம் போன்ற சுருளான தலைமயிர்களும், கலசம் போன்ற தனங்களும், நெய்தற் புஷ்பம் போன்ற கண்களும், வில்போன்ற புருவங்களும், சிங்கத்தினிடை போன்ற இடையும், மணல் குன்று போன்ற புட்டமும், மாதுளவிதை போன்ற பல்வரிசைகளும், எள் பூப் போன்ற மூக்கும், தாமரைப்போன்ற கால்களும், கற்பகக் கொடிபோன்ற கைகளும், கண்ணுடி போன்ற கன்னங்களும், வாழை மரம் போன்ற தொடைகளும், சந்தனக் குழம்பு போன்ற குளிர்ச்சியான கடைக்கண் பார்வைகளும், கர்ப்பூரம் போன்ற வெண்மையான புன்னகையும் ஆகிய இவைகளுடன் கூடி சகலாலங்காரத்துடன் விளங்குகின்ற ஸ்ரீ ருக்குமணிதேவி கௌரி பூஜை செய்ய கோவிலுக்குப் போக வேண்டுமென்று கருதி அந்தப் பூஜைக்குரிய சாமான்களை யெடுப்பித்துக்கொண்டு அலங்காரத்துடன் அழகிய தோழிகளும் பிராமண ஸ்திரீகளும் புடைசூழ புன்னகையுடன் அரையினில் ஒட்டியாணம் மின்ன காதில் குண்டலங்கள் அசைய கையினில் கங்கணங்களொலிக்க கால்களிற் றண்டை சதங்கை கலீல் கலீலென்று தொனிக்க அரண்மனையில் நின்றுந் தனது தாயாருடன் கால் நடையாய் வெளிப்பட்டு சர்வாந்திரியாமியான ஸ்ரீ கண்ணபிரானுடைய திருவடிகளில் பொருந்தின மனமுடையவளாய் மௌனத்துடன் பேரி சங்கம் நகார் மத்தளம் நாகசுரம் வீணை முதலிய பதினெண் வாத்தியங்களு முழங்கச் சூதர்கள் வம்ச பரம்பரைகளைச் சொல்லித் துதிக்க சூரர்கள் ஆயுதபாணிகளாய் முன்னும் பின்னுமாகக் காக்க, இப்படி சகலாடம்பரத்துடன் பார்வதா தேவியினது கோவிலினருகிற் சென்று கைகால்

களை சுத்திசெய்து சுத்த மனத்துடன் கோயிலினுட் பிரவேசித்து பிராம்மண ஸ்திரீகளினால் அந்தப் பார்வதி தேவியினது தரிசனஞ் செய்விக்க பக்தியுடன் நன்ருய்த் தரிசித்து அந்த அம்மனை விதிப்பிரகாரம் தூபதீப நைவேத்தியங்களாலும் கந்த புஷ்ப குங்கும கர்ப்பூர தாம்பூலங்களாலும் வஸ்திர பூஷணங்களாலும் உபசாரமாகப் பூசித்து மிகவும் பயபக்தியுடன் கைகட்டிக்கொண்டு எதிர் நின்று வினயத்துடன் "வரப்பிரசாதியான பார்வதி தேவியே! எனதன்புக்குரிய புருஷ சிம்மனை வசுதேவ குமாரன் என்னை மணம் புரியவேண்டும்" என்று மிகவும் பிரார்த்தித்து பிராம்மண ஸ்திரீகளையும் நமஸ்கரித்து அவர்களால் ஆசீர்வதிக்கப் பட்டுப் பின்பு அந்தப் பார்வதி தேவியைப் பிரதக்ஷணஞ் செய்து நமஸ்கரித்து வெளியிற் புறப்படுகிறபோது நவரத்தினங்க ளிழைத்த மோதிரங்களணிந்து விளங்குகின்ற கரத்தினுல் தனது தோழியினுடைய கரத்தைப் பற்றிக் கொண்டு நீண்ட கண்களுடன் ஜகன் மோகினியாய் ஸ்ரீ பகவானுடைய மாயையைப்போல் வருகின்ற ஸ்ரீ ருக்மணி தேவியை சில வீரர்களான வரசர்கள் கண்டு மன்மத பாணங்களாலடிபட்டு மனந் தாளாமல் மோகித்து நினைவுதப்பி கீழே விழுந்தார்கள். சிலர் வாகனத்தின் மீதிருந்து விழுந்தார்கள். சிலர் சித்திரத்தி லெழுதிய பாவைபோல அசைவற்று நின்ருர்கள். ஆனுல் ஸ்ரீ ருக்மணி தேவியோ கரிய வெண்ணிறத்தையுடைய அகில் புகையை யேற்றுக்கொண்டு கஸ்தூரியும் புஷ்பங்களும் வாசனை வீச நிறத்தால் மேகத்தையும் வெல்லும் கரிய கூந்தல் கத்தையை கடகம் அணிந்த இடது கையால் யேந்தியபடி பகவான் எங்கே தங்கி யிருக்கின்ருர் என்று கருமையுடைய அழகிய வேலாயுதத்தை யொத்த திருக்கண் மலர்களால் ஆராய்ந்து பார்த்தபடி நடக்கலானுள்.

அந்த இராஜ மண்டபத்திற் கப்புறத்திலிருக்கின்ற ஜநார்த்தனரான ஸ்ரீ கிருஷ்ணபகவானைக் கண்ணுற் கண்டு மானசீகமாய்ச் சேவித்து மகிழ்ச்சி யுடனிருந்தனள். அப்போது சுவாமியானவர் அவளது கருத்தை யுணர்ந்து மூடர்களாயிருக்கின்ற அரசர்களை அவமதித்து அவர்களின் மத்தியில் கொஞ்சமேனும் அச்சமில்லாமல் இரதத்தை நடாத்திப் பாவை போன்ற ஸ்ரீ ருக்மிணி தேவியினுடைய மெல்லிய தளிர்போன்ற கரத்தைப் பற்றித் தமது இரதத்தின் மீது வைத்துக்கொண்டு ஸ்ரீ பலராமரை முன்னிட்டுக் கொண்டு தேரை மெல்லென நடாத்துகிறதைப் பார்த்து

சகல வரசர்களும் இந்த அவமானத்தை பொறுக்கமாட்டா மல் "பார்த்திரா"! இந்தக் கோபாலன் சிங்கத்துக் கென்று வைத்த பலியை நரியானது கொண்டுபோவதுபோல கொண்டு போக நாம் பார்த்துக்கொண்டிருக்கின்றோமே! நம்மைப் போல மூடர்களும் இருப்பார்களோ வென்று தங்களைத் தாங்களே நிந்தித்துக்கொண்டார்கள்.



## ஐம்பத்தி நான்காவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ணபகவான் சிசுபாலனுதியரை ஜயித்து, ருக்குமியை தண்டித்து, ஸ்ரீ ருக்குமணிதேவியை மணம் புரிந்தது சொல்லப்படுகிறது.

வாராய் பரிக்ஷித்து மஹாராஜனே! ஸ்ரீ பகவான் ருக்குமிணி தேவியை எடுத்து கொண்டுபோவதை சகல அர சர்களும் பார்த்து இந்தத் துஷ்டனை கோபாலனை விடக் கூடாது. இவனுடன் யுத்தஞ்செய்து இவனைக்கொன்று உருக்குமணியை திருப்பிக்கொள்ள வேண்டுமென்று கருதி எல்லாரும் ஒருமுகமாய்ச் சேர்ந்து, கடுஞ் சினத்துடன் கவசங்களைப் பூண்டு இரதாரூடர்களாய் தங்கள் தங்கள் சேனை களைக் கூட்டிக்கொண்டு வில்லை நாணேற்றி குணத்தொனி செய்து பாண வருஷங்களைச் சொரிந்து ஸ்ரீ கிருஷ்ணனைத் துறத்திக்கொண்டோடி வந்தார்கள். அவர்களைக் கண்ட யாதவ சேனைகளுந் தங்கள் வாகனங்கள் பேரிலிருந்து வில்லை வளைத்து நாணேற்றி குணத்தொனி செய்து ஏக காலத்தில் மலையின்பேரில் வருஷ தாரைகளை வருஷிப்பதுபோல பாண வருஷங்களை வருஷித்தார்கள். அப்போது ஜராசந்தன் முத லிய வரசர்கள் கத்தி-சத்தி-ஈட்டி-கண்டகோடாலி முதலிய வாயுதங்களை யாதவ சேனைகளின் பேரில் பிரயோகஞ் செய் தார்கள். அதுகண்டு ஸ்ரீ ருக்குமிணிதேவி கொஞ்சம் பயந்து மாதவனை ஸ்ரீ பகவானுடன் வார்த்தைசொல்ல வெட்கப் பட்டுக்கொண்டு அவருடைய முகத்தைப் பார்த்தனள். ஸ்ரீ ருக்மணிதேவியினது பயத்தை அறிந்து பகவான் அந் தம்மனை நோக்கி உன்னுடைய படர்களான யாதவர்களா லிந்த அரசர்களடிப்பட்டுப் போவார்கள். நீ ஒன்றுக்கும் பயப்பட வேண்டாமென்று சமாதானஞ் செய்தனர். அப் போது யாதவர்களடிப்பட்டதை ஸ்ரீ பலராமனும் சுதனும் சாத்தகியுங் கண்டு கடுஞ்சினமடைந்து கண்கள் சிவந்து வில்லை வளைத்து நாணேற்றி குணத்தொனிசெய்து நாளிகா பாணம் நாராசபாண முதலிய பாண சமூகங்களால் இரதம்

க்ஜம் பதாதி சேனைகளைச் சின்னாபின்னமாக வடிக்கிறபோது அவர்கள் வாகனங்கள்பேரில் நின்றுந் தலைகள் வெட்டுப் பட்டு நவரத்தின குண்டல கிரீடங்களோடுங் கீழேவிழுந்தார் கள். சிலர் வில்பிடித்தவண்ணங் கைகளறுபட்டவர்களும் கால்களறுபட்டவர்களும் சரீரங்கள் துண்டுதுண்டாகக் கண்டிக்கப்பட்டவர்களும் தலைகளறுபட்டவர்களுமாக சேனை களோடு மடிந்தனர்.

இப்படி யாதவ சேனைகளால் நஷ்டமாய்ப் போனவர்கள் போக மற்ற வரசர்களும் எதிர் நிற்கமாட்டாமல் ஜராசந்தனை முன்னிட்டுக்கொண்டு விதர்ப்ப தேசத்திற்கு ஓடிப்போய் அவ் விடத்தில் தைரியமடங்கி சந்தோஷமிழந்து மேனிகுலைந்து வாய் வரண்டு சரீரமெலிந்து மனைவியைப் பறிகொடுத்தவன் போல விசனமுற்று சோங்கி யிருக்கின்ற சிசு பாலனுக்கு அனேக தேறுதலைச்சொல்லி அவனோடு சகலரும் தத்தமது ஊர்களுக்கு திரும்பினார்கள். பின்பு விதர்ப்ப தேசத்திற்காச ணாகிய பீஷ்மனது குமாரர்களுள் முதல்வனான உருக்மியான வன் தனது தங்கையாகிய ஸ்ரீ ருக்குமிணிதேவியை ஸ்ரீ கிரு ஷ்ண னெடுத்துக்கொண்டு போனது மனம் பொறாமல் அவனைக் கொல்லவேண்டுமென்று கருதி ஒரு அக்ரோணி சேனையைச் சேகரித்துக்கொண்டு தனது இரதத்தின் மீதே றிச் சாரதியை நோக்கி "இப்போது கிருஷ்ணன் வெகுதூரம் ஓடிப்போய் விட்டான். நீ சீக்கிரத்தில் இரதத்தை செலுத்து. அவனை என்னுடைய தீட்சணங்களான பாணங்களா லடித்து அவனுடைய கர்வத்தை அடக்குகிறேன்" என்று உரைக்க, அந்தச் சாரதியும் அவ்வண்ணமே ஸ்ரீ கண்ண பிரானுடைய சமீபத்திற் கொண்டுவந்து நிறுத்தினான், அப்போது மூடனான உருக்குமி சுவாமியை நோக்கிக் கேளடா கோபாலர்களுக்குள்ளே நிகிருஷ்டமானவனே! நீ முதுகு காட்டாமல் எனக்கெதிரில் நில், நான் எனது பாணத்தால் உனது மார்பைப் பிளந்து ஒரு நிமிஷத்திற் சங்கரிக்கிறேனென்று வில்லை வளைத்து நாணேற்றி குணத் தொனிசெய்து மூன்று நாராச பாணங்களை ஸ்ரீ கிருஷ்ண பகவானது மார்பினிற் பிரயோகஞ் செய்தனன்.

சுவாமியானவர் புன்னகையுடன் தமது சாரங்கமென்கிற வில்லை நாணேற்றி குணத்தொனி செய்து அந்த உருக்குமியி னுடைய நான்கு குதிரைகளை எட்டுப் பாணங்களாலும் சாரதியை இரண்டு பாணங்களாலும் கொடியை மூன்று பாணங்களாலும் அறுத்துப் போட்டார். அப்போது உருக்குமி வேறொரு வில்லை யெடுத்து ஐந்து பாணத்தால்

சுவாமியினுடைய திருமார்பினில் தைக்க எய்தனன். அவை களை ஸ்ரீ கண்ணபிரான் கண்டித்து அவனது கையிலிருந்த இரண்டாவது வில்லையும் கண்டித்துப்போட்டார். உருக்குமி கடுஞ் சினமடைந்து வேறொரு வில்லை எடுத்தான். அதையுங் கண்டித்துப்போட்டார். இப்படி இருபத்தொரு தரம் எடுத்த வில்லை ஸ்ரீ கிருஷ்ண பகவான் கண்டித்துப்போட அப்போ தந்த உருக்குமி வெகு கோபத்துடன் பரிகமென்கிற ஆயுதத்தை எடுத்துத் தனது பலங்கொண்டமட்டும் சுழற்றி ஸ்ரீ பகவான் மீதினிற் பிரயோகஞ் செய்தனன். சுவாமியான வர் அதையும் பாணங்களாற் கண்டித்து விட்டனர். அப்பால் கதை எரி ஈட்டி உலக்கை சூலம் முதலிய மகத்தான வாயுதங் களை ஜனார்த்தனன்பேரிற் பிரயோகஞ் செய்தனன். அதை யும் தம்முடைய பாணங்களால் கண்டித்துவிட்டனர். ஒரு கத்தியைக் கரத்தினிற்கொண்டு இரதத்தை விட்டுக் கீழே குதித்து ஸ்ரீ பகவானை வெட்டவேண்டுமென் றோடிவந்த னன். அதையும் லோகாராட்டியரான ஸ்ரீ பகவான் அணுக்களாகக் கண்டித்து அவனது தலையை அறுக்கத் தமது நாந்தகமென்கிற கத்தியைக் காத்திலேந்தினர். அதை யறிந்த உலக மாதாவான ஸ்ரீ ருக்மிணிதேவி கண்டு பயந்து நடுநடுங்கி சரண்யரான ஸ்ரீ வாசுதேவனது திருவடிகளைப் பற்றிக்கொண்டு மிகவும் சோகத்துடன் சுவாமியைத் துதி செய்கின்றனள்:

"என் ஆருயிர்க்குயிரே! அப்ரமேய! அருள் வடிவே! அனுதரக்ஷக! ஹே மங்கள குணா! தேவரீர் அடியேனு டைய தமயனை கொல்ல நினைவது தகுமா? அவன் தான் அறிவழிந்து தம் மகிமாதிசயங்களை யறியாது தருக்கினாலும், எல்லாமுணர்ந்த ஈசனும் ஜகத் காரணருமான தாம் இவ் விதம் தேவரீரைச் சரணமடைந்திருக்கின்ற வடியேனிடத் தில் கிருபை கூர்ந்து அவனை யிரக்ஷிக்கவேண்டுமென்று மிகவும் பயந்து முகம்வாடி தனது கண்டத்திலிருக்கின்ற மாலைகள் நழுவ சுவாமியினுடைய இரண்டு திருவடிகளையும் பிடித்துக்கொண்டு பிரார்த்தித்தனள். ஸ்ரீ பகவான் ருக்மிணி தேவியின் முறைக்கிணங்கி அந்த உருக்குமியைக் கொல்லா மல் அவனைப் பிடித்துத் தமது தேர்க்காலிற்கட்டி விரூபமாக க்ஷவரஞ்செய்து விட்டனர். யாதவ சேனைகளும் அந்த உருக்குமியினுடைய ஒரு அக்குரோணி சேனையைச் சம்ஹ ரித்து ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சமீபத்தில் வந்து காத்துக்கொண்டிருந்தார்கள்.

அப்போது மூத்த பிராணுன ஸ்ரீ பலராமர் ஸ்ரீ கிருஷ்ண பகவானை யடைந்து மேனிகுலைந்து தைரியமடங்கி விகாரமான மொட்டந்தலையுடன் விசனத்தினுற் கண்கள் சிவந்து தீனனு யிருக்கின்ற உருக்குமியைக் கண்டு மிகவுந் தயை கூர்ந்து அவனை விடுவித்து, ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து "ஸ்ரீ கிருஷ்ணு! நீ சிறுபிள்ளை விளையாட்டாக எப்பொழுதும் பதட்டமான காரியத்தையே செய்கின்ருய். இப்போது நமக்குப் பந்துவாயும் சம்பந்தியாயுமிருக்கின்ற இந்த உருக்குமியைத் தேரினிற் கட்டி மிகவும் இழிவாயிருக்கிற க்ஷவரஞ் செய்வித்தாயே. இது நமக்கேற்குமோ? நீ சகல வேத சாஸ்திரங்களையும் அதனுடைய தத்துவங்களையும் நன்ருக வுணர்ந்து கியானவானென்று பெயர் பெற்று இப்படிப்பட்ட காரியஞ் செய்தாயே! என்ன பிரயோஜனமென்று கோபித்துக்கொண்டு, ஸ்ரீ ருக்மிணி தேவிக்கு சமாதானமாகச் சில வார்த்தைகள் சொல்லுகின்றனர். கேளாய் பதிவிரதா சிரோமணியான ஸ்ரீ ருக்மிணி தேவியே! நீ எங்களிடத்தில் மனவருத்தப் படவேண்டாம். உன்னுடைய தமயன் இந்த கிருஷ்ணனிடத்தில் அகாரணமாய் விரோதஞ் செய்து கொண்டதற்குள்ள பயனையடைந்தான். அதை பொறுத்துக் கொள்ள வேண்டுமென்று அநேக விதமாய் ஸ்ரீ பலராமர் தேறுதல் சொன்னுர். அப்பால் உருக்குமியானவன் ஸ்ரீ கிருஷ்ணனைச் சங்கரிக்காமலும் ஸ்ரீ ருக்மிணி தேவியைத் திருப்பிக்கொண்டு போகாமலும் பட்டணப் பிரவேசஞ் செய்கிறதில்லையென்று நாணமுற்று விசனத்துடன் குண்டினபுரத்திற்குப் போகாமல்தான் நூதனமாய் போஜகூடமென்று ஓர் பட்டணமுண்டு பண்ணி அவ்விடத்திலேதானே வாசஞ் செய்தனன்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஸ்ரீ ருக்குமிணி சமேதராய் யாதவர்களோடு ஸ்ரீ பலராமரை முன்னிட்டுக்கொண்டு எழுந்தருளுவதை வேவுகாரர்கள் மூலமாய் உக்கிரசேன மகாராஜன் கேள்வியுற்று வசுதேவ தேவகிகளுடன் களிகூர்ந்து, காரியத் தலைவர்களை நோக்கி இப்போது நமது ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்ரீ ருக்குமிணி சமேதராக நகரப்பிரவேசஞ் செய்யப் போகின்ருர். ஆதலால், நமதரண்மனை முதல் பட்டணத்திலுள்ள வீதிகள் யாவும் பந்தல்களிட்டு ஜலந்தெளித்து புஷ்பங்களிறைத்து மகரதோரணங்கள் கட்டி அங்கங்கு பூப்பந்தல்கள் போட்டு தூபங்களும் தீபங்களும் வைத்து வீடுகள் தோறும் வாழை கமுகு முதலிய மரங்களால் அலங்காரஞ் செய்விக்கும்படி கட்டளையிட்டு, வசுதேவர் முதலிய

சகல யாதவர்களுடன் வேதியர்கள் ஆசீர்வதிக்க, சூத மாகதர்கள் தோத்திரஞ் செய்ய, வந்திகள் ஜய விஜயீபவா வென்று கட்டியங்கள் கூற, வேசியர்கள் நடிக்க, நகார் நகபத்து மேளம் நாகசுரம் வீணை முதலிய பதினெண் வாத்தியங்கள் முழங்க, சத்திர சாமர முதலிய பிருதுக்க ளுடன் ஸ்ரீ கிருஷ்ண பகவானை எதிர்கொண்டுபோய் பட்ட ணம் வலம் வரும்போது அப் பட்டணத்திலுள்ள மாதர்கள் சகல அலங்காரத்துடனே மெத்தைகள் பேரிலும் உப்பரிகை கள் பேரிலுமிருந்து சாளரங்களால் மின்னலுடன் கூடின மேகத்திற் கொப்பாயிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணனையும் ஸ்ரீ ருக்கு மிணி தேவியையுங் கண்டு களித்து ஆனந்திக்கும்படியாய் மகா வைபவத்துடன் வந்து தமது அரண்மனைக்குச் சரியாய் இரதம் விட்டிறங்குகிற சமயத்தில் வண்மையுள்ள பிராமண ஸ்திரீகள் வந்து திருஷ்டி கழித்து அவர்களை உபசாரத்துட னழைத்துக் கொண்டு போனார்கள்.

நல்ல முகூர்த்தத்தில் அவர்களுக்கு நலங்கிட்டு மங்கள ஸ்நானஞ் செய்வித்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கு பிரம்மசரிய விர தத்தைப் போக்கி, கிருகஸ்தாசிரமத்திற் குரிய கிருத்தியங் களைச் செய்வித்து மாலை மாற்றி கன்னியூசலாடி விவாகஞ் செய்கின்ற வீட்டினில் ஸ்ரீ கிருஷ்ணனையும் ஸ்ரீ ருக்குமிணி தேவியையும் உபசாரத்துடன் பிரவேசிக்கச் செய்து அவ் விடத்திற் புரோகிதரான கற்காசாரியர் முதலிய வேதியர்கள் சொல்லும் மந்திர விதியின்படி ஓமஞ் செய்வித்து பிராமண ஸ்திரீகள் லக்ஷ்மி கலியாணங்கூற விதி வழுவாமல் ஸ்ரீ கண்ண பிரானவர் ஸ்ரீ ருக்குமிணி தேவிக்குத் திருமங்கலியதாரணஞ் செய்தனர். அப்போது பட்டணத்திலுள்ள ஜனங்களும் பிற ரும் மங்கள ஸ்நானஞ் செய்து மடி வஸ்திரங்களுடன் சகலா லங்காரங்களையுஞ் செய்துகொண்டு தங்கள் தங்கள் மனைவி யர்களுடன் கிருஷ்ண பகவானுக்கும் ருக்குமிணி தேவிக்கும் காணிக்கைகள் கொண்டுவந்து சமர்ப்பித்தார்கள். பலவித மான தான-தர்மங்களை பிராமணர்க்கும் மற்றையோர்க்கும் வழங்கினர். பிறகு சகலரும் தேவாம்ர்தத்திற் கொப்பான போஜனம் செய்து மற்ற உபசாரங்களையும் தளராமல் பெற்று மகிழ்ந்தனர்.

இப்படித் திருக் கல்யாண மஹோற்சவம் ஏழுநாள்கள் நடக்க தேவர்கள் யாவரும் ஆனந்தப் பரவசராக வாயார வாழ்த்தி மனமார துதித்தனர். பின் ஸ்ரீ கிருஷ்ண சுவாமி ஸ்ரீ ருக்குமிணி சமேதராய் சங்கீத மேள வாத்தியங்களுடன் பாலிகைகளை எடுப்பித்து யாதவர்கள் புடைசூழ வசந்தமாடிக்

கொண்டு தடாகத்தினிற் சேர்ப்பித்து, பின்பு கிருகப் பிரவேச மாய் வந்து சுகமா யிருந்தார்கள்.

இளமை தங்கிய ப்வளத்தின் படர்கொடியைப் போல இனிய சௌந்தர்யத்தில் சிறந்த ஸ்ரீ ருக்மிணி தேவி ஏழும்பு கின்ற ஒளியுள்ள முத்துகளைப் போலும் அலைகளை சுருட்டிக் கொண்டு வரும் சமுத்திரத்தின் கரைகளால் விளங்கும் ஸ்ரீ லக்ஷ்மி வாசம் செய்யும் துவாரகையை யடைந்து, மலர்ந்த அழகிய இதழ்களை கலக்கி வண்டுகள் ரீங்காரம் செய்யும் தாமரை மலரில் வசிக்கும் அன்னத்தைப் போன்ற திருமகளென்னும்படி வாழ்ந்தனள்.

ஸ்ரீ க்ருஷ்ண பகவான் ஸ்ரீ ருக்குமிணிதேவியை மணந்த இந்தக் கதையை படிப்பவர்களும், படிப்பதை அன்போடு கிரமமாக கேட்பவர்களும், அழகிய இதழ்களோடு மலரும் சிவந்த தாமரையில் வசிக்கும் ஸ்ரீ லக்ஷ்மிதேவி திருந்திய செல் வங்களை தன் அருளால் வழங்க தம் மக்களோடு இப் பூமியில் இன்புற்று வாழ்வார்கள்.



## ஐம்பத்தைந்தாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு ஸ்ரீ ருக்குமிணி தேவியிடத்தில் பிரத்தியும்னன் பிறந்ததும் அவன் சம்பராசுரனைக் கொன்றதும் சொல்லப்படுகின்றது.*

வாராய் குருகுலோத்துங்கனே! முன்பு ஒரு காரண வசத் தினால் சிவனால் தகிக்கப்பட்டது முதல் தேகமில்லாதிருந்த மன்மதன் இந்த ஸ்ரீ ருக்குமிணி தேவியிடத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கொப்பான உருவத்துடன் ஒரு குழந்தையாய்ப் பிறந்தனன். அவன் பிறந்த பத்து நாளைக்குள்ளாக மகா மாயாவியான சம்பராசுரன் அவனை தனக்கு சத்துருவென்று கருதி காலம் பார்த்துக் கொண்டிருந்து அவனைத் தூக்கிக் கொண்டு போய் சமுத்திரத்திற் போட்டு பிழைத்தோமென்று களிப்புடன் தனது பட்டணத்திற்குச் சென்றனன். அந்தக் குழந்தையை மீன் விழுங்கினது. ஒரு செம்படவன் வலைபோட அதில் அநேக மீன்களுடன் இம்மீனும் அகப்பட்டு சொர் ணம் போன்ற ஒளியை விளக்க, அம்மீனை வலைக்காரன் பார்த்து அதிக வியப்புடன் இராஜாவான சம்பராசுரனுக்குக் கொடுக்க, அவன் அதைக் கண்டு வியப்புற்று தனது பாக சாலைத் தலைவனிடத்திற்கொடுத்து சமையல் செய்யச் சொல்ல,

அவனுமதைக் கொண்டுபோய்ச் சேதிக்க உள்ளே சிறு குழந்தை யிருக்கக் கண்டு அதிக பயத்துடன் அச்சிசுவை அந்த வீட்டினிலிருக்கின்ற மாயாவதீ யென்கிற மாதுசிரோமணியினிடத்திற் கொடுத்தனன். அவளும் அக் குழந்தையினுடைய சௌந்தரியத்தைப் பார்த்து மனங்களிகூர்ந்து வியப்புடன் அதை வளர்த்து வருகையில் அவளிடத்திற்குச் சகல கலைகளையு முணர்ந்த நாரதமகா முனிவர் வந்தனர். அவரைக் கண்டு திடுக்கிட்டெழுந்திருந்து அர்க்கிய பாத்திய முதலியவற்றாற் பூசித்து ஆசனஞ் சமர்ப்பித்து அதிலவரை எழுந்தருளப் பண்ணினள். நாரதர் எதிரே நிற்கின்ற மாயாவதியைப் பார்த்து கேளாய் மாதுசிரோமணியே! இந்த பாலன் முன்பு உருத்திர பகவானால் தகிக்கப்பட்டிருந்த மன்மதன். இவன் யதாப்பிரகாரம் சரீரத்தை யடைய வேண்டுமென்று ஜகந்நாதரான ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும் உலக மாதாவான ஸ்ரீ ருக்குமிணி தேவிக்கும் மைந்தனாக ஜனித்தனன். இவனுக்கு நீ மனைவி யாகுதல் நன்றாதலால் உன்னை மனைவியாக்கிக்கொள்ளக் கருதியிருக்கும் சம்பராசுரனுக்கு நீ உடன்பட வேண்டாம். இக்குழந்தைக்கு யவ்வனப் பருவம் வருகிறவரையில் இந்தச் சம்பராசுரனுக்கு ஒரு நோன்பு உண்டென்று சொல்லிய பிறகு இவனைக்கொண்டு அவனைக் கொன்றுபோட்டு இந்த மன்மதனுடன் துவாரகைக்குச் சென்று இவனைக் கணவனாக வரிக்கக் கடவாயென்று சொல்லி அந்தர்த்தானமானார்.

அப்பாலந்த மாயாவதிக்கு பூர்வக்கியான முண்டாகித் தனது புருஷன் சிவனால் தகிக்கப்பட்டதை நினைத்துக் கொண்டு சம்பராசுரனால் சமுத்திரத்திற் போட்டு விடப்பட்டு தனக்கு தெய்வகதியால் வாய்த்தானென்று மிகவுங் களிப்புற்று அச்சிசுவை சகல உபசாரத்துடன் போஷித்துக் கொண்டிருந்தனள். இப்படி யிருக்கையில் சம்பராசுரன் மாயாவதியை நோக்கி உன்னை நான் மணம்புரியக் காதல் கொண்டிருக்க என் கருத்தை நீ நிறைவேற்றாத காரணம் யாதென்றனன். "உம்மையே யானும் மணம்புரியக் கருதியிருக்கின்றேன். ஆனாலு மெனக்கிப்போது பதினைந்து வருஷம் புருஷனை விரும்பாதிருக்க ஓர் விரதமுண்டு. அதனை யனுஷ்டித்து முடிந்தபின் உமது கருத்திற்கு இசைவேன்" என்று கூற, அதை உண்மையாக நம்பி சம்பராசுரனும் விரதமொழியுங் காலத்தை எதிர்பார்த்திருந்தான்.

இப்படிக்கு சில நாள் சென்ற பிறகு பிரத்தியும்னனுக்கு பால்யம்போய் யவ்வன பருவம் நேர, அவனது செந்தா

மரையை நிகர்த்த கண்களும் நீண்ட கைகளும் புன்னகை யுடன்கூடிய முகமும் பார்க்கிறவர்கள் மோகங்கொள்ளத்தக்க தாயிருக்க அவனை அந்த மாயாவதி கண்டு கொஞ்சம் நாணத் துடனும் காம லீலைகளுக்குரிய செய்கைகளைப் பாராட்டினுள். அதுகண்டு பிரத்தியும்னன் அந்த மாயாவதியை நோக்கி உன்னை யான் அன்னையாகக் கருதியிருக்க இப்போது உனது செய்கை மனைவியர்க் குரியதாயிருப்பதன் காரணம் என்ன வென்ன, அவள் பூர்வ விருத்தாந்தங்களை சொல்லி மீண்டும் உரைக்கின்றனள். யான் உமது பாரியையான இரதிதேவி யாதலால் மனைவியர்க்குரிய செய்கையாலுமக்குக் கியாபகப் படுத்தினேன். இப்போது உமது அன்னையான ஸ்ரீ ருக்கு மிணி தேவியம்மன் உம்மைக் காணுமல் சோகங் கொண் டிருப்பார்கள் ஆதலால் சீக்கிரத்தில் இந்த சம்பராசுரனை வதைத்து துவாரகைக்குச் செல்லவேண்டும் என்று இவனைக் கொல்லுவதற்கு வேண்டிய உபாயமான மாயைகளை கற்பித்து அவ்வசுரனை வெல்லச்சொல்லி யனுப்பினள்.

அப்போதந்தப் பிரத்தியும்னன் சம்பராசுரனண்டையிற் சென்று அவனுக்கு ரோஷம் பிறக்கும்படியான வார்த்தைக ளுரைக்க அவனதைக் கேட்டு கடுஞ்சின மடைந்து கதையை கரத்திற்ருங்கிக் கண்களில் நெருப்புப்பொறி பறக்கும்படி பார்த்தோடி வந்து இடி இடித்தாற்போல பிரத்தியும்னனுங் கடுஞ்சினங்கொண்டு தனது கதையினுல் சம்பராசுரனுடைய கதையைப் பொடிசெய்து அவன்மீது அதை பிரயோகஞ் செய்தனன். அசுரன் ஆகாயத்திற் கிளம்பி தனது மாயை யால் கல்மழை பொழியச் செய்தனன். பிரத்தியும்னன் சத்து வாத்துமனியெனும் பெயருடைய தனது மாயையைப் பிர யோகஞ்செய்து அந்தக் கல்மழையைத் தடுத்து மின்னலுக் கொப்பான கத்தியைக் கரத்திற்ருங்கி சம்பராசுரனுடைய உரத்த சிரசை இரண்டுபிளவாகக் கண்டித்து விட்டான். அதைப் பார்த்து தேவர்கள் களிப்புற்று அந்தப் பிரத்தியும் னன்மீது புட்பமாரி சொரிந்து துதி செய்தார்கள்.

பிரத்தியும்னன் அரண்மனையை யடைந்து சங்கதிகள் யாவும் அந்த மாயாவதிக்கு உரைத்து, இருவரும் சந்தோ ஷத்துடன் ஆகாயத்திற் கிளம்பி மின்னலோடுங்கூடிய மேகம்போல் விளங்கிக்கொண்டு ஸ்ரீ வாசுதேவருடைய அந்தப்புரத்தில் அநேக ஸ்திரீகளின் நடுவினில் வந்து குதித்தனர்கள். அவர்கள் அவனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ண பகவானுக் கொப்பான வண்ணமும் உருவமும் ஆபரணமும் சரியாயிருந்தமையால் ஸ்ரீ கண்ணபிரானென்றே பிரமித்து

மாதர்கள் யாவரும் மூலைக்கு மூலையோடி ஒளித்துக்கொண்டார்கள். அப்பால் சற்று நேரத்தில் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அல்லவென்று தெரிந்து வியப்புடன் பார்த்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீ மகாலக்ஷ்மியான ஸ்ரீ ருக்குமிணிதேவி வியந்து நமக்கு முன் பிறந்த புத்திரன் பிழைத்திருந்தால் அவனுமிவ்வண்ணமான வயதும் வடிவமும் வாய்த்தவனாகி யிருப்பானே; இவனைப் பார்த்தாலந்த மைந்தனைப் போலுங் காணுகின்றதே! இல்லாவிடில் நமக்கிவனிடத்தில் விசேஷ அன்பு உண்டாகக் காரணமேன்? நம் இடதுபக்கம் துடிப்பதேன்? என நினைத்து கொண்டிருக்கும்போது ஸ்ரீ கிருஷ்ணபிரான் வசுதேவர் தேவகிதேவியைக் கூட அழைத்துக்கொண்டு அவ்விடத்திற் கெழுந்தருளி தமக்கிந்த பிரத்தியும்னனுடைய சரித்திரங்கள் யாவுந் தெரிந்திருந்தும் ஒன்றுமறியாதவரைப்போல விருந்தனர்.

அந்தச் சமயத்தில் சந்தேகத்தை நிவர்த்திசெய்ய நாரதர் அவ்விடத்திற் கெழுந்தருளினார். அவரை ஸ்ரீ பகவான் கிரமப்பிரகாரம் பூசித்து ஆசனம் சமர்பிக்க அவரதன்மீதிருந்து அவர்களை நோக்கி அந்தப் பிரத்தியும்னனுடைய உற்பத்தி முதல் அவ்விடத்திற்கு வந்தவரையி லுண்டான சங்கதிகள் யாவுமுறைத்து தம்முடைய ஸ்தானத்திற் கெழுந்தருளினார். அப்பால் வசுதேவர் தேவகீ முதலானவர்கள் அந்தப் பிரத்தியும்னனிடத்தில் மிகவும் அன்புடையவர்களாய் அவ்விருவர்களுக்கு விதிப்படி மணம் புரிவித்து சந்தோஷித்தார்கள்.



## ஐம்பத்திஆறுவது அத்தியாயம்

*ஸ்ரீ கிருஷ்ண பகவான் சத்திராஜித்தனால் அபவாதம் அடைந்ததும், சியமந்தக மணியால் நிவர்த்தித்து கொண்டு ஜாம்பவதியையும் சத்தியபாமையையும் விவாகஞ் செய்துக்கொண்டதை சொல்லப்படுகின்றது.*

வாராய் பரிக்ஷித்து மஹாராஜனே! துவாரகா புரத்தில் சத்திராஜித்தன் எனும் ஒரு அரசன் சூரிய பகவானுக்கு மிகவும் அன்பனாகியும் பக்தனாகியும் இருந்தான். அவனிடத்திற் சூரியபகவான் அருள்கூர்ந்து ஒரு நாளைக்கு எட்டுபாரம் சொர்னம் கொடுக்கத்தக்கதாயும், வியாதி முதலியதைப் போக்கத்தக்கதாயும், ஒளியினை வாய்ந்ததாயு மிருக்கின்ற சியமந்தக

மென்கிற ஓர் மணியைக் கொடுக்க அவனதை வாங்கி தனது ஆரத்தினில் வைத்து கண்டத்தி லணிந்துகொண்டு பட்டணத்திற்கு வருகிறபோது அவனைப் பார்த்து ஜனங்கள் ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்திற் சென்று உம்மைச் சேவிக்கிறதற்காகச் சூரிய பகவான் வருகிறுரென்றுரைக்க, அதுகேட்டு சுவாமியானவர் புன்னகையுடன் அவர்களைப் பார்த்து அவன் சூரியனல்லன், சூரியனுற் கொடுக்கப்பட்ட மணியினது ஒளியுடன் விளங்குகின்ற சத்திராசித்தனென்றருளிச் செய்தனர். அந்த சத்திராசித்தன் தனது கிருகத்திற்குச் சென்று வேதியர்களை வரவழைத்து வேத மந்திரங்களை ஜபிக்கச்சொல்லி தேவதாராதனத்தில் அம்மணியையுங் கூடவைத்துக்கொண்டு பூசித்து அவ்வேதியர்கட்கு அளவிறந்த பூரி தக்ஷிணைகளைக் கொடுத்தனுப்பிவிட்டு சந்தோஷத்துடன் சுகித்திருந்தான். ஸ்ரீ கிருஷ்ண பகவான் அம்மணியை உக்கிரசேன மகாராஜனுக்கு கொடுக்கச்சொல்லிக் கேட்டருளினுர்.

சத்திராசித்தன் அம்மணியின் பேரில் கொண்ட அதிக ஆவலால் அதைக் கொடுப்பதற் கிசையாதிருந்தனன். இப்படி சிலநாள் சென்ற பிறகு அந்தச் சத்திராசித்தனுக்குத் தம்பியான பிரசேனன் அம்மணியின் ஆரத்தைக் கண்டத்தி லணிந்துகொண்டு காட்டிற்கு வேட்டையாடப் போகையில் அவனைக் குதிரையுடன் ஒரு சிங்கங் கொன்றது. அந்தச் சிங்கத்தை ஜாம்பவான் கொன்று அந்த மணியின் ஆரத்தைக் கொண்டுபோய் தனது மலையின் குகையிலிருக்கின்ற தன் குட்டியின் தொட்டிலுக்கு நடுவில் கட்டிவைத்தான்.

அப்பால் சத்திராசித்தன் வேட்டையாடப்போன தம்பி வாராதிருக்கக்கண்டு, மிகக் சிலேசமுற்று, முன்னுல் ஸ்ரீ கிருஷ்ணன் அந்த மணியைக் கேட்டதற்குக் கொடாதிருந்தமையால் இப்போது நமது தம்பியைக் கொன்று அம்மணியை கிரகித்துக் கொண்டாரென்று சொல்லுவதை, ஜனங்கள் கேள்விப்பட்டு ஒருவருக் கொருவர் ரகசியமாய் பேசிக்கொண்டிருப்பதை, ஸ்ரீ கிருஷ்ணர் கேட்டு அந்த அபவாதத்தை விலக்கிக் கொள்ளவேண்டி அந்த ஜனங்களிற் சிலரை அழைத்துக் கொண்டு அந்தப் பிரசேனன் சென்றவழியே காட்டிற்குப் போய், குதிரையுடன் மாய்ந்து கிடக்கின்ற அவனுடைய கழுத்தில் அம்மணியைக் காணுமல் அவ்விடத்தில் சிங்கத்தின் காலடியைக் கண்டு அவ்வடி போகின்ற மார்க்கமே செல்ல, அது குகையினிடம் விட, அங்கே பார்க்கையில் அவ்விடத்திலும் மரித்துக் கிடக்கின்ற சிங்கத்தினிடத்தும் அம்மணியைக் காணுமல் அவ்விடத்திலொரு மனிதன்

காலடி தென்பட, அதன் பின் தொடர்ந்து போகையில் அது ஓர் பிலத்தினடியிற் கொண்டுபோய் விட்டது.

அப்போது ஸ்ரீ கிருஷ்ண பகவான் தம்முடன் கூடவந்த ஜனங்களை பிலத்தின் புறத்தினில் நிறுத்திப்போட்டு தாம் மாத்திரம் அந்தப் பிலத்துவாரத்திற் பிரவேசித்துப் பார்க்கையில் அங்கு ஒரு குழந்தையினது தொட்டிலின் மீதிற் கட்டி யிருக்கின்ற சியமந்தக மணியைக் கண்டு அருகிற் சென்று நிற்க, அதை அக்குழந்தையின் தாதிகண்டு கூச்சலிட்டனள். அது கேட்டு ஜாம்பவான் ஓடிவந்து ஸ்ரீ கிருஷ்ணனைக் கேவலம் மானிடனுகவெண்ணி ஒரு குத்து குத்தினன். அப்போது ஒருவர்க்கொருவர் கைகலந்து ஆயுதங்களாலும் கரங்களாலும் விருக்ஷங்களாலும் அடித்துக் கொண்டும் நகங்களாற் கிள்ளியும் பற்களாற் கடித்தும் அதிக பயங்கரமாய் இரவும் பகலும் ஓய்வில்லாமல் ஒருவர்க்கொருவர் இளைக்காமலும் சோர்வில்லாமலும் யுத்தஞ்செய்து வருகையில் இருபத்தேழு நாள்களாயின. இருபத்தெட்டாவது தினத்தில் ஜாம்பவான் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு சரியா யுத்தஞ் செய்யமாட்டாமல் இளைப்புற்று தேகமெலிந்து பின்னிட வந்ததை யோசித்து இவன் மனிதனல்லன் ஈஸ்வரனுக விருக்கவேண்டுமென்று கருதி அவரைப் பார்த்து ஹே பகவான்! தம்மை முழுமுதல் காரணரான ஸ்ரீ ஹரியென்றும் இராவணுதி ராக்கதரை ஸ்ரீ ராமபிரானுக அவதரித்து வதைத்து பூமிபாரம் தீர்த்தவரென்றும் உணர்ந்து கொண்டேன். தேவரீர் யாது காரணமாக இவ்விடத்திற் கெழுந்தருளியதென்று அடக்கமொடுக்கத்துடன் பக்தியாய் வினவுகின்ற ஜாம்பவானை நோக்கிச் சகல விருத்தாந்தத்தையும் பகவான் உரைத்தருளினுர். முஷ்டி யுத்தத்தினுல் சரீர முழுமையும் நோய்கொண்ட ஜாம்பவானுடைய பாபத்தை போக்கி சகல இஷ்டத்தையுந் தந்தருளாநின்ற தமது திருவடிகளால் வருடி ரணமில்லாதிருக்கும்படி செய்தனர். அப்பால் ஜாம்பவான் மிகுந்த களிப்புடன் தனது குமாரத்தியான ஜாம்பவதியை ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு விவாஹஞ் செய்து கொடுத்தனன்.

பிலத்துவாரத்தில் காத்திருந்த ஜனங்கள் பன்னிரண்டு நாள் வரையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாராமையால் துவாரகைக்குச் சென்று வசுதேவர் தேவகி முதலியவர்கட்கு இச்சேதியைச் சொல்லி பிறகு கிலேசத்துடன் துர்க்காதேவி கோவிலுக்குச் சென்று அவளைப் பூஜித்துப் பணிந்து ஸ்ரீ கிருஷ்ண பகவான் நலமுடன் வருவாராவென்று வினவ

அவளும் சீக்கிரத்திலேயே வருவாரென் றுரைத்தனள். அதுகேட்டு ஜனங்கள் சந்தோஷமாயிருக்கையில் ஸ்ரீ கிருஷ்ணர் ஜாம்பவதி சமேதராய் அந்த சியமந்தக மணியையும் பெற்றுக்கொண்டு ஜாம்பவானிடத்தில் செலவுபெற்று துவாரகைக்கு வந்து சேர்ந்தனர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் உக்கிரசேனனது சபையில் சத்திராசித்தனை வரவழைத்து நடந்த சங்கதிகளைத் தம்முடன் கூடவந்த ஜனங்களால் தெரிவித்து அந்த மாமணியை அவனிடத்திற் கொடுத்தனர். அவனதைப் பெற்றுக்கொண்டு தனது வீட்டிற்குப்போய் வீணை அபவாதத்தை இந்த ஸ்ரீ கிருஷ்ணன் பேரில் சொன்னேனே இதை எவ்விதமாய் நிவர்த்தி செய்துகொள்ளுகிறதென்று யோசித்து அதற்கு பரிகாரமாக மாது சிரோமணியான தனது புத்திரி சத்தியபாமையையும் அந்த சியமந்தக மணியையும் ஸ்ரீ கிருஷ்ணனுக்குக் கொடுத்தனன்.

ஸ்ரீ கண்ணபிரான் அந்த சத்தியபாமையை மாத்திரம் அங்கிகரித்து அவனை நோக்கி நீ புத்திர ஈனனானதலால் உனக்குண்டான சம்பத்துகள் யாவும் இந்த சத்திய பாமையைத்தான் சேரும் அப்போது யான் பெற்றுக்கொள்ளுகிறேன். இப்போது அதை தாமே நிறுத்திவைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லி பின்னர் ரூபங்களிற் சிறந்த சத்திய பாமையை விதிப்படி விவாகஞ் செய்து கொண்டனர்.



## ஐம்பத்தேழாவது அத்தியாயம்



*சத்தியபாமையானவள் அஸ்தினபுரத்திலிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணனிடத்திற்கு சென்று பிதாவின் மரணத்தை தெரிவித்த பிறகு ஸ்ரீ கிருஷ்ண பகவான் சததன்வனைச் சங்கரித்தது சொல்லப்படுகின்றது.*

கேளீர் உத்தரானந்தனே! அஸ்தினபுரத்திலிருந்து பாண்டவர்களையுங் குந்திதேவியையும் திருதராஷ்டிரன் வாரணவதத்தி லிருக்கின்ற அரக்கு மாளிகைக் கனுப்ப, அவர்களதில் நெருப்பு பட்டெரிந்தார்களென்று சொல்லக் கேட்டு, ஸ்ரீ சுவாமி தனக்கு பாண்டவர்களுடைய க்ஷேமந் தெரிந்திருந்தும் உலகத்தோடொத்து கொஞ்சம் விசனப்பட்டு, ஸ்ரீ பலராமர் சகிதராய் இரதத்தின்மீதேறிக் கொண்டு அஸ்தினபுரத்திற்குச் சென்று பீஷ்மர் திருதராட்டிரன் விதுரன் முதலியவர்களைக் கண்டு பாண்டவர்களுக்கு வந்த துன்பத்தைக் குறித்து மனம் வருந்தி துக்கித்திருந்தனர்.

அத் தருணத்தில் அக்ரூரனுங் கிருதவர்மனும் சததன்வனிடத்திற் சென்று அற்பமான சத்திராசித்தனிடத்தில் சூரியனை நிகர்த்த ஒளியினை வாய்ந்த சியமந்தகமணியிருப்பது நன்றாக யிருக்கவில்லை; சூராஞன உம்மிடத்திலிருந்தால் அழகாயிருக்குமென்று சொன்ன துற்போதனைகளைக் கேட்டு, சத்தன்வன் இராக்காலத்தில் நித்திரை செய்துகொண்டிருக்கின்ற சத்திராசித்தனிடஞ் சென்று அவனுடைய சிரசை இருதுண்டமாகக் கண்டித்து சியமந்தகமணியைக் கைக்கொண்டனன். அதை சத்தியபாமை தெரிந்து அதிக மனோதுக்க முண்டானவளாய் அச் சவத்தை எண்ணெய்க்கொப்பறையில் சாவதானமாய் வைக்கத் திட்டஞ்செய்து, இரதாரூடையாய் அஸ்தினாபுரஞ் சென்று இந்தச் சங்கதிகள் யாவும் ஸ்ரீ கண்ண பிரானுக்குச் சொல்லி கண்ணீர் விட்டழ அவரதைக் கேட்டு சத்தியபாமைக்காகக் கொஞ்சம் விசனப்பட்டவர் போல அபிநயஞ்செய்து, பீஷ்மர் முதலியவர்களிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு துவாரகைக்கு வந்து மாமனுருக்குச் செய்யவேண்டிய கிரியைகளை நிறைவேற்றிவிட்டு, சத்தன்வனைக் கொல்ல யோசித்தனர். அவனது தெரிந்துகொண்டு அக்ரூரனிடத்துங் கிருதவர்மனிடத்துஞ் சென்று ஸ்ரீ சுவாமியுடன் யுத்தஞ்செய்யச் சகாயமாய் வரவேண்டுமென்று அழைக்க அவர்கள் எங்களா லாகாதெனவே அக்ரூரனிடத்தி லந்த மணியைக் கொடுத்துவிட்டு வெகு மேகமாகச் செல்லத்தக்க குதிரையின்மீது ஆரோகணித்துக்கொண்டு விதர்ப்பதேசம் வரையிற் சென்று அப்பால் குதிரை நடக்கமாட்டாமல் தளர்ச்சிகொள்ள கால் நடையாக அவன் ஓடத் தொடங்கினான்.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் சத்தன்வனை துவாரகையிற் காணுமல் ஸ்ரீ பலராம சகிதராய் இரதமேறி விதர்ப்ப தேசத்திற்குச் சென்று அவனைக்கண்டு பலராயர் நிற்க சுவாமி அவனைத் துறத்திக்கொண்டுபோய் சக்கிரப் பிரயோகஞ் செய்து அவனது சிரசைத் துணித்துவிட்டுப் பார்த்தபோது அவனிடத்தில் அந்த சியமந்தக மணியைக் காணுமல் ஸ்ரீ கிருஷ்ணன் வர, பலராயர் அதனை நினையாமல் அந்த மணியைத் தமக்குக் காட்டக்கூடாதென்று மறைத்து வைத்திருப்பதாகக் கருதி சுவாமியிடத்திற் கோபமாய் அவருடன் சொல்லாமல் விதர்ப்பதேசத்திற்குச் சென்று அவ் வரசனுற் பூஜிக்கப்பட்டு அவ்விடத்திலேயே நின்றுவிட்டார். ஸ்ரீ கிருஷ்ண சுவாமியுந் துவாரகாபுரிக்குச் சென்று சுகித்திருந்தனர். அப்போது அக்குரூரன் தன்னிடத்தி லிருக்

கின்ற சியமந்தக மணியை எங்கே ஸ்ரீ கிருஷ்ணபகவான் கிரகித்துக் கொள்ளுகிருரோ வென்று நினைத்து தீர்த்த யாத்திரைக்குப் போகிறேனென்று உபாயமாய் ஸ்ரீ பகவானிடத்தில் விடை பெற்றுக்கொண்டு காசிக்குச் சென்று அங்கேயே வாசமாயிருந்தனன்.

அப்போது துவாரகாபுரத்து ஜனங்கள் ஸ்ரீ கிருஷ்ண சுவாமி சத்தன்வனைக் கொன்று மணியை ஒருத்தருக்கு மறியச்செய்யாமல் மறைத்து வைத்திருக்கிருரென்று முன் போல அபவாதமாய்ச் சொல்வதைச் சுவாமி கேள்வியுற்று அதையும் நிவர்த்தி செய்துகொள்ள காசியிலிருக்கின்ற அக்ரூரனை சபை நடுவில் வரவழைத்து அவரிடமிருந்த மணியை எல்லோரும் அறிய வாங்கிக் காண்பித்து அவரிடத்திற்றுனே கொடுத்துவிட்டனர்.



## ஐம்பத்தெட்டாவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ண பகவான் காளிந்தீ முதலிய ஐந்து கன்னிகைகளை விவாகஞ் செய்துக்கொண்டதை சொல்லப்படுகின்றது.

கேளீர் அபிமன்யு புத்திரனே ! ஒருநாள் ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாண்டவர்களைப் பார்க்கவேண்டுமென்று சாத்தகி முதலிய யாதவர்களோடே இரதாரூடராய் காண்டவ பிரஸ்தத்திற் கெழுந்தருளினர். அவரைக் கண்டு பாண்டவர்கள் பூஜித்து உபசரித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாண்டவர்களின் க்ஷேமங்களை விசாரிக்க குந்திதேவி சொல்லுகின்றனள்: சர்வேசுரனன ஸ்ரீ கிருஷ்ண! தேவரீரை ஒருவன் ஒருக்கால் நினைத்தால் அவனுடைய பாபங்கள் நசித்துப் பரிசுத்தனுகிருன். அத்தகைய தேவரீரை சர்வகாலமுந் தியானித்துக் கொண்டிருக்கின்ற எங்களுடைய கஷ்ட நஷ்டங்களுக்குரியவர் தேவரீராயிருக்க எங்களுக்கென்ன குறையென்று சொல்லினள். பின்பு தர்மபுத்திரர் சனகாதி யோகிகளும் காணக் கிடையாத அரும் பொருளான ஸ்ரீ கிருஷ்ண பகவானை எளிதில் சேவிக்க நாம் பூர்வத்திலென்ன தவஞ் செய்தோமோ வென்று தமக்குள் தானே ஆன்மஸ்துதி செய்தனர். இப்படி மழைக்காலமான நான்கு மாதமும் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடன் சுகித்திருந்தார்கள்.

இப்படியிருக்கையில் ஒருநாள் அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண சமேதனுய் இரதமேறி மனித சஞ்சாரமில்லாத காட்டிற்கு

விளையாடப்போய் புலி காட்டுப்பன்றி முள்ளம்பன்றி மான் முதலிய மிருகங்களை யெய்து அந்த அலுப்பினால் தாக மடைந்து இரதத்தைவிட்டுக் கீழேயிறங்கி யமுனை யாற்றின் ஜலத்தில் கால் கைகள் சுத்திசெய்து ஆசமனம் பண்ணி தீர்த்தபானஞ்செய்து அவ்விடத்திலேயே உலாவிக்கொண்டிருக்கையில் மின்னற்கொடிபோன்ற வச்சகவாபரண பூஷிதையாய் ஒரு கன்னியா ரத்தினத்தைக் கண்டு சுவாமியானவர் அர்ச்சுனனைப் பார்த்து இவள் யாருடைய பெண்? யாது காரணமாக இவ்வனத்தி லிருக்கின்றாள்? அதை தீர விசாரித்து வாவென்றனுப்ப அவனுமப்படியே போய் விசாரிக்க அந்தக் கன்னியானவள்: “ஐயா விஜயமகாராஜனே! லோக சாக்ஷியான சூரியனுக்குப் பெண்ணாகி காளிந்தியென்கிற நாம தேயத்தை வாய்ந்த அடியேன் தேவதேவனான ஸ்ரீ மந்நாராயணனைப் பர்த்தாவாக அடையவேண்டுமென்று இவ்வனத்தில் என் பிதா சூரியபகவான் நிருமித்துக் கொடுத்திருக்கின்ற கிருகத்திலிருந்து தவஞ்செய்கின்றேன்” என்று சொல்லினாள். அர்ச்சுனன் அதை ஸ்ரீ கிரிஷ்ண பகவானிடத்தில் அறிக்கைசெய்ய, அவரும் அவள் சமீபத்திற் சென்று அவளாற் பூஜிக்கப்பட்டு அவளையும் தமது இரதத்தில் வைத்துக்கொண்டு அர்ச்சுனனுடன் காண்டவப் பிரஸ்தஞ் சென்று சிலநாளிருக்க, அப்போது சுவாமியை நோக்கி பாண்டவர்கள் தங்கள் பட்டணத்தைச் செவ்வையாய் தேவ சிற்பியான விசுவர்கமாவைக்கொண்டு நிருமித்துக்கொடுக்கும்படி பிரார்த்திக்க, அப்படியே அதிக வைபவமுள்ள இந்திரப் பிரஸ்தமெனும் பெயரையுடைய நகர முண்டுபண்ணிக் கொடுப்பித்து, அர்ச்சுனனுக்கு சகாயராகி காண்டவ வனத்தை அக்கினிக்கு திருப்திசெய்வித்து, அவனைக் கொண்டு அனுமக்கொடியுடன் இரதமும் தனுசும் அம்புறாத் தூணி முதலியதை அர்ச்சுனனுக்கு கொடுக்கவைத்து, அந்தக் காண்டவவனத்தில் தப்பிப்பிழைத்த மயனைக்கொண்டு ஒரு சபை நிர்மித்து, தர்ம புத்திரருக்குக் கொடுப்பித்து, அவர்கள் கையில் செலவு பெற்றுக்கொண்டு இரதாரூடராய் சாத்தகி முதலிய யாதவர்களுடன் காளிந்தியை அழைத்துக் கொண்டு துவாரகாபுரத்திற்சென்று நல்ல சுபமுகூர்த்தத்தில் காளிந்தியை விவாகஞ் செய்துகொண்டனர்.

அப்பால் அவந்தி தேசத்திற் கரசனும் துரியோதனனுக்கு அன்பர்களாயுமிருக்கின்ற விந்தானுவிந்தர்கள் தமக்குத் தங்கையான மித்திரவிந்தைக்கு சுயம்வரஞ் சாட்டினார்கள். அதற்கு சகல வரசர்களும் வர அவர்களில் ஸ்ரீ கிருஷ்

ணீனயே முக்கியமாகப் பார்த்துத் தான் மணம் புரியவேண்டு மென்று கொண்ட எண்ணத்தை யறிந்து அப்படிக் கூடா தென்று வெகு விதமாய் சகோதரர்கள் தடைசெய்தும் கேளா மல் உறுதியாய்க் கருத்துகொண்டிருக்கிற மித்திரவிந்தையை ஸ்ரீ கிருஷ்ணன் சகல அரசர்களும் பார்க்கத் தேரின்மீதேற் றிக்கொண்டு துவாரகைக்குச்சென்று நல்ல முகூர்த்தத்தில் விவாகஞ் செய்துக்கொண்டு சுகமாயிருந்தனர்.

அப்பால் அயோத்யாதிபதியான நக்னஜித்து மகாராஜ னுக்கு மகா சௌந்தரியவதியாகிய சத்தியவதியெனும் ஒரு புத்ரி யிருந்தனள். அவளைச் சகல வரசர்களும் வந்து தங்கள் தங்களுக்குப் பாரியையாகக் கொடுக்கச் சொல்லிக் கேட்டுக்கொண்டார்கள். அப்போதந்த இராஜன் யாருக் கிந்த கன்னிகையைக் கொடுக்கிறது, ஒருத்தனுக்கு கொடுத் தால் மற்றவர்களொன்று சேர்ந்து யுத்தத்திற்கு வருவார்களே யென்று தனது பசுக்களைக் காக்கிறவனும் யசோதா தேவிக் குத் தம்பியாயு மிருக்கின்ற கும்பாண்டனென்பவனுடைய விருஷபங்கள் ஏழையும் ஆர் ஜயிக்கின்ருனே அவனுக்குத் தனது கன்னிகையை விவாகஞ் செய்து கொடுக்கிறேனென்று சுயம்வரஞ் சாட்டினன். அது கேட்டுச் சகல வரசர்களும் வந்து கைலாச பர்வதம்போல வெண்மை பொருந்தியும் அசுராம்சமாயு மிருக்கின்ற அந்த ரிஷபங்களுடன் போர் செய்ய மாட்டாமல் அபஜயப்பட்டுப் போனார்கள். அப்பால் கிருஷ்ண பகவான் யாதவசேனைகளைக் கூட்டிக்கொண்டு அயோத்தியா பட்டணத்திற் கெழுந்தருளினர். அதுகேட்டு நக்னஜித்து எதிர்கொண்டு பூசித்து ஆசனத்தில் எழுந் தருளப்பண்ணி உபசரித்தான். அப்போது சத்தியவதி ஸ்ரீ கிருஷ்ணனுடைய சௌந்தரிய பராக்கிரம முதலிய கல்யாண குணங்களைக் கேள்வியுற்று வெகுமோகங்கொண்டு தான் பூர்வ ஜன்மத்திலாவது இந்த ஜன்மத்திலாவது குரு வுக்குப் பணிவிடையும் உத்தமபாத்திரத்தில் தானமும்செய்து பக்தியாய் ஸ்ரீ பகவானை ஆராதித்ததும் சத்தியமே யானல் அந்த வசுதேவ குமாரரான ஸ்ரீ கிருஷ்ணன் எனக்குப் பர்த் தாவாகக் கடவதென்று ஹோமஞ் செய்து பிரார்த்தித்துக் கொண்டிருந்தனன்.

அப்போது நக்னஜித்து மகா ராஜாவினது வேண்டு கோளுக் கிசைந்து தாம் ஏழு உருவமாகி அந்த விருஷபங் கள் ஏழையுங் கொம்பைப் பற்றிக் கீழே தள்ளி எளிதாக க்ஷணத்தில் பகவான் கட்டிப்போட்டனர். அப்போது அந்த நக்னஜித்து மகா ராஜன் வெகு சந்தோஷத்துடன் தனது

கன்னிகையை ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்கு விவாகஞ் செய்து கொடுத்தனன்.

பின்பு ஸ்ரீ கிருஷ்ண பகவான் சத்தியவதி சமேதனாக துவாரகாபுரிக்கு சகல சம்பிரமத்துடன் எழுந்தருள்வதைக் கேட்டு சில அரசர்கள் பொருமையால் அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் யுத்தத்திற்குவந்து யாதவர்களா லடிக்கப்பட்டு சின்ன பின்னமாகப் போனார்கள். அப்பால் சுவாமியும் சகல சேனைகளுடன் துவாரகைக்கு எழுந்தருளி சத்தியவதி யுடன் சுகித்திருந்தனர்.

பிறகு சிலநாள் சென்றவுடனே கேகய தேசாதிபதியான மகா ராஜனுக்கு பத்திரையென்கிற பெண் பிறந்திருந்தனள். அவளை சந்தர்த்தனன் முதலிய தமையன்மார்கள் ஒருமித்து ஆலோசித்து ஸ்ரீ கிருஷ்ணனுக்கு பலவந்தமாய்க் கொடுத் தார்கள். அவரும் அவளை துவாரகாபுரிக்கு அழைத்துக் கொண்டு போய் விதிப்படி விவாகஞ்செய்து கொண்டனர். பிறகு மந்திர தேசத்திற் கரசனுக்கு லக்ஷ்மணை யென்கிற பெண்ணிருந்தனள். அவளுக்கு சுயம்வரஞ் சாட்டினன். அதற்கு சகல அரசர்களும் வந்திருக்க அந்தக் கன்னிகையை பகவான் பலவந்தமாய்த் தூக்கிக்கொண்டு துவாரகை வந்து விவாகஞ் செய்துகொண்டனர். இப்படி ஸ்ரீ கிருஷ்ண பகவா னைவர் ஸ்ரீ ருக்குமிணி சத்தியபாமை ஜாம்பவதி காளிந்தி மித்திரை விந்தை சத்தியவதி பத்திரை லக்ஷ்மணை ஆகிய எட்டுப் பட்டமகிஷிகளுடன் சுகமாயிருந்தனர்.



## ஐம்பத்தொன்பதாவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவான் நரகாசுரனை ஜயிக்க புறப்படும்போது, பிரிவாற்றாது, சத்தியபாமா அவருடன்கூட புறப்பட்டதும், நரகாசுரன் அவனுடைய சேனாதிபதியையும் இராக்ஷச கூட்டங்களையும் வதைத்ததும், பாரிஜாத விருக்ஷத்தைக் கொணர்ந்ததும் சொல்லப்படுகிறது.*

வாராய் மகாராஜனே! ஒருநாள் நாரத மகாமுனிவர் ஸ்ரீ கிருஷணபகவானைச் சேவிக்க வேண்டுமென்று ஒரு பாரி ஜாத புஷ்பத்தைக் கையிற்கொண்டு துவாரகைக்குச் சென்று பக்தியாய் சுவாமி திருக்கையிற் சமர்ப்பித்து நமஸ்கரித்தார். அப்போது ஸ்ரீ ருக்குமிணி தேவி அந்தப் புஷ்பத்தை

தனக்குக் கொடுக்கும்படி பிரார்த்தித்து பெற்றுக்கொண்டாள். பின்பு நாரதர் சத்தியபாமையை அணுகி பாரிஜாத மலரை பகவான் அவளுக்குக் கொடாமல் ஸ்ரீ ருக்குமிணீ தேவிக்கு தந்ததை சொல்லி அவளால் பூஜிக்கப்பட்டு சொர்க்கத்திற்குச் சென்றனர்.

அப்பால் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சத்தியபாமையினுடைய கிருகத்திற் கெழுந்தருளினர். அப்போது சத்தியபாமை அந்த அரிதான பாரிஜாத மலரை தனக்குக்கொடாமலிருந்த தற்காக மனக்கவலைகொண்டு ஊடலாயிருந்தனள். அப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவான் உருக்குமிணிக்கு பாரிஜாதமலரைக் கொடுத்ததற்கு நீ வியசனப்படாதே. உன்னுடைய புறக்கடையில் அந்த விருக்ஷத்தையே கொண்டுவந்து நாட்டுகிறே னென்று பிரதிக்கினை செய்தருளினர். அந்தச் சமயத்தில் தேவேந்திரன் சத்தியபாமையினுடைய கிருகத்திற்கு வந்து சுவாமியைச் சாஷ்டாங்கமாக வணங்கி உரைக்கலாயினன்.

நரகாசுரன் என்பான் அடிக்கடி எம்மை எதிர்த்து எமக்கு பலவித துன்பத்தை செய்து வருகிறான். எனது தாயாராகிய அதிதி தேவியினுடைய குண்டலத்தையும் என் விளையாட்டுக் குரியதாயிருந்த மணிகூட பர்வதத்தையும், வெண்குடையையும், இன்னுமனேகந் தேவர்களுக் குரிய வஸ்துக்களையும் பறித்துக் கொண்டான். அவனுடைய உபத்திரவத்தைச் சகிக்க எங்களாற் கூடவில்லை. எப்படி யாவது அவனை நிக்கிரகித்தருள வேண்டும். தேவேந்திர னுடைய வார்த்தைகளைக் கேள்வியுற்று "நீ ஒன்றுக்கும் வருத்த மடைய வேண்டாம், அவனைச் சீக்கிரத்தில் நிக்கிர கிக்க யோசனை செய்வோம்" என்று பகவான் உரைக்க தேவேந்திரன் சுவர்க்கம் அடைந்தான்.

பூர்வத்தில் ஸ்ரீமந் நாராயணர் வராக ரூபியாய் திருவவ தாரஞ் செய்தருளினபோது பூமிதேவி அந்த வராக சுவாமி யிடத்தில் மோகித்து புணர்ச்சி செய்து நாகாசுரனென்கிற புத்திரனை யடைந்தனள். அவன் சாகாம லிருக்கும்படி கிருபைசெய்ய வேண்டுமென்று ஸ்ரீ பகவானை விரும்ப அப் போது அவர் பூமிதேவியை நோக்கி, இவன் அசுரனாகையால் இவனுக்கு அவ்வித வரங் கொடுக்கக்கூடாது. இவனை நிக்கிரகிக்கிற காலத்தில் இவனுடைய தப்பிதத்தை உனக்கு மேவுதலை சொல்லி நிக்கிரகிக்கிறேனென்று திருவாய்மலர்ந் தருளியதால் அந்த ஸ்ரீமந் நாராயணனே இந்த கிருஷ்ண பகவானாகவும் அந்த பூமிதேவியினுடைய அம்சமே யிந்த

சத்தியபாமையாக விருத்தலால், ஸ்ரீ பகவான் சத்தியபாமர் சமேதராய் கருடன்மீது ஆரோகணித்து நால்வகையான துற்கத்துடன் பாதாளலோகமுதல் சொர்க்க லோகம் வரையில் பரவியிருக்கின்ற பிராக்ஜோதிஷ பட்டணஞ் சென்று கௌமோதகீ என்கிற கதையால் முதலிலிருக்கின்ற கிரிதுற்கத்தைக் கண்டித்து, அப்பால் அக்கினி துற்கத்தையும் ஜலதுற்கத்தையும் வாயுதுற்கத்தையும் வரிசைக் கிரமமாகச் சின்னு பின்னப்படுத்தி சக்கிரப் பிரயோகத்தினுலும் நந்தகமென்கிற கத்தியாலும் நரகாசுரனுடைய மந்திரியான முரனுடைய பாசத்தையும் துணித்துவிட்டு கதையாலந்தப் பட்டணத்தினுடைய மதில்களை பேதித்துக்கொண்டு போய் பாஞ்சசன்னிய மென்கிற சங்கத்தைப் பூரித்தார்.

அதுகேட்டு முரனென்கிற அசுரன் கடுஞ்சினமடைந்து தானிருந்தவிடம் விட்டெழுந்திருந்து கண்களில் நெருப்புப் பொறி பறக்க விழித்துக்கொண்டு மூன்றுலகத்தையு மெரித்த உருத்திரன்போல யமதண்டத்திற்கொப்பான சூலத்தைக் கருடன்மீது பிரயோகஞ் செய்தனன். அதைக் கிருஷ்ண பகவான் மூன்று பாணங்களைப் பிரயோகஞ்செய்து நான்கு துணுக்கைகளாகக் கண்டித்து விட்டனர். அப்போது முரனுக்குக் கோபம்மீறி ஆயிரம் பாரம் எழுகினுற் செய்யப்பட்டும் நாலுபக்கமுந் தங்கப் பட்டங்கட்டியும் அநேக முளைகளடித்தும் தேவர்கள் யக்ஷர்கள் இராக்கதர்கள் மானிடர் முதலியவர்களுடைய உதிரங்களாற் பூசப்பட்டும் யமதண்டம் போலுமிருக்கிற கதையை இரண்டு கைகளாலுந் தூக்கிச் சுழற்றிக்கொண்டு கிருஷ்ணபகவானுக் கெதிராக ஓடிவந்து எறிந்தான். அதை ஸ்ரீ கிருஷ்ண பகவான் தம்முடைய கௌமோதகியென்கிற கதையாலடித்துப் பொடி செய்து விட்டார். அப்போது முரகாசுரனவன் கையை உருட்டிப் பிடித்துக்கொண்டு சுவாமியைக் குத்தவேண்டு மென்ருேடி வந்தனன். அப்போது ஸ்ரீ கிருஷ்ண பகவான் சக்கிரப்பிரயோகஞ்செய்து அவனுடைய சிரசைத் துணித்து விட்டார். முரனுடைய குமாரர்களான தாமரன்-அந்தரிக்ஷன்-சிரவணன்-விபாவசு-வசு-நபசுவான்-அருணன் இவ் வெழுவருங் கேட்டு கடுஞ்சினமடைந்து தங்களுடைய பிதாவை கொன்ற ஸ்ரீ கிருஷ்ணனைக் கொல்லவேண்டு மென்று பல ஆயுதங்களை எடுத்துக்கொண்டு பீடனென்கிற சேனுபதியை முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணசுவாமி பேரில் அஸ்திர வருஷங்களை பெய்தார்கள். அப்போது சுவாமியான்வர் புன்னகையுடன் வருஷகாலத்து மேகம்போல்




ஸ்ரீ பகவான், நரகாசுரனை வதைத்தது.

சப்திக்கின்ற தம்முடைய சாரங்கமென்கிற வில்லை வளைத்து நாணேற்றி குணத்தொனி செய்து அவர்கள்மீது கிருஷ்ண சர்ப்பங்கள்போல் சீறி விஷாக்கினிகளைக் கக்கிக்கொண்டும் தீக்ஷணங்களாயு மிருக்கின்ற பாணங்களைப் பிரயோகஞ்செய்து அவர்கள் பிரயோகித்த ஆயுதங்களைச் சின்னு பின்னமாகக் கண்டித்து விட்டு அநேக நாரசபாணங்களைப் பிரயோகஞ் செய்து அவர்களை கைவேறு கால்வேறு உடல்வேறு தலை வேருகக் கண்டித்துத் துணித்துவிட்டனர்.

இந்தச் சங்கதிகளை நரகாசுரன் கேட்டு மிகுந்த கோபத்துடன் கண்கள் சிவந்து நெருப்புப்பொறி பறக்க பற்களாலுதட்டைக் கடித்துக்கொண்டு மதத்துடன்கூடிய ஐராவதம் போல விளங்குகின்ற அநேக யானைக்கூட்டங்களைச் சேகரித்துக்கொண்டு மின்னலுடன் கூடின மேகத்தைப்போல சத்தியபாமை சமேதராய் கருடன்மீது விளங்குகின்ற ஸ்ரீ கிருஷ்ணசுவாமியினது மார்பில் சமதக்கினி என்கிற ஒரு சத்தியை சுழற்றி வேகமாக எறிந்தான். அவனுடன் கூட வந்த சேனைகளும் நானுவித ஆயுதங்களை ஏககாலத்தில் பிரயோகஞ் செய்தார்கள். அப்போது சுவாமி சார்ங்கமென்கிற தனுசில் கழுகினிறகுகள் கட்டின அநேக பாணங்களைப் பிரயோகஞ்செய்து சேனைகளைச் சின்னுபின்னமாகக் கைவேறு கால்வேறு உடல்வேறு தலைவேருகக் கண்டித்து இரதம் யானை குதிரை இவைகளின் மீதிருந்து யுத்தஞ் செய்பவர்களைக் சக்கிரப்பிரயோகஞ் செய்து சிரங்களை சேதித்து விட்டார். அப்போது கருடர் தனது உபய பக்ஷங்களால் ஒரு அடிக்கு நூறு இருநூறு யானைகளாக அடிக்க ஆரம்பித்தனர். அப்போதந்த யானைக் கூட்டங்கள் கருடனுக்கெதிர் நின்று யுத்தஞ் செய்யமாட்டாமல் வீறிட்டு வந்த வழியைப் பிடித்துக்கொண்டோடிப் போயின.

இப்படி கருடனால் பாரியாயோடுகிற யானைக் கூட்டங்களையும் ஸ்ரீகிருஷ்ண சுவாமியினது பாணத்தாலடிக்கப்பட்ட சேனைகளையும் நரகாசுரன் கண்டு கொடிய கோபங்கொண்டு வஜ்ஜிராயுதத்தை ஸ்தம்பிக்கச்செய்த மகாப் பிரதாபமுள்ள தனது சக்தியென்கிற ஆயுதத்தை கருடன்மீது பிரயோகஞ் செய்தனன். மேருபர்வதத்தையும் திரணமாக்கத்தக்க அச் சத்தியினுலடிப்பட்டும் கொஞ்சமேனும் லக்ஷியஞ் செய்யாமலிருந்தனர். கருடன் அதனுல் கஷ்ட முருதிருப்பதைக் கண்டு நரகாசுரன் வெகு பொருமையுடையவனுகி பயங்கரமான சூலத்தைக் கையினிற் ருங்கி ஸ்ரீ கிருஷ்ணனைக் கொன்றுபோட வேண்டுமென்று ஓங்கினுன். அதைப்

பார்த்து சுவாமி அந்தச் சூலம் வருவதற்கு முன்னமே சக்கிரத்தினல் நரகாசூரனுடைய சிரசை அறுத்துத் தள்ளினூர். சகல தேவர்களும் புஷ்பமாரி சொரிந்து துந்துபி முதலிய அனேக வாத்தியங்களை சப்தித்தார்கள்.

அப்போது பூமிதேவி நரகாசுரனுடைய புத்திரனை பகதத்தனை அழைத்துக்கொண்டு ஜகதீசுவரனை ஸ்ரீ கிருஷ்ணரைக்கண்டு தண்டன் சாஷ்டாங்கமாக சமர்ப்பித்து பலவிதமாக ஸ்தோத்திரஞ்செய்து மேலும் சொல்லுகிருள் : இந்த சிறுவனை பகதத்தன் நரகாசுரனது புத்ரன். இவன் தம்மை யனுக பயந்து இருக்கிருன். ஆதலின் அருள் சுரந்து இவனை ஆதரிக்கவேண்டுமென, பகவான் பூதேவி சந்தோஷிக்க பகதத்தனுக்கு அபயப்பிரதானஞ் செய்து அவனையுங்கூட அழைத்துக்கொண்டு நரகாசுரனுடைய பட்டணத்தினுட் பிரவேசித்தனர். முன்பு அந்த நரகாசுரனல் சிறையிறுத்தப்பட்ட பதினூருயிரம் இராஜகன்னிகைகளும் கண்ணபிரானைக்கண்டு மனங்களித்து நாம் பூர்வஞ் செய்த தவப்பேற்ருலிப்படிப்பட்ட மகானுபாவனது தரிசனங் கிடைத்தது. இப்பரம புருஷனல் நாம் மீக்ஷி யடைந்தோம். நம்மை இக்கோபாலமூர்த்தி மணம் செய்து கொள்வதானல் உயிர் வாழலாம்; அல்லாவிடில் மரணமடைவதே மேல் என அப் பெண்மணிகள் தீர்மானித்ததை சர்வக் கியரான ஸ்ரீ கிருஷ்ண பகவான் தெரிந்துகொண்டு அவர்களிடத்திற் கிருபை கூர்ந்து அவர்களை துவாரகா பட்டணத்திற் கனுப்பிவிட்டு நரகாசுரனலபகரித்துக் கொண்டுவந்து வைத்திருந்த வருணனுடைய வெண்குடையையும் தேவேந்திரனுடைய மணிகூட பர்வதத்தையு மின்னம் எவர்களிடத்தி லெந்தெந்த வஸ்துக்கள் அபகரிக்கப்பட்டனவோ அவைகள் யாவையும் அவரவர்களிடத்தில் கொடுத்துவிட்டு அதிதியினுடைய குண்டலங்கள் இரண்டையு மெடுத்துக்கொண்டு தேவலோகத்திற் சென்று இந்திரனல் பூசிக்கப்பட்டு அவனையுங்கூட அழைத்துக்கொண்டு காசியபருடைய ஆசிரமத்திற்குசென்று காசிபரையும் அதிதி தேவியையுந் தண்டனிட்டு அவர்களால் ஆசீர்வதிக்கப்பட்டு குண்டலங்க ளிரண்டையும் அதிதி தேவிக்குக்கொடுத்து அவளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மறுபடியும் தேவலோகத்திற் கெழுந்தருள அவ்விடத்தில் பகவானும் சத்யபாமையும் பலவிதமாக பூஜிக்கப்பட்டார்கள். ஆனல் இந்திராணி பாரிஜாதமலரை சத்யபாமைக்கு கொடாமையால், சத்தியபாமை மனம் வருந்தி ஸ்ரீ கிருஷ்ணரிடம் பாரிஜாத விருக்ஷத்தையே கொண்டு

வந்து தனக்குக் கொடுக்கும்படி வேண்டினாள். பகவானும் ஆகட்டும் என்றனர். பின் இருவரும் துவாரகை யடைந்தனர்.

அப்பால் சிலநாள் சென்றபிறகு நாரதர் மறுபடியும் ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு ஒரு பாரிஜாத மாலையைக்கொண்டு வந்து சமர்ப்பித்தனர். அதை ஸ்ரீ பகவான் ஸ்ரீ ருக்மிணி தேவிக்குக் கொடுத்து விட்டார். இதை சத்ய பாமையி னுடைய தோழிப்பெண் பார்த்திருந்து சத்தியபாமையிடஞ் சொல்லினள். அதைக்கேட்டு சத்யபாமை கோபத்துடனிருக் கிற சமயத்தில் நாரதர் ஸ்ரீ பகவானிடத்தில் விடை பெற்றுக் கொண்டு சத்யபாமையினுடைய கிருகத்திற்கு வந்து அவ ளால் பூஜிக்கப்பட்டு அந்த சத்யபாமையைப் பார்த்து "சுபாங்கனையே! யான் சொர்க்கத்திலிருந்து அரிதான பாரி ஜாதமலரைக் கொண்டுவந்து ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமிக்குக் கொடுத்தேன். அதையும் உருக்குமிணி தேவிக்கே கொடுத்து விட்டார். நீ சுவாமியோடு சொர்க்கத்திற்குச் சென்றபோது இந்திராணி பாரிஜாதமலரை உனக்குக் கொடாமல் அவ மதித்ததும் சுவாமிக்கும் சம்மதம்தானோ என்னவோ" என்று சொன்ன நாரதருடைய வார்த்தையை சத்தியபாமை கேட்டு கடுஞ் சினமடைந்தனள். பின் நாரதர் மீண்டனர்.

பிறகு சத்யபாமை தன் சரீரத்தில் அணிந்துகொண் டிருந்த ஆபாணங்கள் யாவையும் கழற்றிப்போட்டு நல்ல வஸ்திரமு மில்லாமல் குரோதா கிருகத்தினிற் பிரவேசித் திருந்தனள். அந்தச் சமயத்தில் ஸ்ரீபகவான் ஸ்ரீருக்குமிணி தேவியினுடைய கிருகத்தை விட்டு சத்யபாமையினது கிருகத் திற் கெழுந்தருளி ஆஸ்தானமண்டபத்தில் சத்யபாமையைக் காணமல் கோபக்கருத்தி லிருப்பதாக அறிந்து அங்கு சென்று அவளைநோக்கி அடி சத்தியபாமா! பிரிய நாயகி! நீ யாதுகாரணத்திற்காக ஒருவிதமா யிருக்கின்றாய்? என்று வினவ, ஹே! ஜகத்ரக்ஷக! ஒன்றுமரியாதவர் போலக் கேட் பது தேவரீருக்கு தர்மந்தானு? நாரதமா முனியானவர் முதல் தடவை பாரிஜாதமலரைக் கொண்டு வந்தபோது அடியேனுக்குக் கொடாமல் வஞ்சித்து உனக்கு அந்த விரு க்ஷத்தை வேருடன் பிடுங்கிக் கொண்டு வந்து நாட்டுகிறே னென்று பிரதிக்கினை செய்தீர். பிறகு தேவலோகத்தி லிந்தி ராணியா லவமதிக்கப்பட்டபோதும் அந்த மரத்தை யெனது கிருகத்தில் நாட்டுகிறேனென்று பிரதிக்கினை செய்தீர். இப் போது நாரதர் கொண்டுவந்த மலரை முறைப்படிக்கு எனக் குக்கொடுக்கவேண்டியது. அப்படிக்கில்லாவிட்டாலும் அந்த

உருக்குமணிக்கும் அடியேனுக்குமாவது கொடுக்கவேண்டும். அப்படிக்குமில்லாம லந்த உருக்குமணிக்கே கொடுத்து விட்டீர். இப்படிப்பட்ட அவமரியாதையை யான் சகித்துக் கொண்டு பிராணனை வைக்கமாட்டேனென்று ஒரே பிடிவாதமாய்ச் சொல்லுகிற சத்தியபாமையைப் பார்த்து ஸ்ரீ கண்ண பிரான் "மாது சிரோமணியே! இதற்காகவா இவ்வளவு கோபமாயிருக்கின்றாய். இதோ அதிசீக்கிரத்தில் அத்தருவைக் கொணர்ந்து உனக்கு தருவேன். நின்கோபம் தணிந்து என்னை ஆதரி" என்றனர். அந்த சமயத்தில் மீண்டும் நாரதர் அவர்கள் முன் தோன்றினர். அவரை இருவரும் பூஜித்த பின் பகவான் நாரதரை நோக்கி சத்தியபாமை பாரிஜாத விருக்ஷத்தை தனக்குத் தர வேண்டுகின்றனள். ஆதலின் நீர் தேவராஜனிடத்திற் சென்று பாரிஜாத விருக்ஷத்தை சில நாளைக்குப் பூமியிலிருக்கும்படி அனுப்புவிக்க வேண்டுமென்று சொல்லுக என, ஸ்ரீ நாரதர் "ஸ்ரீ பரந்தாமா! தேவேந்திரன் அந்த பாரிஜாத விருக்ஷத்தினிடத்தில் அன்புள்ளவனாய் உருத்திரனை வெகுவாய் பிரார்த்தித்து அவருடைய உத்தியான வனத்தில் நின்றுந் தேவலோகத்திற் கொண்டுபோய் வைத்திருக்கின்றனன். அதனிடத்தில் இந்திரனும் இந்திராணியும் மெத்த அன்புள்ளவர்களாயிருப்பதினால் அவர்க ளொருக்காலும் அதைப் பூலோகத்திற்கு அனுப்புவது சந்தேகம்" என்று கூறினர். "நல்லது நீர் போய் இந்திரனிடம் அந்த தருவை நமக்குத் தரும்படி சொல்லும். அவன் மறுத்தால் கௌமோதகி யெனும் எனது கதையால் அவனது மார்பைப் பிளந்து அந்த பாரிஜாத தருவைக் கொணர்வேன்" என்றனர் ஸ்ரீ கிருஷ்ண பகவான். நாரதர் இந்திரனிடம் சென்று நடந்ததை தெரிவிக்க, தருவைக் கொடுக்க இந்திரன் மறுத்தனன்.

நாரதர் மூலமாக தேவேந்திரனது துணிபை யறிந்த பகவான் ஸ்ரீ ருக்குமிணி குமாரனை பிரத்தியும்னனையும் சாத்தகியையும் கருடன் மீதேற்றிக்கொண்டு சொர்க்கத்திற்குச் சென்று பாரிஜாததருவை வேருடன்பிடுங்கிக்கொண்டு துவாரகைக் கெழுந்தருளும்போது அதை தேவேந்திரன் அறிந்து அவன் தன் புத்திரனை சயந்தனையும் சினேகிதனை பிரவாரனென்கிற பிராம்மணனையும் அழைத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண சுவாமியுடன் எதிர்த்து யுத்தஞ்செய்து அவராலடிக்கப்பட்டு பூமியி லொரு மலையின் மீது விழுந்தனன். அப்பால் பிரத்தியும்னன் ஜயந்தனையும், சாத்தகி, பிரவாரனென்கிற பிராம்மணனையும் ஜயித்தார்கள். மறுநாளுதயத்

தில் இந்திரனும் ஸ்ரீ கிருஷ்ணனும் அகோரமான யுத்தஞ் செய்ய ஆரம்பித்தார்கள். அந்தச் சமயத்தில் காசியபப் பிரம்மாவும் அதிதிதேவியும் வந்தார்கள். அவர்களைக் கண்டு இந்திரனும் உபேந்திரனான ஸ்ரீ கிருஷ்ணனும் யுத்தத்தை நிறுத்தி வாகனத்தினின்றுங் கீழே குதித்து ஆயுதங்களைக் கீழே வைத்து அவர்களிருவருக்கும் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பிக்க, அவர்களைப் பார்த்து நீங்கள் யுத்தஞ் செய்தல் தகாது. அதை நிறுத்தி சாந்தமடையுங்கள் என்ன, ஸ்ரீ கிருஷ்ணர் உரைக்கலாயினர்: கேளீர் பிதாவான காசியபரே! முன்பு யான் சத்தியபாமை சமேதனாய் இந்தத் தேவேந்திரனுடைய சபைக்குப் போயிருந்தேன். அப்போது இந்திராணியானவள் பாரிஜாத புஷ்பத்தைக் கொடாமல் அவமதித்தனள். அது நிமித்தங் கிலேசத்தையடைந்த சத்தியபாமைக்கு பாரிஜாதத் தருவை தருவதாக வாக்கு செய்தேன். அதை நாரதர் மூலமாயிந்த இந்திரனுக்கு தெரிவித்து பாரிஜாத தருவை கொஞ்சநாளைக்கு பூமியிலிருக்கும்படி அனுப்பவேண்டுமென்று வேண்டினேன். அதற்கு இவன் பரிகாசஞ் செய்தனுப்பினான். அதுகேட்டு அந்த பாரிஜாத தருவைக் கொண்டுபோகவேண்டி வந்தேன். இந்திரன் போருக்கெழுந்ததால் நான் பின்வாங்க முடியாதுபோயிற்று.

காஸ்யபர் இந்திரனைப் பார்த்து "உனது தம்பியான ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய கருத்தின்படி பாரிஜாத தருவை அவரிடம் கொடுத்துவிடு. அவரெதுவரையில் பூமியில் நிறுத்திக் கொள்ளுகிறாரோ அதுவரையில் நீ அதை விரும்பாமலிருக்கவேண்டியது. அவர் சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனென்பது ஓர் சாபநிமித்தமாக உனக்குத் தெரியாமல் போர் செய்தாய். அவர் சகல உலகங்களையும் இரக்ஷிக்கவேண்டி மானிட ரூபியாய் அவதரித்திருக்கின்றார். அவரோடு நீ யொருநாளும் விரோதஞ் செய்துக்கொள்ளக் கூடாது. அவரைப் பணிந்து பாரிஜாத தருவை அவருக்கு கொடுத்து அனுப்புகவென்ன, இந்திரன் அவ்விதம் செய்ய சகலரும் தத்தமது இடங்களுக்கு மீண்டு சென்றனர். சத்தியபாமையினது தோட்டத்தில் வளரும் பாரிஜாத தருவின் கிளைகள் ஸ்ரீ ருக்மிணி தேவியின் வீட்டின்மீது சாய்ந்திருக்க அதன் மலர்கள் ருக்மிணி தேவிக்கு உபயோகப்பட்டு வந்தன. பிறகு நரகாசுரனுடைய நகரத்திலிருந்து கொண்டுவந்த பதினாறாயிரம் இராஜகன்னிகைகளை தனித்தனி வீடுகளிலமைத்து வைத்து நல்ல முகூர்த்தத்தில் ஒவ்வொரு மடந்

தைக்கு ஒவ்வொரு உருவமாகத் தாமிருந்து மணம் செய்துக் கொண்டு ஸ்ரீ பகவான் சுகித்திருந்தனர்.

## அறுபதாவது அத்தியாயம்

*ஸ்ரீ கண்ணபிரான் ஸ்ரீ ருக்குமிணி தேவியை பரிகாச வார்த்தையால் கோபம் வரும்படிசெய்து, பிறகு சமாதானம் செய்து அவள் ஊடல் தீர்த்தது.*

வாராய் பரிக்ஷித்து மன்னனே! அந்த துவாரகா புரத்தில் மிக வுயர்ந்தும் சொர்க்கலோகம்போலும் ஸ்ரீ ருக்குமிணி தேவியினுடைய கிருகத்தில் சொர்ணத்தால் சுவர் வைத்து மகா அற்புதமாய் நிருமித்தும் பனிநீர் தெளித்து சாம்பிராணி தூபம்போட்டு நந்தவனத்திலுள்ள பாரிஜாதம் முதலிய நறுமலர் வாசனையுடன் தென்றற்காற்று வீச அதிக விநோதமாயிருக்கிற சபாமண்டபத்தில் சொர்ணமயமாயும் நவரத்தினமயமாயு மிருக்கின்ற கட்டிலுக்கு சந்திரமண்டலம் போன்ற மேற்கட்டுகள் கட்டி நான்கு பக்கங்களிலும் முத்துச் சரங்களை தொங்கவிட்டு பட்டினால் செய்திருக்கின்ற பஞ்சணையின்மீது வீற்றிருக்கின்ற சகல லோகேசுரனை ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு மின்னற்கொடிபோன்ற இடையினைவாய்ந்த சாக்ஷாத் மகா லக்ஷிமியான ருக்குமிணிதேவி காதினில் சூரியன்போன்ற ஒளியினையுடைய இரத்தின குண்டலங்களசைய, நவரத்தின தோள்வளைகள் விளங்க, மார்பினில் நக்ஷத்திரமண்டலம்போல் முத்துச்சரங்கள் பிரகாசிக்க, கால்களிற் சிலம்பு தண்டை முதலிய பாதசரங்கள் ஒலிக்க, மெய்யினில் செவ்வானத்தை நிகர்த்த வஸ்திரந் துலங்க, அதன் மீது நவரத்தின ஒட்டியாணம் மின்ன, சந்திரமண்டலம் போன்ற முகத்தினிற் கஸ்தூரிதிலகம் விளங்க, கரங்களில் பூண்டிருக்கும் நவரத்தின கங்கணங்கள் கலகலவென்று ஒலிக்க, இவ்வளவு வைபவத்துடன் அநேக ஊழியப் பெண்களிருக்க தானே சுவாமிக்கு கைங்கரியஞ்செய்ய வேண்டுமென்று விரும்பி நவரத்தின மிழைத்த சாமரத்தைப் பரபரப்புடன் சேவிக்கிறபோது கொண்டை தளர்ந்து புஷ்பங்கள் விழ, முகத்தில் சிறு முத்துபோல வேர்க்க, முன்னுச்சி மயிர்கள் நெற்றியில் விழ, அதைத் தன்னுடைய இடது கையினாலொத்திக்கொண்டு பகவானே கதியென்று ஒரே மனதாய் நம்பியிருக்கிற ருக்மிணி தேவியைப் பார்த்து ஸ்ரீ பகவானனவர் புன்னகையுடன் அருளிச்செய்கிறார்:

சீரிய அரச குலத்துதித்த செல்வியே! உன்விதி யிருந்த வாறென்னே! உன்னை மணம் செய்துக்கொள்ள மகா சூரர்களாயும் ஐஸ்வரியவான்களாயும், உயர்ந்த குலத் துதித்தவர்களாயுமுள்ள சிசுபாலன் முதலிய அரசர்கள் உன்னை விவாகஞ்செய்ய வலுவில்வர, உனது தாய் தந்தை அண்ணன் முதலிய பந்துக்கள் சிசுபாலனுக்கே கொடுக்க நிச்சயித்திருக்க நீ அறிவில்லாமல் அதற்கு விரோதமாய் அவ்வரசர்களுக்கு சமானனுகாதவனுயும், அவர்கட்கு பயந்து சமுத்திரத்தை அடைந்திருக்கிறவனுயும், ஒருவரிடத்திலும் சம்பந்தமில்லாதவனுயும், பலவான்களுக்கு விரோதியாயும், ஒருவர் நடத்தையையும் அனுசரியாதவனுயும், சிம்மாசனமில்லாதவனுயும், குணவீனனுயும், தரித்திரனுயும், தரித்திரர்களால் பூசிக்கப்பட்டவனுயும், தனவான்களால் பூசிக்கப்படாதவனுயும், தரித்திரர்களை பூசிக்கிறவனுயும், உனக்குச் சமானனுகாதவனுயும், பிச்சைக்காரர்களால் துதிக்கப்படுகிறவனுயு மிருக்கின்ற யென்னையேன் விவாகஞ்செய்துக்கொண்டாய். இப்படி பகவானுரைத்த கடூர மொழிகளைக் கேட்டு அதிக துயரத்துடன் செந்தாமரை யிதழ்போன்ற தனது கால்விரலால் பூமியைக் கீறிக்கொண்டு கண்களிலிருக்கின்ற மைகரைந்து சொர்ண கலசம்போன்ற கொங்கைகளை நனைக்க மனம் தடுமாறி துக்க சமுத்திரத்தில் மூழ்கினவளாய் மூர்ச்சித்து கையிலிருந்த சாமரமும் விசிறியும் நழுவவிட்டு சாய்ந்தனள். ஸ்ரீ ருக்குமிணீ தேவியினுடைய சோகத்தைப் பார்த்து சகிக்கமாட்டாதவராய்ப் பரபரப்புடன் ஸ்ரீ பகவான் சப்பிர மஞ்சத்திலிருந்து கீழே குதித்து நான்கு திருக்கைகளை வாய்ந்தவராய் ஒரு திருக்கையினுல் தூக்கியும் ஒரு திருக்கையினுல் ஆலிங்கனம் செய்துக்கொண்டும் ஒரு திருக்கையினுல் கூந்தலைச் சீர்திருத்தியும் ஒரு திருக்கையினுல் உடம்பிற் படிந்த தூளைத்துடைத்தும் உபசரித்து, அதி சீக்கிரத்தில் மூர்ச்சை தெளிவித்து தனது இடையிற் கட்டிய பீதாம்பரமானது சோர்ந்து பூமியில் வீழ்வதையும் பாராமல் அத்தேவியை தூக்கி மடியினில் வைத்துக்கொண்டு மிகுந்த ஆதரவுடன் "அடி யென் மனதுக்குகந்த மங்காய்! நீ யெளிதில் மோசம் போனுயே! நான் பரிகாசமாய் சொன்னதை உண்மையாகக் கொண்டு வீண் துக்கத்திற்காளாகினையே. நின் பக்தி பெருக்கையும், நின் தெய்வ குணங்களையும் நான் அறியேனே? வீணே நின்னை துயரத்திற்கு ஆட்படுத்தியதற்காக என்னை மன்னித்து ஆதரி" என பகவான் மொழிய ஸ்ரீ ருக்மிணிதேவி மனமகிழ்ந்து, பகவான் தன்னை பழித்துக்கொண்ட நிந்தாமொழிகளை

ஆதாரமாக வைத்துக்கொண்டு அவைகளுக்கு தத்வார்த்தமாக பதிலுரைக்கலானுள்.

ஹே ப்ராணபதே! தேவரீர் சிசுபாலனுதியர்களுக்கு சமானர் அல்லர் என்றீர். அது ஒருவிதத்தில் உண்மை தான். சகல சர அசரங்களையும் படைத்து ரக்ஷித்து சிக்ஷிக்கும் மூலகாரணராகிய தாம் அற்ப சரீரத்தையே தான் என அகங்கரித்திருக்கும் புன் மானிடர்களுக்கு எவ்விதம் சமானர் ஆவீர்! இராஜாக்களுக்குப் பயந்து சமூத்திரத்தை யடைந்தவரென்கின்றீர். மனம் முதலிய பஞ்சேந்திரியங்களின் அஞ்ஞான கார்யங்களில் சம்மந்தப்படாது, அவைகளுக்குப் புறம்பாய் ஆழமான பிராணிகளின் இருதயமாகிற சமுத்திரத்தை யடைந்திருக்கின்றீர். தாம் ஒருவரிடத்திலும் சம்பந்தமில்லாதவ ரென்கிறீர். அதுவும் ஒருவிதத்தில் உண்மைதான். பரதத்வப் பொருளாகிய தாம் தத்வ ஆராய்ச்சி செய்யும் பெரியோர்க்கு எல்லாப் பொருள்களோடும் இரண்டறக் கலந்தவராக விளங்கினுலும் சாதரண ஜனங்களுக்கு எதிலும் சம்பந்தப்படாதவராகவே காண்கிறீர். பலவான்களுக்கு விரோதி யென்கிறீர். இந்திரிய நிக்ரகஞ் செய்ய முடியாதவர்களே இப்பூமியில் பலவான்கள் என்னப்படுகிருர்கள். அத்தகையார்க்கு தாம் விரோதி யென்பதில் ஒரு தடையுமில்லை. சிம்மாசன மில்லாதவ ரென்கின்றீர். இராஜ ஆசனத்திலிருந்தால் பகவானுடைய திருவடிக்குப் புறம்பாவோமென கருதி உமது முன்னோர்கள் அதை வெறுத்தார்கள். இதில் தேவரீருக்கென்ன யிழிவு? பரம புருஷோத்தமராகிய தாம் பலராலும் சகுண பிரம்மமாக பூஜிக்கப்பட்டாலும், எல்லாமறிந்த ஆன்றோர்கள் தம்மை நிர்க்குண தேவரெனவும் கொண்டாடுகிருர்கள். ஆதலில் தாம் குணவீனரென்பது உண்மையே யாகின்றது. தரித்திரர்களால் பூஜிக்கப்படுகிறவ ரென்கின்றீர். இகலோகத்திற் குரிய ஐஸ்வர்யத்தை நிலையில்லாததென்று தள்ளி ஞானிகளாகிற தரித்திரர்கள் பரலோகத்திற்குரிய மோக்ஷமாகிற ஐஸ்வர்யத்தை விரும்பி தேவரீரைப் பூசிக்கின்ருர்கள். தனவான்களால் தாம் பூசிக்கப்படாதவ ரென்றீர். நரகத்தைத் தரும் ஐசுவரியத்தை யடைந்த தனவான்கள் தம்மை ஏன் பூசிப்பார்கள்? சகல உலகங்களையும் படைத்தருளும் தாம் எவ்விதம் தரித்திரராவீர்? இந்த தரித்திரர்களைப் பூசிக்கிறீர். சொர்க்காதி போகம் முதலிய ஐஸ்வர்யங்களை வெறுத்த பரமயோகிகளாகிற தரித்திரர்களால் பூசிக்கப்படுகின்றீர். தேவரீருடைய நடத்தையை வேதம் முதலிய சாஸ்திரங்களும் அனுசரித்திருக்க உபயோகமற்ற

மானிடர்களின் நடத்தையை யாதுகாரணத்திற்காக தேவரீர் அனுசரிக்கப் போகின்றீர் ? பிரமன் முதலிய தேவர்களால் பூஜிக்கப்படுகிற தேவரீர் எளியவளாகிய எனக்கு சரியாவீரோ ! இல்லற வாழ்க்கையையும் நரகத்திற்குரிய ஐசுவரியத்தையுந் துறந்து பிச்சைக்காரர்களாயிருக்கிற சன்யாசிகளால் சார்வ காலமுங் கீர்த்தனஞ் செய்யப்படுகின்றீர் என்பதும் சத்யமே. தேவ தேவராகிய தமது குணாதிசயங்களையும் லீலாகுண வைபவங்களையும் அறிந்து அனுபவிக்க இச்சிப்பதைத்தவிர அடியாளுக்கு வேறு என்ன பாக்யம் இப்பூமியில் தேவையிருக்கின்றது, என்றிவ்விதம் பக்திப் பரவசையாய் பேசிய உருக்மணியின் வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீ பகவான் "ஹே ப்ரியநாயகி! நின் மதுர மொழிகள் என் மனதைக் குளிர்வித்தன. நீ அகாரணமாய்ப் பிராணிகளிடத்திலன்பு கூர்ந்து உனது கடைக்கண் பார்வையால் பார்த்து சகல சம்பத்துக்களையும் அடையும்படி செய்கின்ற மகா தயாளுவாகையால் நீ என்னிடத்திலும் அன்பு கூர்ந்து உனது சுயம்வரத்தில் சகல அரசர்களும் வந்திருக்க அவர்கள் யாவரையும் விரும்பாமல் இரகசியமாய் உனது கருத்தைப் பிராமணரிடத்தில் பத்திரிகை மூலமாய் இரவும் பகலும் நித்திரையில்லாமல் உன்மீது மயலாகியிருக்கின்ற எனக்குத் தெரியப்படுத்தினையே! அதற்கிணையாய் யானென்ன உபகாரஞ் செய்யப்போகிறேன். மேலும் உன்னை இரதத்தில் தூக்கி வைத்துக்கொண்டு துவாரகாபுரத்திற்கு வருகிற சமயத்தில் உனது சகோதரனை உருக்குமி யுத்தஞ்செய்ய வந்து என்னால் அவமானப் படுத்தப்பட்டபோது கொஞ்சமேனும் என்னிடத்திற் கோபமில்லாம லிருந்தாயே! அந்தப் பொறுமையினாலுன்னால் நான் ஜயிக்கப்பட்டேன். சுகுமாரி ! நின்னை யான் இப்புவியில் அடைதற்கரிய பெரும் செல்வங்களில் ஒன்றாக மதித்திருக்கின்றேன். நீ என்னோடு எக்காலும் சுகித்து மகிழ்க" என்றனர்.



## அறுபத்தோன்றாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு பல புத்ரர்கள் உற்பத்தியானதும், பிரத்யும்னன் மணம் புரிந்ததும், அனிருத்தன் பிறந்து மணம் கொண்டதும், பலராமர் உருக்குமியை சங்கரித்ததும் சொல்லப்படுகின்றது.*

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே ! அந்த பதினாயிரம் மனைவியர்களுக்கும் தனித்தனி வீடுகள் அமைத்துவைத்து

கொடுக்க நிச்சயித்து, ஸ்ரீ கிருஷ்ணன் முதலியவர்களுக்குத் தெரியப்படுத்தி எல்லாரையும் வரவழைத்து அவர்களை விதிப்பிரகாரம் பூஜித்து சாஸ்திரவிதிப்படி விவாகம் நிறைவேற்றினன். பின்பு சகலமான சம்பந்திகளுக்கும் விருந்து செய்வித்து சந்தோஷமா யிருக்கையில் அந்த உருக்குமி யென்பவனுக்கு தோழனை கலிங்கனும் அவனோடு வந்த அரசர்களும் உருக்குமியைப் பலராமரோடு சொக்கட்டானுடி அவரைத் தோற்கடிக்கத் தூண்டினர்கள். ஸ்ரீ பலராமர் அதற்கிசைந்து ஆடி, முதல் மூன்று ஆட்டங்களில் தோல்வி யடைந்தனர். அப்போது சால்வன் முதலியவர்கள் கைகொட்டிச் சிரித்தார்கள். அதைப் பொறுத்துக்கொண்டு பலராமர் லக்ஷம் வராகன் பந்தயம் வைத்து அந்த ஆட்டத்தை தாம் ஜயித்தார். அப்போது உருக்குமி தானே பலராமரை ஜயித்ததாகச் சபை நடுவிற் சொன்னான். அதற்கும் பலராமர் பொறுத்துக்கொண்டு கோடி வராகன் பந்தயம் வைத்து ஆடிப் பலராமரே ஜயித்தார். அப்பொழுதும் உருக்குமி அதர்மவசத்தனாகி தானே ஜயித்ததாகச் சொன்னபோது ஆகாசவாணியும் பலராமர் ஜயித்தாரே யன்றி உருக்குமி ஜயிக்கவில்லை என்று கூற, அதையுங் கேளாமல் பலராமரைப் பார்த்து உருக்குமி சபையில் பரிகாச வார்த்தைகளைப் பிதற்றினான்.

அதுகேட்டு ஸ்ரீ பலராமர் கடுஞ்சின மடைந்து தமது கையிலிருந்த கலப்பையால் அந்த உருக்குமியை யடித்துச் சங்கரித்துப் போட்டார். கலிங்கதேசாதிபன் பயந்து சபையை விட்டோட அவனைத் தொடர்ந்து பிடித்து சொக்கட்டானுடத் தெரியாதென்று பரிகாசஞ்செய்த அவனுடைய பல்லை உதிர்த்துப் போட்டார். மற்ற அயோக்கியர்களான அரசர்களையும் சின்னபின்னமாக அடித்துச் சிதறவடித்தார். பிறகு சகலரும் துவாரகை சென்று சுகித்திருந்தனர்.



## அறுபத்திரண்டாவது அத்தியாயம்



*பாணாசுர உபாக்யானம்—அனிருத்தன் காவலில் வைக்கப்பட்டது சொல்லப்படுகின்றது.*

பரிக்ஷித்து மஹாராஜனே! மகாபலி யென்றொரு அரசனிருந்தான். அவனுக்கு நூறு குமாரர்களுண்டாகினர். அவர்களில் முதல்வனான பாணாசுரன் மிகுந்த பயபக்தியுடன்

சிவனைப் பூஜித்தான். அவனது பூஜைக்கு சிவன் மகிழ்ந்து அவன் கோறியபடி அவன் பட்டணத்திற் காவற் காத்துக் கொண்டிருக்கையில் ஒருநாள் பாணுசுரன் சிவபெருமானை நோக்கி இறைவரே! உமதருளினுல் அடியேனுக்கு பல முதலிய சம்பத்தும் மென்மேலும் பெருகவுண்டாயிற்று. தேவரீர் தவிர மற்ற யாவரும் எனக்கு நிகராக யுத்தஞ் செய்யமாட்டார்கள். தேவரீர் கொடுத்த ஆயிரங் கைகளும் யுத்தஞ் செய்யவேண்டுமென்று விரும்புகின்றன. அதெப் போது நேரிடுமென்று கூற, பரமசிவன் கோபித்து அந்த பாணுசுரனைப் பார்த்து கொடி எப்போது அறுந்து கீழே விழுகின்றதோ அப்போது நீ என்னிலும் அதிக மானவனுடன் யுத்தஞ் செய்து கர்வபங்கப் படுவாயென்றனர்.

பாணுசுரனுக்கு உஷையென்ெருரு குமாரத்தி மிகுந்த ரூபலாவண்ணியத்துடன் வளர்ந்திருந்தனள். அவள் ஒரு நாள் நித்திரை செய்துக்கொண்டிருக்கையில் தனது கனவில் ஸ்ரீ கிருஷ்ண சுவாமியினது பௌத்திரனை அனிருத்தன் தன்னுடன் புணர்ச்சி செய்ததாகக்கண்டு நித்திரை தெளிந்து விழித்துப் பார்க்கையில் அம்மணவாளனைக்காணுமல் அவன் மீது மயலாகி காதல்கொண்டு உணவு நித்திரை முதலிய சுகத்தை நிவர்த்தித்தனள். அவளது தோழியான சித்திர லேகை உஷையின் காதலுக்கு காரணத்தையறிந்துகொண்டு, தன் சாமர்த்தியத்தால் சகல புருஷ சிரேஷ்டர்களது படங்களைக் கொண்டுவந்துகாட்ட உஷை தன் காதலுக்குரிய அனிருத்தனது படத்தைப் பார்த்து நாண முற்றிருந்தனள். அதனைக் கண்டு சித்திரலேகை இவளது கனவிற்ருேன்றியவன் அநிருத்தனென்று கருதி உடனே யெழுந்து உஷா தேவியை நோக்கி இதோ அந்த மகா புருஷனை உனதருகிற் சேர்ப்பிக் கின்றேனென்று கூறி, ஆகாயத்திற் கிளம்பி துவாரகாபுரஞ் சென்று திரஸ்கரணி யென்கிற வித்தையால் அநிருத்தனை சப்பிரகூட மஞ்சத்துடன் தூக்கிக்கொண்டு சோணிதபுர மென்கிற பாணுசுரனுடைய பட்டணத்தில் புருஷனுற் கண்ணெடுத்துப் பார்க்க ஒவ்வாத உஷா தேவியின் அரண்மனையிற் கொண்டுவந்து சேர்த்து உஷா தேவிக்குக் காட்டினள். உஷா தேவி அந்தப் புருஷனைப் பார்த்து ஆனந்தக் கடலிலாழ்ந்தவளாகி அவனைக் கனவிற்கண்ட நாள் முதல் காணுதிருந்த விரகந்தணிய ஆலிங்கனஞ்செய்து ரதிக்கிரீடையில் தனதிஷ்டத்தின்படி அவனுடன் போகித்து சுகித்திருந்தனள். அநிருத்தனும் ரூபலாவண்ணியத்திற் சிறந்த அம்மாது சிரோமணியினது போகத்தில் திருப்தி மிகுதியாய் இர

வென்றும் பகலென்றும் இத்தனை நாளாச்சுதென்றுந் தோன்ருமல் மோகாந்த காரத்தில் மூழ்கியிருந்தனன்.

இப்படி யிருக்கையில் ஓர் நாள் அந்த அந்தப்புரக் காவலாளிகள் உஷா தேவியினது அங்கங்களிலிருக்கின்ற வித்தியாச குறிகளை யுணர்ந்து பாணுசுரனுக்கு தெரிவித்தார்கள்; உடனே அவன் உஷையிடம் சென்று பார்க்க அநிருத்தன் உஷையோடு சொக்கட்டாடுவதைக் கண்டு வெகுண்டான். இதை யறிந்த அநிருத்தன் உடனே ஒரு கதையைக் கரத்திற்றுங்கி எதிரே நின்ருன். அப்போது பாணுசுரனுடன் வந்த ஜனங்கள் தங்களாயுதத்தினு லனிருத்தனை அடிக்க யத்தனஞ் செய்தார்கள். அனிருத்தன் அவர்கள் யாவரையும் அடித்துத் துரத்தி விட்டான். அதைப் பார்த்துப் பாணுசுரன் கோபமீறி அநிருத்தனை நாக பாசத்தாற் கட்டி சிறைச்சாலையிற் போட்டுவிட்டான். அதனைக் கேட்ட உஷாதேவி மிகவும் மனவருத்த முற்றிருந்தாள்.



## அறுபத்திமூன்ருவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவான் பாணுசுரனை எதிர்த்து அவனது ஆயிரங் கைகளையும் துணித்ததும், சிவபெருமானும் உஷ்ணசுரமும் ஸ்ரீ கிருஷ்ண பகவானை துதித்ததும், அனிருத்தனை விடுவித்ததும், அவனுக்கும் உஷைக்கும் மணம் செய்ததும் சொல்லப்படுகின்றது.*

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! துவாரகாபுரத்தில் காணுமல் போன அனிருத்தனை நினைத்துக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் முதலிய யாதவர்களும் ஸ்ரீ ருக்மிணிதேவி முதலிய மாதர்களும் வருந்தி யிருந்தார்கள். அவர்களிடம் நாரதர் சென்று நடந்ததை உரைத்துச் சென்றனர். உடனே பிரத்தியும்னன்-சேகிதானன்-சாத்தகி-கதன் - சாம்பன் - சாரணன்-நந்தன்-உபநந்தன் முதலிய யாதவர்கள் பன்னிரண்டு அக்குரோணி சேனைகளுடன் ஸ்ரீ ராமகிருஷ்ணர்களை முன்னிட்டுக்கொண்டு இரதாரூடர்களாய் அதிக வேகமாய் புறப்பட்டு சோணித புரஞ்சென்று அந்தப் பட்டணத்தை நான்கு பக்கத்திலுஞ் சுற்றிக்கொண்டு நந்தவனத்திலுள்ள தருக்களை துணித்து, அகழைத் தூற்று மதில் சுவரைப் பொடிப் பொடியா யிடிப்பதைப் பாணுசுரன் கண்டு கடுங் கோபங்கொண்டு தானும் பன்னிரண்டு அக்குரோணி சேனை

களைக் கூட்டிக்கொண்டு உமா மகேஸ்வரன் விநாயகன் சுப்பிர மணியன் முதலியவர்களுடன் யுத்தஞ் செய்ய வந்தான்.

ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் உருத்திரனும், பிரத்தி யும்னனுடன் சுப்பிரமணியனும், ஸ்ரீ பலராமருடன் பாணு சுரனுடைய மந்திரியான கும்பாண்டனும் கிருபனும், சாம்ப னுடன் பாணுசுரனும், சாத்தகியுடன் விநாயகரும், இப்படி யாக யுத்தஞ் செய்கிறதைப் பார்க்க ஆகாயத்தில் பிரம்மன் முதலிய தேவர்களும் நாரதர் முதலிய தேவரிஷிகளும் வந்து பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் சிவனேடு கூடவந்த சாகினி டாகினி பேதாள முதலிய பிரமதகணங்கள் யாவை யும் சின்னுபின்னமாகச் சிதற அடித்தார். பார்வதீபதி அதைப் பார்த்து கடுஞ்சின மடைந்து ஸ்ரீ கிருஷ்ணன்மீது அநேக பாணங்களை பிரயோகஞ் செய்தார். அதனைப் பிரதி அஸ்திரங்களாற் றுணித்துப்போட்டு ஸ்ரீ கிருஷ்ணபிரான் சிவன்மீது பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகம் செய்தனர். அவரும் அந்தப் பிரம்மாஸ்திரத்தையே பிரயோகஞ் செய்து உடனே வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தார். அதனை ஸ்ரீ கிருஷ்ணன் பர்வதாஸ்திரத்தா லடித்துப் போட்டார். பிறகு சிவன் அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்தார், அதை ஸ்ரீ கிருஷ்ணன் வருணுஸ்திரத்தால் தடைசெய்தார். பின்பு சிவன் பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தார், அதனை ஸ்ரீ கிருஷ்ணசுவாமி நாராயணுஸ்திரத்தைப் பிரயோகித்துத் தடுத்துவிட்டு மோகனுஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்து சங்கரரை மோகிக்கும்படி செய்தார். அப்போது சம்புவான வர் வெகு மோகத்தை அடைந்து மயங்கியிருக்கையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாணுசுரனை எதிர்க்காலாயினர். அப்போது பாணுசுரன் சாத்தகியுடன் யுத்தஞ் செய்வதை விட்டு ஸ்ரீ கிருஷ்ண பிரானுக்கெதிரே ஓடிவந்து தனது ஆயிரங்கைகளால் பாண வருஷங்களை பகவான்மீது வருஷித்து சுவாமியினது திருவடி முதல் திருமுடிவரையில் ஊசிநாட்ட விடமில்லாம லடித்தான்.

அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் தமது சாரங்கமென்கிற வில்லை வளைத்து அனேக அஸ்திரங்களைத் தொடுத்து அந்த பாணங்களை துணித்து அவனுடைய ஐந்நூறு தனுசையும் சாரதி-குதிரை முதலியவைகளையும் முறித்துப் போட்டு நாராச பாணத்தைப் பிரயோகஞ் செய்து அவனது மார் பைப் பிளந்து தமது பாஞ்சசன்னிய மென்கிற சங்கத்தைப்

பூரித்தார். அதைப் பாணுசுரனுடைய அன்னையான கொட்டறி யென்பவள் கேட்டுத் தனது புத்திரனைப் பிழைப்பிக்க வேண்டுமென்று வஸ்திரமில்லாமல் நிர்வாணமாய்த் தலையை விரித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் பாணுசுரனுக்கும் நடுவில் ஸ்ரீ கிருஷ்ணபிரானைப் பார்த்துக்கொண்டே வந்து நின்றாள். அப்போது சுவாமி அவளைப் பாராமல் முகத்தை திருப்பிக்கொண்டார். அந்தச் சமயத்தில் பாணுசுரன் யுத்த பூமியை விட்டு கால்நடையாகப் பட்டணத்திற் கோடிப் போயினன். அப்போது உருத்திரமூர்த்தி தாமும் தமது பிரமத கணங்களும் அபஜயப்பட்டதற்கு வியப்புடனிருக்கையில் அவரிடத்தி லுண்டான தாபசுரமானது மூன்றுதலை மூன்றுகாலுடன் அதிக பயங்கரமாய் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் யுத்தஞ்செய்து ஜயிக்கவேண்டுமென்று கருதி எதிரே நிற்கிறபோது, ஸ்ரீ கிருஷ்ணர் தமதிடத்தில் சீதசுரத்தை யுண்டுபண்ணி சிவபிரானுடைய தாபசுரத்துடன் யுத்தஞ் செய்ய விடுத்தார். அந்தச் சீதசுர வேகத்தில் தாபசுரம் நிற்க மாட்டாமல் மிகவுந் துன்பத்தை யடைந்து ஸ்ரீ கிருஷ்ண பகவானை சரணம் புகுந்து மிகவும் பயபக்தியுடன் தோத்திரஞ் செய்து சிவபெருமானிடத்தில் லயித்துப்போயிற்று. பாணுசுரன் இளைப்பாறி வேறொரு இரதத்தி லாரோகணித்துக்கொண்டு சுவாமியின்மீது பாணங்களை வருஷித்தான். அப்போது சுவாமி சக்கிரப் பிரயோகஞ்செய்து அவனது ஆயிரங் கரங்களில் நான்கு கைகள் நிற்க மற்றவைகளை கண்டித்து விட்டார். அதைச் சிவபெருமான் கண்டு ஸ்ரீ கிருஷ்ண னண்டையி லோடிவந்து தோத்திரஞ் செய்யலானார்:

இப்புவியில் ஒப்பில்லாத தருமத்தை நிலைநிறுத்த ஸ்ரீ கிருஷ்ணராக அவதரித்த பெருமானே! உமது மாயையால் அதிக காலம் அறிவு அழிந்து பலர் என்னையொத்த தேவர்களை பூஜித்து இழிவான செல்வங்களை அடைந்து அனுபவிப்பார்கள். ஆனால் உம்மைச் சரணமடையும் சிலரோ அழிவில்லாத பேரின்பமெனும் மோக்ஷ வீட்டை முடிவில் அடைந்து நன்மை யெய்துவார்கள்.

எமது தந்தையே! கையில் கிடைத்த தேவாமிர்தத்தை எறிந்துவிட்டு விஷத்தை புசிக்கும் கீழ் மக்களைப்போல விஷம் தங்கிய கண்டத்தையுடைய என்னையும் இதர தேவர்களையும் வழிபட்டு உம்மை உண்மையான பெரிய தேவனென்றுணர்ந்து பக்தி செய்யாதவர்கள் வீணரேயாவர். யோகிகள் இளைப்பில்லாமல் நினைந்து அந்த மனதினிலேயே இருத்தி தம்மை எக்காலும் தரிசிப்பார்கள்.

கருணை வள்ளலே ! தொண்டனை யான் முன் பாணாசுரனுக்கு தீர்க்காயுளோடு கூடிய வரங்களை வழங்கி யிருக்கின்றேன். அவை கெடாதபடி இரண்யனது புதல்வனை பிரகலாதனனுக்கு அருளியபடி யுத்தம் செய்யும் பெருந் திறமுடைய பாணனுக்கும் கிருபை செய்தல் வேண்டும் என்று மலர்ந்த மலரையுடைய கடுக்கை மாலைதரித்த சிவபிரான் பிரார்த்தித்தார்.

வலிய வீரத்தையுடைய இரண்யனது புத்ரனை பிரகலாதனது வம்சத்தில் பிறப்பவர்களை கொல்வதில்லை யென யாம் முன் வரம்கொடுத்துள்ளோம். மகா மேருவிலுள்ள வில் வித்தையிலும் மேம்பட்ட ருத்ரமூர்த்தியே! தாம் சொல்லுகிறபடியும் அது சிறப்பேயாகின்றது என்று உலகங்களை காத்தருளும் பூந்தாதுக்களையுடைய அழகிய தாமரை மலரைப்போன்ற கண்களையுடைய கிருஷ்ணபிரான் அருள் பெருகி உரைக்கலானன்.

இளம் சூர்யனைப் போலும் இரத்த நீரைக் குடித்த சக்ராயுதமானது மின்னலைப்போல பிரகாசிக்கும்படி தங்கிய சிவந்த கரங்களையுடைய ஸ்ரீ பகவான் சந்தோஷித்து இந்த நீண்ட புயங்கள் நான்கும் சாதல் இலாதவராமும் பொருந்துக வென்று வேலாயுதத்தையுடைய பாணாசுரனுக்கு அருளினன்.

இவ்விதம் யுத்தம் நின்றதும் பகவானல் அருளப்பெற்ற வாணன் அநிருத்தனையும் உஷாதேவியையும் இரதத்தின் மீதேற்றிக்கொண்டு வந்து ஸ்ரீ கிருஷ்ணபகவா னண்டையில் விட்டு சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து, அடியேன் செய்த அபராதத்தை மன்னித்து அடியேனுடைய புத்திரியான உஷாதேவியை அங்கீகாரஞ்செய்து அருள வேண்டுமென்று பிரார்த்தித்து விடை பெற்றுக்கொண்டு சிவபெருமானுடன் திரும்பினன். பகவான் சகலருடன் துவாரகைக்கெழுந்தருளி சகல வாத்தியங்கள் முழங்க, வேதியர்க ளாசீர்வதிக்க, தேவர்கள் புட்பமாரி சொரிய, அப்சர ஸ்திரீகள், நடிக்க, கந்தருவர் கானஞ்செய்ய, அநிருத்தனுக்கும் உஷாதேவிக்கும் விவாக மஹோற்சவம் முறைப்படி நிறைவேற்றினர்.



## அறுபத்திநான்காவது அத்தியாயம்

*ஸ்ரீ பகவான் நிவாரணம் செய்து நிருக மகாராஜனை ஒரு பிராமணன் அநேக காலம் ஓணானயிருக்கும்படி சபித்ததும், அதை நிருகனுக்கு அருள்புரிந்ததும் சொல்லப்படுகிறது.*

வாராய் பாண்டுகுலத் தோன்றலே! ஒருநாள் சகல யாதவர்களும் பயமற்றவர்களாய் துவாரகாபுரத்தின் சமீபத்திலிருக்கின்ற ஒரு நந்தவனத்தில் விளையாடி இளைப்புற்று தாக மேலிட்டு வனமெல்லாந் திரிந்து ஓரிடத்தில் பெரிய துறவிருக்கக் கண்டு அதை எட்டிப்பார்க்கையில் மலைபோன்ற தேகத்தையுடைய ஒரு ஓணானைக்கண்டு வியப்புற்று பிரத்தியும்னன் முதலிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய குமாரர்கள் யாவரும் மிகுந்த தயைகூர்ந்து அந்த ஓணானை வெளிப்படுத்த அநேக வடங்கள் கயிறுகள் முதலியவற்றுற்கட்டி தங்கள் பலங்கொண்டவளவு தூக்கிப்பார்த்து அசைக்கமாட்டாமல் ஓடி வந்து ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் சொன்னார்கள்.

அதுகேட்டு சுவாமி அந்த க்ஷணத்திற்றுனே புறப்பட்டு போய் அந்த ஓணானைக்கண்டு தமது இடத்திருக்கையிலெளிதாக வெளியிலெடுத்து விட்டார். அந்த கரஸ்பரிசப் பிரபாவத்தினுல் சாபத்தில் நின்றும் நீங்கினவனுய் நிருக மகாராஜன் என்பவன் தனது நிசரூபத்தோடு சுவாமியினது திருவடியில் பணிந்து நின்றுன். பகவான் அவனை அருளோடு பார்த்து அவனுக்கு சாபம் நேர்ந்த விதத்தை கேட்க நிருகன் உறைக்கின்றுன் :

"சுவாமி அடியேன் இட்சுவாகு வம்சத்திற் பிறந்தவன். நிருகன் எனும் பெயருடையவன். உத்தமகுலத்திற் பிறந்தும் நற்குணம் நல்லொழுக்கமுடையவர்களாயும் வைதீக நிஷ்டர்களாயும் குடும்பிகளாயும் தரித்திரர்களாயும் நான்கு வேதம் ஆறுசாஸ்திரங்களையும் கற்றவர்களாயும் பிர்ம்மத்தினுடைய நிச்சயத்தை நன்றுய் ஆருய்ந் துணர்ந்தவர்களாயும் இருக்கின்ற பிராம்மணர்கட்கு உத்தமமான க்ஷேத்திரத்தில் உத்தம பசுக்கள் முதலியவைகளை தானஞ் செய்துக்கொண்டிருந்தேன். ஒருநாள் தானஞ்செய்யும் பசுக்கூட்டத்தில் அதற்கு முந்தின நாள் தானஞ்செய்த பசுக்கூட்டத்தில் நின்றும் ஒரு பசு தப்பி கலந்தது. அவைகளை அந்தப் பிராம்மணன் ஓட்டிக்கொண்டு போகையில் பசுவைப் பறிகொடுத்த பிராம்மணன் அப்பசுவைத் தேடிக்கொண்டு வரும்போது இந்தக்

கும்பலில் தனது பசுவிருக்கக் கண்டு அந்த வேதியரை நோக்கி உமக்கு இந்த பசு ஏது? எனது மந்தையில் நின்றும் எப்போது திருடிக்கொண்டு போனீரென்று கேட்க, அவன் பசுக்கள் வந்த விதத்தைக் கூறி, இருவரும் என்னிடம் வந்து அநேக நாள்கள் காத்திருந்தும் நான் அவர்களைப் பார்க்க முடியாமல் போனதால் அவர்கள் கடுஞ்சினமடைந்து யாசர்களாயிருக்கிற எங்களுக்குத் தரிசனங்கொடாமல் அந்தப் புறத்திலேயே யிருந்ததால் இன்று முதல் அநேககோடி வருஷம் ஒருவர் கண்ணுக்கும் தென்படாத ஒரு பாழுங் கிணற்றில் ஓணானாயிருக்கும்படி சபித்தார்கள். ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரிக்கப்போகிறார். அவரது கரஸ்பரிசத்தினாலுனது சாபவிமோசன மாகுமென்றும் அவர்கள் அருளினார்கள். உடனே எனக்கு மரணகாலம் நேர்ந்து யமதூதர்களால் அழைக்கப்பட்டு யம சபைக்குச் சென்று நிற்கையில் யமதருமராஜன் என்னை நோக்கி நீ அநேக கோதான முதலியது செய்திருந்தாலும் பிராமண சாபம் நேர்ந்திருக்கின்றமையால் அந்தச் சாபத்தை முன்னே அனுபவிக்கின்றீரா? அல்லது தானஞ் செய்ததினாலுண்டான புண்ணியபயனை அனுபவிக்கின்றையா வென்று கேட்டார். நான் பாபபயனை முன்னம் அனுபவிக்க இஷ்டப்பட என்னைக் கீழேதள்ளி விட்டார்கள். அது முதல் இந்த இழிந்த உடலை வகித்து பரம காருண்ய மூர்த்தியாகிய தமது வருகையை எதிர்பார்த்திருந்தேன். தம் கர அரவிந்த ஸ்பரிஸத்தால் பரிசுத்தனாயினேன். அடியேனை ஆட்கொள்ள வேண்டும்" என இரைஞ்சி நிற்க, அங்குள்ளோர் வியப்புற ஓர் விமானம் ஆகாய வீதியில் வர அது கண்டு சுவாமியிடத்தில் விடைபெற்று அந்த விமானத்தின்மீது ஆரோகணஞ்செய்து சொர்க்கலோகஞ் சென்றனன்.

பிறகு பகவான் யாதவர்களைப் பார்த்து "உத்தமர்களும் உலகோபகாரிகளும் பிரம்மதிருஷ்டி உள்ளவர்களுமான பிராம்மணர்களின் சொத்தை மறந்தும் அபகரிப்பது மகா பாபமான தென்பதை அறிந்தீர்களே. நீங்கள் அவ்வித பாபத்திற்கு ஒருக்காலும் ஆளாகாதீர்கள்" என்றார்.



## அருபத்தைந்தாவது அத்தியாயம்

ஸ்ரீ பலராமர் கோகுலமடைந்து கோபிகைகளை சமாதானஞ் செய்ததும், யமுனாநதியை ஸ்தானார்த்தமாக தம்மிருப்பிடத்திற்கு வரவழைத்ததையும் சொல்லப்படுகிறது.

அபிமன்யு புத்ரனே கேளும்! ஒருநாள் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வேண்டுகோளுக் கிணங்கி ஸ்ரீ பலராமர் கோகுலமடைந்து நந்தகோபரையும் யசோதா பிராட்டியையும் வணங்க, அவர்கள் இவரை கட்டியணைத்து முத்தமிட்டு ஆசீர்வதித்தனர். பிறகு சகல யாதவர்களும் ஸ்ரீ பலராமரைக் கண்டு ஆனந்தமடைந்து க்ஷேமாதிசயங்களை விசாரித்துக்கொண்டனர். பின் கோபிகைகள் யாவரும் ஸ்ரீ பலராமரை வந்து கண்டு, ஆனந்த பரவசர்களாய் அவரைச் சூழ்ந்துகொண்டு "எமது ஐயனே! துவாரகையில் வசுதேவர் தேவகீ முதலியவர்கள் க்ஷேமமா யிருக்கின்றார்களா? ஸ்ரீ கிருஷ்ணபிரான் சகல ஸ்திரீகளோடே கூட இஷ்டமாய் விளையாடுகிற காலத்தில் எப்போதாவது எங்களையும் தாய் தந்தையர்களான யசோதை நந்தகோபரையும் நினைக்கின்றாரா? யாங்கள் தாய் தந்தை மாமன் மைத்துனன் முதலியவர்களைத் துறந்து நிலையில்லாத இவருடைய சினேசத்தை நம்பி மோசம் போயும் அவரிடத்திலிருக்கின்ற அன்பு மாத்திரம் எங்களைவிட்டு ஒழியவில்லை. அந்த ஸ்ரீ கிருஷ்ணபிரான் சநகாதி யோகிகளையும் மோசப்படுத்துந் தன்மையுடையவ ராதலால் ஞானமில்லாத பேதைகளான யாங்கள் மோசம்போகக் கேட்கவேண்டியதென்ன? அவர் மோசக்காரரா யிருந்தாலும் அவருக்கிணையாக ஒருவரையுஞ் சொல்லக்கூடாது. துவாரகாபுரத்திலிருக்கின்ற மாதர்கள் மெத்தவும் புத்திசாலிகளாதலால் எங்களைப்போல மோசம் போகமாட்டார்கள். சுகம் அனுபவிக்கிற அவர்கட்கும் துக்கம் அனுபவிக்கின்ற எங்களுக்கும் பொழுது மாத்திரம் சமமாய்ப் போகிறதென்று சொல்லித் தங்களுடன் ஏகாந்த வார்த்தை சொன்னது கிரீடித்தது முதலியவைகளை நினைத்துக்கொண்டு குரலை விட்டழுதார்கள்.

அதைப் பார்த்து பலராமர் ஸ்ரீ கிருஷ்ணசுவாமி சொன்ன வார்த்தைகளால் அவர்களைத் தேற்றினார். பின் ஸ்ரீ கிருஷ்ணபகவான் மதுராநகரத்திற் கெழுந்தருளின பிறகு ஜனித்த கோபிகைகளோடே யமுனா நதி தீரத்தில் பூரண கலைகளுடன் கூடிய சந்திரன் ஒளிவீச, மிகுந்த வாசனைபொருந்திய புஷ்ப வாசனையுடன் தென்றல் வீச,

மகா ரம்மியமான வெண்மணற் குன்றினில் ஸ்ரீ பலராமர் கிரீடிக்கின்றதை வருணன் தெரிந்துகொண்டு தனது புத்திரியாகியும் அந்த ஆதிசேடனுை ஸ்ரீ பலராமருக்கு மனைவியாகியு மிருக்கின்ற வாருணி யென்பவளை யமுனாநதி தீரத்திற்குப் போகச்சொல்லி அனுப்பினான். அப்போதந்த வாருணி யமுனையாற்றின் அருகிலிருக்கின்ற கடம்ப விருக்ஷத்தின் அருகிற் சென்று புதரிலிருக்கின்ற தேன்கூண்டானது பரிபக்குவ காலத்தில் வெளியினிற் பெருகுவதுபோல் தேனுருவமாகப் பெருகினள். அந்த வாசனையுடனும் தாமரை ஓடைகளுடைய புஷ்பங்களின் வாசனையுடனும் தென்றல் வீச அதை ஆக்கிராணித்துக்கொண்டே அவ்வாறு உற்பத்தியான கடம்ப மரத்தின் அருகிற்சென்று அந்த தேனைப் பலராமர் கோபிகைகளோடு பானஞ்செய்து பெண்ணானைக் கூட்டங்களின் நடுவில் விளங்குகிற ஐராவதம்போல் நின்று கானஞ் செய்கின்ற ஸ்ரீ பலராமரை ஆகாயத்திலிருக்கின்ற சகல தேவர்களும்பார்த்து வியப்புற்று புஷ்பமாரி சொரிந்து ஆதிசேடனுடைய பிரபாவங்களைச் சொல்லி தோத்திரஞ் செய்தார்கள்.

அப்போது கோபிகைகளுடன் மத்தியபானஞ் செய்து மதித்து கண்கள் சிவக்க அனேகவித புஷ்பங்களினால் அலங்கரிக்கப்பட்டு நீலவஸ்திரமும் கவசகுண்டலமும் வைஜயந்தி யென்கிற புஷ்பமாலையுந் தரித்து புன்னகையுடன் விளங்குகின்ற ஸ்ரீ பலராமர் அம்மடந்தையர்களுடன் ஜலக்கிரீடை செய்ய விரும்பி வெகு தூரத்திலிருக்கின்ற யமுனையை தமது அருகிலழைக்க, அதை அவள் லக்ஷியஞ் செய்யாததைக் கண்டு பலராமர் சினந்து தமது கலப்பையை பிரவகிக்கின்ற யமுனாநதியிற் போட்டிழுத்தார். அந்த வேகம் பொறுக்க மாட்டாமல் அதிவேகமாக ஓடிவந்து ஸ்ரீ பலராமரை வணங்கினள். பிறகு பலராமர் மகிழ்ந்து அம்மாதர்களோடு அம்மகா நதியில் ஜலக்கிரீடை செய்து, வெளியில் வருகிற சமயத்தில் அவருடைய மனைவியான காந்தி யென்பவள் நீலவஸ்திரங்களும் பூஷணங்களுங் கொண்டுவந்து சமர்ப்பித்து அலங்காரஞ் செய்தனள். சொர்னத்தினால் அலங்கரிக்கப்பட்ட. வெள்ளி மலைபோல் விளங்கிக் கொண்டிருக்கின்ற ஸ்ரீ பலராமர் அம்மடந்தையர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்தனர். அம்மாதர்களும் சொர்க்கலோகத்திலும் அடையப்படாத யின்பத்தை பலராமரா லடைந்து சுகித்திருந்தார்கள்.

## அறுபத்தாறுவது அத்தியாயம்

ஸ்ரீ கிருஷ்ணபகவான் பவுண்டரீகனைக் கொன்றதைச்
சொல்லப்படுகின்றது.

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே ! குருதேசத்திற் கதிபனை பவுண்டரீகனென்கிற அரசன் தான் வாசுதேவனென்றுந் தனக்கு நிகரானவர்கள் உலகத்தில் யாருமில்லையென்றும் சங்கு சக்கரம் கௌமோதகி யென்கிற கதை சாரங்கமென்கிற தனுசு நந்தகமென்கிற கத்தி ஆகிய பஞ்சாயுதங்கள், ஆகாயத்தில் பறக்கும்படியான ஒரு யந்திர கருடன், தங்கத்தினாற் செய்த கௌஸ்துபமணி ஆகிய பகவத்சின்னங்களைத் தரித்து அதனால் கர்வித்து ஒரு தூதனை அழைத்து "நீ துவாரகாபுரியில் கிருஷ்ணனைக்கண்டு அவனது குலத்திற்குரிய மாடுமேய்க்குந் தொழிலைவிட்டு தின்று கொழுத்து கண்டவர்களை எல்லாமடித்து, மாதர்களுடைய கர்ப்பையழித்து, பழிக்கும்படியான காரியங்களைச் செய்கிறதுமன்றி ஈஸ்வரனை எனது நாமதேயத்தையும் எனது சின்னங்களாகிற பஞ்சாயுத முதலியவைகளையும் தரித்து வீணில் ஏன் என்னை அவன் பகைத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டு, அந்த சின்னங்களை யெல்லாம் ஒழித்து என்னைச் சரணடைந்தாலொழிய அவன் பிழைக்க முடியாதென நான் சொன்னதாய்ச் சொல்" என சொல்லி யனுப்பினான்.

அவனு மவ்வண்ணம் ஸ்ரீ கிருஷ்ணபிரானண்டையிற் சென்று அம்மொழிகள் யாவையு முரைக்க அதுகேட்டு அச்சபையிலிருந்த யாவரும் நகைத்தார்கள். அப்போது புன்னகையுடன் தூதனைப் பார்த்து, ஸ்ரீ கிருஷ்ணன் தான் யுத்தத்திற்கு தயாராயிருப்பதாகவும் அவனை உடனே யமனுலகடைவதற்காக வரும்படி சொல்லியனுப்ப, அவன் பவுண்டரீக வாசுதேவனண்டையிற்சென்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் அருளிச்செய்த வார்த்தைகளை உரைத்தனன். அதுகேட்டு பவுண்டரீகன் நான்கு அக்குரோணி சேனைகளுடன் காசிதேசத்திற் கதிபனையும் அழைத்துக்கொண்டு யுத்தத்திற்கு வந்தான். அதற்குமுன்னமே ஸ்ரீ கிருஷ்ணனும் சகல சின்னங்களும் விளங்க யுத்தபூமியை வந்தடைந்தார். பவுண்டரீகனும் வேஷதாரியைப்போல தனது வாசுதேவ லக்ஷணத்திற்குரிய விருதுக்களுடன் ஸ்ரீ கிருஷ்ணசுவாமிக் கெதிரே வந்து நின்றான்.

அதுகண்டு பகவான் சிரிக்க, பவுண்டரீக வாசுதேவனுடைய சேனையானது ஸ்ரீ பகவானை பலவித ஆயுதங்களுடன் எதிர்த்தார்கள். அதற்கு ஸ்ரீ பகவான் கொஞ்சமேனும் சலியாமல் அந்த நான்கு அக்குரோணி சேனைகளையும் மாய்த்து அவனது தேர் குதிரை முதலியவைகளைத் துணித்து அவனைப் பாரரியாய்ப் பூமியில் நிறுத்தி அவனது கர்வத்திற்குக் காரணமான சகல சின்னங்களையும் அவனையும் காசிராஜனையும் அழித்து, சகலராலும் துதிக்கப்பட்டு துவாரகாபுரஞ் சென்றனர்.

அந்த பவுண்டரீகன் சதாகாலமும் சுவாமியைத் துதித்து கொண்டிருந்ததால் யோகிகளடையும் பதவி அடைந்தான். காசிராஜாவின் குமாரனே சிவபெருமானை கோறி தவம் செய்தனன். அவனுக்கு சிவன் பிரசன்னமாக, அவரைப் பயபக்தியுடன் பணிந்து "எனதன்புள்ள தெய்வமே! என் தந்தையைக் கொன்ற கிருஷ்ணனைக் கொல்லவேண்டும். அதற்குத்தக்க உபாயத்தை அனுக்கிரகிக்க வேண்டும்" என்று கூறினன். சுதக்ஷணனுடைய வசனத்தைக் கேள்வியுற்று சிவபெருமான் தக்ஷிணக்கினியில் அபிசார விதியினால் ஓமஞ் செய்தால் உனது கருத்தின்படி பயனடையலாமென்று கூறி அந்தர்தானமாயினர். பிறகு சுதக்ஷணனும் புரோகிதருடன் தக்ஷணக்கினியில் ஓமஞ் செய்தான். அதில் நின்றும் சிவப்புக் கம்பளிபோல தலைமயிரும் அக்கினிபோன்ற கண்களும் பயங்கரமான உருவமும் விகாரமாக தலையை விரித்துக்கொண்டு சூலத்தைக் கரத்திற்றாங்கி ஒரு பனைமரப் பிரமாணமான கால்களுடன் பூமி நடுங்கும்படி ஒருபூதம் வெளிப்பட அதை சுதக்ஷணன் பார்த்து துவாரகாபுரத்தைக் தகிக்கச்சொல்லி அனுப்பினன். அதுகேட்டு அநேகமாயிரம் பிசாசுகளுடன் துவாரகாபுரத்தை அது சுற்றிக்கொண்டு எரிக்க அதுகண்டு அவ்விடத்திலுள்ள ஜனங்கள் பயந்து சபைதனில் சதுரங்க மாடிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீ கண்ணபிரானண்டையிற் சென்று நடப்பதையுரைக்க அவர்கட்கு அபயப்பிரதானஞ் செய்து தமது வலதுபக்கத்தில் அஞ்சலி செய்துக்கொண்டிருக்கின்ற சக்கரத்தாழ்வானை அவ்விடத்திற்கு ஏவினர். அந்த சுதர்சனாழ்வான் வெகுவேகமாக ஓடிவந்து அந்தப் பூதத்தைச் சுற்றிக்கொண்டார். அப்போதந்தப் பூதமானது சக்கரத்தாழ்வானுடைய வெப்பம் பொறுக்கமாட்டாமல் ஓடத் தொடங்க அதை விடாமல் பின் தொடர்ந்துபோய் சுதக்ஷணனையும், அவரது புரோகிதனையும் அங்குள்ள ஜனங்கள் யாவரையும் இந்தப் பூதத்துடன் தகித்து சாம்பலாகச்செய்து

விட்டுச் சுதர்சனுழ்வான் ஸ்ரீ கண்ணபிரானுடைய சந்நிதானத்தில் வந்து சேர்ந்தனன்.



## அறுபத்தேழாவது அத்தியாயம்



ஸ்ரீ பலராமர் வானர துவிவிதனென்பவனை கொன்றது சொல்லப்படுகிறது.

அரசர்க்கரசே கேளும்! பிராக்சோதிடாதிபதியான நரகாசுரனுக் கிஷ்டனுயும், சுக்ரீவனுக்கு மந்திரியாயும், மயிந்தனென்கிற வானரனுக்கு தம்பியாயு மிருக்கின்ற துவிவிதனென்கிற வாநரன் தனக்கு அன்பனுன நரகாசுரனை ஸ்ரீ கிருஷ்ணர் கொன்ருரெனும் விரோதத்தினுல் பல தேசங்களை நெருப்பிட்டுக் கொளுத்துவதும் சில விடங்களில் பருவதங்களை எறித்து நாசஞ்செய்வதும் கோவர்த்தன பர்வதத்தில் ரிஷிகளுடைய ஆசிரமத்திலிருக்கின்ற மரங்களை முறித்து மானிடரைப் பிடித்துக் குகைதனிலடைத்து அக் குகையின் வழிகளைப் பாறைகளாலடைத்தும் உபத்ரவம் செய்தான். அப்பால் ரைவதகபர்வதத்திற்குச் சென்று கோபஸ்திரீகளுடன் விளையாடிக்கொண்டிருக்கிற ஸ்ரீ பலராமரைக் கண்டு ஒரு மரத்தின் மீதேறி புஷ்பங்களை உதிர்த்து அட்டகாசஞ் செய்தனன். அதுகேட்டு கோபஸ்திரீகள் வியப்புடன் நகைத்தார்கள். அவர்களை அவ்வானரன் பார்த்து புருவங்களை நெறித்துக்கொண்டு அவர்கள் யாவரையும் பரிகாசஞ் செய்து துடுக்கு செய்யலுற்ருன். அதைப் பார்த்து ஸ்ரீ பலராமர் அவன்மீது ஒரு கல்லை யெறித்தனர். அதை அவன் தப்பித்துக்கொண்டு ஸ்ரீ பலராமருடைய அருகிற் சென்று அவரிடத்திலிருந்த மத்தியத்தினுடைய குடத்தையுமுடைத்து அவருடைய வஸ்திரத்தையும் பறித்து கோபிகைகளுடைய ஆடையையும் பிடுங்கிச் சின்னுபின்னமாகக் கிழித்தனன். அதுகண்டு ஸ்ரீ பலராமர் அவனை எதிர்த்தனர். வானரன் மரங்களையும் பாரைகளையும் எறிந்து பலவிதமாக போர்புரிந்தான். பலராமர் அவன் எறிந்தவைகளை கண்டித்து கலப்பையையும் உலக்கையையுங் கீழேவைத்துப் போட்டு வச்சிராயுதத்திற்கொப்பான தமது முஷ்டியினுல் அந்த வானரனுடைய கழுத்தினிலோங்கிக் குத்தினுர். அந்தக் குத்தினுல் வானரனுக்கு தலைபிளந்து வாயினுலும் மூக்கினுலும் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு பிராணனிழந்து ஆதமானுன். அதைப் பார்த்து சகல ரிஷிகளும் ஸ்ரீ பலராம

ளைத் துதிசெய்யத் தேவர்கள் புஷ்பமாரி சொரிய சகல சம்பிரமத்துடன் கோபிகைகள் சமேதராய் கோகுலஞ் சென்று சகல கோபாலர்களையுங் கோபிகைகளையும் சந்தோஷப்படுத்தி அவர்களிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு இரதாரூடராய் துவாரகாபுரத்திற் கெழுந்தருளினர்.



## அறுபத்தெட்டாவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய குமாரனான சாம்பன் துரியோதன மகாராஜன் குமாரத்தியாகிய லட்சுமணையை மணந்தது சொல்லப்படுகின்றது.

புரு வம்சோற்பவனான பரிக்ஷித்தே! உமது வம்ஸஸ்தனான திருதராஷ்டிரனுடைய மைந்தனாகிய துரியோதனனுக்கு லட்சுமணை யென்கிற கன்னிகையிருந்தாள். அவளுக்கு துரியோதனன் சுயம்வரஞ் சாட்டினான். ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய பட்ட மகிஷிகளில் ஜாம்புவதியினுடைய மைந்தனான சாம்பனென்கிறவன் சகல வரசர்களும் பார்த்திருக்க பலவந்தமாய் லக்ஷ்மணையைத் தூக்கிக் கொண்டேகினான். அது கண்டு வீஷ்மன் துரோணன் துரியோதனன் முதலிய கௌரவர்கள் கடுஞ்சினமடைந்து அவன் பின்றொடர்ந்து சூழ்ந்துக்கொண்டு பாணங்களை வருஷித்தார்கள். அப்போது சாம்பன் அக்கௌரவர்கள்மீது சரங்களை வருஷித்து நானுவித சங்கடத்தை யுண்டுபண்ணி சிங்கமானது மான் கூட்டத்தைப் பார்ப்பதுபோலப் பார்த்துக்கொண்டிருக்கையில், அவனுடைய கரவேகத்தையும் தைரியத்தையும் பராக்கிரமத்தையும் பார்த்து வியப்புற்று அவனது சமீபத்திற் சென்று ஒருவன் வில்லையும், ஒருவன் குதிரைகளையும், ஒருவன் கொடியையும், ஒருவன் சாரதியையும் பிடித்துக் கொண்டு அவனை காவற்படுத்தினர்கள். அதை ஸ்ரீ நாரத மாமுனிவர் கண்டு துவாரகாபுரஞ்சென்று ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் உரைத்தனர்.

அதுகேட்ட ஸ்ரீ பலராமர் உத்தவருடன் இரதாரூடராகி அஸ்தினாபுரஞ்சென்று கௌரவர்களால் பூஜிக்கப்பட்டு திருதராட்டிரனைப் பார்த்து அருளிச்செய்கின்றார்: “நீர் மேன்மையான குலத்தினிற் பிறந்து மிகவுந் தர்ம சிந்தை யுடையவர்களென்று பெயர்பெற் றிருக்கின்றீர்கள். மிகவும் பாலனாகியும் ஒண்டிக்காரனாகியு மிருந்த சாம்பனுடன் யுத்தஞ்செய்து அவனைக் காவற்படுத்தலாமா? நீங்கள் எங்களுக்கு பந்துக்களாகியும் இஷ்டர்களாயு மிருப்பதால் உங்க

ளுக்கும் எமக்கும் கலகமாகாதென்று மன்னித்தோம். இனி ஒரு நிமிஷமும் தாமதிக்காது சாம்பனை யனுப்பிவிடும்படி உக்கிரசேன மகாராஜா ஆக்கியாபித்தார்.'' இவ்விதம் பலராமர் மொழிந்ததை கௌரவர்கள் கேட்டு கடுஞ்சினமாய் ஸ்ரீ பலராமரைப்பார்த்து “சகல வரசர்கட்கும் புறம்பான வர்களான யாதவர்கள் யாவரிடத்திலும் பணிவிடை செய்யக் காத்திருப்பவர்கள். அவர்களை மேன்மைப்படுத்தி பாண்டு மகாராஜனுக்கு குந்தியை விவாகஞ் செய்துகொடுத்து சம்பந்தி முறை கொண்டாடி சிங்காசனத்தி லிருந்து அரசாட்சிசெய்ய யோக்கியதை உண்டாக்கியதாலல்லவோ எமது பேரும் பெருமைக்குங்கூட மரியாதை செய்யாமல் இழிவாகப் பேசினீர்கள். நல்லது உங்களுக்குரிய சகல செல்வங்களையும் பறித்துக்கொள்வான் இன்றே புறப்படுவோம்'' என்றனர்.

அதுகேட்ட ஸ்ரீ பலராமர் கடுங் கோபங்கொண்டு ஸ்ரீ ருத்ரமூர்த்தியைப்போல் சீறி சகலரும் நடுங்கும்படி “கௌரவர்களே ! நன்று கூறினீர்கள். கொடிய துஷ்டர்களான உங்களை யாகத்திற்குரிய பாத்திரத்தை ஸ்பரிசித்த நாயை யடிப்பதுபோல அடிக்கடி சிட்சிக்க யத்தனஞ்செய்த சர்வ சக்திமானான ஸ்ரீ கிருஷ்ணபிரானை சமாதானப்படுத்தி யாவரும் ஒருமித்திருக்க வேண்டுமென்று யானே யிவ்விடத்திற்கு வந்திருக்க எனது கருத்தை யறியாமல் ஏதேதோ பிதற்றினீர்கள். சுதர்மமென்கிற இந்திரனுடைய சபையிலிருந்து செங்கோல் செலுத்துகின்ற உக்கிரசேன மகாராஜாவினுடைய ஆக்கினையை இந்திரன் முதலிய திக்கு பாலர்களும் சிரசாக வகித்திருக்க இழிவான நீங்கள் அவரை இழிவாகப் பேசினதுமல்லாமல் ஜகதீஸ்வரனான ஸ்ரீ கிருஷ்ண பகவானையும் தூஷித்தீர்கள். யானும் பிரமன் உருத்திரன் ஸ்ரீ மகாலக்ஷ்மி முதலியவர்களும் அவருடைய திருவடித் தூளைச் சிரசில்தரித்து அவரது திருவடியிலுண்டான கங்காதீரத்தில் ஸ்நானம்செய்த பிரபாவத்தால் மேன்மை யடைந்திருக்கின்றோம். மிகவும் அற்பர்களான உம்மிடத்தில் போர் என்னத்திற்கு? க்ஷண நேரத்திற்குள் நீங்களும் உமது ஊரும் படும்பாட்டைப் பாருங்கள் என்று கூறி அஸ்தினபுரத்தையே பேர்த்து கங்கையில் கவிழ்த்துப் போட நினைந்து தமது ஆயுதமாகிய கலப்பையை அந்த அஸ்தினபுரத்துக்குத் தென்பாகத்தில் நாட்டிக் கிளப்பினர். அப்போது அந்த அஸ்தினபுரம் ஜலத்தின் மீதிருக்கின்ற தெப்பத்தைப்போல் அலைசவதைப் பார்த்துத் துரியோத

ஞதிகள் மிகவுந் திகிலடைந்து ஓடிவந்து ஸ்ரீ பலராம ருடைய திருவடிகளைப் பற்றிக்கொண்டார்கள்.

"ஓகோ! கெட்டோம். உங்களது மகிமையை அறியாது நாசமடையப் பார்த்தோம். எங்களை மன்னித்து ரட்சிக்க வேண்டும்" என்று துதிக்க பலராமர் கோபந் தணிந்து கலப் பையை எடுத்துக்கொண்டனர். பிறகு கௌரவர்கள் சாம் பனை விடுவித்து லக்ஷ்மணையை சகல வரிசைகளுடனும் அழைத்து வந்து ஸ்ரீ பலராமரிடம் விடுத்தார்கள். ஸ்ரீபல ராமர் அவ்விருவர்களையும் இரதத்தின்மீதேற்றிக்கொண்டு சகல கௌரவர்களாலும் துதிசெய்தனுப்பப்பட்டு துவாரகா புறத்திற் கெழுந்தருளி நடந்த விருத்தாந்தங்கள் யாவையும் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக் குரைத்து சாம்பனுக்கும் லக்ஷ்ம ணைக்கும் சாஸ்திர விதியின்படி விவாகஞ்செய்து சுகித் திருந்தனர்.



## அறுபத்தோன்பதாவது அத்தியாயம்

*ஸ்ரீ கிருஷ்ணபகவான் பதினாயிரம் மனைவியர்களோடு பதினாயிரம் திருவுருக்கொண்டு திருவிளையாடல் புரிந்ததை நாரதர் கண்டு வியந்து துதிசெய்ததை சொல்லப்படுகிறது.*

பற்குண பௌத்ரனே! ஸ்ரீ கிருஷ்ண பகவான் நரகா சுரனை அதஞ்செய்து பதினாயிரம் கன்னிகைகளை ஒரு முகூர்த் தத்தில் விவாகஞ் செய்ததை நாரதர் கேள்வியுற்று அம்மடந் தையர்கள் யாவருடனும் ஏககாலத்தில் வியாபித்திருக்கின்ற ஸ்ரீகண்ணபிரானது ஆச்சரியகரமான செய்கையைக் கண்டு சேவிக்கவேண்டுமென்று கருதி சுவர்க்கத்திற் கொப்பான ஸ்ரீ துவாரகா நகரத்தை யடைந்து அஷ்ட லட்சுமிகளும் ஆனந்தமாயமைந்து மகிழும் ஸ்ரீருக்மணி பிராட்டியினது கிரகத்தில் ஸ்ரீதேவ தேவனை கோபாலமூர்த்தியை யடைந்து வணங்கினார். ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவரை பணிந்து பலவிதமாக உபசரித்து "பூஜிதரான தாம் இந்த எளியேனைக் கோரி எழுந்தருளிய காரணம் யாது" என வினவினார்.

நாரதர் அதுகேட்டு "ஸ்ரீ ஜகந்நாதா! தாம் இவ்விதம் என்னைப் பூஜிப்பது தருமமா? இப்படி தாம் செய்வதால் யான் அகங்காரமடைந்து கெட்டுவிடுவேனே. தம்மை தரி சிக்க வேண்டுவதைத் தவிர வேறு என்ன காரியம் எனக்கிருக்

கின்றது" என்றுரைத்து விடைபெற்று மற்றொரு கிருகத்திற் பிரவேசித்தார். அவ்விடத்தில் ஸ்ரீ கிருஷ்ணபிரான் ருக்குமிணி தேவியினுடைய கிருகத்தினில் வந்ததை அறியாதவரைப் போல க்ஷேமங்களை விசாரிக்க அது கேட்டு நாரதர் வியப்புற்று பதில் சொல்லி, பின்னையொரு கிருகத்திற்கேக அங்கு கிருஷ்ணன் தமது மனைவியுடன் புத்திரனைத் தாலாட்டுவதைப் பார்த்து, மற்றொரு கிருகத்திற்கேக அங்கு மனைவியோடு மங்கள ஸ்நானஞ் செய்து அக்கினி ஹோத்திரஞ் செய்துகொண்டிருக்க மற்றொரு கிருகத்தில் அதிதி பூஜைசெய்துகொண்டிருக்க மற்றொரு கிருகத்தில் புண்ணிய கதைகளை ரிஷிகளிடத்தில் நின்றும் கேட்டுக்கொண்டிருக்க மற்றொரு கிருகத்தினில் அநேக மாதர்களுடன் ஜலக்கிரீடை செய்ய மற்றொரு கிருகத்தினில் மிகவும் வேட்டையாடி இளைப்புற்றிருக்க இப்படி பலவாருகக் கிருகங்கடோறும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் சேவை சாதிப்பதைக் கண்டு ஸ்ரீ பகவானுடைய யோகமாயையினது பிரபாவ மிப்படிப்பட்டதென்று உணர்ந்து வியப்புற்று ஸ்ரீ நாரதர் ஸ்ரீ பகவானை நோக்கி தேவரீருடைய அனுக்கிரக பலத்தினுல் பிரமன் முதலிய சகல தேவர்களாலும் அறியவொண்ணுத தேவரீருடைய பிரபாவத்தை யான் உணர்ந்தேன். தேவரீரது திவ்விய நாமத்தைக் கானஞ்செய்ததும் தேவரீருடைய பரிசுத்தமாகிய ஸ்தலங்களை தரிசித்தும் புனிதமடையும்படி அடியேனுக்கு அருள்புரிய வேண்டுமென்று சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து விடை பெற்று சொர்க்கத்திற் கேகினர்.



## எழுபதாவது அத்தியாயம்

*ஸ்ரீ கிருஷ்ணபகவான் நித்திய கர்மங்களும் ஜராசந்தனுற் சிறையில்வைக்கப்பட்ட அரசர்கள் துன்பப்படுவதை தூதன் மூலமாய் பகவானுணர்ந்ததும் சொல்லப்படுகின்றது.*

நல்லவனை நாராயணனை அல்லும் பகலும் ஆராதிக்கும் ஆரியனே! துவாரகாபுரத்தில் அதிகாலையில் கோழிகள் கூவ ஸ்ரீ பகவான் சயனத்தை விட்டெழுந்திருந்து தடாகத்திற்கேகி பல் துலக்கி ஸ்நானஞ் செய்து தேவரிஷி பிதுர் தர்ப்பணம்பண்ணி திவ்ய பீதாம்பரமணிந்து ஊர்த்துவபுண்டரத்துடன் சந்தியாவந்தனமும் ஜபதப ஸ்நானமுஞ் செய்து அக்கினி ஹோத்திரமும் ஔபாசனமும் நிறைவேற்றி பிரம்ம யக்கிய முதலியவைகளைச் செய்து அந்தணரைப் பணிந்து அவர்கட்கு தகுந்தபடி தானம் வழங்கி மற்றையோர்க்கும் உரிய உதவியாற்றி பின் ஓர் ரதத்தில் அமர்ந்து சென்று பசி - தாகம் - சோகம் மோகம் - கிழத்தனம் - கோபம் - முதலியவைகளை நிவர்த்திக்குந் தன்மையையுடையதாயும் உக்கிரசேனனுக்கு அரசாட்சி செய்வதற் குரியதாயு மிருக்கின்ற சுதர்மமென்கிற சபையி லெழுந்தருளி சகல சிறப்புகளுடனும் **வீற்றிருந்தார்.**

அது சமயத்தில் நக்ஷத்திரமத்தியில் விளங்குகின்ற பூரணச் சந்திரன்போல் சகல யாதவர்களின் மத்தியிலுள்ள ஸ்ரீ பகவானை ஒருநாளுங் காணுத வேடமுடைய ஒரு புருஷன் வந்து கண்டு சாஷ்டாங்கமாக பணிந்து கைகூப்பிக்கொண்டு "தேவ தேவா! தீன ரட்சகா! ஆபத்பாந்தவா! ஸ்ரீ கிருஷ்ணு எமது முறையைக் கேளும்! துஷ்டனை ஜராசந்தனல் பல அரசர்கள் ஜயிக்கப்பட்டு சிறையிலிறுத்தப் பட்டார்கள். அவர்கள் சிறையில் படும் கஷ்டங்களுக்கு அளவில்லை. அவர்கட்கு வேறு கதி யில்லாமல் என்னை உம்மிடம் அனுப்பினுர்கள். ஆத்தும பந்துவாயும் மோக்ஷத்தை அருள்பவராயு மிருக்கிற தேவரீர் எங்களிடத்தி லன்புகூர்ந்து ரக்ஷிக்கும்பொருட்டு சரண மடைகின்ருேம்." என்று இவ்வண்ணம் முறையிட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் ஸ்ரீ நாரதமாமுனி அங்கு எழுந்தருளினுர். அவரைக் கண்டு ஸ்ரீ கிருஷ்ணபகவான் சகல யாதவர்களுட னெழுந்திருந்து சாஷ்டாங்கமாகப் பணிந்து அர்க்கிய பாத்தியம் முதலியவற்றுற் பூசித்து ஆசனம் சமர்ப்பிக்க அதின்மீதெழுந்தருளின பிறகு அவரை நோக்கி ஸ்ரீ கண்ண

பிரான் "தேவரீர் சகல உலகத்திலுள்ள விருத்தாந்தங்களை நன்றாயுணர்ந்தவராதலால் இப்போது பாண்டவர்களெங்கேயிருக்கின்றார்கள். அவர்களுடைய க்ஷேமத்தைச் சொல்ல வேண்டும்" என்று ஒன்று மரியாதவரைப்போலக் கேட்க, ஸ்ரீ நாரதர் விக்ஞாபனஞ் செய்கின்றார்.

ஸ்ரீ பகவான்! "தேவரீருணராத விருத்தாந்தமொன்றுமில்லாதிருந்தும் அடியேனைக் கேட்டபடியால் தெரிந்த மட்டுங் கியாபகப்படுத்துகிறேன். இந்திரப் பிரஸ்தத்தில் பாண்டவர்கள் சுகமாயிருக்கின்றார்கள். அவர்கள் இராஜசூய மென்கிற யாகத்தில் தேவரீரைப் பூசிக்கவேண்டுமென்று கருதி யிருக்கின்றார்கள். சகல ஜகத் பரிசுத்தராகிய தேவரீருடைய திருவடியின் கட்டை விரலில் நின்று முண்டான தீர்த்தம் சொர்க்க லோகத்தில் மந்தாகினியென்றும், பூமியில் கங்கையென்றும், பாதாளலோகத்தில் போகவதியென்றும், பெயருடன் மூன்று லோகத்தையும் பரிசுத்தஞ்செய்கின்றன. அத்தகைய பிரபாவத்தையுடைய தேவரீர் இராஜசூயயாகத்தில் சேவை சாதிக்கிறபோது பிரமன் முதலிய தேவர்கள் ரிஷிகள் அந்தணர் பரம பாகவதோத்தமர்களான அநேக அரசர்கள் முதலியவர்களும் அடியேனும் தேவரீரைச் சேவித்துப் பரிசுத்தர்களாகக் காத்திருக்கிறோம்." என்ன, நாரதரது வார்த்தைகளைக் கேள்வியுற்று, ஜராசந்தனைச் சீக்கிரத்தில் ஒழிக்க நிச்சயித்து தனக்கு பந்துவாயும் மந்திரியாயுமிருக்கிற உத்தவரைப்பார்த்து, இப்போதிந்த இராஜதூதன் சொன்னதும் நாரதர் உரைத்ததுங் கேட்டிருந்தீரே! இனி நடக்கவேண்டியதை ஆலோசித்துச்சொல்ல வேண்டுமென்று ஸ்ரீ பகவான் திருவாய் மலர்ந்தருளினர்.



## எழுபத்தொன்றுவது அத்தியாயம்

உத்தவருடைய ஆலோசனையின்மீது ஸ்ரீ பகவான் இந்த்ர பிரஸ்தத்திற் கெழுந்தருளினது சொல்லப்படுகிறது.

வாராய் அரச சிரேஷ்டனே! புத்திமான்களிற் சிறந்த உத்தவர் ஸ்ரீ கிருஷ்ண பகவானது திருவுள்ளக் கருத்தையும் யாதவர்களுடைய அபிப்பிராயத்தையுந் தெரிந்து ஸ்ரீ பகவானைப் பார்த்து விக்ஞாபனஞ் செய்கின்றார்: பூமண்டலத்திலுள்ள சகல அரசர்களையும் ஜயித்தாலன்றி இராஜசூயஞ் செய்யக்கூடாதென்று கருதி தேவரீருடைய சகாயத்தை பாண்டவர்கள் விரும்புகின்றனர். 'யாதவர்களால் ஜராசந்தனை ஜயிக்கக்கூடாதென்று பூர்வம் ஆகாச வாணி உரைத்திருப்பதால் அவனை பீமசேனனைக்கொண்டே தந்திரமாக வெல்லவேண்டும். எளியேனுக்கு இது யுக்தமாக தோன்றுகிறது. என்ன, உத்தவருடைய வார்த்தைகளைக்கேள்வியுற்று அவரது ஆலோசனைக் கிசைந்தவராய் ஸ்ரீ கண்ணபிரான் வசுதேவ தேவகிதேவி பலராமர் முதலியவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ஸ்ரீ ருக்குமிணி தேவி முதலிய மனைவியர்களோடு தாருகனுற் கொண்டுவரப்பட்ட இரதத்தின்மீது எழுந்தருளினர். ஜராசந்தன் ஒழிவதற்கு வழி ஏற்பட்டதென மகிழ்ந்து ஸ்ரீ நாரதர் பகவானுக்கு பிரதக்ஷண நமஸ்காரம்செய்து சொர்க்கத்திற் கெழுந்தருளினார். சிறையிருக்கும் அரசர்களனுப்பிய தூதனைப் பார்த்து பகவான் "அந்தத் துஷ்டனை ஜராசந்தன் சீக்கிரத்தில் மாய்ந்துவிடுவான். நீங்கள் அச்சமில்லாமல் இருங்கள்" என்று அருளிச்செய்தனர். பிறகு தூதன் பகவானுக்கு பிரதக்ஷண நமஸ்காரம் செய்து விடைபெற்று மீண்டனன்.

அப்பால் ஸ்ரீ கிருஷ்ண பகவான் துவாரகாபுரத்திலிருந்து பிரயாணப்பட்டு ஆநர்த்ததேசத்திலொரு இராத்திரி தங்கி மறுநாள் சவ்வீர தேசத்திலிருந்து மூன்றும்நாள் குரு க்ஷேத்திரத்திற் சென்று திருஷ்டதுவிதியென்கிற நதியைக்கடந்து பாஞ்சால தேசஞ்சென்று அவ்விடத்தில் நின்றும் இந்திரப்பிரஸ்தத்திற் கெழுந்தருளினார்.

அந்தச் சங்கதியைக்கேட்ட தர்மபுத்திரர் முதலியவர்கள் பிரமன் முதலிய தேவர்களும் சநகர் முதலிய யோகிகளும் காணக்கூடாத அருந்தெய்வமான ஸ்ரீ கிருஷ்ண பகவான் நமக்கு எளிதில் சேவை சாதிக்கக் கிடைத்ததென்று ஆனந்த

பரவசர்களாய் தமது இஷ்டர்களுடன் புரோகிதரான தவும் மியாசாரியரை முன்னிட்டுக்கொண்டு அர்க்கியபாத்திய முதலிய பூஜைக்குரிய வஸ்துக்களையும் பூரண கும்பங்களையும் எடுப்பித்துக்கொண்டு வேதியர்கள் வேதபாராயணம் செய்யப் பதினெண் வாத்தியங்களுடன் எதிர்கொண்டுபோய். தர்ம புத்திரர் ஸ்ரீ பகவானைக்கண்டு தமது இரண்டு கரங்களாலும் ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு இருப்பிடமாயிருக்கின்ற திருமார்பு தமது மார்பினில் படும்படியாக ஆலிங்கனஞ்செய்து அதனால் சகல பாபங்களுந் துலைந்து சரீரமெல்லாம் மயிர்கூச்சிட்டு ஆனந்த பரவசராய் மெய்மறந்து பிரமித்திருந்தனர். பீமசேனனும் அவ்வண்ணஞ் செய்து பிரமித்திருந்தனன். பிறகு அர்ச்சுனனும் நகுல சகாதேவர்களும் கிரமமாக ஸ்ரீ கிருஷ்ண பகவானைக்கண்டு கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக ஆலிங்கனம் செய்து கொண்டார்கள். ஸ்ரீ கிருஷ்ண பகவான் தர்மநந்தனரையும் வீமசேனனையும் சாஷ்டாங்கமாகப் பணிந்து அர்ச்சுனனை ஆலிங்கனஞ் செய்து நகுல சகாதேவர்களால் சேவிக்கப்பட்டுக்கொண்டு பெரியோர்களான பிராம்மணர்களை அவரவர்கட்குத் தக்கபடி பூஜித்தார்.

அப்போது சூதமாகதர்கள் சுவாமியைத் துதிசெய்ய, ஆகாயத்தில் யக்ஷ கின்னர கந்தருவர் முதலிய தேவர்கள் புஷ்பமாரி சொரிந்து துந்துபி வாத்தியங்கள் முழக்க, அப்சரஸ்திரீகள் நடிக்க, மகாரிஷிகள் துதிக்க, வேதியர்கள் பின்புறத்தில் வேதபாராயணங் கூற வீதிகளில் ஜலந்தெளித்து துவஜங்கள் சொர்ணமயமான தோரணங்கள்கட்டிப் பட்டணத்திலுள்ள ஜனங்கள் யாவரும் பரிசுத்தமாய் ஸ்நானஞ் செய்து சர்வாலங்காரத்துடன் பூரண கும்பங்களும் கொழுக்கட்டைகளும் பழங்களு மெடுத்துக்கொண்டுவந்து புண்ணிய சுலோக சிகாமணியான ஸ்ரீ கிருஷ்ண பகவானை எதிர்காண இப்படிப்பட்ட சகல சம்பரமத்துடன் பாண்டவர்களோடு இரத கஜ துரக பதாதி சேனைகளால் நிறைந்திருக்கின்ற இந்திரப்பிரஸ்தத்தின் ராஜமார்கத்தில் இரதத்தின்மீதெழுந்தருளுகின்ற சுவாமியைக்கண்டு அங்குள்ள மாதர்களும் யாவரும் சாஷ்டாங்கமாகப் பணிந்து புஷ்பமாரி சொரிந்தனர். பிறகு தர்ம புத்திருடைய அரண்மனையையடைந்து அங்குள்ளவர்களால் பூஜிக்கப்பட்டு, அந்தப்புரத்தினிற் பிரவேசித்து அங்குள்ள மாதர்களால் பூஜிக்கப்பட்டு குந்திதேவியைக்கண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்தனர். குந்திதேவி ஸ்ரீ கிருஷ்ணபிரானை இரண்டு கரத்தினாலும் மடியினிலெடுத்து வைத்துக்கொண்டு உச்சிமுகந்து ஆனந்த

பாஷ்பம் உதிர்த்தனள். அச்சமயத்தில் துரோபதை முதலியவர்களால் நமஸ்கரிக்கப்பட்டு அவர்களை மெத்த ஆதரவுடன் உபசரித்து குந்திதேவியினது சமீபத்திலிருக்கின்ற நவரத்தின மயமான சிங்காதனத்தி லெழுந்தருளி யிருந்தனர். துரோபதை சுபத்திரை இவர்களிருவரும் ஸ்ரீ கிருஷ்ண சுவாமியினது மனைவியர்கள் யாவரையும் நானாவித பூஷணங்களாலும் வஸ்திரங்களாலும் சந்தனம் புஷ்ப தாம்பூல முதலியவைகளாலும் உபசரித்தனர். இப்படி மனைவியர்களுடன் ஸ்ரீ கிருஷ்ண பகவான் இந்திரப்பிரஸ்தத்திலேயே சுகமாயிருந்தார்.



## எழுபத்திரண்டாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ண பகவானும் பீமார்ச்சுனர்களும் பிராம்மண வேடங் கொண்டு, தனியாய் யுத்தத்திற்கு வா யாசித்தது சொல்லப்படுகின்றது.*

ஒற்றைக் குடைக்கீழ் உலகம் புரக்கும் உத்தம கேள்! ஒருநாள் உமது பிதாமகனான தர்மபுத்திரர் சகல பரிவாரங்களுடன் கொலுவமர்ந்து ஸ்ரீ பகவானைப் பார்த்து "சகல ஜீவ தயாபர மூர்த்தியான சுவாமி! யாகத்தினிற் சிறந்த இராஜ சூயமென்கிற மகா யாகத்தினால் சகல தேவர்களுக்குந் தேவனாகியும் மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்கவராயு மிருக்கின்ற தேவரீரை பூசிக்கவேண்டுமென்று கருதி யிருக்கிறேன். மித்துருவென்றும் சத்துருவென்றும் பேதம் வையாமல் யாவரிடத்திலும் ஒரேவிதமாக வாசஞ்செய்துக்கொண்டு எவர்களெவ்விதம் விரும்புகின்றார்களோ அவ்விதமாகவே கற்பகத் தருபோல் கிருபைசெய்தருளுகிற தேவரீருடைய அருளுக்குப் பாத்திரனா யிருக்கின்ற அடியேனுக்கு துஷ்டர்களான சிசுபாலன் ஜராசந்தன் முதலியவர்களை நிக்கிரகித்து அம் மகா யாகத்தை நிறைவேற்றும் விதத்தை கிருபை கூர்ந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

பகவான் அவரை அன்புடன் நோக்கி "மகா ராஜாவான தர்மபுத்திரரே! உமக்கெப்போது இராஜசூய யாகஞ் செய்ய இஷ்டமுண்டாயிற்றோ அப்போதே இந்திரன் முதலிய தேவர்களுக்கும் சகல ரிஷிகளுக்கும் யான் முதலிய அன்பர்கட்கும் சந்தோஷமாயிற்று. இந்த யாகஞ் செய்வதினால் உமக்கு மகத்தான கீர்த்தி யுண்டாகப் போகிறது.

நெடிய கடல்சூழ்ந்த பூமண்டலத்தில் அரசு செலுத்துகிற சகல அரசர்களையும் ஜயித்து வருஷந்தோறுங் கப்பம் கட்டும்படி சுவாதீனஞ் செய்துகொண்டால் அந்த மகா யாகம் நிறைவேறும். இந்திரன் முதலிய லோகபாலர்களுடைய அம்சங்களாகியும், மகா பலபராக்கிரமசாலிகளாகியும் நினைத்த மாத்திரத்தில் மூவுலகத்தையும் ஜயிக்கத்தக்கவர்களாகியு மிருக்கின்ற தம்பிமார்களும் அடியேனும் தமக்கு சுவாதீனமாக விருந்து எந்தவேளையி லெந்தக்காரியத்தை ஆக்கியாபிக்கிறீரோ அதை தவருது செய்ய காத்திருக்க உமக்கெந்தக் காரியத்தில் குறைவு வரும்? அந்த மகா யாகத்திற்குரிய அலுவல்களை எங்களைக்கொண்டே நிறைவேற்றிக்கொள்ளும்" என்று அருளிச்செய்ய, மிகவுங் களிகூர்ந்து தர்மபுத்திரர் சகாதேவனை அழைத்து அவனுடன் சில சேனைகளையுங் கூட்டி திக்கு விஜயஞ்செய்ய தென்றிசைக்கும், நகுலனையும் சில சேனைகளையுங்கூட்டி மேற்றிசைக்கும், அர்ச்சுனனையும் சில சேனைகளையுங்கூட்டி வடதிசைக்கும், பீமசேனனையும் சில சேனைகளையும்கூட்டி கீழ்த்திசைக்கும் அனுப்பினுர். அவர்கள் அந்தந்தத் திசைகளிலிருக்கின்ற சகல அரசர்களையும் ஜயித்து வெகுவாகத் தனங்களை தர்மபுத்திருக்குக் கொண்டுவந்து கொடுத்து வருடந்தோறுங் கப்பங் கொடுக்கும்படி திட்டஞ்செய்து வந்ததையும் உரைக்க, அதுகேட்டு மிகவுங் களிகூர்ந்து "மகாப் பிரபாவ சாலியான ஜராசந்தனெருவன் நமக்கு அடங்காமலிருக்கின்றுனே, அவனை எவ்விதமாகச் சுவாதீனப்படுத்திக் கொள்கிறது" என்று வியாகூலப்படும் தருமபுத்திரனைப் பார்த்துக் கண்ணபிரான் "பீமசேனனையும் அர்ச்சுனனையும் என்னுடன் கூட்டி யனுப்பினுல் நான்போய் அந்த ஜராசந்தனை வென்று உமதிஷ்டத்தை நிறைவேற்றுகிறேன்" என்றுரைத்தனர். தருமரும் அதற்கிசைந்து பீமனையும் அர்ச்சுனனையும் ஸ்ரீ பகவானுடன் கூட்டி அனுப்பினுர்.

பிறகு மூவரும் பிராம்மண வேடந் தரித்துக்கொண்டு கிரிவிருஜமென்கிற ஜராசந்தனுடைய பட்டணத்திற்குச் சென்று வெகு தூரத்திலிருந்துவந்த அதிதிகளைப்போல அந்த ஜராசந்தன் பூஜைசெய்யும் சமயத்தில் அவனிடஞ் சென்று "கேளீர் மகா தயாளுவாயிருக்கிற ஜராசந்த மகாராஜனே! நீர் அதிதிகளுடைய கருத்தின்படி நிறைவேற்றி யனுப்புகிற கீர்த்தி உலகெல்லாம் வியாபித்திருக்கின்றது, அதுகேட்டு யாங்கள் வெகு தூரத்திலிருந்து வந்தோம். உம்மைப்போல் அதிதிகளுடைய இஷ்டத்தைப் பூர்த்தி

செய்வார் யாருமில்லை. உலகத்தில் புத்தினையும் அரசர்களுக்குரிய கிரீடத்தையும் புதைத்து வைத்திருக்கிற தனத்தையுங் கேட்கக்கூடாது. கேட்டாலுங் கொடுக்கக்கூடாது. பொறுமையுள்ள மனிதனுக்குப் பொறுக்கக்கூடாத காரியமென்பதும், துஷ்டனுக்குச் செய்யக்கூடாத அலுவலென்பதும், ஈகையுள்ளவனுக்குக் கொடுக்கக்கூடாத வஸ்துவென்பதும், கியானிக்குச் சத்துரு மித்துரு வென்பதுங் கிடையாதாகையால் மகா தாதாவான உமக்கு யாவுங்கொடுப்பதற் கிசைவதா யிருக்கின்றமையால் இன்ன வஸ்துவைக் கேட்கிறோமென்று முன்னதாய்த் தெரிவிக்கவில்லை. நிலையில்லாத சரீரத்தைக் கொடுத்தாகிலும் சாசுவதமான கீர்த்தியை சம்பாதிக்கிறவன் புருஷனிற் சிறந்தவன். அரிச்சந்திரனது சரிதத்தை நீர் அறிவீர். தன் சொல்லைக் காப்பாற்றும் பொருட்டு தன் அரசு மனைவி புத்ரன் முதலியவர்களை அடிமைப்படுத்தி தானும் ஒரு சண்டாளனுக்கு அடிமையாகி, முடிவில் சகலருடன் இந்திரலோகத்தை யடைந்தான். சிபிச் சக்ரவர்த்தியோ ஒரு புறாவைக் காப்பதற்காக தன் சரீரத்திலுள்ள மாம்ஸத்தைக் கொடுத்துவிட்டு அதன் பலனாக பிரம்மலோகத்தை யடைந்தான். பலிச் சக்ரவர்த்தியினது கதையையும் தாம் அறிவீர். ஸ்ரீ வாமனருக்கு மூவடி மண் தானம் கொடுத்துவிட்டு அது காரணமாக தனக்குரிய எல்லா சம்பத்துகளையும் இழந்து முடிவில் மகா கீர்த்தி வானாகி இந்திர பதத்தை யடைந்தான்.

இப்படி வெகுபேர் பெரியோர்களைச் சந்தோஷப்படுத்தி மேலான லோகத்தை அடைந்தது போல நீரும் எங்களிஷ்டத்தை நிறைவேற்றி யேன்மை பெறுமென்று கூறின ஸ்ரீ கண்ணபிரானுடைய வார்த்தைகளைக் கேள்வியுற்று இவர்களை எங்கேயோ கண்டாற்போ லிருக்கின்றது. இவர்கள் மூவரும் வில்பிடித்து காய்ப்புள்ள கரங்களை வாய்ந்தவர்களாயிருக்கின்றார்கள். இவர்கள் க்ஷத்திரியர்களே யன்றி அந்தணரல்லரென்று கருதி யிவர்கள் யாவராயிருந்துமென்ன நமது பிராணனைக் கேட்டாலும் கொடுக்கவேண்டுமென்று நிச்சயித்து அவர்களை நோக்கி கம்பீரமாக "அந்தணர்களே! உங்களுக்கு என்ன வேண்டுமோ அதை யான் கொடுக்க சித்தமா யிருக்கிறேன் கேளுங்கள்" என்று ஜராசந்தன் கூற, கண்ணபிரான் அருளிச் செய்கின்றார் :

"ஜராசந்தரே கேளும்! இவர்களிருவரும் பீமார்ச்சுனர்கள், யான் வசுதேவ குமாரனான கிருஷ்ணன். யாங்கள் மூவரும் உன்னை யாசிப்பது யாதெனில், நீ சேனையில்லாமல்

தனிமையா யுத்தஞ் செய்யவேண்டு மென்பது" என்றது கேட்டு ஜராசந்தன் கோடையிடி யிடித்தாற்போல சிரித்து ஸ்ரீ கிருஷ்ணபிரானைப் பார்த்து "கிருஷ்ணா நீ என்னிடம் பலதடவை தோல்வியுற்றாய். பின் மதுரையை விட்டோடிப்போய் சமுத்திரத்தில் துவாரகையென்கிற பட்டணமுண்டுபண்ணி அதனில் வாசஞ்செய்கின்றா யாதலால் பயந்தவனான உன்னுடன் யான் யுத்தஞ்செய்யமாட்டேன். இந்த அர்ச்சுனன் மிகவும் பாலனாயும் பலத்திலெனக் கிணையாகாதவனாயு மிருப்பதால் அவனோடும் யுத்தஞ் செய்யமாட்டேனென்று அலட்சியஞ்செய்து, இந்த பீமன் எனக் கிணையாகத் தோற்றுகின்றமையால் இவனோடு யுத்தஞ்செய்கிறேன்" என்று தனது மைந்தனை சகதேவனுக்குப் பட்டங் கட்டி, பிறகு ஜராசந்தன் பீமசேனனுக் கொரு கதை கொடுத்து தானுமொரு கதை எடுத்துக்கொண்டு யுத்தத்திற்கு ஆரம்பஞ்செய்து வலம்புரி இடம்புரியாயும் மண்டலாகாரமாயும் நாட்டியஞ் செய்பவர்கள் நடிப்பதுபோலும் இடி இடித்தாற்போல சப்தித்துக்கொண்டும் மலையின்மேல் பட்டால் சூரணமாய்ப் போகும்படியான அடிகளை ஒருவரையொருவர் வேகமாகத் தோள்களிலுங் கைகளிலும் மார்பிலும் துடைகளிலும் பாதங்களிலும் அடித்துக்கொண்டும் சரீரங் கொஞ்சமேனு மிளையாமல் கதைகளைச் சூரணஞ்செய்து கொண்டார்கள்.

இவ்வாறிருவரும் யுத்தசன்னத்தராகி வெளிப்புறப்பட்டு யுத்தபூமிக்கு வந்தார்கள். அப்போது பீமசேனனை நோக்கி ஜராசந்தன் "அடா பீமசேனா! நான் தருமத்தை முன்னிட்டு உன்னோடு யுத்தத்திற்கு வந்தேன் ஜாக்கிரதையா யுத்தஞ் செய்" யென்று சொல்ல, பீமசேனன் "நானுமப்படியே தருமத்தை முன்னிட்டு வந்தேனாகையால் நீதான் சாக்கிரதையாயிருக்க வேண்டும்" என்று சொன்னான். இவ்வாறு இருவரும் ஒருவரை யொருவர் திக்கரித்துக்கொண்டு ஒருவர் மேலொருவர் பாய்ந்து மதயானைகள் போலும் மலைகள் போலும் இடமாகவும் வலமாகவுஞ் சுற்றி ஒருவனை யொருவன் பிடித்துத் தள்ளுகிறதும், எழும்பி யடிக்கிறதும், கீழே தள்ளுகிறதும், உயர வெறிகிறதும், கைகளால் குத்துகிறதும், கால்களால் தள்ளுகிறதுமாக நெடுநேரம் யுத்தஞ்செய்யவே இவர்களுடைய கைகளால் புடையுண்ட பூமியில் நின்றும் எழும்பிய தூளியானது அந்தகாரம்போலச் சூழ்த்துகொள்ள இவர்களுடைய அட்டகாசத் தொனிகளினால் எதிரிரைச்சல் போடாநின்ற மலைகளிலிருக்கும் சிங்கமுதலிய மிருகங்கள்

பயந்து வீறிட ஆகாயங்களதிர்ந்து பிரளயகால ஸ்திதி போலிருந்தது. முன் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் நடந்த யுத்தத்தைக் காட்டிலு மிது விசேஷமாகிய தென்று ஆகாயத்தில் தேவர்கள் வியந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். இவ்விதமாக யாவரும் ஆச்சரியப்படும்படியாய் பீமசேனனும் ஜராசந்தனும் கார்த்திகை மாசத்துக் கிருஷ்ணபக்ஷத்துப் பிரதமையினன்று யுத்தத்திற்கு ஆரம்பித்து பதினைந்துநாள்வரையில் யுத்தஞ்செய்துகொண்டு வருகையில்; ஒருநாள் யுத்தத்திலே ஜராசந்தன் பீமசேனனைச் சமயம் பார்த்துச் சுற்றித் தள்ளுகையில் இடிக்குச் சமானமாக அவன் மார்பிலொரு குத்து குத்தவே அந்த பீமன் பதைபதைத்து க்ஷணகாலஞ் சோர்ந்து மனதில் தைரியத்தை முன்னிட்டுக்கொண்டு மிகுந்த ஆக்குரோஷத்துடனெழும்பி ஜராசந்தன் மேல்விழுந்து லாகவத்தினால் அவனைக் கீழே தள்ளி மார்பிலொரு குத்துகுத்த அக்குத்தினால் வச்சிராயுதத்தினால் அடிக்கப்பட்ட பருவதம்போல் சிதைப்புண்டு க்ஷணகாலம் மூர்ச்சையடைந்து பெருமூச்சுவிட்டெழுந்து கர்ச்சித்து ஆகட்டுமடா பீமசேனா! இந்தநிமிஷத்திலுன்னை நாசஞ் செய்கிறேன் சற்றே நில்லென்று சொல்லிச் சந்துபார்த்து பீமசேனனைக் காலைப்பற்றித் தூக்கி சுற்றி யெறிய அந்தப் பீமனும் ஆகாசமார்க்கத்திற் சுழன்று லாகவமாய் அவன் தலைக்குச் சரியாய் வந்து மயிரைப்பிடித்து இழுத்து கீழே தள்ளிக்கொண்டே தானும் பூமியிற் குதித்துச் சத்துருவை அப்படியே பரபரவென்றிழுத்துக் கரகரவென்று சுழற்றியெரிய அவன் சமீபத்திலிருந்த மலைகளின் தடங்களில் மொத்துண்டு காயமடைந்து தேகமெல்லாம் உதிரம் பெருக ஓடோடியும் வந்து புலிபோற் பாய்ந்து பீமனுடைய மிடற்றைப் பற்றி நெட்டித்தள்ள அவன் நாலைந்து குண்டாங்கரணம் போட்டுக்கொண்டு விழுந்து கை கால்களிலறையப்பட்டும் லட்சியஞ்செய்யாமல் எழுந்து, நல்லது நல்லது ஜராசந்தா! நீ வெகு சாமர்த்தியவான்போல் சண்டை செய்கிறாய். உன்னைப் பிதுர்லோகத்திற்கு அனுப்புகிறேன் பயப்படாதே யென்று விவாதஞ் செய்தான். இவ்வாறே தினந்தோறுந் தங்கள் சாமர்த்தியங்களையும் பலபராக்கிரமங்களையும் காட்டி ஒருவனை யொருவன் கொல்வதற்குத் தருணம் தேடிக் கொண்டு இராப்பகல்களில் ஒரு கணப்பொழுதும் ஓய்வில்லாமல் யுத்தஞ் செய்தார்கள்.

அப்போது ஸ்ரீ கிருஷ்ண பகவான் தமது ஒளியினால் பீமசேனன் இளையாமலிருக்கும்படி இரட்சித்து ஜராசந்

தனைக் கொல்வதற்கு ஆலோசிக்கும்போது அவனது பூர்வ விருத்தாந்தம் அவரது நினைவுக்கு வந்தது. அதாவது, பூர்வத்தில் ஜராசந்தனுடைய தகப்பனுன பிருகதிருதனென் பவன் தனக்குப் புத்திரனில்லாமல் ஒரு பிரம்மரிஷியை அடுத்துப் புத்திரனை விரும்பி வெகுநாள் பூசித்துப் பிரார்த் தித்தனன். அவர் அதற்கு மெச்சி தமது ஆசிரமத்திலிருக் கின்ற மாங்கனி ஒன்றைக்கொய்து கொடுத்து இதை உனது மனைவிக்குக் கொடுத்தால் புத்திரனுண்டாகுமென்று வாழ்த்தி யனுப்பினுர். அவனு மவ்வண்ணமே தனது இரண்டு மனைவியர்கட்கும் அக்கனியைப் பகுந்து கொடுக்க அவர்க ளதைப் புசித்து ஒரு சிசுவை ஆளுக்குப்பாதியாக ஒரு கண் ஒருகாது ஒருகை ஒரு கால் இப்படி இருபிளவாகப் பெற்றுர்கள். அதுகண்டு மருத்துவிச்சிகள் நாற் சந்தியிற் போட்டுவிட்டு அவ் வரசனுக்கு கர்ப்பங்கலங்கி விட்டதென்று கூறி சும்மா விருந்தார்கள். அந்த நகரவாசியான ஜரையென்கிற காளி யானவள் மிகவும் சௌந்தர்யமுள்ள அத்துண்டங்களைப் பார்த்து இரண்டையும் ஒன்றுய்ச்சேர்த்து ஒட்டிப் பிராண னுண்டாகச்செய்து இக்குழந்தை பதினுயிரம் யானை பல முடையதாகவும் இப்போது ஒட்டினபிரகாரம் பிளந்தாலன்றி மரணமில்லா திருக்கும்படியாயும் வாழ்த்தி விட்டேகினுள். அவ்வரசன் நகர் சோதனைக்குப் போய்வரும்போது அக் குழந்தை அழுவதைக்கண்டு இன்றையதினம் எமக்கு சுவாமி கிருபை செய்தாரென்று வெகு சந்தோஷத்துடன் வாரி எடுத்துப் பட்டத்தானையின் மீதேற்றிக்கொண்டு அரண் மனைக்கேகி செல்வமாக வளர்த்தனன். இம் மர்மங்களை ஸ்ரீ கண்ணபிரான் நன்றுயுணர்ந்தவ ராதலால் பீமசேன னுக்கு தெரியும்படியாக ஒரு கிளையை யொடித்து இரண் டாகக் கிழித்து பீமசேனனுக் கெதிரில் போட்டார். அக் கருத்தை வீமசேனன் தெரிந்துக்கொண்டு ஜராசந்தனை யிழுத்துக் கீழேதள்ளி இருபிளவாக உற்பத்தியான வண்ணம் பிளந்து போட்டான். அப்போது ஜனங்கள் ஸ்ரீ பகவானை யும் பீமசேனனையும் மிகவுங்கொண்டாடி ஆனந்தித்தார்கள். ஸ்ரீ பகவான் ஜராசந்தனுடைய குமாரனுன சகதேவனுக்குப் பட்டங்கட்டி சிறையிலிருந்த அரசர்களை விடுவித்தார்.



## எழுபத்திமூன்ருவது அத்தியாயம்

*ஜராசந்தனற் சிறையினில் இருந்த அரசர்கள் விடுதலை யடைந்ததும், அவர்களுக்கு பகவான் ஞானேபதேசம் செய்ததும் சொல்லப்படுகின்றது.*

வாராய் பரிக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீ பகவானது இன்னருளால் சிறையினின்றும் விடுதலைப்பெற்ற இருபதினை யிரத்தெண்ணூறு அரசர்களும் ஸ்ரீ கிருஷ்ண பகவானை மிகுந்த அன்புமேலிட சேவித்து துதி செய்யலானூர்கள்: தேவதோத்தமரான சுவாமி! மகா பலசாலியான அந்த ஜராசந்தனெங்களுக்கு நல்ல வுபகாரஞ் செய்தானேயன்றி அபகாரஞ் செய்யவில்லை. அவனெங்களை சிறையில் வைத்த படியால்தானே வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத அருந் தெய்வமான தேவரீருடைய சேவை கிடைத்தது. கானல் போன்ற இந்த ஐஸ்வரியத்தினிடத்திலும் துக்கத்திற்கும் ரோகத்திற்கும் இருப்பிடமான இந்தத் தேகத்தினிடத்திலும் ஆசையற்றிருக்கும்படியாய் கிருபைசெய்யவேண்டும். எத்தனை கோடி வருடம் அநுபவித்தாலும் மறுபடியும் க்ஷயிக்கத் தக்கதா யிருக்கின்ற சொர்க்க சுகமும் எமக்கு வேண்டாம். ஒருநாளும் அழிவில்லாத மோக்ஷத்தைத் தரும் தேவரீ ருடைய திருவடியி லிடைவிடாமல் பக்தியிருக்கும்படி அருள் செய்ய வேண்டுமென்று சுவாமியினுடைய இரண்டு திருவடி களையும் பற்றிக்கொண்டு பிரார்த்தித்த அரசர்களைப் பார்த்து, ஸ்ரீ பகவான் அருளிச்செய்கிருர்: முன்பு அநேக அரசர்கள் ராஜ்யாதிகாரங்களை வகித்து, அகங்காரம் மேலிட்டவர்களாய் அதர்மங்களைப் புரிந்து மனிதர்களை இம்சித்து தேவர்களை அசட்டைசெய்து இம்சை செய்தபடியால் அவர்கள் யாவரும் கொல்லப்பட்டு நாசமடைந்தார்கள். நீங்களிவைகள் யாவற் றையும் நன்ருயுணர்ந்து சம்சாரத்தினிடத்தி லாசையை ஒழித்து நெறியாக அரசுசெலுத்தி லாப நஷ்டங்களைச் சம மாக வெண்ணி என்னிடத்தில் வைத்த மனதை வேறொரு விடத்திலே செலுத்தாம லிருப்பீர்களாகில் முடிவிலென் னுடைய பதவியை அடைவீர்களென்று வாழ்த்தி, ஜராசந்த னுடைய புத்திரனை சகதேவன் மூலமாய் அவ்வரசர்கட்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்து தலைமயிர்களைச் சீர்திருத்தி ஆடையாபரணங்களால் அலங்கரித்து அறுசுவை ரசவர்க் கத்துடன் போஜனஞ் செய்வித்து திவ்விய சந்தன புஷ்பங் களினுல் அலங்காரஞ்செய்து தாம்பூலங் கொடுப்பித்து

அவர்களை இரதத்தின் மீதேற்றி அவர்களுடைய தேசத்திற் கனுப்பினார்.

அவர்களும் சுவாமியினுடைய திவ்விய கல்யாண குணங்களைத் துதிசெய்துகொண்டே தங்களுடைய தேசத்திற்குச் சென்று பகவானுடைய ஆக்கினையின் வண்ணம் அரசு செலுத்தி வந்தார்கள். பிறகு சகதேவன் அனேகம் யானைகள் குதிரைகள் தேர்கள் இரத்தினங்கள் ஆபரணங்கள் இவைகளை எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி முதலானோரிருக்குமிடத்திற்கு வந்து அவர்களைப் பார்த்து ஓ மகா புருஷர்களே! எனக்கிசைந்தமாத்திர மிந்தத் திரவியங்களைக் கொண்டுவந்தேன். இவைகளை அங்கீகரித்து யுதிஷ்டிர மகா ராஜாவினுடைய யாகத்திற்குபயோகப் படுத்த வேண்டுமென்று பிரார்த்திக்கக் கேட்டு மகிழ்ச்சியுடன் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி முதலிய மூவரும் அவைகளை கைக்கொண்டு அவனிடத்தில் செலவுபெற்று இந்திரப்பிரஸ்தத்திற்குச் சென்று சங்கத்தைப் பூரிக்க, அது கேட்ட தர்மபுத்திரர் சத்துரு சங்காரஞ்செய்து வருகிறார்களென்று களிப்படைந்து எதிர்க்கொள, ஸ்ரீ கிருஷ்ணன் பீமார்ச்சுனர்களுடன்வந்து தண்டன் சமர்ப்பிக்க, யுதிஷ்டிரர் பல ஆசிகள் கூறி தழுவி அணைத்து சந்தோஷப்பட்டார்.



## எழுபத்திநான்காவது அத்தியாயம்



தருமபுத்திரர் இராஜசூய யாகஞ் செய்ததும், அக்கிரக பூஜா நிமித்தமாய் ஸ்ரீ கிருஷ்ண பகவானை பலவாராக தூஷித்ததும், சிசுபாலனை சம்மரித்ததும் சொல்லப்படுகின்றது.

மன்னர் மன்னனே! பின்பு ஸ்ரீ கிருஷ்ண பகவான் யுதிஷ்டிரரைப் பார்த்து "ஓ மகாராஜனே! உமதனுக்கிரக பலத்தினால் பீமசேனன் ஜராசந்தனைச் சங்காரஞ் செய்தான். உமதாக்கினையின்படி யானும் அர்ச்சுனனுங் கூடவிருந்து ஒரு தீங்கும் வரவொட்டாமற் காத்தோம். இனி ஒருகுறையும் நேரிடாது" என்றதைக் கேட்டு யுதிஷ்டிரர், "தேவ தேவ! சிறியனான பீமனாலென்னாகும். மற்ற எங்களால்தான் யாது நிறைவேறும். கருணையங்கடலான தமது கிருபாகடாக்ஷமே ஜராசந்தனை வெல்வதற்கு காரணமாயிற்று. நீர் எங்களிடத்தில் பரிபூரண கிருபை வைத்ததினாலே சகல ராஜாக்களுங்

கீழ்ப்படுத்தப் பட்டார்கள். பூமியெல்லாம் சுவாதீனத்திலிருக்கிறது. தனங்கள் அளவற்றவைகளாயிருக்கின்றன. மேன்மையும் புகழுமுண்டாயிருக்கின்றன. ஒரு குறைவுமில்லை. ஆனபடியினாலே இனி இராஜசூயயாகம் சீர்பெற நடக்கும்படி என் தம்பிமார்களைக்கூட வைத்துக்கொண்டு வேண்டிய காரியங்களைச் செய்து ரக்ஷிக்கவேண்டும்'' என்று விநயத்தோடு சொல்ல, ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறார்: ஓ மகாராஜனே! உமது நன்னெறியினால் சகலமுங் கூடிவரும். அந்தச் சாம்பிராச்சியத்திற்கு நீரே தகுந்தவரன்றி மற்றையார் தான் தகுவர். ஆதலால் அவசியம் நீர் இப்போது யாகத்திற் பிரவேசிக்க வேண்டும். ஒரு குறைவும் நேரிடாது. நீர் எந்த கட்டளையிட்டாலும் சிரத்தால் வகித்து நடக்கக் காத்திருக்கின்றேன். உமக்கு வரும் மேன்மைதான் எங்களுடைய மேன்மை. உமக்கு இந்தக்காரியம் நிறைவேறின பின்புதான் நாங்களெல்லோரும் கிருதார்த்தர்களாவோம். ஆனபடியினாலே விசாரப்படாமல் யாகத்தை யாரம்பித்து நடப்பிக்கவேண்டும். ஸ்ரீ கிருஷ்ணபிரான் சொல்லியதைக் கேட்டு யுதிஷ்டிரர் வெகு சந்தோஷப்பட்டு, "ஓ கிருஷ்ணா! எங்களிடத்தில் மிகுந்த கிருபையினாலே நீர் சொல்லிய வார்த்தைகளைக் கேட்க மிகவும் ஆனந்தமாயிற்று. அந்தப் பிரகாரமே சகல பாரங்களையும் வகித்து யாகத்தை நிறைவேற்றும்'' என்று சொல்லித் தம்பிமாரை யழைத்து யாகத்திற்கு வேண்டியவைகளைச் சித்தப்படுத்தும்படி கட்டளையிட்டார்.

அப்போது தமயனிட்ட கட்டளையின்படி சகாதேவனானவன் யாகத்துக்கு வரும் பிராம்மணர் முதலிய நான்கு ஜாதியாருக்கும் வேண்டிய சகல பதார்த்தங்களைச் சித்தப்படுத்தும்படியாயும் யாகஞ்செய்கிறபேர்களை விசாரிக்கும்படியாயும் தங்கள் சாரதிகளுக்கு திட்டஞ்செய்து, தான் தவுமிய மகாமுனியின் சொற்படி நல்ல பூமியில் வெகு விசாலமாகவும் அழகாகவும் பலமாகவும் சாஸ்திர விதிக்கு ஒத்ததாகவும் யாகசாலையை நிருமித்தான். அன்றியும், வரும் ஜனங்களுக்கு வாசத்திற்காக வெகு வீடுகளை நிருமித்தான். பின்னுமந்த யாகசாலைகள் சொர்ணத்தினாலும், வெள்ளியினாலும், பவழங்களாலும், ஸ்தம்பங்கள் நாட்டிப் பந்தலுக்கு முகமலினால் வஸ்திரங் கட்டி முத்துச்சரங்களினால் ஜாலர் தொங்கவிட்டு அநேக தோரணங்கள் வாழை கமுகு முதலியவற்றால் அலங்காரஞ் செய்து, யாகத்திற்குரிய சிருக்கு சிருவ முதலிய பாத்திரங்கள் யாவும் சொர்ணமயமாகச்செய்து சொர்க்கலோகம் போல விளங்குகிற பாகவதரிற் சிறந்த தருமபுத்திர மகாராஜாவி

னது யாகசாலையில் தேவேந்திரன் முதலிய சகல திக்குப் பாலரும் பிரமன் உருத்திரன் முதலானோரை முன்னிட்டுக் கொண்டுவந்து சேர்ந்தார்கள். இப்படி யாகத்துக்கு வேண்டிய காரியங்கள் நடந்துகொண்டிருக்கையிலே, ஸ்ரீ வேத வியாச மகாமுனி அவ்விடம் எழுந்தருளினார். அவரை யுதிஷ்டிரர் நமஸ்காரஞ்செய்து சுவாமி எங்கள் குலகுருவே! தேவரீர் முன்னம் ஆக்யாபித்திருந்தபடிக்கு ஸ்ரீ கிருஷ்ணனுடைய சகாயத்தினாலே சகல ராஜாக்களையுஞ் ஜெயித்து வெகு திரவியங்கள் கொணர்ந்து இராஜசூய யாகத்திற்கு ஆரம்பஞ் செய்திருக்கிறேன். தேவரீரதை எப்படி நடத்த வேண்டுமோ அப்படி நடத்தும்படி தயைசெய்யக் கோருகிறேனென்று சொல்லக்கேட்டு அப்படியே யாகட்டுமென்று அங்கீகரித்து யாகத்துக்குவேண்டிய ரித்துவிக்குகளை யேற்படுத்தினார். சுசர்மா வென்கிற மகாமுனிவரை உத்காதாவாகவும், பைல ரென்கிறவரையும் தவுமிய ரென்கிறவரையும் ஹோதாக்களாகவும், யாக்கியவல்கியரை அத்துவரியுவாகவும், சப்பிய ரென்கிறவரைப் பிரமாவாகவும் நியமித்துத் தாமும் பிரமாவாக இருக்க ஒப்புக்கொண்டார். இந்த ரிஷிகளுடைய புத்திரர் பௌத்திரர் இவர்களெல்லாம் அந்த நான்கு ரித்துவிக்குகளுக்குக் கணமாக நியமிக்கப்பட்டார்கள். இவ்விதமாக வேதவியாசர் சிஷிய பரம்பரையோடு கூட வைதீகங்களை நடத்த சித்தமாயிருந்தார்.

பின்பு மஹா ராஜாவினுடைய ஆக்கினையினாலே சகல தேசத்து ராஜாக்களும் தங்கள் தேசத்திலும் மற்றும் ஆசிரமங்களிலும் இருக்கிற பிராமணர் க்ஷத்திரியர் முதலிய யாவரும் வந்து யாகசாலையில் அமர்ந்தனர். எல்லாம் சித்தமாயினபின், முனிவர்கள் புண்ணியாகவாசனஞ் செய்து யாகசாலையைச் சுத்திசெய்து வேதிகள்போட்டு கேட்டை நக்ஷத்திரத்தின் நாலாம் பாதத்தோடுகூடிய நன் முகூர்த்தத்திலே யுதிஷ்டிர மகாராஜனுக்குப் பூரணமாகிய கிருஷ்ணாசனம் போர்த்து மான்கொம்பைக் கையிற்கட்டி விதிப்படி தீக்ஷை செய்வித்தார்கள். வெகு பிராம்மணர் சொஸ்தி வசனம் சொல்லிச் சூழ்ந்துவர தருமர் யாகசாலையிற் பிரவேசித்தார். அப்போது பீமசேனார்ச்சுனர்கள் மந்திரிகளோடுகூடி யாகசாலைக்குவந்து வெகு தக்ஷிணைகள் கொடுத்தார்கள். இப்படியிருக்கநானாதேசங்களிலிருந்துபிராம்மணர்முதலாகியபேர்கள் வரத்தொடங்கினார்கள். அஸ்தினாபுரத்திலிருந்து துரியோதனன் துச்சாதனன்முதலிய தம்பிமார்களுடனே வெகுகாணிக்கைகள் கொண்டுவந்தான். திருதராஷ்டிரன்-விதுரர்-துரோ

ணர் - கிருபர் - அசுவத்தாமர் - பாலிகன் - சோமதத்தன்-பூரி-பூரிசிரவன் முதலியவர்களும் வந்தார்கள். இவர்களுமன்றி, கர்னன்-சல்லியன்-சகுனி-பலராமன் துருபதன் முதலிய சகல ராஜாக்களும் புத்திர மித்திர களத்திராதிகளுடனே வந்தார்கள். •பாண்டிய மகாராஜன் தன் மக்களையும் பேரனையுமழைத்துக்கொண்டு வந்தான். வந்த ராஜாக்களெல்லாம் அனேக ரத்தினமுதலாகிய காணிக்கைகளைக் கொண்டுவந்து கொடுத்து மகா ராஜாவைப் பார்த்து சந்தோஷமடைந்தார்கள். அந்த யுதிஷ்டிரர் யாவராலுஞ் சூழப்பட்டு ஆகாசத்தில் சகல கிரகங்கள்சூழச் சூரியன் எப்படி விளங்குவாரோ அப்படி விளங்கினர். அந்த யாகசபையில் ஒருபக்கத்தில் வேதகோஷ்டமும், ஒருபக்கத்தில் வித்வான்களுடைய பிரசங்க கோஷ்டமும், ஒரு பக்கத்தில் வந்திகள் விருதோதுங் கோஷ்டமும், ஒரு பக்கத்தில் வாத்திய கோஷ்டமுமாக மங்கள நாதமே முற்றும் வியாபித்திருந்தது. இப்படிப்பட்ட யாகசாலையிலே யாகம் நடக்க ஆரம்பமாயிற்று. அப்போது தருமபுத்திரர் விதுரரைச் சகல வஸ்துக்களும் ரசவர்க்கங்களும் வைத்துக்கொண்டு கொடுக்கச்சொல்லியும், அசுவத்தாமரையும் சஞ்சயனையும் வந்த பிராமணரை விசாரிக்கச் சொல்லியும், யுயுச்சு என்கிறவனையும் - பீமசேனனையும்-சாத்தகியையும் - மடப்பள்ளியை விசாரிக்கச் சொல்லியும், பீஷ்மத் துரோணுதிகளை எல்லாவற்றையும் மேல் விசாரணை செய்யும்படிக்கும், துற்சாதனனைப் பந்தி விசாரிக்கவும், துரியோதனனை அவரவர்களுக்குச் செய்யவேண்டிய தான வெகுமான வஸ்துக்களைச் சித்தப்படுத்தும்படிக்கும், கிருபாசாரியரை வருகிற திரவியங்களை வாங்கி வைக்கும்படிக்கும் இப்படியே அந்தந்தக் காரியங்களிலே யவரவர்களை நியமித்தார். குந்தி சுபத்திரை முதலான ஸ்திரீகள் யாகத்திற்குவந்த பிராமண க்ஷத்திரிய ஸ்திரீகளுக்குச் சகல வுபசாரஞ்செய்து பூசித்தார்கள். இப்படி யாவருக்கும் தகுந்தபடி உபசாரங்கள் நடந்து எல்லோரும் திருப்தியடைந்து மகிழ்ந்தார்கள்.

இப்படிக்கு ஒரு குறைவுமின்றி அந்த ராஜசூயம் நடந்து வருகையில், ரித்துவிக்குகள் விதிப்படியே காற்கபத்தியம் - ஆகவநீயம் - தட்சிணுக்கினி - ஸப்பியாக்கினி - ஆவசதாக்கினி - தாரியாக்கினி யென்கிற ஆறு கன்னிகளையும் வளர்த்திப் பூசைகள்செய்து அநேக சமித்துக்களாலும் நெய் முதலியவைகளாலும் ஆகுதி செய்தார்கள். நான்கு வேதங்களையும் பாராயணஞ் செய்து வந்தார்கள். இந்த யாகத்தில் வானத்திலிருக்குந் தேவர்களும் பூமியிலிருக்குந் தேவர்

களும் பூரண திருப்தி யடைந்து மகிழ்ந்து வாழ்த்தி ஞர்கள். இப்படியிருக்க, சுத்தியை என்கிற ஒருவித யாகச் சடங்கு செய்ய வேண்டிய நாள் வந்தது. அன்றைக்கு மகா சபைக்குப் பூசை செய்யவேண்டிய தானபடியினுலே நாரதர் முதலாகிய தேவரிஷிகள், வியாசர் முதலாகிய பிரமரிஷிகள் ராஜரிஷிகள் இன்னும் மிகவும் யோக் கியராகிய எல்லா வருணத்துப் பெரியோர்களும் சபை யில் நிறைந்திருந்தார்கள். அந்தச் சபைக்கொரு நாயகமணி போல் விளங்கி நடுவிலே ஒரு பொற்பீடத்தில் நீலமணி போன்ற திருமேனியும் கிருபாரசம் பொழியா நின்ற தாமரை மலரோடொத்த கண்களும் - கவுத்துபம் - வநமாலை - சங்கு - சக்கரம் முதலியவைகளுமாய் கோடிசூரியப் பிரகாசம் பொருந்தி உட்கார்ந்திருக்கின்ற ஸ்ரீ பகவானைப் பார்த்துச் சிலர் இவருடைய வடிவழகுக்கும் சிலர் இவருடைய மகிமைக் கும் சிலர் சாமர்த்தியத்திற்கும் சிலர் அடுத்தவரைக் காப்பாற்றுந் தன்மைக்கும் சிலர் இவருடைய திவ்விய குணங்களுக்கும் சிலர் இவருடைய கடவுள் தன்மைக்கும் வசப்பட்டுப் பலவாருகத் துதித்து மனமகிழ்ந்து கொண் டிருந்தார்கள். தருமபுத்திரரும் இந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சபையிலிருக்கும் உல்லாசத்தைக்கண்டு நம்முடைய சகலப் பிரயோசனங்களும் நிறைவேறினவென்று நினைத்து ஆனந் தப் பெருங்கடலிலாழ்ந்தார். ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியும் அவ ரவர் நினைப்புக்குத் தக்கபடி அவரவர்களைக் கடைக்கண்ணுல் பார்த்துக்கொண் டிருந்தார்.

இப்படிக்குத் தேஜோமயமாய் விளங்கிக்கொண்டிருக்கும் சபையிலே அந்தச் சுத்தியாஹமென்னு நாளிலே பிராதாச்ச வனம் மாத்தியந்தினவசனம் என்கிற இரண்டுகாலச் சடங் களு மானபின் சாயம்சவன மென்கிற சடங்குக்கு ஆரம்ப மாகும்போது தீக்ஷதராயிரா நின்ற தருமபுத்திரரைப் பார்த்து பீஷ்மர் அப்பா தருமபுத்திரா இப்போது சபைக்கு முன்னே பூசை செய்யவேண்டிய தானபடியினுலே அந்தந்த வருணத்தாரையுந் தனித்தனியே பூசை செய்யவேண்டும். அதற்காக அர்க்கிய பாத்தியாதிகள் கொண்டுவந்து நடத் தென்று சொல்லக் கேட்டு அவர் அப்படியே சகலமாகிய பூஜா வஸ்துக்களை யழைப்பித்துக் கோஷ்டியில் நின்று கொண்டு யாருக்கு முதலில் பூசை செய்யவேண்டியது. அதைக் கட்டளையிட வேண்டுமென்று கேட்க, சபையிலுள் ளோர்க்கு முதலில் இன்னுரைப் பூஜிக்கலாமென்று சொல்லத் தோன்ரும லிருக்கக்கண்டு கியானவான்களிற் சிறந்த நகுல

னுடைய சகோதரனுன சகாதேவன் சொல்லுகின்றுன்: இந்தச் சபையிலிருக்கும் யாவருக்கும் நடுவில் அனேக கோடி நக்ஷத்திரங்களுக்கு நடுவிலே சந்திரன் போலவும் நவக்கிரகங்களின் நடுவில் சூரியன்போலவும் யார் சிரேஷ்டராய் விளங்குகிருரோ! பலம் - சௌரியம் - சாமர்த்தியப்-புத்தி - தைரியம் - தேஜசு - கம்பீரத்தன்மை - தயை-பொறுமை - அறிவு - விநயம் இப்படிப்பட்ட சகல நற்குணங்களும் யாரிடத்திற் குடியிருக்கின்றனவோ! எவருடைய மகிமை சொல்லத் தாமில்லாததோ! எவருடைய தேஜோபலத்தைப் பற்றி இந்த யாகம் நிறைவேறி வருகிறதோ! அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானையன்றி அக்கிர பூசைக்கு யார் தகுவார்? ஆதலால் அவரையே பூசிக்க வேண்டியதென்று சொல்லக்கேட்டுச் சகாதேவனை அர்க்கிய முதலியவைகளை யெடுத்துக்கொண்டு வரச்சொல்லி, ஸ்ரீ கிருஷ்ணன் சமீபத்திற் சென்று நமஸ்காரஞ் செய்து அவருடைய திருவடித் தாமரைகளை ரத்னமயமாகிய பீடத்தில் வைத்து திவ்ய பரிமளங்கள் சேர்ந்த தண்ணீரில் சுத்தி செய்து கந்த புட்ப தூப தீபாதி சோடசோபசாரங்களாலும் பூசித்து அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தைச் சிரத்தின்மேற் புரோட்சித்துக்கொண்டு புனிதனுனே னென்று கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக யுதிஷ்டிரர் தேகம் புளகமுற்றுக் களித்து நின்ருர்.

இவ்விதமாக ஸ்ரீ கிருஷ்ணனுக்கு முதலிற் பூஜை நடந்ததைக்கண்டு தேவரிஷிகள் பிரமரிஷிகள் ராஜரிஷிகள் யாவரும் தகும் தகுமென்று சொல்லி சகாதேவனையுந் தருமபுத்திரரையும் கொண்டாடினுர்கள். க்ஷத்திரியரில் சிலர் பொருமை கொண்டு உள்ளம் வெந்து சகிக்கமாட்டாமல் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஒன்றுஞ் சொல்லத் தைரியமில்லாமல் நாலு பக்கங்களையும் சும்மாய்ப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். இந்தக் குறிப்பையறிந்து சகாதேவன் ஸ்ரீ கிருஷ்ணனுக்குப் பூசை நடந்ததற்காக யார் சம்மதிக்காமற் பொருமைப் படுகிருர்களோ அவர்களின் சிரத்தின்மேல் என் இடது காலை வைத்தேனென்ருன். இதைக்கேட்டுச் சேதி தேசத் தாசனுகிய சிசுபாலன் பிறப்பு முதல் கிருஷ்ணனிடத்தில் கொடிய பகை கொண்டவனுனபடியாலே மனங்குன்றி முகங்கறுத்துக் கண் சிவந்து உதடு துடிக்கச் சபையைப் பார்த்து "ஓ ராஜாக்களே! இந்தச் சபையில் சகல ராஜாக்களுக்கும் அவமானமும் இடையனுக்குப் பூசையும் கிடைத்தது சரிதான்! இச்சபையில் அநேகம்பெரியோர்கள் வந்திருக்

கிறார்களே குறைவுண்டா வென்கிறீர்களோ? உண்டு. எப்படி யென்றால் இந்த யாகத்திற்கு நல்ல சற்குலத்திற் பிறந்த க்ஷத்திரியன் தக்கவன். இந்த யுதிஷ்டிரனோ பாண்டு மகா ராஜனுடைய மனைவியாகிய குந்திக்கு விபசாரத்தாற் பிறந்த வன். யாக கர்த்தாவின் செய்தி இப்படியாயிற்று. இவனுக்கு தர்மம் உபதேசித்தவன் மிகவும் பாலனாகியும் புத்தியில்லாத வனாகியு மிருக்கின்றவன். பூசனையடைந்தவன் ஜார சோர சிகாமணியாகிய இடையன். இப்படிப்பட்ட சபையில் பெரி யோர்களுக்கு பூசை நடக்குமாவென்று சொல்லி, சகாதேவ னைப் பார்த்துச் சொல்லுகின்றான்: ஓ சகாதேவா! நீ க்ஷத்தி ரியனென்றும் வெகு புத்திமானென்றும் பெயற்பெற்று பூசனைக்கு யோக்கியனைக் கண்டுபிடித்து நன்றாய்த் தெரிவித் தாய்! உன்னை இதுவரையில் விவேகியென்று நினைத்தேன். உன்னைப்போ லறியாதவனை நான் கண்டதில்லை. ஆனால் சிறுபிள்ளைத்தனமாய் சொன்னதாயிருக்கும். இப்படிக்கு வாய்த்தது கோபாலனுடைய அதிர்ஷ்ட வசந்தான். நீதான் மதிமயங்கிச் சொன்னாலும் இச் சபையிலிருந்த புத்திசாலி களுங்கூட ஊமைகள்போ லிருந்தார்களே, அவர்களுக்கு மதிமயங்கிற்றோ? அல்லது அந்த மாயாவியாகிய கோபாலன் மதியை மயக்கிவிட்டானோ வென்று சொல்லித் தருமபுத்திர ரைப் பார்த்து சொல்லுகிறான்: ஓ தருமபுத்திரா! நீ இந்த சபையை யுற்றுநோக்கவில்லை யென்று தோற்றுகிறது. நோக்கி யிருப்பாயேயாகில் என் முதலானோரைப் பார்த்திருப்பாயே? பார்த்திருந்தால் இடையனைப் பூசிப்பாயோ? மகா புத்திமான் களெல்லா மிருக்க ஒரு மூடச்சிறுவன் பேச்சைக் கேட்டு இவ்வளவு ராஜாக்களையும் அவமானம் பண்ணினாயே! இது உனக்குத் தகுமா? நீ விவேகியென்று பேர் பெற்றதும் யுக்த மன்று. நல்லது நீ பூசித்தவன் குலத்தில் உயர்ந்தவனா? செல்வத்தி லுயர்ந்தவனா? புத்தியி லுயர்ந்தவனா? நடக்கையில் தான் என்ன உயர்ந்தவனா? ஒருவிதத்திலு முயர்வில்லாத ஒரு அற்பனிடத்தில் உனக்கு மதிப்புண்டாகியது காலபலந்தான். ஆ என்ன ஆச்சரியம்! மகா மண்டலாதிபதிகளிருக்க இராஜ் ஜியமே யில்லாமல் திரிகிறவனுக்கு வெகுமானம் வந்ததே! ஓகோ! வயதினால் பெருமையை நோக்கினால் அவனுடைய பிதா வசுதேவனிருக்கிறான். ஆப்தபந்துத் தன்மையை நோக்கினால் துருபத மகாராஜாவிருக்கிறார். ஆசாரியமென் றால் தனுர்வேதமே மூர்த்திகரித்தது போலத் துரோணா சாரிய ரிருக்கிறார். மகாத்மாவென்றால் சாக்ஷாத் வியாச மகாமுனிவர் எழுந்தருளியிருக்கிறார். குலவிருத்தன் என்றால்

பீஷ்மரிருக்கிறார். சௌரியத்தைப்பற்றி யென்றால் ஆசாரிய புத்திரராகிய அசுவத்தாமா விருக்கிறார்.

அன்றியும், கிம்புருடர்க்கெல்லாம் ஆசாரியனாகிய துருவ னிருக்கிறார். இன்னுஞ் சௌரியத்திலும் பராக்கிரமத்திலும் மிகுந்தவரை நோக்கினால் அர்ச்சுனனோடு சமானனான ஏகலவியனிருக்கிறான். இவர்களையெல்லாம் அவமானம் பண்ணத் தகாது. அன்றியும், பரசுராமர் சிஷியனாகிய தனுர் வேத சாரங்கதனாகிய கர்னனையும் லக்ஷியஞ் செய்யாமற் போனதற்குக் காரணமென்ன? எனக்கு அவனிடத்திலே தான் இஷ்டம் பூசித்தே னென்கிறாயோ? அதற்கிப்படிப் பட்ட மகா ராஜாக்களை யாகத்துக்கு வரவழைக்க வேண்டிய தென்ன? அல்லது உன் வீட்டிலே அவனுக்கு வேண்டியபடி பூசைசெய்யாமல் மண்டலாதிபதிகள் முன்னே சேவகனுக்குச் சமானமாகிய அவனைப் பூசிப்பது உனக்குத் தகாது. நீ யாவரும் பயந்து கப்பங்கட்டியதாக கர்வித்திருக்கிறாய். அப்படிக்கு நினையாதே. நீ தருமசீலனா யிருப்பதைப்பற்றிக் கொடுத்தார்கள். இல்லாவிட்டால் இங்கே வந்திருக்கிற வீரருக்கு நீ எவ்வளவு? ஒரு மூடன் காகத்தைப்பற்றி அன்னங்களோடு பகைத்ததுபோல் கிருஷ்ணனைப்பற்றி மகாராஜாக்களோடு பகைக்கிறாய். இப்படி செய்வதுனக்கு வெகு சீக்கிரத்தில் தீமையைக்கொண்டுவந்துகொடுக்கும். உன் குலத்திற் கேற்றபுத்தி யுனக்குண்டாயிற்று. ஒரு குணமு மில்லாத அற்பனை யிச்சித்ததற்குப் பயன் சீக்கிரத்திலேயே கிடைக்குமென்று சொல்லி, ஸ்ரீ கிருஷ்ணனை நேரிலே பார்த்துச்சொல்லுகின்றான்: அடா கிருஷ்ணா! அவர்கள்தான் தெரியாமற் பூசித்தாலும் நீ இவ்வளவு மகா புருஷருடைய சபையில் அச்சமில்லாமலும் உன் குல முதலியவற்றை யோசிக்காமலும் அப்பூசனையை ஏற்றுக்கொள்ளலாகுமா? பெரியோர்களுக்காகச் சமைத்த அன்னத்தை நாய் தின்னக் கூடுமா? அந்தப் பூசையை ஏற்றுக்கொள்ள வெட்கமாயிருக்க வில்லையோ? லோகத்திலே ஒருவன் தனக்குத் தகாதனவற்றை யடைவதினால் அவமானமே யல்லாது வெகுமானம் சம்பவிக்கமாட்டாது. அடா பைத்தியக்காரா! நீ பூசனை பெறுவது நகைப்புக் கிடமென்றறியாமற்போனாயே. துரியோதனாதிகள் சிரிக்கிறார்களே! ஆனால் இச் சபையில் பாண்டவர்களும் பீஷ்மனும் நீயும் தான் இருக்க யோக்கியமே யல்லாது மற்றொருவரும் யோக்கியரல்லர் என்று சொல்லி மற்ற ராஜாக்களைப் பார்த்து நீங்களுமிந்தச் சபையிலிருப்பது நன்றாயிருக்கவில்லை, எழுந்திருங்களென்று சொன்ன சிசு

பாலன் வார்த்தைகளைக் கேட்டுச் சகாதேவன் சொல்லு கிறான்:

இந்த ஸ்ரீ கிருஷ்ணன் பகவானானபடியினாலும் சௌர்யம்-சீலம்-மேன்மை நற்குணங்கள் இவைகளாற் சிறந்தவராகையாலும் இவரே பிதா-மாதா-குரு-குலபந்து-தெய்வம்-ராஜன் யாவரு மென்றெண்ணி முதற்பூசை செய்தோம். அது பெரியோர்களுக்கெல்லாஞ் சம்மதியாயிருக்கிறது. இதில் சம்மதியில்லாமற் பொறாமைகொண்டவனெவனோ அவன் ஆண்மையுள்ளவனாகில் கையில் ஆயுத மெடுத்துச் சண்டைக்குப் புறப்படட்டும். எவனிப்படி புறப்படுகிறானோ அவன் தலையை மிதிக்கிறேன் பாருங்களென்று சொன்னான். இவன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மகாமுனிவரும் ராஜரிஷிகளும் தேவர்களும் வெகு சந்தோஷமடைந்து கொண்டாடினார்கள். நாரத மகாமுனிவர் இந்தச் சிசுபாலனுக்கு முடிவுகாலங் கிட்டியதென்று வீணைமீட்டிக் கோலாகலஞ் செய்து கொண்டிருந்தார். அந்தச் சிசுபாலன் சகாதேவன் பேச்சைக் கேட்டுக் காலாக்கினிபோல் மிகுந்த கோபத்தையடைந்து முகம் படபடத்து நிற்க, அவனைச்சார்ந்த அரசர்களும் முகங்குன்றி ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படிப்பட்ட அரசர்களை நோக்கிச் சிசுபாலன் யுத்தஞ் செய்ய சம்மதத்தைக் காட்ட யாவரும் கிருஷ்ணனோடு யுத்தஞ்செய்ய யத்தனப்பட்டார்கள். அதை யறிந்தும் பகவான் சும்மா விருந்தார். அந்தச் சகாதேவன் பின்பு முறையே பிராமணர் க்ஷத்திரியர் முதலாகிய யாவரையும் தகுந்தபடி பூசித்து அந்த யாகச்சடங்கை நிறைவேற்றினான். இதைக்கண்டு சிசுபாலன் வெகு பொறாமை கொண்டு தன்னோடிணங்கிய அரசரை நோக்கி ஓ ராஜாக்களே! நீங்களேன் அஞ்சுகிறீர்கள்? நீங்களோ வெகு சாமர்த்தியமுள்ளவர்கள். நான் உங்களுக்குத் தகுந்த சேனாதிபதியா யிருக்கிறேன். ஆனபடியினாலே நம்மை யாவரையும் அவமானம் செய்த பாண்டவர்களையும் அவர்களைச் சார்ந்தவர்களையும் பீஷ்மன் முதலான துஷ்டரையும் இங்கேதானே கொன்று கீழே தள்ளிவிட்டு யாகத்தையும் கெடுத்து விடுவோம் என்று சொல்ல, அதைக்கேட்ட துஷ்ட அரசர்களெல்லாம் சண்டைக்கு யத்தனப்பட்டு ஆரவாரஞ் செய்யவே, தருமபுத்திரர் தமது யாகத்திற்கு இடையூறு நேரிட்டதென்று மனங்கலங்கி மிகுந்த பயத்துடனே பீஷ்மாச்சாரியரைப் பார்த்து பிதாம

கரே! இப்போது ராஜமண்டலம் மிகவுஞ் சோபித்து யுத்தத்திற்கு ஆயத்தமா யிருக்கிறதே! இதனாலே வெகுபேர்கள் வீணாய் நசிக்கிறதுமன்றி நம்முடைய யாகத்திற்கு விரோதம் வருகிறதுபோற் காண்கிறதே! இப்படிக்கெல்லாம் நேரிடாம லிருக்கும்படி நான் செய்யவேண்டிய உபாயம் யாது? நீர் உரைக்கவேண்டுமென்று கேட்க, அந்தக் குருகுல பிதாமகர் சொல்லுகின்றார்:

எனது செல்வச் சீமானே! நீ யொன்றுக்கு மஞ்சவேண்டாம். ஸ்ரீ கிருஷ்ணனென்னுஞ் சிங்கம் அதோ யிருக்கிறது பார். இவ்வளவு ராஜகோலாகலத்திலும் ஏதாகிலுஞ் சற்றஞ்சிக் கண்ணெடுத்துப் பார்க்கிறதா? அலக்ஷியமாகவே நினைத்துப் புன்னகைகொண்டு விளங்குகின்றது. இந்த நாய்க்கூட்டம் காலம் கிட்டியபடியால் வீணாய் குறைக்கின்றது. சுகமாய்க் குரைக்கட்டும். அதனால் யாருக்கென்ன? ஸ்ரீ கிருஷ்ணன் இந்தப் பாவிகளையெல்லாம் ஒரு நொடியிற் சங்கரிக்கப்போகிறார். ஆனபடியினாலே நீர் யோசிக்க வேண்டாம் என்று சொல்லக்கேட்டுத் தருமபுத்திரர் சமாதானமாயிருக்க, சிசுபாலன் பீஷ்மரைப் பார்த்து "அடா கிழவா! உனக்கேது புத்தி இப்படி கெட்டது? இத்தனை நாளும் நீ வெகு விவேகமுள்ளவனென்று நினைத்திருந்தேன். இப்போது நீ சொல்லிய பேச்சைக்கேட்டால் சிறு பிள்ளைக்குங் கீழ்பட்டவனாகத் தோற்றுகிறது. அல்லது பைத்தியந்தான் பிடித்ததோ? அல்லது காலங் குறுகியபடியால் தாறுமாறாகப் பிதற்றுகின்றனையோ? அடா பாவி கொஞ்சமும் குலாபிமானமும் சூராபிமானமுமில்லை. தைரிய சாலிகளாகிய இராஜாக்களையுங்கூட பொய்சொல்லி யேன் பயமுறுத்துகிறாய்? இதில் உனக்கு வெட்கமுண்டாகாமற் போனதற்கு யான் ஆச்சரியப்படுகிறேன். நீ இழிகுலப் பிறப்புடையவனாதலால் அற்பனாகியும் அயோக்கியனாகியு மிருக்கிற ஒரு இடையனைப் புகழ்ந்தாய். ஐயோ ஏனிப்படி உன்பிழைப்பு வீணாய் போயிற்று? இப்படிப்பட்ட மகா மூடனாகிய உன்னிடத்தில் தருமோபதேசங் கேட்கவந்த பாண்டவர்களுக்கும் அது தகுதிதான். இல்லாவிட்டால் அந்தக் கடைக்குட்டிப் பயல் காலை தலைமேல் வைக்கிறேனென்று பிதற்றுவானா? அவன் அற்பனென்று உபேக்ஷை செய்தேன். இல்லாவிட்டால் நீ தான் எனக்கெவ்வளவு? இந்தப் பாண்டவர்கள்தான் எவ்வளவு? மற்றவர்தானெவ்வளவு? ஆகிலும் பாம்புக்குட்டிகளைக் கண்டவிடத்தில் தலையை நசுக்கவேண்டுமென்று பெரியோர் சொல்வதுபோல்

உங்களை யெல்லாந் தலையெடுக்கவொட்டாமல் அடிக்கவேண்டியது அவசியந்தான். அதற்கு இத்தனை நாளும் காலம் நேரிடாமற் போயிற்று. இப்போது நேரிட்டபடியால் அப்படியே செய்கிறேன். இதெல்லா மிருக்கட்டும் நீ எவனைப் புகழ்ந்தாயோ அதைக்கேட்டு இந்த * குண்டகர் எவனைப் பூசித்தார்களோ அவன் அற்பனென்றும் மோசக்காரனென்றும் துடுக்கனென்றும் யாவரும் அறிவார்கள்; நீயும் அறிவாய். அறிந்திருந்தும் கெடுமதியினாலேயோ கர்வத்தினாலேயோ மயக்கத்தினாலேயோ சிறப்பித்துச் சொன்னாய். நீ சொல்லிய சரித்திரங்களில் பலவும் வெறும் பொய்தான். ஆகிலும் அவைகளாலும் இவனுக்கு மிகுந்த பெருமையைக் காணேன். இவனைத் தெய்வமாகச் சொன்னாய். இவன் வெண்ணெய்க்கும் பாலுக்கும் தயிருக்கும் ஆய்ச்சியர் மத்தினால் மொத்துண்டதும், திருடியகப்பட்டுக் கட்டுண்டதும், கோபாலரும் கோபியரும் இட்டபணி செய்து கோணக் கூத்தாடி இரந்துண்ணதும், பிறர் மனைவியராகிய கோபிகைகளோடு கூடி கூசாமல் காம சுகங்களை அனுபவித்ததும் யாருமறியார்கள்? இவனா தெய்வமென்று சொல்லத்தக்கவன் என்று பலபலவாக நிந்தித்ததைக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ண பகவான் நரியினுடைய பேச்சை லட்சியஞ் செய்யாத சிங்கத்தைப்போ லிருந்தார்.

ஸ்ரீ பகவானுடைய நிந்தையையும் பாகவதர்களுடைய நிந்தையையுங் கேட்டுக்கொண்டிருப்பது மகாபாப மாதலால் பெரியோர்கள் யாவரும் செவிகளை இரண்டு கரங்களால் மூடிக்கொண்டு இந்தப் பாவிக்கு எப்போது மரணம் வரப்போகிறதென்று சொல்லிக்கொண்டே அந்தச் சபையை விட்டு அப்பாலே போய்விட்டார்கள். அதுகண்ட பாண்டவர்கள் கேகயர்கள் முதலானோருக்குக் கோபமுண்டாகி தனுர்பாணங்களை எடுத்துக்கொண்டு இரதாரூடர்களாய் யுத்தத்திற்குப் புறப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பாண்டவர் முதலானோரை யுத்தத்திற்குப் போக வேண்டாமென்று தடுத்து, தமது சாரதியான தாருகனைத் தேர்கொண்டு வரும்படி நியமிக்க, அவன் சைனிய சுக்கிரீவ மேகபுஷ்ப வாலாகம் என்கிற நான்கு குதிரைகள் கட்டிக் கருடத் துவஜம் நாட்டி வெகு பிரகாசமாய் விளங்கா நின்ற ரதத்தைக் கொண்டு வந்து சித்தப்படுத்த, சுவாமி பார்த்து வெகு சந்தோஷத்துடனே பெரியோர்க ளெல்லாந் துதிக்க, பாண்டவர் ஜயஜய வென்று கூற, பீஷ்மர் கைலாகு

* குண்டகர் என்றால் புருஷனிருக்கும்போதே விபசாரஞ்செய்து பெற்றபிள்ளைகள்,

கொடுக்கச் சபையை விட்டு வந்து திவ்விய ரதத்தின் மேலேறினுர். சிசுபாலனும் ரதத்தின் மேலேறித் தன் பரிவாரத்துடனே சபையை விட்டு யுத்தம் செய்யும்படியான விடத்திற்கு வந்தான். ஸ்ரீ கிருஷ்ணனும் அவ்விடம் வந்து சேர்ந்தார்.

இவ்வாருக யுத்த பூமியில் உதய பருவத்தின் சிகரத்தில் சூரியனுதித்தா லெப்படியோ அப்படிக்குத் திவ்விய ரதத்திலேறி விளங்கிய ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து யாவரும் அவர் தேஜசுக்கு அஞ்சி இவர் சாக்ஷாத் நாராயணமூர்த்தி தான் சந்தேகமில்லை. இந்தச் சிசுபாலன் இனி பிழைக்க மாட்டானென்று நினைத்து சுவாமியைக் கும்பிட்டார்கள். சத்துருக்களும் அந்தப் பிரகாசத்தை நோக்கி மனங்கலங்கினுர்கள். அப்போது பாண்டவர்களும் மற்றும் அனேக ராஜாக்களும் சுவாமியைச் சூழ்ந்து நிற்க அவர்களைப்பார்த்து, ஓ மகாராஜாக்களே ! நீங்கள் இடைந்திருந்து யுத்த வேடிக்கையைப் பாருங்கள், நெருங்கவேண்டாமென்று ஸ்ரீ பகவான் கூற, அந்தச் சமயத்தில் யுத்தபூமியில் நிற்கும் சிசுபாலனுக்கு சில அபசகுனங்க ளுண்டாயின. சிசுபாலன் எதையும் லக்ஷியஞ் செய்யாமல் கவச முதலானவைகளைப் பூண்டு கையில் வில்லெடுத்துக்கொண்டு கர்ஜ்ஜனைசெய்து நின்றுன். பீஷ்மர் பாண்டவர் முதலியபேர்கள் இவ் வுற்பாதங்களைக் கண்டு வெகு சந்தோஷப்பட்டார்கள். மற்றுஞ் சிலர் பயப்பட்டார்கள்.

இப்படியிருக்க சிசுபாலனுனவன் உதடு துடிக்கக் கிருஷ்ணனை நோக்கிச் சொல்லியதாவது: அடா கிருஷ்ணு எனக்கு நீ யொருவன்தான் முக்கிய சத்துரு. உன்னைக் கொன்று நாற்கடல் சூழ்ந்த இப்பூமியைச் சத்துருவின் உபத்திரவமில்லாமல் ஆளுகிறேன். வெகுநாளாய் இந்த அபிப்பிராயமிருந்தது. அதற்கு இன்றைக்குத்தான் தெய்வாதீனமாய் ஹேது உண்டாயிற்று. இப்போது எங்கேயும் ஓடாமல் நில்லு. சீக்கிரத்தில் உன்னைச் சங்காரஞ்செய்து, அப்புறம் இந்தக் கிழப்பாவியையும் மூட பாண்டவர்களையும் கொன்று திருப்தியடைந்து அரசர்களின் அபகீர்த்தியைப் போக்கடிக்கிறேன் என்று சொல்லி கையிலிருக்கும் வில்லை வளைத்து நாணேற்றி நாணேசைக்கொண்டு கூர்மை யுடையவைகளும், கணுக் குறுகியவைகளும், பொற்பட்டங் கட்டியவைகளும் வெகு பளபளப்போடு கூடியவைகளுமாயிரா நின்ற அனேக பாணங்களைச் சந்தானஞ்செய்து, அம்பெடுக்கிறதும் வில்லில்

தொடுக்கிறதும் விடுக்கிறதும் ஒருவருங் காணக்கூடாமலிருக்கும்படியாக வேகமாய்க் கண்ணன் மீதில் கோடைமழை சொரிவதுபோற் சொரிந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் அவைகளை யங்கீகரித்துத் தமது சாரங்க வில்லில் அனேக பாணங்களைத் தொடுத்துச் சிசுபாலனை நோக்கி அடா சிசுபாலா நீயெத்தனை நாழிகைச் சரங்களை வருஷித்தாயோ இப்போது நானுன்பேரிற் சில சரங்களைப் போடுகிறேன் அவைகளின் திறத்தைப் பாரென்று சொல்லி பத்து இருபது நூறு இப்படிக்கு கூட்டங் கூட்டமாய்ப் பிரயோகித்தார். அந்தப் பாணங்கள் இடிவிழுந்தாற்போல் மார்பின்மேலே விழவே அந்தச் சேதிராஜன் ஒரு முகூர்த்தகாலம் நெருப்பில் விழுந்த புழுவைப்போல் துடித்து மறுபடியும் மனவலிமையோடு உதட்டைக் கடித்துக்கொண்டு குரூரமாகிய பாணங்களை வருஷித்தான். ஸ்ரீ கிருஷ்ணன் அவைகளை யெல்லாம் துண்டித்து அவன் மீதில் மறுபடியும் நூறு பாணங்களைப் பிரயோகித்தார். அவைகளைச் சிசுபாலன் கிட்டவரவொட்டாமற் றடுத்துத் தள்ளி ஆறு பாணங்களைப் பிரயோகித்தான்.

அவ்வாறு பாணங்கள் மேலே விழுந்தமாத்திரத்திலே கண்ணன் வெகுகோபமடைந்து ஆக்கினேயம் பர்ச்சன்னியம் வாயவியம் முதலாகிய சில அஸ்திரங்களை விடுத்தார். சேதிராஜனானவன் அந்த அஸ்திரங்களையெல்லாம் பதில் அஸ்திரங்களினாலே தடுத்து கிருஷ்ணனுடைய தேர் குதிரை கொடி சாரதி சக்கரம் இவைகளி லொன்றுந் தெரியாமலிருக்கும்படி அம்புகளைச் சொரிந்து சிங்கநாதஞ்செய்து கண்ணனைக் குறித்து அடா கிருஷ்ணா இதோபார் ஒரு பாணத்தை விடுகிறேன். இதுதான் உன்னை யமலோகத்திற்கு அனுப்பப்போகிறது; மார்பு பிளந்து நீ கீழேவிழ இந்தப் பீஷ்மன் பாண்டவர் யாவரும் துக்கித்து உடனே நீ போகுமிடத்திற்கு வரப்போகிறார்கள். இப்படிச் செய்து நான் கம்சன் ஜராசந்தன் நாகன் முதலாகிய பேர்களுக்கு மித்திரனாயிருந்த கடனைத் தீர்த்துக்கொள்ளுகிறேன் என்று சொல்லி தீக்ஷண்யமாகிய ஒரு நாராச பாணத்தைப் பிரயோகித்து இந்திரசித்துப்போல் மாயாரூபத்தினாலே தேரோடு கூட ஆகாயத்தில் மறைந்திருந்துகொண்டு ஓயாமல் சரமாரி பொழிந்தான். யாதவ சிரோமணியும் அந்த நாராசபாணத்தையு மற்றும் அவன் விட்ட பாணங்களையும் பொடியாகச் சிதைத்துத் தள்ளிச் சிசுபாலனைக் குறித்து அடா சேதிபதிகளில் அதமனாகிய பேதாய்! ஓடாதே. நின்று சூரதனத்தைக் காட்டு. நீ வெகு குணசாலி யானபடியினாலேதான் ஜராசந்

தன் முதலாகிய சிநேகிதருக்குக் கடன் தீர்க்கிறேனென்று புறப்பட்டாய். நீ அஞ்சாதே இப்படிக் கடன் தீர்ப்பதைக் காட்டிலும் அவர்களோடுகூட சேருவது நன்மை யாதலால் ஒரு நிமிஷத்தில் அப்படியே உன்னை யனுப்புகிறேனென்று சொல்லித் தாமும் அவனைப்போலவே மாயையால் மறைந்து நின்று அனேக அஸ்திரங்களை விடுத்தார். அவைகளை அவன் பிரதி அஸ்திரங்களாலே தடுத்தான்.

இவ்விதமாக இருவரும் மாயையால் ஆகாசத்தில் மறைந்து இரண்டு சிங்கங்கள் ஒன்றோடொன்று யுத்தஞ் செய்வதுபோல் யுத்தஞ்செய்துகொண்டிருக்க பூமியிலிருக்கிற பேர்களெல்லாம் வீரரைக் காணாமல் அம்புகள் மாத்திரம் கீழேவிழக்கண்டு ஆச்சரியப்பட்டு ஜயாபஜயம் ஒன்றுந் தெரியாமையாலே திகைத்து மனதில் தங்கள் தங்கள் பக்ஷத்திற்கு நன்மை கூறிக்கொண்டிருந்தார்கள். அப்படியே ஆகாயத்தில் தேவர்கள் முதலிய பேர்களெல்லாம் ஓகோ! இப்படிப்பட்ட அதிசயத்தை நாமிதுவரையில் கண்டதில்லையே. ஜயிப்புந் தோற்பும் இருக்கட்டும். நாம் சண்டையைப் பார்க்கவந்தோமே, அதுகூடவன்றோ கிடைப்பது அரிதாயிற்று என்றுசொல்லித் தாங்களும் மாயையினால் அந்த மாயா யுத்தத்தைக் காணவேண்டி முயன்றார்கள். இப்படி இருவரும் ஒருவரை யொருவர் சீறி மகத்தான அஸ்திரங்களைப் பெய்து அந்தர வீதியை மறைத்தார்கள்.

அப்போது சிசுபாலன் தான் பிரயோகஞ் செய்த அஸ்திரங்க ளெல்லாம் கிருஷ்ணனுடைய அஸ்திரங்களாலே நாசமடையக் கண்டு ஒரு மாயையை விடுத்தான். அந்த மாயையினாலே கதாயுதங்கள்-குண்டாந்தடிகள்-குறுந்தடிகள்-கத்திகள் - சுருள்கத்திகள் - சிறுகத்திகள் - பட்டாக்கத்திகள்-ஈட்டிகள்-எறியீட்டிகள்-வல்லயங்கள்-வேலாயுதங்கள் - சூலங்கள்-முதலாகிய சகல ஆயுதங்களும் நாலுபக்கங்களிலுமிருந்து பலசாலிகளாகிய வீரரால் எறியப்பட்டா லெப்படியோ அப்படிக்கு ஓய்வில்லாமல் கிருஷ்ணன் மீதில்வந்து வீழ்ந்தன. அப்போது பூமியிலுள்ளோரும் வானத்திலுள்ளோரும் கிருஷ்ணனுக்கு அபாயம் நேரிட்டதென் றஞ்சினார்கள். அந்தப் பகவானோ அவ்வள வாயுதங்களையும் தன்மீதில் விழவொட்டாமல் அம்புகளினால் தடுத்துத் துண்டந் துண்டமாகத் துண்டித்துப் பூமியில் தள்ளினார். பின்பு சேதிராஜன் மற்றொரு மாயையைப் பிரயோகித்தான். அதனாலே வெகு உயரத்திலிருந்து அளவற்ற பெரிய பாறாங்கற்கள் வெகுவேக

மாய்க் கண்ணன் தேர்மீதில் வந்து வீழ்ந்தன. அவைகளை யும் கிருஷ்ணன் வச்சிராஸ்திரம் பிரயோகம் பண்ணிச் சூரண மாக்கிப் போட்டார். இவ்வண்ணமாகச் சிசுபாலனுடைய சகல மாயைகளையும் வீணாக்கிச் சிங்கம்போல் ஆரவாரஞ் செய்தார். அப்போது கிரகணம்விட்ட சந்திரனைக் கண்டா லெப்படியோ அப்படிக்குக் கண்ணனைக் கண்டு தேவர்கள் களித்து மலர்களைச் சொரிந்தார்கள். அப்படிக்குக் கிருஷ் ணன் கர்ச்சித்ததைக் கேட்டுத் தன் முயற்சிகள் யாவும் வீணாய்ப் போனதை பார்த்துப் பொறாமை மிகுந்து மறுபடி யும் மாயையில்லாமல் விளக்கமாகவே வில்லெடுத்துக் கொண்டே சண்டைக்குவந்தான். யாதவ சிகாமணியும் அப்படியே வில்லெடுத்து ஒரு முகூர்த்த காலம் சண்டை செய்தார். பின்பு சிசுபாலன் அளவில்லாமல் வெகுண்டு உதடு துடிக்க முகம் படபடக்கப் பேசிப் பலவித அம்புகளை யும் வில்லில் தொடுத்து விடுத்தான். அந்த அம்புகளினாலே கண்ணனுடைய திருமேனியெல்லாம் ஜல்லடைபோல் துளை பட்டுப் புண்ணாகி உதிரம் பெருக மறுபடியும் அப்புண்களி லேயே மேன்மேலும் அம்புகளேறக் கண்திறக்கக் கூடா மலும் போனதுமன்றி அதனாலே சுவாமி சோர்ந்து தேர்த் தட்டின் மீதில் கம்பத்தைக் கைகளாற் பிடித்துக்கொண்டு பெய்பதைக்கவிருந்தார். இதைக் கண்டு சிசுபாலன் அட்ட காசஞ்செய்து ஆ கிருஷ்ணா! போய்விட்டாயா வென்று பரி காசத்தோடுஞ் சொன்னான். இதை யெல்லாம் பார்த்த யாவரும் ஐயையோ அநியாயம் என்று கண்களில் நின்றும் நீர்வடியக் கதறினார்கள்.

சாரதியாகிய தாருகன் சுவாமியை நோக்கி "சுவாமி! தேவரீர் மகாமகா சூரர்கள் எத்தனையோ பேர்களோடே யுத்தஞ் செய்திருக்கிறீர்கள். ஒருபோதும் தேவரீர் இப்படிக் குச் சோர்ந்து போனதில்லை. இப்படிப்பட்ட யுத்தமுகம் பார்த்ததுமில்லை. இப்போது நானும் குதிரைகளும் தேவரீ ருடைய மகிமையினாலே உயிர்வைத்துக் கொண்டிருக் கிறோமே யல்லது எங்களுடைய சக்தியினாலில்லை. தேவரீ ருடைய அன்பர் யாவரும் கதறுகிறார்கள். தேவரீருடைய பிரபாவத்திற்கு இவனொரு பொருளோ! தாம் இப்படிக்குச் செய்வதை நோக்கினால் ஒரு லீலை யென்று காண்கிறது. உபேக்ஷைக்கு இதுசமயமன்று. ஆதலால்,இந்தப் பாவியைஇப் போதே சங்கரித்து விளங்கவேண்டும்" என்று சொன்னான்.

அது கேட்டு ஸ்ரீ கிருஷ்ணன் சாரதியைப் பார்த்து "தாருகா! நானிப்போது உபேக்ஷை செய்யவில்லை மற்றென்ன

வென்றால் அவனுக்கு ஆயுளின் முடிவாகிய முகூர்த்தத்தை எதிர்பார்க்கிறேன். இவன் கிருதயுகத்திலே இரணியகசிபுவாகி யிருந்து நரசிங்கரூபியாகிய என்னாலே கொல்லப்பட்டுப் பின்பு திரேதாயுகத்தில் இராவணனாயிருந்து ஸ்ரீ ராம ரூபியாகிய என்னாலே கொல்லப்பட்டான். அவன்தான் இவன். ஆனபடியினாலே தான் இவனுக்கு இவ்வளவு சௌரியமும் பலமும் செருக்கும் இருக்கின்றன. இன்னமுங் கேள். இவன் என்னுடைய லோகத்திலிருக்குந் துவாரபாலகரி லொருவன். தூர்வாச முனியின் சாபத்தினால் பூமியிற் பிறக்கவேண்டி எனக்கு மித்திரனாயிருந்து வெகுகாலம் பூமியிலிருப்பதைக் காட்டிலும் சத்துருவாயிருந்து கொல்லப்பட்டால் சீக்கிரத்தில் திவ்ய லோகஞ் சேரலாமென்று சத்துருவாகப் பிறக்கும்படி ஒப்புக்கொண்டு மூன்று ஜனனங்களும் சத்துருவாக வந்து பிறந்தான்.

இந்த முகூர்த்தத்திலே அந்தச் சாபம் விமோசனமாகி நற்கதி யடையப்போகிறான். யாவரும் பார்க்கப்போகிறார்கள். ஆகையால் இதோ அவனைச் சங்கரிக்கிறேன். அஞ்சாதே யென்று சொல்லி முன்போல் இரதத்தின் தட்டில் இறுமாப்புடன் உட்கார்ந்து அட்டகாசஞ் செய்து சங்கத்தை யெடுத்து ஆகாசமும் திசைகளும் பிளந்து போகும்படி த்வனிசெய்யவே, யாவரு மனக்களிப்படைந்து ஸ்ரீ கிருஷ்ண ஜயஜய வென்று கூறினார்கள். அந்த மங்கள கோஷ்டத்தைக் கண்ணன் கேட்டு வெகு சந்தோஷத்தோடு சுதரிசன மென்னுஞ் சக்கரத்தைக் கையிலெடுத்துப் பிரயோகித்தார். பிரயோகிக்கவே, அந்தச் சக்கரமானது அனேககோடி சூரியர் உதித்ததுபோல் சொல்லக்கூடாத பிரகாசத்தோடு ஆயிரஞ் சுவாலைகளெழும்பித் திசைகளிலிருக்கு மிருளையுந் துரத்திப் பிரளயகால ருத்திரன்போல் அனேகம் வாய்களைத் திறந்து நாக்குகளை நீட்டிக்கொண்டு பயங்கர ரூபத்தோடு ஜொலித்துக் கொண்டு தேவர்களும் முனிவர்களும் போற்ற புறப்படக் கண்டு சிசுபாலன் தைரியத்தை விடாமல் தன்வலிமை முழுவதையுங்கொண்டு இன்ன தென்றில்லாமல் சகல ஆயுதங்களைக் கூட்டங் கூட்டமாய் வருஷிக்க, அவைகளை யந்தச் சக்கரம் விழுங்கிக்கொண்டே சமீபத்தில் வருகையிலும் சிசுபாலன் மற்று மாயுத ராசிகளைப் பொழிய அவைகளும் அச் சக்ராயுதத்தில் சுவறிப்போக அத்திவ்ய ஆயுதமானது அந்தச் சிசுபாலனுடைய சிரத்தை யறுத்துக் கீழே தள்ளி விட்டது.

இவ்வாறு உலகங்களுக்கெல்லாம் மார்பிலடித்த ஆணி போலிருந்த சிசுபாலனைச் சங்கரித்தது கண்டு தேவர்களும் முனிவர்களும் அரசர்களும் மலர்மாரி சொரிந்து ஸ்ரீ கிருஷ்ணனைத் தோத்திரஞ் செய்தார்கள். பாண்டவர் முதலாகிய இஷ்டர் வந்தாலிங்கனஞ் செய்தார்கள். அந்தச் சிசுபால னுடைய தேகத்தில் நின்றும் ஒரு சோதியானது கிளம்பி ஸ்ரீ கிருஷ்ணனை வலமாக வந்து அவர் திருமேனியில் புகுந்து மறைந்தது. சிசுபாலன் பிராணனை விடும்போது ஸ்ரீ கிருஷ்ணனை சர்வேசுரனென்று பாவனைசெய்து பிரா ணனை விட்டபடியால் அவனுடைய ஆவி தேஜோமய மாய் ஸ்ரீ பகவானிடத்திலேயே லயித்துப்போனது. அதைக் கண்டு சகலரும் ஆச்சரியப்பட்டு திக்பிரமைகொண்டு இதென்ன அதிசயம் எங்கும் கண்டதில்லை. பீஷ்மாசாரியர் சொல்லியது சரியே. இவர் சகல சராசரங்களையும் படைத்து அளித்து அழிக்குங் காரணப்பொருளே யென்று நினைத்து மனோவாக்குக் காயங்களினாலே சுவாமியை வணங்கி பீஷ்மர் முதலானோரையும் துதித்தார்கள். அன்றியும் யோகிகளும் முனிவர்களும் தேவர்களும் தோத்திரஞ் செய்தார்கள். கின்னரர் கிம்புருஷர் கந்தருவர் முதலானோர் யாழிசைத்துப் பாடினார்கள். இப்படியிருக்கத் தருமபுத்திரர் ஸ்ரீ கிருஷ்ண னைக் கண்டு ஆனந்த பாஷ்பத்துடனே துதித்து அவர் முகக் குறிப்பினாலே தன் தம்பியாகிய சகாதேவனை நோக்கிச் சிசுபாலனுக்குச் செய்யவேண்டிய பிரேதக் கிரியைகளைச் செவ்வையாக நடத்தும்படி ஆக்கியாபித்தார். அப்படியே அந்தச் சகாதேவனும் பீமார்ச்சுன நகுலரும் அந்தச் சிசுபாலனுக்கு அவன் புத்திரனாகிய திருஷ்டகேது என்ப வனைக்கொண்டு சரமக்கிரியைகளை வெகு சிறப்பாய் நடத்தி னார்கள். பின்பு ஸ்ரீ கிருஷ்ணனும் பாண்டவர்களும் அந்தத் திருஷ்டகேதுவுக்குச் சேதிராஜ்ய பட்டாபிஷேகஞ் செய் வித்தார்கள்.

பிறகு தருமபுத்திரர் யாகத்தை நிறைவேற்றத் துவக்கி ஸ்ரீ கிருஷ்ணனுக்கு முதற் பூசை செய்தபின்னே முறையே நாரதர்-பருவதர்-வியாசர்-தவுமியர் - பைலர்-வைசம்பாயனர்-சுமந்து-ஜயமுனி முதலான பெரியோர்களுக்கும்-பாகிலிகன்-சோமதத்தன்-முதலாகிய அரசர்களுக்கும், வைசியர்களுக் கும், சூத்திரர்களுக்கும் தகுந்தபடி, பூசைசெய்து பல தானங் களும்-தட்சணைகளுங் கொடுத்து யாவருக்கும் அறுசுவைக ளோடுகூடிச் சிறந்த அன்ன முதலியவற்றை யிடுவித்தார். அந்த யாகத்தில் அன்னங்களும்-கறிகளும் - பலகாரங்களும்

மலைமலையாகக் காணப்பட்டன. நெய்-தயிர்-பால் முதலானவைகள் மடுமடுவாகத் தேங்கின. வந்த ஜனங்களெல்லாம் தருமவான்களும் கல்வி யுடையவர்களும் நல்லொழுக்கமுடையவருமாகவே யிருந்தார்கள். மேலும் அவர்கள் நன்ருய்ப் புசித்து மனக்களிப்புடனே ஒருவரோடொருவர் சாஸ்திரங்களிற் கட்சி சொல்லி பிரசங்கித்துக் கொண்டிருந்தார்கள். மேலும் அந்த யாகத்தில் லக்ஷம் பிராமணர் புசித்தால் அதற்கடையாளமாகச் சங்கத்தை ஒருதரம் ஊதுகிறதுண்டு. அப்படிக்குச் சங்கமூதியதற்குக் கணக்கில்லாமலிருந்தது. அன்றியும், மகாராஜாக்களும் பெருமையும் நாணமும் விட்டுத் தாங்கள் தானே மனக்களிப்புடன் புசிப்போர்க்கு அன்ன முதலாகியவைகளைப் பரிமாறுவதும் உபசரிப்பதுமாயிருந்தார்கள். யாகத்திற்கு வந்த யாவரும் தத்தமது இஷ்டங்களைப்பெற்று வெகு சந்தோஷத்துடன் நல்ல பூஷணங்களினுலும் வஸ்திரங்களினுலும் அலங்காரம் பொருந்தி தேவதைகள்போல விளங்கினமையால், அந்த யாகசாலை சுவர்க்கலோகத்தோடொத்திருந்தது. இப்படிப்பட்ட பலசிறப்புடனே அந்த யாகத்தை ரித்துவிக்குகள் வேதவிதிப்படி ஒரு குறைவுமின்றி ஐந்து திங்களிலே நிறைவேற்றினர்கள்.



## எழுபத்தைந்தாவது அத்தியாயம்



*யுதிஷ்டிரர் இராஜசூயயாகஞ் செய்தபிறகு அவபிரத ஸ்நானஞ் செய்ததும் துரியோதனன் மயன்நிர்மித்த சபைதனில் பிரமித்து நின்றதும், அதுகண்ட பீமசேனனும் துரோபதையும் அவனைப் பார்த்து நகைத்ததும் சொல்லப்படுகிறது.*

வாராய் பரிக்ஷித்து வேந்தே! உனது பாட்டனை தர்ம புத்திரன் இராஜசூய யாகத்தை நிறைவேற்றின பிறகு அவபிரத ஸ்நானஞ்செய்யக் கங்கைக்குப் போகும்போது அநேக விதமான வாத்யங்கள் கடலினெலிபோல் சப்தித்தன. அணியணியா யனேக வரசர்கள் நால்வகைச் சேனைகளாற் சூழப்பட்டு முன்செல்ல, யுதிஷ்டிரனுக்கு பந்துவான யாதவர்கள் முதலானோர் பன்னிரண்டு லக்ஷம் யானைகளின் மீதில் ஆயுதபாணிகளான சூரர்களேறிக்கொண்டு கணக்கில்லாத காலாட்கள் இராஜாவுக்கு இரக்ஷணார்த்தமாய்ப் புடைசூழ, ரித்துவிக்குகள் பெரியோர்கள் உபாத்தியாயர் பிராம்மண சிரேஷ்டர்கள் சொஸ்திவசனங் கூற, அந் நாட்டிலுள்ள ஜனங்கள் ஸ்நானஞ் செய்து பரிசுத்தர்களாய் சர்வாலங்

காரத்துடன் உத்தமமான வஸ்திரங்களைத் தரித்துத் தம்பதி சமேதர்களாய்ப் பின்செல்ல விலைமாதர்களும் சகலாலங்காரஞ் செய்துகொண்டு தங்களுடைய சோர புருஷர்கள் மீதில் மஞ்சணீரை இரைத்துக்கொண்டு போனார்கள். பாண்டவர்களுடைய மனைவியர்களும் ஸ்ரீ பகவானுடைய மனைவியரான ஸ்ரீ ருக்குமணீதேவி முதலானோரும் வாகனங்கள் மீதேறிக்கொண்டு ஆகாயத்தில் விமானரூடர்களாய் சஞ்சரிக்கின்ற அப்சரமாதர்கள் போல மிகவும் சௌந்தரிய சாலிகளாய் ஒருவர்க்கொருவர் மஞ்சணீரையும் குங்குமக் குழம்பையும் பீச்சான்குழலால் வசந்தமாடிக் கொண்டும் போனார்கள். யுதிஷ்டிரன் மகா ஒளியினையுடைய இரதத்தின் மீதில் துரோபதி சமேதரா யேறிக்கொண்டு கங்காஸ்நானத்திற்கு போகிறபோது ரித்துவிக்குகள் தர்மபுத்திரருக்குப் பத்தினி சம்யாஜமென்கிற யாக விசேஷத்தைச் செய்வித்து ஆசமனஞ்செய்யச் சொல்லி மந்திரவித்தாய் அவபிரத ஸ்நானஞ் செய்யப்போகிற சமயத்தில் தர்மபுத்திரர் முன் போலவே ஸ்ரீ கிருஷ்ணன் முதலான யாவருக்கும் பூசை செய்து பதினெண் வாத்தியங்கள் முழங்க, நதியில் அவபிரத ஸ்நானஞ் செய்து வெகு தானங்கள் வழங்கி யாவரும் சம்ராட்டென்று புகழும்படி விளங்கினார்.

இவ்விதமாக அந்த ராஜசூய யாகமென்னும் பெருங் கடலைக் கண்ணனென்னுங் கப்பலினாலே கடந்து தருமமும் புகழுமாகிய பொருள்களைத் தேடி வெகு சிறப்புப்பொருந்தி விளங்காநின்ற தர்மபுத்திர மகாராஜன் யாவரையும் நோக்கி உங்களாலே நான் இப்பெருமை பெற்றேனென்று உபசாரமாகச் சொல்லி அவரவருக்குத் தக்கபடி பரிசுகள் கொடுத்தனுப்பினார். பின்பு பீஷ்மாசாரியார் - துரோணாசாரியர் முதலியவர்களுக்கும்,பலராமர்-வசுதேவர்-அக்ரூரர் முதலான யாதவர்கட்கும், துருபதன் பீஷ்மன் முதலியவர்கட்கும் தகுந்தபடி பூஜைசெய்து பரிசுகள் கொடுத்தனுப்பிவைத்தார். சாத்தகி - திருஷ்டத்துய்மனன் முதலியவர்களுக்கும் பீமன் முதலிய நால்வரும் தங்கள் தங்கள் தேசங்களுக்குப் போகின்ற அரசருக்கு வழிவிட்டு உபசரித்து வந்தனர். நாரதர்-பருவதர்-தவுமியர் முதலாகிய மகா முனிகளுக்குத் தேவோபசாரஞ்செய்து யுதிஷ்டிரர் தாமே கூடப்போய் வழிவிட்டு வந்தார்.

இவ்விதம் ராஜசூய யாகத்தை முடித்துக்கொண்டு ஸ்ரீ பகவானது லீலா மகிமாதிசயங்களை அடிக்கடி நினைத்து

அவரை சதாகாலம் மனதிலிருத்தி பூஜித்தவராக பூலோக இந்திரன் போல் யுதிஷ்டிரர் சிம்மாதனத்திலிருந்து செங்கோல் செலுத்தி வந்தார். இப்படி யிருக்கும்போது காலம் தப்பாமல் மழைபெய்து வந்தபடியால் பூமியெல்லாம் பயிர் நிரம்பி யாவருங் குறைவற்ற செல்வமடைந்து தத்தமது நெறிகளில் வழுவாது நடந்து வந்தார்கள். இப்படிக்கு கிருதயுக மென்னும்படி தருமத்தைப் பூரணமாக நடத்தி செல்வச்சிறப்போடு தருமபுத்திரர் அரசாக்ஷி செய்துவந்தார்.

இப்படி யிருக்க துரியோதனன் தருமருடைய இராஜசூயயாகங் கழிந்தவுடனே ஒருநாள் அவருடைய சபையைப் பார்க்க வந்து அதினுடைய உயர்வையும் சிறப்பையும் பிரகாசத்தையும் நவமணிமயமாகிய வேலைப்பாடுகளையும் விசித்திர மயமாகிய விலாசத்தையுங் கண்டு ஆச்சரியப்பட்டு அதில் ஓர் புறத்தில் படிகக்கல்லாற் செய்த ஒரு தாமரைத் தடாக மிருக்க அது நீர்போற் காணமல் நிலம்போல் காணப்பட்டபடியால் அதில் சாதாரணமாய் போய் ஜலத்தினில் வீழ்ந்து வஸ்திரங்களை நனைத்துக்கொண்டு பிரமித்து நிற்பதைக் கண்டு சில யாதவர்களும் பீமசேனனும் துரோபதையுஞ் சிறித்தார்கள். அப்போது தருமபுத்திரர் அவர்களைப் பார்த்து நகைக்க வேண்டாமென்று கண்டித்தார். துரியோதனன் முதலானோர் மிகவும் விசனமடைந்து நாணத்துடன் தலையைக் குனிந்துகொண்டு அஸ்தினபுரஞ் சென்றனர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் பூமிபாரம் நிவாரணம் செய்வதற்கு இதுவே மூலகாரண மாகிற்றென்று நிச்சயித்தவராய் மௌனமாயிருந்தனர்.

-❧-

## எழுபத்தாருவது அத்தியாயம்

*பிரத்தியும்னன் சால்வனுடன் போர்செய்தது சொல்லப்படுகின்றது.*

கேளீர் அபிமன்யு புத்திரனே! ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஸ்ரீ ருக்குமணீதேவியை ஆசுரவிதியினால் கிரகித்துக்கொண்டு துவாரகைக்குப் போகும்போது ஜாராசந்தன் முதலியவர்களுடன் வழிமடக்கின சால்வன் ஸ்ரீ பலராமரால் அபஜயப்பட்டு அந்தப் பகையினால் யாதவர்களென்கிற பெயரை பூமியிலில்லாமற் செய்கிறேனென்று பிரதிக்ஞைசெய்து பசுபதியாகிய பரமசிவனைக் குறித்து புழுதியை ஆகாரஞ்செய்து கொண்டு ஒரு வருஷம் வெகு உக்கிரமான தவஞ்செய்தனன். அத்தவத்திற்கு சிவபெருமான் மெச்சி அவனுக்குப் பிரத்தியக்ஷமாகினர். அப்போது அவன் ஆனந்தக் கடலிலாழ்ந்தவனாய் சாஷ்டாங்கமாகப் பணிந்து கைகூப்பி துதிசெய்து நிற்கிறவனை சிவபெருமான் பார்த்து உன திஷ்டத்தை கேள் தருகிறேனென்று கூற, கருணைக்கடலான சுவாமி! வெகு துஷ்டர்களான யாதவர்கள் அனேகர்களிருக்கின்றார்கள். அவர்களை மாய்ப்பதற்காக ஆகாயத்தில் சஞ்சரிக்கும்படியாயும், மூன்று யோசனை நிகளமும் ஒரு யோசனை அகலமும் வெகு உயரமான மதில்களுடனும் யக்ஷ கின்னரர் கிம்புருடர் உரகர் முதலிய தேவர்களாலும் அசுரர்களாலும் கண்ணெடுத்துப் பார்க்கப்படாததாய் இரதம்-கஜம்-துரகம்-பதாதி சேனைகளை யமைத்து நினைத்தவிடத்தில் ஆகாயத்தில் சஞ்சரிக்கும்படியாய் இரும்பினால் ஒரு பட்டணம் நிருமித்து தரவேணுமென்று பிரார்த்தித்தான். சால்வனுடைய கருத்திற்கு சிவபெருமானிசைந்து அப்படியே நிருமித்துக் கொடுக்கச் சொல்லி அசுர சிற்பியான மயனுக்கு ஆக்யாபித்துவிட்டு அந்தர்த்தானமாகினர். மயனும் சிவபெருமானுடைய ஆக்ஞையின் வண்ணம் நிருமித்துக் கொடுத்தான்.

அதைப்பெற்று இனி சகல யாதவர்களையும் வெல்லலாமென்று தைரியமடைந்து, அதில் நால்வகைச் சேனைகளையும் அமைத்துக்கொண்டு துவாரகாபுரத்தின்மீது தண்டெடுத்து வந்து கோட்டைகள் பேரிலுங் கொத்தளங்கள் பேரிலும் பலவித ஆயுதங்களையும் ஓய்வில்லாமல் ஆகாயத்தில் நின்றும் வருஷித்தான். துவாரகா பட்டணத்திலுள்ள ஜனங்கள் கண்டு பயந்தார்கள். பிரத்தியும்னன் அவர்

களைப் பயப்படாதேயுங்களென்று தேற்றி ரதத்தின்மீது ஆரோகணித்து சாத்தகி - தாருதட்சுணன் - சாம்பன் - அக்ரூரன் - பானுவித்தன் - கதன் - முதலிய சூரர்களான யாதவ சிரேஷ்டர்களுடன் வெளிப்பட்டு சால்வனோடெதிர்த்தான். அப்போது சால்வன் யாதவர்கள் மீதில் மாயையை யனுசரித்து அனேக பாணங்களை பிரயோகஞ்செய்து விடுத்தான். பிரத்தியும்னன் அவைகள் யாவையுந் தனது மாயையால் சூரியனைக் கண்ட இருளைப்போல் பறக்கடித்து அவனுடைய சேனாதிபதியான சுத்தியும்னன்மீது இருபத்தைந்து பாணங்களை விடுத்து மார்பை பிளந்தனன். அதை பொறுக்கமாட்டாமல் அந்தச் சுத்தியும்னன் உதிரம் பெருக மூர்ச்சித்து பூமியில் வீழ்ந்தனன்.

பின்னும் பிரத்தியும்னன் நூறு பாணங்களைப் பிரயோகித்து சால்வனுடைய படைகளைச் சிதறவடித்து சாரதியைப் பத்து பாணங்களாலும் குதிரைகளை மூன்று பாணங்களாலும் அடித்தனன். பிரத்தியும்னனுடைய காலாகவத்தைப் பார்த்துத் தேவர்கள் துதித்து மலர் சொரிந்தார்கள். யாதவர்கள் கண்டு களித்து வியப்படைந்தார்கள். இதைப் பார்த்து சால்வன் பொறுமைப்பட்டு கடுஞ்சினமடைந்து இவனுடனிப்படி யுத்தஞ்செய்வதால் பிரயோஜன மில்லை. இவனை மாயையால் மோசப்படுத்தி வெல்லவேண்டுமென்று கருதி அப்படியே ஆகாயத்தில் பட்டணத்தோடு கிளம்பி அநேகபாணவருஷங்களை வருஷித்து உடனே பூமியில் வந்து அநேககணைகளை விடுத்தான். அப்போது பிரத்தியும்னன் பதில்கணை தொடுக்கிற சமயத்தில் கண்ணுக்குக் காணாமல் மறைந்து மேகத்திலிருந்து சரவருஷங்களை வருஷித்தான். இப்படி மாயையின் பலத்தால் ஒருவிடத்திராமல் இடங்கள் மாறிமாறி கபடமாய் யுத்தம் செய்தான். அந்தந்த சமயத்திற்குத் தகுதியாய் பிரத்தியும்னன் பாணங்களை விடுத்துக்கொண்டு வந்தான், அப்போது யாதவர்கள் இந்தச் சால்வனை ஜயித்தால் சகல மேன்மைகளும் பெறலாம், மரணமடைந்தால் வீரசொர்க்கத்தை யடையலாம் எனக்கருதி நிலையாக நின்று யுத்தம் செய்தார்கள்.

அந்தச் சமயத்தில் முன்பு பிரத்தியும்னனுடைய பாணப் பிரயோகத்தினால் மூர்ச்சித்திருந்த சுத்தியும்னனானவன் தெளிந்தெழுந்திருந்து ஒரு பெரிய கதையைக் கரத்திற்றாங்கி ஓடிவந்து பிரத்தியும்னனுடைய மார்பினி லோங்கி யடித்தான். அந்த அடியினால் மார்பு நூறுங்கி மூர்சித்த பிரத்தியும்

னனை அவனது சாரதி கண்டு இரதத்தைத் திருப்பிக்கொண் டப்புரஞ் சென்றனன். அந்த சுத்தியும்ன னென்பவன் தேவ தானவ கந்தருவர்களாற் சாவில்லாமல் வரம்பெற்றவன். அந்தப் பிரத்தியும்னன் ஒரு முகூர்த்தத்திற்குமேல் மூர்ச்சை தெளிந்து தனது சாரதியைப் பார்த்து இப்படிப்பட்ட சத்துரு எதிரில் நிற்கிறபோது என்னை அப்புறத்திற் கொண்டுபோய் விட்டாயே. யாதவ வம்சத்திற் பிறந்தவர் களில் எவனுகிலும் யுத்தத்திற் பின் வாங்கினதுண்டோ என்று வருந்தினுன். சாரதி பிரத்தியும்னனை நோக்கி தரு மத்தினுடைய இரகசியத்தை யறிந்து நான் இப்படிக்குச் செய்தேனே யன்றி எனதிச்சையாய் உடக்கு ஆயாசம் வரும் படி நான்செய்யவில்லை. யஜமானன் ஆபத்தை அடைந் திருக்கிற சமயத்தில் சாரதி இரக்ஷிக்கவேண்டும். ஆதலால் அபகீர்த்தி வருமென்று தாம் வருந்தவேண்டாமென்று சமாதானம் சொன்னுன்.



## எழுபத்தேழாவது அத்தியாயம்



*பிரத்தியும்னன் தியுமத்சேனனை மாய்த்ததும், ஸ்ரீ கிருஷ்ண பகவான் சால்வனைக் கொன்றதும் சொல்லப்படுகிறது.*

குருவம்சோற்பவனே! தன் சாரதியின் பதிலைக் கேட்டு திருப்தியடைந்தவனுய் அந்தப் பிரத்தியும்னன் அந்த தியுமத் சேன னிருந்தவிடத்தில் ரதத்தை செலுத்திக் கொண்டு சென்று கொடிய பாணங்களை விடுத்து அவனது சிரசை அறுத்துத் தள்ளினுன். அப்போது-கதன்-சாத்தகி-அக்கு ரூரன்-முதலிய யாதவர்கள் அந்தச் சால்வனுடைய படைகளை யேககாலத்தில் சின்னபின்னமாக அடித்தார்கள். இப்படி இருபத்தொன்பது நாள் தேவாசுர யுத்தம்போல் ஓய்வில் லாமல் மகத்தான யுத்தம் நடந்து கொண்டிருந்தது.

இராஜசூய யாகத்திற்குப் போன ஸ்ரீ பலராம கிருஷ்ணர் களுக்கு துவாரகா புரத்தில் நடக்கும் இந்த யுத்தத்தைப் பற்றி ஒன்றும் தெரியாமலிருந்தது. சில நாள்கள் கழிந்தபின் ஸ்ரீ கிருஷ்ணர் முதலியவர்கள் தர்மபுத்திரர் முதலானோரிடம் விடைபெற்று துவாரகை யடைந்தனர். துவாரகா புரத்தில் யாதவ வீரர்களில்லா திருப்பதையும் பட்டணத்திலுள்ள ஜனங்கள் கிலேசப்படுவதையும் சால்வன் வந்து யுத்தஞ்செய் வதையும் கண்டு பட்டணத்தை இரக்ஷிக்கும்படி பலராமனை

வைத்துவிட்டு சால்வன் யுத்தஞ் செய்கிறவிடத்திற்கு கண்ணன் எழுந்தருளினூர்.

ஸ்ரீ பகவானைக் கண்டு பிரத்தியும்னன் முதலிய சகல யாதவர்களும் வெகு களிப்பை அடைந்தார்கள். சால்வனும் சுவாமியைப் பார்த்து ஒரேதரமாய் யாதவப் பூண்டைக் கரு வறுக்கச் சமயம் வாய்த்ததென்று சந்தோஷத்தை அடைந் திருந்தனன். அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் சால்வனுக்கு எதிரே நின்றூர். சீக்கிரமாய் இரதத்தின்மீதிவர் அமர்ந்து சால்வன் கடுஞ்சின மடைந்து சுவாமியின் மீதில் அனேக பாணங்களைப் பிரயோகித்து தாருகன் மீது யமதண்டத்திற் கொப்பான சக்தியையெடுத்து வெகு கோபத்துடன் பிரயோ கித்தனன். அதைச்சுவாமி நூறு துண்டமாகக் கண்டித்து சால்வன் மீதில் பதினூன்கு பாணங்களைப் பிரயோகஞ் செய் தனர். இப்படி காலாவகமாய்ப் பிரயோகித்த ஸ்ரீ கிருஷ்ண சுவாமியினது பாணங்களைத் துண்டித்து ஒரு நாராசபாணத் தால் சுவாமியினுடைய கரத்தின் மீது விடுத்தான். அதினூல் வெகு வருத்தமடைந்து கரத்தினிலிருந்த வில் கீழே சோர உதிரம் ஆரூய்ப் பெருக சகல யாதவர்களும் பார்த்து ஹா ஹா காரஞ்செய்து முறையிட்டார்கள். சால் வனும் அவனது சேனைகளும் வெகு சந்தோஷத்தை அடைந்தார்கள். அந்தச் சமயத்தில் சால்வன் அட்ட காஸஞ்செய்து "கேளடா மூடனூன கோபாலா! எனது தோழனூன சிசுபாலனுக்கு உருக்குமணியை விவாகஞ் செய்து வைக்க நிச்சயித்திருக்க நீ கொஞ்சமேனும் பயமில் லாமல் அவளைத் தூக்கிகொண்டு ஓடினூயல்லவோ? அதை மறந்து இராஜசூயயாகத்திலும் சகல அரசர்களும் வந்திருக்க யாவரையும் அவமதித்து அயோக்யனூன நீ பூஜிக்கப்பெற் றூய். அதன்றி சிசுபாலனை எம்போலிய தோழர்களின் பக்கபல மில்லாத சமயத்தில் சங்கரித்தாய். உன்னை இதோ யமபுரத்திற் கனுப்புகிறேன்" என்று கூறிய சால்வனை நோக்கி ஸ்ரீ கிருஷ்ணன் புன்னகையுடன் நீ வெகு அழகாய் கொக்கரிக்கிறூய் என்று தமது கௌமோதகி யென்கிற கதையை எடுத்து பூமியிலூன்றி ஒரு கிளம்பாய் ஆகாயத்திற் கிளம்பி சால்வனுடைய மார்புக்கும் கழுத்திற்கும் நடுவில் மோதி அடித்தார். அதினூலவன் மார்பு பிளந்துதிரம் பெருகுவதை ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் தெரியவொட்டாமல் ஆகாயத்தில் பட்டணத்துடன் கிளம்பி ஒரு முகூர்த்தம் மறைந்து மாயையால் வசுதேவருடைய வேலைக்காரனைப்போ

லொருவனைச் சிருஷ்டித்து தேவகீதேவி அனுப்பினதாகச் சுவாமியின் சமீபத்திற் கனுப்பினான்.

அவன் ஸ்ரீ கிருஷ்ண சுவாமியின் சந்நிதானத்திற்கு வந்து கைகூப்பி "தேவரீருடைய பிதாவான வசுதேவரை சால்வன் வந்து பாசத்தால் கட்டிக் கொண்டுபோனான். அவரை விடுவித்துக்கொண்டு வரவேண்டுமென்று உமது தாய் சொல்லச் சொன்னாளென்று விக்கியாபனஞ் செய்தான். அது கேட்டு ஸ்ரீ கிருஷ்ணன் மகாபலசாலியான பலராமரை ஜயித்து சால்வன் எனது தந்தையைப் பிடித்துக்கொண்டு போனானென்றால் இதென்னமோ ஆச்சரியமா யிருக்கிற தென்று சங்கையுற்றிருக்கிற சமயத்தில் ஆகாயத்தில் சால்வனனவன் வசுதேவரைப் பாசத்தினாற்கட்டி சுவாமிக்கெதிராகக் கொண்டுவந்து கத்தியினால் அவரது சிரசைக் கண்டித்துப் போட்டான். இதெல்லாம் அவனது மாயா கார்யமென்றுணர்ந்த ஸ்ரீ பகவான் ஒரு அர்த்த சந்திர பாணத்தால் அவனுடைய கவசத்தை அறுத்துத் தமது கதையால் அவனது சவுபமென்கிற பட்டணத்தைப் பொடிப்பொடியாகத் துண்டித்துப் பூமியில் தள்ளினார். அப்போது சால்வன் பதாதியாய் ஒரு கதையைக் கையிலெடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனை மாய்க்கவேண்டுமென் றோடிவந்தான். அப்போது ஸ்ரீ கண்ணபிரான் இரண்டர்த்தசந்திர பாணங்களைப் பிரயோகித்து அவனது கதையுடன் இருகரத்தையுந் துணித்து திருவாழிப் பிரயோகத்தினால் சிரசையுஞ் சேதித்தனர். அப்போது சகல யாதவர்கள் கொண்டாட, தேவர்கள் மலர் சொரிந்து துந்துபி வாத்திய முழக்கினர்.



## எழுபத்தெட்டாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ண பகவான் தந்தவக்கிரனையும் விடூரதனையும் சங்கரித்தது.*

பரிக்ஷித்து மகாராஜனே! சிசுபாலனுக்கும் சால்வனுக்கும் தோழனான தந்தவக்கிரனென்பவன் தனது சிநேகிதர்கள் யாவரையும் ஸ்ரீ கிருஷ்ணன் சங்கரித்ததைச் சகிக்கமாட்டாமல் கதையைக் கரத்திற் றாங்கி ஓடிவந்தான். அவனைப் பகவான் பார்த்து ரதத்தைவிட்டுக் கீழே குதித்துத் தமது கவுமோதகீ யென்கிற கதையை எடுத்துக்கொண்டு அவனுக்கெதிரே நின்றார். அவரைப் பார்த்து தந்தவக்கிரன் சினத்தோடு " அடாமூடனே! இவ்வளவு நாளெனது கண்ணிலகப்படாமல் திருடனைப்போ லொளித்திருந்தாய். இனியுன்னை விடுகிறதில்லை. நீ யெனக்கு அம்மான் மைந்தனாயிருந்தும் மித்திர துரோகத்தைச் செய்தபடியால் உன்னையான் இனி விடுவதில்லை யென்று தனது கதையாலோங்கி ஒரு அடி அடித்தான். ஸ்ரீ கிருஷ்ணன் அதை லட்சியஞ்செய்யாமல் தமது கதையால் அவனது மார்பில் ஓங்கி அடித்தனர். அதைச் சகிக்கமாட்டாமல் மார்பு பிளந்து சரீர முழுதும் நுறுங்கி வாயினால் உதிரங் கக்கிக்கொண்டு கைகால்களைப் பரப்பிக்கொண்டு பூமியில் விழுந்தான். சிசுபாலனைப்போல இவனுந் துவாரபாலகனாதலால் இவனிடத்திலும் ஒரு ஜோதி உண்டாய் ஸ்ரீ கண்ணபிரானுடைய திருவடியில் லயித்துப்போயிற்று.

அதைச் சகல யாதவர்களுந் தேவதானவர்களும் கண்டு வியப்பை அடைந்தார்கள். அதுகண்டு அவன் தம்பியான விடூரதன் தனது சகோதரனிறந்ததைப் பார்த்துச் சகிக்கமாட்டாமல் மிகவும் சோகத்தோடுங் கோபத்தோடுங் கத்திகேடயத்தை எடுத்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனை எதிர்த்தான். ஸ்ரீ பகவான் வேகமாய் சக்கிரப் பிரயோகஞ் செய்து அவனது சிரசைத் துணித்து விட்டார். துஷ்டர்கள் சகலரும் ஒழிந்தார்கள் என்று மிக திருப்தி யுடையவராக பகவான் துவாரகாபுரஞ் சேர்ந்து உருக்மிணி சத்தியபாமை முதலியவர்களுடன் சுகமாயிருந்தனர்.

அந்தச் சமயத்தில் பாண்டவர்களும் கௌரவர்களும் யுத்தஞ் செய்ய ஆரம்பித்திருப்பதை தூதர் முகமாய்க் கேள்வியுற்ற ஸ்ரீ பலராமர் இங்கிருந்தால் எவர்களுக்காவது சகாயஞ்

செய்ய வேண்டிவரும். நாமிங்கில்லாம லிருப்பதே யோக்கிய மென்று தீர்த்தயாத்திரைக்குப் போக யத்தனஞ் செய்து அனேகம் வேதியர்கள் பிரம்மரிஷிகளைக் கூட்டிக்கொண்டு பிரயாணப்பட்டு முதலில் பிரபாக தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து தேவரிஷி பிதுரு கணங்களை யுத்தேசித்து தர்ப்பணஞ் செய்து, சரஸ்வதி நதிக்குச் சென்று பிரதூதகமென்கிற சரசிலும் பிந்து சரசிலும் திருணகூடமென்கிற சரசிலும் சக்கர தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து அவ்விடத்திற் செய்ய வேண்டிய தர்ப்பணங்களைச் செய்துவிட்டு யமுனையி லெத்தனை புண்ணிய தீர்த்தங்க ளிருக்கின்றனவோ அவைகளிலும் கங்கையிலுள்ள தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து அநேக தானங்களை வேதியர்கட்குக் கொடுத்து சகல ரிஷி கணங்க ளுடன் நைமிசாரண்ணியத்தில் சௌநகர் முதலிய ரிஷிகள் சத்திர யாகஞ் செய்துகொண்டிருக்கிற விடத்திற் கெழுந் தருளினர். அவரைக் கண்டு சகல ரிஷிகளு மெழுந்திருந்து சாஷ்டாங்கமாகப் பணிந்து ஆசனம் சமர்ப்பித்து அவர் அதிலெழுந்தருளின பிற்பாடு, பிரம்ம ரிஷிகள் யாவருங் கைகூப்பிக்கொண்டிருக்கிற சமயத்தில் வியாசருடைய சிஷ்ய னும் உரோமஹருஷ்ணனுக்கு மைந்தனு மிருக்கின்ற சூதன் ஸ்ரீ பலராமருக்கு மரியாதை செய்யாது ஆசனத்தி லேயே அமர்ந்திருந்தான். அதைக் கண்டு கடுஞ்சினமடைந் தவராய் ஸ்ரீ பலராமர் ரிஷிகளைப் பார்த்து அருளிச் செய்கிறார் :

பிரம்ம நிஷ்டர்களான மகாரிஷிகளே ! சங்கர ஜாதியிற் பிறந்த இவனுக்கு உயர்ந்த ஆசனங்கொடுத்து பிர்ம்ம நிஷ் டர்களான நீங்கள் தாழ்ந்த ஆசனத்தி லிருப்பதினாலேயே இவன் உயர்ந்த ஜாதியிற் பிறந்தவனாக பாவித்துக்கொண்டு இதிகாஸ முதலிய பதினென் புராணத்தையும் மகாரிஷிக ளான உங்களுக்கு உபதேசிக்கிறேமென்றுங் கர்வித்திருக்கி றான். பிராம்மண வேஷம் போட்டுக்கொண்ட இவன் எமது மகிமைகளைக் கண்டுணர்வானோ ? எவ்வளவு வித்தை கற்றிருந்தாலுஞ் ஜாதிக்குரிய புத்தியிருக்குமே யன்றி யோக்கி யதை யுண்டாகமாட்டாது. தருமத்தை நிலைநிறுத்துவதற் கும் இப்படிப்பட்ட துஷ்டர்களை நிக்கிரகிப்பதற்கும் அவ தரித்திருக்கின்ற எம்மை அலக்ஷியஞ்செய்த இவனைச் சங்க ரிக்கிறேனென்று தமது திருக்கையிலிருந்த தர்ப்பையை அஸ்திரமாக அபிமந்திரித்து அந்தச் சூதனுடைய சிரசி னிற் பிரயோகித்தனர். அதனால் சூதன் பிராணனிழந்து பூமியில் வீழ்ந்தனன். அதைச் சகல ரிஷிகளுங் கண்டு

மகா விசனத்தையடைந்து பலராமரைப் பார்த்து "இந்தச் சூதர் எங்களுக்குப் புராணஞ் சொல்லுவதற்காக இவருக்குப் பிரம்மாசனமும் தீர்க்காயுளுநங் கொடுத்து உயர்ந்த ஆசனத்தில் வைத்திருந்தோம் அவரை நீர் சங்கரித்தபடியால் உமக்குப் பிரம்மஹத்தியாகிய மகா பாபம் வந்து சம்பவித்தது. நீரே ஈஸ்வரனுகவும், உம்மையே வேதங்கள் ஸ்துதிக்கிறதாகவும், உமதாக்கினேயே வேதமாகவு மிருந்தாலும், அந்த வேதத்திஞற் சொல்லப்பட்டிருக்கின்ற பிர்ம்மஹத்தி உம்மை ஒன்றும் செய்யாவிடினும், அந்த வேத நியமனப்படிக்கு நீர் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளாவிடில் யாரும் பாவங்களுக்குப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ள மாட்டார்கள். ஆதலால் உலக சம்ரக்ஷணர்த்தமாக நீர் பிராயச்சித்தஞ் செய்து கொள்ளவேண்டும்" என்று ரிஷிகள் பிரார்த்திக்க, ஸ்ரீ பலராமர் மகிழ்ந்து அந்தச் சூதன் உக்கிரசிரவனெனும் பெயருடையவனுய் ஆயுளுள்ளவனுகவும் தேஜசுள்ளவனுகவுங் கியானியாகவுமிருந்து உங்கள் கேள்விக்கு உத்தாரஞ் சொல்லத்தக்கவனு யிருக்கக் கடவனென்று ஆசி கூறி அவனேப் பிழைப்பித்தனர்.

அவரும் நித்திரை விழித்தவன்போ லெழுந்திருந்து ஸ்ரீ பலராமரை பிரதக்ஷணஞ்செய்து சாஷ்டாங்கமாகப் பணிந்து கைகூப்பி எதிரில் நின்றுகொண்டு புத்தியீனனுய் தேவரீருடைய மகிமையை மறந்து அபராதஞ் செய்ததை மன்னிக்கவேண்டும் என்று பிரார்த்தித்தார். பிறகு ரிஷிகள் பலராமரைப் பார்த்து "முன் வாதாபியென்றும் இல்வலனென்றும் இரண்டு இராக்கதர்க ளிருந்தார்கள். அவர்களே அகஸ்திய மாமுனிவர் மாய்த்துவிட்டார். அவர்களில் இல்வலனுக்குப் பல்வலனென்கிற புத்திரனிருக்கிறுன். அவன் எங்களே எப்போதும் உபத்திரவம் செய்துகொண்டிருக்கிறுன். அந்தப் பாவியைச் சங்கரித்து எங்களுக்கு நன்மை செய்யவேண்டும் என்று வேண்டினர்.



## எழுபத்தொன்பதாவது அத்தியாயம்

ஸ்ரீ பலராமர் பல்வலனைச் சங்கரித்துச், சகல புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து, சகல திவ்ய தேசங்களையும் சேவித்து, துரியோதன னும்—பீமசேனனும் கதாயுத்தஞ் செய்கிற குருக்ஷேத்திரத்திற்கு வந்து, அவர்களை "யுத்தஞ் செய்ய வேண்டாம்" என்று சொல்லியுங் கேளாமல் யுத்தஞ் செய்வதைப் பார்த் துத் 'தெய்வகதி பெரிது' என்று கருதித் துவாரகைக்குச் சென்றதும் சொல்லப்படுகின்றது.

பாண்டு வம்ச பவித்ரனே ! இப்படி சகல ரிஷிகளுடன் பலராமர் சம்பாஷித்துக்கொண்டிருக்கையில் அந்தப் பல்வல னென்கிற அசுரன் பெருங்காற்று உருவமாக ஒரு முகூர்த்த காலம் மல மூத்திரங்களையும் மது மாம்சங்களையும் அபரிமித மாக அடித்துக்கொண்டு வந்து அந்த மகரிஷிகளுடைய யாகசாலையை நிரப்ப, அந்தத் துர்க்கந்தங்களைச் சகிக்கமாட் டாமல் அங்குள்ள ரிஷிகள் அப்புறம் போய்விட்டார்கள். அப்போ தந்தப் பல்வலன் ஒரு சூலத்தைக் கையிலேந்திக் கொண்டு அஞ்சன மலைபோன்ற சரீரமும், சிகப்புக் கம்பளி போன்ற மீசையும் யுகாந்தகாலத்து இயமன்போல கோர ரூபியா யெதிரில் நிற்க ஸ்ரீ பலராமர் பார்த்து அடா துஷ்டா ! நீ இப்படி ரிஷிகளுடைய வேள்விகளைக் கெடுத் துக்கொண் டிருக்கிறபடியால் உன்னை சிட்சிக்கிறேனென்று கூற, அதுகேட்டு பல்வலன் கொடிய கோபங்கொண்டு சூலத்தாலே ஒரு குத்து குத்தினான். அதைச் சமாளித்துக் கொண்டு தமது உலக்கையையுங் கலப்பையையும் நினைத்தார். அவ்விரண்டு ஆயுதங்களும் அருகில் வந்து நிற்க அவை களைக் கரத்தினிலேந்தி அந்த அசுரனுக் கெதிரில் வந்து அவன் கழுத்தினில் கலப்பையை மாட்டி உலக்கையால் தலையின்மீதடிக்க அவன் அதை பொறுக்கமாட்டாமல் அதிக பயங்கரமாக வீறிட்டுப் பிராணனை விட்டான். அதுகண்டு மகரிஷிகள் யாவரும் ஸ்ரீ பலராமரை அநேகவிதமாய்த் துதித்து ஒரு குடத்தினில் தீர்த்தத்தை அபிமந்திரித்துச் சகல பாபங்களுந் தொலைய அவருக்கு அபிஷேகஞ்செய்து எப்பொழுதும் வாடாமலும் வாசனை போகாமலு மிருக்கின்ற துளசிகளாலும் புஷ்பங்களாலுங் கட்டின வைஜயந்தி யென் கிற வனமாலையுந் தாமரைப் பூமாலையு மிரண்டு வஸ்திரங் களும் திவ்யாபரணங்களும் கொடுக்க அவர்களிடத்தில்

செலவு பெற்றுக்கொண்டு பிரயாணப்பட்டு பாரதவருஷத்தை ஒருமுறை வலம் வருவதுபோல பல தீர்த்தங்களில் முழுகியும் பல மூர்த்திகளை சேவித்தும் யாத்ரையை முடித்துக் கொண்டவராய் குருக்ஷேத்திரத்திற்கு வந்தார்.

அதுசமயத்தில் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் யுத்தம் நடந்து முடிந்து கடைசியிற் வீமனும் துரியோதனனும் கதாயுத்தம் செய்துகொண்டிருந்தார்கள். அவரைக்கண்டு பாண்டவர்கள் அர்க்ய பாத்திய முதலியவற்றுல் பூசித்தார்கள். துரியோதனனும் பீமசேனனும் சமமாக யுத்தம் செய்ததால் போரை நிறுத்தும்படி பலராமர் அருளிச் செய்ததற் கிசையாமல் யுத்தஞ் செய்தார்கள்.

பிறகு பீமசேனன் துரியோதனனுடைய தொடை முறியவடித்துப் பூமியில் தள்ளி தனது பகை தீர அவனது முடியின்மீது உதைத்துக்கொண்டிருந்தனன். அதுகண்ட தருமநந்தனர் பீமனுக்கு புத்திசொல்லி அப்புறப்படுத்தினுர். ஸ்ரீ பலராமர் மனம்பொருமல் ஆருத கோபங்கொண்டு அடா கொடியபாவி! பீமா இவ்வுலகில் கதைபோர் தெரிந்தவர்கள் பழித்துத் தூஷிக்கும்படித் தருமந் தப்பி முறை புறண்டு இடுப்பின் கீழாகிய துடையிலடித்தாயே ? அந்தத் துரியோதனன் கீழே விழுந்தபின் அவனது கிரீடத்தின் மீது நீ உதைக்கலாமோ ? என்ன பலத்தைக் கண்டு நீ அப்படிச் செய்தாய் ? இதோ அந்த துரியோதனனுக்குப் பதிலாய் நானே எதிர்த்து யுத்தஞ்செய்து உன்னைக் கொல்லுகிறேன். அப்பால் துவாரகைக்குச் செல்லுகிறேனென்று கலப்பையைக் கையிலேந்திஞர்.

இந்தப் பிரமாதத்தைக் கண்ணன் கண்டு அண்ணன் அடியில் வீழ்ந்து எழுந்து “இவ்விடத்தில் வீமனடித்த கதையால் வீழ்ந்துவிட்ட துரியோதனன் பாண்டவர்களுக்குச் செய்த பொல்லாங்குகளை இவ்வளவென்றெண்ணத் தொலையாது. அக்கினியிற் பிறந்த பேதையாகிய துரோபதையைச் சபையேற்றி அவளுடைய வஸ்திரத்தை யுரிந்து பங்கப்படுத்திவைத்தான். அக்காலத்தில் உங்களைப் போலொத்தவர்கள் கண்ணுல் பார்த்திருப்பீர்களாகில் இப்போது வீமன் உதைத்த உதையிலுங் கோடிப்பங்காக உதைத்து அன்றைக்கே உயிரை மாய்த்து விட்டிருப்பீர்கள். அந்தக் காலத்தில் வேறு திக்கில்லாமல் ஆ தெய்வமே யென்று இரைந்தழுது அந்த உத்தமி அங்கிருந்த இராஜர்களெல்லாரும் அறிய

பீமனுடைய கதையால் உனது துடைமுறிந்து இறக்கக் கடவாயென்று சபித்திருக்கிருள். அந்தப் பதிவிரதையினுடைய சாபச் சொல்லானது வீண்போகுமோ! இதன்றி, பூர்வத்தில் ஒரு முனிவர் இவன் துடை முறிந்திறக்கும்படி சபித்திருக்கிருர். விதி யிவ்வாறிருக்க பீமசேனனை வெறுப்பதிற் காரியமில்லை. மேலும் பாண்டவர்கள் இப்போது செய்த யுத்தத்தில் இந்தப் பாவியாகிய துரியோதனன் செய்த கொடுமைகளை ஆர் சொல்லத் தக்கவர்கள் அபிமன்யு என்னும் ஒரு சிறு குமரனை ஒண்டியாக வளைத்துக்கொண்டு கோடி வீரர்கள் குவிந்து நின்று நல்ல கைக்காரர்களாகிய கர்னன்-துரோணுச்சாரி இவர்களெல்லாரும் மறைந்து மாறுபாடாகப் பின்பக்கம் வந்து வில்லையும் தேரையு மழித்து ஆளைமுழுக்காட்டி உயிர் கலங்கி விழக்காட்டியது தர்மமோ! இப்பொழுதும் இந்தத் துரியோதனன் விதிகிழிந்து மாளாமல் பீமசேனன் தொடைமேல் அடித்ததிஞலேயே செத்தானே'' ? என்ற வாசுதேவனுடைய வார்த்தையை கேட்டு கோபமாறி நெடிய தேர்மேலேறி யுத்த பூமியைவிட்டு தெய்வகதி பெரிதென்று நினைத்து நைமிசாரண்ணியத்திற்குச் செல்ல, அங்குள்ள ரிஷிகள் பலராமருக்குத் தகுந்த மரியாதையுடன் யாகஞ் செய்விக்க, அதற்கு அவர் மெச்சி பிர்மக்கியானத்தை அவர்களுக்கு உபதேசித்து அவர்களுடன் அவபிருத ஸ்நானஞ்செய்து சந்தோஷ மனமுடையவராய் அவர்களிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு துவாரகாபுரிக்குச் சென்றனர்.



## எண்பதாவது அத்தியாயம்

குசேலர் ஸ்ரீ கிருஷ்ணரை கண்டதும், தாம் குருகுலவாசம் செய்தபோது ஆசார்யனும், சிஷ்யனு மிருக்கவேண்டிய முறைமையை வெளியிட்டதும் சொல்லப்படுகின்றது.

பரிக்ஷித்து மகாராஜனே! திருமாலுக்குத் தோழரும், பிரம்மத்தை நன்ருய் அறிந்தவர்களிற் சிறந்தவரும், மகா விரக்தராய் வஸ்துக்களி லாசை யற்றவரும், வெகுசாந்தரும், தவத்திற் சிறந்தவருமான குசேலனென்கிற பிராமணோத்தமர் ஒருவரிருந்தார். அவர் ஒருத்தரையும் யாசிக்காமல் தன்கிடையாய் நேர்ந்த ஆகாரத்தினிடத்தில் வெகு ஆசையுடையவராகி தருமத்தில் நின்றும் வழுவாது கிருகஸ்தாசிரமத்திலிருந்தார். அவருடைய மனைவி கற்புடையவர்கட்குள் சிறந்தவளாய் பர்த்தாவைப்போல அன்னமில்லாம லிளைத்து நரைத்து கூண்டான சரீரத்தை வாய்ந்தவளாய், தட்டிணுலுதிரும்படியான கந்தலாடையை உடுத்திக்கொண்டு வெகு தரித்திரத்தை அனுபவிக்கையிலும் கற்பு வழுவாமல் கொழுனருடைய ஆக்கினையின்படி பணிவிடை செய்வதில் வெகு வாஞ்சையுடையவளாய் பாகஞ்செய்கிற அன்னத்தைக் கணவனுக்கிட்டு அப் பாத்திரம் அலம்பின தீர்த்தத்தைத் தான் புசித்து எப்போதும் உபவாசத்துடனிருக்கிறவ ளாதலால் ஒருநாள் மூர்ச்சித்து விழுந்து மெய்மறந்து முகம்வாடி கை துவண்டு காலலேந்து மேனி குலேந்து நினைவுதப்பி வெகு நேரமிருந்து தெளிந்தெழுந்திருந்து இந்தத் தரித்திரத்தை எத்தனை நாளைக்கு நாம் அனுபவிக்கலாம்! என்ன செய்தால் தரித்திரம் நிவர்த்தியாகுமென்று யோசித்து பயந்து பயந்து அரையினில் சொற்ப ஆடையும் அச்சமும் உடையவளாதலால் கணவன் முன் வாரமல் சரீரத்தை மறைத்து வெளியினில் கொஞ்சம் முகந் தெரியும்படியாக மிகவும் பயபக்தியுடன் சொல்லுகிருள்:

தேவரீருக்குத் தோழராகியும், ஸ்ரீயப் பதியாகியும், மகா பிரம்மண்ணியராகியும், மகா தாதாவாகியும், தயாளுவாகியும், உலக பூச்சியராகியும், மகானுபாவராகியு மிருக்கின்ற ஸ்ரீ கண்ணபிரானை தேவரீரொருக்கா லெழுந்தருளிச் சேவித்தால் சகல புருஷார்த்தங்களும் பெறலாமென்று தோன்றுகின்றது. அப்பால் தமக்கிசைந்தபடி நடத்தலாமென, குசேலர் "இவள் சொன்னபடி செய்தால் ஜகதீஸ்வரனை

வாசுதேவனுடைய சேவை நமக்குக் கிடைக்கும், அந்தக் காட்டிலும், நமக்கென்ன புருஷார்த்தம் வேண்டும்" என நினைத்தவராய் அந்தக் கற்புடைய மங்கையரைப் பார்த்து வேந்தனிடத்திலும் சிசுவினிடத்திலும் கடவுளிடத்திலும் வெறுங்கையோடு போகக்கூடாது. அந்த ஸ்ரீ கிருஷ்ணன் அரசனாயுங் கடவுளாயு மிருப்பதால் வெறுங் கையோடு காணலாகாது. அதற்கு கிருகத்திலேதாவது இருக்கின்றதா வென்று கேட்க, இருக்கின்றது தருகிறேனென்று சொல்லி அந்த க்ஷணத்தில் ரிஷிகளுடைய நான்கு ஆசிரமத்திற்கேகி நான்கு பிடி அவல் வாங்கிக் கொண்டுவந்து அதனைக் கட்டிக்கொடுக்க வஸ்திர மில்லாமல் கிருகங்கடோறுந் திரிந்து அதற்கு ஆதாரமாய் வைக்க ஒருதுண்டு சம்பாதித்து அதனில் வைத்து அதன்மேல் அநேக கந்தல்களைச் சுற்றி அதன்மேல் மரவுரியைச் சுற்றித் தன் நாதனை அந்தண ரிடத்திற் கொடுத்தனள்.

அதைப் பெற்றுக்கொண்டு துவாரகைக்குப் பிரயாணமாய்ப் போகையில் மகா தரித்திரனாகியும் உபயோகமற்றவனாயு மிருக்கின்ற நமக்கு அந்த சர்வேஸ்வரனான ஸ்ரீ கிருஷ்ணனுடைய சேவை யெப்படி கிடைக்கப்போகிறதென்று பலவாருகச் சிந்தித்துக் கொண்டபடியே துவாரகையை யடைந்து அதன் சீரும் சிறப்பையும் கண்டு வியந்தவராய் ஸ்ரீ ருக்குமிணீ தேவியின் மாளிகையை அடைந்தனர். ஸ்ரீ ருக்குமிணீ தேவியுடன் நவரத்தின மயமான சப்பிரகூட மஞ்சத்தின்மீது எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவா னிந்தக் குசேலரைக் கண்டு எழுந்திருந்து அதிக வேகமாக ஓடிவந்து அவரைக்கண்டு ஆலிங்கனஞ் செய்து தமக்குத் தோழராய்ப் பிராம்மணசிரேஷ்டரா யிருக்கின்ற அந்தக் குசேலருடைய சரீர சம்பந்தத்தினால் ஆனந்த பாஷ்பங்களை உதிர்த்து தேகம் புளகிக்க அவர் கையைப்பற்றி அழைத்துக்கொண்டு தமது மெத்தையின்மீது உட்காரவைத்து அர்க்கிய பாத்திய முதலிய வஸ்துக்களைத் தாமே கொண்டுவந்து சாஸ்திர விதிப்படிக்குப் பூசித்து பரிசுத்தமான தீர்த்தத்தைக்கொண்டு அவரது திருவடிகளை விளக்கி அந்தத் தீர்த்தத்தைத் தமது சிரசில் தரித்து, உத்தமமான ஸ்ரீ கந்தத்தாலுந் திவ்ய புஷ்பங்களாலும் அலங்கரித்து, நான்கு பக்கத்திலும் அகிற் றூபங்களைப் போட்டு, சுகந்த தைலத்தினால் தீபங்களை வைத்து, புஷ்பங்களால் அர்ச்சித்து, திவ்யமான உண்டில்களை புசிப்பித்து தாம்பூலங்களைக் கொடுத்து உபசரித்தனர். பிறகு அவருடன்

சமமாக உட்கார்ந்து அவரது திருவடிகளைத் தமது மடி யினில் வைத்துக்கொண்டு வந்த இளைப்புத் தீரும்படியாக வருடினார். அந்தச் சமயத்தில் ஸ்ரீ ருக்குமணீதேவி கண்ணன் செய்த உபசாரங்களுக்குத் தானும் உடந்தையாக வெகு விநயத்துடன் சைத்தியோபசாரமாகத் திருவால வட்டம் சேவித்து சாமரம் வீசினாள்.

அப்போது ஸ்ரீ கண்ணபிரான் அம்மறையோனை நோக்கி நீர் குருகுல வாசஞ்செய்து சகல வித்தையுங் கற் றுணர்ந்து குருதக்ஷிணை கொடுத்தபின் உம் மனதுக்குகந்த மனையாட்டி வாய்த்தனரா? தேவரீர் மண்ணாசை பொன் னாசை பொருளாசை அற்றவரென்றும், நானெப்படி ஒன் றிலும் சம்மந்தப் படாமலிருக்கிறேனோ அப்படி யிருக்கத் தக்கவரென்றும் நான் அறிவேன். நம்மிருவருக்கும் மகா சிரேஷ்டரான குரு வாய்த்தனர் அல்லவா? நாம் அந்தக் குருவினிடத்தில் வாசஞ்செய்கிறபோது ஒருநாள் நம்மை குருபத்தினி எரிகரும்பு கொண்டுவரச் சொன்னதற்கு காட்டிற்குப்போய் விறகு வெட்டி சூரியாஸ்தமனமாகிற சம யத்தில் ஆளுக்கொரு சுமை எடுத்துக்கொண்டு புறப்படு கையில், இருளுடன் மழையுங் காற்றும் இடியும் மின்னலு முண்டாய் நடுக்கமெடுத்து திக்கு விதிக்குகள் தெரியாமல் ஒருவர் கையை ஒருவர் பற்றிக்கொண்டு இராத்திரி முப்பது நாழிகையும் மழையில் நனைந்து அலைந்திருக்க நமது குரு நம்மைத் தேடிக்கொண்டு காட்டிற்கு வந்து வருத்தப்பட்ட நம்மைப் பார்த்து வியப்படைந்து பாலர்களான நீங்க ளென்னிமித்தமாக இஷ்டமான பிராணனைக்கூட வெண் ணிப் பாராமல் இப்படியும் பணிவிடையே பெரிதாக வெண்ணிச் செய்தீரே! உங்களிடத்திலெனக்கு மகத்தான சந்தோஷமாயிற்று, உங்களுக்குச் சகல வேதங்களும் சாஸ் திரங்களும் உபநிஷத்துக்களும் தெரிந்து, இகலோகத் திலும் பரலோகத்திலும் சகல பயன்களையும் சுலபமாக அடையக்கடவீர்களென்று அனுக்கிரகித்தாரே அதுகளையும் நமது தோழன் மார்களையும் அந்தக் குருவினிடத்தில் கற் றுணர்ந்த கல்விகளையும் மறவாமல் நினைத்துக் கொண் டிருக்கிறீரா வென்று வினவுகிற ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, ஸ்ரீ சுதாமாவென்னும் பெயருடைய குசேலர் விக்கியாபனஞ் செய்கின்றார்.

சத்திய சங்கல்பனாய் ஜகத் குருவா யிருக்கின்ற தேவரீ ருடைய கிருபை அடியேனுக்கு பால்யத்தில் தானே வாய்த்த

படியால் அப்பொழுதே சகல அக்கியானமும் பாபமுந் தொலைந்துபோய் பரிசுத்தனாய் இகத்திலும் பரத்திலும் அடைய வேண்டிய புருஷார்த்தங்களை சுலபமாக அடைந்தேன். ஆனால் வேத சொரூபியான கருடபகவானே தேவரீருக்கு வாகனமாயிருக்க நானும் வேத சாஸ்திரங்களைக் கற்றுணர்வதற்குக் குருகுலவாசஞ் செய்தேனென்பது மாத்திரம் உலக விடம்பனமா இருக்கிறது என்று பால்யத்திற் செய்த கிருத்தியங்களை நினைத்துக்கொண்டு சம்பாஷித்தார்கள்.



## எண்பத்தொன்றாவது அத்தியாயம்



குசேலர் சகல சம்பத்தும் உண்டாகப் பெற்றதைச் சொல்லப்படுகிறது.

உத்தரா நந்தனனே! சர்வபூதாந்தர்யாமியான சுவாமி அந்த குசேலர் கொண்டுவந்த அவலை தமக்குக் கொடுக்க வெட்கப்பட்டிருப்பதையும், ஐஸ்வரிய நிமித்தமாய் தம்மை ஒருக்காலும் பூசியாம லிருப்பதையும், ஐசுவரியத்தை விரும்பி மனைவி அனுப்பியதைக் கொஞ்சமேனும் சிந்தையில் வையாம லிருப்பதையுந் தெரிந்துகொண்டு, இவருக்கு இந்திரன் முதலிய தேவர்களுக்கும் அரிதான சம்பத்தைக் கொடுக்க வேண்டுமென்று நிச்சயித்து அந்தக் குசேலரை நோக்கி புன்னகையுடன் “தேவரீர் வெகுநாள் பொறுத்து இவ்விடத்திற் கெழுந்தருளியபடியால் அடியேனுக் கேதாவது பலகாரங்கொண்டு வந்திருக்கவேண்டுமே, அதைக் கொடுத்தருளுங்கள். அற்பமானாலும் அன்புடன் கொடுப்பதுதான் எனக்கு விசேஷமென்று சொல்லியும், கொடுக்க வெட்கப்பட்டு தலையைக் குனிந்திருப்பதைச் சுவாமி பார்த்து அவர் கையிலிருந்த அவல் முடிச்சை தாமாகவே பலவந்தமாக வாங்கித் தமது மடியில் வைத்துக் கொண்டு அதை அவிழ்த்துப் பார்த்து ஓ எனது ஆப்த நண்பரே! எனக்கு மிகவும் இஷ்டமான இந்த அவலைக் கொண்டுவந்தும் எனக்குக் கொடாம லிருந்தீரல்லவோ? வெகு போக்கியமான இந்த அவல் எனது குக்ஷியிற்போனால் அநேக கோடிப் பிராணிகளைத் திருப்தி செய்விக்குமென்று சொல்லி ஒரு பிடி அவலை எடுத்து பக்ஷித்து இரண்டாவது பிடி எடுக்கிறபோது ஸ்ரீ ருக்மணீதேவி தடுத்து அதை தான் பெற்றுக்கொண்டனள். ஒரு பிடி அவலுக்கே இகத்திலும்

பாத்திலுமுண்டான சகல சம்பத்துகளு மிவருக்குச் சுவாதீனமாகப் போயிற்று. இந்த இரண்டாவது பிடி அவலுக்கு நாமல்லவோ வசியமாகவேண்டுமென்கிற கருத்துகொண்டவளாய் புசிக்கவேண்டாமென்று ஸ்ரீ ருக்குமணீ தடுத்ததைச் சுவாமி அறிந்தவராய், அந்தக் குசேலரை ஒருநாள் வைத்திருந்து மறுநாள் காலையில் வெகுதூரங் கொண்டுவந்து வழியனுப்பிவிட்டு திரும்பினர்.

குசேலர் வருகிற வழியில் பலபலவாக ஸ்ரீ பகவானது உபசாரத்தை நினைந்து நினைந்து ஆனந்தக் கண்ணீர் பொழிய அகங்குழைந்தனர். இவ்வளவும் செய்த இறைவன் நமக்கு வேண்டியபொருளை ஏன் கொடுக்கவில்லை. ஓகோ! நாம் ஐஸ்வர்யத்தினல் கர்வித்து கெட்டுவிடுவோமென்றே இவ்விதம் செய்தார்; என்று நினைத்தபடி தமது ஆசிரமத்திற்கு வந்தார். அப்போதந்த ஆசிரமம் மகா ஒளியினை வாய்ந்த ஆயிரம் ஸ்தூபிகளுடன் நான்குபக்கத்திலும் அலங்காரமா யிருக்கின்ற நந்தவனத்தில் மயில்கள் குயில்கள் முதலிய பக்ஷிகள் மனதை அரிக்கும்படி கூவ அல்லி ஆம்பல் கருநெய்தல் தாமரை முதலியவைகளோடும் அன்னப் பறவைகளோடும் பூரணமாய் நிறைந்து தெளிந்திருக்கிற அநேக தடாகங்களோடும், சகலாபரண பூஷிதர்களாய் அப்சரமாதர்களை நிகர்த்த ஊழியப் பெண்களால் வியாபிக்கப்பட்டும், மிகவுந் தேஜோமயமாயிருக்கிற தமதாசிரமத்தைப் பார்த்து இது இன்னதென்று அறியமாட்டாமல் பிரமித்து கொஞ்ச நிதானத்தின்பேரில் கிரகித்துக்கொண்டு மெல்லென அருகில் வருகிறவரை ஊழியப் பெண்கள் பார்த்து வேகமாக வோடி குசேலருடைய வரவை அவரது மனைவியோடுரைக்க, அதுகேட்ட அம்மகா பதிவிரதை வெகு சந்தோஷமாய் சகல லக்ஷணத்துடன் விளங்குகிற ஸ்ரீ மஹா லக்ஷ்மியைப்போல எதிர்கொண்டுவந்து சாக்ஷாத் தேவதையைப்போல சிறப்பாய் விளங்குகின்ற தன்து கணவரைக் கண்டு கண்ணை மூடிக்கொண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்து அர்க்கியபாத்திய முதலியவற்ருற் பூஜித்து எதிரில் நிற்பவளைத் தமது மனைவிதானென்று நிதானித்து அவளுடன் இந்திரனுடைய கிரகம்போலிருக்கிற தமது கிரகத்தினுள் பிரவேசித்து அனேக விசித்திரமா யிருக்கிற மெத்தை மேடை மாட மாளிகைகள் அணி அணியாயிருப்பதையும் நவரத்தின மிழைத்த மஞ்சத்தின் மீதில் திவ்ய பீதாம்பரத்திற் தொப்பாகிய மெத்தை திண்டு தலையணைகளும் போட்டு, பவழக்கால் நாட்டி, முத்துச் சரங்களை ஜாலராகத் தொங்க

விட்டு, தந்தத்தினல் செய்து நவரத்தின மிழைத்த அனேக ஆசனங்களும் சொர்னக்காம்புடைய அனேக குடைகளுஞ் சாமரங்களும் படிகமயமா யிருக்கிற சுவர்களில் அனேக இரத்தின தீபங்களை வைத்து விளங்குகின்ற தமது கிரகத்தைப் பார்த்து, தாம் முன்னிருந்த இருப்பையும் நினைத்து; இப்படி சம்பத்து உண்டாகிறதற்கு நாமொன்றும் பிரயத்தனிக்கவில்லையே! ஸ்ரீ கிருஷ்ணன் எனது கருத்திற் கிசைந்தபடி நடத்தி நாம் சொல்பமாய் ஒரு பிடி அவல் கொண்டு போனதை மேருவாக எண்ணி நமக்கிவ்வளவு சம்பத்தை கொடுத்தும் அதற்கிணை யாகாதென்று நம்முடன் சொல்லாமலிருந்துவிட்டார். கருணைக்கடலான அந்த சுவாமியை ஒரு தரம் சேவித்தாலும் ஒருதரம் அவர் நாமத்தைக் கீர்த்தனஞ் செய்தாலும் அதை வெகுவாக எண்ணிக் கடைத்தேற்றத் தக்கவர் அந்த பெருமான் என்று தமக்குள்ளே நிச்சயித்து அந்தப் பகவானிடத்தில் தானே பக்தி செலுத்தி முடிவில் தமது மனைவியுடன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய பதவியை அடைந்தார்.



## எண்பத்திரண்டாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ணபகவான் சூர்ய கிரகணத்திற்கு சகல பந்துக்களுடன் சியமந்தபஞ்சகத்தில் ஸ்நானம் செய்ததும், கோபிகைகளுக்கு ஞானோபதேசம் செய்ததும், அதனால் அவர்கள் மோக்ஷம் பெற்றதும் சொல்லப்படுகின்றது.*

பற்குன பௌத்திரனே! ஸ்ரீ கிருஷ்ண பகவான் துவாரகாபுரத்தில் வசிக்கிறபோது ஜோதிடரிற் சிறந்த கற்காசாரியர் பூரண சூரிய கிரகணம் வருகிறதென்று தெரியப் படுத்த, அதுகேட்டு ஸ்ரீ பலராம கிருஷ்ணர்கள் தம்பதி சமேதர்களாய் சகல யாதவர்களையும் புஷ்பக விமானம் போன்ற இரதத்தின் மீதேற்றிக்கொண்டு சியமந்த பஞ்சகமென்கிற புண்ணிய தீர்த்தத்திற்குச் சென்று, இரதம் விட்டிறங்கி வேதியர்கள் மூலமாய்ச் சங்கற்பித்துக்கொண்டு, அந்தப் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, உபவாசத்துடன் அந்தணர்களுக்கு அநேகவிதமான தானங்களைக் கொடுத்து திருப்தி செய்து, சுத்தமண்டல ஸ்நானமான பின்பு சகலரும் போஜனஞ்செய்து ஒரு மரத்தினிழலில் வீற்றிருந்தார்கள். அப்போது குந்திதேவி தனது சகோதர

னை வசுதேவர் தேவகி முதலிய சகல யாதவர்களையுங் கண்டு களித்து வசுதேவரைப் பார்த்து, நாங்கள் மகத்தான ஆபத்தை அடைந்திருக்குங் காலையில் நீங்கள் என்னை விசாரிக்காம லிருந்தீர்களே என்று வருந்தினாள். அதுகேட்டு வசுதேவர் உன்னிடத்தில் விசேஷ அன்புடையவனா யிருந்தும் எமக்கு கம்சனால் நேர்ந்திருந்த துன்பத்தினால் உன்னை விசாரிக்க முடியாம லிருந்தேன். அதை மன்னிக்கவேண்டியதென்று சமாதானஞ் சொன்னார். பீஷ்மர்-துரோணர் - கிருபர் - திருதராஷ்டிரன் - துரியோதனன் - முதலியவர்கள்- பாண்டவர்கள் - கேகயர்கள் - விராடன்-துருபதன்-விதுரன்- பீஷ்மகன்-நக்னசித்தன் முதலிய சகல அரசர்களும் வந்து ஸ்ரீ கிருஷ்ணனுடைய சகல லட்சுமீ விலாச ஸ்தானமாகிய திருமேனியைக்கண்டு, தங்கள் மனைவியர்களுடன் சேவித்து, அந்தக் கண்ணபிரானால் பூசிக்கப்பட்டனர். பின் நந்தகோபர் முதலிய கோபாலர்களும் ஸ்ரீ கிருஷ்ணனண்டையில் வந்தார்கள். அவர்களைக் கண்டு வெகு சீக்கிரமாக ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள் சகல யாதவர்களுடன் எழுந்திருந்து எதிரில் வந்து சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து அவர்களுடைய க்ஷேமங்களை விசாரித்தார்கள்.

அத் தருணத்தில் நந்தகோபரும் வசுதேவரைக் கண்டு ஒருவர்க்கொருவர் ஆலிங்கனஞ்செய்து ஆனந்த பரவசர்களாயிருக்கையில் யசோதை ஸ்ரீ கிருஷ்ண ராமர்களைக் கண்டு வெகு ஆவலுடன் அழைத்து மடியில் வைத்துக்கொண்டு அவர்களை வெகுநாளாய்க் காணாதிருந்த கிலேசத்தை விட்டு வெகு சந்தோஷமாய் உச்சி முகந்து முத்தாடி ஆனந்தித்துக் கொண்டிருக்கிற சமயத்தில். தேவகி ரோகிணி தேவிகள் இரண்டுபேரும் யசோதை அண்டையில் வந்து அவளை நோக்கி நீ இந்தப் பிள்ளைகளிரண்டையும் உன் பிள்ளைகளாகப் பாவித்துக் காப்பாற்றினதற் கிணையாக நாங்களென்ன செய்யப்போகிறோம் என்று சொல்லிக்கொண்டிருக்கையில், கோபிகைகள் யாவரும் ஸ்ரீ கிருஷ்ணனண்டையில் வந்து தாங்களவரை வெகுநாளாய்க் காணாமலிருந்த விசனத்தை நிவர்த்தித்து அவரைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து திருப்தி பிறவாமல் கண்கொட்டாமல் பார்த்து ஆநந்தத்தினால் தங்கள் இருதயத்திலிருக்கின்ற கமலத்தி லெழுந்தருளி யிருக்கிறதாகப் பாவனைசெய்து தியானஞ் செய்தார்கள். அவர்களுடைய கருத்தைக் கண்டு ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவர்களையேகாந்தத்தில் அழைத்துக் கொண்டுபோய் அவர்களுக்குச்

சந்தோஷம் வரும்படியாய்ப் புன்னகையுடன் அருளிச் செய்கிறார் :

எனதன்புள்ள தோழிமார்களே! வசுதேவ தேவகீ முதலியவர்களுடைய துன்பத்தை நிவர்த்திக்க மதுரைக்குப் போய் வரக்கூடாமல் தடைப்பட்டிருந்த என்னைத் தூஷிக்காமல் நினைக்கிறீர்களா? நாம் யாவருந் தெய்வத்திற்குச் சுவாதீனப்பட்டவர்களேயன்றி சுதந்திரர்களல்ல. நம்மைக் கூட்டி வைத்ததும் இப்போது பிரித்துவிட்டதும் தெய்வச் செயலேயன்றி நம்மால் வருகிறதல்ல. மனைவி மைந்தர்களிடத்தில் புருஷனானவன் அன்பு செலுத்தி என் மனைவி என் மைந்தனென்றும் பாராட்டி அவர்களால் வெகு பிரயோஜனத்தை அடைவதுபோலப் பிரமிக்கிறான். அந்த மனைவி எங்கேயிருந்தவள்? இவனுக் கெவ்விதமாய்க் கிடைத்தாள்? இதெல்லாம் ஈஸ்வரனுடைய கட்டளையேயன்றி நம்மாலொன்றுமில்லை. இந்தப் புத்திரன் மனைவிகள் தேகத்திற்குப் பாத்தியஸ்தர்களேயன்றி, ஆன்மாவுக்குப் பந்துவாகமாட்டார்கள். உயிர்போய்விட்டால் உலகத்தார் மெச்சும்படி ஒருதரம் அழுவார்கள். இப்படியே பெண்களுக்கும் புருஷர்கள் சாஸ்வதமாக மாட்டார்கள். ஆன்மாவுக்குப் பந்து ஸ்ரீமந் நாராயணனுதலால் புத்திமான் மகா பாகவதர்களிடத்தில் அன்பு செலுத்தி அவர்களுடைய அருள்பெற்று மோக்ஷமடைவான். சர்வ சக்திமானான ஈஸ்வரன் என்னை உங்களுடன் கூட்டுறவுசெய்து பிரித்து விட்டார். உங்களிடத்திற்கு யான் வரவேண்டுமென்று வெகுவித யத்தினஞ் செய்தாலும் நிர்ப்பந்தமானவேலையை பகவான் ஜனிப்பிக்கிறார். நானுங்களிடத்தில் வாராமலிருந்ததனாலும் ஒரு குணமிருக்கிறது. அதாவது என்னை ஆதிமத்தியாந்தம் அற்றவனையும் முத்தொழிலுடையவனையுமிருக்கிற ஈசுவரனென்றறியுங்கள். என்னிடத்தில் நீங்கள் ஈஸ்வரனென்று பக்தி செய்யாவிடினும், பர்த்தாவென்றாவது பக்தி செலுத்தியபடியால் சாசுவதமான பரமபதத்தை அடைவீர்களென் றருளிச் செய்ததைக் கேள்வியுற்று, கோபிகைகள் அந்தச் சுவாமியை நோக்கி யோக சிரேஷ்டர்களான சநகாதிகளாலே தியானஞ் செய்யத்தக்கவரான தேவரீருடைய சாரணாவிந்தத்தில் இடைவிடாமல் பக்தி யிருக்கும்படி கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்து அந்தத் தியானப் பிரபாவத்தினல் பகவானுடைய திருவடிகளை அடைந்தார்கள்.



## எண்பத்தி மூன்றாவது அத்தியாயம்

*ஸ்ரீ ருக்குமிணீதேவி முதலியவர்கள் ஸ்ரீ கிருஷ்ணன் தங்களை விவாகஞ் செய்த கதைகளைத் துரோபதைக்குச் சொல்லியதை சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

பார்த்திப பௌத்திரனான பரிக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீ கிருஷ்ணன் கோபிகைகளுக்கு கியானோபதேசஞ் செய்த பின்பு, தர்மபுத்திர ரண்டையிற்சென்று அவரவர்களுடைய க்ஷேமங்களை விசாரிக்க அப்போதவர்கள் சுவாமியை நோக்கி தேவரீருடைய திருவடித் தாமரைகளில் உண்டாயிருக்கிற தேனை பாகவதர்கள் மூலமாய் பானஞ்செய்கிற அடியேங்களுக் கொருநாளும் தீமை யுண்டாகாதென்று சொல்லிக்கொண் டிருக்கிற தருணத்தில், ஸ்ரீ கிருஷ்ண பகவான் காதினில் உரைக்கும்படி துரோபதை ஸ்ரீ கிருஷ்ண சுவாமியின் மனைவியர்களான ஸ்ரீருக்குமணீதேவி முதலியவர்களை நோக்கி உங்கள் யாவரையும் சுவாமி யெவ்விதம் விவாகஞ்செய்தருளி னாரோ அதை விசிதமாகத் தெரியச்சொல்லவேண்டுமென்று வினவ, ஸ்ரீ ருக்குமணீதேவி உரைக்கலாயினள்: அம்மா திரௌபதா! என்னைச் சிசுபாலனுக்கு விவாகஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று சகல அரசர்களும் யத்தனமாயிருக் கையில் என்னை இராக்ஷச விதியை யனுசரித்து ஸ்ரீ பகவான் எடுத்துக்கொண்டுவந்து தமது திருவடிப் பணிசெய்ய அங்கீ கரித்தா ரென்றாள். அப்பால் சத்தியபாமை சியமந்தகமணி சம்பந்தமாய் தன்னை மணந்த கதையை விவரமாய் உரைத் தாள். அப்பால் காளிந்தி சகியே! கன்னிகை பருவத்தில் ஆதிமூலப் பொருளென்னை மணம்புரிய வேண்டுமென்று தவஞ்செய்த என்னிடத்தில் அருள்கூர்ந்து அர்ச்சுன சமேதராய் இரதத்தின் மீதேற்றிக்கொண்டேகி தாசியத்திற் குரியவளாக என்னை அங்கீகரித்தாரென்றாள், மித்திரவிந்தை எனது சுயம்வரத்தில் சகல அரசர்களையும் அவமதித்து என்னை இரதத்தின்மீ தேற்றிக்கொண்டேகி விவாகஞ்செய்து கொண்டா ரென்றாள், இப்படி எல்லா தேவிமார்களும் தங்களை ஸ்ரீ பகவான் மணம்புரிந்து இயற்றிய லீலா வதிசயங்களை விவரமாகக் கேட்டவர்கள் கேட்டு ஆனந்திக் கும்படி மொழிந்தார்கள்.

## எண்பத்தி நான்காவது அத்தியாயம்

சகல பிரமரிஷிகளும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சேவைகார்த்தமாக குருக்ஷேத்திரத்திற்கு வந்ததும், வசுதேவர் தேவ யக்யம் செய்ததும் சொல்லப்படுகிறது.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீ கிருஷ்ண பகவானது கல்யாண கதைகளை குந்தி முதலியவர்கள் கேட்டு ஆனந்தித்துக் கொண்டிருக்கையில் வியாசர்-நாரதர்-சியவநர்-தேவலர்-அசிதர்-விசுவாமித்திரர்-சதாநந்தர்-பரத்துவாசர்-கௌதமர்-பரசுராமர்-அவருடையசிஷியர்கள்-வசிஷ்டர்-சால்வர்-பிருகு-புலஸ்தியர்-புலகர்-அத்திரி-மார்க்கண்டேயர் - பிருகஸ்பதி-திவிதர்-திருதர் - சதுரர் - பிரம்மபுத்திரர்களான ஷோடச பிரஜாபதிகள்-சநகாதி யோகிகள்-அங்கீரசு-அகஸ்தியர்-யாக்ஞவல்கியர்-வாமதேவர் முதலிய ரிஷிகள் தர்மத்தை நிலைநிறுத்துவதற்கு அவதரித்திருக்கின்ற ஸ்ரீராமகிருஷ்ணர்களைச்சேவிக்க வேண்டுமென்று குருக்ஷேத்திரத்திற்கு வந்தார்கள். கிருஷ்ணன் முதலிய சகல அரசர்களுங் கண்டு வேகமாக எழுந்திருந்தெதிர்கொண்டுபோய் அர்க்கிய பாத்தியாதிகளால் பூசித்து ஆசனத்தி லெழுந்தருளச்செய்து குசலங் கேட்டு அந்த மகா சபையிலிருக்கிற யாவரையும் பார்த்து ஜகதீஸ்வரனை கண்ணபிரான் அருளிச்செய்கிறார்: கேளீர் பிர்ம வித்துக்களான மகா ரிஷிகளே! புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவர்களும் விக்கிரக ரூபியான பகவானைத் தரிசித்தவர்களும் சீக்கிரத்தில் பயன் பெற்றார்கள். பாகவதர்களை சேவித்தவர்கள் சகல பாபங்களையும் போக்கிக்கொண்டு மோக்ஷத்திற் குரியவர்களாவார்கள். மகா பாகவதர்களான உங்களுடைய சேவை எங்களுக்குக் கிடைத்தபடியால் நாங்கள் ஜன்ம மடைந்ததற்கு இன்றைக்குத்தான் பயனடைந்தோம் என்றருளிச்செய்த ஸ்ரீ பகவானைப் பார்த்து அம்மகா ரிஷிகள் மனங்கலங்கி வெகுநேர மாலோசித்து தேவரீருடைய அனுக்கிரகத்தினால் சகல வேதங்களை யுணர்ந்திருந்தும் யாங்கள் தேவரீரெங்கும் நிறைந்த திருமேனியென்பதை மறந்து பிரமிக்கும்படிச் செய்தீர். இந்த யாதவர்கள் அருகிலிருந்தும் தேவரீருடைய அருளுக்குப் புறம்பாயிருப்பதினால் காக்ஷிக்கும் புறம்பாகவே யிருக்கின்றார்கள். அடியேங்கள் தொலைவிலிருந்தும் யாங்கள் செய்த தவப்பேற்றினால் தேவரீருடைய அருளுக்குரியவர்களாயிருந்து காக்ஷிக்கும் பாத்திரர்க

ளானேம் என்று சகல ரிஷிகளும் சுவாமியைப் பிரதக்ஷணஞ் செய்து தண்டன் சமர்பித்து அவரிடத்தில் விடைபெற்று பிரயாணமாயிருக்க வசுதேவர் அவர்களை வணங்கி சகல கர்மத்தில் நின்றும் விடுபடுவதற்கு எந்தகர்மஞ் செய்யவேண்டும். அதை எனக்குபதேசிக்கவேண்டுமென்று கேட்டனர்.

நாரதர் சொல்லுகிறுர்: "பிரம்மத்தினுடைய தத்துவத்தை யறிந்த நம்மைப்போலொத்தவர்களிப்போதந்த பகவத் வாக்கியத்தைக் கேட்டுப் பிரமித்திருக்க, அந்த பகவானை இந்த வசுதேவர் கேவலம் புத்திரனென்று பிரமித்திருப்பது மன்றி, அருகிலும் வாசஞ்செய்கிறபடியால் அவரைக் காட்டிலும் நம்மைப் பெரியோர்களௌண்றெண்ணி கேட்டதையும் சுவாமி அங்கிகரித்திருந்தமையால் அவர் கேள்விக்கு நாம் உத்தரஞ் சொல்லவேண்டியதா யிருக்கின்றது" என்று கூறினர்.

பிறகு, ரிஷிகள் யாவரும் அந்த வசுதேவரை நோக்கி மிகவும் அன்போடுபாகவதாராதனஞ்செய்து வந்தால் அதற்கு மிஞ்சின கர்மமொன்றுமில்லை. அந்தக் கர்மஞ் செய்வதில் ஒருபயனையும் அபேக்ஷியாமல் பகவத் பிரீதிசெய்துவிட்டால் மேன்மையான பயன் பெருவன். நீர் குருவுக்கு பணி செய்து ரிஷிகளுடைய கடனையும், மணம்கொண்டு புத்திரர்களைப்பெற்று பிதுருக்களுடைய கடனையும் நிவர்த்தியாக்கினீர். இனி யாகஞ்செய்து தேவர்களுடைய கடனையும் நிவர்த்தித்துக்கொள்ளுமென் றுரைத்த ரிஷிகளுடைய கருத்திற் கிசைந்து அவர்களை நீங்கள் ரித்துவிக்குகளாயிருந்து நடப்பிக்கவேண்டுமென்று நிறுத்தி யாதவர்களை யாகத்திற்குரிய வஸ்துக்களைச் சேகரியுங்களென் ருக்கியாபிக்க, அவர்களு மவ்வண்ணம் நிறைக்க, வசுதேவருக்கு க்ஷவரஞ்செய்வித்து மையிட்டு நவநீதம்பூசி தீட்சை செய்வித்து மனைவியர்களுடன் அக்கினியின் ஓம முதலிய கிரிகைகளை விதிப்படி முடித்து பதினெண் வாத்தியங்களுடன் அவபிருத ஸ்நானஞ் செய்வித்தார்கள். யாதவர்கள் பாண்டவர்களுடன் வேதியர்கட்கு தக்ஷிணைகொடுத்து திருப்திசெய்வித்து அவர்களா சீர்வதிக்கப்பெற்றுக் களித்திருந்தனர். பிறகு சகலரும் தத்தமது இருப்பிடங்கள் செல்ல ஸ்ரீ பகவான் முதலியவர்கள் துவாரகாபுரஞ் சென்றனர்.



## எண்பத் தைந்தாவது அத்தியாயம்

கம்சனுல் கொல்லப்பட்ட ஆறு புத்திரர்களை வசுதேவர்-தேவகி விரும்பினபடி கொண்டுவந்து விட்டு சந்தோஷ படுத்தியதும் சொல்லப்படுகின்றது.

பரிக்ஷித்து மகாராஜனே! ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவரும் வசுதேவரை சாஷ்டாங்கமாகச் சேவித்து வெகு விநயத்துடன் நிற்கிற புத்திரர்களிடத்தில் பக்தி கூர்ந்து ரிஷிகளுடைய வார்த்தைகளை நினைத்துக்கொண்டு, அவர்களை நோக்கி நீர் அவதரித்த காலையில் அடியேனுக்கு மூன்று ஜன்மத்தினுடைய காரணத்தைத் தெரியப்படுத்தி நிஜரூபத்தை காட்சி கொடுத்திருந்தும், மாயையால் மறைக்கப்பட்டு சமீபத்திலிருக்கிற தேவரீருடைய மகிமையை மறந்து, கேவலம் புத்திரனென்றே யெண்ணி நரகத்திற் குரியதாயும் அனேக ஜன்மங்களுக்கு இடமாயு மிருக்கிற இந்தச் சம்சாரத்தில் சிக்கி, நாமில்லாவிடில் இவர்களைக் காப்பாற்றுகிறவர்க ளில்லை யென்று பிராந்திகொண்டு சுழலுகிறேன். எனக்கு சம்சாரத்தினிடத்தி லுண்டாயிருக்கின்ற ஆசையை ஒழிப்பித்து சீர்திருத்தி முக்தியுண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று சாஷ்டாங்கமாகச் சேவித்து விநயத்துடனிற்கிற வசுதேவரை நோக்கி கண்ணபிரான் அசையும்பொருள் அசையாப் பொருளா யிருக்கின்ற இந்தச் சமஸ்த பிரபஞ்சங்களிடத்திலும் சர்வாந்தரியாமியான ஈஸ்வரன் பரவியிருப்பது போல என்னிடத்திலும் பரவி யிருக்கின்றூர். அப்படியிருக்க என்னை சாக்ஷாத்தான ஈஸ்வரனென்று பாவனைசெய்து துதிப்பதுபோல் யாவரிடத்திலும் பக்தி செலுத்துவீராகில் மோக்ஷத்திற் குரியவராவீரென்று அருளிச்செய்த சுவாமி வார்த்தையைக் கேட்டு களித்திருக்கையில், தேவகி தேவியானவள் ஸ்ரீ கிருஷ்ணபிரானை நோக்கி நீர் குருதட்சணையாக இறந்துபோன மைந்தனை குருவுக்குத் தந்தது போல் கம்சனுல் கொல்லப்பட்ட புத்திரர்க ளறுவரையும் பார்க்க விரும்புகிறேன்; கிருபை செய்ய வேண்டுமென்று சொல்லினள். அதற்கிசைந்து ஸ்ரீ ராமகிருஷ்ணர்க ளிருவரும் பாதாள லோகஞ்சென்று பலிச்சக்கிரவர்த்தியினுடைய சபைக்கேக, அப்போது பலிச்சக்கிரவர்த்தி இவர்களைப் பார்த்து வெகு களிப்புடன் அர்க்கிய பாத்திய முதலியவற்றூற் பூசித்து ஆசனத்தி லெழுந்தருளச் செய்து "சகல வேதங்களுந் தேடிக் கண்டு பிடிக்க ஒண்ணுத

மகிமையை வாய்ந்த தேவரீர் எளியேனை நாடிவந்த காரண மேது" என்று வினவ, ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லுகிறார்:

சுவாயம்பூ மனுவந்தரத்தில் மரீசிப் பிரஜாபதிக்கு உணை யென்கிற மனைவியிடத்தில் ஆறு புத்திரர்கள் பிறந்திருந்தனர். பிரமன் சரஸ்வதியைச் சிருஷ்டித்து மனைவியாக்கிக் கொண்டதற்கு அவர்கள் பரிகாசஞ் செய்தபடியால் அசுரர்களாகும்படி பிரமன் சபித்தனன். அதனாலவர்கள் இரண்ய கசிபனுக்குப் புத்திரர்களாய் பிரகலாதனனுக்குத் தம்பிகளாய்ப் பிறந்து தந்தையைப்போல் தாங்களும் அகண்ட சாம்பிராச்சியத்தை அநுபவிப்பதற்குத் தவஞ் செய்தார்கள். அசுரர்கள். அவர்களைப் பந்தித்து பாதாளத்தி லழுத்தினார்கள். அவர்கள் ஆறு மனுவந்தரம் பாதாளத்தில் கிடந்து ஏழாவது மனுவந்தரத்தில் நமது யோக மாயையால் கிரகிக்கப்பட்டு தேவகீ கற்பத்தின் வழியாகப் பிறப்பித்தவர்களைக் கம்சன் உடனே சங்கரித்தான். அவர்கள் இவ்விடத்திலிருப்பதால் கொண்டு வரவேண்டுமென்று சொல்ல, அவர்களறுவரையும் அதிசீக்கிரத்தில் சுவாமி சந்நிதியிற் கொண்டு வந்துவிட்டுப் பலிச்சக்கரவர்த்தி பணிந்து நின்றனன். அவர்களை சுவாமி தேவகியிடத்திற் கொண்டுவந்து விட்டார். தேவகி தேவி அப்புத்திரர்களைக் கண்டு களிப்படைந்து பகவன் மாயையால் முலைகளிற் பால் சுரந்து வீச ஆவலுடன் அவர்களை யெடுத்து மடியில் வைத்து உச்சி முகந்து முத்தாடி முலைகொடுத்தனள். முன்பு சுவாமியினாற் பாணஞ் செய்திருந்த முலையை இப்போதிவர்கள் உண்ட பிரபாவத்தினாலும் அவருடைய திருக்கண்ணோக்கம் பாலித்தபடியினாலும் அவர்கள் சாப விமோசனர்களாய் திவ்விய தேகத்தையடைந்து வசுதேவர் தேவகிதேவி ஸ்ரீ ராமகிருஷ்ணர்களாகிய இவர்களிடத்தில் விடைபெற்று தேவர்களைப்போல விமானாரூடர்களாய் சொர்க்கத்திற்குச் சென்றார்கள்.



## எண்பத்தாருவது அத்தியாயம்



*விஜயன் தீர்த்தயாத்திரை செய்ததும், கண்ணபிரானுடைய சகாயத்தைக் கொண்டு சுபத்திரையை மணம் செய்ததும் சொல்லப்படுகிறது.*

பரம பாகவதரான பரிக்ஷித்து சுகயோகியைப் பார்த்து தனது பாட்டனை தனஞ்சயன் கண்ணபிரானுடைய சகோதரியான சுபத்திரா தேவியை விவாகஞ்செய்த விவரத்தை யுரைக்கும்படி வேண்ட, ஸ்ரீ சுகர் உரைக்கலாயினர்: அர்ச்சுனன் ஒரு காரணத்தில் தீர்த்த யாத்திரைக்குப் பிரயாணப்பட்டு சகல புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து பிரபாச தீர்த்தம் வந்து அதிலும் ஸ்நானுதிகளைச் செய்து, அன்றிராத்திரிப் படுத்திருக்குங்கால் யாதவ குலத்தானுகிய கதனென்பான் சுபத்திரையின் ரூப முதலானவைகளைக் குறித்துச் சொல்லியிருந்ததை நினைத்து அவளைப் பார்க்கக் கருத்துக்கொண்டு யாருந் தன்னை யறியாமலிருக்கச் சந்யாசி வேஷங்கொண்டு அது மாரிகாலமா யிருந்ததால் ஓர் ஆலமரத்தின் பொந்தி லுட்கார்ந்துகொண்டு கண்ணபிரானை தியானித்தான்.

அப்போது கண்ணன் தாமொருவராய்ப் பிரபாச தீர்த்தத்திற்கு வந்து அர்ச்சுனனைக்கண்டு ஒருவருக் கொருவர் ஆலிங்கனஞ் செய்துகொண்டு சந்தோஷத்துடன் ரைவதக பர்வதத்தை யடைந்து, அவனை அங்கிருக்கும்படியாயும் ஒருவருடன் பேசாமலிருக்கத் திட்டஞ்செய்து இரகசியமாகத் துவாரகாபுரஞ் சென்றனர்.

சில நாளைக்குப் பின் அந்த ரைவதக பர்வதத்தில் யாதவர்கள் வருடந்தோறுஞ் செய்கின்ற திருவிழா நேரிட்டது. யாதவர்கள் வழக்கப்படி மகா சிறப்புடன் அந்தத் திருவிழாவை நடத்த வேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டு ஒவ்வொருவரும் குடும்ப சகிதராக அலங்கரித்துக்கொண்டு வாகனங்களிலும் ரதங்களிலும் ஏறிக்கொண்டு உற்சவம் கொண்டாட அந்த பர்வதத்தையடைந்தார்கள். வசுதேவர் முதலியவர்களும் வந்து சேர்ந்தனர். அவ்விடத்தில் மகா லட்சணவதியாய் அன்னத்தைப் பழித்தபடி யுலாவிய சுபத்ரையைக்கண்டு பற்குணன் காமவெறி கொண்டு ஸ்ரீ பகவத் கிருபை எவ்வாறிருக்குமோ வென்றேங்கி யிருக்கையில் ஸ்ரீ கிருஷ்ணன் எதிரே தோன்றி தபசியான நீ ஒரு பெண்

ளைக் கண்டு மயங்குவதாக காணப்படுகிருய். நல்லது நீ கண்டு மயங்கிய நங்கை என் தங்கை சுபத்ரையாவள் என் பிதாவுக்கு அவளிடம் மிக்க அன்புளது. நான் அவரிடம் பேசி உன் எண்ணத்தை நிறைவேற்றுகிறேன் என்ன, அர்ச்சுனன் அவர் அடிபணிந்து பயந்தெளிந்து "அச்சுத! மகா யோகிகளும் லட்சணவதிகளான வனிதைகளைக் கண்டு மயங்குவ ரென்ருல் நான் எம்மாத்ரம்? என் கருத்தை தேவரீர் நிறைவேற்றி வைத்தால் நான் மகா சம்பத்துடையவன் போலாவேன்" என்று பலவிதமாய் ஸ்தோத்ரம் செய்தான். பகவான் அதற்கிணங்கி தருமருக்கும் ஆள் மூலமாக ரகஸ்யமாய் இதை தெரிவித்து அவரது அங்கீகாரத்தைப் பெற்றனர். ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுனனை அவ் விடத்திலேயே யிருக்கச்சொல்லி நியமித்துவிட்டுத் தாம் எல்லாருடனுங் கூடிக்கொண்டு திருவிழா கழித்தவுடனே துவாரகா பட்டணம் போய்ச்சேர்ந்தார். பற்குனனும் ஸ்ரீ கிருஷ்ணன் தங்கையைக் கண்டதுமுதல் காமவேதனை கொண்டு அழகாகிய சோலை சூழ்ந்திருக்கிற ஒரு பாருங்கல்லின்மீது உட்கார்ந்து சுபத்திரையைத் தியானஞ்செய்துக் கொண்டிருந்தான்.

இப்படியிருக்க ஒருநாள் ஸ்ரீ கிருஷ்ணன் வேட்டைக்குப்போயிருந்த சமயத்தில் பலராமன் முதலிய சில யாதவர்கள்வேடிக்கையாய் அந்தப்பருவதத்திற்குப்போய் அவ்விடத்திலிருக்கும் அர்ச்சுன சந்நியாசியைக்கண்டு சந்தோஷப்பட்டு அவரைப் பணிந்து நிற்க, சந்நியாசி அவர்களை ஆசீர்வதித்து, அவர்களது க்ஷேமாதிசயங்களை விசாரித்து, அறிந்துகொண்டனர். பின் யாதவர்கள் அவரது விருத்தாந்தத்தை அறியவிரும்ப "சந்நியாசிக்கு ஓர் இடமென்பதுண்டோ? பூமியெல்லாம் சந்நியாசிக்கு இடந்தான். மழையாகையால் இவ்விடத்தில் தங்கியிருக்கிறேன்" என்று சொல்லக்கேட்டு மகிழ்ந்தவர்களாய், புண்ணிய தீர்த்தங்களையும் ஸ்தலங்களையும் கண்டு சேவித்த விவரங்களை சொல்லும்படி கேட்டு, அவர் அவைகளை வெகு சிறப்பாய் எடுத்தோத மகிழ்ந்தவர்களாய், அவருக்கு மழைகாலம் கழியும்வரை ஓர் தகுந்த இடம் தரும்படி யோசித்திருக்கும்போது, வேட்டைக்குப் போயிருந்த ஸ்ரீ கிருஷ்ணர் அவ்விடத்திற்கு வந்தார். பலராமர் ஸ்ரீ கிருஷ்ணரோடு ஆலோசனைசெய்து, முடிவாக கன்னிகாமடத்தில் அவரை அழைத்துக்கொண்டுபோய் விட்டு சுபத்திரையைக்கொண்டு தகுந்தபடி உபசரிக்கும்படி திட்டம் செய்யும்படி பலராமர் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சொல்ல

அவரும் அப்படி சந்நியாசியை அழைத்துச் சென்று ருக்கு மணீ முதலானோர்க்கு உள்ளதை ஒளிக்காமல் சொல்ல, அவர்கள் யாவரும் மகிழ்ந்து அவனை மருகனுய்க் கொண்டாடி உபசரித்தார்கள். பின்பு கண்ணன் அர்ச்சுனனைக் கன்னியா மாடத்துக் கழைத்துக் கொண்டுபோய்' தன் தங்கையை யழைத்து இவர் மகா பெரியவர்; நமது தேசத்துக்கு அதிதியாய் வந்தவர். இவரை நீ உன் மாளிகையில் வைத்து பூஜித்தால் மிகவும் நல்லது. இப்படித்தான் முற்காலங்களில் நமது கன்னியா மாடங்களிலே வெகு பெரியோர்கள் வந்து தவஞ் செய்துக்கொண்டிருந்தார்கள். அவர்களையெல்லாம் நமது சந்ததியில் பிறந்த அனேகம் பெண்கள் பூஜித்து வெகு நன்மைகளைப் பெற்றார்கள். ஆகையால் இந்த சந்நியாசியை நீ வெகு பக்தியுடனே பூஜித்து வரவேண்டியதாய் நம்முடைய அண்ணு நியமித்திருக்கிறார். ஆகையால் நீ தகுந்தபடி உபசரித்துக்கொண்டு வாவென்று சொல்லிவிட்டு ஸ்ரீ பலராமருக்கு தெரிவித்தனர்.

பின்பு அர்ச்சுனன் தினந்தோறும் விடியற்கால முதல் இராத்திரி சயனித்துக்கொள்ளுகிற வரைக்கும் சுபத்திரையினலே வேண்டிய உபசாரங்கள் செய்யப்பட்டு வருங்காலத்தில் இடைவிடாமல் சுபத்திரையைப் பார்த்துக்கொண்டிருப்பதனுலும் அவளோடு பேசுகிறதினுலும் அவளுடைய நடை சிறிப்பு பேச்சு முதலாகிய செய்கைகளைக் காண்பதினுலும் அவளைக் காண்பதற்கு முன்னிருந்ததைவிட அதிகமாக காமத் தீயான தெழும்பி அந்தப் பாண்டு குமாரனுடைய மனதை எரிக்கவே நாழிகைக்கு நாழிகை தேகமானது இளைத்து வெளுத்துத் துவண்டுபோயிற்று. இவ்வாருகக் காம நோயினலே மிகவும் அவன் வருத்தமடைந்து மிகுந்த தாபத்தைச் சகிக்கமாட்டாமல் பெருமூச்சு விட்டு நீரிலமிழ்த்திய சுரைக்காயைப்போல் எவ்வளவு அடக்கினுலும் அடங்காமல் தனது கபடம் வெளிக்குவா அதையெல்லாம் வெவ்வேறு பாவனையால் மறைத்துக்கொண்டு தன் வேஷத்திற்கு தகுந்ததாய் ஹரீ - மாதவா - கோவிந்தாவென்று கிருஷ்ணனையே கூவிக்கொண்டிருந்தான். அர்ச்சுனனுடைய வீரப்ரதாபங்களைப்பற்றியும் பூர்த்தியான அங்கலக்ஷணங்களைப் பற்றியும் பலபல விதமாக கொண்டாடக் கேட்டிருந்தவளாதலால் அந்தச் சுபத்திரையும் மனதிலே அர்ச்சுனன் பேரிலேயே நெடுநாளாய்க் காதல்கொண்டிருந்தாள். குருதேசத்திலிருந்து வரும் அவர்களை விசாரித்து பாண்டவர்களின்—

அதிலும் விசேஷமாக அர்ச்சுனனது—க்ஷேமங்களை கேட்டு அறிந்து மகிழ்வாள்.

அந்த வழக்கத்தை அனுசரித்து ஒருநாள் காலையில் இந்தச் சந்நியாசி ஸ்நானஞ்செய்து ஆசனத்தி லுட்கார்ந்து கொண்டு ஜபம்பண்ணி நிற்குந் தருணத்தில் சுபத்திரைபோய் நமஸ்காரம் செய்து "சுவாமீ! தேவரீர் வெகு தேசங்களையும் நதிகளையும் கண்டவரானபடியினாலே அவைகளின் சரித்திரங்களைச் சொல்லவேண்டும்" என்று கேட்க, அர்ச்சுனனும் மிகவும் சந்தோஷித்து காமப்பார்வை முதலாகிய விலாசங்களுடனே அனேகங் கதைகளையெல்லாஞ் சொல்லிவர, நடுவில் குருதேசத்துச் சங்கதி வருமளவில் சுபத்திரை "சுவாமீ! அவ்விடத்தில் முன் காண்டவப் பிரஸ்தமென்றும் இப்போது இந்திரப்பிரஸ்தமென்றும் பெயருடைய பட்டணத்தில் எங்கள் நல்லத்தை குந்திதேவி யென்பவளைக் கண்டீரா? அவளும் அவளுடைய குமாரர்களும் க்ஷேமமாயிருக்கிறார்களா? அவர்களில் துரோபதைக்காக ஏற்பட்ட நிபந்தனையின்படி அர்ச்சுனருக்குத் தீர்த்தயாத்திரை நேரிட்டதாமே? அந்த மகா புருஷன் சௌக்கியமாயிருந்தவர் நெடுநாளாய் வனாந்திரங்களில் திரிந்து கஷ்டப்பட்டுக் கொண்டு இந்த மழைக்காலத்திலே எங்கேயிருக்கிறார்? தேவரீரும் தீர்த்தயாத்திரை செய்தவராகையால் அவரை எங்கேயாகிலும் கண்டதுண்டா?" என்று கேட்கும்போது, அர்ச்சுனன் குறிப்பினாலே அவளுக்குத் தன்னிடத்தில் ஆசையிருப்பதை யறிந்து மிகுந்த காமவெழுச்சியினால் உடம்பெல்லாம் மயிர்க் கூச்சடைந்து தேகம்நடுக்கமுறத் தொனி தழதழக்கச் சிறுநகைப்புடனே சொல்லுகின்றான்:

யதுகுலத்தோர் தவத்திலுதித்த மின்னரசே! உங்களத்தையாகிய குந்தியைக் கண்டேன். க்ஷேமமாயிருக்கிறாள். அவள் புத்திரர் முதலான பேர்களும் க்ஷேமமாயிருக்கிறார்கள். அந்த அர்ச்சுனனோ தீர்த்தயாத்திரை முடிந்தும் இன்னும் தன்தேசம் போய்ச் சேரவில்லை. இப்போது துவாரகா பட்டணத்திலேயே சந்நியாசிவேஷம் பூண்டு ஒருவருக்குந் தெரியாமல் வாசஞ்செய்து கொண்டிருக்கிறான். அடி பொற்கொடியே! நீதினமும் பார்த்துக் கொண்டிருந்தும் அவனை யறியாமலிருக்கிறாயே யென்று சொல்லக் கேட்டுச் சுபத்திரை திடுக்கிட்டாப்போல பெருமூச்செறிந்து முகத்தை வணங்கிக்கொண்டு தரையைக் காலால் கீறிக் கொண்டு நின்றாள். இப்படி நிற்குமவளைக்கண்டு அர்ச்சுனன் மிகவன்புடனே அடி பூங்குழலே! நான்தான் அர்ச்சுனன்

உனக்கெப்படி என்னிடத்தில் கருத்திருக்கின்றதோ அப்படியே எனக்கும் உன்னிடத்தில் பதின்மடங் கதிகமாய் ஆசை அமைந்திருக்கிறது. உனது பணிவிடைக்குக் காத்திருக்கிறேன். நல்லநாளிலே தருமவிதிப்படி உன்னை விவாகஞ் செய்துகொண்டு உன்னுடன் கூடி வாழ்வேனென்று சொல்லிக் கொடிகளால் கட்டிய அறைக்குள்ளே பிரவேசித்தான்.

பின்பு சுபத்திரை மிகவும் மதிகலங்கி மெய் துவண்டு தனது பள்ளியறைக்குள்ளே போய் கட்டிலின்மீது சயனித்துக்கொண்டு மூர்ச்சை யடைந்தவள்போல் ஒன்றுந்தெரியாமலிருந்தாள். இப்படியிருக்க ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி இச்செய்தியை யெல்லாம் தமது பேரறிவினால் அறிந்து சுபத்திரைக்கும் அர்ச்சுனனுக்கும் போஜனமிடும்படி ருக்குமணி தேவியை யனுப்ப அவளும் இருவருக்கும் போசனத்தைக் கொணர்ந்து பரிமாறி இருவருடைய மனோ வியாதியை முற்று மறிந்து போனாள். அர்ச்சுனனும் அந்தக் கொடியறையிலேயே யிருந்துகொண்டு உன்மத்தம் பிடித்தவன்போலிருந்தான். இப்படி யிருக்குமளவில் சூரியன் அஸ்தமனமடையவே அர்ச்சுனனையும் சுபத்திரையையும் மோகமென்பது கௌவிக்கொண்டதுபோல் இருளானது பூமியைக் கவ்விக்கொண்டது. சுபத்திரை காமநோயினால் அன்றிரவு மகா கஷ்டமடைந்திருக்க அவளுடைய தோழிகளெல்லாம் இதைக்கண்டு விசனமடைந்து தேவகீ தேவிக்கு அறிவிக்க, அந்த அம்மனும் ஓடிவந்து மகளுக்கு வேண்டிய தைரியங்களைச் சொல்லி அர்ச்சுனனை குறித்த ரகஸ்யத்தை வசுதேவரிடம் சொல்லி சுபத்திரையின் காதலையும் வெளியிட்டாள். வசுதேவரும் அதை அக்ரூரன் - ஆகுகன் - கிருஷ்ணன் முதலாகிய பேர்களுக்குத் தெரிவித்து தேவகீ - ரோகிணி - ருக்குமணீ - சத்தியபாமை முதலியவர்களோடு கூடி, நன்றாயோசித்து ரகசியமாகப் புரோகிதரை யழைப்பித்து இதை யாவருக்கும் அறிவித்து அவர் யோசனையையும் கேட்டுக்கொண்டு பன்னிரண்டாவது நாளில் முகூர்த்தம் வைத்துக்கொண்டார்கள். இந்தப் பெண்ணை அர்ச்சுனனுக்குக் கொடுக்கப் பலராமர் உத்தவர் முதலானவர்களுக்குச் சம்மதியில்லாமல் அவர்கள் இச்செய்தி யறியாதிருக்க வேண்டியதற்காக யோசித்து ஸ்ரீ பகவான் ஒரு விளம்பரம் செய்து பறைசாற்றி வைத்தார்.

அதாவது சுபத்திரைக்குத் தேகத்தில் தெய்வீகமாய் உபத்திரவம் உண்டாயிருக்கிறபடியினாலே சமுத்திரத்தின் நடு

விலிருக்கிற தீவில் சிவபிரானுக்கு முப்பத்து நான்குநாள் உற்சவம் நடக்கப்போகிறது. அதற்காக இன்றைக்கு நான்காளுளே யாவரும் தங்கள் குடும்பங்களுடனே அந்தத் தீவு போய்ச் சேரவேண்டியது. இதைகேட்டு பலராமர் முதலிய சகல யாதவர்களும் பட்டணத்திலிருக்கும் ஜனங்களும் வஸ்திராபரணங்களைப் பூண்டு குதூகலத்துடனே அழகாகிய சீலைகளைக் கட்டிய கொடிமரங்களுடனேகூடி நல்ல யந்திரங்களுடைத்தாய் உட்காரவும் படுக்கவும் விளையாடவும் உபயோகமாயிராநின்ற விடங்களையுடைய கப்பல்களின் மேலேறி அந்தத் தீவுபோய்ச் சேர்ந்தார்கள். கபட சந்நியாசியையும் அவனுக்கு பணிவிடைசெய்யும் சுபத்திரையையும் துவாரகையிலேயே நிறுத்திவிட்டு ஸ்ரீ கிருஷ்ணபிரானும் தன் தேவிமாருடன் திருவிழாவுக்குப் போய்விட்டார்.

பிறகு சுபத்திரையைப் பார்த்து பார்த்தன் சொல்லுகிறான் : அடி தேன்மொழியே ! இப்பொழுது உன் தகப்பனுர் முதலிய யாவரும் திருநாள் பார்க்கப் போயிருக்கிருர்கள். இந்தச் சமயத்திலேதான் நாம் விவாகஞ் செய்து கொள்வது உத்தமம். பெரியோர்கள் நிச்சயித்த எட்டுவித விவாகங்களில் நமக்கு இப்போது அனுகூலமாயிருப்பது காந்தர்வவிவாகம். இது காதலுக்குரிய ஸ்திரீ-புருஷர்களே தம் இச்சையால் நடத்திக்கொள்ளக்கூடியது. பிறரின் உதவி இதற்கு அவசியமில்லை. உனது தாய் தந்தையரும் ஸ்ரீ பகவானும் நமது மணத்தை அங்கீகரித்திருக்கிருர்கள். ஆதலால் நீ யாதொன்றுக்கும் அஞ்சாமல் என்மீது தயைசெய்து என்னைக் கூடி என்னை காப்பாற்று என்றதைக்கேட்டு கண்ணனை மனதில் நினைத்து ஒன்றுஞ் சொல்லாமற் கண்ணீர்மல்க நின்றுகொண்டிருந்தாள். அர்ச்சுனனும் பரிதாபத்துடனே கொடிவீடு சென்று தன் பிதாவாகிய இந்திரனை நினைத்தான்.

இப்படி அர்ச்சுனன் நினைத்தமாத்திரத்திலே தேவேந்திரன் சகல தேவர்களோடும், நாரதர் வசிஷ்டர் முதலிய ரிஷிகளோடும், சசிதேவி முதலாகிய தேவ ஸ்திரீகளோடும் ஐராவதத்தின் மேலேறிக்கொண்டு தன் மகனிருக்குமிடம் வந்து சேர்ந்தான். கிருஷ்ணனும் சுபத்திரையின் நினைவையறிந்து அக்ரூரன்-ஆகுகன்-கதன் வசுதேவன்-தேவகி-ரோகிணி-ருக்குமணீ-சத்தியபாமை முதலாகியவர்களையும் அழைத்துக்கொண்டு பலராமர் முதலானபேர்கள் தூங்கிக்கொண்டிருக்குந் தருணத்திலே புறப்பட்டு அவ்விடம் வந்து சேர்ந்து தேவேந்திரன் முதலான பேர்களைக் கண்டு நமஸ்காரம் செய்து உபசரித்தனர். தேவராஜன் முதலானவர்கள் கிருஷ்

ணனைப் பார்த்து நல்லது ஏன் சாவகாசம் பண்ணுகிறீர் சீக்கிரத்தில் மணத்தை நடத்த யத்தனப்பட வேண்டுமென்று சொல்லவே, கிருஷ்ணனும் தம்முடையவர்களைக் கொண்டு கலியாணத்துக்கு வேண்டிய சகல சாமக்கிரிகைகளைச் சித்தப் படுத்தி தேவர்களுக்கு விண்ணப்பஞ்செய்ய, தேவராஜன் தன் மகனுக்கு மங்கள ஸ்நானஞ் செய்வித்து நவமணிக ளிழைத்து பளபளென விளங்கும் கிரீடம் தோள்வளை ஆரங் கள் வளைகள் முதலான பல வாபரணங்களாலும். திவ்விய பீதாம்பரங்களாலும் அலங்காரஞ்செய்து நாரதர்-வசிஷ்டர். முதலான மகா முனிவர்களைக்கொண்டு சுபச்சடங்குகளைச் செய்வித்து நிற்க, கிருஷ்ணனும் தன் தங்கைக்கு நல்ல அலங்காரஞ் செய்வித்து சித்தம்பண்ண சகல வாத்திய முழக் கத்துடனே பெண்ணையும் பிள்ளையையும் கலியாண மண்ட பத்து நடுவே ரத்தினங்களழுத்திய பொற்பீடத்திலுட்கார வைத்துக் காஸ்யப மகா முனிவர் விதிப்படி அக்கினியை வளர்த்தி ஓமஞ் செய்ய, வசிஷ்டர் முதலாகிய ரிஷிகளெல் லாம் மந்திரங்களைக் கோஷிக்க, நாரதர் முதலாகிய ரிஷிக ளெல்லாம் சபையாய் வேதிகையைச்சூழ்ந் துட்கார்ந்திருக்க அருந்ததி முதலாகிய ரிஷிபத்தினிகளும் - இந்திராணி முதலாகிய தேவ பத்தினிகளும் தேவகீ-ருக்மணி - சத்திய பாமை-சாம்பவதி முதலாகிய யாதவ பத்தினிகளும் பாலிகை களில் விரைகளை விதைத்துப் பால்கலந்த நீரிடவும், பூரண கும்பங்களும் தீபங்களு மேந்தி மங்கலப் பாடல்களுடனே சூழ்ந்து வரவும் தேவதுந்துபி முதலாகிய பதினெட்டு வாத்தியங்களு முழங்க, அரம்பாஸ்திரீகள் நர்த்தனஞ்செய்ய, கந்தருவர் முதலான பேர்களெல்லாம் பாட, மகா விபவமாகக் கலியாணத்தை இந்திரன் ஸ்ரீ கிருஷ்ணன் முதலாகிய பேர் கள் நடத்தி முடித்தார்கள்.

பிறகு இந்திரன் முதலாகிய தேவர்களுக்கும் மற்றவர்க் கும் சகல உபசாரஞ் செய்து பூசித்து சகலருக்கும் நல்ல விருந்துசெய்தனர். அர்ச்சுனன் தன் பெண்சாதியுடனே ரிஷிகளையும் அவர்களுடைய மனைவிகளையும் இந்திரன் முதலிய தேவர்களையும் அவர்களது பத்தினிமார்களையும், நாரதர் முதலிய தபசிரேஷ்டர்களையும், ஸ்ரீ கிஷ்ணன் வசுதேவர் முதலிய யாதவர்களையும் அவர்களது பத்னிமார் களையும் நமஸ்கரித்து அவர்களால் ஆசீர்வதிக்கப்பெற்றுன். பின்பு இந்திரன் சுபத்திரைக்கு வேண்டிய ஆடையாபரணங் களைக் கொடுத்து சகலரிடமும் விடைபெற்று மற்றவர்களுட னும் சென்றுன். ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ச்சுனனைக் கூப்பிட்டு

நீ கல்யாணத்தைச் சேர்ந்த மற்ற தீக்ஷையை நிறைவேற்றிப் போட்டு இன்னும் இருபத்திரண்டு தினத்திற்குள்ளாகவே நீ சுபத்திரையை அழைத்துக்கொண்டு நமது தேரின் பேரிலேறி இந்திரப் பிரஸ்தம் போய்ச் சேர்ந்துவிடு. அன்றியும் இவ்விடத்தில் நீ யிருக்கிற வரைக்கும் சந்நியாசி வேஷத்தோடே யிருக்கவேண்டும். நாங்கள் பலபத்திரர் நித்திரை விட்டு எழுந்திருக்கு முன்னமே அவ்விடம் போகவேண்டுமென்று சொல்லி சுபத்திரைக்கும் திட்டஞ்செய்து சகல யாதவர்களோடு புரப்பட்டுத் தீவுபோய்ச் சேர்ந்தார்.

பின்பு அர்ச்சுனன் சுவர்க்க ராச்சிய மடைந்தவன்போல் மகா சந்தோஷத்துடனே சுபத்திரையோடு கூடிப் பலபோகங்களையு மனுபவித்துக்கொண்டு மகா காந்தி யடைந்து இருபத்தொரு நாள் கழித்தவுடனே தன் மனைவியாகிய சுபத்திரையை யழைத்து அடி யென் பிராண நாயகீ! இனி நாம் கிருஷ்ணனுடைய உத்தரவின்படி இந்திரப்பிரஸ்தம் போய்ச் சேரவேண்டு மாகையால் நீ இன்றைக்கு விரதமுடிவு நாளென்று சொல்லி வேதியர் முதலான பேர்களுக்கு அன்னதான முதலாகிய பல தானங்களையுஞ் செய்து நீயும் உன் தோழிமார்களுடனே நல்ல பூஷண முதலானவைகளால் அலங்கரித்துக் கொண்டு புசித்து நகரை பிரதட்சணம் வரவேண்டு மென்று சகல ஆயுதங்களோடு கூடிய ஒரு திவ்விய ரதத்தைச் சித்தப்படுத்தி கொண்டு வாவென்று சொல்ல, அந்தப் பூங்கொடியும் அப்படியே எல்லா காரியங்களையும் முடித்துக்கொண்டு வாயலில் வந்து நின்ற ரதத்தில் தன் வஸ்திர முதலானதுகளை தாதிகளைக் கொண்டு ஏற்றுவித்து அர்ச்சுனனிடத்திற்கு வந்து என் பிராணநாயக! உமது உத்திரவின்படி இரதத்தைச் சித்தப்படுத்தினேனென்று சொல்லவே மிகவுஞ் சந்தோஷத்துடனே அவளைக்கட்டி முத்தமிட்டுப் போவோம் வாவென்றழைக்கிற போது அவள் தன் நாயகனை நோக்கி என் இன்னுயிர் நாயக! நான் தேர் சாரத்யம் செய்வதில் பழகியிருப்பதால் என்னை அத்தொழில் வகிக்க அனுமதி தரவேண்டுமென்ன, அப்பாண்டவ வீரன் பெண்ணரசே! மிக சந்தோஷமாயிற்று. ஆனால் நீ முன்னேபோய் ஏறென்றுசொல்லித் தான் காஷாயங்களைக் களைந்து திவ்விய வஸ்திரந் தரித்துக் கவசகுண்டல கேயூரங்களையு மணிந்து கத்தி கேடய முதலாகிய ஆயுதங்களுங்கட்டித் தூணிகளைத் தோட்களில் தாங்கி கையில் வில் பிடித்துக் கோடி சூரியப் பிரகாசமாய் தேரிலேறினான்.

இவனேறின மாத்திரத்திலே சுபத்திரை குதிரைகளைச் சவுக்கினலடிக்க அந்த அசுவங்கள் கருடனும் காற்றும் தோற்றுப் போகும்படி தேரை யிழுத்துக்கொண்டு போகுமளவில் மாரி காலத்தில் வானத்திலே மேகங்கள் முழங்கினலெப்படி யிருக்குமோ அப்படிபோல கிடுகிடென்று இரதம் கோஷித்துக் கொண்டு செல்லச் சுபத்திரையின் தோழிகள் அவளைப் பார்த்து எமதன்புடைய நாயகீ ! உனக்குத் தகுந்த புருஷன் கிடைத்ததற்காகவும் நீ அவனேடுகூட வாழ்வதற்காகவும் சுவாமியைத் தோத்திரஞ் செய்கிருேம் என்று சொல்ல, அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு தேரை சுபத்திரை நடத்தலானள். இரத விரச்சலைக் கேட்டுப் பட்டணத்திலும் அரண்மனையிலுமுள்ள அநேகர் ஓடிவந்து பார்த்து நமது சுபத்திரையை யாரோ எடுத்துக்கொண்டு போகிருரென்று ஓவென்று கூச்சல்போட ஊர் ஜனங்கள் ஆயுதபாணிகளாய் ரதத்தைப்பின் தொடர்ந்தார்கள். அர்ச்சுனன் அவர்களாயுதங்களைத் தடுத்துக்கொண்டே போக இரதம் ரைவதக்கிரிக்குச் சமீபத்தில் போகும்போது ரைவதப் பருவதத்தினருகிலிருந்து பட்டணத்தை காவல்செய்யும் விபுருது என்பவன் இத்தேரிரைச்சலையும் பட்டணத்தா ரிரைச்சலையுங் கேட்டு ஓடிவந்து பார்க்க முன்னம் கண்ணன் சொன்ன சங்கதியை யறிந்தவனனலும் வெளிக்குக் காட்டக் கூடாதென்று மிக விரைவாய்த் தன் சேனைகளைச் சன்னகப் படுத்தி சரமாரி பொழிந்து கொண்டே பின்ருெடர்ந்தான். இவ்வாருகப் பின்தொடர்ந்து வருவதைக் கண்டு சுபத்திரை தன் கணவனை நோக்கி அதோ நால்வகைச் சேனைகளுடனே விபுருது துரத்திக்கொண்டு வருகிருர் என்று சொல்லி தேரை வேகமாய் நடத்தினள்.

இப்படிக்குத் தேர் பட்டணத்தை விட்டுச் சீக்கிரமாய்ப் போவதைக்கண்டு விபுருது வில்லை வளைத்து நாணேற்றி நாணேசைசெய்து வரிசை வரிசையாய் அம்புகளை தொடுத்து விட, அர்ச்சுனனும் தன் வில்லில் நாணிபூட்டி பாணங்களைச் சந்தானஞ்செய்து தன்பேரில் எதிரிவிட்ட பாணங்களை யறுத்துத் தள்ளவே, விபுருது கோபங்கொண்டு மறுபடியும் மகா கூர்மைபொருந்திய சில பாணங்களைத் தொடுத்து விட அவைகளைத் துண்டந் துண்டமாய் அறுத்து எதிரியைக் கண்விழித்துப் பார்க்கவொட்டாமல் சரங்களைப் பொழியவே சேனைகளெல்லாரும் ஒரே முகமாய்த் திரும்பி எதிர்த்தார்கள். அந்தச் சேனைகளுக்குத் தலைவனகிய யாதவ வீரன் சங்கையெடுத்துப் பூரித்தான். அர்ச்சுனன் ரோஷத்துடனே

சங்கமெடுத் தூதி வீரகர்ச்சிதஞ்செய்து சூரியன் மூடிக்கொண் டிருக்கும் பனிகளைத் தன் கிரணங்களினுலே ஒரு நிமிஷத் தில் நீக்குவதுபோல் அந்தப் பாணங்களின் கூட்டத்தைத் தன்னம்புகளினுலே துணித்து நீக்கிச் சூழ்ந்திருக்கிற சேனையிலிருக்கும் யானைகள் குதிரைகள் முதலியவைகளை வீறிட்டோடும்படி யடித்து வீரர்களையெல்லாம் ஆயுதங்க ளில்லாதவர்களாகிப் பதை பதைக்கச்செய்து அடித்தான். விபுருதுவானவன் திக்குகள் தோறுந் தலைவிரிகோலமாய் ஓடுகிற தன் சேனைகளை யெல்லாம் நிற்கும்படி கையமர்த்தித் தான் இரதத்தினின்று திடீலென்று குதித்து அர்ச்சுனு நிற்க வேணும் குழந்தாய் சுபத்திரா நில்லென்று கூவிக்கொண்டு போய் அர்ச்சுனனைக் கட்டிக்கொண்டு சொல்லுகிருன் :

அர்ச்சுனு ! எனக் கிப்போது மிகவுஞ் சந்தோஷ மாயிற்று. ஏனென்ருல் மகா வீரனை நீ நமது மருமகனுக வந்தாயே. நீ இவ்விடத்தில் சந்நியாசி வேஷத்துடனே மறைந்திருந்த சங்கதி கிருஷ்ணனுல் நானறிந்திருக்கிறேன். மேலும் எப்படியாவது உனக்குச் சுபத்திரையைப் பாரியை யாக்க ஸ்ரீ கிருஷ்ணனுக்கு மனதிருந்தது. அவரன்ருே குணுகுணங்களை நிச்சயிக்க வல்லவர். ஜனங்களுடைய திருப் திக்காக நான் உம்முடன் போர் செய்ய நேர்ந்தது. என்றிவ் விதம் அவர்களை கொண்டாடி ஆசீர்வதித்தனன். அர்ச்சுன னும் சுபத்ரையும் விபுருதுவை நமஸ்கரித்து விடைபெற்று திவ்விய ரதத்திலேறிக்கொண்டு முன்போலவே புறப்பட்டுப் போனுர்கள்.

இப்படி விபுருது அபஜயமடைந்ததில் யாதவர்கள் அதிருப்தி யடைந்தவர்களாய் ராஜ சபையின் அதிகாரிக ளிடத்தில் முறையிட்டார்கள். அந்தச் சபை அதிகாரியும் மிகுந்து ஒலிக்கத் தகுந்த பேரிகையை யுத்தகாலத்திற்கு அடையாளமாக அடிக்கவைக்கவே, அந்த சப்தம் கேட்ட மாத்திரத்தில் தீவுநடுவி லிருந்த யாதவர்கள் யாவரும் மிகவும் கலக்கமுற்று ஒரு காரியமும் தோற்ருமல் எவ னெவன் எந்த வேலை செய்துகொண்டிருந்தானே அந்த வேலையை அப்படியே விட்டுவிட்டு ஒருவரோ டொருவர் பேசாமல் அங்கிருந்து ஒரு நிமிஷத்துக்குள்ளாக மேற்படி சபையை வந்தடைந்தார்கள். அந்தச் சபை யதிகாரி இவர் களுக்கு அர்ச்சுனன் சுபத்திரையை கொண்டு போனதும் விபுருது துரத்தி பங்கப்பட்டதும் தெரிவித்தான். அது கேட்டு யாதவர் யாவரும் மிகுந்த கோபங்கொண்டு கண்கள் சிவக்க உதடுகளைக் கடித்துக்கொண்டு ஆசனத்தில் பொருந்

தாமல் எழும்பி எழும்பி சேனாதிபதிகளை முன்னிட்டுக் கொண்டு யுத்தத்திற் கெழுந்தார்கள்.

அந்த சமயத்தில் மதுபானஞ்செய்து மதித்திராநின்ற பலராமர், யாதவ வீரர்களை நோக்கி ஓய் வீரர்களே! என்ன நீங்கள் அறியாதவர்கள்போல் குதிக்கிறீர்கள். கிருஷ்ணன் சும்மாயிருக்க உங்களுக்கேன் இந்தயோசனை? மகா புத்திமானாகிய கிருஷ்ணன் தன் கருத்தை வெளியிடட்டும். பின்பு அவர் கருத்துக்கிசைந்தபடி நடப்போமென்று சொல்லக் கேட்டு யாவரும் நன்று நன்று அப்படியே செய்யவேண்டுமென்று அங்கீகரித்து முன்போல ஆசனங்களி லுட்கார்ந்தார்கள். பின் பலதேவர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து அப்பா ஸ்ரீ கிருஷ்ணா! நீ எல்லாமறிந்தும் ஒன்றும் அறியாதவனைப்போல சும்மா விருப்பது தகுமா? அர்ச்சுனனுக்கு உன்னைப்பற்றி மரியாதை செய்கிறோமேயல்லது வேறில்லை. அந்த மடையன் நாம் மரியாதை பண்ணத் தக்கவனா? அவனோ கெட்ட நினைப்பும் நடக்கையு முடையவன். குலத்தைக் கெடுக்கப் பிறந்தவன். இல்லாவிட்டால் எவனாகிலும் உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைப்பானா? அவன் நற்குலத்தில் பிறந்தவனாயிருக்க ஆபத்துகளி லுபகாரிகளாகிய நமக்கு இப்படிப்பட்ட அபகாரஞ் செய்யலாமா? மேலும் இவர்களுக்கும் நமக்கும் பெரியவர்கள் நாள் முதல் சம்பந்தம் நடந்துவருகிறது. நல்லது அந்தத் துஷ்டன் என்னையும் உன்னையுங்கூட எள்ளளவேனு மதியாமல் வீட்டுக்குள்ளே புகுந்து திருடன்போல பெண்ணை எடுத்துக் கொண்டுபோனதை நாம் எப்படி சகித்திருக்கலாம். ஆகையால் இப்பொழுதே போய் இந்தப்பூமியில் பாண்டவ வமிசமே இல்லாமற் செய்துவிடுகிறேன். நீசும்மாயிரு கிருஷ்ணா! அவன் செய்த அக்கிரமத்தைக் கொஞ்சமும் பொறுக்க மாட்டேனென்று மிகவும் ஆக்குரோஷத்துடனே பிரளய கால மேகம்போல கர்ச்சியாநின்ற பலராமரை, யாதவர்களெல்லாரும் அனுசரித்துத் தாங்களும் அப்படிச் செய்வது தான் நன்றென்று கூடவே இறைந்து பேச, ஸ்ரீ கிருஷ்ண சுவாமியானவர் யாவரையும் பார்த்துச் சொல்லுகிறார்: சற்றே நில்லுங்கள். எனக்குத் தோன்றினதைச் சொல்லுகிறேன். அதை நீங்கள் ஞாபகமாய்க் கேட்கவேணும். நானாக ஒன்றுஞ் சொல்லக் கூடாதென்றிருந்தேன். அண்ணாவே உத்தரவு செய்தபடியால் சொல்லுகிறேன். ஆதியில் அந்த கபட சந்நியாசியைக் குறித்து நீங்களெல்லாம் கேட்டபோதே எனக்குச் சந்தேகமாயிருந்தது. அந்தப்

புறத்திலே கொண்டுவந்து வைக்க வேண்டா மென்றும் சொன்னேன். அதை நீங்கள் கேளாமல் உங்களிஷ்டப்படி செய்துவிட்டீர்கள். அதனாலே இவ்வளவு வருத்தம் நேரிட்டது. போனது போயிற்று இனி யென்ன அந்த யோசனை? வேறு யோசனை செய்யவேண்டும். எப்படியும் சுபத்திரை அர்ச்சுனனுக்கு அம்மான் மகள். கலியாணத்துக்கு முறை தான். அவன் குலம் வித்தை சாமார்த்தியம் முதலான குணங்களினாலே தகுந்தவன்தான். ஆனால் அவன் மோசமான காரியஞ் செய்ததற்காக நாம் கோபிக்க வேண்டியதாயிருக்கிறது. ஆகிலும் பதறாமல் எதையுஞ் செய்யவேண்டும். இப்படி அர்ச்சுனன் செய்த காரியத்தினாலே நமது குலத்துக்குப் பெருமையே யல்லது சிறுமை எவ்வளவுமில்லை. எப்படியென்றால் அர்ச்சுனனோ மிகுந்த பலசாலி அவன் நம்மோடெதிர்த்தே இந்தப் பெண்ணைக் கொண்டுபோகலாம். அப்படியிருக்க ரகசியமாய்க்கொண்டு போனதினாலே நாம் வீரரென்று பெருமையே யாகிறது. அன்றியும் அவன் நாமெல்லாம் பணத்திலே மதிப்புவைத்துக் கன்னிகையை விற்கப் புகுந்தவரென்று நினைத்து க்ஷத்திரிய தருமத்திற்கேற்றபடி கன்னிகையை பலவந்தமாய் எடுத்துக்கொண்டு போனதாய்க் காணப்படுகிறது. இனி நாமெல்லாஞ் சேனைகளை யழைத்துக் கொண்டு யுத்தத்திற்குத்தான் போனாலும் அவனை ஜயிக்கப் போகிறதில்லை. இப்போதிருக்கிறபடி இருந்தால் அவனுக்கு நாணம், நமக்கு கௌரவம் சண்டைக்குப் போய்த் தோற்று வந்தால் அதைவிடத் தாழ்வு நமக்கு வேறில்லை போனது போயிற்று. நமது பெண் தகுந்த பாத்திரத்தில் சேர்ந்ததேயன்றி வேறில்லை. ஆகையால் அமைதியுடனே நாமந்த காரியத்துக்குச் சம்மதித்தவர்போல் போய் நடத்தவேண்டியதை நடத்தினால் நல்லது. இதுதான் எனக்குத்தோற்றுகிற யோசனை. யுக்தமாயிருந்தால் அங்கீகாரஞ் செய்யுங்கள். இல்லாவிட்டால் உங்களிஷ்டப்படி நடவுங்களென்று பகவான் சொன்ன சொல்லைக்கேட்டு பலராமர் முதலாகிய யாதவ வீரர்களும் சரிதான். ஸ்ரீ கிருஷ்ணன் சொல்வது யுக்தியோடு கூடியதாயிருக்கிறதென்று தெரிந்து பேரிகையடித்து யுத்தத்துக்காகவே சித்தப் பட்டார்கள்.

இப்படியிருக்க இந்த ரணபேரிகை சப்தத்தைக் கேட்டமாத்திரத்தில் அர்ச்சுனன் சுபத்திரையைப் பார்த்து "அடி பெண்ணே! உனது பந்துக்களெல்லாம் யுத்தத்துக்காக வருகிறதுபோல் காண்கிறது. யுத்தபேரிகையின் சத்தம் கேட்கிறது; ஆகையால் ரதத்தைத் திருப்பு. குடியரும் மடை

யருமாகிய அவர்களை யெல்லாம் தும்சம் பண்ணிப்போடு கிறேன்'' என்ன, சுபத்திரை மனம் கலங்கி முகம் வாடித் தன் கணவன் பாதங்களைப் பிடித்துக்கொண்டு ஓ என்னுயிரா கிய நாயகனே! இப்போ தென்பேரில் தயை வைத்து என் வார்த்தையின்படி நடக்கவேண்டும். யாதவர்களை நீர் சங்கரிப் பீர்களாகில் யாதவ குலத்துக்கு மிருத்து சுபத்திரை யென்று எனக்கு மிகுந்த நிந்தை வந்துவிடும். சந்தேகமில்லை. அப் படிக் குலத்துக்கெல்லாம் நாசகாரி யெனும் நிந்தை பெற்று உலகத்தில் பிழைத்திருக்கலாமோ? ஆகையால் மனதைப் பெரிதுபண்ணி இந்திரப்பிரஸ்தப் பட்டணத்துக்கே திரும்பு மென்று வேண்டிக்கொள்ளவே. அர்ச்சுனன் மிகவும் இதங்கி அவளைக் கட்டிக்கொண்டு அடி மின்னிடையே! உன் வார்த் தைக்குக் குறுக்கில்லையென்று சொல்லி மறுபடியும் தன் பட்ட ணத்துக்கு இரதத்தை நடத்தக் கட்டளையிட்டான். யாதவர் களும் புறப்பட்டுப் பட்டணத்தைத் தாண்டிவரும்போது மெத்தைகளிலும், மேடைகளிலும், பிராகாரங்களிலும், கோபுரங்களிலும் சர்ப்பங்கள்போல் விழுந்திருக்கிற அர்ச்சுன னுடைய அம்புகளைக் கண்டு ஆச்சரிய மடைந்து ஸ்ரீ கிருஷ் ணன் சொன்னவார்த்தை மெய்தானென்று எண்ணிக்கொண்டு ரைவத பருவதத்தின் பக்கத்தில் வந்து அங்கிருக்கிற சேனாதி பதியாகிய விபுருது என்கிறவன் தான் யுத்தஞ்செய்து தோற் றுப்போனதையும் அர்ச்சுனனுடைய பராக்கிரமத்தின் விசேஷத்தையுஞ் சொல்லக் கேள்விப்பட்டு ஆகிலும் அர்ச் சுனனைப்பின் தொடர வேண்டுமென்று நினைத்து அவன் மிகவும் தூரமாகச் சென்றானென்று மனமுடைந்தவர்களாய் திரும்பித் துவாரகாபுரிக்கு வந்து சேர்ந்தார்கள்.

அர்ச்சுனனும் துவாரகையை கடந்து கிரிவிருச மென் கிற பட்டணத்தையும் உச்சயனியென்கிற பட்டணத்தையும் தேனுமதியென்கிற தீர்த்தத்தையும் அசுவ ரோகித மென்கிற தடாகத்தையும் உத்தவிருத்தமென்கிற மலையையும் கடந்து போய் புரோச்சிருங்கமென்கிற விடத்திலிருந்து கௌரதீ யென்கிற ஆற்றைத் தாண்டி சால்வதேசம்போய் அங்கிருந்து நிஷததேசத்துக்குச் சென்று அங்கிருக்கிற தேவாபிருத மென்கிற பட்டணத்தைப் பார்த்துக்கொண்டு அப்பால் தேவாரண்யம்போய்ச் சேர்ந்தான். அந்த தேவாரணியத்தி லிருக்கும் முனிவர்கள் அர்ச்சுனனைக் கண்ட மாத்திரத்தில் மிகவு முபசாரஞ்செய்ய அவ்வுபசாரங்களைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டு குருதேசம்போய்ச் சேர்ந்து களிப்படைந்தான்.

பின்பு இந்திரப் பிரஸ்தபுரிக்குச் சமீபத்திலிருக்கும் ஓர் இடைச்சேரியிலிறங்கிப் போஜன முதலானவைகளைச் செய்து சுபத்திரையை நோக்கிஅடி யாதவகுலத்து மின்னரசே! இனி நாம் சேரவேண்டியது இந்திரப் பிரஸ்த புரிதான். ஆகையால் நான் சொல்லுமொரு வார்த்தையை நீ அங்கீகரிக்கவேணும். அதாவது நீ இடைச்சிப்போல் வேடம் போட்டுக்கொண்டு நமது நகரத்திற்குச் செல்லவேண்டும். ஏனென்றால் என்னுடன் கூட நீ மெய்யான ரூபத்துடன் வருவாயாகில் ஒருவேளை துரோபதை மனம்நொந்து ஏதாகிலும் கடூரமாகிய வார்த்தை சொல்லுவாள். நீ தனியே வேறு ரூபத்துடன்போய் அவளைப் பணிவாயேயாகில் நல்ல வார்த்தை சொல்லுவாள். அவள் முதலிற் சொன்ன வார்த்தைக்கு வேறாக நடக்கமாட்டாள். ஆகையால் நீ மாறுவேஷத்துடனே வரவேண்டுமென்று சொல்லக் கேட்டு சுபத்திரையும் அதற்கிசைய, அவளுக்குத்தானே ஆய்ச்சி வேஷம்போட்டு சில ஆய்ச்சிகளோடு கூட்டி யனுப்பினான். அவளும் அப்படியே இந்திரப் பிரஸ்தம்போய் அரண்மனைக்குச் சென்று தனது அத்தையாகிய குந்திதேவியை நமஸ்காரம் செய்து அவளால் ஆசீர்வதிக்கப்பட்டு, துரோபதையின் பாதங்களில் தண்டனிட்டு நானுனது பணிவிடை செய்பவளென்றாள். அந்தப் பாஞ்சாலி இந்தக் கன்னிகையின் ரூபத்தைக் கண்டு வியப்படைந்து சந்தோஷத்துடனே அவளைப் பார்த்து அடி பெண்ணே! நீ உனக்குத் தகுந்த உத்தம புருஷனோடு கூடி நன்மக்களைப் பெற்றுச் சக்களத்தியின் விரோதமின்றி வாழக்கடவையென்று ஆசீர்வாதம் செய்யக் கேட்டுச் சுபத்திரை நீ சொன்னவாக்கு சரியாயிருக்கவேணுமென்று சொல்ல, அப்படியே யாகட்டுமென்று இவளை வாரியெடுத்து தன் மடிமீதி லுட்கார வைத்து உற்றுப்பார்த்து இவளை சுபத்திரை யென்றறிந்து மனதிற் கோபமில்லாமல் ஆலிங்கனம் செய்துகொண்டு கண்ணனை நினைத்து நல்ல காரியஞ்செய்தார் கிருஷ்ணரென்று மிகவுங் கொண்டாடியிருந்தாள்.

இப்படியிருக்க அர்ச்சுனன் இடைச்சேரியை விட்டுப் புறப்பட்டுப் பட்டணம் பிரவேசிக்கும்போது யாதவசேனைகளும் ஸ்ரீ கிருஷ்ண பகவானது அபிப்பிராயத்தின்படி சகல வரிசைகளுடனும் கடல்போ லிரைந்துகொண்டு பின்னோடே வந்துவிட்டன. அர்ச்சுனனும் அந்த சேனைகளோடு கூடி பட்டணத்திற் பிரவேசிக்கப் பட்டணத்தி லிருப்போரெல்லாம் அர்ச்சுனனைக்கண்டு சந்தோஷப்பட அர்ச்சுனனும்

தனது பட்டணத்தைப் பார்த்துக்கொண்டே அரண்மனை வாசலில் தேர் விட்டிறங்கி புரோகிதராகிய தௌமியரையும் தமயன்மார்களாகிய தருமபுத்திரர் பீமசேனர்களையும் தாயாராகிய குந்தியையும் நமஸ்காரம் செய்து, தம்பிமார்களாகிய நகுல சகாதேவர்களாலே நமஸ்கரிக்கப்பட்டு அவர்களுக்கு ஆசீர்வாதஞ் செய்தபின்பு தன் மனைவியாகிய சுபத்திரையை தன் அண்ணனிடத்தில் ஒப்புவித்தான். அந்த யாதவசேனை வீரர்களும் மகாராஜாவுக்குச் செலுத்தவேண்டிய மரியாதை செய்ய அவரும் இவர்களுக்குத் தக்கபடி மரியாதைகள் செய்து சபையிலுட்காரவைத்துத் தன் தம்பிமார்களுடனே தாமுமிருந்து சுபத்திரையைத் தங்கள் மனைக்கு வந்த லக்ஷ்மிதேவி யென்று நினைத்து மிக ஆனந்தத்தைப் பெற்றிருந்தார். யாதவசேனைகள் துவாரகைக்குத் திரும்பியபின், ஸ்ரீ கிருஷ்ணனே யாதுக்கும் காரணமாகினுரென்று சகலரும் பேசிக்கொண்டார்கள். பிறகு ஒருவாறு பலராமர் சாந்தமடைந்து சுபத்திரைக்கு நடத்தவேண்டிய வரிசை முதலியவைகளை எடுத்துக்கொண்டு பலவித வாத்தியங்கள் முழங்க புறப்பட்டார்கள். தம்முடன் வரும் சேனையின் ஓர் பாகத்தை முன்னதாக சுபத்ரார்ச்சுனர்களோடு கூடிக்கொண்டு போகும்படி அனுப்பினுர்கள். அதுதான் அர்ச்சுனன் பட்டணம் பிரவேகிக்கிறதற்குள்ளே போய்ச்சேர்ந்தது.

பிறகு அக்ரூரன் - கிருதவர்மன் - உத்தவர் - சத்தியகன் - சாத்தகி-பிரத்தியும்னன்-சாம்பன்-நிசிதன்-சங்கு - சாருதேஷணன்-சல்லி-விபுருது-சாரணன்-கதன் முதலாகிய யாதவர்களெல்லாம் பலராம கிருஷ்ணர்களுடனே மகா சேனைகளைக் கூட்டிக்கொண்டு வெகு சீக்கிரத்தில் இந்திரப்பிரஸ்தம் போய்ச் சேர்ந்திருந்தார்கள். இவ்வண்ணமாக இவர்கள் வருகிறசேதி கேட்டுத் தருமபுத்திர மகாராஜன் மிகவும் பரபரப்புடனே புரோகிதர் பிராம்மணர் முதலாகிய பேர்களுடனே ஸ்ரீ கிருஷ்ணனை எதிர்கொள்ள நகுல சகாதேவர்களையனுப்பித் தாம் பீமனுடனே பலதேவரை யெதிர்கொண்டார். இவ்வாருக பாண்டவர்கள் எதிர்கொள்ள ஒருவரையொருவர் கண்டு மகிழ்ந்து க்ஷேமங்களை விசாரித்துக்கொண்டு மூத்தவர்களைத் தெண்டனிட்டும் இளையவர்களை ஆசீர்வதித்தும் பட்டணத்துக்குப்போய் அரண்மனையைச் சேர்ந்தார்கள். பின்பு தருமபுத்திரர் சகல யாதவர்களுக்கும் அவரவர்களுக்குத் தகுந்தபடி பூஜைகளைச் செய்து விருந்து செய்வித்தார். பலராம கிருஷ்ணர்கள் வந்ததினுலே குந்திக்கும் திரோபதைக்கும் உண்டாகிய சந்தோஷத்துக்கு அளவில்லை.

பாண்டவர்களும் அவ்விருவரையுங் கண்டு பேரானந்த மடைந்தார்கள். யாதவர்களும் பாண்டவர்களால் மரியாதை செய்யப்பட்டு மகளாகிய சுபத்திரையைக் கண்டு சந்தோஷப் பட்டு வாழ்த்தினார்கள்.

பின்பு ஸ்ரீ கிருஷ்ணன் தன் தங்கைக்கு நவரத்தினங்க ளிழைத்த சகல ஆபரணங்களும் விசித்திரமாகிய வஸ்திரங் களும் அனேக பாத்திரங்களும் குதிரைகள் யானைகள் ஒட்டகங்கள் தேர்கள் பசுமாடுகள் பல்லக்குகள் கட்டில் பெட்டி முதலாதுகளை யனேகமாய்ச் சீதனங் கொடுத்தார். மருமகனாகிய அர்ச்சுனனுக்கும் பல பூஷணங்கள் - ஆசனங் கள்-வேலைக்காரர்-முதலானவைகளுங் கொடுத்தார். பலராமர் விசேஷமாக அர்ச்சுனனுக்கு ஒரு பாதபீடங் கொடுத்தார். இப்படி வரிசை கொடுத்து தங்கையைக் கட்டியணைத்து முத்தமிட்டுத் துரோபதியினிடத்துக்கு அவளை யழைத்துக் கொண்டுபோய் பாஞ்சாலி! இவள் உன்னுடைய அடைக் கலம். நீதான் இவளைக் காப்பாற்றவேணுமென்று சொல் லிக் குந்தியையுங் கண்டு சொல்லி இப்படிச் சிலகாலம் அவ்விடத்திலே பாண்டவர்களோடுகூட மகிழ்ந்துகொண்டு மிக விநோதமாயிருந்து சகல யாதவர்களும் பாண்டவர்க ளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தங்களூருக்குப் புறப்படு மளவில், அர்ச்சுனன் சுபத்திரை முதலானபேர்களும் ஸ்ரீ கிருஷ்ணனை யிருக்கச்சொல்லி பலாத்காரம்செய்தார்கள். அதற்கு ஸ்ரீ கிருஷ்ணன் சம்மதித்து சகல யாதவர்களுக்கும் விடைகொடுத் தனுப்பிவிட்டு தான் மாத்திரம் அங்கே சில நாள் தங்கியிருந்தார்.

இவ்வாறிருக்கிற நாளையில் பாண்டவர்களுக்குத் தோழ னாகியும், சுவாமியினிடத்தில் ஏகாந்த பக்தியுடையவனும், தவத்திற் சிறந்தவனும், சகல வேத சாஸ்திரங்களை நன்று யறிந்தவனும், ஒருவரையும் யாசிக்காமல் தற்செயலாய் நேர்ந்த ஆகாரத்தி லன்புகூர்ந்து அதிதிகளைத் திருப்தி செய்வித்து சார்வ காலமும் ஸ்ரீ கிருஷ்ண தியானஞ்செய்து கொண்டு மிருக்கிற சுருதிதேவ னென்கிற மறையோன் மிதுலா பட்டணத்தில் வாசஞ்செய்து கொண்டிருந்தான். அந்த மிதுலா பட்டணத்திற் கரசனான பகுளாசுவ னென்பவன் ஆன்மாவினிடத்தி லாசையும் அகங்காரமு மற்றவனாய் ஸ்ரீ பகவானிடத்தில் நிரந்தர பக்தி செலுத்துகிறவனாய் அந்தச் சுருதிதேவனென்கிற அந்தணனுக்குத் தோழனா யிருந்தான்.

அவர்களை பகவான் அநுக்கிரகிக்க வேண்டுமென்று கருதி பாண்டவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு தாருகனை இரதத்தைச் சித்தப்படுத்தச் சொல்லி அதன்மீதுட்கார்ந்து வியாசர்-நாரதர்-வாமதேவர்- அத்திரி-பாசுராமர் - அருணி-பிரகஸ்பதி-கண்வர்-மைத்திரேயர்-சியவனர் முதலிய, ரிஷிகளுட னெழுந்தருளுகிறபோது உதயகாலத்தில் பிராமணோத் தமர்கள் அர்க்கியப் பிரதானஞ்செய்து சூரியனைக் காணுவது போல் மார்க்கத்திலிருக்கிற குருதேசம்-மச்சதேசம்-பாஞ்சால தேசம்-காசி-கேகயதேச மிவ்விடங்களிலுள்ள ஜனங்கள் அர்க்கிய பாத்தியங்களாற் பூஜித்து புஷ்பங்களை இறைத்துக் கண்டுகொள்ள அந்த ஜனங்களுடைய பாபத்தை தமது நோக்கினால் ஆக்கிரமித்து மிதுலா பட்டணத்திற் கெழுந் தருள்வதை அப்பட்டணத்திலுள்ள ஜனங்கள் கேள்வி யுற்றுச் சந்தோஷித்து அர்க்கிய பாத்திய முதலிய வஸ்துக் களும் பூரணகும்பங்களு மெடுத்துக்கொண்டு பூஜித்து ரிஷி களையுஞ் சேவித்தார்கள். சுருதிதேவனும் அப்பட்டணத்திற் கதிபனான பகுளாசுவனும் சுவாமி நம்மை அனுக்கிரகிக்க வேண்டி இவ்விடத்திற் கெழுந்தருளினாரென்று அதிவேக மாக வோடிவந்து சுவாமியைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து சகலவித பூஜைகளையுஞ் செய்து தங்கள் கிரகங்களுக் கெழுந் தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அப்போது சுவாமி இரண்டு ரூபமாக வடிவுகொண்டு இரண்டுபேருடைய அகத்திற்கு எழுந்தருளினார்.

அப்போதரசன் சுவாமியை அர்க்கியபாத்திய முதலிய வற்றாற் பூஜித்து நவரத்தின சிங்காதனத்தி லெழுந்தருளச் செய்து அந்த மகா ரிஷிகளையும் பூஜித்து ஆசனத்திலெழுந் தருளச் செய்து அவர்களுடைய திருவடிகளை விளக்கி அந்தத் தீர்த்தத்தைத் தனது குடும்பத்துடன் சிரசில் தரித் துக்கொண்டு தூபதீப நைவேத்தியங்களாலும் தாம்பூல முதலியவைகளாலுந் திருப்தி செய்வித்து, சுவாமியைச் சப்பிரகூட மஞ்சத்தின்மீது திருக்கண்வளர்த்தி அவருடைய திருவடிகளை வருடிக்கொண்டே அந்த பகவானைப் பார்த்து சகல பூதாந்தரியாமியாகவும் சர்வசாட்சியாகவும் யோகி களுக்கு துர்லபராகியும் அடியார்களுக்கு சுலபராகியும் சத்திய சங்கல்பனாயு மிருப்பதால் ஆதியிலருளிச் செய்த வார்த்தை பொய்யாகக் கூடாதென்றும் ஏகாந்தமாய் பக்தி செலுத்துகிறவர்களிடத்தில் விசேஷ அன்புடையவனென் றும் அருளிச்செய்தபடி தப்பாமலெழுந்தருளியதற்கு மிகவுந் துதிசெய்து வியப்படைந்தனன். அந்த சுருதிதேவன் ரிஷி

கணங்களை விசேஷமாய்ப் பூஜிக்காமல் மாதவனைமாத்திரம் விசேஷமாய்ப் பூஜித்தபடியால் அந்த பகவான் அம்மறையோனை நோக்கி இந்த ரிஷிகள் எந்த ஜலத்தைத் தொடுகிறார்களோ அதுவே புண்ணியதீர்த்த மாகும்படிச் செய்யத் தக்கின மகிமையை யுடையவர்கள். சகல தேவர்களுடைய சொரூபம் யான், என்னுடைய சொரூபம் வேதம், அந்த வேதங்களுடைய சொரூபம் மறையோர். அவர்களுக்கு மிஞ்சினவர்கள் உலகிலில்லை. அவர்களைச் சாமான்னிய மானிடர்க ளென்றெண்ணி அவர்களைப் பழித்து என்னைப் பூஜித்ததினால் ஒரு பயனையுமடைய மாட்டார்கள். அந்த வேதியரைப் பூஜிக்கிறவன் தான் ஞானி. அவனே எனக்கு மிகவும் இஷ்டனென்று ஸ்ரீ பகவானால் ஆக்கியாபிக்கப்பட்டு அந்தச் சுவாமியின் எதிரில்தானே அந்த ரிஷிகளை அனேக விதமாய்ப் பூஜித்து உபசரித்து சந்தோஷப்படுத்தினார். ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவ்விடத்தில் சில நாள் வாசஞ் செய்து அந்த ரிஷிகணங்களுடன் துவாரகாபட்டணத்திற் கெழுந்தருளினார்.



## எண்பத்தேழாவது அத்தியாயம்



*நாராயண ரிஷிக்கும் நாரத மகரிஷிக்கும் உண்டான சம்வாதத்தினால் சுருதி கீதை வர்ணிக்கப்பட்டதைச் சொல்லப்படுகிறது.*

பரிக்ஷித்து மகாராஜன் சுகப்பிரம்மரிஷியை நோக்கி, சுவாமிகளே! வாக்குக்கு விஷயமாகாமலும் நிர்குணமாயும் ஒன்றுடனும் யாதொரு சம்பந்த மில்லாமலிருக்கின்ற பரப் பிரம்மத்தினுடைய குணாதிசயங்களைச் சொல்லிக்கொண்டிரா நின்ற சுருதிகளானது ரூடி-லக்ஷணை-யோகமாகிய சம்மந்தங்களொன்றுஞ் சம்பவியாதிருக்க அவைகள் சாக்ஷாத்தாக எந்தப் பிரகாரம் பிரதிபாதித்துக் கொண்டிருக்கின்றனவோ அவைகளைக் கிருபைசெய்ய வேண்டுமென்று கேட்க, ஸ்ரீ சுகர் சொல்லுகின்றார்.

அரசனே! சர்வக்கியான பரமாத்துமா சீவர்களுக்கு ரூபாதி விஷயங்களையறிய நிமித்தமாகவும், சொர்க்காதி லோக போகார்த்தமாகவும் சன்ம லட்சணமான கர்ம நிமித்தமாகவும், மோக்ஷத்தின் பொருட்டாகவும், புத்தி இந்திரியங்கள் பிராணன் முதலான உபாதிகளை சிருஷ்டித் தார். சுருதிகள் சர்வக்ஞராயும் சர்வ வல்லவராயும் சமஸ்த

கலியாண குணங்களுக்கிருப்பிடமாயும் சச்சிதானந்த ரூபராயுமிருக்கிற அப்பரமாத்துமாவையே பிரதிபாதித்துக் கொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட வேதத்தை எவர்கள் ஆக்ஷேப குதர்க்கங்களைப் பண்ணுமல் சிரத்தையுடனே அத்தியயனம் பண்ணித் தரிக்கின்றூர்களோ, அவர்கள் நிஷ்காமிகளாயும் யாதொரு பற்றில்லாதவர்களுமாகி பரம பதத்தையே யடைவார்கள். இது விஷயமாக நாரத மகாரிஷிக்கும் நாராயண ரிஷிக்கும் சம்வாத ரூபமாகியும் அதற்கு ஸ்ரீமந் நாராயணுற் சொல்லப்பட்டுமிருக்கிற இதிஹாசத்தைச் சொல்லுகிறேன்:

ஒரு காலத்தில் நாரதர் லோக சஞ்சாரஞ் செய்து கொண்டு வருகிறபோது இந்திரிய நிக்ரகஞ் செய்து தருமக்கியானத்துடன் மானிடருக்கு க்ஷேமமுண்டாகும் பொருட்டு கற்பகால பரியந்தமும் தபசு பண்ணிக்கொண்டிருக்கிற நாராயண ரிஷியின் ஆசிரமமடைந்து அவரைப் பணிந்து நீர் இப்போது பிரஸ்னம் செய்த விஷயத்தைப் பற்றி வினவினூர். அப்போது நாராயணரிஷி சொல்லுகிறூர்: நாரதமாமுனிவரே! பூர்வத்தில் சனலோகத்தில் வாசஞ்செய்யும் பிரம்மாவினுடைய மானச புத்திரர்களான ஜிதேந்திரியர்களான ரிஷீஸ்வரர்களுக்கு வேதங்களில் முடிவாகச் சொல்லும் பிரமத்தைப்பற்றி பிரஸ்னை யுண்டாயிற்று. அப்போதிருந்தவர்கள் கியானம்-தபசு-சீலம்-இவற்றில் சமானர்களாயிருந்தாலும் தங்களில் ஒருவரைச் சொல்லுகின்றவராகவும், மற்றவர்கள் கேட்பவர்களாகவும், கற்பித்து விசாரித்ததில் சனந்தனர் சொல்லுகின்றூர்: ரிஷிகளே! தம்மாலே சிருஷ்டிக்கப்பட்ட இந்தப் பிரபஞ்சத்தை சத்துவ ரஜஸ் தமோ மயங்களான சக்திகளோடு மகாப் பிரளயகாலத்தில் உபசங்காரம்பண்ணி யோகநித்திரை செய்பவர்போலிரானின்ற பரமாத்துமனுடைய பிரதம சுவாசத்தினின்று முண்டாகிய வேதங்கள் அந்த பரமாத்துமனுடைய அனந்த கல்யாண குணங்களைச் சொல்லும் வாக்கியங்களினுல் அவரை யெழுப்பியன. ஸ்வாமீ! ஸ்தாவர ஜங்கமங்களைச் சரீரங்களாகவுடைய சீவர்களுக்கு அனந்தாதி குணங்களை மறைத்தலின் பொருட்டுச் சத்துவ ரஜஸ் தமோ குணங்களாலாகிய அக்கியானத்தை நாசம்பண்ணக் கடவீர். தேவரீர் சொரூபத்திலேயே சமஸ்த ஐஸ்வரியங்களையும் அடைந்திருக்கிறீர். நீரே சமஸ்த சீவர்களுக்கும் அந்தர்யாமியாயிருந்து சக்திகளை விருத்திசெய்து வைக்கின்றீர். ஆகையினுல் சீவர்கள் ஞான முதலானதால் சுதந்திரர்களாகாம லிருக்கின்றூர்கள்.

வேதமானது சிருஷ்டியாதி காலங்களில் மாயைகளினாலே கிரீடைபண்ணிக் கொண்டிரானின்ற தேவரீரை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்கின்றது. வேதங்களானது இந்திரன் முதலான சீவராசிகளுடன் கூடியிருக்கிற இந்தப் பிரபஞ்சம் பரப்பிர்மத்தினுடைய சேஷமாகையால் பரப்பிரம்மமென்றே அறியப்படுகிறது. கட முதலான காரியங்களுக்கு மண்ணிலுற்பத்தி லயங்கள் எப்படி யுண்டாகின்றனவோ, அப்படிப்போல விகாரமில்லாததாயும் சர்வத்திற்கும் காரணமாயுமிருக்கிற யாதொரு பிரம்மத்தினிடத்தினின்று சமஸ்தமும் உண்டாயிருக்கின்றன.

வேதங்கள் உம்மையே சர்வ காரணரென்றும் பரமார்த்தபூதரென்றும் சொல்லுகின்றன. திரிகுணமான மாயையாகிய நாட்டியப்பெண்ணை நிர்த்தனம் பண்ணி வைக்கின்றவர்களே விவேகிகள். தேவரீர் சர்வ காரணரானபடியால் பரமாத்மரென்று நிச்சயித்து சகல லோகங்களுடைய பாபங்களை நாசம்பண்ணுந் தேவரீருடைய கீர்த்தியாகிற அமிர்த சமுத்திரத்தில் முழுகிச் சகல தாபங்களையும் விட்டு விடுகிறார்கள். பரமபுருஷரே! உம்முடைய திவ்ய ஸ்வரூப சாக்ஷாத்காரமாகிய அந்தக்கரணத்தினுடைய தர்மங்களான ராகத்வேஷாதிகளையும் வார்த்தீக முதலானவைகளையும் விட்டவர்களாய் சர்வகாலமும் பரிபூரணானந்தானுபவத்தை யுடையதான தேவரீருடைய ஸ்வரூபத்தையே சேவித்துக் கொண்டிருக்கிற அவர்கள் சகல துக்கத்தையும் விட்டொழிந்தவர்களாகின்றார்கள். யாதொரு பிராணிகள் தேவரீரிடத்தில் அசஞ்சலமான பக்தி யுடைத்தாயிருக்கிறார்களோ அவர்களே ஜன்ம சாபல்யத்தை யுடையவர்கள். தேவரீர் அந்தரியாமியாயிருப்பதால் உம்மிடத்தில் பக்தி யில்லாதவர்களுடைய அகங்கார முதலானவை சாமர்த்தியத்தை யுடையவையாய் சமஷ்டி ரூபமான பிரம்மாண்டத்தையும் வியஷ்டி ரூபமான தேகத்தையும் சிருஷ்டிக்கத் தக்கவைகளாயிருக்கின்றன. அன்னமயம்-பிராணமயம்-மனோமயம் - விஞ்ஞானமயம் - ஆநந்தமயமான தேகமுதலான வைந்து கோசங்களுக்கு மப்பால் யாதொரு பிரம்மம் சர்வத்துக்கு மாதாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றதோ! ஸ்தூல சூட்சமங்களான தேகாதிகளைக் காட்டிலும் பரமமாயும் சாக்ஷியாயும் நித்தியமாயும் சத்தியமாயும் தேக முதலானவைகளில் சம்பந்தமில்லாமலு மிருக்கின்ற யாதொரு பிரம்மம் சொல்லப்படுகிறதோ! தேவரீர் அந்தப் பிரம் மமயமே யாகின்றீர்.

ரிஷீஸ்வரர்களுடைய சம்பிரதாய மார்க்கங்களினாலே எவர்கள் இரஜோ குணத்தினாலே மறைக்கப்பட்ட கியானத்தை யுடையவர்களா யிருக்கிறார்களோ, அவர்கள் மணிபூரக மென்னப்பட்ட ஸ்தானத்திலிரா நின்ற பரப்பிரம்மத்தைத் தியானித்துக் கொண்டிருக்கிறார்கள். ஞானிகள் நாடிகளுக்கு ஆசிரயமான இருதயத்திலிருக்குஞ் சூட்சுமமான பிரம்மத்தையே உபாசிக்கின்றார்கள். அந்த இருதயத்தினின்றும் உம்முடைய ஆவிற்பவத்திற்கு ஸ்தானமாயும் சிரேஷ்டமாயு மிருக்கின்ற நாடியானது மூலாதாரத்தைப் பற்றிக்கொண்டு இருதய மத்தியினின்று பிரம ரந்தரத்தைக் குறித்து உண்டா யிருக்கிற அந்தச் சூட்சும நாடியை ஞானிக ளடைந்து மிருத்துவுக்கு ஏதுவான சமுசாரத்திற் றிரும்பவும் விழாமல் பரப்பிரமமான தேவரீரையே உபாசிக்கிறார்கள். தேவரீராலே நிருமாணிக்கப்பட்ட மனுஷியாதி தேகங்களில் அவைகளுக்குக் காரணராய் முன்னமே அவைகளிலிருந்தாலும் திரும்பவு மவைகளிற் பிரவேசித்து அந்தந்தப் பிரகாரம் பிரகாசிக்கின்றீர். ஆகையால் அசத்துக்களான இந்தத் தேகமுதலானவைகளில் சத்தியமாயும் பரிபூரணமாயும் ஏகரூபமாயு மிருக்கிற உம்முடைய ஸ்வரூபத்தை நிர்மலமான புத்தியை யுடையோர்கள் அறிந்து இகபரலோகத்திலும் இச்சையில்லாதவர்களாய் உபாசிக்கின்றார்கள். தங்கள் தங்களுடைய கர்மங்களால் வரும் இத்தேகங்களில் சுக துக்கங்களை யனுபவிக்கும் ஜீவனுடைய தத்துவத்தை நன்று யுணர்ந்த ஞானிகள் தேவரீருடைய திருவடிகளைச் சர்வ காலமுஞ் சேவித்துக் கொண்டிருக்கிறார்கள். பூமியிலிதுவே உசித தர்மமாக விருக்கின்றது.

பிராணன் மனது இந்திரியங்களாகியவைகளை நிக்கிரகித்த ரிஷிகள் உம்மிட ஸ்மரண வைராக்கியத்தினால் உம்மையே யடைகிறார்கள். ஒப்பில்லாத உமது புஜதண்டங்களில் கர்ம புத்தியையுடைய ஸ்திரீகளும் அந்த பகவத் தத்துவத்தையே யடைகிறார்கள். பகவானே! இந்த ஜகத்தில் உற்பத்தி நாசங்களை யுடைய எந்தப் புருஷன்தான் உமது சொரூபத்தை அறிவன்? உம்மிடத்தில் நின்றும் பிரம்மனும் பின்பு தேவர்களு முண்டானார்கள். தேவரீர் எப்போது சமஸ்த பிரபஞ்சத்தையும் ஆக்ரிஷித்துக்கொண்டு சயனித்துக்கொள்ளுகின்றீரோ அப்போது ஸ்தூலமான ஆகாச முதலியவைகளும் சூட்சமமான மகத்துவமுமில்லை. ஸ்தூல சூட்சுமங்களாகிய சரீரமும் சிருஷ்டிக்கு நிமித்தமான காலவேகமும் இந்திரியம் பிராணன் முதலானதும் இல்லை. இது

களைச் சொல்லாநின்ற சாஸ்திரமுமில்லை. ஆகையால் தேவரீரே சரணமென்று சிரவணம் கீர்த்தனம் முதலான பக்தியே பண்ணத் தக்கது. மனதினால் மாத்திரம் பிரகாசிக்கப் பட்டும் திரிகுண ஸ்வரூபயான சீவனோடு கூடிக்கொண்டு மிருக்கிற இந்தப் பிரபஞ்சமானது அசத்தா யிருந்துக் கொண்டே சத்தியமாயிருக்கிற உம்மிடத்தில் சத்துபோல விளங்குகின்றது. ஆத்துமக் கியானிகள் போக்தர்களான ஜீவர்கள் போக்கியர்களான வஸ்துக்கள் பயமான இந்தப் பிரபஞ்சத்தை பரமாத்தும சொரூபமானபடியால் பரமாத்மா வென்றே அறிகின்றார்கள். எவர்கள் உம்மையே சகல ஆத் மாக்களுக்கும் அந்தரியாமியாக வுபாசிக்கிறார்களோ அவர்கள் மிருத்துவை ஜயித்து முக்தர்களாகிறார்கள். எவர்களும்மிடத் தில் பக்தி செய்கிறார்களோ அவர்கள் உண்மையாய்த் தன்னை யும் இதரர்களையும் பாவனமாக்குகிறார்கள். தேவரீர் இந்திரிய சம்பந்தமில்லாமலே சமஸ்த ஜீவர்களுடைய இந்திரிய சக்தி களைப் பிரவிர்த்தித்துக்கொண்டு சுவயம் பிரகாசராகவே விளங்குகின்றீர். உம்முடைய மாயையான அக்கியானத்தை யடைந்த இந்திரன் முதலான தேவர்களும் ஜகத்கர்த்தர்க ளான பிரம்மன் முதலானவர்களும் தேவரீரைப் பூஜித்துக் கொண் டிருக்கின்றார்கள். பிரம்மாதிகளும் பிரஜைகளால் கொடுக்கப்பட்ட அவ்வியகவ்விய ஸ்வரூபமான பூஜையை யனுபவித்துக்கொண்டு தேவரீரையே பூஜித்து தத்தமக்கு ஆக்கியாபிக்கப்பட்டிருக்கும் கர்மங்களைச் செய்துகொண் டிருக்கிறார்கள்.

நித்திய முக்தரே! மாயையைப் பார்க்கிலும் பராயும் சங்கமில்லாதவராயு மிருக்கிற உம்முடைய கடாக்ஷத்தினால் உமக்கு எப்போது மாயையினாலே லீலையுண்டாகிறதோ அப் போது ஸ்தாவர ஜங்கம தேகங்களையுடைய ஜீவர்கள் உம்மு டைய அந்தக் கடாட்சத்தினாலேயே உண்டாகும் கர்ம நிமித்தமான சரீரங்களை யுடையவர்களாய் விடுகின்றார்கள். மனோவாக்குகளுக் கெட்டாதவரான உமக்கு ஜீவர்களில் அபேதமானவைக ளில்லையன்றோ? ஜீவாத்மாக்கள் தன் தன் சுயரூபத்தினாலேயே நித்தியர்களாயும் சர்வ பரிபூர ணர்களாயு மானார்களேயானால் அவர்களுக்குப் பரதந் திரத்துவமானது கூடாது. அவர்கள் உம்மால் சிட்சிக்கத் தக்கவர்களன்று அப்படியானால் ஈஸ்வரன் வேறென்பதும் ஜீவர்கள் பரதந்திரர்களென்பதும் கூடுமென்றால் பிரம் மத்தையறிவோமென்று சொல்பவர்களுக்கு அந்த பிரம்மம் அறியக் கூடாததானபடியினால் அறிந்ததென்ற பிரம்ம

மானது தன் விகாரமான சீவனுக்குக் காரணமானபடியி னுலே அதை விடாமல் அத்துடனே கூடவிருந்து கொண்டு ஜீவனுக்கு நியந்தாவா யிருக்கின்றதினுல் அந்தப் பிரம்மமானது வுபாதியினுல் ஜீவனென்றபேருடையதாயிற்று. வேதத்தில் ஜனனமில்லையென்கிற பிரகிருதி புருஷர்களுக்கு வுற்பத்தியானது கூடாது. அவர்களிருவர் கூடினதினுலே வாயுவும் ஜலமும் சம்பந்தப் பட்டதினுலே குமிழிகளுண்டா கின்றதுபோல பிராணன் முதலான வுபாதியையுடைய ஜீவர்க ளுண்டாகின்ருர்கள். இதனுலவர்களுக்கு ஜன்மமானது உண்மையாகாமற் போயிற்று. ஆகையால் இந்த ஜீவர்கள் காரண ஸ்வரூபமான தேவரீரிடத்தில் காரிய காரண சுய ரூபங்களான வுபாதிகளோடுகூட லயத்தை யடைகின் ருர்கள். சத்தென்பதாக தோன்றும் பிரபஞ்சத்திற்கு சத் தென்பது சித்திக்கமாட்டாது. பழுதையிற் ருேன்றும் பாம்பு பழுதையே யல்லது பாம்பல்லாதது போல, பிரபஞ்சமும் அசத்தே யன்றி சத்தன்று. அவித்தை யென்கிற பிரகிருதி யுடனே கூடிக்கொண்டிருக்கிற பரமாத்மா காரணமாக நிற்கின்றது. இப்படி யிரண்டினுலு முண்டாகின்ற பிரபஞ்சம் வஸ்துவன்று. வாரீர் பகவானே! தேவரீருடைய வேதஸ்வரூப மான வாக்கானது கர்மத்திலே சிரத்தையுடைய பக்தி ஈனர் களை இப்பிரபஞ்சம் சத்தென்றே மோகிப்பிக்கின்றது. இந்தப் பிரபஞ்சமானது சிருஷ்டிக்கு முன்னும் மகாப் பிரளயத்திற் குப் பின்னும் அநித்தியமாகையால் மத்தியில் ஆனந்த ஸ்வ ரூபியான தேவரீரிடத்தில் அசத்தாகவே விளங்குகிற தென்று நிச்சயிக்கப்பட்டது.

ஜீவாத்மாவானவன் தேவரீருடைய மாயையினுலே அஞ் ஞானத்தை யடைந்து சத்துவாதி குணங்களையும் தேகேந்திரி யாதிகளையு மடைந்து பின்பு அவைகளின் தர்மங்களையு மடைந்து மறைக்கப்பட்ட ஆனந்தாதி குணங்களை யுடைய வனுய் சமுசாரத்தை யடைகின்ருன். பகவானே! சொர்க் காதிபதிகளான பிரமன் முதலானவர்களும் தேவரீருடைய அந்தத்தை யறிந்தவர்களன்று. தேவரீரும் தேவரீருடைய அந்தத்தை யறிந்தவரன்றென்றே சொல்ல வேண்டும். ஏனெனில் ஆதியந்தமற்ற பரம்பொருளாக தாம் விளங்கு கிறீர். தேவரீருடைய அனந்த கலியாண குணங்கள் அனந் தங்களான படியாலும், நிர்க்குணப் பிர்ம்ம விஷயமானபடி யாலும், வேதங்கள் பிரபஞ்ச நிஷேதமுகமாய் தேவரீரிடத் தில் சம பக்தியை யுடையவைகளாய் நிற்கின்றது,

நாரத மகாரிஷியே! பிரம்ம புத்திரர்களான ஜனகாதிகள் இந்தப் பிரகாரம் பரமாத்தும விஷயமான தத்துவங்களைக் கேட்டுப் பரமாத்மாவினுடைய கதியை யறிந்து சித்தர்களாய் பின்பு சனந்தன மகாரிஷியை நன்ருகப் பூஜித்தார்கள். இந்தப் பிரகாரம் வேதங்கள் - உபநிஷத்துக்கள் புராணங்கள் - இவைகள் பிரம்ம புத்திரர்களாயும் ஆகாசத்திலே சஞ்சரிக்கும் மகானுபாவர்களாயு மிருக்கின்ற நந்தனர் முதலான யோகிகளாலே நிச்சயம் பண்ணப்பட்டது. பிரம்ம புத்திரரான நாரத மகாரிஷியே! நீரும் இந்தப் பிரகாரம் ஆத்தும தத்துவத்தை அறிந்து சிரத்தையுடனே பரமாத்துமாவினிடத்திலே ஸ்திரமான சித்தத்தை யுடையவராய்ச் சஞ்சரிக்கக்கடவீர்.

பரிக்ஷித்து மகாராஜனே! நாரத மகாரிஷி இந்தப் பிரகாரம் குருவான ஸ்ரீமந் நாராயணரிஷியினுலே சொல்லப்பட்ட ஆத்தும தத்துவத்தைக் கிரகித்து மிகவும் ஞானத்தை யுடையவராய் கிருதகிருத்தியராய் ஆதிரிஷியான பகவானைப் பிரணமம் செய்து நிர்மலமான ஆத்துமாவையுள்ள அவருடைய சிஷியர்களையும் பிரணமம் செய்து அவரிடம் விடைபெற்றுக்கொண்டு எனக்கு சாக்ஷாத் பிதாவான வியாச பகவானுடைய ஆசீர்மத்தை வந்தடைந்து அவரால் பூஜிக்கப்பட்டு தான் நாராயண ரிஷியினிடங் கேட்ட அர்த்தத்தை வியாசர் பொருட்டுச் சொன்னர். வாராய் மகாராஜனே! யாதொரு தத்துவத்தைக் கேட்டு ஞானமடைந்து இப்படியென்று சொல்லக்கூடாத நிர்க்குணமான பிரம்மத்தில் மனது பிரபவர்த்திக்குமோ அந்த தத்துவமானது உனக்கு நம்மால் வர்ணிக்கப்பட்டது. அப்படிப்பட்ட பிரம்ம சொரூபியான ஸ்ரீ பகவானைச் சரணுகதி யடைந்து காரண - காரிய ஸ்வரூபமான அவித்தையை விட்டு பகவானிடத்தில் இடைவிடாத ஞானத்தையுடையவன் ஜீவன் முக்தனுயிருப்பன்.



## எண்பத்தெட்டாவது அத்தியாயம்

*சிவபெருமானால் வரம்பெற்ற பஸ்மாசுரனை ஸ்ரீமந் நாராயணமூர்த்தி வென்றது சொல்லப்படுகிறது.*

சிவபக்தர்கள் ஐசுவரியவான்களாயும் விஷ்ணுபக்தர்கள் விரக்தராயுமிருப்பதன் காரணமென்னையென பரிக்ஷித்து வினவ, சுகர் சொல்லுகிறார்: சிவபிரானுக்குப் பாதி சரீரம் மடந்தையா யிருப்பதினால் தன்னைக் குறித்து தவஞ் செய்வோர்க்கு சீக்கிரத்தில் பிரத்தியக்ஷமாய் அவர்களுடைய யோக்கியதையை விசாரியாமலே இஷ்டமான வரத்தைக் கொடுத்துவிடுவார். இப்படி அனேகமானபேர்கள் இராஜஸ தாமச குணங்களையுடையவர்கள் வரம்பெற்று பூமியில் சங்கடப்படுத்தி யிருக்கின்றார்கள். கேசவபிரான் சாத்துவீகர்களையன்றி மற்றவர்களை மெச்சார். யாரை அனுக்கிரகிக்க வேண்டுமென்று கருதுகிறாரோ அவனுடைய சகல ஐஸ்வரியத்தையும் பறித்துக்கொண்டு அகங்கார முதலிய துர்ச் செய்கைகளைக் கருவறுத்து இரக்ஷிப்பரே யன்றி, எளிதில் இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய மாட்டார். அவர்களால் பின்னிட்டு ஒரு துன்பமும் நேரிடாது. சிவபெருமான் வரங் கொடுத்து எதிரிட்ட ஒருவனது கதையை சொல்லுகிறேன் கேள்.

சகனென்கிற ராக்ஷசனுடைய மகன் பஸ்மாசுரனென்பவன் யாரைக்குறித்துத் தவஞ்செய்தால் சீக்கிரத்தில் பயனடையலாமென்று யோசித்திருக்கையில், நாரதர் அவ்விடம் வந்து அவனுடன் சிவபெருமானைக் குறித்து தவஞ் செய்தால் சீக்கிரத்தில் பயனடையலாமென் றுரைக்க அது கேட்டு அவன் இமவத் பர்வதத்தின் தாழ்வரையில் சிவனைக் குறித்து அகோரமான தவஞ்செய்து தனது சரீரத்தினிலிருக்கிற மாம்சங்களைத் துண்டித்து அக்கினியில் ஹோமஞ் செய்து பின்பு தனது சிரத்தைத் துணித்து ஆகுதிசெய்ய யத்தனிக்க அப்போது சிவபெருமான் அவன் கையைப் பற்றி உன் தவத்திற்கு மெச்சினேன், வேண்டியிருக்கிற வரத்தைக் கேளென்றுரைக்க, அவன் என் கையை யார் தலையில் வைக்கிறேனே அவன் சாம்பலாகும்படி வரங் கொடுக்க வேண்டுமென்று கேட்டான். சிவபெருமான் தீர்க்க யோசனை செய்யாமல் அப்படியே தந்தேனென்று சொல்லி

விட்டார். அவனந்த வார்த்தையைச் சோதிக்கவேண்டி சிவன் றலையிற்றானே கையை வைக்கப்போனான். தன்னு டைய மெய்ப்பு தனக்கே தீங்காய் வந்ததென்று ஓடிப்போகை யில் பஸ்மாசுரனும் பின்றொடர்ந்தான். அப்படியே உலகெல் லாம் ஓடி நிர்வகித்துக் கொள்ளாமல் ஐவல்லிக்காயினி லொளித்தனர். அத்தருணத்தில் பஸ்மாசுரன் இலை இலை யாய் சோதித்துக் கொண்டிருந்தான். இதுகளைக் கண்டு ஸ்ரீமந்நாராயண மூர்த்தி இதென்ன பிரமாத மாயிற்றென்று சீக்கிரத்தில் பிரம்மசாரியாய் வடிவுகொண்டு அங்கே வந்து நின்று அசுரனை நோக்கி இப்படிக்கேன் அலைகிறாயென்று கேட்க அவன் தனது விருத்தாந்தத்தைச் சொல்லக் கேட்டு மாதவர் கலகலவென்று நகைத்து அடா மூடா மோசம் போனாயே! அவனுடைய யோக்கிதையை யறியாம லிவ்வ ளவு கஷ்டப்பட்டுப் பிரயோசன மில்லாமற் போயினையே. உனது அயோக்கியதையை யானென்ன சொல்லப்போகி றேன். அந்த சிவனுக்கு சத்தியமேது. அவன் மோசக்கார னாயிற்றே. மேலும் தக்ஷப்பிரஜாபதியால் பிசாசுகளுக்கு யஜமானனாகும்படி சபிக்கப் பட்டிருக்கின்றான்.

அதற்குத் தகுந்த புத்திதானேயிருக்கும். உனக்கவன் வரங்கொடுத்தது நிஜமேயானால் எதிரில் நின்று உத்தரவு சொல்லமாட்டானா? அவன் யோக்கியதையை இதிலறிந்து கொள். இந்தச் சந்தேகத்தை நிவர்த்தித்துக்கொள்ள அவனைக் கூடத் தேடவேண்டுமா? உனக்குள்ளே பார்த்து தெளியக்கூடாதா? வென்றுரைக்கவே, அந்த மூடன் இவர் சொல்வது சரிதானென் றெண்ணி தன் தலையின் மீதில் கையை வைத்துக்கொண்டு சாம்பலாகினான். அதுகண்டு சிவபெருமான் வெளிப்பட அவரை நோக்கி இப்படிப்பட்ட துஷ்டனுக்கும் வரங்கொடுக்கலாமோ? இனியாவது நிதா னித்து வரங்கொடுமென்று சொல்லி இருவருந் தங்களிருப் பிடஞ் சென்றனர்கள்.



## எண்பத்தொன்பதாவது அத்தியாயம்

*பிருகுமகா முனிவரால் மும்மூர்த்திகள் பரீட்சிக்கப்பட்டது சொல்லப்படுகிறது.*

மன்னர் மன்னனே! ஒருகாலத்தில் ரிஷிகளெல்லாம் ஒன்று சேர்ந்து மேருமலைச் சாரலில் ஒரு மகா யாகம் நிறைவேற்றினர்கள். அந்த யாக சபையில் முனிவர்களுக்குள் "மும்மூர்த்திகளில் சிறந்தவன் யாவன்?" என ஓர் விசாரம் ஏற்பட்டது. மூவரையும் பரீட்சித்து இவ்வுண்மையை அறிவோமென தீர்மானித்தும் அதனல் என்னகேடு விளையுமோ வென்று அஞ்சி சும்மாவிருந்தனர். பிருகு முனிவர் துணிவுடன் எழுந்து நின்று நீங்கள் இவ்விதம் மயங்குதற்கு காரணமேயில்லை. சுத்த சாத்விகப் பொருளான பரமன் யார்மீதும் எதற்காகவும் கோபிப்பதில்லை. ராஜஸ-தாமஸ மூர்த்திகள்தான் நம்மைக் கோபிப்பார்கள். அத்தகையர்களை நாம் கோபிக்க முடியாதோ? நல்லது நானே இக்காரியத்தை மேற்கொள்ளுகிறேன் என்று சில முனிவர்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

ஸ்ரீ உமாமஹேசருடைய ஸ்வபாவத்தை முன்னேயறிவோமென்று கைலாசகிரியைச் சேர்ந்து ஸ்ரீ நந்தியை நோக்கி தம்வரவை ஸ்ரீ ருத்திரபகவானுக்குத் தெரிவிக்கச் சொல்ல, ஸ்ரீ நந்தி அது தக்க சமயமன்றென்று சொல்லினர். அது கேட்டுப் பிருகு முனிவர் ஸ்ரீ கைலாசத்திலேயே ஏழு நாள் காத்திருந்தும் சிவதரிசனம் கிடையாமல் அதிவருத்த முற்றுத் தமது ஞான கண்ணினல் பார்க்கையில் ஸ்ரீ பரமசிவன் ஸ்ரீ உமாதேவியோடு சம்போக மோக சாகரத்தில் மூழ்கியிருப்பதை யறிந்து கோபித்து ஸ்ரீ சிவபிரானுக்கும் ஸ்ரீ உமாதேவிக்கும் இலிங்கமும் யோனியும் அற்றுவிழக் கடவதென்று சபித்துச் சென்றனர். நடந்ததை தெரிந்து கொண்டு சிவபிரான் உடனே பிருகு முனிவரை தருவித்து அவரை சாந்தப்படுத்தவேண்டி ஆலிங்கனம் செய்ய முயல, பிருகு மகா கோபங்கொண்டவராய் காமாந்த காரத்தில் படிந்துள்ள அசுத்தரான நீரா என்னை ஸ்பரிசிப்பதென்ன, சிவபிரான் மகா கோபமுடையவராய் அவரை தகிக்கும் பொருட்டு நெற்றிக் கண்ணைத் திறந்தார். அதுகண்ட பிருகுவும் அதி உக்கிராக்ராராய்த் தம்முடைய பாதத்தின் பெருவிரலிலுள்ள நயனக்கினியால் சிவநேத்திராக்கினியை ஜயங்

கொண்டு ஓ ருத்திரபகவானே! நீ இனிப் பிராம்மண்ய தெய்வ மாகாமற் போகக்கடவாய். உனக்கு நிவேதித்த நிவேதன மும் பிராம்மணாங்கிகார மாகாமற் போகக்கடவதென்று சபித்துவிட்டு, அங்கு நின்றும் புறப்பட்டுச் சத்திய லோகத் திற்குப்போய் ஸ்ரீ சதுர்முக பகவானைக் கண்டு யாதொரு வணக்கமுஞ் செய்யாமல் நின்றனர்.

அந்தப் பாரதி நாயகர் நம்முடைய புத்திரனாயிருந்தும் இந்தப் பிருகு நமக்கு யாதொரு வந்தனமுஞ் செய்யாம லிருக் கின்றானென்று மனவெறுப்புட னிருந்தனர். ஸ்ரீ பிருகு முனிவர் பிரம்மதேவரிடத்தில் ராஜசகுண மிருக்கக்கண்டு சீறி ஓ சதுர்முகனே! இன்று முதலாக உனக்குப் பூலோ கத்திலே ஆலயப் பிரதிஷ்டையில்லாமற் போகக்கடவ தென்று சாபந் தந்து அங்குநின்று அதி சீக்கிரமாக ஸ்ரீ வை குண்டத்திற்குச் சென்று ஸ்ரீ அநந்த சயனத்தின்மேல் திருக் கண்வளர்கின்ற சத்துச்சித்தானந்த ஸ்வரூபனைத் தமது பாதத்தினால் எட்டியுதைத்தனர். ஸ்ரீ பக்த பராதீனராகிய பகவான் புத்திரர் மேலே விழத் தாய் உள மகிழ்வதுபோல அம்முநீந்திரருடைய அற்ப புத்தியைச் சிறிதும் பாராட்டா மல் புளகாங்கிதராய் பொருக்கென எழுந்து என்னையனே! இன்று என்னிமித்தமாக உன்னுடைய பத சரோருகம் நொந்து வாட்டமுற்றதே யென்று இரங்கிக் கொண்டு நின்றனர்.

ஸ்ரீ முகுந்தரே ஸ்ரீமத் நந்தகல்யாணகுண நிதி என்று தியான பூர்வகமாய்த் துதித்து பிருகுமுனிவர் தம் இரண்டு கரங்களையுஞ் சென்னியின்மேல் குவித்துக்கொண்டு ஸ்ரீ சக்கர தாரே! சர்வஜகத் காரண பரம்பொருளை அறியவேண்டி அடியேன் புத்தியீனத்தால் தேவர்பக்கல் செய்த தோஷத்தை க்ஷமித்தருளுமென்று விடை பெற்றுக்கொண்டு தம்முடன் கூட வந்த மஹரிஷி கணங்கள் சூழ மேருமலைச் சாரலில் யாகங்களைச் செய்துகொண்டிருக்கிற பிரம்ஹவாதிகளான முனீந்திரர்களுடைய சபா சதனத்தில் வந்து சேர்ந்து இவ் வுலக கர்த்தர்களாகிய மும்மூர்த்திகளுடைய குணாதிசய மின்னதென்றும் அவர்களுள் ஸ்ரீ அச்சுதரே பரப்பிரம்ம ஸ்வரூபரென்றும் அந்த மஹரிஷிகள் யாவருக்கும் சொல்ல, அவர்கள் கேட்டு மிகவும் ஆச்சரியத்துடன் அருந்தெய்வ பரத்துவ பிரபுத்துவ சந்தேக நிவாரண மானசீகத்தை யடைந்தனர்.



## தொண்ணூறுவது அத்தியாயம்

ஸ்ரீ பகவான் இறந்த மக்களை தந்தது சொல்லப்படுகிறது.

பரிக்ஷித்து மன்னனே! ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஸ்ரீ துவாரகையில் சந்தோஷ சாம்பிராஜ்ஜியத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிற காலத்தில், அத்திவ்விய நகரத்தைச் சார்ந்த குசஸ்தலி என்னும் உபநகரத்தில் சுகித்துக்கொண்டிருந்த ஒரு பிராம்மணருடைய பத்தினிக்கு எட்டு குழந்தைகள் வரை ஜனித்து உடனே இறந்துகொண்டு போக அதைக் கொண்டு ராஜசபையில் வைத்து "அரசனானவன் தர்மசாஸ்திர முறையை யறிந்து நீதிவழுவாமல் அதிகாரஞ் செலுத்துவானேயாகில் பிரஜைகளுக்கு இப்படிப்பட்ட துக்கம் நேரிடமாட்டாது" என்று பலவிதமாக நிந்தித்து அச்சிசுவை எடுத்துக் கொண்டுபோய் புதைத்து விடுவது வழக்கம். பின்பு ஒன்பதாவது சந்ததியுண்டாகி இறக்க அந்தச் சிசுவையும் முன்போலவே அந்த வேதியன் ராஜதுவாரத்தில் வைத்து ராஜநிந்தனை செய்யாநிற்கையில் அங்கு ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய தரிசனார்த்தமாக வந்த அர்ச்சுனன் அந்த விப்பிரனைப்பார்த்து "நீர் வருந்தவேண்டாம். உமது பத்தினி அடுத்த தடவை கர்ப்பமுண்டாய்ப் பிரசவிக்கின்ற சமயத்தில் எனக்கு தெரிவித்தால் நானிவ்விடம் வந்திருந்து உனது சிசுவை ரட்சித்து பிழைக்கும்படி செய்கிறேன். நானப்படி உமது சிசுவை ரட்சிக்காவிடில் அக்கினியிற் பிரவேசிப்பேன்" என்று பிரமாண பூர்வமாகச் சொல்லினர்.

அந்தப்பிராம்மணர் அர்ச்சுனரை நோக்கி "இந்நகரத்திற்கதிபதிகளான பகவத் அம்சமாய் அவதரித்திருக்கும் ஸ்ரீ பலராமகிருஷ்ணர்களே எனது துக்கத்தை நேரே கண்டும் ஒன்றும் சொல்லமுடியாமலிருக்கிறார்களே, ஆதரிக்கவரிதாகிய இந்த மகத்தான காரியத்தைக் குறித்து நீர் இப்படிப்பட்ட பிரதிக்கினை செய்வது நலமாகத் தோற்றவில்லை" என்றுரைக்க, அர்ச்சுனன் "நீரென்னை ஸ்ரீ பலராமர் முதலிய யாதவ வீரர்களைப்போல நினைக்கவேண்டாம். நான் இத்தகையனென்பதை நீர் இன்னும் அறியீர் என்றெண்ணுகிறேன். மகாவிஜயப்பிரதாப வீர தீர சௌரிய ஸ்வரூப பார்த்திவனான நான் திரிபுராந்தகராகிய பிரதாப ருத்திரமூர்த்தியிடத்தில் யுத்தஞ்செய்து ஜயமடைந்தவனென்பது நீர் அறியீரோ? மிருத்யுதேவதையை ஜயித்து உமது சந்த

தியை ரட்சிக்கிறேன்'' என்று சமாதானஞ் சொல்லினன். பிறகு அர்ச்சுனன் விடைகொண்டு சென்றான்.

மறுபடியும் அவ்விப்பிரோத்தமருடைய பத்தினி கர்ப்பந் தரித்து பிரசவிக்கிறகாலத்தில் பார்த்தனுக்கு தெரிவித்து அவனை அழைத்து வந்தார். அர்ச்சுனன் சூதிகா கிரகத்திற்கு வெளியிலிருந்துகொண்டு வில்லை வளைத்து ஆயுத சமூகங்களைப் பிரயோகித்து அந்தப் பிரசவ கிருகத்திற்கு தசதிக்கிலும் நூல் நுழையாத நெருக்கமாக சரக்கூடு கட்டி கூற்றுவனைச் சிட்சிக்க நினைத்து தனுசினிடத்தில் ஓர் திவ்யாஸ்திரத்தை தொடுத்து எதிர்பார்த்திருக்கையில், ஒருபிள்ளை பிறந்து இரண்டு மூன்றுதரம் கத்தி யழுது ஸ்வசரீரத்துடன் அந்தரதானமாய்ச் சென்றுமறைந்தது.

இதையறிந்த அந்த விப்பிரன் சோகமுற்று பீமானுஜரை மதியாமல் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திவ்ய சமூகத்திற்கு ஓடிவந்து முன்னின்று பலவிதமாகத் துதித்து நடந்தன யாவும் விவரமாய் சொல்லி தன்னையே நிந்தித்துக் கொண் டிருக்கையில் பார்த்திபன் அங்கே வந்து, மறையோனது முறையைக் கேட்டு, அங்குநிற்க சகியாமல், தமக்குத் தேவ தேவதா வரப்பிரசாதத்தினல் கிடைத்தயோக வித்தியாப் பிரபாவத்தினலே அந்த க்ஷணத்தில் யமதர்மராஜனுடைய பட்டணத்தைச் சேர்ந்து அங்கு அவரால் சத்கரிக்கப்பட்டு பிராம்மண புத்திரர்களையாராய்ந்து அங்கில்லை யென்றறிந்து கொண்ட பின்பு கிரமக் கிரமமாய் இந்திரன் அக்கினி முதலிய திக்குத் தேவதைகளுடைய திவ்ய நகரங்களிலும் மற்ற கின்னர யட்சர்களின் உலகங்களிலும் தேடியும் அந்தப் பிராம்மணருடைய தனயர்க ளில்லாமையை யறிந்து மனமொடிந்து தனது அறிவீனத்திற்காக வருந்தி ஒரு அக்கினி குண்டத்தை ஏற்படுத்தி குரூரமான அனற் சுவாலைகளை வீசியெரிய மூட்டுவித்துத் தமது இஷ்ட தெய்வத்தை துதித்து அனலத்தில் பிரவேசிக்குஞ் சமயத்தில் ஸ்ரீ கமலாக்ஷராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் சமீபத்திற்கு வந்து ''எனது பிரிய சகாவாகிய பற்குன மகாராஜனே! உனது சரீரத்தை இவ்வனலத்திற் கிரையாக்கவேண்டாம். உன்னை வெறுத்து நிந்தித்த இப்பூசுரோத்தமர் சந்தோஷத்தை யடைந்து துதிக்கும்படியாய் அப்புத்திரர்களிருக்கும் ஸ்தலத்தை யுனக்குக் காண்பித்து மீட்டுத்தருகிறேன்'' என்றுரைத்து ஸ்ரீ பகவானவர் தமது திவ்ஷிய சங்கல்பத்தினல் வாயு ஸ்வரூபமாகிய ஒரு திவ்ய ரதத்தை நிருமித்து

மந்திர ஸ்வரூபங்களாகிய அஸ்வங்களைக்கட்டி மாதலி தனயனைச் சாரதியாக நியமித்து, அதில் அர்ச்சுனனுடன் ஆரோஹணஞ் செய்து வாயுமண்டல மார்க்க கதியாக ஏழு சமுத்திரங்களையும் ஏழு தீவுகளையும் கடந்து சக்ரவாளகிரி சமீபத்திலிரா நின்ற தமோமண்டலத்தில் செல்லும்போது அங்கு மகா அந்தகாரமா யிருந்தமையால் அவ்விடத்தில் ஸ்ரீ புண்டரீகாட்சர் ஸ்ரீ சுதர்சனப் பிராணுகிய திருவாழி யாழ் வானைப் பிரயோகித்து அம்மகா அந்தகாரத்தைப் பிளந்து முன் நடக்கச்செய்து அம்மார்க்கத்தின் வழியாகத் தமது திவ்ய ரதத்தை நடப்பித்து மகாந்தகார மண்டலத்தைக் கடந்து ஒரு மகா ஜோதி மண்டலமானது தோன்ற, அந்தத் திவ்ய தேஜோமய மகிமாதிசயத்தைப் பார்த்து அர்ச்சுனன் தமது கண்களால் அந்த தேஜோமயத்தைப் பார்க்கச் சக்தியற்றவ ஞய்ப் பிரமித்துக் கண்களை மூடிக்கொண்டு பயந்து உடல் நடுங்கும்பொழுது, ஸ்ரீ பகவான் அவர்முகத்தை ஸ்பரிசித்து அஞ்சவேண்டாமென்று திடஞ்சொல்லிப் பார்த்துச் சகிக்கும் படியான சக்தி கொடுத்த பின்பு, சந்தோஷ சித்தர்களாய் அமுர்த ஸ்வரூப வாரிதியைக்கண்டு மகதாச்சரிய குதூஹல பரர்களாய் அத்திவ்ய வாரிதி மத்தியபாக மார்க்கமாகச் சிறிது தூரஞ்சென்றபின்பு அவ்விடத்தில் அநந்த கோடிசூரி யோதயப் பிரபாவமய விசேஷ ஜோதிஸ்வரூபமான ஒரு திவ்ய நகரத்தைக் கண்டனர்கள்.

அந்த திவ்யபுரத்திஞள் பிரவேசித்து அங்கு அநந்த திவ்ய மணிமயாலங்கார அநந்த பணமண்டலமுக பிம்பங்க ளில் அநந்தவேத சாகாஸ்துதமாகிய அந்த சிம்மேந்திரியங் களை யுடையவராகிய அநந்தநாமதேவ ஸ்ரீ ஆதிசேஷ பகவா னுடைய திருமேனியாகிய சிம்மாஸன ஸ்வரூபாஜித பர்வதத் தின் மீது ஒரு நீலரத்தினகிரி அமைந்திருப்பது போல நீல நிற சியாமள சர்வ மங்கல சுபாங்க நேத்திரோத்சவத் திரு மேனியை யுடையவரும், ஸ்ரீமந் நாரதாதி பரமயோகீந்திர சங்கீர்த்தன நந்தரும், அஜநக அநந்த அப்பிரமேய அசித அவிகார ஆதிமத்தியாந்தரகிதரும், சர்வலோக பாபவிமோ சன குண மகானுபாவரும், பரமகருணை சமுத்திரரும், ஸ்ரீ அச்சுத பரமபுருஷ புருஷோத்தம ஸ்ரீ மதநந்த சுஸ்லோக நாமாங்கிதரும், சர்வ ஜகதுத்பத்தி ஸ்திதி லய காரண தத்வ ஸ்வரூபரும், பரமேஷ்டி சனகருமாய் விளங்கிக்கொண்டிருக் கின்ற ஸ்ரீமந் நாராயணராகிய பரப்பிரம்ம ஸ்வரூப திவ்ய தேவமூர்த்தியை ஸ்ரீ கிருஷ்ணர்ச்சுனர்களிருவரும் தங்கள் நேத் திரோத்ஸவார்த்தமாகக் கண்டு பரம பக்தி யதிசய பரமோல்

லாச இருதயாரவிந்தர்களாய்ச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து விடைபெற்றெழுந்து நின்று தங்கள் சிரத்தின்மீது இரண்டு கரங்களையும் கூப்பி ஸ்ரீ புருஷசூக்த வேதவேதாந்த வாக்கியங்களால் துதித்துக்கொண்டிருந்தனர்கள்.

அவ்வாறு துதித்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீ கிருஷ்ண அர்ச்சுனர்களை தமது கருணாவலோக வீக்ஷண்யத்தினாலே கடாட்சித்து அந்த ஆதி தேவசிகாமணியாகிய விராட்புருஷ தேவர் திருவாய் மலர்ந்தருளுகின்றார் :

"வாருங்கள் ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுன திவ்யபுருஷ சிரேஷ்டர்களே! நீங்கள் பூலோகத்தில் சர்வ பிராணிகளுடைய அரிஷ்ட ஸ்வரூபர்களாய் ஜனித்த அசுர ஜனங்களைச் சிட்சித்துத் தர்ம ஸ்தாபனார்த்தமாக சாது சஜ்ஜந ஸ்வரூப சிஷ்டர்களை ரக்ஷிக்கும் பொருட்டு எனது சுவாம்சா சம்பூதர்களாய் நாராயண சொரூபர்களாய் திருவவதரித்து உங்களால் ஆசரித்துவரும் அதி அத்புத அதிமானுஷ சரித்திரங்களை வேதவேதாந்த அபிப்பிராயங்களினால் குணானுபவஞ் செய்து கொண்டிருக்கிற இம்மகா முநீந்திரர்கள் உங்களிருவரையும் தரிசனஞ் செய்ய இச்சித்துப் பிரார்த்தித்தபடியால் நீங்களிவ்விடத்திற்கு எழுந்தருளுகின்ற நிமித்தம் அந்தப் பூசுரோத்தமருடைய குழந்தைகளை நமது யோக மாயா பிரபாவத்தினால் இங்கு அழைப்பிக்கும்படி யிருந்தது. ஆகையால் அந்தப் பிராம்மணோத் தமருடைய குழந்தைகளை அழைத்துக் கொண்டுபோய் அவருக்குக் கொடுத்துத் தர்மத்தை நிலை நிறுத்திச் சர்வ ஜகத் பரிபாலனத்தைச் செய்து வரக்கடவீர்கள்" என்று நியமித்து விடைகொடுத்தருளினார்.

அந்த ஸ்ரீமகநீய பிரபாவாதிசய ஸ்வரூப ஸ்ரீவிஸ்வம்பர மூர்த்தியை ஸ்ரீ கிருஷ்ணார்ச்சுனர்க ளிருவரும அநந்த பிரதக்ஷண பிரணாமங்களைச் செய்து வேத சூத்திராபிப்பிராய வசனங்களினால் துதிசெய்து விடைபெற்றுக்கொண்டு இப்பூசுரோத்தமருடைய தனயர்களை யங்கீகரித்து அந்த வியூஹ வைகுண்ட புரத்திலிருந்து கிரமக்கிரமமாய் அம்மகா மார்க்கத்தைக் கடந்து ஸ்ரீமத் துவாரகாநகரத்திற்கு வந்து அப்பிராம்மணரிடம் அவரது புத்திரர்களை விடுத்ததும், அம்மறையோன் அதியாஸ்சர்யமடைந்து அளவிலா வானந்தமடைந்து ஸ்ரீ கிருஷ்ணரைப் பலவிதமாகத் துதித்துக் கொண்டாடினன். அர்ஜுனனும் மகா மகிமையையுடைய ஸ்ரீ கிருஷ்ணரது ப்ரபாவத்தின் முடிவை இன்னதென்றறிய

முடியாமல் மயங்கி தான் கண்ட மகிமாதிசயத்தை அடிக்கடி நினைத்துத் தியானித்து அத்யாத்புதானந்த மானசீகத்துடன் துதித்துக்கொண்டும் துவாரகையிலுள்ள பலர்க்கும் தான் கண்ட அதிசயத்தை சொல்லிக்கொண்டும் அவர்களும் தாமும் ஸ்ரீ பகவானுடைய பாதாரவிந்த சுபக்திமானசர்களாய் அநந்தப் பிரணம வந்தனங்களோடு துதித்து ஆனந்த பரவசர்களாய்ச் சுகித்துக்கொண் டிருந்தனர்.

ஸ்ரீ கிருஷ்ண பகவானனவர் உத்தம கிரகமேதியாய்ப் பரமோத்தம கிருகஸ்த தருமத்தைவகித்து மாகேந்திர மகா சாம்பிராச்சிய விபவாதிசய மஹதைஸ்வரிய மகிமாதிசயத்துடன் சுந்தரீ ரத்ன களத்திர ஸ்ரீ மகாலக்ஷ்மி அம்ஸ ஸ்வரூபர்கள் அநந்தகோடி புத்திரமித்திராதி பந்துஜனங்களோடுகூடி நித்திய சுகானந்த வைபவாதிசயத்தை அனுபவிக்க அருள்செய்து சர்வ சாட்சிபூதசமன்விதராய் வாழ்ந்துகொண்டிருந்தனர்.



## தொண்ணூற்றியொன்றும் அத்தியாயம்



*ஸ்ரீ பகவான் தன் பிற்காலத்தை துவாரகையில் கழித்தவிதம் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ ஹரிசரணாரவிந்தங்களை அநுதினமும் பூசிக்கும் அரசனே! ஸ்ரீ நித்தியவிபூதி லீலாவிபூதி நாயகராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஸ்ரீமத் துவாரகா நகரத்தில் சகல தேவாம்ச ஸம்பூதர்களாயும் சுத்த வீரர்களாயுமுள்ள யாதவ ராஜ பந்துக்களாகிய வீர யூத பதிகளும் மந்திரி புரோகிதர்களும் சூழ்ந்து வீற்றிருக்க, வந்திமாகதாதி பரிஜனங்கள் புகழ்ந்து துதிக்க, ராஜ்ஜியாதிகாரத்தை வகித்து, மகாமகிம கேந்திர போகபாக்கியாதிசய பரம சுகானந்தானுபவ திவ்விய ஸ்வரூபதாராய் விளங்கிக்கொண்டிருந்தார். காலந் தவருது மழை பொழிய புல் பூண்டு விருட்ச ஜாதிகளும் பயிர் முதலியவைகளும் விசேஷ பலன்களைத் தந்து சகல ஜீவராசிகளையும் மகிழ்வித்தன. துவாரகாபுரத்து ஜனங்கள் அஷ்ட ஐஸ்வர்ய சம்பன்னர்களாய் சகல சுக போகங்களை அநுபவித்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண குணலீலா மகிமாதிசயங்களை எக்காலும் துதித்து அவனது சரணாரவிந்தங்களையேயடைய விரும்பி யிருந்தார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் பரமோத்தம கிருஹஸ்த 'தருமத்தை வகித்து அநந்தமான யாகாதி முகாந்தரத்தால் சகல

தேவதா சமூகங்களையும் மற்ற உயிர்வகைகளையும் திருப்திகரமாகப் பரம சுகானந்த வைபவாதிசயத்தை அனுபவிக்கச் செய்து தாமும் தமது திவ்ய தேவாப்ஸர தேவதா ஸ்திரீகளைப் போன்ற சுந்தரவதிகளாயும், மகா பதிவிரதா சிரோமணிகளாயும் விளங்காநின்ற பதினாறாயிரத்தறுநூற்றெட்டு மகா பத்தினி ஜனங்களோடுகூடி அவரவர்களுடைய மனோபீஷ்ட மஹாரமணீய பிரதேசங்களில் சகல கேளிவிகாரராய் லீலாவிநோத போகாதிசயங்களால் அத்தனை மகிஷிகளுக்கும் அத்தனை திவ்விய நாயக ஸ்வரூபத்தை வகித்து அவர்களுடைய இருதயாரவிந்தங்களைத் திருப்தியடையச் செய்துகொண்டிருந்தனர். அந்த ஸ்ரீபகவானுடைய திருப் பத்தினிகளும் ஸ்ரீ அரவிந்தாக்ஷருடைய திவ்விய பாதாரவிந்த சேவாதிசய கைங்கர்ய விசேஷ பக்தி மானஸிகர்களாய் அவருடைய கடாக்ஷ வீக்ஷண்யத்துக்குப் பாத்திரர்களாகிய பெரும்பாக்கியாதிசயத்தை அனுபவித்துக்கொண்டிருந்தார்கள்.

இவ்விதம் ஸ்ரீ அச்சுதாது நித்ய மங்கள திவ்ய கல்யாண குணகண மகிமாதிசயத்தைக் கானஞ்செய்துகொண்டு தங்களுக்குப் பரமோத்தம நிஜபர்த்தாவென்கிற புத்தியினால் அவருடைய சுந்தர மந்தகாச திவ்விய கிருபாகுண ரஸார்ணவத்தில் மூழ்கி சரீர சுகானந்த போக பாக்கியங்களை அனுபவித்து இதர சுகோந்நத பதங்களையும் சரீராபிமான ஸமுசார சுக வாஞ்சைகளையும் மறந்து, சரீராந்தியத்தில் ரஜ தமோ மிஸ்ர குணரகித சுத்த சத்வாத்மக பரமவ்வியோம பரந்தாமத்தில் ஸ்ரீ மகாலட்சுமீ திவ்வியாம்ஸத்தில் கலந்து பரப்பிரம்மாநந்த தற்பரர்களாய்ப் பேறுபெற்றனர்கள்.

ஸ்ரீ ஹரியினது திவ்ய பத்தினிகளிடத்தில் பிறந்த அநேக சுபுத்ரர்களில் ஸ்ரீ ருக்மணீ பிராட்டியார் முதலிய அஷ்ட மகிஷிகளுக்குத் தவப்பயனாகப் பிறக்கச்செய்த வீர யோத புத்திர சிகாமணிகளுக்குள் பிரத்யும்னர்-அநிருத்தர்-தீபதிமான் - பாநுதேவர் - சாம்பர்-மித்திரர் - விருகத்பானு - பானுவிந்தர் - உருகர் - அருணர் - புஷ்கரர் - தேவபாகு - சுருததேவர் - சுனந்தர் - சித்திபாகி - வரூதகர் - மது - வினிக் குரோதனர் எனும் பதினெட்டுபேர் மிகவும் பிரசித்தமான பாகுபல பராக்கிரம விசய சம்பத்விசேஷ கீர்த்திகளை வகித்தவர்கள். இந்தப் பதினெட்டு நாயதேயத்தவர்களும் மகா கீர்த்திமான்களாயும் மகா ரதிக சிரேஷ்டர்களாயு மிருந்தார்கள். திரிவிக்கிரீயென்னும் குப்ஜாதேவியினிடத்தில்

ஸ்ரீ பகவானுடைய கிருபைக்குப் பாத்திரராய்ப் பிறந்த யுபசு லோகர் சகல சற்குணங்களாலும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குச் சமானராகியும் ஸ்ரீமந் நாரதமகா முனீந்திரருக்குச் சிஷியராகியும் விளங்கி ஸ்ரீ ஹரியினிடத்தில் அசஞ்சலமான பக்தியோக விலக்ஷண ஞான மானஸ பரம பாகவத நிஷ்டராய்த் தம்மை ஆசிரயித்தவர்களுக்கு வேதவேதாந்த வேத சூத்திராபிப்பிராய் மகா விலட்சண ஸ்ரீ பகவத் பக்தியோக அகண்டித திவ்ய ஞானார்த்தங்களைப் போதித்து வைணவ விலக்ஷணாத்ம பரம தார்மீகர்களாக உஜ்ஜீவிப்பிக்கச் செய்தது மன்றிப், பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்ராதி ஜனங்களும் ஸ்திரீ ஜனங்களும் மற்றவர்களும் ஸ்மரண மாத்திரத்தில் பரமயோகீந்திரர்கள் பரமேகாந்திகள் அடையத் தகுந்த பரமவ் வியோம ஸ்ரீ பாந்தாம மூர்த்தி பதத்தை யடைந்துய்வதற்குக் காரணமாகிய சாத்துவ தந்திர மென்னும் சுத்த சாத்மீக வைஷ்ணவ ஸ்மிருதி நாமாங்கித திவ்விய கிரந்தத்தைச் செய்து அந்தத் திவ்ய கிரந்த போதனையினால் சகலரையும் ராகத்துவேஷ ரகிதர்களாக்கி ஸ்ரீ அச்சுத பகவானுடைய திவ்விய பாதாரவிந்த பக்தியோடு பரிசுத்தாத்மராயிருந்தனர்.

ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய அருந்தவத் தனயர்களில் சாக்ஷாத் ஸ்ரீ பகவானுடைய பக்திமகிஷீ ரத்தினமாகிய ஸ்ரீ ருக்மணி பிராட்டியாரிடத்தில் ஸ்ரீஹரி கல்யாண குணங்களுக்குச் சமானமாக திருவவதரித்த பிரத்தியும்னருக்கும் ருக்குமியினிடைய புத்திரிக்கும் பதினாயிரம்யானை பலத்துடன் கூடிய மகா பராக்கிரமசாலியாகிய அநிருத்னர் ஜனனஞ் செய்தனர். அவர் மகாதீர குணோத்தமராய் விருத்தியடைந்து அந்த ருக்மியினுடைய பௌத்திரியைத் திருக்கலியாணஞ் செய்தனர். இவர்களுக்கு மிகுந்த தேஜோ பலசாலியாகிய வஜ்ர ஸ்வரூப ரென்பவர் உதித்து மகா ரிஷிகள் சாப காரணமாக யாதவ வம்சத்தவர்கள் லயமடைகின்ற சமயத்தில் இந்த வஜ்ரஸ்வரூபர் மாத்திரம் ஸ்ரீ பகவத் கடாட்சத்திற்குச் சாக்ஷி நிரூபகமாக அந்தச் சாப காரண வசத்தில் அகப்படாமல் பிரகாசித்துக் கொண்டிருந்தனர். இவருக்குச் சுபாகுவென்கிற சுபுத்திரர் ஜனித்தனர். அவருக்கு உக்கிரசேனர் பிறந்தனர். இந்த உக்கிரசேனருக்குச் சுருதசேன னென்பவருதித்து விருத்தியடைந்தனர். இந்தப் பிரகாரம் ஸ்ரீ பகவத் குடும்பத்திலே ஜனித்த மகோதய புத்திர சிகாமணிகள் பரம பாவன பவித்திரர்களாயும் நிஜாஸ்ரித ஜனதாரித்திர ஹறிபோக பாக்கியாதிசயங்களை

யுடையவர்களாயும் மகா தேஜோபல பாராக்கிரம வீரதீர யூகபதிகளாயும் விளங்கியாதவ வம்சோத்தாரர்களாய் விருத்தி யடைந்து கொண்டிருந்தார்கள். ஸ்ரீ பகவானுடைய புத்திர பௌத்திர பரம்பரைகளாக ஜனித்துப் பிரசித்தர்களான மகா புருஷருடைய வேதவேதாங்க தனுர்வேத வித்தியாப் பியாச முயற்சிக்காக நிர்ணயிக்கப்பட்ட உபாத்தியாயர்கள் மூன்றுகோடி எண்பத்தெட்டு லக்ஷத்து எண்பத்தெண்ணாயிரத் தொருநூறுபேர்கள். உபாத்தியார்களுடைய லக்கம் இவ்வள வென்றபோது இந்த மகானுபாவர்களாகிய குமார ரத்தினங் களைக் கணக்கிட்டறிவதற்கு எப்படிப்பட்டவர்க்கும் அருமை யன்றோ? யாதவபூமீசர்களுள் அநேக லக்ஷம் பேர்களுக்குப் பின்பு ஆகனென்கிற ஒரு மகானுபாவருண்டாய்ப் பிரசித்த மான கீர்த்திவந்தவராய்ப் பிரகாசித்தாரென்று சொல்லத் தரமேயல்லது இந்த யாதவ வீர யூதபதிகளுடைய சரித் திரங்களை ஒருவராலும் சொல்லத் தரமன்று.

பூர்வ காலத்தில் தேவாசுர யுத்தத்தில் இறந்த மிகவுங் குரூரர்களாகிய சில துஷ்ட அசுரபதிகள் இந்த யுகத்தில் ராஜ வம்சங்களிலும் இதர வர்ணங்களிலும் ஜன்மித்து அவரவர்களுடைய சுகிர்த துஷ்கிர்த பலத்திற்குத் தகுமான தேஜோபல சௌரிய பராக்கிரமாதி ராஜ்ஜியாதிகார ஸம்பத் குணங்களை வகித்துக் கர்வ மானசர்களாய் இக்காலத்திலும் சாது ஜனங்களை நலியச்செய்து பூமிக்கும் பாரமாய் விருத்தி யடைந்துகொண்டிருந்தார்கள். ஆகையால் ஸ்ரீ ஹரியான வர் பரமோத்தம தர்ம ஸ்தாபனமாகவும் அவர்களைச் சம் ஹரித்துப் பூபார நிவாரணஞ் செய்வதற்காகவும் சகலமான தேவகணங்களையும் யாதவ குலத்தில் ஜன்மிக்கச்செய்து தாமும் திருவவதரித்து உலகாரிஷ்ட துஷ்டப் பிராணிகளை நாசஞ்செய்து பூபார நிவாரணஞ்செய்து ரக்ஷித்தனர்.

அப்படிப்பட்ட யாதவ குலமானது யது விருஷ்ணி தாசாருக போஜார்த்தாதி நூற்றொரு வம்சங்களாய் விருத்தி யடைந்தது. இந்த வம்சத்தவர்கள் ஸ்ரீ பகவானுடைய கிருபாகடாக்ஷத்தினால் அவரையே அனுவர்த்தித்துத் தானென்னுஞ் சுதந்திர மத புத்தி யில்லாதவர்களாய் பரமா னந்த பத சத்கதிக்கு யோக்கியர்களா யிருந்தார்கள். அந்த ஸ்ரீ பகவானவர் சர்வ வேதாந்த சங்கிரக ஸ்வரூபமான தமது யக்கியேஸ்வர ஸ்வரூப தருமத்தை யுத்தேசித்துத் தம்முடைய யோகமாயையினாலே சர்வப் பிராணிகளுக்கும் சுகாதாரமாய் நியமிக்கப்பட்ட யக்கிய யாகாதி கிருத சதங்

களையும் யதாசாஸ்திர விதிப்படி வேதவியாசர்-கார்க்கேயர்-அசிதர்-அகஸ்தியர்-பராசுராமர்-முதலிய சில பரம வைதீகோத்தம மகாரிஷிகளை ரிக்விக்குகளாகக் கொண்டு தமது அஷ்ட மகிஷிகளுடனே தாமும் தீக்ஷையை வகித்துப் பதின்மூன்று வருஷகாலம் இடைவிடாமல் பிராம்மணர்கள் முதலிய சர்வஜனங்களையும், பிராணிகளையும், சந்தர்ப்பண சமாராதனுதிகளால் திருப்திசெய்து அவர்களுக்கு ஷோடசோன்னத மகா தானுதி கிரம அநந்த தானங்களையுங் கொடுத்துச் சர்வயக்கியங்களையும் நிறைவேறச்செய்து அவபிருத ஸ்நான விரத நன்னீராடினர்.

இந்த ஸ்ரீ புருஷோத்தமருடைய நித்தியானந்த கலியாண குண மகிமாதிசய மஹார்ணவ தீர்த்தப் பிரபாவமானது அவருடைய திருவடித் தாமரையிலுண்டாய்ச் சர்வலோகத்திலும் மகாபுண்ய கங்கா நதி ஸ்வரூபமாகப் பிரவேசித்துக் கொண்டிருக்கின்ற மகா நதியைப்பார்க்கிலும் பாவனமாய் விளங்கியதாகையால், சத்துரு மித்துருக்கள் விபாகமறச் சர்வப் பிராணிகளும் பாபவிமோசனமாய் ஸ்ரீ ஹரிசாரூப்பிய சுகாநந்தத்தை யடைவித்து ஸ்ரீ சக்ரபாணியினுடை சர்வ சம்ஹாரமூர்த்தி ஸ்வரூப சக்கராயுத நாமாங்கித ஸ்ரீசுதர்சனப் பிராணனவர் சாதுசஜ்ஜனுபீஷ்ட சர்வலோகாரிஷ்ட நிவாரணார்த்தமும் பூபார நிவாரணார்த்தமும் தர்ம ஸ்தாபனார்த்தமும் இவ்வுலகத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருக்கின்றூர்.

இந்த தேவகீ புத்திர அருந்தெய்வ ஸ்வரூபர் யாதவ பந்து ஜனங்கள் முதலியவர்கள் சர்வப்பிராணிகள் ஸ்தாவர ஜங்கமாதிகளாகியவைகளுடைய சகல பாபங்களையும் நிவாரணஞ்செய்தருளினூர். சாதுசஜ்ஜனுதி சர்வாஸ்ரித ஜனங்களையும் ஸ்ரீ கோபிகா ஜனங்களையும் ஸ்ரீ மதுராபுரி நிவாஸ ராஜ கன்னியாசுந்தரீ ரத்தின ஜனங்களையும் பாவனர்களாய் பிரம்மாநந்தபத ஸ்வரூபத்தை யடைந்து சுகிக்கக் கிருபைசெய்தனர். இந்தப்பிரகாரம் ஸ்ரீ பரம புருஷராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவான் சர்வ லோகஹிதத்தின் பொருட்டுத் தமது லீலா கடாட்ச லேசாம்சத்தினுல் அங்கீகரிக்கப்பட்ட ஸ்ரீ மச்ச-கூர்மாதி அனந்தாவதார மகிமாதிசய திவ்ய கதாரஸ குணுனுபவங்கள் செய்யுமவர்களுடைய ஜன்ம ஜன்மார்ஜ்ஜித பாப ராசிகளை நிவாரணஞ் செய்வதுமன்றி அவர்கள் ஸ்ரீ பரந்தாம வைடவோன்னத சுகாநந்தத்தை அடையவும் அருள் செய்வார்.

ஸ்ரீ சூதருடைய வாக்கியம்

ஸ்ரீ சௌனகாதி மகா முனிவர்களே! இவ்விதமாக ஸ்ரீ கிருஷ்ண கதாமிர்த சுதாரசங்களை ஸ்ரீ வேதவியாச புத்திராகிய ஸ்ரீ சுகர் அபிமன்னிய தனய சிகாமணிக்குக் கிருபையாக வருளிச்செய்தபடி நானுங்களுக்கு அவருடைய கிருபா கடாட்ச பிரகாசத்தினால் குணானுபவஞ் செய்தேனென்று குருவந்தனஞ்செய்து இந்த ஸ்ரீபகவத் குண திவ்யசரித்திராதிசய கதாமிர்தத்தை இவ்வுலகத்தில் யாராயினும் ஸ்ரீ பகவத் பக்தி மானசர்களாகியும் நம்மைப்போல வேதசம்மத மாக நன்னீராடித் துவாதச ஊர்த்துவ புண்டரந் தரித்தும் மகத்திரராஜமாகிய அஷ்டாக்ஷரியை ஜபித்தும் த்வயாநுசந்தானஞ் செய்தும் சுகிர்ப்பூதர்களாகி அடிக்கடிச் சார்வதா காலையிலும் மாலையிலும் சத்சங்கத்துடன் சத்காலக்ஷேபஞ் செய்து ஒருவர்க் கொருவர் போதித்தும் குணானுபவஞ் செய்தும் அனுபவித்தவர்கள் சகல பாபங்களினின்றும் விடுபட்டு இகத்தில் தெய்வ சம்பத்கரமாகிய அநந்தபோக பாக்கியாதிசயங்களை யனுபவித்துச் சரீராந்தியத்தில் ஸ்ரீ ஹரி பாதாரவிந்த பக்தி மானஸர்களாய் ராகத்துவேஷ யுக்த ரஜதமோ குணரகித சுத்த சத்வாத்மக நித்ய ஸ்ரீ மங்கள மகோன்னத திவ்ய பரந்தாம வைபவாதிசயத்தை யடைந்துய்யக்கடவர்களென்று அருளிச்செய்தனர்.

தசமஸ்கந்தம் - முற்றுப்பெற்றது.



# ஏகாதச ஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

யாதவர்களுக்கு ரிஷிகள் சாபமானது நேர்ந்தவிதமும், இருப்புலக்கையைப் பெற்றதும் சொல்லப்படுகிறது.



அச்சுதன் அடிக்கு ஆர்வப் பணிசெயும் அரசே! ஸ்ரீ கிருஷ்ணபகவான் இராஜாக்களுக்குள்ளே மகா கலக முண்டாகும்படிச் செய்து தைத்தியர்களைச் சங்கரித்துப் பூமி பாரத்தைப் போக்கடித்தார். பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் நேர்ந்த பாரதப் போரை காரணமாகக்கொண்டு அநேக அரசர்களையும் பிறரையும் சங்கரித்துப் பூமிபாரத்தை நிவர்த்தித்தார். இப்படி சொல்லுதற்கரிய அனந்த மகிமையுள்ள பகவான் ஒரு பிராம்மண சாபநிமித்தமாக எவராலும் ஜயிக்கக்கூடாத யாதவகுலத்தை நாசம் செய்து பூமிபாரத்தை முற்றிலுமகற்றி ஸ்ரீ பகவான் ஸ்ரீ வைகுண்ட மடைந்தாரென்று சுகர் சொல்ல, பரிட்சித்து யாதவர் நாசமடைந்த விவரத்தை சொல்லும்படி பிரார்த்தித்தார்.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

ஓ அரசனே! ஸ்ரீ கிருஷ்ண பகவானாலே கருமநிமித்தமாக அழைப்பிக்கப்பட்டும் அது நிறைவேறியபின் திரும்பவும் அனுப்பிவைக்கப்பட்டவருமான சில ரிஷிகள் பிண்டராகமென்கிற க்ஷேத்திரத்தை யடைந்தார்கள். அக்கால் விசுவாமித்திரர்-அசிதர்-கண்ணுவர்-துருவாசர்-பிருகு-அங்கீரசு-காசிபர்-வாமதேவர் - அத்திரி - வசிஷ்டர் - நாரதர்-முதலான ரிஷிகளும் அந்த க்ஷேத்திரத்தை யடைந்திருந்தார்கள். அப்போது அவ்விடத்தில் லீலைபண்ணிக்கொண்டிருக்கும் யாதவ குமாரர்கள் சாம்பவதியினுடைய புத்திரனை சாம்பனை கர்ப்பமுள்ள ஸ்திரீயைப் போல அலங்காரம் பண்ணி மிகுந்த வணக்க முள்ளவர்களைப்போல அந்த ரிஷிகளை வணங்கி "இந்த கர்ப்பவதி தானே கேட்க நாணமு

டையவளாய் எங்களைக் கேட்கச் சொல்லுகிறாள். அதினால் சுவாமிகளே! புத்திரகாமியாய் பிரசவகாலஞ் சமீபித்திருக்கிற இந்தப் பெண்ணானவள் பெண்ணைப்பெறுவாளா? அல்லது பிள்ளையைப் பெறுவாளா?” என்று கேட்டார்கள். இப்படி பரிகசித்த அந்த யாதவர்களைப் பார்த்து ரிஷிகள் மகா கோபங் கொண்டவர்களாய் ஓ புத்தியீனர்களே! இந்தப் பிரதி பெண்ணானவள் பிள்ளையைப் பெறுவதில்லை. உங்கள் குலத்தை நாசம் பண்ணத்தக்க யிருப்புலக்கையைப் பெறப் போகிறாளென்று சொன்ன சாபத்தைக் கேட்டு சாம்பவனுடைய வயிற்றிலே கர்ப்பிணிபோலக் கட்டியதை யவிழ்க்க அந்த வயிற்றிலே இரும்பு மயமான உலக்கைத் தடியைப் பார்த்துப் பிரமித்துப் பின்பு பயப்பிராந்தி யுடையவர்களாய் அந்த முசலத்தை எடுத்துக்கொண்டு வாடின முகத்தாராய் யாதவர்களால் சூழ்ந்திருக்கிற உக்கிரசேனன் முன்வைத்து நடந்த விருத்தாந்தத்தையுஞ் சொன்னார்கள். துவாரகையிலுள்ள சகலரும் பிராம்மண சாபத்தைக் கேட்டும் அந்த முசலத்தைப் பார்த்தும் பயந்தார்கள். அப்போது அந்த யதுகுல ராஜனான உக்கிரசேனன் அந்த முசலத்தைச் சூரணமாக்கிச் சமுத்திரத்திலே எறியச்செய்தான். அந்தப்படியே செய்து மீந்த துணுக்கையையும் சமுத்திரத்தி லெறிந்தார்கள். அந்தப் பொடிகள் சமுத்திர அலைகளாலே கரையில் ஒதுங்கி அங்கே கோரைகளாக முளைத்தன. அந்தத் துணுக்கையை ஒரு மச்சமானது பக்ஷித்தது. அந்த மச்சம் பின்னும் சில மச்சங்களுடனே செம்படவர்கள் வலையிலகப்பட்டது. அவர்கள் அந்த மச்சத்தை வெட்டி அந்த இரும்புத் துணுக்கையை எறிந்துவிட அதை உலுபதனென்கிற வேடன் தன்னுடைய பாணத்தினுனியில் கூர்மையாகப் பண்ணி வைத்துக்கொண்டிருந்தான். ஸ்ரீ பகவானானவர் அந்தப் பிராம்மண சாபத்தை தள்ளிப்போடச் சமர்த்தரானாலும் தள்ளும்படி இச்சியாதவராய் அதை இஷ்டமாகவே அங்கீகரித்தார்.



## இரண்டாவது அத்தியாயம்



பாகவத தர்மமும், பாகவதர்களுடைய லக்ஷணமும் சொல்லப்படுகின்றன.

பரிக்ஷித்து மகாராஜனே! துவாரகாபட்டணத்திலே ஸ்ரீ நாரத மகாரிஷி ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தரிசிப்பதில் மிகவும் இச்சையுடையவராய் அடிக்கடி வந்துகொண்டிருந்தார். ஒருக்கால் வசுதேவர் தமது கிருகத்திலே வந்த நாரதரை மிகுந்த அன்புடன் பூஜித்து ஆசனத்திலிருக்கச் செய்து சாஷ்டாங்கமாகப் பிரணாமம் பண்ணிச் சொல்லுகிறார்:

### ஸ்ரீ வசுதேவர் வாக்கியம்

"ஓ தபோநிதியே! பாகவதோத்தமரான உமது தரிசனத்தால் அடியேன் கிருதார்த்தனானேன். யாதொரு தருமங்களாலே உமக்கு ஸ்ரீ பகவான் பிரசன்னமானாரோ? அப்படிப்பட்ட பாகவத தருமங்களைக் கேட்க யிச்சிக்கிறேன். பூர்வத்தில் நான் தெய்வ மாயையினால் மோகிக்கப்பட்டவனாய் பூமியிலே புத்திரன் வேணுமென்கிற இச்சையை யுடையவனாய் முக்தியைக் கொடுக்கும் ஸ்ரீ பகவானை உபாசித்தேன். மோக்ஷ சாம்பிராச்சியத்தைக்கோரி உபாசியாமற் போனேன். ஆகையினாலே மகா விசனங்களை யுடையதாயும் பயமுள்ளதாயு மிருக்கிற சம்சாரத்தில் நின்றும் நானெப்படி விடுபடுவேனோ? அதை எனக்கு அருளும்படி பிரார்த்திக்கின்றேன். இவ்விதம் வினவிய வசுதேவரை நோக்கி நாரதர் ஸ்ரீ ஹரியினுடைய கலியாண குணங்களை ஸ்மரித்துக் கொண்டு மிகவும் பிரீதியுடையவராய் சொல்லுகின்றார்:

### ஸ்ரீ நாரதர் வாக்கியம்

சாத்வீக புருஷரே! பரம கல்லியாணராயும், புண்ணியகரமான கீர்த்தனங்களை யுடையவராயு மிருக்கிற ஸ்ரீமந் நாராயணரை உம்மாலே ஸ்மரிக்கலானேனென்று அவரை புகழ்ந்து நிமிச்சக்ரவர்த்தியின் கதையைச் சொல்லலானார். சுவாயம்பு மனுவினுடைய புத்திரன் பிரியவிருதன், அவனுடைய புத்திரன் ஆச்கினஹித்திரன், அவனுடைய புத்திரன் நாபி, அவன் புத்திரன் ரிஷபன், அந்த ரிஷபனை வாசுதேவருடைய அம்சமாகச் சொல்லுவார்கள். அந்த ரிஷபருக்குச் சகல வேதங்களையும் கற்றுணர்ந்த நூறுபிள்ளைகளுண்டா

னார்கள். அவர்களில் சிரேஷ்டனாகிய பரதனானவன் அநேக நாளரசாண்டு ஸ்ரீமந் நாராயணரிடத்தில் பக்தியுடையவனாய் தபசினாலே அவரை உபாசித்து மூன்று ஜன்மங்களாலே பகவானுடைய லோகத்தை யடைந்தான். அவனுடைய நாமத்தினால் பூர்வம் அஜநாபமெனும் பெயரையுடைய இந்தப் பூகண்டமானது பாரத வருஷமென்று சொல்லப்படு கின்றது. மற்றவர்களுக்குள்ளே ஒன்பதுபேர் பிரம்மாவர்த்த முதலான ஒன்பது பூகண்டங்களுக்குப் பதிகளானார்கள். எண்பத்தொரு பெயர் இந்தப் பாரத வருஷத்துக்கு நான்கு பக்கத்திலும் கர்ம மார்க்கத்தைப் பிரவிர்த்திப்பியா நின்ற பிராமணரானார்கள்.

அந்த ஒன்பது பூகண்ட பதிகளான கவி-ஹரி-அந்த ரிக்ஷன் - பிரபுத்தன் - பிப்பலாயினன் - ஆவிர்ஹோத்திரன் - திரவிடன்-சமசன்-கரபாசனன் ஆகியவர்கள் ஸ்தூல சூட்சும ரூபமான பிரபஞ்சத்தைப் பகவானுடைய ரூபமாகப்பார்த்துக் கொண்டும் ஒன்றிலும் ஆசக்தி யில்லாதவர்களாகவும் சகல உலகங்களிலும் எதேச்சையாகச் சஞ்சரித்துக் கொண்டிருந் தார்கள். ஒருகாலத்தில் மகானுபாவனான நிமிச் சக்கிர வர்த்தியினுடைய எக்கிய சாலையிலே அந்த ஒன்பது யோகி களும் சுதேச்சையாக வந்தார்கள். அவர்களைப் பார்த்து உடனே நிமிச்சக்கிரவர்த்தி சமஸ்த மரியாதைகளுடனும் பூஜித்து உயர்ந்த ஆசனங்களிலிருக்கச் செய்து அந்த மகா யோகிகளைப் பார்த்து மகானுபாவர்களே! எந்த தர்மங்களை ஒரு பக்தன் அனுஷ்டிப்பதனாலே ஸ்ரீ ஹரியானவர் பிரசன் னராய் தம்முடைய சாரூப்யத்தை கொடுப்பாரோ அப்படிப் பட்ட தர்மங்களைச் சொல்லவேண்டுமென்று நிமிச்சக்கர வர்த்தி கேட்க, அந்த ஒன்பது யோகிகளும் அவனை கொண் டாடி அவர்களில் கவியோகியானவர் சொல்லுகிறார்.

"ஓ அரசனே! இந்தச் சமுசாரத்திலே அசத்தான தேக முதலானதில் ஆத்தும புத்தியினாலே சர்வ காலமும் பயந்த புத்தியை யுடையவனான புருஷனுக்கு ஒருவிடத்தி லேயும் பயமில்லாததான அச்சுதருடைய பாதாரவிந்த உபாசனமே செய்யத்தக்கது. அதனாலே சமஸ்த பயமும் நிவர்த்தியாகின்றது. மனு முதலானபேர்களுடைய முகத்தி னாலே வர்ணாசிரம தர்மங்களைச் சொல்லி அதிக ரகசியமான எந்தத் தர்மங்கள் பகவானால் தம்முடைய முகத்தினாலேயே அக்கியானிகளான புருஷர்களுக்குச் சுகமாக ஆத்ம லாபத் தின் பொருட்டு உபாயங்களாகச் சொல்லப்பட்டனவோ? அந்தத் தர்மங்களைப் பாகவத தர்மங்களென்று அறியக்கட

வாய். யோகாதி மார்க்கங்களிலே விக்கினங்கள் உண்டா கிறதுபோல இந்தப் பாகவத தர்மத்தில் விக்கினமுண்டாய் அதனாலே கெடுக்கப்படுகிறதில்லை. அந்த பாகவத தர்மங் கள் எவை யென்றால், புருஷனானவன் சரீரத்தினாலேயும் வாக்கு மனது இந்திரியங்களாலேயும் புத்தியாலும் . அகங் காரத்தினாலும் சுபாவத்தாலும் யாதொரு கர்மங்களைச் செய் கிறானோ அந்த சமஸ்த கர்மங்களையும் ஸ்ரீமந் நாராயணர் பொருட்டு சமர்ப்பணை பண்ணிப்போடுகிறதே பாகவத தர்ம மாகிறது. தேகத்தையே நானென்னும் விபரீதக் கியானத் தையுடைய அக்கியானிக்கு பகவானுடைய மாயையினாலே பயமுண்டாகிறது. ஆசையினால் விவேகியானவன் ஆசாரி யனையே பரமாத்துமாவாகப் பாவித்து ஏகாந்த பக்தியினாலே அந்தப் பகவானையே ஆஸ்ரயிக்கக்கடவன். தியானம் பண் ணும் புருஷனுக்கு மனதினால் சொற்பனம் போலவும் மனோ ரதம்போலவும் இல்லாமலிருந்தாலும், இந்தப் பிரபஞ்ச மானது தோற்றப்பட்டுக் கொண்டிருக்கின்றது. விவேகி யானவன் தர்மங்களைச் சங்கற்பித்துக்கொண்டு விகற்பித்துக் கொண்டிருக்கின்ற மனதை நிரோதம் பண்ணக்கடவன். அந்த மனோ நிரோதமென்னப்பட்ட ஏகாந்த பக்தியினாலே செய்யப்பட்ட ஸ்ரீ பகவானுடைய பஜனையினால் அபயமுண் டாகும். புருஷன் லோகத்திலே ஸ்ரீ ஹரியினுடைய அவ தார சரிதங்களை வர்ணிக்கும் கீதங்களையும் நாமங்களையும் கானம் பண்ணிக்கொண்டு லச்சையின்றி இதர சங்கமில்லாத வனாய் சஞ்சரித்துக்கொண் டிருக்கக்கடவன்.

"இந்தப் பிரகாரம் விரதத்தையுடையவனாய் ஸ்ரீ ஹரிநாம கீர்த்தனங்களிலே பிரீதியையுடையவனாயும், அதனால் மிகவும் உருகின மனதையுடையவனாயும், ஒருக்கால் பகவானைக் கண்டவன்போல நகைத்தும், அந்தப் பகவானால் இந்நாள் வரையிலும் உபேக்ஷை பண்ணப்பட்டேனென்று அழுதும், அதிக ஆசையினாலே கூப்பிட்டும், சந்தோஷத்தினால் கானம் பண்ணியும், ஜயஜயா வென்று நர்த்தனம் பண்ணியும், பேய் பிடித்தவன்போல் பரவசனாயிருப்பன். ஸ்ரீ ஹரியையே கதி யாக அடைந்தவனாய் ஆகாசம்-வாயு-அக்கினி-ஜலம் - பூமி- சந்திராதி ஜோதிர் கணங்கள்-இதர பிராணிகள்-திக்குகள்- விருட்சங்கள் - மலைகள் - சமுத்திரங்கள் இன்னுமுள்ளச் சமஸ்த வஸ்துக்களையும் ஸ்ரீ ஹரியினுடைய சரீரமென் றெண்ணிப் பிரணமம் பண்ணக்கடவன். இப்படி அச்சுத ருடைய திருவடிகளைப் பஜனை பண்ணுகிற பாகவதனுக்கு அந்த திடமான வுபாசனையினாலே பக்தியும் விரக்தியும்

பகவானுடைய சொரூப சாக்ஷாத் காரமும் உண்டாகும். அதனாலே பரம சாந்தியை யடைந்து சாக்ஷாத் பரம பாதத்தையே அடைவன்." இப்படிச் சொல்லிய கவி யோகியின் வார்த்தையைக் கேட்டு நிமிச்சக்ரவர்த்தி பின்னுங் கேட்கின்றான். வாரீர் மகானுபாவர்களே! மானிடர்களுக்குள்ளே பாகவதன் எப்படிப்பட்ட காம நிஷ்டையை யுடையவனாயிருப்பன்? எவ்வகையான சுபாவத்தையும் ஆகாரத்தையும் உடையவனாயிருப்பன்? எந்த சின்னங்களாலே பகவானுக்கு இஷ்டனாகவிருப்பன்? அதைச் சொல்லவேண்டுமெனக் கேட்க ஹரியோகி சொல்லுகின்றார்.

"வாராய் ராஜனே! யாதொரு புருஷன் சமஸ்த பிராணிகளிலேயும் பகவான் அந்தரியாமியா யிருக்கிறானென்றும், கலியாண குணங்களையுடைய பரமாத்மாவினிடத்தில் சமஸ்த பிராணிகளு மிருக்கிறதென்றும் பார்க்கிறானோ? அவனே பாகவதோத்தமனாகிறான். யாதொரு புருஷன் ஈஸ்வரனிடத்தில் பக்தியையும் பாகவதர்களிடத்தில் சிநேகத்தையும் அஞ்ஞானிகளிடத்தில் கிருபையையும் சத்துருக்களிடத்தில் உபேக்ஷையையும் செய்கிறானோ? அவன் மத்திம பாகவதனாகிறான். எந்த பக்தன் ஸ்ரீ ஹரியினுடைய பிரதிமையை சிரத்தையுடனே பூசித்து பாகவதர்களையும் மற்றவர்களையும் உபேட்சை செய்கிறானோ? அவன் பிராகிருத பாகவதனாகிறான். யாதொருவன் இந்திரியங்களாலே விஷயங்களை கிரகித்தாலும் ஜகத்தை விஷ்ணுவினுடைய மாயாவிலாசமென்றே பார்த்து அந்த விஷயாதிகளில் வெறுப்பு விருப்பின்றி யிருக்கிறானோ அவன் ஹரியினுடைய அனுபவத்தினாலே தேகம்-இந்திரியங்கள்-மனம்-புத்தி-ஜன்மநாசம்- பசி-தாகம்-பயம்-சோக முதலான சம்சார தர்மங்களாலே மோகத்தை யடையாமலிருக்கிறானோ, எவன் காமம் முதலான வாசனைகளும் அணுகாமல் அவைகளுக்குப் புறம்பாகிறானோ, எவன் தபசினாலும், வர்ணாசிரமத்தாலும், அகங்கொள்ளாமல் உத்தமகுலம் தபசு முதலானவைகளை யுடையவனாயிருக்கிறானோ, எவன் ஸ்ரீ ஹரியினுடைய ஏகாந்த பக்தனாகிறானோ, எவன் தன்னுடையதென்றும் இதரர்களுடையதென்றும் அபேதமனதுடையவனோ, எவன் ஸ்ரீ பகவானுடைய பாதாரவிந்தமே கதியென்று இடைவிடாமல் நினைந்து எப்படிப்பட்ட விஷயாதிகளிலும் சிந்தையை வேறுபடுத்தாதவனாய் ஹரிபஜனையினின்று நிமிஷமேனும் சலியாமலிருக்கிறானோ, அப்படிப்பட்ட சத்குணங்களையுடைய புருஷனே பாகவதோத்தமனாகிறான். அவனே வைஷ்ணவோத்தமன்.

அவனே ஸ்ரீ ஹரியினுடைய ஏகாந்த பக்தனாகச் சொல்லா நிற்கிறான்."



## மூன்றாவது அத்தியாயம்



மாயையின் வர்ணனை, மாயையைத் தாண்டும் உபாயம், பாதத்வம், ஆராதனக் கிரமம், முதலியனவும் சொல்லப்படுகின்றது.

"மகானுபாவர்களே! பிரம்மாதிகளையும் மோகிப்பிக்கும் ஸ்ரீ விஷ்ணுவினுடைய மாயையை அறியச் சொல்லவேண்டுமென்று நிமிச் சக்ரவர்த்தி கேட்க, அந்த ரிஷி யோகி சொல்லுகிறார்:

"ஓ அரசனே! மகா பரிசுத்தராயிருக்கிற அந்தப் பரமாத்துமாவினிடத்திலே பரமாத்தும புத்தி தோன்றாமல் பிரபஞ்சமே தோற்றிக் கொண்டிருப்பதே அவருடைய மாயையாகின்றது. அந்த ஈஸ்வரர் எதனாலே இந்தப் பிரபஞ்சத்தையும் பிரிதிவு முதலான மகா பூதங்களையும் சராயுச முதலான பிராணிவர்க்கங்களையும் சிருஷ்டித்தாரோ, அதுவே அவருடைய மாயையாகின்றது. மாயைவயத்தனான ஜீவன் இந்திரியங்களினாலே விஷயங்களை யநுபவித்து சரீரத்தைத் தானென்றெண்ணிக் கொண்டு ஆசக்தியை யுடையவனாய் கர்மேந்திரியங்களால் வாசனைகளோடே கூடிய கர்மங்களைச் செய்து சுகதுக்க ரூபமான பலன்களை யனுபவித்துக் கொண்டு இந்தச் சமுசாரத்திலே பிரமித்துக் கொண்டிருக்கிறான்.

இப்படி அந்த ஜீவன் அநேக துக்கத்தைக் கொடுக்கும் கர்ம கதிகளை யடைந்தவனாய் மகாப்பிரளய பரியந்தம் ஜனன மரணாதிகளை பரதந்திரனாக அனுபவித்துக் கொண்டிருக்கிறான். பிரளயகாலத்தில் பூமியிலனேக வருஷம் மகாகோரமான அனாவிருஷ்டியானது உண்டாகப் போகிறது. அக்காலத்தில் சூரியன் மூன்று லோகங்களையுந் தகிக்கப் போகிறான். அப்போது சங்கருஷ்ணனுடைய முகத்திலே நின்றுண்டாகும் காலாக்கினி அதிக ஜ்வாலை யுடையதாய் பாதாள முதல் வாயுவினாலே தகித்துக்கொண்டு விருத்தியாயிருக்கும். பிற்பாடு சம்வர்த்த மெனப்படும் மேகக் கூட்டமானது யானைத்தும்பிக்கை யளவாயுள்ள வருஷ தாரைகளாலே அனேக சம்வச்சரங்கள் வருஷிக்கப்போகிறது.

அதில் பிரபஞ்சமானது லயத்தையடையும். அந்தப் பிரபஞ்சத்திற்கு அபிமானியான இரணியகற்பன் சூட்சும காரணமான பிரகிருதியை யடைவன். அப்போது சகலமும் லயித்துக் காரணமாத்திரமே மிகுந்து நிற்கும்.

பிரிதிவு முதலான மகாபூதங்களுக்கு லயம் எப்படியென்றால்? வாயுவினால் கந்தகுணமானது அபகரிக்கப்பட்டுப் போகையில் பூமியானது ஜலத்திலே லயத்தை யடையும். அந்த ஜலமும் வாயுவினாலே அபகரிக்கப்பட்டு ரச குணத்தை யுடையதாய் அக்கினியிலே லயத்தை யடையும். சம்வர்த்த மென்னப்பட்ட தபசினாலே ரூபகுணமானது அபகரிக்கப் பட்டுப்போகையில் அந்த அக்கினியானது வாயுவிலே லயத்தையடையும். ஆகாசத்தினால் ஸ்பரிசகுணமானது அபகரிக்கப்படுகையில் அந்த வாயுவானது ஆகாசத்திலே லயத்தை யடையும். தனக்குக் காரணமாயும் காலரூபியாயு மிருக்கிற ஈஸ்வரனாலே சப்த குணமானது அபகரிக்கப்பட்டுப் போகையில் அந்த ஆகாசமானது தாமச அகங்காரத்திலேயும், இந்திரியங்களும் புத்தியும் ராஜச அகங்காரத்திலேயும், மனது இந்திரியாபிமானி தேவதைகளோடே கூட சாத்துவீக அகங்காரத்திலேயும் லயத்தை யடையும். இந்தப் பிரகாரம் தன்னுடைய காரியங்களுடன் கூடிக்கொண்டிருக்கிற அந்த அகங்காரமானது மகத்துவத்திலே லயத்தை யடையும். மகத்துவமானது பிரகிருதியிலே லயத்தை யடையும். பரமாத்துமாவைக் காட்டிலும் மிகவும் வேறான பரமாணு முதலானவைகளே ஜகத் காரணமாமென்கிற ஞானமே பரமாத்துமாவினுடைய மாயா கார்யமாக நிற்கிறது.

தாண்டுதற் கரியதான ஈஸ்வரனுடைய இம்மாயையை சரீரத்திலே நானென்கிற புத்தியை யுடையவர்கள் சுகமாக எப்படித் தாண்டுவார்களோ அந்த உபாயத்தை யருளும்படி நிமிச் சக்கிரவர்த்தி கேட்க, அவர்களில் பிரபுத்தயோகி சொல்லுகின்றார் :

“ துக்கநிவர்த்தியாய் சுகத்தை யடையவேண்டும் என்னும் இச்சையையுடைய புருஷன் ஸ்திரீயுடனே கூடிக்கொண்டிருந்தாலும் சத்கர்மங்களைச் செய்து பகவானுக்கு அர்ப்பணம் பண்ணக்கடவன். நித்தியமாக துக்கத்தைக் கொடுக்கும் மிருத்தியு ரூபமான தனம், அனித்தியமான கிரகம், புத்திரர்கள், ஆப்தர்கள், பசுக்கள் இவைகளாலே ஆத்துமாவுக்கு என்ன பிரீதியுண்டாகும்? காமத்தினால் சம்

பாதிக்கப்பட்ட சமஸ்த போகங்களையும் அனித்தியமென்றே அறியக்கடவன். உத்தமமான சிரேயசை யறியவேண்டிய வன் சகல வேதார்த்தங்களுடைய தத்துவத்தையும் பரமாத் தும அனுபவத்தையும் அறிந்த ஆசாரியனை ஆசரிக்கக் கடவன். யாகம்-தானம்-தபசு-தடாக பிரதிஷ்டை முதலான கருமங்களையும் இஷ்டமான கந்த புஷ்ப முதலியவைகளையும் பாரியை-புத்திரர்கள்-கிரகம்-பிராணன் இவைகளையும் பகவா னுக்குச் சமர்ப்பணம் பண்ணக்கடவன். இந்தப் பிரகாரம் ஸ்ரீ கிருஷ்ணரையே நாதனாகவுடைய ஸ்தாவர சங்கமங்க ளான பிராணிகளிலே சிநேகத்தையும் பூசையையும் வகிக்கக் கடவன். இதினாலுண்டாகின்ற பக்தியினாலே ஸ்ரீமந் நாரா யணரே கதியென்று வெல்லுதற்கரிய பகவன் மாயையை சுக மாக வெல்லுவான்'' என்றிப்படி பிரபுத்தயோகி சொல்லக் கேட்ட நிமிச்சக்கிரவர்த்தி பின்னும் சொல்லுகின்றான்.

"கேளுங்கள் மகானுபாவர்களே! பரப்பிரம்மமானது நாராயணரென்றும் பகவானென்றும் பரமாத்மாவென்றும் சொல்லப்படுகிறதன்றோ? நாராயணரென்று பெயரையுடைய அந்தப் பிரம்மத்தினுடைய சுயரூபத்தைச் சொல்லி யருள வேண்டும்'' என்று கேட்கின்ற அந்த வரசனைப் பார்த்துப் பிப்பிலாயன யோகி சொல்லுகின்றார்:

வாராய் அரசனே! இந்தப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி-ஸ்திதி-சங்காரங்களுக்குக் காரணராயும், காரண சூனியராயும், சொப்பன முதலான அவஸ்தைகளில் அந்தரி யாமியாயும், தேகம்-இந்திரியங்கள்-பிராணன்-மனது - இவை களில் பிரேரேபனைப் பண்ணப்பட்டு ஜீவனுடனே கலந்து விஷயாதிகளில் சஞ்சரித்துக்கொண்டுமிருக்கிற அந்த நாரா யணரைப் பரப் பிரம்மமென்றறிவாய். அப்படிப்பட்ட பரப் பிரம்மத்தை நேத்திர முதலான இந்திரியங்களாலும் மனதி னாலும் புத்தியாலும அடையமுடியாது. வேதமானது தான் பிரமாணமாக நின்றுகொண்டு அந்தப் பரமாத்துமா வாக் குக்கும் மனதிற்கும் எட்டாதவரென்றும், அவரை இப்படிப் பட்டவரென்றும் சொல்லாமலே அப் பரமாத்துமாவைத் தவிர மற்றவர்களை நிஷேதியா நின்று சொல்லிக்கொண் டிருக்கிறது. ஆதியில் ஏகமான அப் பரப்பிரம்மமே சத்துவ ரஜஸ் தமோகுண ரூபமானதென்றும், பின்பு கிரியாசக்தியி னாலே விராட்புருஷனென்றும், ஞானசக்தியினாலே மகதத் துவமென்றும் ஜீவனென்றும் அகங்காரம் இந்திரியம் தேவ தைகள் விஷயங்கள் சுக முதலான கர்மபலன்களாகவுஞ்

சொல்லப்படுகின்றது. காரிய காரணங்களுக்கு பரம காரண மாயிருக்கிற அந்தப் பரப்பிரம்மமே சர்வரூபமாக விளங்கா நிற்கிறது. இந்தப் பரமாத்மா பிறந்ததுமில்லை, இறந்தது மில்லை. அவருக்கு விர்த்தியுமில்லை நாசமுமில்லை. அல்லா மல் பால்யம் யவ்வன முதலான தேக அவஸ்தைகளுக்குச் சாக்ஷியாய் அந்தக் காலங்களைப் பார்த்துக்கொண்டும் சர்வ தேசத்திலும் காலத்திலும் நாசமடையாதவராய் ஞானமாத் திர சுவரூபனுயும், சர்வசாக்ஷியாயும், நித்தியனுயு மிருக்கின் ருர். இப்படிப்பட்ட அந்தப் பரமாத்துமாவாகிய நாராயண னையே பரப்பிரம்மமென்று அறியக்கடவது.

நிமிச் சக்கிரவர்த்தி மேலும் அவர்களைப் பார்த்துச் சொல்லுகிருன்: "தபோநிதிகளே! புருஷனுனவன் கர்ம யோகத்தினுல் சம்ஸ்காரத்தை யுடையவனுய் இந்த லோகத் தில் சீக்கிரமாகக் கர்ம பந்தங்களை விட்டுவிட்டு நிவர்த்தி யடைவதற்கு சாதனமான கியானத்தைச் சொல்லக் கடவீர் கள். அல்லாமல் பூர்வத்தில் என் பிதாவான இக்ஷுவாகு மகாராஜனுடைய சமீபத்திலே பிரம்ம புத்திரர்களான சனக யோகி முதலானபேர்கள் சர்வக்கியர்களா யிருந்தும் நானிந்தப் பிரஷ்னத்தையே கேட்டேன். அவர்கள் சொல் லாமற்போன காரணத்தையுஞ் சொல்ல வேண்டுகிறே னென்ருன். இப்படிக் கேட்ட அரசனைப் பார்த்து ஆவி ஹோத்திர யோகியானவர் சொல்லுகிருர்:

ஓ நிமிச் சக்கரவர்த்தியே! கேளும்: வேதமானது ஈஸ்வரனிடத்திலே யுண்டானது. அது எந்த தாத்பரியத்தி னுலே எந்த அர்த்தத்தைச் சொல்ல ஏற்பட்டதோ, அந்த அர்த்தத்தையே வேறொரு பிரகாரமாகச் சொல்லிக்கொண் டிருக்கிறது. எப்படி பிதாவானவன் பாலனுக்கு ஔஷதத் தைச் சாப்பிடச் செய்வதற்கு லட்டுகள் முதலானவைகளாலே இச்சையுண்டாக்கி ஔஷதத்தைச் சாப்பிடச்செய்து அந்த ஔஷதபானத்துக்கு லட்டு கம்பலமாகாமல் ஆரோக்கியம் பலமாகா நிற்கிறதன்ருே? அப்படிப்போலவே தாமும் புருஷனைக்குறித்து சொர்க்க போக முதலான பலன்களாலே ஆசையையுண்டாக்கி கர்மத் தியாகத்தின் பொருட்டே கர்மங் களை விதியா நிற்கிறது. இந்திரிய ஜயமில்லாத மூட புருஷன் வேதங்களில் சொல்லப்பட்ட கர்மத்தை ஆசரியாமற் போனுனேயானுல், விகித கர்மத்தை ஆசரியாமற்போன தாகிற அதர்ம கர்மத்தினுலே மரிக்கிறதும் ஜனிக்கிறது மான துக்கத்தை யடைவன். ஆகையினுலே ஈஸ்வரார்ப்பித மாக வேதோக்தமான கர்மங்களைச் செய்து கர்மத்தியாக

ரூபமான ஞானசித்தி யடைவன். எந்த புருஷன் ஜீவனுடைய அகங்கார பதத்தைப் போக்கடிக்க இச்சிக்கிறானோ? அவன் பாஞ்சராத்திர முதலான ஆகம சாஸ்திரத்திலும் வேதத்திலுஞ் சொல்லப்பட்டிருக்கிற விதிகளாலே தேவ தேவரான ஸ்ரீ கேசவரை ஆராதிக்கக் கடவன். ஆராதன காலத்தில் சுசியாக ஸ்ரீ பகவானுடைய மூர்த்திக்கு எதிராக விருந்துகொண்டு பிராணாயாம முதலானவைகளாலே தேக முதலாகியவைகளைச் சுத்திசெய்துகொண்டு அங்க நியாசங்களாலே ரக்ஷையை யுடையவனாய் ஸ்ரீ ஹரியை ஆதரிக்கக் கடவன்.

பிரதமத்திலே புஷ்ப முதலான பூஜா திரவியங்களைக் குற்றமில்லாது சோதனைசெய்து வைத்துக்கொண்டு, பூமியைக் கோமயத்தினாலே சுத்திசெய்து, மனதை விஷயாதிகளில் செல்லாமல் சரீரத்தை ஸ்நானாதிகளால் சுத்திபண்ணிக்கொண்டு, ஆசனத்திலிருந்து பாத்திய முதலான பாத்திரங்களை யருகில் வைத்துக்கொண்டு, இருதயத்திலேயாவது அர்சாவதார விக்கிரகத்திலாவது பூஜிக்கக் கடவன். இருதயத்திலே பூஜிக்கப்படும் ஸ்ரீ ஹரியை விக்கிரகத்திலே ஆவிர்ப்பவித்ததாய் தியானம் பண்ணி மூல மந்திரத்தினாலே ஸ்ரீ பகவானை ஆராதிக்கக்கடவன். இருதய முதலான அவயவங்களோடும் சுதரிசன முதலான பஞ்சாயுதங்களோடும் பரிவார தேவதைகளோடு மிருக்கிற அந்த மூர்த்தியை அவரவர்களுடைய மந்திரங்களாலே அர்க்கிய பாத்தியம் ஆசமனியம் ஸ்நானம் முதலானவைகளாலேயும், வஸ்திரம் கந்தம் புஷ்பம் திலகம் தூபதீப நைவேத்தியங்களாலேயும் எதா சாஸ்திரத்துடன் சம்பூரணமாகப் பூஜித்து ஸ்தோத்திரஞ்செய்து ஸ்ரீ ஹரியை பிரணாமம் பண்ணக் கடவன். தன்னை அந்த ஸ்ரீ பகவானுடைய ரூபமாகத் தியானம் பண்ணிக்கொண்டு ஸ்ரீ ஹரியினுடைய மூர்த்தியைப் பூஜிக்கக்கடவன். ஸ்ரீ பகவானுக்கு அர்ச்சிக்கப்பட்ட துளசி முதலானதை சிரசில் தரித்துக்கொள்ளக்கடவன். இந்தப் பிரகாரம் பூஜிக்கப்படாநின்ற அந்த பகவானைத் தன்னுடைய இருதயத்திலேயும் அந்த விக்கிரகத்தை ஒரு சுத்த ஸ்தலத்திலும் எழுந்தருளச்செய்து அந்தப் பூஜையை முடிக்கக் கடவன். இப்படி ஈசுரனை ஆராதிக்கிற அந்தப் புருஷன் சீக்கிரமாக முத்தியை யடைவன். நீ பாலனாயிருந்ததனால் அந்தச் சனகயோகி முதலானவர்கள் அப்போது உனக்கு இந்த விஷயத்தை சொல்லவில்லையென்று நீயறியக்கடவாய்.



## நான்காவது அத்தியாயம்

*திருமிடை யோகியினால் நிமிச் சக்கிரவர்த்திக்கு ஸ்ரீ பகவானுடைய அவதார சரித்திரங்கள் சொல்லப்படுகின்றன.*

"மகா யோகீகளே! ஸ்ரீ பகவானுடைய அர்சாவதாரங்களிலே இஷ்டமான மூர்த்தியை ஆராதிக்கும்படி சொன்னீர்கள். ஸ்ரீ ஹரியானவர் தன் இச்சையினாலே வகிக்கும் அவதார சரித்திரங்களைச் சொல்லவேண்டும்" என்று நிமிச் சக்கரவர்த்தி கேட்க திரமிட யோகி சொல்லுகிறார் :

நிமிச் சக்ரவர்த்தியே ! கேளும்: ஸ்ரீ பகவானுடைய குணங்கள் எண்ண முடியாதது. ஸ்ரீமந் நாராயணர் தாமே பிரிதிவு முதலிய பஞ்சமகா பூதங்களாகிய பிர்மாண்டத்தை நிருமித்து அதில் தமதம்சமாகவே புருஷனென்கிற நாமத்தையுடையவரா யிருக்கிறார். அவருடைய சரீரமே மூன்று லோகமாயும், அவருடைய இந்திரியங்களே சமஷ்டிவியஷ்டிகளாகிய ஜீவன்களுக்கு ஞானேந்திரிய கர்மேந்திரியங்களாகவும், அவருடைய தத்துவக் ஞானமே சமஸ்த ஜீவர்களுக்கு ஞானமாகவும், அவருடைய பிராணனே சமஸ்த ஜீவர்களுக்கும் தேவசக்தியும், இந்திரியசக்தியும், கிரியா சக்தியுமாகவும், அவருடைய முக்குணங்களே பிரபஞ்சத்தில் சிருஷ்டி - ஸ்திதி - சங்கார கிருத்தியங்களையுடைய ஆதி கர்த்தர்களாகவும் நிற்கின்றன. அந்த ஸ்ரீ பகவானுடைய ரசோகுணமே சிருஷ்டியில் பிரம்மாவாகவும், அவருடைய சத்துவகுணமே ஸ்திதியில் விஷ்ணுவாகவும், அவரது தமோகுணமே சங்காரத்தில் உருத்திரனுகவும் உண்டாயின.

பகவானுனவர் தக்ஷனுடைய பெண்ணான மூர்த்தியென்னும் தர்ம பத்தினியினிடத்திலே நரநாராயணராக அவதரித்து சமதமாதி குணங்களையுடையவராய் தவம்புரிந்தார். தேவேந்திரன் தன் பதவியை அடையும் பொருட்டே தபம் செய்கிறாரென் றெண்ணி, அந்த தபசைக் கெடுக்கும்படி அப்சர ஸ்திரீகளையும் மன்மதனையும் ஏவினன். அந்த மன்மதன் பதரிகாசிரமத்தை யடைந்து பகவானுடைய மகிமையை யறியாதவனாய் ஸ்திரீகள் கடைக்கண் பார்வையாகிய பாணங்களை எய்தான். ஆதிதேவரான அந்தப் பகவான் குஞ்சிரிப்புகொண்டு அந்த மன்மதன் முதலானவர்களைப் பார்த்து "மெத்த சமர்த்தனான மன்மதனே பயப்படாதே! மந்தமாருதமே பயப்படாதே ! அப்சர ஸ்திரீ

களே பயப்படாதீர்கள்! நம்முடைய ஆதித்தியத்தைக் கிரகித்து இந்த ஆசிரமத்தைச் சபலமாகப் பண்ணுங்கள்" என்று அபயப்பிரதானம் பண்ணினார். மன்மதன் முதலியவர்கள் மிக லச்சையை யுடையவர்களாய் மனம் நடுங்கியவர்களாய் அவரைப் பலவிதமாய் துதித்தார்கள்.

பின் பகவான் தம்முடைய யோக மாயையினாலே சர்வாபரண பூஷிதர்களான பல அழகான பெண்களைக் காண்பித்தார். ஸ்ரீ மகா லட்சுமிக்கொப்பாய் விளங்கும் அவர்களைப் பார்த்து மோகத்தையடைந்த அந்த மன்மதன் முதலான பேர்களை ஸ்ரீ பகவான் கருணைகூர்ந்து "இந்த ஸ்திரீகளில் உங்களுக்கு எவள்பேரில் இச்சையிருக்கிறதோ அந்த ஸ்திரீயை வரிக்கக்கடவீர்கள். இந்த ஸ்திரீகள் சௌந்தரிய வீனர்களான எங்களுக்கு தகாது" என்றனர். அதைக் கேட்ட மன்மதாதிகள் அப்படியே ஒப்புக்கொண்டு அந்த பகவானைச்சாஷ்டாங்கமாகப் பிரணமம்பண்ணி அந்த ஸ்திரீகளில் உத்தமியாகிய ஊர்வசியை யழைத்துக்கொண்டு சொர்க்கமடைந்து தேவேந்திரனை நமஸ்கரித்து ஸ்ரீமந் நாராயணருடைய தபோபலத்தைச் சொன்னார்கள். அப்போது தேவேந்திரனுமாச்சரியமுற்று மிகவும் பயத்தை யடைந்தான். பகவானுன ஸ்ரீ மகா விஷ்ணுவானவர் ஜகத்துக்கு மங்கள முண்டாகும்பொருட்டு அவருடைய கலையினால் அம்ச ரூபியாகவும், தத்தாத்திரேயராகவும், ஜனகாதி யோகிகளாகவும், எங்களுடைய பிதாவான ரிஷப யோகியாகவும் அவதரித்து ஆத்தும தத்துவத்தைச் சொன்னார்.

அந்த விஷ்ணுவினுடைய அயக்ரீவ அவதாரத்திலே சகல வேதங்களும் கிரகிக்கப்பட்டன. ஜகத்மங்களத்தின் பொருட்டு அவதரித்த மச்சியாவதாரத்தில் மனு-பூமிதேவி-ஓஷதிகள் இவைகளை மகாபிரளயத்தில் இரட்சித்தார். வராகாவதாரத்திலே ஜலத்தினின்று பூமியை உத்தாரணம் பண்ணி இரணியாட்சதனைச் சங்கரித்தார். கூர்மாவதாரத்தில் க்ஷீரசமுத்திரத்தைக் கடையும்போது முழுகிப்போகாநின்ற மந்தரகிரியைத் தம்முடைய முதுகினில் தாங்கியருளினார். தம்மையே சரணமடைந்த கஜேந்திரனை முதலைவாயினின்றும் ரட்சித்தார். நரசிம்மாவதாரத்தில் அசுரசிரேஷ்டனை இரணிய கசிபுவைச் சங்கரித்தார். பின்னும் வாமனரூபியாக அவதரித்து பலிச்சக்கரவர்த்தியி னிடத்தினின்று பூமியைக் கிரகித்து தேவர்களுக்களித்தார். பரசுராமராக அவதரித்து இருபத்தொருதாம் பூமியில் சர்வ க்ஷத்திரியர்

களை நாசம் பண்ணினுர். ஸ்ரீ ராமாவதாரங்கொண்டு இலங்கைக்கரசனுகிய இராவணனைச் சங்கரித்தார். யதுவம்சத்தில் கிருஷ்ணராக அவதரித்து பூபாரம் தீர்க்கப்போகிருர். புத்தாவதாரம்பண்ணி பாஷண்ட வாதங்களாலே மோகிப்பிக்கப் போகின்ருர். யுகாந்தத்தில் கற்கியாவதாரம் செய்து பூமியை ரட்சிக்கப்போகிருர் என்று பகவத் அவதாரங்களை கிரமமாக சொல்லி முடித்தார்.



## ஐந்தாவது அத்தியாயம்



*வர்ணுசிரம தர்மமும் ஸ்ரீ பகவானுடைய ஆராதன கிரமமும் சொல்லப்படுகின்றன.*

"வாருங்கள் ஆத்தும நிஷ்டர்களே! ஸ்ரீ ஹரியை உபாசியாமலும் ஒழியாத கர்மத்தை யுடையவர்களாயும் இந்திரிய ஜயமில்லாதவர்களாயு மிருக்கிற புருஷர்களுக்கு என்னகதி" என்று நிமிச் சக்கிரவர்த்தி வினவ, சம்சயோகி சொல்லுகிருர். வாராய் ராஜனே! புருஷோத்தமரான அந்தப் பகவானுடைய முகத்தில் அவருடைய சத்துவ குணத்தினுல் பிராமணர்களும், அவரது பாகுக்களில் சத்துவ ரசோகுணத்தினுலே க்ஷத்திரியர்களும், அவருடைய துடைகளில் ரஜஸ்தமோகுணங்களால் வைசியர்களும், அவரது பாதங்களில் தமோகுணத்தால் சூத்திரர்களும், ஆகிய நான்கு வர்ணத்தினர்களும் உண்டானுர்கள். இந்த வர்ணங்களில் நியந்தாவான பகவானை அக்கியானத்தினுல் உபாசியாமலிருக்கிற அவர்கள் வர்ணுசிரம தர்மங்களினின்றும் பிரஷ்டர்களாய் அதோகதியை யடைவார்கள். அச்சுதருடைய கதையைக் கேளாமல் நாமகீர்த்தனங்களைச் ஜெபியாமலிருக்கிற சூத்திரர்கள் யாவரும் வியர்த்தமான ஜன்மத்தை யுடையவர்களானுர்களே யென்று உன்னைப்போலொத்த மகானுபாவர்களுடைய கிருபைக்கு யோக்கியர்களாகா நிற்கிருர்கள். பிராம்மணர்கள் - க்ஷத்திரியர்கள் வைசியர்கள் இவர்கள் உபனயனம் - அத்தியயனம் - ஹரிஉபாசனை உத்தமமான அதிகாரமடைந்ததாலும் வேதங்களிலேயிரா நின்ற அர்த்தவாதங்களில் புத்தியை யுடையவர்களாய் கர்மபலன்களிலே மோகத்தை யடைகிருர்கள். தன முதலான சம்பத்து, பிரபுத்துவம், குலம், கல்வி, தியாகம், ரூபம், பலம், கர்மம் இவைகளால் உண்டாகின்ற கர்வத்தினுலே ஈஸ்வரனை வழிப்டாமலும் சாதுக்களை விரோதித்தும் மனிதர்கள் நாச

மடைகிறார்கள். லோகத்திலே ஸ்திரீசம்போகம், மதுமாம்சம், இவைகளை யனுபவிக்கிறது ஆசையினாலே சுபாவமாயிருக்கிறது. இவைகளை நிவர்த்திப்பதே வேதத்துக்கு இஷ்டமாயிருக்கிறது. தர்மத்தினாலே கியானமும் பரமாத்தும சாக்ஷாத்காரமும் உண்டாகின்றன. சௌத்திராமணி. யாகத்திலே மத்தியத்துக்கு ஆக்கிராணமே விதிக்கப்பட்டிருக்கிறது. பானமானது விதிக்கப்படவில்லை. அப்படியே யாகத்திலே தேவதைகளை யுத்தேசித்து பசுவுக்கு ஆலம்பனமானது விதிக்கப்பட்டிருக்கிறது. பக்ஷண நிமித்தமாக அந்த பசுவதை வேதத்திலே விதிக்கப்படவில்லை. ஸ்திரிசம்போகமும் பிரஜா நிமித்தமாகவே விதிக்கப்பட் டிருக்கிறது; ஆசையின் பொருட்டு விதிக்கப்படவில்லை. பரிசுத்தமான இந்த சுதர்மத்தை அறியாதவர்களாய் துஷ்டர்களாயும் தாங்களே தெரிந்தவர்க ளென்கிற அகங்காரத்தை யுடையவர்களாயும், பசுக்களை வதைசெய்யும் அந்த அக்கியானிகள் ஸ்ரீ ஹரியைத் துவேஷித்தவர்களாய் புத்திரர்களுடனே அதோகதியை அடைகிறார்களென்று சொல்லும் சம்சயோகியைப் பார்த்து நிமிச்சக்கரவர்த்தி சொல்லுகிறார்:

மகாயோகியே! பகவானனவர் ஒவ்வொரு யுகத்திலும் எவ்விதம் மூர்த்திகரிக்கிறாரோ எப்படி பூஜிக்கப்படுகின்றாரோ அவைகளை எனக்குச் சொல்லக் கடவீரென்று கேட்க கற்பாசன யோகி சொல்லுகின்றார்:

கிரேதாயுகத்திலே பகவான் சுக்கில ரூபியாய் நான்கு கைகளை யுடையவராய் சடையை யுடையவராய் மாவுரியை வஸ்திரமாக வுடையவராய் கிருஷ்ணாசனம் - எக்கியோபவீதம்-ஜபமாலை-தண்டம்-கமண்டலம்-இவைகளைத் தரித்துக் கொண்டு பிரம்மசாரியா யிருக்கிறார். அப்போது மனுஷியர்கள் சமதமாதிகுணங்களை யுடையவர்களாயும் மனோ நிக்கிரகம் இந்திரிய நிக்கிரகம் - இவைகளோடு தியானத்தினாலே தேவதேவரான ஸ்ரீ ஹரியை அம்சர், சுபர்னர், வைகுண்டர், தர்மர், யோகீஸ்வரர், அமலர், ஈஸ்வரர், புருஷர், அவ்வியகர்த்தர்: ஆகிய நாமங்களினால் ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். திரேதாயுகத்தில் பகவான் இரக்த வர்ணராயும் நான்கு கைகளை யுடையவராயும் மூன்றுபுரியையுடைய அரைநூல் மாலையை யுடையவராயும் வேத மூர்த்தியாயும் சுறுக்கு சுறுவ முதலான எக்கிய பாத்தியங்களை அவயவமாக வுடையவராயும் எக்கிய மூர்த்தியாக விருக்கிறார். அப்போது தர்மிஷ்டர்களாயும், வேதவாதிகளாயுமிருக்கிற மனுஷியர்

கள் சர்வ வேதஸ்வரூபரான ஸ்ரீ ஹரியை மூன்று வேதங்களாலேயும் சொல்லப்பட்ட கர்மங்களாலே ஆராதித்து விஷ்ணு, எக்கியர், சர்வதேவர், உறுக்கிரமர், விரஷாகபி, ஜெயந்தர், உருகாயர் ஆகிய நாமங்களாலே ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். துவாபர யுகத்திலே பகவான் காயாம்பூ வர்ணத்தை யுடையவராயும், பீதாம்பர தாரியாயும், சக்கிர முதலான ஆயுதங்களை யுடையவராயும் விளங்குகின்றார். அப்போது மனுஷியர்கள் பரமாத்மாவை அறியவேணுமென்கிற இச்சையை யுடையவர்களாகி பகவானை வைதீக மார்க்கத்திலேயும் பாஞ்சராத்திர முதலான ஆகம மார்க்கத்தினாலேயும் ஆராதிக்கிறார்கள். தேவர், சங்கருஷ்ணர், பிரத்தியும்னர், அனிருத்தர், பகவான், நாராயணர், ரிஷி, புருஷர், மகாத்மர், விசுவேசுவரர், விசுவர், சர்வ பூதாத்மர் இந்த நாமங்களினால் ஸ்ரீ ஹரியை தோத்திரம் பண்ணுகிறார்கள்.

கலியுகத்திலே ஸ்ரீ கிருஷ்ணாவதாரரான பகவானை நாம கீர்த்தனம் ஸ்தோத்திரம் இவைகளாலே முக்கியமாக ஆராதிக்கிறார்கள். வாராய் ராஜனே! பகவானுயிருக்கிற ஸ்ரீ ஹரியானவர் இந்தப்பிரகாரம் யுகங்களுக்கு அனுரூபமா யிருக்கிற நாம ரூபங்களாலே அந்தந்த யுக தர்மத்தை அனுவர்த்தித்து மனுஷர்களால் ஆராதிக்கப்படுகிறார். கலியினுடைய குணத்தை அறிந்த பெரியவர்கள் கலியுகத்தையே சிலாகிக்கிறார்கள். கலியுகத்திலே சம்சாரத்தில் சுழலும் மனுஷியர்களுக்கு ஸ்ரீ ஹரியினுடைய நாம கீர்த்தனத்தைப் பார்க்கிலும் பரமமான பலம் வேறொன்றுமில்லை. இந்தக் கலியுகத்திலே ஸ்ரீமந் நாராயணருடைய பக்தர்கள் ஒவ்வோரிடங்களிலே யிருப்பார்கள். சகல விடங்களிலு மிருக்கமாட்டார்கள். திராவிட தேசத்திலே பகவத் பக்தர்கள் விசேஷமா யிருப்பார்கள்.

நிமிச் சக்கிரவர்த்தி இவ்விதம் பாகவத தர்மங்களைக் கேட்டு மிகவும் பிரீதியுடையவனாய் அந்தரிஷிகளை நன்றாகப் பூஜித்தான். பிற்பாடு அந்த ரிஷிகள் அவ்விடத்திலே அந்தர்த்தானமானார்கள். அந்த நிமிச்சக்கிரவர்த்தியும் அந்த பாகவத தர்மங்களை அனுஷ்டானம் பண்ணிக்கொண்டு பரமகதியை அடைந்தான். நீயும் இந்தப் பாகவத தர்மங்களை அனுஷ்டானம் பண்ணிக்கொண்டு பரமகதியை யடையப்போகிறாய், என்று நாரதமுனிவர் உரைத்தனர்.



## ஆருவது அத்தியாயம்

*பிரம்மாதிகள் துவாரகைக்கு வந்து ஸ்ரீ கிருஷ்ணபகவானை ஸ்தோத்திரம் செய்து பரமபதத்திற்கு எழுந்தருளும்படி பிரார்த்தித்தது சொல்லப்படுகிறது.*

பரிக்ஷித்து மகாராஜனே! ஜனகாதி யோகீஸ்வரர்கள் தக்ஷகன் முதலான பிராஜாபதிகள் இவர்களாலே சூழப்பட்ட பிரம்மதேவனும் சிவபெருமானும் இந்திரன் முதலிய தேவர்களும்-துவாதசாதித்தர்கள்-அஷ்டவசுக்கள்-அசுவனிதேவர்கள் முதலியவர்களும் ஸ்ரீ கிருஷ்ணனைத் தரிசனம் செய்யும் பொருட்டு துவாரகைக்கு வந்து ஸ்ரீ கிருஷ்ணரைப் பார்த்துப் பரமானந்த மடைந்தவர்களாக ஸ்தோத்திரம் செய்யலானூர்கள்.

நாதனே! தேவரீருடைய பாதாரவிந்தத்தை புத்தி-இந்திரியங்கள்-பிராணன் - மனது - வாக்கு இவைகளாலே சாஷ்டாங்கமாகப் பிரணுமம் பண்ணுகிறேம். அச்சுதரே! தேவரீர் சத்துவ ரஜஸ் தமோ குணங்களை யுடைய உம்முடைய மாய்கையினலே இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தும் ரட்சித்தும் சங்கரித்து மிருக்கிறீர். ஆனுலும் தேவரீர் சிருஷ்டி-ஸ்திதி-சங்கார ரூபங்களான இந்தக் கர்மங்களாலே பாதிக்கப்படாமலே யிருக்கிறீர். அப்படிப்பட்ட தேவரீருடைய பாதாரவிந்த மானது எங்களுடைய விஷய வாசனைகளைத் தகித்துப்போடக்கடவது. ஈசனே! தேவரீருடைய யாதொரு பாதாரவிந்தமானது எக்கியம்பண்ணுகிற பேர்களாலே இந்திரன் முதலான தேவதாரூபமாகத் தியானம் பண்ணப்படுகிறதோ அந்தத் திருவடி எங்களுடைய விஷய வாசனைகளை நாசம் பண்ணக்கடவது.

அமோகமான வீரியத்தையுடையவரே! விராட்புருஷன் உம்மிடத்தில் நின்றும் சக்தியை யடைந்து மாய்கையோடு கூட இந்தப் பிரபஞ்சத்தினுடைய கற்பத்தைப்போல மகதத்துவத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறுன். உம்மை அந்தரியாமியாக வுடையவனுன அந்த விராட்புருஷன் அந்த மாய்கையோடு கூடினவனுய் தனக்கு வெளியிலே அகங்கார முதலான ஆவர்ணங்களோடு கூடிக்கொண்டு இரணியகற்பனுடைய சரீரமாயிருக்கிற பிர்மாண்டத்தைச் சிருஷ்டித்தான். அப்படிப்பட்ட தேவரீர் விஷயங்களிலே சம்பந்தப்படாதவராகவே யிருக்கிறீர். அன்றியும் தமது அமிர்த சொரூபமான

புண்ய சரித்ரமாகிய ஜலத்தைப் பெருக்காநின்ற கீர்த்தியுள்ள நதிகளும் தமது திருவடிகளில் நின்றும் உண்டாகும் கங்கை முதலான நதிகளும் மூன்று லோகங்களுடைய பாபங்களைப் போக்கடிக்கின்றன. தேவரீர் பூமிக்கு எழுந்தருளிய காரணமாகிற பூபார நிவாரண கார்யம் நிறைவேறிவிட்ட படியால் பரமபதத்திற்கு மீண்டும் எழுந்தருளும்படி பிரார்த்திக்கின்றோம்.

இவ்விதம் துதித்த தேவர்களைப் பார்த்து ஸ்ரீ ஹரியானவர் சொல்லுகிறார்: தேவர்களே! என்னைக் குறித்து யாதொரு அர்த்தத்தைச் சொன்னீர்களோ இந்த அர்த்தமானது என்னாலே அறியப்பட்டே இருக்கின்றது. சமஸ்த தேவகாரியமும் நிறைவேறப்பட்டு பூமியினுடைய பாரமுந் தீர்க்கப்பட்டது. வீரியம்-சௌரியம்-சம்பத்து இவைகளாலே மிகவும் கர்வித்திருக்கிற இந்த யாதவ குலத்தைச் சங்கரியாமல் ஸ்ரீ வைகுண்டத்தை யடைவேனேயாகில் இதனால் லோகம் நாசத்தை யடைந்துபோகும். இந்த யாதவகுலம் நாசமடைந்த பின் பரமபதத்தை யடைந்து பிரம்மலோகத்திற்கு வருகிறேனென்று ஸ்ரீ பகவான் சொன்ன மாத்திரத்தில் பிரம்மா முதலிய சகலரும் ஸ்ரீ பகவானைச் சாஷ்டாங்கமாகப் பிரணமம் பண்ணி தம்முடைய லோகத்தை யடைந்தார்கள்.

பின்பு பகவான் அந்தத் துவாரகாபட்டணத்திலே யுண்டாகாநின்ற மகோற்பாதங்களைப் பார்த்து யாதவர்களை யழைத்து "வாருங்கள் யாதவர்களே! இவ்விடத்தில் ஆகாயம் பூமி திக்குகள் இவைகளில் நின்றும் பிரஜைகளுக்கு நாச ஏதுக்களான வெகு வுற்பாதங்க ளுண்டாகின்றன. ஆகையினால் பிழைத்திருக்க வேணுமென்கிறவர்கள் இவ்விடத்திலே வாசம் பண்ணத்தகாது. தாமதம் செய்யாமல் மகா புண்ணியகரமான பிரபாச க்ஷேத்திரத்தை யடைகுவோம். அந்த தீர்த்தத்தில் முழுகி சகல துக்கங்களினின்றும் விடுபட்டு தன்யர்களாகக்கடவோம் என்று பகவான் சொல்ல, யாதவர்கள் யாவரும் புறப்படலாயினர். அந்த சமயத்தில் ஏகாந்த பக்தரான ஸ்ரீ உத்தவர் அந்தரங்கமாக ஸ்ரீ பகவானைப் பணிந்து சொல்லுகின்றார்:

சகலலோகேஸ்வரரே! தேவரீர் பிராம்மண சாபத்தைத் தள்ளிவிடாமல் அங்கீகரித்தீர். இந்த யாதவகுலத்தைச் சங்காரம்பண்ணிக்கொண்டு மனுஷிய லோகத்தையும் விட்டுவிடப் போகிறீர். நான் தேவரீருடைய பாதாரவிந்தத்தை

அரை க்ஷணமானாலும் விட்டுச் சகிக்கமாட்டேன். நாதனே! என்னையும் உம்முடைய லோகமான ஸ்ரீ வைகுந்தத்தை யடைவிப்பிக்கக்கடவீர். மனுஷ்யர்களுக்குப் பரம மங்கள மாயும் கர்ணாமிர்தமாயுமிருக்கிற தேவரீருடைய சரித்திரத் தைக் கேட்டபின் பிறவி துக்கங்களில் மனம் செல்வதில்லை. சயனம், ஆசனம், சம்சாரம், ஸ்நானம், லீலைகள் முதலான வைகளில் தேவரீரை நித்தியமாகச் சேவித்துக் கொண்டிருக் கும் பக்தர்களான நாங்கள் பிரிய சுகுர்தராயும் அந்தராத்மா வாயு மிருக்கிற உம்மை எப்படி பிறிந்து வாழ்வோம். எப்படி யாவது எம்மை யாட்கொள்வது உமதுகடன் எனும் ஏகாந்த பக்தரான உத்தவரைப் பார்த்து பகவான் சொல்ல லுற்றனர்.



## ஏழாவது அத்தியாயம்



ஸ்ரீ பகவானாலே உத்தவருக்கு அவதூத சம்வாதம் சொல்லப்படு கிறது.

உத்தவரான மகானுபாவரே! நீரென்னை இந்த யாதவ குலத்தைச் சங்காரஞ்செய்துகொண்டு ஸ்ரீ வைகுந்தத்தை யடையப் போகிறீரென்று சொன்ன அர்த்தமானது என்னால் சங்கல்பிக்கப்பட்டதுதான் பிரம்மாவும் ருத்திரனும், லோக பாலர்களும் என்னை ஸ்ரீ வைகுந்தத்தை யடையும்படி பிரார்த்திக்கிறார்கள். நான் இந்தப் பூமியி லவதரித்து ஆக வேண்டிய அந்தத் தேவகாரியங்கள் சமஸ்தமும் நிறைவேற் றப்பட்டன. இந்த யாதவகுலம் பிராம்மண சாபத்தினால் தகிக்கப்பட்டதாய் நாசத்தை யடைந்துபோகிறது. சமுத்திர மானது இன்றைக்கேழாந் தினத்தில் இந்தத் துவாரகா பட்டணத்தை முழுக்கடிக்கப் போகிறது. இந்த லோகமானது என்னா லென்றைக்கு விடப்படுகிறதோ? அன்றைக்கே நஷ்ட மங்களமான கலியுகத்தினா லாக்கிரமிக்கப் படப்போகிறது. அப்படி யென்னால் விடப்பட்ட இந்தப் பூமியில் நீரும் வசிப் பது தகாது. இனி ஜனங்கள் கலியுகத்தில் அதர்மத்திலேயே ருசியை யுடையவர்களாயிருப்பார்கள். நீரோ சுவ ஜனங்களி லிரா நின்ற சமஸ்த சினேகத்தையும் விட்டுவிட்டு மனதை யென்னிடத்தில் ஸ்திரமாக வைத்து சமபுத்தியாய் பூமியில் சஞ்சரித்துக் கொண்டிருக்கக்கடவீர். மனதினாலும் வாக்கி னாலும் கண்களாலும் செவி முதலான இந்திரியங்களாலும் கிரகிக்கப்படும் இந்தப் பிரபஞ்சமானது மனதினுடைய விகாரமானபடியினாலே மாய்கை யென்றும் அநித்திய மென்

றும் அறியக்கடவீர். ஆகையினல் ஜயிக்கப்பட்ட இந்திரிய சமூகங்களை யுடையவராயும் மனோ நிக்கிரகத்தை யுடையவராயும் விஸ்தாரமான இந்த ஜகத்தை ஆத்மாவிலேயும், அந்த ஆத்மாவைப் பரப்பிரம்ம ரூபமான என்னிடத்திலேயும் பார்க்கக்கடவீர். ஞானியானவன் குணதோஷ புத்தியில்லாதவனாய் கர்மங்களைச் செய்துகொண்டும் கர்மங்களில் நின்றும் நிவர்த்தித்தவனாயு மிருப்பன். ஆத்மானுபவம் உடையவனாயிருக்கிற கியானியானவன் பிரபஞ்சத்தை என்னுடைய ஸ்வரூபமாகப் பார்த்து மறுபடியும் சம்சார துக்கத்தை யடையமாட்டானென்று பகவான் சொல்ல மகா பாகவதரான உத்தவர் கேட்டு தத்துவத்தை யறியவேணுமெனும் இச்சையுடையவராய் அச்சுதரைச் சாஷ்டாங்கமாகப் பிரணாமம்பண்ணி சொல்லுகிறார் :

ஸ்ரீ பகவானே! யோகபலப்பிரதரே! சன்னியாச ரூபமான சர்வசங்க பரித்தியாகமானது எனக்கு மோக்ஷத்தின் பொருட்டு சொல்லப்பட்டது. நான் எனது எனும் மூடபுத்தியை யுடையவனாய் நான் புத்திர மித்திராதிகளோடு கூடிக்கொண்டும் உம்முடைய மாய்கையினல் இந்தத் தேகத்தில் மூழுகிக்கிடக்கிறேன். ஆகையினல் உம்மால் சொல்லப்பட்டிருக்கிற இந்த யோகத்தை நானெப்படி சீக்கிரமாகச் சாதிக்கக்கூடும்? அதை பக்தனான எனக்கு சிட்சிக்கக் கடவீர் என்று சொல்லும் உத்தவரைப் பார்த்து ஸ்ரீ பகவான் சொல்லுகிறார் : மனுஷிய சரீரமானது மற்ற ஜன்மங்களை விட மேலானது. அந்தப் புருஷ சரீரத்தில் விவேகிகள் அகங்கார முதலானவைகளைக் காட்டிலும் வேறாக இராநின்றும் சர்வ நியாந்தாவாயு மிருக்கிற என்னை என்னாலே பிரகாசிக்கப்பட்டுள்ள புத்தி அந்தக்கரணம் முதலானவைகளால் பிரத்தியக்ஷமாக அறிகின்றார்கள். இந்த விஷயத்தில் பெரியோர்கள் மகாதேஜஸை யுடையவரான ஒரு அவதூதருக்கும் எதுமகாராஜாவுக்கும் சம்வாதரூபமாகிய ஒரு இதிஹாசத்தைச் சொல்லுவார்கள். அதைச் சொல்லுகிறேன். வித்துவானாயும் தர்மக்கியனாயு மிருந்த எதுமகாராஜன் ஒருவிடத்திலேயும் பயமில்லாதவராய் சஞ்சரித்துக்கொண்டிருந்த யவ்வன வயதையுடைய ஒரு அவதூதப் பிராமணனைப் பார்த்து சொல்லுகின்றார் :

"பிராமணோத்தமரே! சர்வக்கியரா யிருக்கிற நீர் எந்தப் புத்தியை ஆஸ்ரயித்து பாலனைப்போல இந்த லோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறீர்? உமக்கு சர்வலோக வில

க்ஷணமான இந்த புத்தியானது யாரிடத்தில் நின்றும் உண்டாயிற்று? லோகத்தில் மனுஷியர்கள் தர்மார்த்த காமங்களிலேயும் பரமாத்ம விசாரத்திலேயும் ஆயுசு-எஜசு-சம்பத்து இவைகள் நிமித்தமாகப் பிரவிர்த்திக்கிருர்கள்; தனசக்தி யில்லாததினுலேயும், கியானமில்லாததினுலேயும், அரூபத்தினுலேயும், கர்மங்களைச் செய்யாம லிருப்பார்கள். நீரோ சக்திமானுயும் ஞானவானுயும் நல்ல ரூபத்தை யுடையவராயிருந்து ஒரு தர்மத்தையுஞ் செய்ய இச்சியாமல் மூடனைப்போலும். பிசாசம்போலும், சஞ்சரித்துக்கொண்டு காமக்குரோத லோபங்களாகிற காட்டுத் தீயினுல் தபிக்கப் படாதவராய் மகா ஆனந்தத்தை யுடையவராயும், விஷய போகங்க ளில்லாதவராயு மிருக்கிற உமக்கிந்த ஆனந்தமானது உண்டான காரணத்தை எனக்குச் சொல்லக்கடவீர்'' என்று மிகவும் வணக்கத்துடன் கேட்கும் எதுமகா ராஜனைப் பார்த்து அவதூதப் பிராமணர் சொல்லுகின்ருர்:

"எதுமகா ராஜனே! எனக்கு உபதேசமில்லாமல் புத்தியினுலேயே குருவாகக் கிரகிக்கப்பட்ட ஆசாரியர்க ளனேகம் பேரிருக்கிருர்கள். அவர்களிடத்தில் நின்றும் இந்தப் புத்தியைக் கிரகித்து முக்தனுய் இவ்விடத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறேன். அவர்களாரென்ருல் பூமி, வாயு, ஆகாசம், ஜலம், அக்கினி, சந்திரன், சூரியன், புரு, மலைப் பாம்பு, சமுத்திரம், பதங்கம், வண்டு, யானை, தேனீ, மான், மச்சியம், பிள்ளை யென்னப்பட்ட தாசி, குற்றிப்பக்ஷி, பாலன், குமரி, அம்புசெய்கிறவன், சர்ப்பம், சிலந்தி, ஊதுவண்டு, இந்த இருபத்துநான்கு பேர்களும் எனக்குக் குருவாயிருந்தவர்கள். மகானுபாவர்களான இவர்களுடைய நடத்தைகளாலே நானறியத்தக்க அர்த்தங்களை அறிந்தவனுனேன். அதுகளை யுனக்குச் சொல்லுகிறேன் கேட்கக்கடவாய். பூமியானது பிராணிகளாலே பீடிக்கப்பட்டாலும் அந்தச் சமஸ்த உபத்திரவங்களையும் சகித்துக் கொண்டிருக்கிறது. அதுபோல தைரியசாலியான புருஷன் பிராணிகளால்பீடிக்கப்பட்டிருந்தாலும் அந்தப் பிராணிகள் தெய்வாதீனமா யிருத்தலை யறிந்து பூமியினுடைய விரதத்தை ஆசரித்து சன்மார்க்கத்தில் நின்றும் சலியாமல் சர்வகாலமும் பரோபகாரத்தின் பொருட்டு பராதீனனுகவே யிருந்து சகிக்கக்கடவன். மகாவாயுவினுலே சிட்சிக்கப்பட்டதைச் சொல்லுகிறேன். பிராண ரூபமான வாயுவானது ரூபரச முதலான இந்திரிய விஷயங்களை அபேட்சியாமல் கேவலம் ஆகாரத்தினு லிருக்கிறதுபோல ஞானியான

புருஷன் ரூபரசாதி விஷயங்களை அபேட்சியாமல் பிராணு தாரண மாத்திரத்தில்தானே சந்துஷ்டனுக விருக்கக்கட வன். எப்படி வாயு வனத்திலேயும் அக்கினியிலேயும் தான் சம்மதிக்கப்படாமல் சஞ்சரிக்கின்ருனே அதுபோல ஞானி சீதோஷ்ண முதலான குணங்களையுடைய சமஸ்த விஷயங் களிலேயும் பிரவர்த்தித்து இஷ்டம் அனிஷ்டமென்கிற புத்தியில்லாதவனுக அந்த விஷயங்களில் அகப்படாம லிருக்கக்கடவன். ஆகாசத்தினுலே சிட்சிக்கப்பட்டதைச் சொல்லுகிறேன். சர்வவியாபகமாயிருக்கிற ஆகாசத்திற்குக் கடமுதலானவைகளுடனே சம்பந்தமும் இவ்வளவென்கிற பிரமாணமுமில்லை. அதுபோல சர்வகாலமும் பகவானிடத் திலே சித்தத்தை யுடையவனை யோகி ஸ்தாவர ஜங்கமங் களிலே அந்தரியாமியாயிருக்கும் பரமாத்மாவினுடைய தியா னத்தினுல் பரிபூர்ணனை அந்தப் பரமாத்மாவுக்கு ஸ்தாவ ராதி தேகங்களோடு சம்பந்த மில்லாம லிருப்பதினுலும் இவ்வளவென்கிற பிரமாணமில்லாம லிருப்பதினுலும் ஆகா சத்தைப்போலவே பாவனை பண்ணக்கடவன். மேகமுதலான வைகளால் ஆகாசமானது ஸ்பரிசிக்கப் படாமலிருக்கிறது போல பிரிதிவ்-அப்பு-தேஜோ விகாரங்களாகியும் காலத்தி னுலே சிருஷ்டிக்கப்பட்டு மிருக்கிற தேக முதலானவைக ளாலே புருஷன் ஆகாசம்போலவே ஸ்பரிசிக்கப்படாமலே யிருக்கிருனென் றறியத்தக்கது.

ஜலத்தினுலே சிட்சிக்கப்பட்டதைச் சொல்லுகிறேன். நிர்மலமாயும், பவித்திரமாயும், மாதுரிய முதலான குணங்க ளோடிருக்கும் ஜலம் ஜகத்தைப் பாவனம் பண்ணுகிறது போல நிர்மலனுயும் சுபாவமாக சமஸ்த ஜனங்களிடத்திலே பிரீதியையுடையவனுயும், மதுரமானவாக்கை யுடையவனுகி யும், மனுஷியர்களுக்குள்ளே தீர்த்தம்போலப் பரிசுத்தனுயு மிருக்கிற ஞானி ஜலத்தைப்போல தரிசனம்-ஸ்பரிசம்-கீர்த் தனம் இவைகளாலே ஸ்நேகிதனைப் பாவத்தில் நின்றும் பரி சுத்தனுக்குவானென்று அறியத்தக்கது. மகாதேஜசையுடைய ஒருவராலேயும் கிட்டக்கூடாததா யிருக்கிற அக்கினியானது சர்வத்தையும் பட்சிக்கத்தக்கதா யிருந்தாலும் தோஷத்தை யடையாமலிருக்கிறது. அதுபோலவே ஞானுகி ஜயத்தை யுடையவனுயும், தபசினுலே விளங்கியும், அண்டக்கூடாதவ னுயும், பகவானிடத்தில் ஸ்திரமான சித்தத்தை யுடையவ னுகியு மிருக்கிற ஞானி அக்கினிபோலவே சர்வ பட்சகனு யிருந்தாலும் தோஷத்தையடையான். சந்திரனது கலை களுக்கே விருத்தி க்ஷயங்களுண்டா யிருக்கிறது ; சந்திரனுக்

கில்லை ? அதுபோல ஜனனம், நாசம், விருத்தி, க்ஷயம் இவை தேகத்துக் குண்டாகிறதே யல்லாமல் ஆத்மாவுக்கில்லை யென்று அறிந்தேன். சூரியனாலே சிட்சிக்கப்பட்டதைச் சொல்லுகிறேன். சூரியன் கிரணங்களால் ஜலத்தைக் கிரகித்துத் திரும்பவும் வருஷகாலத்திலே விடுகிறான்: அது போல ஞானி இந்திரியங்களால் விஷயங்களைக் கிரகித்தும் அதிதிகளின் பொருட்டுக் கொடுத்தும் என்னாலே இது அடையப்பட்டது. இது கொடுக்கப்பட்ட தென்கிற அகங்காரம் அடையாமலிருக்கக்கடவன்.

புறாவினாலே அறிந்ததைச் சொல்லுகிறேன், ஞானி ஒருவரிடத்திலேயும் ஒரு பிராணியுடனேயும் மிகவும் ஸ்நேகமும் ஆசக்தியும் பண்ணுதல் கூடாது. தவறிநடந்தால் புறாவைப்போல மிகவும் விசனத்தையடைவன். கபோதப் பட்சி குருவான விதம் சொல்லுகிறேன். ஒரு வனத்தில் கபோத பட்சிகளின் குடும்பம் ஒன்று வசித்திருந்தது. ஆண் பெண் பறவைகள் வெளிச்சென்றிருந்தபோது ஒரு வேடன் குஞ்சுகளை தன் வலையில் பிடித்துக் கொண்டான். பிறகு பெண் பறவை கூட்டிற்கு வந்து குஞ்சுகளின் கதியை அறிந்து தானும் வலையில் வீழ்ந்தது. ஆண்பறவை இதைப் பார்த்து மிக வருந்தி துக்கத்தை சகிக்கமாட்டாமல் தானும் வலையில் சிக்கிக் கொண்டது. அதுபோல இந்திரிய ஜய மில்லாதவனாயும் விஷயசுகத்திலேயே ஆசக்தியுடையவனாயு மிருக்கிற புருஷன் குடும்பத்தை போஷித்து அந்தக் கபோத பட்சியைப்போல குடும்பத்தோடே நாசத்தை யடைகுவன். ஒரு ஞானி அவ்விதம் நடந்து கொள்ளக்கூடாது. ஒரு ஞானியானவன் மலைப்பாம்பினுடைய விருத்திபோல விருத்தி யுடையவனாய் பிரயத்தன மில்லாதவனாய் மகா மதுரமாயிருந்தாலும் ரசமில்லாமலிருந்தாலும் அதிகமா யிருந்தாலும் கொஞ்சமா யிருந்தாலும் எதேச்சையாக லபிக்கும் ஆகாரத்தை புசிக்கக்கடவன். ஆகாரமானது எதேச்சையாகக் கிடைக்காமற் போனால் மலைப்பாம்புபோலவே பிரயத்தன மில்லாதவனாய் தெய்வந்தானே கொடுப்பிக்கிறதென்று தைரியத்தை யுடையவனாய் அனேகந் தினமானாலும் நிராகாரனாய் சயனித்துக்கொண்டு ஒன்றையும் இச்சியாமலிருக்கக்கடவன்.

சமுத்திரத்தினாலே அறிந்த அர்த்தத்தைச் சொல்லுகிறேன். ஞானியானவன் வெளிக்கு மிகவும் பிரசன்னனாயும் உள்ளே இப்படிப்பட்டவனென்று அறிவதற்கு அசக்கியனாகியும் ஒரு தரத்திலேயும் அதிக்கிரமிக்கக் கூடாதவனாயும்

பரமாத்துமாவினுடைய சொரூபானுபவத்திலே தேசகாலங்களால் அளவிடக் கூடாதவனும் ராகத் துவேஷாதிகளில்லாதபடியினாலே கலக்கமில்லாதவனுயுமிருந்துகொண்டு நிச்சலமாகிய தேகத்தையுடையதான சமுத்திரம்போல இருக்கக்கடவன். எப்படி சமுத்திரமானது வருஷாகாலங்களிலே விருத்தியடையாமலும் கிரீஷ்ம காலத்தில் வடிந்து போகாமலுமிருக்கிறதோ ? அதுபோல ஸ்ரீ மந்நாராயண பக்தனை ஞானி அதிக சம்பத்துகளால் சந்தோஷியாமலும் சம்பத்தில்லாதவனுயிருப்பதால் விசனப்படாமலு மிருக்கக் கடவன். விட்டிற் பூச்சியினுல் அறியப்பட்டதைச் சொல்லுகிறேன். விட்டிற்பூச்சி அக்கினியினுடைய ரூபத்தைப் பார்த்து அதனுல் மோகிக்கப்பட்டதாய் அதிலே விழுந்து போகிறதுபோல் மூடன் ஸ்ரீ பகவானுடைய மாய்கையின் கார்யமாகிற ஸ்திரீகள் - சுவர்ணம் - ஆபரணம் வஸ்திரம் முதலான திரவியங்களில் மோகித்து அவைகளை அனுபவிக்க வேணுமென்கிற புத்தியினுல் விட்டிற் பூச்சியைப்போல விவேகமில்லாதவனுய் நசித்துப் போகிருன். ஞானி வண்டுபோல இந்தத் தேகமானது எந்தமட்டு மிருக்கிறதோ அந்த மட்டுக்கும் நாலுதிக்கிலேயுங் கொஞ்சங் கொஞ்சம் ஆகாரத்தைக் கிரகித்துக்கொண்டு கிரகஸ்தர்களைப் பீடியாதவனுய் வண்டினுடைய விர்த்தியை ஆசரிக்கக் கடவன். யானை பெண்யானையின் பேரில் கொண்ட மோகத்தினுல் படுகுழியிலே விழுந்து அகப்பட்டுக் கொள்ளுகிறதுபோல சன்னியாசி மரத்தினுல் செய்த ஸ்திரீயையும் காலினுலேயும் ஸ்பரிசியாம லிருக்கக்கடவன். தேனீக்கள் குருவானதைச் சொல்லுகிறேன். தேனீக்கள் அதிகப் பிரயாசையால் கட்டிய தேன் கூண்டை மனிதர் அழித்து அனுபவிப்பது போல மகா பிரயாசையால் சம்பாதிக்கப்படும் திரவியங்களால் கிரகத்திலே சௌக்கியங்களைக் கோரும் கிரகஸ்தர்களுடைய அன்னத்தை முன்னே சன்னியாசி புசிக்கின்ருன். எப்படியானுல் வேடன் வசிக்கும் காட்டில் உள்ள பசும் புற்களிடம் மோகத்தை யடைந்த மான் அவனுலே நாசத்தை யடைவதுபோல சன்னியாசி ஸ்ரீ பகவத் கதைகளை கேட்கிறதைவிட்டு பிராகிருத கானங்களை கேட்பானேயானுல் கெட்டுப் போவான். தூண்டின் முள்ளிலே வைக்கப்பட்ட மாம்சத்தை இச்சித்து அந்தத் தூண்டின் முள்ளைப் பிடித்து மச்சம் நாசத்தை யடைவதுபோல மனிதர்கள் ருசிபார்க்க இச்சிப்பதால் கேடடைவார்கள். ஞானி அவ்விதம் நடந்துகொள்ளக் கூடாது.

ஒருகால் மிதுலா பட்டணத்தில் பிங்களையென்று ஒரு தாசி யிருந்தாள். அவள் ஒருநாள் தன்னை வெகு அழகுண்டாக அலங்கரித்துக் கொண்டு தெருவாசற்படியில் வந்து நின்றுகொண்டு தன்னைக்கோரி யாராவது ஒரு புருஷன் வருவானென்று அர்த்த ராத்திரி வரைக்கும் காத்திருந்து யாரும் வாராமையால் வருந்தி ஒரு உத்தம வைராக்கியம் பிறந்தவளாக இந்த புன் மானிடரை இச்சிப்பதைவிட நமக்குள் அந்தரியாமியாயிருக்கும் பகவானை யடைந்தால் நாம் நித்திய சுகத்தை யடையலாமே என நினைத்து நல்வழிப் பட்டாள். இவளையும் யான் ஒரு குருவாக பாவித்தேன்.

மதுரமாயும் புஷ்டியாயு மிருக்கிற குற்றிப்பக்ஷியை மாம்சத்திற்காக மனிதர்கள் கொன்று போடுகிறார்கள். விசேஷித்து மாங்கிஷமில்லாத மற்றப் பக்ஷிகள் சுகமாயிருக்கின்றன. ஆகையினால் மாங்கிஷ புஷ்டியில்லாமலிருக்கின்றவை சுகப்படுவதுபோல மனுஷியர்களுக்கு எந்தெந்த வஸ்து மிகவும் இஷ்டமா யிருக்கிறதோ அந்த வஸ்துவைக் கிரகிப்பதில் மிகவுந் துக்கமேயாம். பாலனுக்கு மானாபிமானங்கள் கிரகச்சிந்தை முதலானவைகளில்லை. அதுபோல நானும் மானாபிமானங்களில்லாமல் பரமாத்மாவினிடத்திலே பிரீதியை யுடையவனாய் இருக்கிறேன். குமரியினுடைய கதையைச் சொல்லுகிறேன். ஓரிடத்திலே ஒரு குமரி தன் மாதா பிதாக்கள் தேசாந்திரம் போயிருக்கிற சமயத்தில் தன்னை வரிக்கும்பொருட்டு வந்த புருஷர்களை தானே பூஜித்து அந்தப் புருஷர்களுக்குப் பக்ஷணார்த்தமாக ஏகாந்த ஸ்தலத்திலே சம்பாநெல் குத்துகிற அந்தக் குமரியின் கைகளிலுள்ள சங்குவளைகள் சப்தித்தன. தானே நெல்குத்துவது தரித்திரத்துக்குச் சூசகமாதலால் வந்திருப்பவர்கள் அந்த சப்தத்தை அறியாதிருக்கும்படி எல்லா வளைகளையும் உடைத்துவிட்டு ஒன்றைமாத்திரம் தரித்துக்கொண்டாள். அதுபோல வெகு பேர்களுடைய மத்தியிலே வாசஞ்செய்வது கலகத்துக்கு ஏதுவாக விருக்கும். ஒருவனாகவே சஞ்சரித்துக்கொண்டிருக்கக் கடவன். அம்பை துவயலிடுகிற பக்குவத்திலே நிச்சயமான சிந்தையுடையவன் பேரி முதலான வாத்திய சப்தங்களுடனே சமீபத்திலே போகும் இராஜாவையும் எப்படி பாராமலிருக்கிறானோ, அதுபோல பரமாத்மாவினிடத்திலே நிச்சலமான சித்தத்தை யுடைய ஞானி பிற பொருள்களில் சித்தத்தை செலுத்தாதிருக்கக் கடவன். சர்ப்பத்தைப்போல சன்யாசி ஒருவனாகச் சஞ்சரித்துக்கொண்டும், நியதமான விடமில்லாதவனாயும். ஆத்மானுபவத்தை யுடையவனாயும்,

ஏகாந்த வாசியாயும், ஒருவராலேயு மறியப்படாத மகிமையை யுடையவனுயும், மிதபாஷியாயு மிருக்கக்கடவன்.

சிலந்திபூச்சி தன் இருதயத்தினின்று முண்டாகிற நூலை முகத்தினுல் வெளியிலே பரப்பி சிறிதுகாலம் அதிலே யிருந்து கிரீடைபண்ணி திரும்பவும் தன்னுள்ளேயே கிரகித்துக் கொள்ளுகிறதுபோல மகேஸ்வரரான ஸ்ரீமந் நாராயணரும் தம்முடைய மாய்கையினுல் பிரபஞ்சத்தைச் சிருஷ்டி செய்து திரும்பவும் தம்மிடத்திலேயே கிரகித்துக் கொள்ளுகிருர். ஊதுவண்டினுலறிந்த அர்த்தத்தைச் சொல் லுகிறேன். ஊதுவண்டினுலே கொண்டுபோய் வைக்கப்பட்டி ருக்கிற புழுவானது பயத்தினுல் அந்த ஊதுவண்டையே தியானம் பண்ணிக்கொண்டு பூர்வதேகத்தை விடாமல் அந்த வண்டினுடைய சாரூப்பியத்தை யடைவதுபோல ஸ்ரீ பகவா னுடைய திவ்விய மங்கள மூர்த்தியையே சதா தியானிக்கும் புருஷன் அவருடைய சாரூப்பியத்தை யடைகின்ருன். எது மகாராஜனே! இந்தப் பிரகாரம் இந்த இருபத்திநாலு ஆசாரியர்களில் நின்றும் இந்த ஞானங்களை நானறிந்து கொண்டேன். வைராக்கியம்-விவேகம்-இவைகளுக்குக் காரண மாயும், சர்வகாலமும் துக்கத்தையே யுடையதான ஜனன மாணங்களை யுடைய இந்தத் தேகமானது எனக்குக் குருவா யிருக்கின்றது. இந்த தேகத்தில் தத்துவங்களை எதார்த்த மாக அறிந்தேன். தத்துவங்களை அறிவதற்கு இப்படி உப காரியா யிருந்தாலும் இந்தத் தேகம் நாய் நரி முதலானவை களுக்குப் பக்ஷியமாக விருக்கிறதென்கிற நிச்சயத்தால் இந்தத் தேகத்தில் ஆசக்தி யில்லாதவனுய் சஞ்சரித்துக்கொண்டிருக் கிறேன்.

ஒரு விருக்ஷம் தன்னைப்போல இன்னும் ஒரு விருக்ஷ முண் டாகும்படிக்கு பீஜத்தை யுண்டாக்கி விட்டு நாசத்தை யடை கிறதுபோல இந்தத் தேகமானது அந்தப் புருஷனுக்கு மற்றொரு தேகத்துக்கு ஏதுவான கர்மபீஜத்தை யுண்டாக்கி விட்டு நாசத்தை யடைகின்றது. ஆனபடியினுல் சாமர்த்திய புருஷன் அடிக்கடி மிருத்தியுவை யுடையதான இந்தச் சரீரமானது நாசத்தை யடைவதற்கு முன்னமே சீக்கிரமாக மோட்சத்தின் பொருட்டு எத்தனம் பண்ணக் கடவன். இவ் விதம் அவதூதப் பிராம்மணர் எதுமகாராஜனுக்குச் சொன்னுர்.

உத்தவரே! நம்முடைய பூர்வீகர்களுக்கும் பூர்வீகனுன எதுமகாராஜன் அந்த தத்தாத்திரேய மகாயோகியாகிய அவ

தூதாது வாக்கியத்தைக் கேட்டு சர்வசங்க பரித்தியாகத்தை யுடையவனுய் சமசித்தனுனன்.

இவ்விதம் ஸ்ரீ பகவான் சொல்ல, உத்தவர் மேலும் வினவுகிருர். ஸ்ரீ பகவானே! புருஷன் சத்வாதி குணங்களின் காரியமான இந்திரியங்களால் சூழப்பட்டவனு யிருந்தாலும் இந்திரியங்களுடைய காரியமான கர்மங்களிலேயும் சுக முதலானவைகளிலேயும் எப்படி அகப்படாமலிருப்பன்? ஒரு ஆத்மா தானே நித்தியமாகப் பந்தத்தை யுடையவனுயும் நித்தியமுக்தனுயு மிருக்கிருனென்ருல் இந்த விஷயத்தில் எனக்குச் சந்தேகமுண்டா யிருக்கின்றது. அது நிவர்த்தியாகும்படி சொல்லக் கடவீரென்ருர்.



## எட்டாவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ணபகவான் உத்தவருக்குத் தத்துவம் சொன்னது.

உத்தவரே! ஜீவாத்மா பக்தனென்றும் முக்தனென்றும் சொல்லுகிற சொல்லானது என்னுடைய சத்வாதி குணங்களுக்கு பாதந்திரனு யிருக்கையினுல் சம்பவிக்கின்றது. சுபாவமாக வுண்டானதல்ல. அந்த சத்வாதி குணங்கள் மாயா மூலமானபடியினுல் அந்த குணங்களுக்கு நியந்தாவான எனக்கு பந்தமுமில்லே மோக்ஷமுமில்லே. புருஷனுக்கு சோகம் - மோகம் - பயம் - துக்கம் - தேகவுற்பத்தி இவைகளென்னுடைய மாய்கையினு லுண்டாகிறது. எப்படி சொற்பனம் புத்தியினுடைய விகாரமே தவிர வேருென்று மில்லேயோ, அதுபோல ஜனன மரண ரூபமான சம்சாரம் என்னுடைய மாய்கையே தவிர சுவாபீகமல்ல. புருஷர்களுக்குப் பந்தம் - மோக்ஷம் எனது மாய்கையினுல் நிர்மிக்கப்பட்டவைகளாயும், ஞானுஞ்ஞானங்கள் என்னுடைய சத்திகளாயு மிருக்கின்றன. ஆகையால் ஞானி இந்திரியங்களினுல் கிரகிக்கப்படும் விஷயங்களிலே ராகத்துவேஷ முதலானதில்லாதவனுயிருப்பன். பக்தன் வைராக்கியத்தை யுடையவனுயும் இந்திரியங்களுடைய கர்மங்களே யல்லாமல் கர்மசம்பந்த மெனக்கில்லே யென்றிருப்பான். சயனம் - சஞ்சாரம் - ஸ்நானம் - தரிசனம் - ஸ்பரிசனம் - ஆக்கிராணம் - போஜனம் முதலான கர்மங்களிலே பந்தப்படுகிறதில்லே. அந்த விஷயங்களே இந்திரியங்கள் அனுபவிக்கிறதென்று

அவைகளுக்குச் சாட்சியாகவிருப்பன். மானுபிமானமற்று ராகத்துவேஷாதிகளை யொழித்து சமபுத்திபெற்ற ஞானியானவன் தன்னை பூஜிக்கிறபேர்களையும் தூஷிக்கிறபேர்களையும் சமமாக வெண்ணக்கடவன். இந்தப் பிரகாரம் சொல்லிய பகவானைப் பார்த்து உத்தவர் சொல்லுகிறார்:

லோகநாதரே ! சத்புருஷர்கள் என்பார் யாவர் ? எப்படிப்பட்ட பக்தி உமக்குப் பிரீதியாயிருக்கும் ? நாரதர் முதலான சத்புருஷர்களால் பூஜிக்கப்பட்ட பக்தி எப்படிப் பட்டது ? இவைகளை எனக்கு அருளவேண்டுமென்று உத்தவர் பிரார்த்திக்க ஸ்ரீ பகவானுனவர் சொல்லுகின்றார்.

உத்தவரே ! தயாளுவாயும், பிறருடைய துக்கத்தைச் சகியாதவனும், சமஸ்த பிராணிகளிடத்தில் துரோகத்தை நினையாதவனும், க்ஷமையையும் சத்தியத்தையும் பலமாகயுடையவனும், சுகதுக்கங்களைச் சமமாக நினைக்கின்றவனும், இந்திரிய நிக்கிரகத்தை யுடையவனும், சுவதர்ம அனுஷ்டானபரனும், என்னையே முக்கியமான ஆஸ்ரயமாகவுடையவனும், பசிதாகம் - சோகம் - மோகம் - மரணம் ஆகியவைகளைச் ஜயித்தவனுயு மிருக்கிற புருஷன் மிகவும் ஞானியாக விருப்பன். என்னை நன்றாக அறிந்தாகிலும் அறியாமலாகிலும் ஏகாந்த பக்தியினால் யாரொருவர் பூஜிக்கிறார்களோ அந்தப் புருஷர்கள் எனது பக்தர்களுக்குள்ளே உத்தமர்களாவர்.

என்னுடைய அர்ச்சாவதாரங்கள் பக்தஜனங்கள் இவர்களுடைய தரிசனம், பரிசனம், அர்ச்சனம், பரிசாரகம், ஸ்துதி, பிரணமம் இவைகளால் திருப்தி செய்வித்தல் ; ஜன்மாஷ்டமி முதலான என்னுடைய அவதார தினங்களிலே ஆனந்த பரவசனுயிருத்தல் ; எனது ஆலயங்களிலே உற்சவம் பண்ணிவைத்தல், புஷ்பம் திருத்துழாய் முதலானவைகளை எனக்குக் கொண்டுவந்து சமர்ப்பித்தல் ; சாதுர்மாசியமாகிய ஏகாதசி முதலான விசேஷ தினங்களில் எனது பூஜாபிரதிஷ்டை இதுகளில் சிரத்தையுண்டா யிருத்தல் ; வைதீக தீட்சை பாஞ்சராத்திரி முதலான ஆகமங்களிலே சொல்லப்பட்ட தீட்சை, விரதங்கள் இவைகளிலே பிரீதியாயிருத்தல் ; எனது ஆலயங்களை சுத்திசெய்கிறது, கோமயவுதகத்தினாலே புரோக்ஷணம் பண்ணுகிறது, மொக்கிட்டு அலங்கரிக்கிறது, தீபங்களை ஏற்றுகிறது, இவைகள் உன்னிடத்தில் வைக்கப்பட்ட பக்தி லட்சணமென்று அறியத்

தக்கது. சங்கம் - சக்கரம் - கதை - பத்மம் இவைகளோடு கூடிக்கொண்டும் சதுர்புஜராயும் சாந்தராயுமிருக்கிற என்னுடைய ரூபங்களைத் தியானம் செய்து என்னிடத்தில் நிச்சயமான சித்தத்தை யுடையவனாய் பக்தன் அர்ச்சிக்கக் கடவன்.



## ஒன்பதாவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ண பகவான் உத்தவருக்குத் தத்துவத்தைச் சொன்னது.

உத்தவரே! சர்வ சங்கத்தையும் நாசம்பண்ணும் சாது சங்கதியானது எப்படி என்னை வசியனாகப்பண்ணுகிறதோ? அப்படி ஆசனப்பிராணாயாமாதி யோகாப்பியாசமும், மற்றவைகளும் என்னை வசியப்படுத்த மாட்டா. சத்சங்கத்தினால் தயித்தியர்கள் - ராக்ஷதர்கள் - மிருகங்கள் முதலியவர்களில் அநேகர் என்னுடைய பதத்தை யடைந்தார்கள். யோகாப்பியாசம், சாங்கியக் கியானம், தானம்-விரதம்-தபசு-தனம்-மந்திரஜபங்கள்-வேதாத்தியயனங்கள்-சன்னியாசம் இவைகளாலேயும், மனுஷியர்கள் என்னுடைய சாரூப்பியத்தை யடைந்தார்கள். ஆகையினால் நீர் சுருதி ஸ்மிருதிகளால் சொல்லப்பட்டிருக்கிற பிரவிர்த்தி நிவர்த்தி மார்க்கங்களையும் விட்டு சர்வப் பிராணிகளுக்கும் அந்தரியாமியான என்னை ஒருவனையே சர்வப் பிரகாரத்தினாலேயும் சரணமாக அடையக் கடவீரென்று ஸ்ரீ பகவான் சொல்ல, ஸ்ரீ உத்தவர் சொல்லுகிறார்:

ஈஸ்வரரே! முன்னே விகித கர்மாநுஷ்டானத்தை செய்யும்படிக்கும் பின்னே சர்வ கர்மங்களையும் விட்டு உம்மையே சரணமாக அடையுமென்றும் சொல்லுகின்றீர், இது சந்தேகத்திற் கிடமா யிருப்பதால் அதை நிவர்த்திசெய்ய வேண்டுமெனும் உத்தவரைப் பார்த்து ஸ்ரீபகவான் சொல்லுகிறார்: யாதொரு புருஷன் ஆசாரியர்களால் வெகு ரூபமாயும் பிரகிருதிக்கு ஆசிரயராயு மிருக்கிற பரமாத்மாவை யறிகின்றானோ? அந்தப் புருஷன் வேதங்களுடைய தத்துவார்த்தத்தை யறிந்தவனாவன். விவேகியான நீர் இந்தப் பிரகாரம் குருவினுடைய உபாசனையினாலேயும் ஏகாந்த பக்தியினாலேயும் உண்டான தத்துவக் கியானமாகிற மகா தீட்சணமான கோடாலியினால் ஜீவனுக்கு ஆவர்ணமாயும் திரிகுணஸ்வரூபமாயு மிருக்கிற லிங்க சரீரத்தைச் சேதித்துப்போட்டு பரமாத்மாவினிடத்தில் நிஷ்டையை யுடையவராய் அவருடைய

சாரூப்பியத்தை யடைந்து பிற்பாடு தத்துவக்கியான ரூபமான சாதனத்தையும் விட்டுவிடக்கடவீர்.

உத்தவரே! சத்துவம்-ரஜசு-தமசு-என்னப்பட்ட இந்த மூன்றும் பிரகிருதியினுடைய குணங்கள். ஆத்மாவினுடைய குணங்களன்று. ஆகையால் சாத்வீக விர்த்தியினால் ரஜஸ் தமோ குணங்களைச் ஜயிக்கவேண்டும். அந்த சாத்வீக குணத்தை சாந்தி ஸ்வரூபமான சத்துவ குணத்தினாலேயே ஜயிக்கக்கடவது. சாத்வீகர்களுடைய உபாசனையினால் பரிசுத்தமான சத்வகுணமானது உண்டாகும். அந்தச் சத்வ குணத்தினால் என்னுடைய பக்தி ஸ்வரூபமான தர்மமான துண்டாகும். அந்தத் தர்மமானது ரஜோகுண தமோகுணங்களை நாசம்பண்ணிப்போடும். சர்வோத்தமமான சத்வகுண விர்த்தியானதுண்டாகும். ரஜோகுணம்-தமோகுணம்-நசித்துப்போகையில் அதினால்வரும் அதர்மமும் நசித்துப் போகும். சாஸ்திரம்-தீர்த்தம்-ஜன்மம்-பிரதேசம்-காலம்-கர்மம்-தீட்சை - தியானம் - மந்திரம் - ஞானம் இந்தப் பத்தும் குணத்துக்குக் காரணங்கள். இவைகளுக்குள்ளே எதைப் பெரியோர்கள் சிலாகிக்கிறார்களோ அது சாத்வீகமாகும். எதை நிந்திக்கிறார்களோ அது தாமசமாகும். எதைச் சிலாகிக்காமலும் நிந்தியாமலு மிருக்கிறார்களோ, அது ராஜசமாகும். புருஷன் சத்துவகுண விர்த்தியின் பொருட்டு சாத்வீகங்களான சாஸ்திரங்கள் முதலானவைகளையே சேவிக்கக்கடவன். எப்போது ஸ்தூல சூட்சும தேகங்களுக்குக் காரணங்களான சத்வாதி குணங்கள் நசிக்குமோ? அந்த மட்டுக்கும் சாத்வீகங்களான நிவர்த்தி சாஸ்திர முதலானவைகளை ஆசரிக்கக்கடவன். எப்படி மூங்கில்கள் ஒன்றுக்கொன்று உறைபடுகிறதினா லுண்டாகும் அக்கினியானது அந்தமூங்கில் வனத்தைத் தகித்துப்போட்டுத் தானும் சாந்தியை யடைவதுபோல சத்வாதி குணங்களுடைய வித்தியாசத்தினா லுண்டாகும் தேகமும் ஞானத்தினாலே தகிக்கப்பட்டதாய் தானே சாந்தியை யடையுமென்று சொல்லும் பகவானைப் பார்த்து உத்தவர் சொல்லுகிறார்:

ஸ்ரீ கிருஷ்ணரே! மனிதர்கள் சப்தாதி விஷயங்களை மிகவும் ஆபத்துக்களுக்கு ஸ்தானமென்றறிந்திருந்தும் அந்த விஷயங்களை ஏன் அனுபவிக்கின்றார்களென்று பிரஸ்னம் பண்ணும் உத்தவரைப் பார்த்து ஸ்ரீ பகவானானவர் சொல்லுகின்றார் :

உத்தவரே! விவேக சூனியனான புருஷனுக்குத் தேகாதிகளில் நானென்கிற விபரீத புத்தி இருதயத்தில் நிச்சயமாக உண்டாகின்றது. அந்த அகங்காரத்தினால் சத்வ குணப்பிரதானமாயிருந்தாலும் மனதை துக்கரூபமான ரஜோகுணமானது வியாபிக்கிறது. ரஜோகுணத்துடன் கூடிக்கொண்டிருக்கிற மனதினுடைய விகல்ப சங்கல்பமானது உண்டாகி அந்த சங்கல்பத்தினால் இந்த விஷயத்தினது ரூபம் மகா உத்தமமாயிருக்கிறது. இதனுடைய சுபாவமானது மிகவும் ஆச்சரியகரமாயிருக்கிறதென்று குணத்தைத் தியானம் பண்ணுகிறதினால் புருஷனுக்குப் பரிகரிக்கக்கூடாத காமமானது உண்டாகின்றது. பிற்பாடு இந்திரிய ஜயமில்லாதவனும் காம வசியனும் ரஜோ குணத்தினுடைய வேகத்தினால் மோகிக்கப்பட்டிருக்கிற புருஷன் கர்மங்கள் துக்க ஏதுக்களென்று அறிந்திருந்தாலும் அந்த விஷயங்களையனுபவிப்பதற்குத் துக்கத்தையே உண்டாக்கும் கர்மங்களை செய்கிறான். அவனுக்குள்ள ஞானம் சொல் மாத்திரமேயல்லாமல் அனுபவமாத்திரமல்ல. ஆனாலும் விவேகியான புருஷன் ஜாக்கிரதையுடையவனாய் விஷயங்களில் தோஷ புத்தியினால் மனதை நிக்கிரகித்து அந்த விஷயங்களில் அகப்படாதவனாயிருப்பன். வியர்த்த சஞ்சாரங்களைவிட்டு ஸ்திரமான ஆசனத்தையுடையவனும், பிராண நிரோதத்தை யுடையவனும், ஆலஸ்ய மில்லாதவனும் யோக தாரணையை யுடையவனுமிருந்து திரிகாலத்திலேயும் பரமானந்த ரூபனான என்னிடத்தில் மனதை சமர்ப்பித்துக் கொண்டு மெள்ள மெள்ள சமாதிநிஷ்டனாய் விடுவன். என்னுடைய சிஷியர்களான ஜனகர் முதலான யோகிகளால் செய்யப்பட்ட யோகாப்பியாசமுமப்படியாகும் என்று சொல்லுகின்ற ஸ்ரீ பகவானைப் பார்த்து ஸ்ரீ உத்தவர் மேலும் வினவுகின்றார்.

பகவானே! தேவரீர் எப்போதெந்த ரூபத்தினால் ஜனகாதி யோகிகளுக்கு யோகத்தை உபதேசித்தீரோ அதைச்சொல்ல வேண்டுமென்ன, ஸ்ரீ பகவான் சொல்லுகிறார். உத்தவரே! பிரம்மாவினுடைய மானச புத்திரர்களான ஜனகாதி யோகிகள் பிரம்மாவையடைந்து யோகமார்க்கத்தினுடைய அறியக்கூடாத நிஷ்டையைக் கேட்டார்கள். பிரம்மாவானவர் கர்மத்திலேயே புத்தியையுடையவராய் பரமாத்மாவை அறியாமலிருப்பதினால் இப்படிப்பட்ட பிரஸ்னம் பண்ணினார்களென்று நினைத்து அவர்களுடைய பிரஸ்னத்திற்கு உத்தரவை யறியவேணுமென்கிற இச்சையினால் என்னைச் சிந்தித்

தார். அப்போது நான் அம்சரூபமாகி அந்த பிரம்மாவி னுடைய சமீபத்தில் ஆவிற்பவிக்க அந்த ஜனகாதி யோகீஸ்வரர்கள் நீர் யாரென்று கேட்டார்கள். அப்போது நான் சொன்ன வசனத்தை நீர் கேட்கக்கடவீர்.

பிராமணோத்தமர்களே! உங்களுடைய பிரஸ்னம் பரமாத்மா விஷயமாகப் பண்ணப்பட்டதா? இல்லாவிட்டால் பரமாத்மாவுக்கு உபாதியான தேகங்கள் விஷயமாகப் பண்ணப்பட்டதா? பரமாத்மா விஷயமாகப் பண்ணப்பட்டதென்றால் பரமாத்மா ஒருவரானபடியினாலே பிரஸ்னம் பண்ணுகின்ற உங்களுக்கும் உத்தரவு சொல்லுகிறவருக்கும் அந்தரியாமியாய் ஆசிரயராயிருக்கிற பரமாத்மா ஒருவரல்லவா? பஞ்சபூத ரூபமான தேகவிஷயமாகப் பிரஸ்னம் பண்ணப்பட்டாலும் பஞ்சபூதங்களா லுண்டாகும் தேவமனுஷியாதி தேகங்கள் பஞ்சபூத காரியங்களாயிருக்கையில் நீயாரென்று கேளாநின்ற உங்களுடைய இந்தப் பிரஸ்னமானது வாக்கினுடைய ஆரம்பமாத்திரமே தவிர பிரயோஜனமில்லை யல்லவா! மனதினாலேயும் வாக்கினாலேயும் மற்ற இந்திரியங்களாலேயும் எந்தெந்த வஸ்து கிரகிக்கப்படுகிறதோ அந்தந்த வஸ்து நானாகவேயிருக்கிறேன். என்னைக்காட்டிலும் வேறேயொன்றுமில்லை யென்று பரமாத்ம திருஷ்டியினா லறியக் கடவீர்கள். வாருங்கள் புத்திரர்களே! மனதானது விஷயங்களில் பிரவேசித்திருக்கின்றது. விஷயங்களும் மனதிலே பிரவேசித்துக்கொண்டே யிருக்கின்றனவென்று சொன்னது எதார்த்தமே. இந்த விஷயங்களும் மனதும் இரண்டுங்கூடிக் கொண்டு என்னுடைய ஸ்வரூபனான ஜீவனுக்கு தேகமாயிருக்கிறது. மனதானது அடிக்கடி விஷயங்களுடைய சேவையினால் அந்த விஷயங்களில் விழுகின்றது. விஷயங்களும் வாசனாரூபமாகச் சித்தத்திலே யுண்டாகின்றன. இப்படியிருக்கும் இவ்விரண்டையும் என்னுடைய ஸ்வரூபக் கியானத்தை யுடையவராய் விட்டுவிடக் கடவீர். சாக்ரம் சொற்பனம்-சுழுத்தி யென்னப்பட்ட இந்த மூன்றவஸ்தைகளும் சத்வாதி குணங்களா லுண்டாகின்ற புத்தியினுடைய விர்த்திகள். ஜீவனோ அந்த சாக்ரம் முதலான அவஸ்தைகளுக்கு விலக்ஷணமாயும் அந்த அவஸ்தைகளில்லாதவனாயும் அதுகளுக்குச் சாக்ஷியாயும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறான். ஞானஸ்வரூபனான ஒரு பரப்பிரம்மமே அனேகம் போல விளங்குகின்றது. மூன்றுவிதமான சத்வாதி குணங்களுடைய பரிணாமத்தினாலான பிரபஞ்ச பேதமானது மாயையா யிருக்கின்றது.

ஆகையினால் காணப்படும் இந்தப் பிரபஞ்சத்தில் திருஷ்டியை வையாமல் சங்கல்ப சூனியனாயும் இச்சையில்லாதவனாயும் மனோ வாக்கு காயங்களுடைய வியாபாரத்தை விட்டவனாய் பரமாத்மாவின் சுகானுபவத்தை யுடையவனாக விருக்கக் கடவன். வாருங்கள் பிராமணோத்தமர்களே! ஆத்மானாத்ம விவேகம் அஷ்டாங்க யோகம் இவைகளுடைய ரகசியத்தை நானுங்களுக்குச் சொன்னேன். உங்களுடைய தர்மத்தை யறியவேணுமென்கிற இச்சையினால் வந்த என்னை சாக்ஷாத் விஷ்ணுவென்று அறியக்கடவீர்கள். நான் சாங்கிய ஞானத்துக்கும், அஷ்டாங்க யோகத்துக்கும், சத்தியத்துக்கும், அறியப்படாத தர்மத்திற்கும், பிரபாவத்திற்கும், ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கும், கீர்த்திக்கும், இந்திரிய நிக்கிரகத்துக்கும், முக்கிய ஆஶ்ரயனாக நிற்பனென்று சொன்னதைக் கேட்டு என்னால் சந்தேகநிவர்த்தி யடைந்தார்கள்.



## பத்தாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ணபகவான் உத்தவருக்குத் தத்துவத்தைச் சொன்னது சொல்லப்படுகின்றது.*

உத்தவர் மேலும் வினவுகிறார்: ஸ்ரீ பகவானே! வேதவாதிகள் சிரேயசுக்குச் சாதனங்களை வெகுவாகச் சொல்லுகிறார்கள். சமஸ்த விஷயங்களிலேயும் சங்கத்தை விட்டு உம்மிடத்திலேயே செலுத்தும்படியான பக்தியே விசேஷமாம் என்று தாம் சொல்லியிருக்கிறீர். இவ்விஷயத்தையும் எனக்கு சந்தேகம் ஒழிய உரைத்தருளவேண்டும் என்ன, ஸ்ரீ பகவான் சொல்லலுற்றனர்:

உத்தவரே! பிரளயத்திலே வெகுகாலத்திற்குமுன் நஷ்டமாகிய வேதமெனும் இந்த வாக்கானது ஆதியில் என்னால் பிரம்மாவின் பொருட்டுச் சொல்லப்பட்டது. அந்தப் பிரம்மாவினாலே தமக்கு ஜேஷ்டபுத்திரனான மனுவின்பொருட்டு அந்த வேதமானது மீண்டும் சொல்லப்பட்டது. பிற்பாடு பிருகு மகாரிஷி-மரீசி-அத்திரி-ஆங்கீரசு-புலஸ்தியர்-புலகர்-கிருது என்னப்பட்ட இந்த ஏழு பிரம்மரிஷிகளும் அந்த வேதத்தை கிரகித்தார்கள். அவர்களிடத்தில் நின்றும் அவர்களுடைய புத்திரர்களான தேவர்கள் - தானவர்கள்-குய்யர்கள்-மனுஷியர்கள்-சித்தர்கள் - கந்தர்வர்கள் முதலான சமஸ்த ஜனங்களும் கிரகித்தார்கள். சத்துவ ரஜஸ்வ தமோ

குணங்களைக் காரணமாகவுடையவர்களான அந்தத் தேவர்கள் முதலானபேர்களுடைய பிரகிருதிகள் அனேக விதங்களா யிருக்கின்றன. அவர்களுடைய புத்திகளும் வேறுவேறு யிருக்கின்றன. அனேகவிதமான பிரகிருதிக்கு அனுகுணமாக வேதாந்த வியாக்கியான ரூபங்களா யிருக்கின்ற வாக்குகளும் விசித்திரங்களாக வுண்டாகின்றன. இந்தப்பிரகாரம் பிரகிருதிகள் வேறுவேறாகிறபடியால் அத்தியயன மில்லாதவர்களாயிருக்கின்ற சில மனுஷியர்களுடைய மதிகள் உபதேச பரம்பரையினால் வேறுவேறு யிருக்கின்றன. சில பேர் வேதங்களுக்கு விருத்தமான அர்த்தத்தில் புத்தியையுடையவர்களாக விருக்கின்றார்கள். என்னுடைய மாய்கையினால் மோகிக்கப்பட்ட புத்தியையுடைய புருஷர்கள் தங்கள் தங்கள் கர்மானு குணமாகவும் இச்சானு குணமாகவும் சிரேயசுக்குச் சாதனத்தை நானாவிதமாகச் சொல்லுகிறார்கள். என்னிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட மனதை யுடையவனாயும், சர்வ விஷயங்களிலேயும் அபேட்சை யில்லாதவனாயு மிருக்கிற புருஷனுக்குப் பரமானந்த ரூபனான என்னுடைய ஸ்வரூபானுபவத்தினாலே யுண்டாகின்ற சுகமானது விஷயங்களில் மனதையுடைய புருஷர்களுக்கு எப்படி யுண்டாகும்? நிஷ்காமனாயும் சமதமாதி குணங்களை யுடையவனாயும், சர்வத்திலேயும் பரமாத்ம புத்தியை யுடையவனாயும், என்னுடைய ஸ்வரூபானுபவத்தினால் சந்துஷ்டமான மனதை யுடையவனாயுமிருக்கிற புருஷனுக்குச் சமஸ்த திக்குகளும் சுவரூபங்களாகவிருக்கும். இந்தப் பரம பக்தன் லோகாதிபத்தியத்தையும் சுவர்க்க லோகாதிபத்தியத்தையும் இச்சியான். அத்தகைய புருஷன் ஜிதேந்திரியனாய் ஸ்திரீகளின் சங்கத்தையும் ஸ்திரீசங்கம் செய்கிறவர்களின் சங்கத்தையும் விட்டு நிர்பயமாயும் நிர்ஜனமாயுமிருக்கிற தேசத்திலிருந்துகொண்டு ஆலஸ்ய மில்லாதவனாய் என்னைத் தியானம் செய்யக்கடவனென்று சொல்லும் ஸ்ரீ பகவானைப்பார்த்து ஸ்ரீ உத்தவர் சொல்லுகிறார்:

ஸ்ரீ அரவிந்தாட்சரே! மோட்சத்தைக் கோருகின்ற புருஷன் உம்மை எவ்விதம் எப்படிப்பட்ட ஸ்வரூபத்தை யுடையவராகத் தியானம் பண்ணுவன்? இந்த வினாவுக்கு பதிலாக ஸ்ரீ பகவான் உரைக்கிறார்:

உத்தவரே! மிகவும் உயர்ந்தும், தாழ்ந்தும் இராமல் சமமாயிருக்கிற ஆசனத்திலே அசையாமல் சமமான சரீரத்தையுடையவனாயிருந்து கைகளை மடியில் வைத்துக்கொண்டு

தன்னுடைய மூக்கு நுனியிலே திருஷ்டியை வைக்கப்பட்டவனும் ஜிதேந்திரியனும் பிராணனுடைய மார்க்கத்தைப் பூரக கும்பக ரேசகங்களாலேயும் ரேசக கும்பக பூரகங்களாலேயும் சோதித்துக்கொண்டு மெள்ள மெள்ள யோகாப்பியாசம் பண்ணக்கடவன். மூலாதாரத்தைப் பிடித்துக்கொண்டு சிரசு பரியந்தம் தாமரைக்கொடியினூற்போலவும் சூட்சுமமாயும் இடைவிடாமல் கண்டா நாதத்துக்குச் சமானமாயுமிருக்கிற ஓங்காரத்தை மனதில் பிராணனால் பிரகாசம் பண்ணி வைத்து பிற்பாடு அந்த ஓங்கார நாதத்தில் உதார்த்த நாதத்தை ஸ்திரப்படுத்தக் கடவன். இந்தப் பிரகாரம் பிரணவத்தோடு கூடிக்கொண்டிருக்கிற சுவாச நிக்கிரகத்தைத் திரிகாலத்திலேயும் பத்து பத்து தரம் அப்பியாசம் செய்கிற புருஷன் ஒரு மாதத்துக்குப் பிற்பாடு ஸ்வாச ஜயத்தையுடையவனவன். சரீரத்துக்குள்ளே யிருக்கும் ஊர்த்துவ நாளமாயும் அதோ முகமாயும் மிருதுவான வாழைப்பூப்போலவுமிருக்கிற இருதய கமலத்தை ஊர்த்துவ முகமாயும் மலர்ந்திருக்கிறதாயும் அஷ்ட தளங்களை யுடையதாயும் உள்ளே கர்னிகையை யுடையதாயுமாகத் தியானம்பண்ணி அந்தக் கர்னிகையிலே முன்னே சூரியனையும் அதன் பிறகு சந்திரனையும் அதன் பிறகு அக்கினியையும் தியானம் பண்ணக்கடவன். இந்த அக்கினியினுடைய மத்தியத்தில் தியானத்துக்கு விஷயமாயும் மங்களகரமாயும் பரிபூரணமாயும் மனோக்கியமாயு மிருக்கிற சதுர் புஜங்களைப்பெற்றும் ஸ்ரீ மகா லட்சுமிக்கு வாசஸ்தானமாயும் சங்கம்-சக்கரம், கதை-பத்மம்-வனமாலை இவைகளால் அலங்கரிக்கப்பட்டும் நவரத்தினமயமாய் அணிகள் விளங்கும் திருவடிகளை யுடையதாயும் ஸ்யாமள வண்ணமான என்னுடைய ரூபத்தை சாஸ்திரங்களிலே வர்ணிக்கப்பட்டபடி தியானம்பண்ணி சர்வாங்கங்களிலேயும் மனதைச் சமர்ப்பிக்கவேண்டும். இந்தப் பிரகாரம் மிகவும் தீக்ஷணமான தியானத்தினால் மனதை யென்னிடத்திலே லயப்படுத்தும் யோகிக்கு திரஷ்டாவென்றும், திரிசியமென்றும், தரிசனமென்றும் சொல்லப்படும் அந்தப் பிரமமானது மிகவுஞ் சாந்தியை யடைகின்றது.



## பதினொன்றாவது அத்தியாயம்

*ஸ்ரீ கிருஷ்ணபகவான் பதினெட்டுவித சித்திகளை யுரைத்தது.*

ஸ்ரீ பகவான் அருளியதைக்கேட்டு உத்தவர் மீண்டும் வினவுகிறார். ஸ்ரீ அச்சுதரே! யோகிக்கு எப்படிப்பட்ட தாரணையினாலே சித்திகளுண்டாம்? அந்த சித்திகள் எத்தனை என்ன, ஸ்ரீ பகவான் மேலும் சொல்லுகிறார்:

உத்தவரே! சித்திகள் பதினெட்டு விதமென்றும், யோக தாரணைகள் பதினெட்டு விதமென்றும், யோகசாஸ்திரங்கள் கூறும். அந்த சித்திகளுக்குள்ளே என்னை ஆஸ்ரயமாக வுடையனவான எட்டுவித சித்திகள் முக்கியமாயிருக்கின்றன. மற்ற பத்து சித்திகளும் சத்துவகுண உத்கிருஷ்டத்தைக் காரணமாக வுடையன. அஷ்டசித்திகளாவன: அணிமை-மகிமை-லகிமை இந்த மூன்றும் தேகத்தினுடைய சித்திகள். இவை சமஸ்தபிராணிகளுடைய இந்திரியங்களோடு கூட அந்தந்த இந்திரியாபிமான தேவரூபமாகச் சம்பந்தப்பட்டிருக்கின்றன. பிராத்தி யென்னப்பட்ட சித்தி பரலோகத்திலே உண்டாயிருக்கிற வஸ்துக்களிலேயும் இகலோகத்திலே தரிசன யோக்கியங்களான வஸ்துக்களிலேயும் பூமிக்குள்ளே காணப்படாமல் வைத்திருக்கப்பட்ட வஸ்துக்களிலேயும் போகதரிசன சாமார்த்தியமானது. இது பிரகாசிய சித்தியென்றும் சொல்லப்படும். மாயை சக்தி யென்னப்பட்ட சித்தி. அந்த மாயையினுடைய அங்கிசமாயிருக்கிற பிராணிகளுக்கும் அந்த மாயைக்கும் நியாமகமாயிருத்தல் ஈசிதா வென்னப்பட்ட சித்தி. சப்தாதி விஷயபோகத்திலே சங்கைப் படாமலிருத்தல் வசிதை யென்னப்பட்ட சித்தி. எந்தெந்த சுகத்தைக் கோருகிறானோ அந்தச் சுகத்தினுடைய கரையைக் காண்கிறது பிராகாமிய மென்னப்பட்ட சித்தி.

இந்த எட்டு சித்திகளும் எனக்கு சுபாவ சித்திகளாயும் நிரதிசயங்களாயு மிருக்கின்றன. பத்து சித்திகளாவன: இந்த தேகத்திலே பசிதாகங்களை ஜயித்தல், தூரதேசத்திலே உண்டாகும் சப்தங்களைக் கேட்டல், தூர தேசத்திலே யிருக்கும் வஸ்துவைப் பார்த்தல், மனோவேகமாகத் தேகமானது சஞ்சரித்தல், தான்கோரின ரூபத்தை எடுத்தல், பாகாயப் பிரவேசம் செய்தல், தனக்கு வேணுமென்கிறபோது மரணத்தை அடைதல், தேவர்கள் அப்ஸரஸ்திரீகளோடு கிரீடித்

துக்கொண்டிருப்பதைப் பார்த்தல், சங்கல்பானுரூபமாக இஷ்டத்தை அடைதல், எங்குந் தடையில்லாமலிருக்கிற ஆக்கினையை வகித்தல், ஆகிய இந்தப் பத்து சித்திகளும் சத்துவ குணாதிசயத்தினாலே சித்திக்கின்றன. க்ஷுத்திர சித்திகள் ஐந்தாவன: பூதபௌஷிய வர்த்தமானங்களை அறிதல், சீதோஷ்ணாதிகளை ஜயித்தல், பிரத்தியாருடைய இருதய முதலானவைகளை அறிதல், அக்கினி சூரியன் ஜலம் விஷம் முதலானவைகளை ஸ்தம்பிக்கச் செய்தல், ஓரிடத்திலேயும் அபஜயப்படாமலிருத்தல். யோகதாரணையினால் உண்டாகும் இந்தச் சித்திகள் உமக்கு நம்மாலே சொல்லப்பட்டன.

எந்த யோகதாரணையினால் எந்த சித்தி எந்தப் பிரகாரம் உண்டாகுமோ அதைச் சொல்லுகிறேன். பிருதிவியாதி பூதங்களில் சூட்சுமரூபியான என்னிடத்திலே சூட்சும ரூபமானதை ஸ்திரமாகச் சமர்ப்பித்தும், சூட்சும ரூபியாக வுபாசிக்கும் புருஷன் என்னுடைய அணிமை என்னப்பட்ட சித்தியை யடைகுவன். ஆகாசாதி மகா பூத சொரூபனாயும் பரமாத்மாவாயு மிருக்கிற என்னிடத்திலே மகத்துவ ரூபமான மனதை ஸ்திரமாகச் சமர்ப்பித்து அந்தந்த ஆகாசாதி மகா பூதங்களுடைய மகிமை யென்னப்பட்ட சித்தியை யடைவன். வாயு முதலான மகா பூதங்களுடைய பரமாணி சொரூபனான என்னிடத்தில் சித்தத்தை ஸ்திரமாகச் சமர்ப்பித்த யோகி காலபரமாணு ரூபமான லகிமை என்னப்பட்ட சித்தியை யடைகுவன். வைகாரிகமென்னப்பட்ட அகங்கார ரூபனான என்னிடத்தில் மனதை ஸ்திரமாகச் சமர்ப்பித்திருக்கும் புருஷன் சர்வேந்திரியங்களுக்கும் அபிமானி தேவதா ரூபமான பிராப்தி என்னப்பட்ட சித்தியை யடைகுவன். கிரியாசாலியாயும் சூத்திர ரூபமாயுமிருக்கிற மகதத்துவ சொரூபனான என்னிடத்தில் மனதை ஸ்திரமாகச் சமர்ப்பிக்கின்ற யோகி எனது சர்வோத் கிருஷ்டமான பிராகாசிய மென்னப்பட்ட சித்தியை யடைகுவன். திரிகுணமான மாயைக்கு நியந்தாவாயும் காலசொரூபனாயும் சர்வாந்தரியாமியாயுமிருக்கிற என்னிடத்தில் மனதை ஸ்திரமாகச் சமர்ப்பிக்கின்ற யோகி ஜீவர்களுக்கும் சரீரமுதலானவைகளுக்கும் பிராணரூபமான ஈசிதாவெனும் சித்தியை யடைகுவன். விராட்டு இரணியகர்ப்பன் காரணமெனும் இந்த மூன்றுக்கும் பாராயும் சம்பூரண ஐஸ்வரியம் - தர்மம் - எஜஸ் - ஸ்ரீ மகாலட்சுமி - சம்பூர்ண ஞானவைராக்யங்கள் இந்த ஆறு குணங்களை யுடையவரானபடியால் பகவானெனப்படும் ஸ்ரீமந் நாராயணரான என்னிடத்திலே மனதை ஸ்திரமாகச் சமர்ப்பிக்கிற யோகி எனது

சாரூப்பியத்தை யுடையவனுய் வசித்துவ மென்னப்பட்ட சித்தியை யடைகுவன். நிர்க்குண பரப்பிரம்ம ரூபமான என்னிடத்திலே நிர்மலமான மனதை ஸ்திரமாக சமர்ப்பிக்கின்ற யோகி பரமானந்த ரூபமான பிராகாமியமெனும் சித்தியை யடைகுவன்.

சத்வ குணத்தை ஏதுவாகவுடைய சித்திகளைச் சொல்லுகிறேன்: சுவேததீப பதியாயும், பரிசுத்தமான தர்மசொரூபனுயும், சத்வகுணப்பிரதானனுயு மிருக்கிற என்னிடத்தில் சித்தத்தை ஸ்திரமாக வைக்கிறவன் காமக்குரோதாதிகளை விட்டு ஜனன மரணமில்லாமல் சுத்த சாத்வீக ரூபத்தை யடைவன். ஆகாச சொரூபனுயும் சமஷ்டி ரூபனுயுமிருக்கிற என்னிடத்தில் மனதினுலே நாதத்தைத் தியானம் செய்யும் புருஷன் அந்த ஆகாசத்திலே வியர்த்தமா யிருக்கிற சகல பிராணிகளின் வாக்குகளையும் தூர விருக்கையிலும் கேட்டுக் கொண்டிருப்பன். நேத்திரத்தை சூரியனிடத்திலேயும் சூரியனை நேத்திரத்திலேயும் ஏக ரூபமாகத் தியானம் செய்கிற புருஷன் சகல பிரபஞ்சத்தையும் பார்ப்பன். மனதையும் தேகத்தையும் அவைகளை யனுவர்த்தித்துக் கொண்டிருக்கிற வாயுவோடு என்னிடத்தில் வியாபித்து தியானம் செய்பவனுடைய மனது எவ்விடத்திற்கு போகிறதோ அவ்விடத்திற்கு தேகமும் திரிந்துகொண்டிருக்கும். எப்போது மனதைக் காரணமாக்கி எந்தெந்த தேவதாரூபமாக இச்சிக்கிருனே அந்தந்த ரூபமாக ஆகுவன். யோகி புறங்காலினுல் குற்றத்தை நிரோதனம்பண்ணிக்கொண்டு பிராண சரீரியான ஆத்மாவை இருதயம்-மார்பு-கண்டம்-சிரசு இவைகளிலடைவிப்பித்து பிரம்மாந்திரத்தினுல் அந்த ஆத்மாவை பிரம்மத்தையாவது பரகாயத்தையாவது மனதினுலே யடைவிப்பித்து சரீரத்தை விட்டுவிடக் கடவன்.

தேவர்களுடைய உத்தியானவனத்திலே கிரீடிக்க வேணுமென்கிற யோகி எனது சொரூபமான சுத்த சத்துவ ரூபத்தைத் தியானம் பண்ணக்கடவன். அப்போது அந்தச் சத்துவ ரூபத்தினுடைய அம்ச பூதர்களான தேவஸ்திரீகள் விமானத்துடன் கூடவந்து பூஜிப்பார்கள். என்னையே ஆஸ்ரயமாகவுடைய புருஷன் புத்தியினுல் எப்படி எப்படி சங்கல்பிக்கிருனே அந்தந்த இஷ்டத்தை அந்தந்த பிரகாரம் அடைவன். எந்த புருஷன் சர்வ நியந்தாவான என்னுடைய சுயரூபத்தை யடைகிருனே அந்தப் புருஷனுடைய ஆக்ஞை ஒருவராலும் திரஸ்கரிக்கப்படாமலிருக்கும். என்னுடைய

பக்தியினால் பரிசுத்தமான சுபாவத்தை யுடையவனும் யோக தாரணையை யுடையவனுயு மிருக்கிற யோகிக்குத் தன்னுடைய பூர்வ ஜன்மங்கள், வரப்போகிற ஜன்மங்கள், மரணங்கள், இவைகளைப் பற்றிய திரிகால ஞான முண்டாயிருக்கும். என்னிடத்திலே ஸ்திரமாக மனதைச் சமர்ப்பித்த உத்தம மான யோகத்தையுடைய புருஷனுக்கு இந்த சித்திகள் முக்திக்கு விக்கினங்களாம். இவை என்னுடைய சாருப் பியத்தை யடைந்த யோகிக்கு காலட்சேப ஏதுக்களாக விருக் கின்றன. ஜன்மம் ஔஷதம் - தபம் - மந்திரங்கள் - இவைக ளாலே யாதொரு சித்திகளுண்டாகின்றனவோ அவைகளை யோகாப்பியாசத்தில் அடைகுவன். இந்த ஜன்மாதிகளாலே என்னுடைய சாலோக்கிய முதலான முக்தியை யடையமாட் டான். நான் சமஸ்த சித்திகளுக்குங் காரணமாயும் பிரபுவா யும் ரட்சிதாவாயு மிருக்கின்றேன்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்



*ஸ்ரீ கிருஷ்ணபகவான் உத்தவருக்கு தத்துவம் சொன்னது.*

ஸ்ரீ கிருஷ்ணபகவானே ரிஷீஸ்வரர்கள் எந்தெந்தப் பிராணிகளி லெந்தெந்த ரூபமாக உம்மை யுபாசித்துக் கொண்டு பரமமான சித்தியை யடைகிறார்களோ? அந்த மகிமைகளை எனக்குச் சொல்லவேண்டுமென்று உத்தவர் பிரார்த்திக்க, ஸ்ரீ பகவானவர் சொல்லுகிறார்:

உத்தவரே! குருக்ஷேத்திரத்தில் நடந்த பாரத யுத்தத் தில் அர்ச்சுனன் இராஜ்ஜிய நிமித்தம் உண்டாகின்ற ஞாதி களுடைய வதத்தை அதர்மமாயும் நிந்திதமாயும் அறிந்து அதனால் தான் கெட்டுப்போவதாக சொன்னான். அப்போது நானந்த அர்ச்சுனனுக்கு எப்படி சொன்னேனோ அந்தப் பிரகாரம் உமக்குச் சொல்லுகிறேன். இந்தப் பிராணிகளுக்கு நான் அந்தரியாமியாயும். ஆத்மாவாயும், சுகுர்தாயும், ஈஸ்வர னுயு மிருக்கிறேன். நானே சமஸ்த பிராணிகளாகவும், இந்தப் பூதங்களுடைய சிருஷ்டி-ஸ்திதி-சங்காரங்களுக்குக் காரணமாகவும், வசிகரணம் பண்ணுகிறபேர்களுக்குள் கால மாகவும், கதியையுடைய பேர்களுக்குக் கதியாகவும், சத்வாதி குணங்களுக்குள் சத்துவபிரதானமாகவும், மகத்தான வஸ் துக்களில் மகத்துவமாகவும், வேதாத்தியயனம் செய்கிறபேர்

களுக்குள் இரணியகற்பனுகவும், மந்திரங்களுக்குள் திரிமாத்திரையான பிரணவமாகவும், அட்சரங்களுக்குள் அகாரமாகவும், சமஸ்த தேவர்களுக்குள்ளே இந்திரனுகவும், வசுக்களுக்குள் அக்கினியாகவும், ஆதித்தியரில் விஷ்ணுவாகவும், ஏகாதச ருத்திரர்களுக்குள் சங்கரனுகவும், பிரம்மரிஷிகளுக்குள் பிருகுவாகவும், இராஜரிஷிகளுக்குள் மனுவாகவும், தேவரிஷிகளுக்குள் நாரதராகவும், தேனுகளுக்குள் காமதேனுவாகவும், சித்தேஸ்வரர்களுக்குள் கபிலரிஷியாகவும், பட்சிகளுக்குள் கருடனுகவும், பிரஜாபதிக்குள் தட்சப்பிரஜாபதியாகவும், பிதுர்தேவதைக்குள் அரியமாவாகவும், தயித்தியர்களுக்குள் அசுரேஸ்வரனுன பிரகலாதனுகவும், பிரம்சரிய முதலான ஆசிரமங்களுக்குள் சன்னியாசமாகவும், சதுர் வர்னங்களுக்குள் பிராமணனுகவும், அஷ்டாங்க யோகங்களுக்குள் மனேதாரண ரூபமான சமாதியாகவும், பிரம்ம நிஷ்டர்களுக்குள் சனற்குமாரராகவும், தர்மங்களுக்குள் பிராணிகளுக்கு அபயப்பிரதான சமாதியாகவும், ஸ்திரீ புருஷ மிதுனங்களுக்குள் பிரம்மாவாகவும், மாதங்களுக்குள் மார்கழி மாதமாகவும், நட்சத்திரங்களுக்குள் அபிசித்தாகவும், யுகங்களுக்குள் கிருதயுகமாகவும், பாகவதர்களுக்குள் உம்முடைய ரூபமாகவும், இரத்தினங்களுக்குள் பதுமராகமாகவும், சுந்தர வஸ்துகளுக்குள் தாமரைமொக்காகவும், வியாபாரத்தையுடைய பேர்களுக்குள் தன சம்பத்தாகவும். சூரியன்-சந்திரன்-நட்சத்திரங்கள் இவர்களுக்குள் காந்தியாகவும், வீரர்களுக்குள் அர்ச்சுனனுகவும், பிராணிகளுக்குள் உற்பத்தி ஸ்திதிப் பிரளயரூபமாகவும், நானே யிருக்கின்றேன்.

ஆகையால் வாக்கையும் - மனதையும்-பிராணனையும்-இந்திரியங்களையும்-புத்தியையும்-நிக்கிரகம் பண்ணி சத்துவ குணத்துடனே கூடிய புத்தியினுல் அந்தப் புத்தியையும் நிக்கிரகம் பண்ணக்கடவீர். இப்படியிருந்தால் நீர் திரும்பவும் சம்சாரமார்க்கத்தை யடையாமலே யிருப்பீர். என்னையே ஆஸ்ரயமாகவுடையவன் எனதிடத்தில் பக்தியினுல். வாக்கு-மனது-பிராணன்-இந்திரியம் இவைகளை நிக்கிரகிக்கக்கடவன். இதனுல் கிருதகிருத்தியனுவானென்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் உத்தவருக்குச் சொன்னுர்.



## பதின்மூன்ருவது அத்தியாயம்

*ஸ்ரீ பகவான் உத்தவருக்கு வர்ணுஸ்ரம தர்மம் உரைத்தது சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ பகவானே! பூர்வத்திலே அம்சரூபியான உம்மால் பிரம்மாவுக்கு சொல்லப்பட்ட தர்மத்தை இந்தப் பூதலத்தில் எவன் சொல்லப்போகிருன்? அந்த தர்மத்தை சொல்ல வேண்டும் என உத்தவர் கேட்க, ஸ்ரீ பகவான் சொல்லுகின்ருர் :

உத்தவரே! உம் பிரசினம் தர்மத்தோடுகூடின வர்ணுச்சிரம ஆசாரங்களையுடைய மனுஷியர்களுக்கு பக்தி சாதனமாயிருக்கின்றது. ஆகையினுல் அந்த தர்மத்தைச் சொல்லுகிறேன். பூர்வம் கிருதயுகத்திலே மனுஷியர்களுடைய வர்ணமானது அம்சமென்று சொல்லப்பட்டிருக்கும். அப்போது சமஸ்த பிரஜைகளும் ஜன்மத்தினுலேயே கிருதகிருத்தியர்களாக விருப்பார்கள். ஆகையினுல் அந்த யுகத்தைக் கிருதயுகமென்று சொல்லுவார்கள். அந்த யுகத்திலே பிரணவம் ஒன்றே வேதமாகவும், நானே விருஷபமான தர்மமாகவு மிருந்தேன். மனது இந்திரியங்கள் இவைகளுடைய தாரணுரூபமான தபசில் நிஷ்டையை யுடையவர்கள் சகல பாபங்களையும் நீக்கி பரிசுத்தனுன என்னையே தியானம் பண்ணுவார்கள். பிற்பாடு திரேதாயுகப் பிரவேசத்தில் விராட் புருஷனுன என்னுடைய சுவாசத்தில் நின்றும் இருதயத்தில் நின்றும் மூன்று வேதங்களும் ஆவிற்பவித்தன. நானே அந்த வேதத்தில் நின்றும் அத்வரியூ உத்காதா ஹோதா இவர்களுடையதான யக்கியரூபமாகவானேன். விராட் புருஷரூபியான என்னுடைய முகம்-பாகு-துடை-பாதம் இவைகளில் நின்றும் சுவதர்மத்தைச் சின்னமாகவுடைய பிரம்ம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திரர்கள் உண்டானுர்கள்.

எனது இருதயத்தில் நின்றும் பிர்மசர்யாசிரமமும், ஜெகன மென்னப்பட்ட அரையில் நின்றும் கிரகஸ்தாசிரமமும், மார்பில் நின்றும் வானப் பிரஸ்தாசிரமும், சிரசில் நின்றும் சன்னியாசாசிரமும் உண்டாயின. மனோ நிக்கிரகம், பாகியேந்திரிய நிக்கிரகம், தபசு, சவுசம், சந்தோஷம், பொறுமை, கபடமின்மை, என்னிடத்திலே பக்தி, சத்தியம் இவை பிராமணர்களுடைய சுபாவங்கள் பிரதாபம், பலம், தைரியம், சௌரியம், பொறுமை, ஔதார்யம்,

உத்தியோகம், சலியாமை, பிராம்மணபக்தி, ஐஸ்வரியம், இவை க்ஷத்திரிய சுபாவங்கள். சமஸ்தமும் பெற்றிருத்தல், தானம், டம்பமின்மை, பிராமணசேவை, தனவிர்த்தியினல் திருப்தியின்மை, இவை வைசியனுடைய சுபாவங்கள். கோப்பிராமணராதியவர்கட்கும் தேவர்களுக்கும் கபடமில்லாமல் சிசுருஷை செய்தல், அதினலே லபித்ததைக் கொண்டு சந்தோஷப்படுதல் இவை சூத்திரனுடைய சுபாவங்கள். அனுசாரம் - அசத்தியம் - திருட்டு - இல்லையென்பது - காரணமில்லாத கலகம் - காமக்குரோதம் - ஆசை இவை சண்டாளருடைய சுபாவங்கள். சத்தியம் - திருடாமை, காமக்குரோத லோபங்களில்லாமை, சமஸ்த பிராணிகளிடத்தில் பிரியம், இவை சகலர்க்கும் பொதுவான தர்மம்.

பிரம்ம - க்ஷத்திரிய - வைசிய குலத்திலுதித்த புருஷன் கர்ப்பாதான முதலான சம்ஸ்காரங்களையும் அடைந்து கிரமமாக உபநயனம் என்னும் இரண்டாம் ஜன்மத்தை யடைந்து குருகுலத்திலே வாசம் பண்ணிக்கொண்டு சம-தமாதி குணங்களை யுடையவனய் ஆசாரியனல் அழைக்கப்பட்டு வேதத்தை அத்தியயனம் செய்து வேதார்த்த விசாரம் செய்யக்கடவன். முஞ்சி - அரைநாண் - கிருஷ்ணஜினம் - தண்டம் - ஜபமாலை - எக்யோபவீதம் - கமண்டலம் - குசதர்ப்பை இவைகளைத தரித்தவனயும், அப்பியங்க ஸ்நான மில்லாத தால் சடையை யுடையவனயும், அழுக்கடைந்த பற்கள் - வஸ்திரங்கள் - இவைகளை யுடையவனயும், சிவந்த வர்ணமான பீடத்தை வர்ச்சித்தவனயு மிருந்துகொண்டு பிரம்மசாரி ஸ்நானம் - போஜனம் - ஓமம் - ஜபம் - மூத்திர விசர்க்கம் இவைகளிலே மௌனத்தை யுடையவனயிருக்கக்கடவன். நகங்களையும் பாகுமூலங்களிலே யிருக்கிற ரோமங்களையும் அரையிலிருக்கிற ரோமங்களையும் சேதியாமலிருக்கக்கடவன். பிரம்மசரிய விரதத்தையுடையவன் புத்தி பூர்வமாக ஒருக்காலும் இந்திரியத்தை விடாமலிருக்கக் கடவன். தானே ஸ்கலிதமானல் தீர்த்தங்களிலே ஸ்நானம் செய்து பிராணயாமத்தை யுடையவனய் காயத்திரி ஜபம் செய்யக்கடவன். சந்தியா காலங்களிலே மௌனத்தை யுடையவனய் ஜபித்துக்கொண்டு அக்கினி - சூரியன் - ஆசாரியன் - கோப்பிராமணன் - குரு - விர்த்தர்கள் - தேவர்கள் - இவர்களைப் பரிசுத்தனய் உபாசிக்கக்கடவன். இப்படிப்பட்ட விரதத்தை யுடையவனய் போக சவுக்கியத்தை விட்டவனய் அத்தியயனம் சம்பூர்ணமாகிற பர்யந்தம் நியமந் தவருமல் குருகுலத்திலேயே வாசம்பண்ணக்கடவன். பிரமசாரி மூர்த்தீ

கரித்திருக்கிற வேதங்களையுடைய பிரமலோகத்தை யடைய வேணுமென்று இச்சிப்பானேயானால் நயிஷ்டீக பிரமசாரியத்தை யுடையவனாய் வேதத்தியயனத்தின் பொருட்டே தேகத்தை ஆசாரியனுக்கு சமர்ப்பிக்கக் கடவன். இந்தப்பிரகாரம் நயிஷ்டீக பிரமசாரியவிரதத்தை யுடையவனாய் தீவிரமான தபசினாலே கர்ம வாசனைகளைத் தகித்து நிஷ்காமனாயிருக்கிற பிரமசாரி மகாதேஜஸை யுடையவனாய் என்னுடைய பக்தனாகவிருப்பன். பிரமசாரி கிரகஸ்தாசிரமத்தை யடைய இச்சிக்கும்போது ஆசாரியனது அனுமதிபெற்று அப்பியங்க ஸ்நான முதலானதை செய்து கொண்டு விரதா சமாவர்த்தனஞ் செய்துகொள்ளக் கடவன். பரிசுத்தமான அந்தக்கரணத்தையுடைய பிராமணன் கிரகஸ்தாசிரமத்தை யடைந்து வானப்பிரஸ்தாசிரமத்தை யடையக்கடவன். பரிசுத்தமான சித்தத்தையுடையவனா யிருந்தால் சன்னியாசம் பெற்றுக்கொள்ளக் கடவன். கிரகஸ் தாசிரமத்தைக் கோரும் புருஷன் சமானமான ஜாதியையும் லக்ஷணத்தையு முடையவளாயும் வயதிலே தனக்கு இளையவளாயு மிருக்கிற ஸ்திரீயைக் கலியாணம் பண்ணக்கடவன். எக்யம் - அத்யயனம் - தானம் - இந்த மூன்றும் பிராமணர்கள் - க்ஷத்திரியர்கள் - வைசியர்கள் - இந்த மூன்று வர்ணத்திற்கும் சாதாரண தர்மம். பிரதிக்கிரகம் - அத்தியயனம் - எக்கியம் பண்ணிவைக்கிறது இந்த மூன்றும் பிராமணர்களுக்கே தர்மமாக விருக்கின்றன. பிரதிக்கிரகம் - தபசு - தேஜசு - எஸசு - இவைகளுக்கு நாசகரமாக எண்ணுகிற பிராமணன் பிரதிக்கிரகம் பண்ணுகிறதைவிட்டு எசன அத்தியாபனங்களாலேயே ஜீவனம் செய்யக்கடவன். எசன அத்தியாபனங்களிலேயும் கார்ப்பண்ணிய முதலான தோஷத்தைப் பார்க்கும் பிராமணன் புலத்திலே உதிர்ந்து போனவையாயும் எஜமானாலே விடப்பட்டு மிருக்கிற தானியங்களைப் பொறுக்கி அதினால் ஜீவனம் பண்ணக்கடவன்.

பிராமணனுடைய தேகம் துச்சமான காமத்தின் பொருட்டு உண்டானதன்று. மற்று இந்த லோகத்தில் மகா கஷ்டத்தின் பொருட்டும் தபசின்பொருட்டும் பரலோகத்தில் அனந்த சுகத்தின் பொருட்டும் உண்டானது. ஆபத் காலங்களிலே பிராம்மணர் முதலியவர்கள் தமக்கு கீழ்ப்பட்ட வர்ணத்தாரின் தொழிலை ஆசரிப்பது தவறாகாது. ஆபத்தைக் கடந்தபின்னும் அதையே ஆசரிப்பது கூடாது. கிருகஸ்தன் பிரம எக்கியத்தினால் ரிஷிகளையும், சுதாகார மென்னப்படும் கர்மங்களால் பிதுர்க்களையும், சுவாவாகாரமென்

னப்பட்ட கர்மங்களால் தேவர்களையும், பலியினால் பூதங்களையும், அன்ன முதலானவைகளால் மனுஷியர்களையும், திருப்தி பண்ணிவைக்கக் கடவன். தேவர்கள் - பிதுர்க்கள் - ரிஷிகள் - பூதங்கள் - மனுஷியர்கள் இவர்களை எனது ரூபமாகப் பார்த்துக்கொண்டு பிரம யக்கிய முதலானவைகளால் நாள்தோறும் ஆராதித்து என்னிடத்திலேயே மனதை யுடையவனும் கிரகங்களிலே அதிதிபோலவே வாசம்பண்ணிக்கொண்டும் மமதை அகங்கார மில்லாதவனுயுமிருக்கிற புருஷன் கிருகபாசங்களால் கட்டப்படாதவனுயிருப்பன். கிருக பாசத்தால் பந்திக்கப்பட்டு பார்யா-புத்ராதிகளின் க்ஷேமங்களிலேயே மனதை செலுத்தும் கிருகஸ்தன் மரித்து மூடமான தாமச ஜன்மத்தை யடைகுவன்.



## பதிநான்காவது அத்தியாயம்



*ஸ்ரீ பகவான் உத்தவருக்குத் தத்துவம் உபதேசித்தது சொல்லப்படுகின்றது.*

உத்தவரே! வனத்திலே தபசு பண்ணவேணுமென்கிற இச்சையுடைய புருஷன் புத்திரர்களிடத்திலே பாரியைவிட்டாகிலும் அல்லது தன்னோடு அழைத்துக்கொண்டாகிலும், வனத்திற்குபோய் சமதமாதி குணங்களை யுடையவனுய் ஆயுளின் மூன்ரும் பாகத்தை அந்த வனத்திலேயே கழிக்கக் கடவன். கந்தமூலபலங்களை ஆகாரமாகவும் மாவுரி முதலியவைகளை ஆடையாகவும் தலைமயிர் சரீரரோமங்கள் நகம் மீசை தேகத்திலழுக்கு இவைகளோடு தந்ததாவனம் பண்ணுமல் திரிகாலமும் ஜலத்திலே அழுக்குகளைத் தேய்த்துக் கொள்ளாமல் ஸ்நானம்செய்து பூமியில் சயனித்துக்கொள்ளுதலும், கோடைகாலத்தில் நான்கு பக்கத்திலும் அக்கினியைப்போட்டு சூரியனிடத்தில் திருஷ்டியை வைத்துக்கொண்டும் மாரிகாலத்திலே வருஷதாரைகளைச் சகித்துக்கொண்டும் பனிக்காலத்தில் கழுத்துமட்டும் ஜலத்தில் முழுகிக்கொண்டும் செந்நெற்களை அரிசியாகச்செய்து பக்ஷித்துக்கொண்டும் தபசுசெய்யக்கடவன்.

சன்னியாசி யாகவேண்டியவன் சர்வ சொத்தையும் ரித்விக்குகளின் பொருட்டு கொடுத்துவிட்டு அக்கினியைத் தன்னுடைய ஆத்மாவிலே ஆரோபணம் பண்ணிக்கொண்டு நிஷ்காமனுய் இருக்கக் கடவன். அப்படி சன்னியாசம்

கொண்ட பிராமணனுக்கு தேவர்கள் புத்திர தாராதிரூபமாக விருந்துகொண்டு விக்கினம் செய்வார்கள். அவ்விக்கினங்களைத் தன் சாமர்த்தியத்தால் வெல்லக்கடவன். அவன் தன் கௌபீனமறையும்படி ஒரு துண்டு ஆடையை தரித்தல் உத்தமம். ஆபத்தில்லாத காலத்தில் தண்ட கமண்டலங்களைத்தவிர மற்றொன்றுமில்லாமலும் மார்க்கத்திலே ஜந்துக்களில்லாமல் பார்த்து நடந்தும் பவித்ரமான ஜலத்தை ஆசமனம் பானம் பண்ணியும் மனதினால் நன்றாக விசாரித்து பரிசுத்தமான ஆசாரத்தை ஆஸ்ரயிக்கக் கடவன். சன்னியாசிக்கு மௌனமென்னப்பட்ட வாக்குதண்டமும், காமியகர்மத்தியாக மென்னப்பட்ட தேக தண்டமும், பிராணாயாமமெனப்பட்ட மனோதண்டமும் இல்லாமல், கேவலம் மூங்கில் தண்டத்தினால் சன்னியாசியாகமாட்டான். இந்தக் கிரகத்திலே இன்னது அகப்படுமென்கிற சங்கல்பமில்லாதவனாய் ஏழு கிரகத்தில் பிக்ஷை பண்ணிக்கொண்டு எவ்வளவு லபித்ததோ அதனால் சந்துஷ்டனாய் கிராமத்திற்கு வெளியிலிருக்கப்பட்ட தடாகத்திற்கு போய், அவ்விடத்திலே பாதப் பிரக்ஷாளனம் ஆசமனம் பண்ணிக்கொண்டு ப்ரோக்ஷணாதிகளால் பவித்ரமாகப் பண்ணப்பட்ட பிக்ஷான்னத்தை விஷ்ணு - பிரமா - அற்கன் - பிராணிகள் இவர்களுக்கு விபாகம் பண்ணிக் கொடுத்து மிகுதி அன்னத்தை மௌனத்தையுடையவனாய் புசிக்கக்கடவன். இதர சங்கத்தை விட்டவனாயும், என்னுடைய தியானத்தினால் நிர்மலமான இருதயத்தை யுடையவனாயும், என்னையே சதா சிந்தித்து பக்தியினால் இந்திரியங்களை நிக்கிரகித்து காமக்குரோதாதிகளை ஜயித்தவனாய் புண்ணிய க்ஷேத்திரங்கள் - நதிகள் - பர்வதங்கள் - வனங்கள் - இவைகளில் சஞ்சரித்து பாலன்போலவும் மூடன்போலவும் பித்தன்போலவும் நியமாசாரமில்லாதவனாய் சஞ்சரித்துக் கொண்டும் பிரயோஜனமில்லாத பிரசங்கங்களிலே ஒரு பக்ஷத்தையும் ஆசரியாமலும் அன்னியர்களின் தூஷணங்களைச் சகித்தவனாய் எல்லா ஜீவர்களும் பரமாத்ம சொரூபமென்றெண்ணி ஒருவனையும் அவமானம் பண்ணாமலுமிருக்கக் கடவன்.

## பதினைந்தாவது அத்தியாயம்



*கிருஷ்ண பகவான் உத்தவருக்குத் தத்துவம் சொன்னது.*

உத்தவரே! யாதொரு புருஷன் பரமாத்மானுபவமுண்டாகிற பரியந்தம் ஆசாரியினால் உபதேசிக்கப்பட்ட ஞானத்தை யுடையவனும், அதினாலே பரமதத்துவ நிச்சயத்தை யுடையவனும் அனுகூல யுக்தியினாலேயும் நிச்சயக்கியானத்தை யுடையவனுமிருக்கிறானோ? அந்தப் புருஷன் இந்த ஜகத்தையும் நிவர்த்தி சாதனத்தையும் மாயாமாத்திரமென்று அறிந்து சன்னியசித்துக்கொண்டு என்னிடத்திலேயே ஞான நிஷ்டையை யுடையவனுமிருப்பன். ஆகையினால் ஞானமயமான உம் ஆத்மாவை அறிந்து அந்த ஞானத்தினால் பரமாத்மானுபவத்தை யுடையவராயும், ஸ்திரமான பக்தியையுடையவராயும், சமஸ்தத்தையும் விட்டு என்னையே இச்சிக்கக் கடவீரென்று சொல்லும் ஸ்ரீ பகவானைப் பார்த்து ஸ்ரீ உத்தவர் சொல்லுகிறார்:

ஸ்ரீ விஸ்வமூர்த்தியே! மகா உத்தமமான ஞானம் அதற்குச் சாதனமான பக்தி யோகம் ஆகியவைகளை எனக்கு நன்றாய்ச் சொல்லக்கடவீரென்று பிரார்த்திக்கும் உத்தவரைப் பார்த்து ஸ்ரீ பகவான் சொல்லுகிறார்.

உத்தவரே! பூர்வத்தில் தர்மபுத்திரருக்கு பீஷ்மாச்சாரியர் சொன்ன தர்மங்களை நான் உமக்குச் சொல்லுகிறேன். பிரகிருதி, புருஷன், மகதத்துவம், அகங்காரம், சப்தாதி விஷயங்கள், பதினோரிந்திரியங்கள், பஞ்ச மகா பூதங்கள், சத்துவ ரஜஸ் தமோகுணங்கள், இந்த இருபத்தெட்டு தத்துவங்களிலும் ஒன்றான பரமாத்ம தத்துவத்தை அந்தரியாமியா யிருக்கிறதாக யாதொரு ஞானத்தினால் பார்க்கிறானோ அந்த ஞானமே தத்துவஞானமாக விருக்கின்றது. எந்த ஞானத்தால் இந்த ஜகத்தை பரமாத்மாவினாலே வியாபிக்கப்பட்ட அனேக ரூபங்களாகவும், அநேகரூபமான ஜகத்தை பரமகாரணமான பரப்பிரம சுரூபமாகவும் பார்க்கிறானோ அந்த ஞானம் விஞ்ஞானமென்று சொல்லப்படும். நான்கு வித பிரமாணங்களிலேயும் விகல்பமானது அசத்தியமான படியால் புருஷன் சம்பூர்ணமான பரமாத்ம தத்துவத்தையே பார்த்து விரக்தியை அடையக்கடவன்.

அஹிம்சை, சத்தியம், பரதிரவியாபகாரம், விஷயங்களில் ஆசத்தியில்லா திருத்தல், நாளைக்கு வேணுமென்கிற எண்ணமின்மை, தர்மத்திலே விசுவாசம், இலச்சை, பிரமசரியம், மௌனம், தைர்யம், க்ஷமை, அபயம் இந்த பன்னிரண்டும் இயமமென்று சொல்லப்படும். தேகசுத்தி, அந்தக்கரணசுத்தி, ஜபம், தபம், ஓமம், தருமத்திலே ஆதரவு, அதிதிபூசை, பகவத் ஆராதனம், தீர்த்தயாத்திரை, பரவுபகாரம், சந்தோஷம், ஆசாரிய சேவை, இந்தப் பனிரெண்டும் நியமமென்று சொல்லப்படும். இந்த இயம நியமங்களானவை பிரவிர்த்தி நிவிர்த்தி மார்க்கத்தையுடைய புருஷர்களுக்கு இச்சாரூபமாக மோக்ஷத்தையும் சிரேயசையும் உண்டாக்கும். என்னிடத்திலே நிஷ்டை யுடைமை சமமென்றும் இந்திரியங்களுடைய நிக்கிரகம் தமமென்றும் சொல்லப்படும். துக்கத்தைச் சகிக்கிறது திதீக்ஷையென்று சொல்லப்படும். நாக்கு உபஸ்தங்களின் ஜயம் திருதியென்று சொல்லப்படும். பூதங்களுக்கு துரோகத்தை விட்டுவிடுகிறதே தானமாம். சுக போகத்திலே ஆசை யின்மை தபசெனப்படும்.

தன் சுபாவத்தின் ஜயம் சௌரியமென்றும், பிரம தரிசனம் சத்தியமென்றும், சந்சோஷகரமான வாக்கு இதமென்றும், கர்மங்களில் ஆசக்தி யின்மை சௌக்கியமென்றும், கர்மசன்யாசம் தியாகமென்றும், மனுஷியர்களுக்கு தர்மம் இஷ்டமான தனமென்றும் சொல்லப்படும். பரமேஸ்வரனை நானே எக்கியமென்று அறியத்தக்கது. எக்கியார்த்தமாகக் கொடுக்கப்பட்ட தானம் தக்ஷிணையென்று சொல்லப்படும். அந்த தக்ஷிணை ஞானோபதேசமேயாம், சுவர்ணுதி தானமன்று. அம்மனோ நிக்கிரகத்துக்கு ஏதுவான பிராணுயாமம் பரம பலமெனப்படும். எனது தியானம் ஐஸ்வரியம் தர்மம் எஜசு ஸ்ரீ மகாலக்ஷிமி தியானம் வைராக்கியம் இந்த ஆறும் பாக்கியமெனப்படும். எனது பக்தி உத்தமலாபம். ஆத்துமாவினிடத்திலே தோன்றும் தேகத்தினுடைய திரஸ்காரம் வித்தையெனப்படும். விஷய போகங்களிலே அபேக்ஷை துக்கத்தைதரும். பந்தம், மோக்ஷம், இவ்விரண்டையும் அறிகிறவனே பண்டிதன். தேகம் கிரக முதலானவைகளில் நான் எனதெனும் அபிமானத்தை யுடையவன் மூர்க்கன் எனப்படுவன். நிவர்த்தி மார்க்கமே சன்மார்க்கம். சத்வகுணத்தின் விர்த்தியே சுவர்க்கமாம். தமோகுணத்தினுடைய விர்த்தி நரகம். ஆசாரியனே பரமபந்து.

## பதினாறாவது அத்தியாயம்

ஸ்ரீ பகவான் உத்தவருக்கு தத்வோபதேசம் செய்தது.

உம் ஆக்ஞாரூபமான வேதத்தினாலேயே குணதோஷ மென்கிற பேத ஞானம் உண்டாகின்றதே யல்லாமல் சுபாவ மாக உண்டாகிறதில்லை. இந்த சம்சயத்தை நிவர்த்தி செய் தருளுமென்று உத்தவர் பிரார்த்திக்க, ஸ்ரீ பகவானானவர் சொல்லுகின்றார்:

உத்தவரே! மனுஷியர்களுக்கு மோக்ஷ சாதனத்தை விதிக்கவேணுமென்கிற இச்சையினால் நம்மால் ஞானம்-கர்மம்-பக்தி இந்த மூன்று உபாயங்கள் சொல்லப்பட்டிருக் கின்றன. கர்ம பலம் துக்க ரூபமென்றறிந்து அதிலே வைராக்கியத்தை யுடையவராயும் அதற்குச் சாதனமான கர்மத்தை விட்டவர்களாயு மிருப்பவர்களுக்கு ஞானயோகம் சித்தியைக் கொடுக்கும். கர்மம் பலம் துக்கரூபமென்று அறியாமல் அதிலே ஆசையுடைய பேர்களுக்கு கர்மயோகம் சித்தியைத்தரும். என்கதை முதலானதிலே மிகவுஞ் சிரத் தையை யுடையவனாயும், கர்மங்களில் வைராக்கியமில்லாதவ னாயும், கர்மபலங்களில் ஆசக்தியில்லாதவனாயு மிருக்கிற புருஷனுக்குப் பக்தியோகம் சித்தியைக் கொடுக்கும். எந்த மட்டுக்கும் என் கதா சிரவண முதலானதில் சிரத்தை உண் டாகாம லிருக்கிறதோ, அந்தமட்டுக்கும் புருஷன் நித்திய நைமித்தியக் கர்மங்களை விட்டுவிடாமல் செய்யக் கடவன்.

நிஷித்த கர்மத்தை விட்டவனாயும் ராகத் துவேஷாதி சூனியனாயும் சுதர்மானுஷ்டான பரனாயு மிருக்கிற புருஷன் இந்தத் தேகத்திலேயே சுயேச்சையாகவே பரிசுத்தமான ஞானத்தையாகிலும் என்னிடத்திலே பக்தியையாகிலும் அடைகுவன். விவேகி நரக கதியை எப்படிக் கோரமாட் டானோ, அப்படியே சுவர்க்க கதியையுங் கோராம லிருக்கக் கடவன். இந்த மனுஷிய சரீரத்தைப் புருஷார்த்த சாதன மென் றறிந்த வித்துவான் மனுஷிய ஜன்மம் அநித்திய மானாலும் புருஷார்த்த சித்தியைக் கொடுக்கிற தென்றறிந்து இந்த தேகத்தில் ஆசக்தி யில்லாதவனா யிருந்து மரண மடைவதற்கு முன்னமே மோக்ஷத்தின் பொருட்டு எத்தனம் பண்ணக் கடவன்.

விவேகி அகோராத்திரங்களாலே சேதிக்கப்படும் ஆயுளை யறிந்து பயத்தினாலே நடுக்கலையுடையவனாய்

அதில் ஆசக்தி யில்லாதவனாய்ச் சங்கல்ப சூன்யனாய் பரமாத்மாவை யறிந்து மோக்ஷத்தை யடைவன். உத்தமமான மனுஷ்ய சரீரத்தை யடைந்தும் சம்சாரமாகிற சமுத்திரத்தைத் தாண்டாமலிருக்கும் புருஷன் ஆத்தும துரோகியாவன்.

புருஷன் எப்போது கர்மங்கள் துக்கயேதுவென்றறிந்து பயந்தவனாய் அதினுடைய பலன்களிலே வைராக்கியத்தை யுடையவனாகிறானோ அப்போது இந்திரிய நிக்கிரகத்தை யுடையவனாய் ஒழியாத பரமாத்மானுபவத்தினாலே மனதை அசஞ்சலமாக பரமாத்மாவினிடத்திலே சமர்ப்பிக்கக்கடவன். பிராணஜயத்தையும் இந்திரிய ஜயத்தையுமுடைய புருஷன் மனதைபோனவழியெல்லாம் விடாமலிருக்கக் கடவன். ஜாக்கிரதை யுடையவனாய் சாத்வீக புத்தியினாலே மனதை அது போகிறவழிகளில் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு, பின் கிரமமாக தன் வசப்படுத்திக் கொள்ளக்கடவன். பிறகு தத்துவ விவேகத்தினால் மகதத்துவ முதலாய் தேகாந்தமான தத்துவங்களுடைய உற்பத்திக் கிரமத்தையும் பூமி முதலாய் மகத்துவ பரியந்தம் கிரமமாக லயத்தையும் அறியக்கடவன். மனம் நிச்சலமாகிற பரியந்தம் இவ்விதம் தியானம் செய்யக் கடவன். அந்தத் தியானத்தினாலே பிறப்பது நசிப்பதுமான தத்துவங்களுக்கு ஆஸ்ரயமான பரமாத்ம ஞானம் உண்டாகும். அடிக்கடி ஒழியாமல் ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட அர்த்தத்தைச் சிந்திக்கிறதினால் தேகாதியிலேயுள்ள ஆத்மபுத்தி நசித்துவிடும். இந்தப் பிரகாரம் ஞான நிஷ்டையையுடைய புருஷன் இயம நியம முதலான யோகமார்க்கங்களினாலேயும், ஜீவபரமாத்ம சுவரூப விசாரத்தினாலேயும், அர்ச்சனம் தியான முதலானவைகளாலேயும் பரமாத்மாவான என்னையே ஸ்மரிக்கக்கடவன். எனது ஞான நிஷ்டையை யுடைய புருஷன் பிரமாதத்தினால் நிந்திதமான கர்மத்தை செய்து விளையும் பாபத்தை யோகாப்பியாசத்தினால் தகித்துப் போடக்கடவன். கர்ம நிஷ்டையையுடைய புருஷனுக்கு கர்மத்திலே உண்டான பாபத்துக்கு கர்ம நிஷ்டையே பிராயசித்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது. விதி நிஷேக சாஸ்திரங்களால் சொல்லப்படும் குணதோஷ விதியினாலே சுபாவமாய் அசுத்தமான கர்மங்களின் அசுத்தியைப் போக்கடிக்கவேணுமென்கிற இச்சையினாலே நிவர்த்தி மார்க்கம் விதிக்கப்பட்டிருக்கிறது.

என்னுடைய கதைகளில் சிரத்தையை யுடையவனாயும் வைராக்கிய மில்லாதவனாயும் கர்ம பலன்களைத் துக்க ரூபங்க

ளென்று அறிந்திருந்தாலும் அவைகளை விட்டுவிடுவதற்குச் சாமர்த்திய மில்லாதவனாயு மிருக்கிற புருஷன் மிகவும் சிரத்தை யுடையவனாய் என்னை பக்தி செய்வதனாலேயே சமஸ்த இஷ்டங்களும் சித்திக்குமெனும் திடமான நிச்சயத்தை யுடையவனாய், துக்க ரூபமான விஷயங்களை அனுபவித்துக்கொண் டிருந்தாலும், அவைகளில் மிகவும் பிரீதியை வைக்காமல் நிந்தித்துக்கொண்டு என்னையே மிகவும் அன்புடன் உபாசிக்கக் கடவன்.

பக்தி யோகத்தினால் என்னை நித்தியமாக வுபாசிக்கும் ஞானியினுடைய இருதயத்தில் நான் சதா குடிகொண்டிருக்க இருதயத்திலுள்ள சமஸ்த கர்ம பலன்களும் நசித்துப் போகின்றன. அகங்காரம் நசித்துப்போகும், சமஸ்த சம்சயங்களும் சேதிக்கப்படும். அந்த ஞானியினுடைய சம்சார ஏதுக்களான ஆகாமிய சஞ்சித கர்மங்களும் க்ஷயத்தை யடைந்துபோம். ஆகையினால் எனது பக்தியை யுடையவனாயும் என்னிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட சித்தத்தை யுடையவனாயுமிருக்கிற யோகிக்குப் பத்தி யோகத்தை தவிர ஞானமும் வைராக்கியமும் சிரேயசுக்குச் சாதனமாகமாட்டா. கர்மங்களினாலும், தபசினாலும், ஞான வைராக்கியங்களினாலும், யோகாப்பியாசத்தினாலும், தானத்தினாலும், தர்மத்தினாலும், தீர்த்தயாத்திரை விரத முதலானவைகளினாலும் சம்பாதிக்கப்படும் சகல பலன்களும் அந்த எனது பக்தியினாலேயே அனுயாசமாக உண்டாகும். இந்தப் பிரகாரம் என்னால் சொல்லப்பட்டிருக்கிற இந்தச் சாரூப்ய பிராப்திக்குரிய உபாயங்களை அனுஷ்டிக்கிறவர்கள் சாசுவதமாயும் சுககரமாயும் மாயாதீதமாயு மிருக்கிற ஸ்ரீ வைகுந்தத்தை யடைகுவர்கள், பரப்பிர்ம சுவரூபத்தையும் அறிவார்கள்.

ஆசார-அனுஷ்டான பரனாகிய புருஷன் தன்னோடு சம்பந்தப்படும் சகல திரவியங்களையும் கிரமப்படி சுத்திசெய்துக்கொள்ளக்கடவன். ஸ்நானம், தானம், தபம், கவுமார முதலான அவஸ்தை, உபநயன முதலானவை, சௌச்சம், சந்தியாவந்தனம், தீக்ஷை, முதலிய கர்மங்கள், என்னுடைய ஞானம், இவைகளினால் கர்த்தாவான புருஷனுக்குக் காரியானுசாரமாகச் சுத்தி யுண்டாகும். இந்தப்பிரகாரம் பரிசுத்தனாகிய புருஷன் சுவதர்மத்தை எதா சாஸ்திரமாக அனுஷ்டானம் செய்யக் கடவன். சத்குரு முகத்தினால் அர்த்த ஞானம் மந்திர சுத்தியாகும். ஈசுவரார்

பணமானது கர்மத்துக்கு சுத்தி பரிசுத்தங்களான தேசம் காலம் கர்த்தா திரவ்யம் மந்திரம் கர்மம் இந்த ஆறுகளாலும். தர்மமானது உண்டாகும். அபரிசுத்தங்களான இவைகளால் அதர்மம் உண்டாகும். சிலவிடத்தில் சாஸ்திரத்தினுல் குணமே தோஷமாய்விடும்,தோஷமே குணமாய்விடும். குண தோஷ நிமித்தமாக பண்ணப்பட்ட நியாமக சாஸ்திர மானது குணதோஷங்களுடைய பேதத்தையே பாதிக்கிறது. அதெப்படியென்றல், ஆபத்தில் தானம் வாங்குகிறது விகித மாகச் சொல்லப்பட்டிருந்தாலும் ஆபத்தில்லாத காலத்தில் நிஷித்தமானதால் தோஷமாகிறது. பிராணுக்கு விகித தர்ம மானது தனக்குத் தோஷமாகும். வைராக்கியத்தை யுடைய புருஷனுக்குப் பாரியாபுத்திராதி குடும்பத்தியாகம் விசிதமா யிருந்தாலும் வைராக்கிய மில்லாதவனுக்குத் தோஷமாகும். இந்தப் பிரகாரம் ஒரு வஸ்துவிலேயே குணதோஷங்களை விதிக்கும் சாஸ்திரம் அந்தக் குணதோஷங்களுடைய பேதத் துக்கு பாதகரமாயிருக்கிறது.

புருஷன் எந்தெந்த கர்மத்தில் நின்றும் நிவர்த்திக் கிருனே அந்தந்தக் குணங்களில் நின்றும் விடுபட்டவன் தான். சோகம்-மோகம்-பயம் இவைகளைப் போக்கடிக்கும் இந்த நிவர்த்தி மார்க்கம் மனுஷியர்களுக்கு மிகவும் க்ஷேமகர மானது. புருஷனுக்கு ரூபாதி விஷயங்களில் குணபுத்தி யினுல் ஆசக்தியுண்டாகிறது. பிற்பாடு விஷயங்களில் ஆசக்தி யினுல் அந்த விஷயத்தில் இச்சையுண்டாகும். அந்தயிச்சை யினுலேயே அவ்விச்சை எவனுல் கெடுக்கப்படுகிறதோ அவ னுடன்கூட விவாத முண்டாகும். அந்த விவாதத்தினுல் சகிக்கக்கூடாத கோபமுண்டாகும். அந்த கோபத்தின் பின்னேடே மகத்தான மோகமுண்டாகும்.

மோகத்தினுல் சூழப்பட்டு ஞான சூனியனுன புருஷன் நாசத்தை யடைந்தவன்போல ஆகிருன். பிற்பாடு மோகத் தை யுடையவனும் மரித்தவன் போலுமிருக்கும் அந்தப் புருஷனுக்குப் புருஷார்த்த ஹானியானது உண்டாகும். புருஷன் விஷயங்களில் ஆசக்தியினுல் தன்னையுமறியாமற் போகிருன்; பரனையுமறியாமற் போகிருன். சொர்க்காதிபலத் தைச் சொல்லும் சுருதி முக்கியமாகப் புருஷார்த்தத்தைச் சொல்லுகிறதன்று. விஷயத்தில் ஆசக்தியையுடைய புருஷர் களுக்கு மோக்ஷத்தில் இச்சையை யுண்டாக்கும் பொருட்டு மத்தியில் சொர்க்காதி பலன்களைக் காட்டி கர்மத்தில் பிர வேசிக்கச் செய்கிறது. கர்மமும் அதன் பலன்களாகிற சொர்க்

காதி சுகங்களும் வேதங்களின் நோக்கங்களல்ல. மோக்ஷ கதிக்கு ஜீவர்களை செலுத்துவதே வேதங்களின் முடிவான கொள்கை. இதை விவேகிகள் அறிந்து உய்வார்கள். எனது ஆக்ஞாரூபமான வேதத்தினுடைய அபிப்பிராயத்தை அறியாமல் பலர் வியர்த்தமாகப் பசுஹிம்சை செய்கிறார்கள். அவர்கள் மரித்த பின் அந்தப் பசுக்களாலேயே இம்சிக்கப் படுவார்கள்.

சுவர்க்காதி சுகங்கள் முடிவை யுடையனவாயும் துக்கமயமான ஜனன மரணங்களை வளர்க்கக் கூடியனவாயு மிருக்க அதை அனுபவிக்கும் பொருட்டு யாகாதிகளைச் செய்து, ப்ராணி வதைகளைச் செய்து, பாபங்களை சேகரித்துக்கொண்டு, நாசமடையப் பார்க்கிறார்கள். தங்களுக் குள்ளாகவே மறைந்திருக்கும் என்னை உபாசித்து முடிவிலாத முக்தி வீட்டை அடைய முயற்சி செய்வதில்லை.

வேதங்கள் சூக்ஷ்ம-ஸ்தூல ரூபங்களாக விருக்கும். சூக்ஷ்ம ரூபவேதம் சகல பிராணிகளிலும் நாதரூபமாக தாமரைக்கொடியிலுள்ள நூலைப்போல காணப்பட்டுக்கொண்டிருக்கிறது. ஸ்தூல ரூபமான வேதம் சிலந்திப்பூச்சியானது தன்னுடைய இருதயத்திலிருந்து முகத்தினால் நூலை வெளிப்படுத்தி மீண்டும் உள்ளுக்கு இழுத்துக் கொள்வதுபோல வேத மூர்த்தியாயும், அமிர்த சொரூபனாயும், நாதோபனைதங்களை யுடையவனாயும், இரணிய கர்ப்பனாயுமிருக்கிற பகவான் ககராதி வர்ணங்களைக் கற்பிக்கும் மனதினாலே இருதயாகாசத்தில் நின்று வெகு மார்க்கத்தை யுடையதாயும், சூக்ஷ்மமான ஓங்காரத்தில் நின்று மார்பு-கண்டம் இவைகள் முதலான அவயவ சம்பந்தத்தினால் நன்றாக பிரகாசிக்கப்பட்ட ககார முதலான இருபத்தைந்து வர்ணம், அகார முதலான பதினாறு வர்ணம், பீ-ஷ-ஸ-ஹ-ய-ர-ல-வ இந்த அக்ஷரங்களால் அலங்கரிக்கப்பட்டும், நாலு விதங்களான லௌகிக வைதீக பாஷைகளால் விஸ்தரிக்கப்பட்டும், நன்னான்கு அக்ஷரங்களை அதிகமாக வுடையவைகளான காயத்திரி உஷ்ணிக்கு-அனுஷ்டிபு-பிரஹதி-பக்தி-திறிஷ்டிபு-செகதி - அத்தியஷ்டி-அதிசக்தி-அதிவிராட்டு இவை முதலான சந்தஸுகளோடு கூடிக்கொண்டும் அளவிடக் கூடாததாயுமிருக்கிற வேதத்தைச் சிருஷ்டித்து மறுபடியும் தாம் தானே உபசங்கரித்தும் மிருக்கிறார். வேதம் கர்மகாண்டத்தில் விதிவாக்கியங்களால் எக்கிய ரூபியான என்னையே விதிக்கிறது. தேவதா காண்டத்தில் மந்திர வாக்கியங்களால் என்னையே சொல்லு

கின்றது. ஞானகாண்டத்தில் ஆகாச முதலான எந்த பிரபஞ்சம் விகல்பித்து நிஷேதிக்கப் படுகிறதோ அந்தப் பிரபஞ்சமும் நானே, என்னைத் தவிர வேறில்லை. சமஸ்த வேதங்களினுடைய அர்த்தமானது இவ்வளவே. வேதமானது பரமார்த்த சொரூபனான என்னையே ஆஸ்ரயித்து பிரபஞ்ச பேதத்தை மாயாமாத்திரமாகச் சொல்லி நிஷேதித்து அந்த மட்டும் ஒழிகிறது. பிரணவத்தினுடைய அர்த்தமான நானே அந்தப் பிரணவத்தினால் விஸ்தாரமாகும் சமஸ்த வேத சாகா காண்டங்களுக்கும் அர்த்தமாகிறேன்.



## பதினேழாவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ண பகவான் உத்தவருக்குத் தத்துவம் சொன்னது.

உத்தவர் மீண்டும் வினவுகிறார்: விசுவேஸ்வரரே! தேவரீர் இருபத்தெட்டு தத்துவங்கள் உள்ளனவென்று சொன்னீர். அவைகளின் எண்ணிக்கை பலரால் பலவிதமாக சொல்லப் படுகின்றது. ஐயமற இதையும் சொல்லியருள வேண்டும் என, ஸ்ரீ பகவான் மொழியலானார்: இந்த தத்துவங்களைக் குறித்து விவாதப் படுகிறவர்களுக்கு ஐயிக்கக்கூடாதவைகளான எனது சத்வாதி சக்திகள் காரணமாகிறது. அந்த சக்திகளுடைய சாஞ்சல்யத்தினால் வாதிக்கிறவர்களுக்கு விஷயபேத முண்டாயிற்று. சமதமமெனப்பட்ட இந்திரிய நிக்கிரகம் கூடுமானால் இந்தப் பேதம் லயத்தை யடைகிறது. அந்தப் பேதம் லயத்தை யடைந்ததின் பின் வாதமும் ஒழிகிறது. அநாதியான அஞ்ஞானத்துடன் கூடிய புருஷனுக்கு ஆத்துமஞானம் தானே சம்பவியாது ஆனபடியால் அந்தப் புருஷனுக்கு அன்னியனால் ஞானமுண்டாகும். ஆனதால் சர்வ ஞானியான பரமாத்மா ஞானோபதேச கர்த்தாவாக நிற்கிறாரென்பது இருபத்தாறு தத்துவங்கள் உண்டென்று சொல்லுகிறவர்களின் அபிப்பிராயம்.

இந்தப் பிரபஞ்சத்தில் ஜீவ-பரமேஸ்வரர்களிருவரும் சிறு சொரூபர்களானபடியினால் இருவருக்கும் பேதமென்கிறதில்லை. ஆகையினாலவர்கள் வேறென்று சொல்லுகிறது வியர்த்தமே. ஞானம் சத்துவகுண விர்த்தியினாலுண்டாகிறதென்பது இருபத்தைந்து தத்துவங்களை சொல்லுகிற பேர்களுடைய அபிப்பிராயம். சத்வகுணத்தினுடைய காரியு

மென்கிறது எப்படியென்றால் சத்துவ ரஜஸ் தமோகுணங்களுடைய குணங்களே ஆத்துமாவினுடைய குணங்களன்று சத்துவ குணத்தின் சமதையானது பிரகிருதியென்று சொல்லப்படுகிறதன்றோ. ஆகையினால் சிருஷ்டி-ஸ்திதி சங்கார ஏதுக்களான அந்தச் சத்வாதி குணங்களானவை பிரகிருதியினுடைய குணங்களே யல்லாமல் ஆத்மாவினுடைய குணங்களன்று. சத்துவகுணத்தினுடைய காரியம் கர்மமென்றும், தமோகுணத்தினுடைய காரியம் அஞ்ஞானமென்றும் சொல்லப்படுகிற சத்வாதி குணங்களுடைய கிரியைக்கு ஏதுவான ஈஸ்வரனே காலமாகிறார். சுபாவமென்னப்பட்டது மகதத்துவம் ஆகையால் தத்துவங்கள் இருபத்தைந்தென்கிற பக்ஷத்திலும் இருபத்தாறென்கிற பக்ஷத்திலும் வேறே இதற்குமேல் தத்துவமில்லை. புருஷன்-சத்துவ ரஜஸ் தமோ குணங்கள்-பிரகிருதி - மகதத்துவம் - அகங்காரம் - ஆகாசம் - வாய்வு-அக்கினி - ஜலம் - பிரிதிவி-சுரோத்திரம்-தொக்கு-நேத்திரம்-நாசிகை - சிங்குவை-வாக்கு-பாதம்-பாணி-பாயுறு-உபஸ்தம்-மனது-சப்தம்-ஸ்பரிசம்-ரசம்-கந்தம் - ரூபம் - ஆகிய இவை இருபத்தெட்டு தத்துவங்களாம். கமனம் வசனம் விசர்க்கங்கள் சிற்பம் இவைகள் கர்மேந்திரியங்களுடைய பலன்களே யன்றி வேறே தத்துவங்களன்று. தத்வ விசாரம்செய்யும் புருஷ சிரேஷ்டர்கள் பலர் பலவிதமாக அபிப்பிராயப்பட்டு தத்வங்களின் இலக்கத்தையும் பலவிதமாகச் சொல்வார்கள். இந்தச் சர்வ பக்ஷங்களும் யுத்தியோடிருக்கிறபடியால் நியாயமாகவே யிருக்கிறது.

வித்வான்கள் சொல்லுகிறது எதுதான் நன்றாயிராதென்று சொல்லும் ஸ்ரீ பகவானைப் பார்த்து உத்தவர் சொல்லுகிறார். "தேவதேவா! ஆத்துமா பிரகிருதி காரியமான தேகத்திலேயே காணப்படுகிறான். பிரகிருதியோ ஆத்துமாவிலேயே காணப்படுகிறது. அவர்களிருவருக்கும் பேதமானது காணப்படவில்லை. பேதம் உளதோ இலதோ என்கிற சந்தேகத்தை நிவர்த்திக்கவேண்டுமென" ஸ்ரீ பகவான் சொல்லுகின்றார்.

"உத்தவரே! பிரகிருதியும் புருஷனும் வேறாகவே யிருக்கிறார்கள். சிருஷ்டிக்கப்பட்டும் நானுவித விகாரங்களையுடையதாயும் சத்துவாதி குணங்களால் ஆக்கப்பட்டு மிருக்கிற இந்தத் தேகாதிகள் பிரகிருதியினுடைய காரியங்கள். என்னுடைய சத்துவகுண மயமான மாயை குணங்களால் அநேக

விதங்களான பேத புத்திகளைச் சிருஷ்டிக்கிறது. அநேக பேதத்தையுடைய தேகாதிகள் அத்தியாத்துமம் அதிதெய்வம் அதிபூதமென்று மூன்று விதமாயிருக்கும். நேத்திர முதலானவை அத்தியாத்துமமென்றும், ரூபம் அதிபூதமென்றும், நேத்திரத்திலிருக்கிற சூரியனுடைய அம்சம் அதிதெய்வமென்றும் சொல்லப்படும். இந்த மூன்றும் ஒன்றையொன்று ஆஸ்ரயித்துக்கொண் டிருக்கின்றன. அத்தியாத்துமாதிகளுக்கு காரணரான ஆத்துமா அத்தியாத்துமாதிகளைக் காட்டிலும் வேறாயும் வேறாகாதவராயு மிருக்கிறார். நேத்திரம் அத்தியாத்துமம் அதிபூதம் அதிதெய்வமென்று மூன்றுவிதமா யிருக்கிறாப்போலத் துவக்குமுதலான இந்திரியங்களும் மூன்று ரூபமாயிருக்கிறது.

குணங்களுடைய கிரியைக்கு நிமித்தமான பரமேசுவரரால் உண்டான பிரகிருதியில் நின்றும் உண்டான மகத்துவத்தில் நின்றும் உண்டாகும் மோகமயமான விகல்பத்துக் கேதுவான அந்த அகங்காரம் வைகாரிகமென்றும், தைசசமென்றும், தாமசமென்றும், மூன்றுவிதமா யிருக்கும். உண்டென்றும் இல்லையென்றும் சொல்லுகின்ற இந்தப் பேத விஷயமான விவாதம் ஆத்தும ஞானமில்லாதபடியினால் உண்டாகிறது. அசத்தாயிருந்தாலும் இந்த பேதமானது அந்தரியாமி ஆத்தும ரூபனுயிருக்கும் எனது ஞான சூனியர்களா யிருக்கிற புருஷர்களுக்கு ஒருக்காலும் ஒழியாமலிருக்கிறது. அதினால் அகங்காரத்தினாலாகிய கர்மங்களால் நானாவிதங்களான தேகங்களை யெடுத்து சம்சாரத்தை யுடையவர்களா யிருக்கிறார்கள்'' என்று சொல்லும் ஸ்ரீ பகவானைப் பார்த்து ஸ்ரீ உத்தவர் சொல்லுகின்றார் :

பரிபூரணனான ஆத்துமாவுக்கு தேகாந்தரத்தை யடைகிறதும், கர்த்தாவாகாதவனுக்கு கர்மங்களும், நித்தியனாயிருக்கிறவனுக்கு ஜனன மரண முதலானவைகளும் எப்படியுண்டாயின? கோவிந்தரே! இந்த அர்த்தத்தை தேவரீர் சொல்லக்கடவீரென்று பிரார்த்திக்கும் உத்தவருக்கு ஸ்ரீ பகவான் சொல்லுகின்றார் :

உத்தவரே! மனுஷியர்களுடைய கர்ம மயமான மனம் ஞான கர்ம இந்திரியங்களோடு கூடிக்கொண்டு தேகத்தை விட்டு தேகாந்தரத்தைச் சீக்கிரமாக அடைகிறது. ஆத்துமா அகங்காரத்தினால் அந்த மனதை அனுவர்த்தித்துக்கொண் டிருக்கிறான். மனம் பார்க்கப்படும் விஷயங்களையும் வேதங்

களினாற் சொல்லப்படும் விஷயங்களையும் சிந்தித்து அப்படி சிந்திக்கப்பட்ட அந்த விஷயங்களிலுண்டாகும் லயத்தை யடைகிறது. பிற்பாடு அந்த மனதின் ஞானம் நசித்துப் போகிறது. பூர்வ கர்மத்தினால் பிராப்தமான தேவாதி தேகங்களில் மிகவும் அபிமானத்தினால் மனம் பூர்வதேகத்தை நினையாமற் போகிறது. அந்த நினைவில்லாமலிருக்கை அகங்கார நிவர்த்தியென்று சொல்லப்படுகின்றது. அந்த அகங்கார நிவர்த்தி அபிமானத்தை யுடைய ஜீவனுக்கு மரணமென்று சொல்லப்படுகிறது. தேகத்துக்கே யல்லது ஜீவனுக்கு நாசமுண்டாகிறதில்லை.

தேகத்தை ஆத்துமாவாக அபிமானப்படுகிறதைச் ஜன்மமென்று சொல்வார்கள். ஜீவனுக்கு உற்பத்தியுமில்லை, மரணமுமில்லை. தேகாபிமானத்தினால் ஜீவனுக்கு ஜனன மரணங்களே யல்லாமல் எதார்த்தமாகவில்லை. மனதுக்கு தேகாந்தத்திலே அகங்காரத்தினா லுண்டாகின்ற வுற்பத்தியினால் ஆத்மாவினிடத்தில் அத்தியாத்துமம் அதிதெய்வம் அதிபூத மெனும் மூன்றுவித அசத்தா யிருந்து கொண்டே தோன்றுகிறது. பரிபூரணனான ஆத்துமா மனதினுடைய அபிமானத்தினால் உள்ளிலும் வெளியிலும் உண்டாகும் பேதங்களுக்கு ஏதுவாகி சுகாதிகளை யனுபவிக்கிறான்.

க்ஷணந்தோறும் சரீரங்கள் அறியக்கூடாத வேகத்தை யுடைய காலத்தினால் உண்டாகியும் நசித்துக்கொண்டு மிருக்கின்றன. காலசூக்ஷுமத்தினால் உற்பத்தி நாசங்கள் அவிவேகிகளால் அறியப்படுகிறதில்லை. அஞ்ஞானனா யிருக்கிற புருஷன் தன்னுடைய கர்மமூலமாகப் பிறக்கிறதுமில்லை; மரிக்கிறதுமில்லை. ஜனனமரண சூனியனான அந்தப் புருஷன் ஜன்மரகிதனா யிருந்தாலும் அஞ்ஞானத்தினால் பிறக்கிறவன் போலவும், மரண மில்லாதவனா யிருந்தாலும் மரிக்கிறவன் போலவுமாகிறான். தேக அவஸ்தைகளாயும் மனோரத மயங்களாயும் நானாவிதங்களான இந்த ஜன்மாதி அவஸ்தைகளை பிரகிருதி சம்பந்த அக்கியானத்தினால் ஒரு புருஷன் அடைகிறான். பரமாத்மாவினுடைய அனுக்கிரகமுள்ள புருஷன் அந்த அவஸ்தைகளை விவேகத்தினால் விட்டு விடுகிறான். பிரகிருதியைக் காட்டிலும் தன்னை வேறாக அறியாமல் விஷயங்களில் படிந்த புத்தியினால் மோகத்தை யுடையவனாய் சம்சாரத்தை யடைகிறான். அந்தச் சம்சாரத்திலேயும் தன்னுடைய கர்மத்தினால் கட்டப்பட்டவனாய் சத்துவ குண சம்பந்தத்தினால் தேவரிஷி ஜன்மங்களையும், ரஜோ

குணத்திஞல் அசுரமனுஷிய ஜன்மங்களேயும், தமோகுணத்திஞல் பூதம் பக்ஷி மிருகம் விருக்ஷ முதலான ஜன்மங்களேயும், அடைகிருன். சொற்பனத்திற் காணப்பட்டும் விஷயங்கள் அபத்தமாவது போல ஆத்மாவுக்குச் சம்சாரம் அபத்தமன்றியில் பரமார்த்தமன்று. விஷயங்களேத் தியானிக்கும் ஆத்துமாவுக்கு விஷயங்கள் பரமார்த்தமாக இல்லாமலிருந்தாலும் சம்சாரம் நிவர்த்தியாகிறதில்லே. சொற்பனத்தில் தன்னே யடிக்கிறது முதலான அனர்த்தம் உண்டாகிறுப்போலில்லாத சம்சாரம் உண்டாயிருக்கிறது.

ஆகையால் ஆத்துமஞான மில்லாமையிஞல் காணப்படும் இந்தப் பிரபஞ்ச பேதத்தைப் பிரம்மமாகப் பார்த்துக் கொண்டு அசத்தான இந்திரியங்களால் விஷயங்களே அனுபவியாமலிருக்கக்கடவீர். அசத்துக்களால் திரஸ்கரிக்கப்பட்டாலும் அவமானம் பண்ணப்பட்டாலும் சிரேயசு காமனுயிருக்கிற புருஷன் தியான நிஷ்டையில் நின்றும் ஒழியாமல் தான்தானே தன்னுடைய ஆத்துமாவை உத்தாரணம் பண்ணக்கடவனென்று ஸ்ரீ பகவான் சொல்லியருளிஞர்.

ஸ்ரீ பகவான் மேலும் சொல்லுகிருர்: பிரகஸ்பதியினுடைய சிஷியரான உத்தவரே! துர்ச்சனர்களுடைய நிந்தாமொழிகளேக் கேட்டு அவைகளால் பாதிக்கபடாமல் தன் மனதை அடக்கக்கூடிய புருஷனே ஞானி; அவனே பரமசாதுவாவன். ஏனெனில் உலக விவகாரங்களே ஒழித்துக் கொண்டு ஆத்மோஜ் ஜீவனத்திலேயே கண்ணும் கருத்துமாயிருப்பவர்களுக்கு துர்ச்சனர்களால் பலவித கஷ்டமுண்டாவது சகஜமாயிருக்கிறது. இது விஷயமாக ஓர் இதிகாசம் சொல்லப்படுகிறது. அதை உமக்குச் சொல்லுகிறேன். மாளவ தேசத்திலே சம்பத்தில் மிகுந்த ஒரு பிராமணனிருந்தான். அந்தப் பிராமணன் கிருஷி வர்த்தகம் ஆகிய விருத்தியையுடையவனுயும் மகா துஷ்ட குணங்களே யுடையவனுயும் மகா காமியாயும் உலுத்தனுயுமிருந்தான். அவனது புத்ர-களத்ர-பந்துக்களும் அவனே சபித்தார்கள். தேவர்களும் அவனது அதர்ம குணங்களுக்காக அவனேக் கோபித்தார்கள். பிறகு அவன் வெகு ஆவலோடு சம்பாதித்து சேர்த்துவைத்த அர்த்தமும் நாசத்தை யடைந்துவிட்டது. அந்தப் பிராமணனுடைய தனத்தில் பந்துக்கள் சிலதை அபகரித்துக்கொண்டார்கள். திருடர் சிலதைக் கொண்டு போய்விட்டார்கள். தெய்வகதியாய் வீட்டில் நெருப்புப்பட்டு சில தனம் நஷ்டமாய்ப் போய்விட்டது. ராஜாக்கள் சில

தனத்தை அபகரித்துக் கொண்டார்கள். தன்னிடமிருந்த சகல பொருளையும் பறிகொடுத்து, பந்துக்களாலும் பிறராலும் தூஷித்து வெறுக்கப்பட்டு, அதிக துக்கத்தை யுடையவனாகி அந்த வேதியன் வேறு கதியில்லாமல் நடந்ததை யெல்லாம் நினைந்து நினைந்து வருந்தினன்: "ஓகோ! நாம் அறியாமல் மோசம்போனோம். தனம்! தனம்! என்று அதையே தினமும் போற்றி தர்மா தர்மங்களைக்கூட பாராமல் சேகரித்து வைத்தோம். கடைசியில் பொருளின் கதி அதோகதியாய்ப் போய்விட்டது. அதர்மத்திற் காளானதும் சகல ஜனங்களாலும் விரோதிக்கப்பட்டதுமே நாம் பொருளா லடைந்த பலன். சகலர்க்கும் இதத்தையே செய்யும் தேவர்களையும் நான் பகைத்துக்கொண்டேன். இந்த அற்ப உடலும் பொருளும் ஒருவனுக்கு இதத்தை செய்வனவாகக் காணோம். இவைகளால் ஏதோ சுக முண்டாகுமென்றெண்ணி அவைகளுக்காக உழைத்து வாழ்நாளை நான் பாழ்நாளாக்கிக் கொண்டேன். அந்தோ! நான் அழிந்தவாறென்னே! அடுத்தாரை ஆட்கொள்ளும் அச்சுதனை அடுத்து நான் ஆனந்த மடையா தொழிந்தேனே" என்றிவ்விதம் பல பலவாக நினைந்து முடிவில் ஒருவாறு தேறி, இக சுகத்தை அனுபவிக்கும் இச்சையை யொழித்து பரசுகத்தை அடைவதையே பெரும் உத்தேசமாகக் கொண்டு வைராக்ய சீலனாக பிரகாசித்தான்.

மனதையும் பிராணனையும் நிக்கிரகித்துக் கொண்ட அந்தப் பிராம்மணன் அகங்கார மமகாரங்களை ஒழித்து தனக்கென ஓரிடமில்லாமல் கண்ட விடங்களில் பிச்சை யெடுத்து புசிக்கலானான். உலக ஜனங்கள் அவனை பைத்யக்காரனென்றெண்ணி அடித்தும் திட்டியும் பலவிதமாகக் கஷ்டப்படுத்தினார்கள். சிலர் அவனை கபட சன்னியாசியென்றும் மோசக்காரனென்றும் தூஷித்தார்கள். வியாதிகளும் அந்த மறையோனது சரீரத்தை வாட்டின. இந்தப் பிரகாரம் அந்த எதி தனக்கு நேர்ந்த துக்கங்களை பிராரப்த கர்மத்தினால் அனுபவிக்கத் தக்கதாயெண்ணி அனுபவித்தான். சாத்வீக புத்தியை ஆஸ்ரயித்து சுவதர்மத்திலிருந்தான். இந்தப் பிரகாரம் அந்தப் பிராம்மணர் வைராக்கியத்தினாலே சிரமமில்லாதவராய் சந்நியாசம் கொண்டு பூமியிலே சஞ்சரித்துக்கொண்டு துஷ்டர்களாலே அவமானம் பண்ணப்பட்டிருந்தாலும் சுவதர்மத்தில் நின்றும் சலியாதவராய் இருந்தார். புருஷனுக்குச் சுகதுக்கங்களைக் கொடுப்பது மனமே யல்லாமல் பிறிதொன்றில்லை. மித்திரன் மத்தியஸ்தன் சத்துருவென்கிற சமஸ்த சம்சார

மும் அஞ்ஞான மூலமாய் மனதினுடைய பிரமையேயன்றி, வேறில்லை. ஆகையினாலே உத்தவரே! யோகாப்பியாசத்தை யுடையவராய்க் கொண்டு என்னிடத்திலே சமர்ப்பிக்கப்பட்ட புத்தியினாலே மனதைச் சர்வப் பிரகாரத்தினாலேயும் நிக்கிர கிக்கக்கடவீர்.



## பதினெட்டாவது அத்தியாயம்



ஸ்ரீ கிருஷ்ண பகவான் உத்தவருக்குச் சாங்கிய யோகம் சொல்லியது.

உத்தவரே! பூர்வீகர்களான கபிலாதி ரிஷிகளாலே நிச்சயிக்கப்பட்ட சாங்கிய ஞானத்தை உமக்குச் சொல்லு கிறேன். பூர்வ பிரளயத்திலே ஆதி கிருதயுகத்தில் மிகவும் விவேகத்தையுடைய பேர்களிருந்தார்கள். அவர்களுக்கு பேதம் பிரகாசியாமற் போனபடியினாலே திருஷ்டாவான புருஷனும் திரிசியமான சமஸ்த பிரபஞ்சமும் விகல்ப சூனிய மான பிரம்மத்திலேயே லயத்தை யடைந்திருந்தன. நிர் விசேஷமாயும் விகல்பசூனியமாயும் சத்தியமாயு மிருக்கிற அந்தப் பிரம்மமானது மாயாவிலாச சொரூபத்தினாலே வாக்குக்கும் மனதுக்கும் விஷயமான இருவித பிரபஞ்ச ரூபமாயிற்று, அவ்விரண்டில் ஒரு ரூபம் பிரகிருதியென்று சொல்லப்படும். அந்தப் பிரகிருதி காரியகாரண ரூபமாயிருக் கும். மற்றொரு ரூபம் ஜீவாத்மாவென்று சொல்லப்படுகிறது. என்னாலே சலிப்பிக்கப்பட்ட அந்தப் பிரகிருதியினுடைய சத்துவ-ரஜஸ-தமசென்று சொல்லப்படுங் குணங்கள் அந்த ஜீவாத்மாவினுடைய அதிருஷ்டத்தினாலே சிருஷ்டிக்கு அபிமுகங்களாயின. அந்தக் குணங்களில் நின்றும் ஞான கிரியா சக்திகளையுடைய மகதத்துவம் உண்டாயிற்று. கிரியை யுள்ளதான அந்த மகதத்துவத்தில் நின்றும் ஜீவனுக்கு மோக ஜனகமான அகங்காரமுண்டாயிற்று.

பஞ்சபூதங்கள், இந்திரியங்கள், இந்திரியாபிமானி தேவதைகள், மனம் இவைகளுக்குக் காரணமாயும் சித்து ரூபமாயும் சடரூபமாயு மிருக்கிற அந்த அகங்காரம், வைகாரிய மென்றும், தைச்ச மென்றும், தாமச மென்றும் மூன்று வித மாயிருக்கும். சப்தாதி பூத மாத்திரைகளுக்குக் காரணமான தாமச அகங்காரத்தில் நின்றும் பிரிதிவி முதலான பஞ்ச பூதங்களு முண்டாயின. தைஜச மென்னப்பட்ட ராஜச

அகங்காரத்தில் நின்றும் பத்து இந்திரியங்களுமுண்டாயின. வைகாரிகமென்னப்பட்ட சாத்துவீக அகங்காரத்தில் நின்றும் திக்கு-வாயு-சூரியன்-வருணன்-அசுவனிதேவர்கள்-அக்கினி-இந்திரன்-உபேந்திரன் - மிருத்தியு - காமன் - சந்திரன் இந்த இந்திரியாபிமான தேவர்களும் மனதும் உண்டாயின. இந்த தத்துவங்கள் ஏகமாய்ச் சேர்ந்து கிரியைகளை யுடையவைகளாய் அந்தரியாமியான எனக்கு உத்தம ஸ்தானமான அண்டத்தை யுண்டாக்குகின்றன. ஜலத்துக்குள் மிதந்து கொண்டிருக்கும் அந்த அண்டத்தில் நான் லீலாவிக்கிரக ஸ்ரீமந் நாராயண ரூபியாயிருக்கிறேன். அப்படிப்பட்ட எனது நாபியில் ஜகத்காரணமான பத்மமுண்டாயிற்று. அந்த பத்மத்தில் பிரம்மா உதித்தார். ரஜோ குணத்தோடுகூடிய அந்த பிரம்மா எனது அனுக்கிரகத்தினால் தபசில் சகல லோகங்களையும், லோகபாலர்களையும் சிருஷ்டித்தார். சுவர்க்கலோகம் தேவர்களுக்கு ஸ்தானமாயிற்று. புவனலோகம் பூதங்களுக்கு ஸ்தானமாயிற்று. மனுஷியர்கள் முதலான பேர்களுக்கு பூலோகம் ஸ்தானமாயிற்று. சித்தர்களுக்கு இந்த மூன்று லோகங்களுக்கு மேலேயுள்ள மகாலோகம் ஸ்தானமாயிற்று. பூமிக்குக் கீழேயுள்ள அதல முதலான லோகத்தை அசுரர்களுக்கும் நாகர்களுக்கும் ஸ்தானமாகப் பிரம்மா சிருஷ்டித்தார்.

எந்த விகாரவஸ்து அணுவாயும் பெரிதாயும் அல்பமாயு மிருக்கிறதோ அவையெல்லாம் பிரகிருதி புருஷன் ஆகிய இரண்டினாலும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. எந்த வஸ்து ஒரு காரியத்திற்குக் காரணமாயும் லயஸ்தானமாயு மிருக்கிறதோ ? அந்த வஸ்துவே மத்தியமா அவஸ்தைக்கும் காரணமாக நிற்கிறது. அதுவே சத்தாகிறது. காரணமான மகதத்துவ முதலானவை எதை உபாதான காரணமாகக் கிரகித்து அகங்கார முதலான காரியத்தை சிருஷ்டிக்கிறதோ? அதுவே சத்தாகிறது. பிரகிருதி இந்தக் காரியமான பிரபஞ்சத்துக்கு உபாதான காரணமாகிறது. பரனான புருஷன் அந்தப் பிரகிருதிக்கு ஆஸ்ரயனாகிறான். சத்வாதி குணங்கள் சிருஷ்டிக்கு அபிமுகமாய் சலித்தல் காலமாகிறது. பிரகிருதி புருஷன் காலம் இந்த மூன்றுக்கும் பரப்பிரம்ம சொரூபனான நானே ஆஸ்ரயனாகிறேன். ஜீவனுடைய போகத்தையே பிரயோஜனமாக வுடையதாயும், வெகு விதமாயு மிருக்கிற இந்த சிருஷ்டி பிதா புத்திராதி ரூபமாக நித்தியமாய் ஸ்திதியினுடைய முடிவு பரியந்தம் உண்டாகிக் கொண்டே யிருக்கும்.

அந்த ஸ்திதியும் பரமாத்தும தரிசன பரியந்தம் உண்டாகும். கால ரூபியான என்னால் வியாபிக்கப்பட்டும் நாள் தோறும் லோகங்களுடைய சிருஷ்டிப் பிரளயங்களை உடையதாயு மிருக்கிற இந்தப் பிரமாண்டம் லோகங்களோடுகூட லயத்தின்பொருட்டு யோக்கியமாகிறது. லயக்கிரமம் எப்படியென்றால்: நூறுவருஷம் மழையில்லாததினாலே அன்னம் க்ஷயத்தையடைந்து போகையில் க்ஷயித்துப்போகும். அன்னத்தில் சரீரம் லயத்தையடைந்து போகின்றது. அன்னம் வித்திலே லயத்தை யடைந்து, வித்து சுவரூபமாகவே நிற்கும். அந்த வித்தானது பூமியில் விரைக்கப்பட்டாலும், முளையாமல் அதிலே லயத்தை யடைந்திருக்கும். அந்தப் பூமி பிரளயகால சூரியனால் உலர்த்தப்பட்டதாயும் சங்கிருஷ்ண மூர்த்தியினுடைய முகத்தில் நின்றும் உண்டாகும் காலாக்கினியினால் தகிக்கப்பட்டும் தன்னுடைய சூக்ஷும ரூபமான கந்தத்தில் லயத்தை யடைந்து அந்த சுவரூபமாகவே யிருக்கும். அந்த கந்தம் நூறுவருஷம் சந்ததாரையாய் வருஷித்த யேகார்னவ ஜலத்திலே லயத்தையடையும். அந்த ஜலம் அக்கினியினால் ஜோஷிக்கப்பட்டதாய் தன்னுடைய சூக்ஷும ரூபமான ரசத்திலே லயித்து தற்சுவரூபமாக விருக்கும். அந்த ரசம் அக்கினியில் லயத்தையடையும். அந்த அக்கினி வாயுவினால் திரஸ்கரிக்கப்பட்டு தன் சூக்ஷும ரூபத்திலே லயிக்கும். அந்த ரூபம் வாயுவிலே லயத்தை யடையும். அந்த வாயு கால சக்தியை யுள்ளதான ஆகாசத்தினால் ஆக்கிரமிக்கப் பட்டதாய் தன்னுடைய குணமான ஸ்பரிச குணமா யிருந்துகொண்டு ஆகாசத்தில் லயத்தை யடையும். அந்த ஆகாசம் அகங்காரத்தினால் ஆக்கிரமிக்கப் பட்டு தன் குணமான சப்தத்திலே லயத்தை யடையும். அந்த சப்தம் அகங்காரத்தில் லயத்தை யடையும். இந்தப்பிரகாரமே இந்திரியங்களும் அதின் காரணங்களான தேவர்களிலே லயத்தை யடையும்.

உத்தவரே! அந்த தேவர்கள் தங்களுக்கு நியந்தாவான மனதிலே லயத்தை யடைவர். அந்த மனம் தேவர்களோடு கூட வைகாரிக மென்னப்பட்ட அகங்காரத்தில் லயிக்கும். சப்தம் தாமச அகங்காரத்தில் லயித்திருக்கும். திரிவிதமாயும் ஜகன் மோகனமாயு மிருக்கிற அந்த அகங்காரம் மகதத்துவத்திலே லயத்தை யடைந்து ஞானசக்தி கிரியாசக்தி மாத்திரமாக விருக்கும். அந்த மகதத்துவம் ஞானசக்தி கிரியா சக்திகளை விட்டு தனக்குக் காரணமான சத்துவாதி குணங்களில் லயத்தை யடைந்து குண சுவ ரூபமாகவேயிருக்கும். அந்தக்

குணங்கள் பிரகிருதியிலே லயத்தை யடையும். அந்தப் பிரகிருதி நிர்வியாபாரமான காலத்திலே லயத்தை யடையும். அந்தக் காலம் மாயாப் பிரவர்த்தகனுயும் ஞான சுவரூபனுயுமிருக்கிற ஜீவாத்மாவிலே லயத்தை யடையும். அந்தச் ஜீவன் பரிபூர்ண ரூபியாயும் பிறப்பில்லாதவனுயு மிருக்கிற எனது சுவரூபத்தைப் பற்றியிருப்பன். உபாதி சூனியனுயும் விசுவத்தினுடைய உத்பத்தி லயங்களுக்கு ஆஸ்ரனுயுமிருக்கிற அந்தப் பரமாத்மா சுவரூபத்துடன் நித்தியமாயிருக்கிறர். இருதயத்திலுள்ள சமூசயத்தைப் போக்கடிக்கும்படியான இந்த சாங்கிய ஞான நிஷ்டை உமக்குச் சொல்லப்பட்டது.



## பத்தொன்பதாவது அத்தியாயம்



ஸ்ரீ பகவான் உத்தவருக்கு குணத்திரையத்தை உரைத்தது.

உத்தவரே! தமம் - பொருமை - விவேகம் - சுவதர்மாசாரம் - சத்தியம் - தயை - மறப்பில்லாமை - கிடைத்ததைக் கொண்டு சந்தோஷப்படுதல்-தான் பரனுயிருத்தல் - வைராக்கியம் - சிரத்தை - விகிதமில்லாத கர்மப் பிரவிர்த்தியில் லச்சை - தானம் - கபடமின்மை - வணக்கம் - ஆத்தும நிஷ்டை இவைகள் சத்துவ குணத்தினுடைய விர்த்தியாம். ஆசை - வியாபாரம் - கர்வம் - எத்தனே கிடைத்தாலும் திருப்தியில்லாம லிருத்தல் - வணக்கமின்மை - தனுதிகளில் ஆசையினுல் தேவதைகளைப் பிரார்த்தித்தல்-பேதக்கியானம்-விஷயபோகம் மதத்தினுல் யுத்தாதிகளில் ஆக்கிரகம் - ஸ்தோத்திரப் பிரியனுயிருத்தல் - பரிகாசம் - தன் சாமர்த்தியத்தை பிரகாசம் பண்ணுதல் - பலத்தினுல் வியாபாரத்தை ஒழியாமலிருத்தல் இவை ரஜோகுணத்தின் விருத்திகள். குரோதம் - லோபம் - அசத்தியம் - ரோஷம் - டம்பம் - கலகம் - சோகம் - மோகம் - துக்கம் - தைரியம் - சோம்பல் - ஆசை - பயம் மந்தித்திருத்தல் இவை தமோகுணத்தினுடைய விருத்திகள், நான் எனதெனும் புத்தி மூன்று குணங்களே யுடைய விர்த்தியாகிறது. நான் மிகவும் பொறுமை யுடையவனென்றும், ஆசையுடையவனென்றும், கோபத்தை யுடையவனென்றும், இந்தப் பிரகாரம் உண்டாகும் புத்தியும் திரிகுணத்தினுடைய விருத்தியாகிறது. மனம் இந்திரியங்கள் பிராணன்கள் இவைகளினு லுண்டாகும் விகாரம்

மூன்று குணத்தினுடைய விருத்தியாகிறது. புருஷன் எப்போது தர்மார்த்த கர்மங்களில் மிகவும் நிஷ்டையை யுடையவனு யிருக்கிருனே? அப்போது சிரத்தை பிரீதி தனம் இவைகளை யுண்டாக்கும். அந்த நிஷ்டை திரிகுணங்களுடைய காரியமாகிறது. எப்போது புருஷனுக்குப் பிரவிர்த்தி ரூபமான காம்ய கர்மத்தில் ஆசக்தி யுண்டாகிறதோ? அப்போது கிரகஸ்தாஸ்ரமத்திலே ஆசத்தியை யுடையவனாய் நித்திய நைமித்திய ரூபமான சுவதர்மத்தில் நிஷ்டையை யுடையவனு யிருக்கிருன். அந்த நிஷ்டையானது மூன்று குணங்களாய் விர்த்தியாகின்றது. சத்துவ குணத்துடன் கூடிக்கொண்டிருக்கிற புருஷன் சமதமாதி குணங்களா லறியப்படுவன். காமாதி குணங்களால் ரஜோ குணத்தை யுடையவன் அறியப்படுவன். குரோத முதலான வைகளால் தமோ குணத்தை யுடையவன் அறியப்படுவன். கர்மபலத்தில் ஆசக்தி யில்லாதவனாய் தன்னுடைய கர்மங்களால் பக்தியினுல் என்னை உபாசிக்கிறவன் சத்துவ குணத்தை யுடையவனுவன். கர்மபலத்தில் இச்சையை யுடையவனாய் இகலோகத்தில் பசுபுத்ராதி சம்பத்தைக் கோறி சுவதர்மங்களால் என்னை உபாசிக்கிறவன் தாமசனுவன். சத்துவம் ரஜசு தமசு என்கிற இந்த மூன்றும் ஜீவனுடைய குணங்களே யல்லாமல் எனது குணங்களன்று. இந்தக் குணங்களுக்கு நியந்தாவானபடியினுல் சிருஷ்டியாதிகளுக்குக் கர்த்தாவாயிருந்தாலும் நான் நித்திய முத்தனுகவே யிருக்கிறேன். எப்போது சித்தம் பிரசன்னமாயிருக்கிறதோ, இந்திரியங்கள் விஷயங்களில் நின்றும் நிவர்த்தித்திருக்கிறதோ, தேகத்தில் பயமும் மனதில் வைராக்கியமு முண்டாயிருக்கிறதோ, அப்போது எனது பதப்பிராப்திக்கு ஏதுவான சத்துவ குணம் விர்த்தி யடைந்திருக்கிறதென்று அறிய வேண்டும்.

எப்போது புருஷன் கிரியையினுல் விகாரத்தை யடைந்து மிகவுஞ் சஞ்சலமான புத்தியை யுடையவனு யிருக்கிருனே, இந்திரியங்களுக்கு விஷயங்களில் நின்றும் நிவர்த்தியில்லாம லிருக்கிறதோ, கர்மேந்திரியங்களுக்கு மஹா வியாபார முண்டாயிருக்கின்றதோ, அப்போது இந்த லக்ஷணங்களால் ரஜோகுணம் விர்த்தியடைந் திருக்கிறதென்று அறியக்கடவீர். எப்போது மிகவும் பிரகாசியாம லிருந்துகொண்டு சித்தமானது விஷயங்களை அறிவதிலேயும் சமர்த்த மாகாமல் லயத்தை யடைந்திருக்கிறதோ, சங்கல்ப சுவரூபமான மனது நாசத்தை யடைந்திருக்கிறதோ அக்கி

யானமும் இளைப்பும் தூக்கமும் உண்டாயிருக்கிறதோ அப்போது தமோகுண விர்த்தியை யடைந்திருக்கிறதென்று அறியக் கடவீர். எப்போது சத்துவகுணம் விர்த்தியாகிறதோ அப்போது புருஷன் நிவர்த்தி மார்க்கத்தை ஆஸ்ரயித்திருப்பன். எப்போது ரசோகுணம் விர்த்தி யடைந்திருக்கிறதோ அப்போது பிரவிர்த்தி மார்க்கத்தை யடைவன். எப்போது தமோகுணம் விர்த்தி யடைந்திருக்கின்றதோ அப்போது மோகத்தை யுடையவனாயிருப்பன். பிராணிக்கு சத்துவ குணத்தினால் சாக்ர அவஸ்தையும் ரசோ குணத்தினால் சொற்பனுவஸ்தையும் தமோகுணத்தினால் சுழுப்தி அவஸ்தையும் உண்டாகும். ஆத்தும தத்துவம் இந்த ஜாக்ராதி மூன்றவஸ்தைகளிலேயும் ஏகரூபமாக விருக்கின்றது.

வேதங்களுடைய தாத்பரியத்தை அறிந்தவர்களாயும் சுவதர்மானுஷ்டான பரர்களாயு மிருக்கிற பிராமணர்கள் சத்துவ குணத்தினால் பிரமலோகபரியந்தம் ஊர்த்தலோகங்களையே அடைவார்கள். தமோ குணத்தினால் ஸ்தாவர ஜன்மபரியந்தம் அதோகதியை அடைவார்கள். ரஜோ குணத்தினால் மனுஷிய ஜன்மத்தை அடைவார்கள். சத்துவ குணம் விர்த்தியடைந் திருக்கிறபோது மறிக்கின்றபேர்கள் சுவர்க்க லோகத்தை யடைவார்கள். ரஜோகுணம் விர்த்தி யடைந் திருக்கையில் மரித்த பேர்கள் மனுஷயலோகத்தை யடைவார்கள். தமோகுண விருத்தியில் மரித்தவர்கள் நரகத்தை யடைவார்கள். இந்தக் குணங்களைச் ஜயித்தபேர்கள் எனது சாரூப்பியத்தை யடைவார்கள். எனக்கு பிரீதியார்த்தமாகவும் பலத்தில் அபிலாஷை யில்லாமலும் செய்யப்பட்ட சுவதர்மம் சாத்வீகமென்று சொல்லப்படும். பலத்தில் இச்சையுடன் செய்யப்பட்ட கர்மம் ராஜச மெனப்படும். இங்கிசை-டம்பம்-மாச்சரியம் இந்த ரூபமான கர்மம் தாமச மெனப்படும். ஆத்துமா தேகாதிகளைக் காட்டிலும் வேறாயிருக்கிறானென்று அறிகிற ஞானம் சாத்துவீக மெனப்படும். தேகாதிகளை ஆத்துமாவாக அறிகிறது ராஜசமெனப்படும். பாலர்கள் மூர்க்கர்கள் இவர்களுடைய ஞானத்துக்குச் சமான மான பிராகிருத ஞானம் தாமசமெனப்படும். பரமாத்துமாவான என்னிடத்தில் நிஷ்டையையுடைய ஞானம் நிர்க்குணமெனப்படும். பார்க்கவும், கேட்கவும், சிந்திக்கவும், யாதொரு வஸ்து விருக்கிறதோ அதெல்லாம் திரிகுண சுவரூப்மாகிறது.

உத்தவரே! சித்தத்திலுண்டாம் இந்தக் குணங்கள் எவனாலே ஜயிக்கப்படுகின்றனவோ, பக்தியோகத்தினால் என்னிடத்தில் நிஷ்டையை யுடைய அந்தப் புருஷன் எனது சாரூபியத்திற்கு யோக்கியனாவன். ஆகையால் விவேகி பரமாத்துமக்கியான அநுபவங்களுக்கு ஏதுவான இந்த மனுஷிய தேகத்தை யடைந்து விஷயங்களில் ஆசக்தியை விட்டுவிட்டு என்னையே உபாசிக்கக்கடவன். வித்துவானாயும் ஆலசியமில்லாதவனாயும், சிதேந்திரியனாயும், ஞானியாயு மிருக்கிற புருஷன் முன்னால் சொல்லப்பட்ட சாத்துவீக வஸ்துக்களுடைய ஆஸ்ரயத்தினால் ரஜஸ் தமோ குணங்களை திரஸ்கரித்து விஷயங்களில் ஆசக்தி யில்லாதவனாய் என்னையே உபாசிக்கக்கடவன். சாந்தமான புத்தியுள்ள புருஷன் எனதிடத்தில் நிஷ்டையை யுடையவனாய் உபசாந்தி சுவரூபமான சத்துவ குணத்தினால் சத்துவகுணத்தையும் ஜயிக்கக்கடவன். இந்தப் பிரகாரம் மூன்று குணங்களாலும் விடப்பட்ட ஜீவன் ஜீவதத்துவத்திற்குக் காரணமான லிங்க சரீரத்தை விட்டு எனது சாரூப்பியத்தை யடைவன். ஜீவன் லிங்க சரீரத்தினால் மனதினாலே யுண்டாகும் சத்துவாதி குணங்களாலேயும் விடப்பட்டவனாய்ப் பரப்பிரம்மரூபமான என்னுடனே பரிபூரணமா யிருந்துகொண்டு உள்ளும் வெளியும் ஏகரூபனாகவே யிருப்பன்.



## இருபதாவது அத்தியாயம்



ஸ்ரீ பகவான் உத்தவருக்கு புரூரவசு கதை சொன்னது.

உத்தவரே! விவேகி சிசுன திருப்தி உதர திருப்தி செய்துக்கொண்டிராமல் துஷ்டர்களுடைய சங்கத்தை ஒருக்காலும் செய்யாமலிருக்கக் கடவன். துஷ்டர்களைப் பின்பற்றும் புருஷன் மகா அந்தகாரமான நரகத்தில் விழுந்து போவன். இது விஷயமாக ஒரு சிறு கதை சொல்லுகிறேன்.

மகா கீர்த்திவானான புரூரவசு வென்னப்பட்ட இராஜா ஊர்வசியினுடைய விரகத்தினால் மிகவும் மோகத்தை யடைந்து சோகத்தில் மூழ்கினவனாய் தன்னை விட்டுப்போகும் அந்த ஊர்வசியை அனுவர்த்தித்து அரையில் வஸ்திரமில்லாதவனாய் பித்தம் பிடித்தவன்போல் தடுமாறி, "அடி நளினாட்சி! உன்னையே ஆதாரவாக நம்பி உனது மோகத்திலேயே ஆழ்ந்து கிடக்கும் என்னைவிட்டுப் போதல் தர்மமா"

வென்று இரந்துகேட்க, அவள் மனமிரங்கி அவனோடு இருந்தாள்.

பிறகு அவளோடு துச்சங்களான விஷயபோகங்களை அநுபவித்து திருப்தி யில்லாதவனாய் அந்த ஊர்வசியினால் அபகரிக்கப்பட்ட விவேகத்தை யுடையவனாய் அநேக வருஷங்கள் கழித்தான். பிறகு காமானுபவங்களில் ஒருவித வெறுப்புண்டாகி சிந்திக்கலாயினன். மகா மூடனான நான் என் வாழ்னாள்களை வீழ்ச்சிக்குரிய நாள்களாக உதயமாவதும் அஸ்தமிப்பதும்கூட தெரியாமல் கழித்தேன். மன்மத விகாரத்தினால் விவேக சூனியனாய் ஊர்வசியின் ஆலிங்கனத்தையே கோறி மகாமோகத்தில் ஆழ்ந்து அழிந்தேன். பெண்கழுதைகள் புறங்கால்களால் உதைத்தாலும் ஆண்கழுதை அந்தப் பெண் கழுதையை அநுவர்த்திப்பது போல என்னை விட்டுப்போக நினைந்த ஊர்வசியை நான் பல முறையும் என்னோடிருக்க வேண்டிக்கொண்டேன். முடிவில் நானடைந்த பலனென்ன? ஸ்திரீகளா லபகரிக்கப்பட்ட மனதையுடைய புருஷனுக்கு வித்தையினாலும் தபசினாலும் தான் என்ன பிரயோசனம்? சந்நியாசத்தினாலும் ஞானத்தினாலும் தான் என்ன பிரயோஜனம்? ஊர்வசியினுடைய வேதரூபமான வசனத்தினால் போதிக்கப்பட்டிருந்த இந்திரிய ஜயமில்லாத எனது மனதிலுள்ள மகாமோகம் நிவர்த்தியாகாமற் போயிற்று. மிகவும் மலினமாயும் துர்க்கந்த முதலானவைகளுக்கு ஆஸ்ரமாயு மிருக்கிற இந்தச் சரீரமெங்கே? சௌந்தரிய முதலான குணங்களெங்கே? இவை அஞ்ஞானத்தினால் பண்ணப்பட்டதே யல்லாமல் மற்றொன்றுமில்லை. தொக்கு-மாம்சம்-இரத்தம்-நரம்புகள்-கொழுப்பு-சிலத் தண்ணீர்-எலும்புகள் ஆகியவை கூடிய அற்ப உடலை விசேஷமாக நினைந்து ரமிக்கிறபேர்களுக்கும் மல மூத்திரங்களில் வாழும் புழுக்களுக்கும் என்னபேத மிருக்கின்றது? விஷயங்களுக்கும் இந்திரியங்களுக்கும் சம்பந்த முண்டானால் மனது கலங்கும். இல்லாவிட்டால் கலங்குகிறதில்லை. பார்க்கப்படாமலும் கேழ்க்கப்படாமலு மிருக்கிற பதார்த்தத்தினால் மனதுக்குச் சாஞ்சல்யம் உண்டாகிறதில்லை. இந்திரியங்களை நிக்கிரகியா நின்ற புருஷனுடைய மனம் நிச்சலமாய்க் கொண்டு சாந்தியை யடையும். ஆகையால் ஸ்திரீகளிடத்தும் ஸ்திரீ வசியர்களாயிருக்கிற புருஷர்களிடத்திலும் ஆசக்திதகாது.

உத்தவரே! அந்த புரூரவசு இவ்விதம் விரத்தி யடைந்து ஊர்வசியினுடைய மோகத்தைவிட்டு பரமாத்மா

வான என்னைத் தியானம் செய்து ஞானத்தினால் சகல மோகங்களையும் விட்டவனாய் சாந்தியை யடைந்தான். ஆகையால் புத்திமான் துஷ்டர்களுடைய சங்கத்தை விட்டு சத்புருஷர்களுடைய சங்கதியே பண்ணக்கடவன். சத்புருஷர்கள் இதோபதேசங்களாலே சத்சங்கதி பண்ணுகிற புருஷனுடைய மனோவியாஜங்களைப் போக்கடிப்பார்கள். 'சத்புருஷர்கள் நிரபேக்ஷர்களாயும், என்னிடத்திலே ஸ்திரமான சித்தத்தை யுடையவர்களாயும், மிகவும் சாந்தியை யுடையவர்களாயும், சர்வத்திர சமபுத்தி யுடையவர்களாயும், மமதை ஆகங்கார மில்லாதவர்களாயும், சுகதுக்கங்களைச் சமமாகப் பார்க்கிறவர்களாயும், பரிக்கிரகமில்லாதவர்களாயு மிருப்பார்கள்.

மகானுபாவர்களான அந்த சத்புருஷர்களுடைய கோஷ்டியில் எனது சரித்திரங்கள் நித்தியமாக ஸ்ரவணம் செய்யப்பட்டுக்கொண்டே யிருக்கும். அந்தக் கதைகள் கேட்கும் புருஷர்களுடைய பாவத்தைப் போக்கடிக்கும். அநந்த கலியாணகுண பரிபூரணராயும், பரப்பிரம்மமாயும், ஆனந்தானுபவ ஸ்வரூபமாயு மிருக்கிற என்னிடத்தில் பக்திசெய்யும் சாதுவுக்கு வேறே வேண்டிய தொன்றுமில்லை. எப்படி மிகவும் ஜொலிக்கும் அக்கினியை யாசரிக்கும் புருஷனுக்கு சீதமும் பயமும் அந்தகாரமும் நசித்துப்போகிறதோ, அது போல சாதுவை ஆசரிக்கும் புருஷனுக்கு கருமாதிகளில் ஆலசியமும் சமுசார பயமும் அக்கியானமும் நசித்துப்போகும். கோரமான சமுசார சமுத்திரத்தில் ஆழ்கிறவர்களுக்கும் பிரம்ம வித்துக்களாயும் சாந்தர்களாயுமிருக்கிற சத்புருஷர்கள் கரையேற்றிவிக்குமவர்க ளாவார்கள். பிராணிகளுக்கு அன்னமே சீவனமாயிருப்பது போல ஆபத்தை யடைந்த பேர்களுக்கு நானே இரக்ஷகனாகிறேன். மனிதர்களுக்கு தர்மமே பரலோக சாதனமான தனமாகா நிற்கிறது. சத்புருஷர்கள் சமுசாரத்தில் நின்றும் பயப்படுகிறவர்களுக்குச் சரணமாகிறார்கள். சத்புருஷர்கள் தம்மை யடுத்தவர்களுக்குச் சகுண நிர்க்குண ஞானமாகிற கண்ணைக் கொடுக்கிறார்கள். சத்புருஷர்களே பந்துக்கள். உத்தவரே! பிற்பாடு அந்தப் புரூரவசு இந்தப் பிரகாரம் ஊர்வசியினுடைய தரிசனத்திலே இச்சை யில்லாதவனாய் பரமாத்துமாவி னிடத்திலேயே சித்தத்தை யுடையவனாய் இந்தப் பூமியில் சஞ்சரித்துக்கொண்டிருந்தான்.

## இருபத்தொன்றாவது அத்தியாயம்

ஸ்ரீ பகவான் உத்தவருக்கு பகவதாராதனக் கிரமம் சொன்னது.

மஹாப்பிரபுவாகிய ஸ்ரீ யாதவசிரேஷ்டரே! ஸ்ரீ பகவானாகிய தம்மை எவ்விதம் பக்தர்கள் ஆராதிப்பார்களோ அந்தக் கிரமத்தை அடியேன் உய்யும்பொருட்டு சொல்லியருள வேண்டுமென்று உத்தவர் பிரார்த்திக்க, ஸ்ரீ பகவான் உரைக்கின்றார்:

உத்தவரே! கிரந்த ரூபமாயும் அனுஷ்டான ரூபமாயும் இருக்கிற எனது பூஜாவிதிக்கு அந்தமில்லை. ஆனாலும் சங்க்ஷேபமாகச் சொல்லுகிறேன். எனது பூஜை வைதீகம், தாந்திரீகப், மீசரம், என மூன்றுவிதமாக விருக்கும். இம் மூவித பூஜைகளில் எது இஷ்டமாயிருக்கிறதோ, அந்த பூஜாவிதியினால் என்னை ஒருவன் ஆராதிக்கக்கடவன். பிராம்மணன்-க்ஷத்ரியன்-வைசியன்-ஆகியவர்கள் என்னை எவ்விதம் ஆராதிக்கவேணுமோ அந்தக் கிரமத்தைச் சொல்லுகிறேன். பிரதிமைகளிலும்-பூமியிலும்-அக்கினியிலும்-சூரியனிடத்திலும்-ஜலத்திலும்-இருதயத்திலும்-பிராமணனிடத்திலும் புருஷன் பக்தியுடையவனாய் பரமாத்துமாவான என்னை ஆராதிக்கக் கடவன். புருஷன் ஆராதனத்துக்குப் பூர்வமே தந்ததாவனம் பண்ணிக்கொண்டு தேகசுத்தியின் பொருட்டு ஸ்நானம் பண்ணக்கடவன். அந்த ஸ்நானம் பண்ணும் போது வைதீக மந்திரங்களாலேயும் சாந்திரக மந்திரங்களாலேயும் மிருத்திகா ஸ்நான முதலானதைப் பண்ணக்கடவன். பிற்பாடு வேதத்தினால் சொல்லப்படும் சந்தியாவந்தன முதலான விகித கர்மங்களோடு என்னை ஆராதிக்கக்கடவன். பகவத் பிரீதியார்த்தமாகச் சங்கல்பத்தை யுடையவனாய் கர்மங்களைப்பண்ணி பகவதற்பணம் செய்யக்கடவன். எனது ஆவிற்பாவத்துக்கு ஸ்தானமான பிரதிமை, சிலை, தாரு, சுவர்ணாதி லோகம், புஷ்பமாலை-மிருத்து-சந்தனம்-இந்த ரூபமாயும், சித்திரரூபமாயும், மணலினாற் பண்ணப்பட்டதாயும், இருதயத்தில், மனோமயமாயும், ரத்தினமயமாயும், இருக்கும் இந்த எட்டுவிதமான ரூபங்கள் சலமென்றும் அசலமென்றும், இரண்டு விதமாயிருக்கும்.

அசலமான பிரதிமையில் எனது ஆராதனத்தில் நித்தியமாய் ஆவாகன விசற்சனங்களில்லை. சலமாயிருக்கிற பிரதிமைகளிலே சாளிக்கிராமத்தில் ஆவாகன விசற்சனங்க

ளில்லே. மற்ற பிரதிமைகளிலே நித்தியமாய் ஆவாகன விசர்சனங்களைச் செய்யலாம். ஒருக்கால் ஆவாகனம் பண்ணி விசர்சனங்கள் செய்யாமல் பூஜையுஞ் செய்யலாம். மிருத்து ரூபப்பிரதிமை திலோப்பிரதிமை இந்த இரண்டும் தவிர மற்றப்பிரதிமையிலே திருமஞ்சனம் பண்ணிவைக்கக்கடவன். இந்த இரண்டு பிரதிமையிலோவென்றால் அஸ்தத்தினாலே பரிசோதனம் பண்ணக்கடவன். பலத்திலே இச்சையை யுடைய புருஷன் சந்தன புஷ்ப முதலிய திரவியங்களால் ஆராதனம்செய்யக்கடவன். நிஷ்காமன் கந்தபுஷ்பாதிகள் லபியாமற்போனால் மனதினாலேயே பாவனைசெய்து ஆராதிக்கக்கடவன். இருதயத்திலேயே என்னை ஆராதிக்கிற புருஷன் மனதினாலேயே கந்தபுஷ்பாதிகளை கற்பித்துக்கொண்டு ஆராதிக்கக்கடவன். எனது பிரதிமைகளிலே ஸ்நான அலங்கார முதலான வுபசாரம் செய்யத்தக்கது. பூமியிலென்னை யாராதனம் செய்யும்போது அந்தந்த ஸ்தானங்களிலே பிரதான தேவதை பரிவார தேவதைகளையும் அந்தந்த மந்திரங்களால் ஆராதிக்கிறது உத்தமம். அக்கினியிலே ஆச்சியத்தினால் நனைக்கப்பட்ட அவலை ஓமம்பண்ணி ஆராதனம் செய்வது உத்தமம். சூரியனிடத்தில் ஸ்தோத்திரம் அர்க்கியப்பிரதான முதலான ஆராதனம் உத்தமம். ஜலத்தில் தர்ப்பண முதலானவைகளாலே ஆராதனம் உத்தமம். எனது பக்தனாலே சிரத்தையுடனே கொடுக்கப்பட்ட தீர்த்தமும் எனக்கு மிகவும் இஷ்டமாகும். கந்த புஷ்ப தூபதீப நைவேத்தியங்கள் எனக்கு இஷ்டமென்கிறதற்குக் கேட்கவேண்டிய தென்ன? புருஷன் ஸ்நானம்செய்து சுசியாய் பூர்வமே கந்த புஷ்ப முதலான பூஜா திரவியங்களைச் சம்பாதித்துக் கொண்டவனாய் தர்ப்பைகளால் ஆசனம் பண்ணி அதின்மீது கிழக்கு முகமாயாகிலும் வடக்கு முகமாயாகிலும் ஸ்திரமான பிரதிமையிலே எதிர்முகமாயிருந்துகொண்டு என்னை யாராதிக்கக்கடவன்.

பிற்பாடு ஆசாரியர் முதலானபோர்களைப் பிரணாமம் பண்ணி தனக்கு உபதேசமானபடி மந்திரங்களால் அங்கன்னியாச கரன்னியாசங்களை யுடையவனாய் மூலமந்திர நியாசத்தை யுடையதான பிரதிமையை அஸ்தத்தினால் ஸ்பரிசித்துக் கந்த புஷ்ப முதலான நிர்மாலியங்களை விசர்சனம்பண்ணி திருமஞ்சன தீர்த்தத்தை யுடைய கலசத்தையும் புரோக்ஷண பாத்திரத்தையும் கந்த புஷ்பாதிகளால் அலங்கரிக்கக்கடவன். பிற்பாடு அந்த புரோக்ஷண பாத்திரத்திலுள்ள தீர்த்தங்களால் திருவாராதனம் பண்ணுகிற ஸ்தலத்தையும், கந்த

புஷ்ப முதலான திரவியங்களையும் தன்னையும் புரோக்ஷித்துக் கொண்டு அர்க்கியபாத்திரம் ஆசமனியபாத்திரம் பாத்திய பாத்திரம் இவைகளைத் திருமஞ்சன தீர்த்தத்தினாலே பூரித்து பாத்திய பாத்திரத்திலே சாமை அறுகு விஷ்ணு கிராந்தம் இதுகளால் அலங்கரிக்கக் கடவன். அர்க்கிய பாத்திரத்திலே கந்தம்-புஷ்பம்-அக்ஷதை-நவதானியம்-குசாக்கிரகம்-திலகம்-கடுகு-அறுகு இந்த எட்டுவித திரவியங்களாலும் அலங்கரிக்கக்கடவன். ஆசமனிய பாத்திரத்தில் சாதிக்காய்-லவங்கம்-ஏலம்-இவைகளால் மீசுரம் பண்ணக்கடவன். பாத்தியம் அர்க்கியம் ஆசமனியம் இந்த மூன்று பாத்திரங்களையும் கிரமமாக இருதயம்-சிரசு-சிதை-இந்த மந்திரங்களாலேயும், காயத்திரியினாலேயும், மந்திரிக்கக்கடவன். பிற்பாடு கோஷ்டத்திலே யிருக்கும் வாயுவினாலே சோஷிக்கப்பட்டும், ஆதாரத்திலேயுள்ள அக்கினியினாலே தகிக்கப்பட்டும், மறுபடியும் லலாடத்திலேயுள்ள சந்திரமண்டலத்தினுடைய அமிர்தத்தினாலே நனைக்கப்பட்டும், அமிர்த மயமாயு மிருக்கிற தேகத்திலே இருதய கமலத்திலுள்ள பிரணவத்தினுடைய அம்சமான ஸ்ரீ மந்தாராயண மூர்த்தியைத் தியானம் செய்யக் கடவன். தனது ஆத்துமாவிலே ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை ஆராதித்து பின் பிரதிமைகளிலே ஸ்தாபன முத்திரையினாலே பிரதிஷ்டை பண்ணி அதில் ஆவிற்பவிக்கும் என்னை பரிவார தேவதைகளுடனே பூசிக்கக்கடவன்.

எட்டு தளத்தையுடைய மத்தியிலிருக்கும் கர்ணிகையில் தாதுக்களாலேயும், முக்குணத்துக்கும் மேலே வைக்கப்பட்டிருக்கிற சோமசூரிய அக்கினி மண்டலங்களாலேயும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற பத்மத்தை ஆசனமாகக் கல்பித்து, அந்த ஆசனத்துக்கு அக்கினியாதி நான்கு கோணங்களிலேயுமிருக்கிற நான்கு பாதங்களிலேயும் தர்மம்-ஞானம்-வைராக்கியம் ஐஸ்வரியம் இந்த நான்குகளாலேயும் நியாசம் பண்ணி கிழக்கு முதலான திக்குகளிலே அர்த்தம்-அக்கியானம்-அவைராக்கியம்-அனைசுவரியம் இவைகளைப் பாதங்களாக நியாசம்பண்ணி, மத்தியத்திலே திரிகுணங்களை நியாசம்பண்ணி, அதில் கிழக்கு முதலாக எட்டு திக்குகளிலேயும், மத்தியத்திலேயும், விமலா - வுத்கருஷ்ணி - கியானா-கிரியா-யோகா - பிரகு - விசத்தியா - யீசானா - அனுக்கிரகா யென்னப்பட்ட இந்த நவசத்திகளாலேயும் நியாசம் பண்ணி இந்தப் பிரகாரமாக எனக்கு ஆசனங் கற்பித்து புத்தி முக்தி சித்தியின்பொருட்டு வைதீகம் தாந்திரிகமுமான இரண்டு மார்க்கங்களாலேயும் என்பொருட்டு பாத்தியம் ஆசமனீயம்

அர்க்கியம் முதலான உபாசனங்களைப் பண்ணக்கடவன். பிற்பாடு சக்கரம்-சங்கு-கதை-கட்கம்-பாணம்-தனுசு-கலப்பை-முசலம் இந்த வெட்டு ஆயுதங்களை எட்டு திக்குகளிலேயும் கவுஸ்துவாபரணத்தையும் ஸ்ரீ வச்சத்தையும் மார்பிலேயும் வைத்து பூசிக்கக்கடவன். நந்தா-சுனந்தா-பிரசண்டா-சண்டா-காபாலா-பலா-குமுதா-குமுதக்ஷ்ணு இந்த எட்டு பேரையும் எட்டுத் திக்குகளிலேயும் கருடாழ்வாரை எதிரேயும் பூஜிக்கக்கடவன். துர்க்கை-விநாயகர்-வியாசர்-விஸ்வக்சேனர்-இவர்களைக்கோணங்களிலேயும், பாகவதர்களைப் பின்பக்கத்திலேயும், இந்திராதி லோக பாலர்களை அந்தந்த ஸ்தானங்களில் எனக்கு அபிமுகமாக ஸ்தாபித்து புரோக்ஷணுதிகளால் பூஜிக்கக்கடவன்.

விபவமுண்டாயிருந்தால் சந்தனம்-வெட்டிவேர்-கர்ப்பூரம்-குங்குமப்பூ-அகில்-கந்தம்-இவைகளால் வர்ச்சிக்கப்பட்ட தீர்த்தங்களால் நித்தியம் மந்திரங்களாலே எனக்குத் திருமஞ்சனம் பண்ணக்கடவன். எனது பக்தன் வஸ்திரம் எக்கியோபவீதம் ஆபரணங்கள் பத்திரங்கள் கந்த புஷ்பாதிகள் இவைகளாலே மிக பிரீதியுடன் அலங்காரம் பண்ணக்கடவன். கூடுமானுல் சர்க்கரைப் பொங்கல்-பாயசம்-நெய்-திருப்பணியாரங்கள்-அதிரசம்-மோதகம் பருப்பு-தயிர் முதலானவைகளோடு வெகு ஜனங்களுடனே நைவேத்தியம் சமர்பிக்கக்கடவன். எண்ணெய்க்காப்பு-பஞ்சாமிர்தங்களாலே திருமஞ்சனம்-நர்த்தனம்-கீதவாத்தியம் இவைகளை ஏகாதசி முதலான பருவகாலங்களிலாவது கூடுமானுல் நித்தியமாகவாவது சேர்க்கக்கடவன். அக்கினியில் எதாசாஸ்திரமாக ஓமம்பண்ணி அஷ்டாக்ஷரத்தினுலேயும், புருஷ சூக்தத்தினுலேயும், மந்திரங்கள் சொல்லி, அக்கினி மத்தியிலுள்ள பகவானைப் பூஜித்து பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து, பிற்பாடு ஸ்ரீ பகவானுடைய எதிரேயிருந்துகொண்டு அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜபித்து ஸ்ரீ பகவானுக்கு ஆசமனஞ் செய்வித்து விஸ்வக்சேனரின் பொருட்டு ஸ்ரீ பகவன் நிவேதனத்தைச் சமர்ப்பித்து பின் தான் பிறருடன் புசிக்கக் கடவன். ஸ்ரீ பகவானுக்கு சமர்ப்பித்த தாம்பூலத்தை தரித்துக்கொண்ட பின் பகவத் நாம சங்கீர்த்தனம், ஹரிகதா காலட்க்ஷேபங்கள் முதலியவும் எனது பக்திக் கடுத்தது.

பிற்பாடு சாத்திக்களைந்த திருத்துழாய் முதலானதை என்னுலே கொடுக்கப் பட்டதாக வெண்ணி சிரசாய்த் தரித்துக்கொள்ளக் கடவன். விக்கிரகத்திலே பிரதிஷ்டை செய்த

என்னை தனது இருதய கமலத்திலிருக்கிறதாய் தியானம் பண்ணக்கடவன். சாமர்த்திய புருஷன் எனது அர்ச்சாவதார விக்கிரகத்தைப் பிரதிஷ்டைசெய்து பிராகார மகா மண்டப முதலானதுகளைத் திடமாகப் பண்ணிவிக்கக் கடவன். மிகவும் மனோகரமான புஷ்ப வனங்களையும் அமைக்கக்கடவன். நாள்தோறும் பூஜை மகோற்சவம் பஞ்சபர்வங்கள் வசந்தாதியுற்சவம் இவைகள் சந்ததமாக நடக்கிறதின்பொருட்டு க்ஷேத்திரங்கள் கடைத்தெருவுகள் பட்டணங்கள் கிராமங்கள் இவைகளைக் கொடுத்துதவுகிற பக்தன் எனது சாரூப்பியத்தையே யடைவன். நிஷ்காமனாய் என்னை பூஜிக்கின்றவன் என் சாரூப்பியத்தையே யடைவன். தேவர்களுக்குத் தன்னால் கொடுக்கப்பட்ட விருத்தியை அபகரிக்கிற புருஷன் அநேக கோடிவருஷம் அமேத்தியத்தை புசிக்கிற புழுவாய்ப் பிறப்பன். எனது அர்ச்சாவிக்கிரக பிரதிஷ்டை முதலானவைகளை செய்கிறவன், அதற்கு சகாயமாயிருக்கிறவன், அந்த தர்மத்தை பிரேரேபிக்கிறவன், அந்த தர்மத்தினால் சந்தோஷப்படுகிறவன், அந்த தர்மத்தில் சமபாகிகளாயிருக்கிற இந்த நான்கு பேர்களும் பரலோகத்தில் அந்த தர்மத்தினுடைய பலனை அனுபவிப்பார்கள்.



## இருபத்திரண்டாவது அத்தியாயம்



ஸ்ரீ பகவான் உத்தவருக்கு ஞானயோகம் சொன்னது.

வாரீர் உத்தவரே! பிரபஞ்சம் பிரகிருதி புருஷர்களால் வியாபிக்கப் பட்டிருப்பதால் இதரர்களுடைய சுபாவ கர்மங்களைச் சிலாகிக்காமலும் நிந்தியாமலு மிருக்கக்கடவன். சுபாவகர்மங்களைச் சிலாகிப்பதும் தூஷிப்பதும் அசத்தான தேகத்தில் அபிமானப்பட்டதற் கடையாள மாதலால் அந்த கார்யங்கள் செய்பவன் சீக்கிரமாகப் பிரஷ்டனாய் விடுவன். தேக முதலானவை புருஷனுக்கு முக்தியை யடைகிற பரியந்தம் பயத்தையே கொடுக்கும். ஸ்ரீ ஹரியானவர் தம்முடைய ஆத்துமாவை விசுவமாகச் சிருஷ்டிக்குட்படுத்தி சிருஷ்டிக்கப் பட்டவராயு மிருக்கிறார். ரக்ஷிப்பவராயும் ரக்ஷிக்கப்பட்டவராயு மிருக்கிறார். உபசங்காரம் செய்தும் உபசங்கரிக்கப் பட்டவராயுமிருக்கிறார். ஆகையால் பரமாத்துமாவைத் தவிர மற்றொரு வஸ்து இல்லை. காணப்படும் அதியாத்துமம் அதிதெய்வம் அதிபூதமெனும் மூவித சுவரூபத்தை யுடைய இந்

தப் பிரபஞ்சம் அசத்தேயாகும். ஆத்துமாவைக் காட்டிலும் வேறென்றுமில்லை. இந்தலோகத்தில் பிரத்தியக்ஷத்தினலும், அனுமானத்தினலும், வேதத்தினலும், அனுபவத்தினலும் உற்பத்தி நாசத்தை யுடையதாய் எந்த வஸ்து அறியப்பட்டிருக்கிறதோ அந்த வஸ்து அசத்தென்றறிந்து அதில் ஆசக்தியில்லாதவனய் சஞ்சரிக்கக் கடவனென்று சொல்லும் ஸ்ரீ பகவானைப் பார்த்து ஸ்ரீ உத்தவர் சொல்லுகிருர் :

ஈசனே! ஆத்துமாவானவன் பார்த்துக்கொண்டிருக்கிறவனும் சுயம்பிரகாசனுமிருக்கிறவனன்ரே? தேகமானது ஜடமாயும் பார்க்கப்படுகிற தாயுமிருக்கிறதன்ரே? சம்சாரம் இவர்களிருவருக்கும் சம்பவியாதன்ரே? அப்படிப்பட்ட இந்தச் சம்சாரமானது எவனுக்குண்டாயிருக்கிறது? என்று வினவும் உத்தவரைப் பார்த்து ஸ்ரீ பகவான் சொல்லுகிருர் : உத்தவரே! ஆத்துமாவுக்குத் தேகம் இந்திரியங்கள் பிராணன் இவைகளோடு சம்பந்தமானது எந்தமட்டுக்கும் உண்டாயிருக்கிறதோ அந்தமட்டுக்கும் எதார்த்தமா யில்லாமலிருந்தாலும் சம்சாரம் அஞ்ஞான புருஷனுக் குண்டாகிறது. தேகாதி சம்பந்த சுவரூபமான அகங்காரத்துக்கே சோகமும்-சந்தோஷமும் - பயமும்-கோபமும்,- லோபமும் - மோகமும்-ஆசை முதலானவைகளும் ஜனன-மரணங்களுங் காணப்படுகின்றன. ஆத்துமாவுக்கு இவைகளொன்றுமில்லை. மனம் - வாக்கு - பிராணன் - சரீரம் இவைகளில் அகங்காரத்தை யுடையவனை ஜீவாத்துமாவானவன் அஞ்ஞானத்தினல் வெகு ரூபங்களால் பிரகாசிக்கப்பட்டும் நிஷ்காரணமாயு மிருக்கிற இந்தச் சம்சாரத்தை ஆசாரிய வுபாசனையினல் மிகவும் தீக்ஷணமா யிருக்கிற ஞானமாகிற கத்தியினல் சேதித்துவிட்டு பரமாத்துமானுபவத்தை யுடையவனய் ஆசையில்லாதவனய் சஞ்சரித்துக் கொண்டிருக்கக் கடவன். இந்தப் பிரபஞ்சத்துக்குக் காரணமான நானே மனுஷ்யாதி நானுவித சப்தங்களாலே விவகரிக்கப் படுகிறேன். என்னைக்காட்டிலும் வேருகப் பிரபஞ்சமானதில்லை.

உத்தவரே! சாக்ரம்-சொர்ப்பனம் - சுழுப்தி எனும் மூன்றவஸ்தைகளை யுடையதான மனதுக்குக் காரணமாகிய சத்வாதி மூன்று குணமும், அத்தியாத்துமம்-அதிபூதம்-அதிதெய்வம் இவைகளை யுள்ளதான இந்தச் ஜகத்தானது நித்திய ஞான சுவரூபனை எந்த பரமாத்துமாவினல் பிரகாசிக்கப் படுகிறதோ அந்தப் பரமாத்துமாவே சத்தியமாகிருர்.' மண்

ணினுலான ஒரு பாத்ரம் மண்ணுகவே யிருப்பதுபோல் பரமாத்துமாவினுல் ஆகிய ஜகத்தும் பரமாத்ம சொரூபமே யாகின்றது. அந்தப் பரமாத்துமாவோ வென்ருல் ஒன்றினுலே சிருஷ்டிக்கப் படாததாய்த் தானே சித்தியாகி சுவயம் பிரகாசமாயும் நிற்கிறது. ஆகையினுல் அந்தப் பரபிரம்மமே இந்திரியங்கள் - ரூபாதிவிஷயங்கள் - மனம் - பஞ்ச பூதங்கள் இந்த ரூபமாக விசித்திரத்துடன் விளங்குகிறது. இந்தப் பிரகாரம் பிரகாசமாகப் பரமாத்தும ஞானத்திற்கு காரணங்களான வேதங்களாலே தேகாதிகள் பரமாத்துமாவன்றென்று நிஷேதிக்கும் ஆசாரியனுலே பரமாத்தும விஷயமான சந்தேகத்தைச் சேதித்துவிட்டுப் பரமாத்மானுபவானந்தத்தினுலே சந்துஷ்டனுகி இந்திரியாதிகளில் நின்றும் ஒழியக்கடவன்.

திடமான பக்தியோகத்தினுல் மனதுக்குப் பாப ஏதுவான விஷயங்களில் பிரீதி எப்போது தள்ளப்படுகிறதோ அதுவரை மாயையினுலான அந்த விஷயங்களில் ஆசக்தியானது வற்சிக்கத்தக்கது. எப்படியானுல் நன்ருய் சிகிச்சை பண்ணப்படாமலிருக்கிற வியாதியானது மனுஷியர்களுக்கு அடிக்கடி உண்டாகாநின்று பீடியாநிற்கிறதோ அப்படிப் போல வர்ச்சிக்கப்படாமலிருக்கிற ராகத்துவேஷாதிகளையும் அதற்கு மூலமான கர்மங்களையும் மிகவும் பிரயாசமான யோகமார்க்கத்தை யுடைய புருஷர்கள் தேவர்களாலே ஏவப்பட்டு புத்திர தாராதி ரூபமாயிருக்கிற விக்கினங்களால் மிகவும் அடிக்கப்படுவார்கள். ஆனுலுமவர்கள் ஜன்மாந்திரத்தில் மறுபடியும் பூர்வ ஜன்மத்தில் செய்த அப்பியாச பலத்தினுல் யோகமார்க்கத்தையே ஆசரிப்பார்களே யல்லாமல் கர்ம மார்க்கத்தை ஆசரியார்கள். புருஷன் கர்மங்களை மரணபரியந்தஞ் செய்கிருன். அந்த கர்மவிசேஷத்தினுல் ஏவப்பட்டவனுய் செய்துகொண்டிருக்கிருன். வித்துவானே தேகத்தை யுடையவனுயிருந்து கர்மத்தைச் செய்துகொண்டிருந்தாலும் பரமாத்துமானுபவானந்தத்தினுலே இச்சையில்லாதவனுய் அந்தக் கர்மத்திலே ஆசக்தியில்லாதவனுய் இருப்பன். பரமாத்துமாவினிடத்திலேயே அசஞ்சலமான புத்தியையுடைய ஞானி நின்றுகொண்டிருந்தாலும், உட்கார்ந்திருந்தாலும், நடந்துகொண்டிருந்தாலும் இன்னும் எவ்வித கார்யங்களை செய்துகொண்டிருந்தாலும் இப்படிக்கிருக்கும் தேகத்தையும் அறியாமலிருப்பன். ஞானியானவன் பார்ப்பன். பார்த்தாலும் நானுவிதமாக காணப்படுகிறபடியினுல் சொர்ப்பனம்போல அசத்தாக நிற்கிறதென்று அனு

மானத்திஞல் தள்ளப்படாநின்ற ஆத்துமாவைத்தவிர மற்ற வஸ்துக்களை வஸ்துவாக நினையான். எப்படியாஞல் நித்திரை பண்ணுகிற புருஷஞனவன் நித்திரைதெளிந்தெழுந்திருந்து சொர்ப்பனத்திற் காணப்படாநின்றும் தானே மறைந்து போகாநின்று மிருக்கிற விஷயங்களை அசத்தாக எண்ணுகிருனே அதுபோல ஞானி ஆத்துமாவைக் காட்டிலும் வேருயிருக்கிற வஸ்துவை அசத்தாக எண்ணுகிருன்.

இந்த ஆத்துமா சுயம்பிரகாசனுயும், ஜன்மரகிதனுயும், நிர்விசேஷனுயும், தேசகாலங்களால் அளவிடக் கூடாதவனுயும், சகலபிராணிகளுக்கும் அந்தரியாமியாயும், பரிபூரணராயும், ஒருவராயும், விகாரசூனியராயும், வாக்குகளுக்கு எட்டாதவராயும் இருக்கிருர். யோகாப்பியாசம் நன்ருகப் பிடிபடாமலிருக்கிற யோகிக்குத் தேகம் மத்தியிலே ரோக முதலானவைகளால் பீடிக்கப்பட்டால் அப்போது சூரியன் - சந்திரன் - அக்கினி இவர்களைச் சகிக்கிறவனுய் தாபசயித்தியாதிகளையும், பிராணதாரணையோடே கூடிக்கொண்டிருக்கிற ஸ்திர ஆசனங்களாலே சிறிது வாதரோக முதலானதுகளையும், தபசு - மந்திரம் - ஔஷதம் இவைகளால் பாபக்கிரகம் சர்ப்பமுத லானதுகளையும், எனது தியானத்திஞல் காமக் குரோதாதிகளையும் யோகேஸ்வரர்களுடைய அனுவிர்த்தியிஞல் டம்ப முதலானவைகளையுஞ் ஜயிக்கக் கடவன். சிலர் ஆயுளையும் யௌவனத்தையும் அதிகப்படுத்தவும் ரோக முதலிய வைகளினின்றும் விடுபடவும் இந்த யோகசாதனைகளால் முயல்வார்கள். அதை ஞானிகள் வெறுக்கக்கடவர். இந்த யோகமார்க்கத்தை கிரமமாக அனுஷ்டானம் செய்து என்னையே ஆசரிக்கும் நிஷ்காமனும் ஆத்துமசுகானுபவத்தை யுடையவனுயுமிருக்கிற யோகி விக்கினங்களாலே கெடுக்கப்படாமலே எனது சுவரூபத்தை யடைகுவன்.

## இருபத்திமூன்ருவது அத்தியாயம்



ஸ்ரீ பகவான் உத்தவருக்கு யோகமார்க்க உபாயத்தைச் சொன்னது.

பகவானே ! வசப்படாத மனதையுடைய புருஷனுக்கு உம்மால் சொல்லப்பட்ட இந்த யோகமார்க்கம் மிக பிரயாசத்தினுலேயும் அனுஷ்டிக்க முடியாதென்று எண்ணுகிறேன். ஆகையினுல் புருஷன் பிரயாசமின்றி யோகத்தில் எப்படி சித்தியடைவனே அதைச் சொல்லும்படி உத்தவர் பிரார்த்திக்க, ஸ்ரீ பகவான் சொல்லலாயினர்.

உத்தவரே ! எந்த தர்மங்களை அனுஷ்டிப்பதால் ஜயிக்கக் கூடாததான மிருத்தியுவை ஜயிக்கமுடியுமோ அதைச் சொல்லுகிறேன். புருஷன் என்னையே தியானஞ்செய்து கொண்டு என்னிடத்தில் சமர்ப்பிக்கப்பட்ட மனது புத்தி இவைகளை யுடையவனுய் எனது தர்மங்களிலேயே ஆசை யுடையவனுய் சமஸ்த சுவதர்மங்களையும் சாவகாசமாய் அனுஷ்டிக்கக் கடவன். நிர்மலமான சித்தத்தையுடைய புருஷன் என்னையே ஆகாசம்போல் சமஸ்த பிராணிகளிலேயும் தனது ஆத்துமாவிலேயும் அந்தரியாமியாயும் உள்ளும் வெளியும் பரிபூரணனுயு மிருக்கிற பரமாத்துமாவாகப் பார்க்கக்கடவன். இந்தப் பிரகாரம் சமஸ்த பிராணிகளையும் எனது சுவரூபமாகப் பார்த்து பூஜிக்கும் பரிசுத்தமான ஞானநிஷ்டையை ஆஸ்ரயித்த புருஷன் ஞானியென்று சொல்லப்படுவன். பிராமணனிடத்திலும்-சண்டாளனிடத்திலும் சூரியனிடத்திலும்-நெருப்புப் பொரியிலேயும்-குரூரவனிடத்திலும்-சாந்தனிடத்திலேயும்-சமபுத்தியா யிருக்கிறவன் பண்டிதனென்று சொல்லப்படுவன்.

இவ்விதம் ஒழுகும் புருஷனுக்குச் சீக்கிரமாக கலகம்-அசூயை - அவமானம் - அகங்காரம் இவைகள் நசித்துப் போகும். உயர்ந்தவர்களையும் மிக தாழ்ந்தவர்களையும் நாய்-சண்டாளன்-பசு-கழுதை இவர்கள் முதல் சமஸ்த பிராணிகளையும் பரமாத்தும சொரூபரென்றே எண்ணி பூஜிக்கக் கடவன். எந்த மட்டுக்கும் சமஸ்த பிராணிகளிலேயும் பரமாத்துமாவான நான் அந்தரியாமியா யிருக்கிறேனென்கிற புத்தியுண்டாகாம லிருக்கிறதோ அந்தமட்டுக்கும் மனே வாக்குக் காயங்களா லுபாசனை அவசியமாயிருக்கும். சமஸ்த

பிராணிகளையும் பரமாத்துமாவாக அறிவதால் உண்டாகும் ஞானத்தினுல் சமஸ்தமும் பரப்பிரம்ம சுவரூபமாகவே அறியப்படும். இப்படி சகல பொருள்களிலும் ஈஸ்வரனை காண்பவன் கர்மபந்தத்தில் நின்றும் விடுபட்டவனுய் சமஸ்த கர்மங்களில் நின்றும் ஒழியக்கடவன். இந்தத் தர்மம் நிற்குண மென்னப்படும். புருஷன் இயற்றும் தர்மங்கள் பரமாத்துமா வான என்னிடத்திலே பலவிச்சை யில்லாமல் சமர்ப்பிக்கப் பட்டால் அது உத்தம தர்மமாகும், சத்திய சொரூபனுயும், சுகசொரூபனுயு மிருக்கிற என்னை அசத்தாயும் அனித்திய மாயு மிருக்கிற மனுஷிய தேகத்தினுலே இந்த மனுஷிய ஜன்மத்தில் உபாசிக்கிறது புத்தியுடைய பேர்களுக்கு புத்தி யாகவும், விவேகத்தை யுடையவர்களுக்கு விவேகமாகவும் இருக்கிறது.

உத்தவரே! தாம் கோறிய சகல விஷயங்களும் சுறுக்க மாக உமக்கு சொல்லப்பட்டது. இந்த ரகஸ்யங்களை யறிந்த புருஷன் ஒரு சமுசயமு மில்லாதவனுய் கர்மபந்தத்தில் நின்றும் விடுபடுவன். நம் இருவர்க்கும் பிரஸ்ன-உத்தர ரூபமான இந்த தத்வங்களை நிதம் எந்த புருஷன் பாராய ணம் பண்ணுகிருனே, எவன் சிரத்தையோடு ஸ்ரவணம் செய்கிருனே, எவன் அடிக்கடி மனனம் செய்கிருனே அவன் பரிசுத்தனுய் எனதிடத்தில் அசஞ்சலமான பக்தியை வகித்து கர்ம பந்தமில்லாமல் முக்தனுவான். இந்தப் பிரம்ம ஞானம் டாம்பிகனுக்கும், நாஸ்திகனுக்கும், வஞ்சகனுக்கும், சிரத்தை யில்லாதவனுக்கும், வணக்க மில்லாதவனுக்கும் உபதேசிக்கத்தக்கதன்று. இந்தத் தோஷங்க ளில்லாதவனு யும், எனது பக்தனுயும், சாதுவாயும், பரிசுத்தமான மனதை யுடையவனுயும் இருக்கிறவனுக்கு உபதேசிக்கத் தக்கது. சிரத்தையுள்ள சூத்திரர்களுக்கும் உபதேசிக்கத்தக்கது. புருஷனுக்கு இந்தப் பிரம்ம ஞானத்தை யறிந்தபின் யறியத் தக்கது வேறு ஒன்றுமில்லை, இதனுல் அடையக்கூடியது அம்ருதம் (மாணமின்மை) ஆதலால் அடையத்தக்க விசேஷமானதும் வேருென்றுமில்லை. மனுஷியர்களுக்கு ஞானத்திலும்-கர்மத்திலும்-யோகத்திலும்-கிருஷி முதலான விருத்தியிலும் தர்மார்த்த காம மோக்ஷமென்னும் நான்கு விதமான புருஷார்த்தமும் நானே யாகிறேன். சமஸ்த கர்மத்தியாகத்தை யுடையவனுய் சரீரத்தையும் என்பொருட்டு சமர்ப்பிக்கிற புருஷன் எனது அனுக்கிரகத்துக்குப் பாத்திர னுகிருன். அதனுல் மோக்ஷத்திற்கு நிச்சயமாக யோக்ய னுகிருன்.

அபிமன்யு புத்ரனே! ஸ்ரீ பகவானால் இவ்வளவும் சொல்லக்கேட்ட ஸ்ரீ உத்தவர் பிரீதியினாலே பரிபூரணமான இருதயத்தை யுடையவராயும் ஆனந்த பாஷ்பங்கள் நிறைந்த நேத்திரத்தை யுடையவராயும் அஞ்சலிபந்தம் பண்ணிக் கொண்டு ஒன்றுஞ் சொல்லாமலிருந்தார். பிறகு சிநேகிதத்தினால் அலைந்துகொண்டிருந்த சித்தத்தை தைர்யத்தினால் நிறுத்தி தன்னைக் கிருதார்த்தனானேனென்று எண்ணிக் கொண்டு சிரசினாலே ஸ்ரீ பகவானுடைய சரணாரவிந்தங்களை ஸ்பரிசித்துக்கொண்டு சாஷ்டாங்கமாகப் பிரணாமம்பண்ணி அஞ்சலிபந்தம் செய்துகொண்டு ஸ்ரீ பகவானைப் பார்த்து உத்தவர் சொல்லுகின்றார் :

பிரமாவுக்கும் ஜனகராகிய ஜகத்கர்த்தாவே! என்னாலே ஆஸ்ரயிக்கப்பட்டிருந்த மோகமாகிற மஹாந்தாகாரமானது உம்முடைய சன்னிதானமாத்திரத்தினாலே ஓடிப்போய் விட்டது. அஞ்ஞானம் விலகி, மெய்ஞ்ஞானம் ஒளிவிட்டு பிரகாசிக்கிறது. உம் அநுக்கிரகத்தைப் பெற்ற எவன்தான் உம்முடைய பாதமூலத்தை விட்டு வேறொன்றைச் சரணமாக அடைவன். எனது பந்துக்களுடைய சினேகபாசமானது உம்மாலேயே ஆத்துமக்கியானமாகிய கத்தியினால் சேதிக்கப் பட்டுப் போயிற்று. மஹா யோகீஸ்வரரே! உமது பொருட்டு பிரணாமம் பண்ணுகிறேன். நான் எப்படி எப்படி இருந்தால் எனக்கு முக்தியிலேயும் உம்முடைய சரணாரவிந்தத்திலும் ஒழியாமலிருக்கிற பக்தியானதுண்டாகுமோ அந்த மார்க்கத்தை சிக்ஷிக்கக் கடவீரென்று ஸ்ரீ உத்தவர் சொல்ல, ஸ்ரீ பகவான் சொல்லுகிறார் :

உத்தவரே! பதரியென்று பெயரையுடைய எனது ஆசிரமத்தையடைந்து, அங்கே ஸ்ரீ பாத தீர்த்தமான அளகநந்தையினுடைய தரிசனத்தினாலே சுசியாய் ஸ்நான ஆசமனங்களாலேயும் சமஸ்த பாபங்களையும் போக்கடித்தவராய் மரவுரிகளைத் தரித்துக் காட்டிலுள்ள கந்தமூலபலங்களைப் பக்ஷித்துக்கொண்டு சுகத்திலிச்சை யில்லாதவராய் சீதோஷ்ண முதலானவைகளைச் சகித்து சதாசார சம்பன்னராய் இந்திரிய நிக்கிரகத்தை யுடையவராயும்-சாந்தராயும்-ஸ்திரமான புத்தியினால் ஞானம் பரமாத்துமானுபவம் இவைகளோடேகூடினவராய் என்னால் உம்பொருட்டு உபதேசிக்கப்பட்ட தத்துவ ஞானத்தைத் தாரணம் பண்ணக்கடவீர். பின்பு சத்துவ-ரஜஸ்-தமோ குணங்களை அதிக்கிரமித்து எனது சாரூப்பியத்தையே யடையப் போகிறீர்.

உத்தவர் ஸ்ரீ கிருஷ்ணரால் இந்தப் பிரகாரஞ் சொல்லப்பட்டவராய் ஸ்ரீ பகவானுடைய திருவடிகளில் மூன்று தரம் பிரதக்ஷணம் பண்ணி சிரசை ஸ்பரிசித்துக்கொண்டு சாஷ்டாங்கமாகப் பிரணாமம்பண்ணி சுகதுக்கங்களில் நின்றும் விடுபட்டவரா யிருந்தாலும் புறப்பட்டுப் போகுஞ் சமயத்தில் இளகும் புத்தியை யுடையவராய் கண்ணீரால் ஸ்ரீ பகவானுடைய திருவடிகளை நனைத்தார். மிகவும் விடக்கூடாததான சிநேகத்தை யுடையவராயும் ஸ்ரீ பகவானை விட்டுப் பிரிய சாமார்த்திய மில்லாதவராய் வியசனத்தை யுடையவராய் ஸ்ரீ பகவானுடைய ஆக்ஞையினாலே அவருடைய திருவடிகளைச் சிரசில் தரித்தும் அடிக்கடி அந்தப் பகவானைச் சாஷ்டாங்கமாகப் பிரணாமம் பண்ணியும் மகா துக்கத்துடன் புறப்பட்டுப் போனார்.

பிற்பாடு மகா பாகவதரான உத்தவர் அந்த பகவானை இருதயத்திலேயே தரித்துக் கொண்டு பதரிகாசிரமத்தை யடைந்தவராய் ஜகத்துகளுக்கு முக்கிய பந்துவான ஸ்ரீ ஹரியினால் உபதேசிக்கப்பட்ட விதமாக ஸ்ரீ பகவானிடத்தில் சித்தத்தைச் சமர்ப்பித்து சமாதியை யடைந்து ஸ்ரீ ஹரியினுடைய வைகுந்தத்தை யடைந்துவிட்டார். யோகேஸ்வரர்களாலே சேவிக்கப்படும் திருவடிகளையுடைய ஸ்ரீ கிருஷ்ணராலே மகா பாகவதரான ஸ்ரீ உத்தவரின் பொருட்டு சொல்லப்படும் பகவத்பக்தி மார்க்கமாகிற ஆனந்த சமுத்திரத்தோடே கூடிக்கொண்டு மிருக்கிற இந்த ஞானாமிர்தத்தை யாதொரு புருஷனானவன் மிகவுஞ் சிரத்தையுடன் சேவிக்கிறானோ அவனுடைய சங்கத்தினால் ஜகமானது முக்தியை யடையும். சகல வேத கர்த்தாவான யாதொரு பகவானானவர் பிரவிர்த்தி மார்க்கம் நிவிர்த்தி மார்க்கம் இவைகளை யுடைய புருஷர்களின் சம்சார பயத்தையும் ரோகாதி பயத்தையும் போக்கடிப்பதற்குப் பிரமமானது புஷ்பசாரத்தைக் கிரகிக்கிறாப்போல வேதாந்த ரூபமான ஞான விஞ்ஞான ரூபமாயும் சிரேஷ்டமாயுமிருக்கிற அமுர்தத்தையும் கிரகித்தாரோ, யாதொரு பகவானானவர் இந்த இரண்டு அமுர்தத்தையும் எதாயோக்கியமாகத் தம்முடைய பக்தர்களை பானம் பண்ணுவித்தாரோ, ஜகத் கர்த்தாவாயும் மகா விஷ்ணுவென்று பெயரையுடையவராயு மிருக்கிற அந்தப் புருஷோத்தமரைச் சாஷ்டாங்கமாகப் பிரணாமம் பண்ணுகிறேன்.

## இருபத்துநான்காவது அத்தியாயம்

மவுசலோபாக்கியானஞ் சொல்லப்படுகின்றது.

ராஜனே! பிற்பாடு ஸ்ரீ கிருஷ்ணபிரான் ஆகாசத்தில் சூரிய பரிவேஷ முதலானவைகளையும், பூமியில் பூ சலன முதலானதுகளையும், திக்குகள் பற்றிக்கொண்டெரிகிறது முதலானவைகளையும் பார்த்து சுதர்மியெனப்பட்ட சபையிலுள்ள யாதவர்களை நோக்கி சொல்லுகிறார் :

யாதவ சிரேஷ்டர்களே! துவாரகையில் மிருத்யு சூசங்களாயும் கோரமாயுமிருக்கிற இந்த மகோற்பாதங்களுண்டாயிருக்கின்றன. நம்முடைய குலத்துக்கு நாசகரமான பிராமண சாபமும் உண்டாயிருக்கிறது. நாம் ஒரு முகூர்த்த காலமாகிலு மிங்கிருக்கக்கூடாது. ஸ்திரீகளும்-பாலர்களும்-விருத்தர்களும் சங்கத் துவாரத்துக்குப் போகட்டும். நாமோ பிரபாச தீர்த்தத்தை அடைவோம். அங்கே சரசுவதி நதியில் ஸ்நானம் பண்ணி பரிசுத்தர்களாய் சித்த சமாதானத்தையுடையவர்களாய், உபவாச மிருந்து, தேவதைகளைத் திருமஞ்சன முதலான சோடச வுபசாரங்களால் பூஜித்து பிராமணர்களைக்கொண்டு சாந்திகளை செய்து மகானுபாவர்களான அந்தப் பிராம்மணர்களையும் நன்றாகப் பூஜிப்போம்.

ராஜனே! ஸ்ரீ கிருஷ்ணனுடைய வார்த்தையைக் கேட்டு சமஸ்த யாதவ வீரர்களும், ஓடங்களால் சமுத்திரத்தைத் தாண்டி ரதங்களால் பிரபாச க்ஷேத்திரம் வந்து சேர்ந்தார்கள். அந்த க்ஷேத்திரத்தில் அவர்கள் ஸ்ரீ பகவானால் ஆக்கியாபிக்கப்பட்டபடி பரமமான பக்தியினால் சிரேயசுகரமான சமஸ்த கர்மங்களையும் செய்தார்கள். பிற்பாடு அந்த க்ஷேத்திரத்தில் தெய்வ கதியினால் விவேக யீனர்களாய் மதுரமான மத்தியத்தைப் பானஞ் செய்தார்கள். விதியின் வழியை அனுசரித்தபடி அவர்களுக்கு அறிவழிந்து அவர்களது சம்பந்தா சம்பந்தங்களையும் மறந்து ஒருவரை யொருவர் விரோதித்து பெரும்போர் செய்தனர். அந்த யுத்தத்தில் பிரத்தியும்னன் சாம்பவனோடும். அக்குரூரன் போசனோடும், அனிருத்தன் சாத்தகியோடும், சுபத்திரன் சங்கிரமசித்தோடும் சுசாருகனோடும், சுமித்திரன் சுரதனோடும், சடன் உல்முகனோடும், தொந்தயுத்தம் செய்தார்கள். இன்னும் மற்றுமுள்ள சகஸ்ரசிது-சதசிது-பானு இவர்கள் முதலான

ஏது வீரர்களும் முகுந்தரால் மோகிக்கப்பட்டவர்களாய் மத்தியபான மதத்தினுல் மிகவும் பலத்தையுடையவர்களாய் ஒருவர்க்கொருவர் தொந்தமாக எதிர்த்து தாசாருகர்கள்-போஜர்கள்-அந்தர்கள்-விருஷ்ணிகள்-சாத்வதர்கள் மாதவர்கள்-அற்புதர்கள்-மாதுரர்கள்-சூரசேனர்கள்-மிதற்சனர்கள்-குகுரர்கள்-குந்தியர்கள்-இவர்களும் சிநேகங்களை விட்டுவிட்டு ஒருத்தருக் கொருத்தர் அடித்துக் கொண்டார்கள்.

இப்படி நெருங்கிய பந்துதவத்தையும் ஸ்நேகத்தையும் கூட கவனிக்காமல் தத்தமது கைகளிலுள்ள அஸ்திர-சஸ்திரங்கள் முறியும்வரை யுத்தஞ்செய்து, பின் அங்கே முசலத்தை காரணமாகக்கொண்டு முளைத்திருந்த கொடுமையான கோரைகளை பிடுங்கிக்கொண்டு அதனுல் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். ஸ்ரீ கிருஷ்ணராலே தகையப்பட்டிருந்தாலும் அந்த ஏதுவீரர்கள் அந்தக் கோறைகளால் அவரையு மடித்தார்கள். பலராமரையும் எதிர்த்தார்கள். பிற்பாடு அந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர்களும் கோபத்தை யுடையவர்கள் போல கோரையை உழலைத்தடியாக உடையவர்களாய் அந்த யுத்தத்தில் சஞ்சரித்தபடி அவர்களை அடித்தார்கள். மூங்கில் ஒன்றுக்கொன்று இழைந்து அதினுலுண்டாகும் அக்கினியானது அந்த வனத்தையெல்லாம் தகித்துபோடுமாப்போல பிராம்மண சாபகாரணமாகவும் பகவத் சங்கல்பத்தை அனுசரித்தும் அந்தக் கோபமானது குலத்தையே நாசஞ்செய்தது. இந்தப் பிரகாரம் தம் சமஸ்த குலங்களும் நாசமடைந்தபின் ஸ்ரீ கேசவர் பூமியினுடைய பாரந் தீர்க்கப்பட்டதென்று எண்ணிக்கொண்டார். பின் பலராமர் அந்தச் சமுத்திரத்திலேயே பரமாத்துமத்தியான ரூபமான யோகத்தை ஆஸ்ரயித்துத் தம் ஆத்துமாவை பரமாத்துமாவிடத்திலே கூட்டிவைத்து, மனுஷிய சரீரத்தை விட்டுவிட்டார். பகவானுன ஸ்ரீ கிருஷ்ணர் பலராமருடைய நிரியாணத்தைப் பார்த்துப் பின் தனது லீலா சரீரத்தையும் விட்டுவிட நினைந்தருளி அசுவத்த விருக்ஷ மூலத்தை யடைந்து பூமியில் மௌனமாயிருந்தார்.

நான்கு புஜங்களுடையதாயும், தனது தேஜசினுல் புகையில்லாத அக்கினியைப்போல திக்குகளைப் பிரகாசஞ்செய்தும், ஸ்ரீ வச்ச சின்னத்தை யுடையதாயும், மேகம்போல் சியாமள வர்ணமாயும், உருக்கின தங்கம்போலொத்த தேஜசை யுடையதான இரண்டு பீதாம்பரத்தினுல் சூழப்பட்

டும், மிகவும் மங்களகரமாயும், மனோகரமான புன்சிரிப்பை யுடையமுகாரவிந்தத்தை யுடையதாயும், கறுத்த முன்னெற்றி மயிர்களாலே அலங்கரிக்கப்பட்டும், வெண்தாமரைப் புஷ்பங் கள்போல அழகிய நேத்திரங்களை யுடையதாயும், பிரகாசியா நின்ற மகர குண்டலங்களை யுடையதாயும், கடிசூத்திரம் எக்கியோபவீதம்-கிரீடம்-கடகம் - தோள்வளைகள் - ஆரம்- சிலம்புகள் இவைகளோடே கூடிக்கொண்டும், கௌஸ்துவா பாணத்தினால் மிகவும் விளங்கா நின்றும், வனமாலையினால் சூழப்பட்ட மார்பையுடையதாயும், பஞ்சாயுதங்களால் சூழப் பட்ட திவ்விய ரூபத்தைத் தரித்துக்கொண்டு அசுவத்த மூலத் தில் செந்தாமரைப் புஷ்பம்போலொத்த வலதுகாலை இடது துடைமேல் வைத்துக்கொண்டிருந்த ஸ்ரீ பகவானது பாத சரோருகம், சேரன் எனும் ஓர் வேடனது கண்களுக்கு ஒரு சிறு மானைப்போல் தோற்ற, அவன் முசலத்தில் மிகுந் திருந்த துண்டால் செய்யப்பட்ட அஸ்திரத்தை வில்லில் தொடுத்து குறிபார்த்து எய்து, அந்த பாணத்தை பின் தொடர்ந்தபடி ஓடிவந்தான். பாபத்தையே செய்யும் அந்த வேடன் தன்னால் அடிப்பட்ட நான்கு புஜங்களையுடையவ ரான அந்த மகா புருஷரைப் பார்த்து மிகவும் பயந்தவனாய் அடியற்ற பனைபோல் பகவானுடைய திருவடிகளில் சாஷ் டாங்கமாக விழுந்து இந்தப் பிரகாரம் பிரார்த்தித்தான்:

ஐயோ! நான் கெட்டேன், கெட்டேன். இனிப்பிழை யேன். பாதகமே புரியும் பாதகனான நான் இந்த மகா கொடிய பாதகத்தில் நின்றும் எப்படி பிழைப்பேன். தேவதேவரே! மதுசூதனரே! தேவரீரென்று அறியாதவனாயும், பாபியாயு மிருக்கிற என்னாலிந்த அபராதமானது பண்ணப்பட்டது. உத்தம சுலோகரே! ஐயோ நான் கண் இருண்டவனாய் உமது பாத மலர்களை மானென அடித்தேனே. பிரபுவே! எனது இந்த அபராதத்தை க்ஷமித்தருள்வதற்கு தாமே யோக்கிய ராகிறீர். ஞானிகள் உம்முடைய ஸ்மரணம் மனுஷியர்களு டைய அஞ்ஞானமாகிற அந்தகாரத்தை நாசம் பண்ணுகிற தாகச் சொல்லுகிறார்கள். பிரபுவே! அப்படிப்பட்ட ஸ்ரீ மகா விஷ்ணுவான உமக்கு என்னாலே மகா அபராதம் செய்யப் பட்டது. வைகுண்டரே! நான் திரும்பவும் இந்தப்பிரகாரம் சத்புருஷர்களுக்கு அக்கிரமத்தைச் செய்யாமலிருக்கும்படி மிருக வைரியாயும் மகா பாபியாயு மிருக்கிற என்னைச் சீக்கிர மாகச் சங்கரிக்கக் கடவீர். யாதொரு தேவரீருடைய சுவா தீனமான மாயாவிலாசத்தைப் பிரம்மாவும் பிரம்ம புத்திரர்க ளான ருத்திரன் முதலான பேர்களும், வேதவித்துக்களான

மற்றுமுள்ள மகானுபாவர்களும் அறியார்களோ? அப்படிப் பட்ட சிந்திக்கக் கூடாததான மாயைக்கு ஆஸ்பயரான தேவரீருக்கும் பிராம்மணர் சாபமென்கிற இதனை உம்முடைய மாய்கையினுலே மோகிதர்களாய் விவேக யீனர்களாயும், பாப ஜன்மத்தை யுடையவர்களாயு மிருக்கிற நாங்கள் என்ன வென்று சொல்லப்போகிறோம். ஆகையினால் மகா அபராதியான என்னைச் சங்சரிக்கக் கடவீரென்று பிரார்த்திக்கும் அந்த வேடனைப் பார்த்து பகவான் சொல்லுகிறார்:

சேரனே! நீ பயப்படவேண்டாம், எழுந்திரு. நடந்தது எனது சங்கல்ப பிரகாரமேயல்லால் உன்னால் ஒன்றும் ஆனதில்லை. நீ ஒரு பாபமும் செய்யவில்லை. புண்யவான்களுக்குரிய சுவர்க்கமடைந்து நீ சுகித்திரு என்று ஸ்வாமி சொல்ல, அந்த வேடன் பகவானை மூன்றுதரம் பிரதக்ஷணம் செய்து பிரணமஞ் செய்துவிட்டு விமானமேறி சுவர்க்கத்தை யடைந்தான். அப்போது தாருகன் பகவானைத் தேடிக் கொண்டு வந்து ஸ்ரீ துளசி கந்தத்தையுடைய வாயுவை ஆக்கிராணம் பண்ணியபடி வந்து அசுவத்த மூலத்தில் சமாதியிலிராநின்றும் ஆத்துமானந்த சுகத்தை யுடையவராயு மிருக்கிற புரபுவான ஸ்ரீ ஹரியைப் பார்த்து ரதத்தில் நின்று மிறங்கி நேத்திரங்களில் பாஷ்பங்களை யுடையவனாய், சிநேகத்தினால் உருகாநின்ற மனதை யுடையவனாய் ஸ்ரீ பகவானுடைய திருவடிகளில் சாஷ்டாங்கமாகப் பிரணமம் பண்ணி "பிரபுவே! தேவரீருடைய சரணாரவிந்தத்தைப் பாராமலிருக்கிற என்னுடைய திருஷ்டி நசித்துப்போயிற்று. தம்மைப் பிரிந்து நான் ஒரு க்ஷணப்போதும் ஜீவிக்கமுடியாது என்று தாருகன் சொல்லிக்கொண்டிருக்கையில், கருடாழ்வாரைச் சின்னமாகவுடைய அந்த ரதமானது குதிரைகள் - துவசம் முதலியவைகளுடன் மகா வேகமாக அந்தச் சாரதி பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஆகாசத்தி லெழும்பிவிட்டது. ஸ்ரீ பகவானுடைய பஞ்சாயுதங்களும் அதைப் பின்தொடர்ந்து சென்றன. அதனைப் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிற அந்தச் சாரதியைப் பார்த்து ஸ்ரீ பகவான் சொல்லுகின்றார்:

எனது பக்தியில் சிறந்த தாருக! நான் சொல்வதை கொஞ்சம் மனமுவந்து கேள். புவியில் பிறந்தவர்களுக்கு முடிவென்பது ஒன்று உண்டல்லவா? அந்த முடிவுகாலம் யாதவர்களுக்கும் எனக்கும் நேர்ந்துவிட்டது. இன்னும் நாம் இங்கே பந்தப்பட்டிருக்க இச்சிப்பது தர்மமல்ல. ஆத

லால் நீ துவாரகா பட்டணத்துக்குப்போய் பந்துக்களுக்கு யாதவர்கள் ஒருத்தருக்கொருத்தர் யுத்தம்பண்ணி அடிபட்டுப் போனதையும், யோகமார்க்கத்தினுல் பலராமர் பரமபதத்தை யடைந்ததையும், நான் இந்த இச்சா சரீரத்தை விட்டு விட்டதையுஞ் சொல்லக்கடவாய். நீங்கள் யாவரும் இனி துவாரகையி லிருக்கவேண்டாம். என்னுல் விடப்பட்ட துவாரகை சமுத்திரத்தில் முழுகிவிடப் போகிறது. ஆகையால் நீங்கள் சமஸ்தமான பேர்களும் அவாளவாள் பந்து ஜனங்களேயும் நம்முடைய மாதாபிதாக்களேயும் அழைத்துக்கொண்டு அர்ச்சுனனுலே ரக்ஷிக்கப்பட்டவர்களாய் இந்திரப்பிரஸ்தத்தைப் போயடையுங்களென்று பந்துக்கள்பொருட்டு சொல்லக்கடவாய். நீயோ எனக்குப் பிரீதிகரமான தர்மத்தை ஆஸ்ரயித்து ஞான நிஷ்டையை யுடையவனுய் ஒன்றிலேயும் அபேக்ஷை யில்லாதவனுய் சாந்தியை யடையக்கடவாய். விருதாவாகத் துக்கிக்கவேண்டாம்.

இந்தப் பிரகாரம் ஸ்ரீ பகவானுற் சொல்லப்பட்டவனுய் அந்தத் தாருகன் அந்தப் பகவானே அடிக்கடி பிரதக்ஷணம் பண்ணி அவருடைய திருவடிகளேத் தன்னுடைய சிரசில் வைத்துக்கொண்டு சாஷ்டாங்கமாகப் பிரணுமம் பண்ணி விசனப்பட்டுக்கொண்டே துவாரகையைக் குறித்துப் புறப்பட்டு வந்தான்.



## இருபத்தைந்தாவது அத்தியாயம்



ஸ்ரீ பகவான் பரமபதப் பிராப்தி யடைந்தது சொல்லப்படுகிறது.

உத்தரன் மருமகனுன பரிக்ஷித்துமகாராஜனே! பிற்பாடு ஸ்ரீ பகவானுள்ள விடத்தில் பிரம்மாவும், பார்வதியோடுகூட ருத்திரனும், தேவேந்திரன் முதலான தேவர்களும், ஜனகாதி யோகீஸ்வரர்களும், மரீசிப் பிரஜாபதி முதலான பேர்களும், பிதுர் தேவர்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், வித்தியாதரர், மகா சர்ப்பங்கள், சாரணர்கள், எக்ஷர்கள், ராக்ஷசர்கள், கின்னரர்கள், அப்ஸர ஸ்திரீகள், மயித்திரேயர் முதலான ரிஷிகள், கருடாழ்வார் முதலான சமஸ்தமான பேர்களும் ஸ்ரீ பகவானுடைய பரமபதப் பிராப்தியைத் தரிசனம் பண்ணவேணுமென்று இச்சையை யுடையவர்களாய் சந்தோஷத்துடன் வந்தார்கள். அந்த பிரம்மா முதலானவர்கள் பரமமான பக்தியை யுடையவர்களாய் ஸ்ரீ பகவானுடைய அவதாரத்தையும், சரித்திரத்தையும், கானம்செய்தும்,

ஸ்தோத்திரம் செய்தும், புஷ்பவருஷங்களை பெய்தார்கள். சகல லோகநாயகரான ஸ்ரீ பகவானும் தம்முடைய அம்சர்களான பிரம்மாதி தேவர்களைப் பார்த்து ஆத்துமாவில் ஆத்துமாவை ஏகப்படுத்தி பத்மதளம்போலொத்த நேத்திரங்களை மூடிக்கொண்டார். ஸ்ரீபகவான் யோகதாரணை தியானம் இவைகளுக்குச் சோபனமான விஷயமாயும் லோகாபிராமமாயு மிருக்கிற திவ்விய மங்கள மூர்த்தியை அக்கினி சுவரூபமான யோகதாரணையினால் தகியாமல் அந்தத் திவ்விய மங்கள மூர்த்தியோடே கூடினவராய் பரமபதத்துக் கெழுந்தருளினார்.

அப்போது சுவர்க்கத்தில் துந்துபி முதலான வாத்தியங்கள் சப்தித்தன. ஆகாசத்தில் நின்றும் புஷ்ப வருஷங்கள் வீழ்ந்தன. சத்தியம் - தர்மம்-தைரியம் - கீர்த்தி - இவைகள் பூமியை விட்டுவிட்டு ஸ்ரீ கிருஷ்ணருடனே போய்விட்டன. அப்போது பிரம்மா முதலான தேவர்கள் முதலியபேர்களும் தம்முடைய தேஜஸிலே பிரவேசித்தும் ஒருத்தராலேயும் அறியப்படாத கதியை யுடையவராயுமிருக்கிற ஸ்ரீ பகவானை எங்கே போனாரோவென்று யோசனை பண்ணுநின்றும் அறிய மாட்டாமற் போனார்கள். பிற்பாடு தம்முடைய பரமபதத்துக்கு எழுந்தருளினா ரென்கிறதையறிந்து மிகவும் ஆச்சரியத்தை யடைந்தார்கள். பிரம்மா ருத்திரன் முதலானபேர்களும் ஸ்ரீ ஹரியினுடைய அந்த யோக கதியைப் பார்த்து மிகவும் ஆச்சர்யத்தை யுடையவர்களாய் அந்தப் பரமபதப் பிராப்தியை மிகவும் ஸ்தோத்திரம் பண்ணி பிற்பாடு அவரவர்களுலகங்களை யடைந்தார்கள்.

சர்வ காரணரான ஸ்ரீ ஹரிக்கு யாதவர்கள் முதலான பேர்களில் அவதாரம் அவதார சமாப்தி இவைகளுடைய லீலையானது மாயையினால் ஆச்சரியமாகச் செய்யப்பட்டதாக அறியக்கடவாய். இந்தப் பகவான் சுவயமாகவே இந்த ஜகத்தைச் சிருட்டித்து, அதற்குள் அந்தரியாமியாகப் பிரவேசித்து அநேக லீலைகளைப்பண்ணி மறுபடியும் அந்தத்தில் தம்மிடத்தில் உபசங்காரம் பண்ணிக்கொண்டு தம்முடைய மகிமையினால் ஆனந்தரூபராய் விளங்கிக்கொண்டிருக்கிறார்.

ராஜனே! பிற்பாடு ஸ்ரீ கிருஷ்ணரை விட்டுப் பிரிந்த தாருகன் துவாரகை வந்தடைந்து வசுதேவர் உக்கிரசேனர் இவர்களுடைய பாதங்களில் விழுந்து சமஸ்த எதுவீரர்களுடைய நாசத்தையுஞ் சொன்னான். அந்த விருத்தாந்தத்தைக் கேட்டு மிகவும் கலங்கிய இருதயத்தை யுடைய

வர்களாய் சமஸ்த ஜனங்களும் சோகமோகங்களை யுடைய வர்களாய் மூர்ச்சை யடைந்து ஸ்ரீ கிருஷ்ணருடைய விரகத்தைச் சகியாதவர்களாய் வேகமாக எவ்விடத்தில் பந்துக்கள் மடிந்து விழுந்திருக்கிறார்களோ அவ்வி டத்திலோடி வந்தார்கள். தேவகீ-ரோகணி-வசுதேவர் இவர் கள் புத்திரர்களான ஸ்ரீ ராம கிருஷ்ணர்களைப் பார்த்தவர்க ளாய் சோகத்தினால் மிகவும் மூர்ச்சை யடைந்தவர்களாய் ஸ்ரீ பகவானுடைய விரகத்தைச் சகிக்கமாட்டாதவர்களாய் தங்கள் பிராணன்களையும் விட்டு விட்டார்கள். உக்கிரசேன னும் ஸ்ரீ பகவானையே தியானம் பண்ணிக்கொண்டு அக்கி னிப் பிரவேசம் பண்ணினார். ஸ்திரீகள் தங்கள் தங்கள் பர்த் தாக்களைக் கட்டிக்கொண்டு அக்கினிப் பிரவேசமானார்கள். பலராமருடைய ஸ்திரீகளும் பர்த்தாவினுடைய தேகத்தைக் கட்டிக்கொண்டு அக்கினிப்பிரவேசம் பண்ணினார்கள். வசுதேவருடைய பத்தினிகளும், ஸ்ரீ கிருஷ்ணதேவரின் குமாரர்களுடைய ஸ்திரீகளும் தங்கள் தங்கள் பர்த்தாவி னுடைய தேகங்களை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு அக்கி னிப் பிரவேசஞ்செய்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணருடைய பத்தி னிகளான ருக்குமணி முதலான பேர்களும் ஸ்ரீ பகவானிடத் திலேயே ஸ்திரமான மனதை யுடையவர்களாய் அக்கினியில் பிரவேசித்தார்கள். அர்ச்சுனன் இஷ்டராயும் சிநேகிதராயு மிருக்கிற ஸ்ரீ கிருஷ்ணருடைய விரகத்தினால் மிகவும் சகிக்க முடியாத விசனத்தையுடையவனாய் பூர்வத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவனால் சொல்லப்பட்ட கீதார்த்தங்களால் தன்னைத்தானே சமாதானம் பண்ணிக்கொண்டான். பிறகு அந்த அர்ச்சுனன் அந்த பந்துக்களுக்குக் கிரமமாய் எதாவிதியாகப் பிண்டப் பிரதான தர்ப்பண முதலான கர்மங்களைச் செய்துவைத்தான். மகானுபாவனே! அந்தக்ஷணத்தில் சமுத்திரம் ஸ்ரீ கிருஷ்ண னுடைய கிரகத்தை விட்டுவிட்டு அவரால் விடப்பட்டிருக் கிற துவாரகா பட்டணம் சமஸ்தத்தையு முழுகப்பண் ணிற்று. ஸ்மரண மாத்திரத்தினால் சமஸ்த பாபங்களையும் போக்கடியா நின்றும் சர்வங்களுக்கும் மங்களரூபராயும் பகவா னுயுமிருக்கிற ஸ்ரீ ஹரியானவர் அந்தக் கிரகத்தில் சாந்நித்தி யம் பண்ணிக்கொண்டிருக்கிறார். பிற்பாடு, அர்ச்சுனன் மிகுந்து நின்ற பாலவிருத்தர்களை யழைத்துக்கொண்டு இந்தி ரப்பிரஸ்தத்தை வந்தடைந்து அவ்விடத்தில் வச்சிரனுக்குப் பட்டாபிஷேகம் பண்ணிவைத்தான்.

ராஜனே! உன்னுடைய பிதாமகர்களான தர்மபுத்ராதி கள் அர்ச்சுனனிடத்தில் நின்றும் பந்துக்களுடைய வதத்

தைக்கேட்டு மகா விசனத்தை யுடையவர்களாய் வங்கிஷோத் தாரகனை உன்னைப் பட்டாபிஷேகம்பண்ணி ஸ்தாபித்து சமஸ்தமான பேர்களும் மகாப்பிரஸ்தானம் போனார்கள்.

ஹே மன்னர் மன்ன! மாதவ புருஷ! யாதொரு புருஷன் பரமமான சிரத்தையுடையவனாய் தேவதேவோத் தமரான ஸ்ரீ ஹரியினுடைய அவதாரத்தையும் சரித்திரங் களையும் கீர்த்தனம் பண்ணுகிறானோ, அந்தப் புருஷன் சகல பாபங்களில் நின்றும் விடுபடுவன்! இந்தப் பிரகாரம் பகவா னான ஸ்ரீ ஹரியினுடைய உத்தம அவதாரங்களையும் பரம மங்களமாயும் இகலோக பரலோகங்களில் சுகப்பிதங்களாயு மிருக்கிற பல சரித்திரங்களையும் கீர்த்தனம் பண்ணுகின்ற மனுஷியன் பரமாம்சர்களுக்கு சரண்ணியரான ஸ்ரீ கிருஷ்ண ரிடத்தில் பரமமான பக்தியைப் பெறுவன்; சமஸ்த பாபங் களினின்றும் விடுபட்டு, ஜனன-மரண துக்க சாகரத்தை தாண்டி ஸ்ரீ கோவிந்தரது பாத சரோருக நிழலில் நித்ய சுகாநந்தப் பரவசனாக மகிழ்ந்து உய்வன்.

ஏகாதச ஸ்கந்தம் - முற்றுப்பெற்றது.



# துவாதச ஸ்கந்தம்

## முதலாவது அத்தியாயம்

ஒன்பதாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்ட ராஜ வம்சங்களின் தொடர்ச்சி சொல்லப்படுகிறது.



ஸ்ரீசுகர் வாக்கியம்

கேளீர் பரிக்ஷித்து மஹாராஜனே! பிரகலாதனுடைய வம்சத்திலுண்டாகப் போகின்ற புரஞ்சயன் என்னும் அரசனை அவனுடைய மந்திரியான சுனகனென்பவன் கொன்றுவிட்டு பிரத்தியோதனனெனும் தன் புத்திரனை அரசுக் குரியவனுக்க போகின்ருன். அந்தப் பிரத்தியோதனுக்குப் பாலகனென்ற புத்திரனுண்டாகி அந்தப் பாலகனுக்கு விசாகயூபமென்றும் அவனுக்கு வாசனனென்றும் அவனுக்கு நந்திவர்த்தனென்றும் புத்ரர்கள் உண்டாகப் போகிருர்கள். பிரத்தியோதன் வம்சத்திற் பிறந்த இந்த ஐந்துபேரும், நூற்றுமுப்பத்தெட்டு வருஷம் பூமியை யனுபவிக்கப் போகின்ருர்கள். அந்த நந்திவர்த்தனனுக்குச் சுகனுகனென்றும், அவனுக்கு காகபான்னனென்றும், அவனுக்கு க்ஷேமவருணனென்றும், அவனுக்கு க்ஷேத்திரக்கியனென்றும், அவனுக்கு விதிந்திரனென்றும், அவனுக்கு அசாதகத்துருவனென்றும், அவனுக்கு துருபதனென்றும், அவனுக்கு அற்பகனென்றும், அவனுக்கு நந்திவர்த்தன ஆசயனென்றும், அவனுக்கு மகாநந்தியென்றும் புத்திரனுண்டாகப் போகின்ருன். சுகனுகன் வம்சத்திற் பிறந்த இந்த பத்து ராஜர்களும் கலியுகத்தில் முந்நூற்றருபது வருடம் பூமியை யனுபவிக்கப் போகின்ருர்கள். பின்பு மகா நந்திக்கு சூத்திர ஸ்திரீயினிடத்தில் பிறக்கும் நந்தனென்பவன் பலவானுயும் க்ஷத்திரியவம்ச நாசகனுயும் மகாபத்மம் என்னப்பட்ட நிதிக்கும் சேனைகளுக்கும் பிரபுவாகி அவன் மகாபத்மனென்கிற பேரையுமுடையவனுகப் போகின்ருன்.

அவனுக்கு பிற்பாடு அரசர்கள் சூத்திரர்களாயும் அதர்மிகளாயு மாகப்போகின்ருர்கள். அந்த மகாபத்மனென்னும்

அரசன் பரசுராமரைப்போல க்ஷத்திரியர்களைச் சங்காரம் பண்ணிக்கொண்டு ஓரிடத்திலுந் தடையில்லாத ஆக்கினை யுடைய ஏகச்சக்ராதிபதியாய் பூமியைப் பரிபாலனம் செய்யப் போகிறான். அவனுக்குச் சுமாலி முதலான எட்டுப் புத்திரர் கள் பிறந்து அவர்களிந்த பூமியை நூறுவருடம் அனுபவிக் கப்போகின்றார்கள். அப்போது ஒரு பிராமணன் விசுவா சத்தை யுடையவர்களாயும் பிரசித்தர்களாயு மிருக்கிற நந்தன் முதலான அவன் புத்திரர்களான ஒன்பது ராஜாக்களையும் நாசம் பண்ணப்போகின்றான். பின்பு கலியுகத்தில் மரவுரி யர்கள் என்பவர்கள் பூமியை யனுபவிப்பார்கள் என்றால் அந்தப் பிராமணன்றானே சந்திரகுப்த னென்னுமொரு மரவுரியனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வைக்கப் போகின்றான். அந்தச் சந்திரகுப்தனுக்கு வாரிதாரன், அவ னுக்கு அசோகவர்த்தனன், அவனுக்கு சுசேசு, அவனுக்கு தசரதன், அவனுக்கு சங்கதன், அவனுக்கு சாலிஜூகன், அவ னுக்கு சோமசருமன், அவனுக்கு சத்தனுவன், அவனுக்கு பிரகததுர்த்தனென்னும் புத்திரனுண்டாகப் போகின்றான். ஆக இந்த மரவுரியர்களென்னப்பட்ட இராஜாக்களும் நூற்று முப்பத்தேழு வருடம் பூமியை யனுபவிக்கப் போகின்றார்கள். அந்தப் பிரகத துர்த்தனுடைய சேனாதிபதி புஷியமித்திர னென்பவன் அரசனைக் கொன்றுவிட்டுத் தான் ராஜ்ஜிய பாரம் செய்யப்போகின்றான். அவனுக்குச் சுங்கன், அவ னுக்கு அக்கினிமித்திரன், அவனுக்கு சுசியெஷ்டன், அவ னுக்கு வச்சமித்திரன், அவனுக்கு நந்தன், அவனுக்குப் புளிந்தன், அவனுக்குப் பாகவாகன், அவனுக்குத் தேவபூதி யென்னும் புத்திரனுண்டாகப் போகின்றான். அந்த சுங்கள வம்சத்திற் பிறந்த பத்து ராஜாக்களும் நூற்றுப் பன்னிரண்டு வருடம் பூமியை யனுபவிக்கப் போகின்றார்கள்.

அந்த தேவபூதிக்குப் பின்பு இந்தப் பூமியானது கண்ணு வனை யடையப்போகின்றது. ஏனெனில், அந்தச் சுங்கன் வம்சத்திற் பிறந்த தேவபூதியினுடைய மந்திரியான கண்ணு வன் பரஸ்திரீலோலனாகிய தன் எஜமானனைக் கொன்றுவிட் டுத் தானே ராச்சியாதிகாரம் செய்யப்போகின்றான். அவ னுக்கே வாசுதேவனென்னும் பெயர். அவனுக்குப் பூமித்தி ரன், அவனுக்கு நாராயணன், அவனுக்குச் சுசர்மா வாசு தேவன் முதலான நால்வரும் முந்நூற்று நாற்பத்தைந்து வருடம் பூமியையனுபவிப்பார்கள். அந்தக் கண்ணுவ வம்சத் திற் பிறந்தவர்களில் கடைசியான சுசர்மா வென்பவனை அவனுடைய படனும் பலவானுயும் ஆந்திரசாதியின

ணுயும், பலிபகனெனப் பெயரை வாய்ந்தவனுமான சூத்திரன் கொன்றுவிட்டு பூமியைச் சிலகால மனுபவிக்கப் போகின்றான். அவனுடைய பிராதா கிருஷ்ணனென்பவன் அரசனாகப் போகின்றான். அவனுடைய புத்திரன் ஸ்ரீ சாதகர்னன், அவனுக்குப் பவுர்னமாசன், அவனுக்கு லம்போதகன், அவனுக்கு சிபவுகன், அவனுக்கு மேகசுவாதி, அவனுக்கு அடமானன், அவனுக்கு அரிஷ்டகர்மா, அவனுக்கு ஆலயன், அவனுக்கு ஸ்தபகன், அவனுக்குப் புருஷமேரு, அவனுக்கு சுனந்தனன், அவனுக்குக் கோரன், அவனுக்கு வடகன் முதலிய எண்மருண்டாகப் போகின்றார்கள். அவைகளில் கடைசியில் பிறப்பவனுக்கு, சிவசுவாமியென்று பெயர். அவனுக்கு கோமபுத்திரன், அவனுக்கு புரிமான், அவனுக்கு சாதகர்னன், அவனுக்கு சிவஸ்கந்தன் அவனுக்கு எக்கியசீலன், அவனுக்கு விசயன், அவனுக்குச் சந்திரபீசன், அவனுக்கு சுலோமதி, இப்படியாய்ப் பிறந்த இந்த முப்பது ராஜாக்களும் நானூற்றைம்பத்தாறு வருடம் பூமியை யனுபவிக்கப் போகின்றார்கள்.

பின்பு யேழு ஆபிரர்கள், எட்டு வமிறுத்தியர்கள் பத்து கர்த்தபிகள் சங்கர்கள்-முரண்டர்கள் இவர்கள் முதலாயறுபத்தெட்டு ராஜாக்கள் ஆயிரத்தித் தொண்ணூற்றொன்பது வருடம் பூமியை யனுபவிக்கப் போகின்றார்கள். பின்பு மவுனர்கள் பதினோரரசர்கள் முந்நூறு வருடம் பூமியை யனுபவிக்கப் போகின்றார்கள். அவர்களும் மரணமடைந்த பின்பு கலிங்கலை யென்னும் பட்டணத்தில் பூதநந்தன்-எவன் - அரன் - அவனுடைய பிராதா சிசுநந்தி - ஏசநந்தி - பிரவிபகன் இவர்கள் நூற்றாறு வருடம் பூமியை யனுபவிக்கப் போகின்றார்கள். அந்த பூதநந்தன் முதலானவர்களுக்கு பாகுலிகர்களென்னும் பதின்மூன்று பிள்ளைகள் இராஜாவாகப் போகின்றார்கள். பின்பு புஷியமித்திரனென்னும் ஒரு அரசன் உண்டாகப்போகிறான். அவனுக்கு துர்மித்திரனென்னும் புத்திரனுண்டாகி அப்படியே ஆந்தரர்களும்-கோசலர்களும் - வைடூரியபதிகளும் - நயிஷர்களும் - இவர்கள் அந்தத் தேசாதிபதிகளாய் ஏககாலத்தில் இராஜாக்களாகப் போகின்றார்கள். பின்பு மாகதர்களுக்கு விஸ்வபூர்த்தியென்றும் புத்திரனுண்டாகி அவன் புரஞ்சயனென்றும் பெயரை யுடையவனாய் பிராமணர்களை பிளிந்தார்களென்றும் எதுவென்றும் மத்திரர்களென்றும் பெயரையுடைய மிலேச்சர்களாக்கப் போகின்றான். பின்னும் துர்புத்தியை யுடைய அவன் பிரம்ம க்ஷத்திரிய வைசியர்களென்கிற

விவஸ்தை யில்லா திருக்கிற பிரஜைகளைப் பாலனம் பண்ணப் போகின்றான். மகா வீரனான அவனே க்ஷத்திரிய குலத்தை நாசஞ் செய்துவிட்டு பத்மாவதி யென்னும் பட்டணத்தில் வாசஞ்செய்துக் கொண்டு கங்கை முதல் பிரயாகை பரியந்தமுள்ள பூமியை யாளப்போகிறான். பின்பு சவுராஷ்டிரம் அவந்தி ஆபிரம் அற்புதம் மாளவம் என்னுந் தேசங்களிலுள்ள பிராமணர்கள் உபநயனாதி சமஸ்காரங்களில்லாத சூத்திரர்களாகி யாளப்போகின்றார்கள். அந்தச் சூத்திரர்கள் சமுத்திர தீரம் சந்திரபாகையென்னும் நதிதீரத்திலுண்டாயிருக்கின்ற காஸ்மீர தேசம் குந்தி தேசமாகிய இவைகளை அனுபவிக்கப் போகின்றார்கள். மிலேச்சர்களுக்கு சமானர்களான இவர்கள் ஏககாலத்தில் தேசதேசங்களுக்கு அதிபதிகளாகப் போகின்றார்கள். இவர்கள் அதர்மிகளாயும் அசத்தியவான்களாயும் அற்ப தாதாக்களாயும் மிகுந்த கோபிகளாயும், பரஸ்திரீகள் பேரில் மிகுந்த ஆசையுடையவர்களாயும் இந்த ராஜா பிறந்தானென்கிற வதந்தி தேசங்களிலே வியாபிக்கின்றதின் பின்னேடே மிருதநானென்கிற சப்தத்தை யுடையவர்களாயும் அற்பாயுளுடையவர்களாயும் கர்ப்பாதான முதலான சம்ஸ்கார மில்லாதவர்களாயும் அக்கியானிகளாயும் இருப்பார்கள். மிலேச்ச ஆசாரத்தை யுடைய இவர்கள் தனாதிகளையபகரிக்கின்றதினால் பிரஜைகளைப் பீடிக்கப் போகின்றார்கள். இப்படிப்பட்ட அரசர்களாளுந் தேசங்களிலுள்ள மானிடர்களும் அவர்களைப் போலவே சீலம் ஆசாரமிதுகளை அனுசரித்து அரசர்களால் ஒருவருக்கொருவர் பீடிக்கப்பட்டவர்களாய் நாசமடையப் போகின்றார்கள்.



## இரண்டாவது அத்தியாயம்

கலிதர்மம் சொல்லப்படுகின்றது.

வாராய் பரிக்ஷித்து மஹாராஜனே ! பலவானான கலியினாலே நாளுக்குநாள் தர்மமும்-சத்தியமும் - சவுக்கியமும்-பொறுமையும்-தயையும்-ஆயுளும்-பலமும் - ஞானமும் - நசித்துப்போய் கலியுகத்திலே மனுஷியர்களுக்கு தனம்-ஜன்மம்-ஆசாரம்-குணம் இவைகள் சிரேஷ்டத்துக்குக் காரணமாயும், தர்மம்-நியாயம் இவைகளுடைய விவஸ்தையிலே பலமே காரணமாயும், ஸ்திரீகளுடைய ஆசையால் குலம் கோத்திரமின்றி பர்த்தா பாரியை என்கிற விவகாரமே காரணமாயும், கிரைய விற்கிரையாதி விவகாரத்திலே வஞ்சனையே காரணமாயும், ஸ்திரீ புருஷர்களுடைய சிரேஷ்டத்திலே ஒருத்தருடைய அதிசாமர்த்தியமே ஏதுவாகவும், பிராமணனென்கிறதில் எக்கியோபவீதமே காரணமாயும், சந்நியாசி ஆஸ்ரமங்களை யறிவதில் ஆசார விசேஷங்களின்றி திரிதண்ட முதலானதே காரணமாயும், ஒரு ஆஸ்ரமத்தில் நின்று மற்றொரு ஆசிரமத்திலடைவதில் சுவதர்மானுஷ்டானமில்லாமல் சின்னமே காரணமாயும், அற்பவிர்த்தியுள்ளவன் சொல்லும் ஞாயம் அனியாயமாயும். அதிகமாய்ப் பேசுவதே வித்துவானென்பதற்குக் காரணமாயுமிருக்கும். தரித்திரனா யிருத்தலே வஞ்சகனாகவும், டம்பாசாரமே பெரிய மனுஷியத் தன்மையாகவும் ஸ்திரீபுருஷர்க ளொருவருக்கொருவர் அங்கீகாரம் பண்ணுவதே விவாகமாகவும், ஸ்நானமே அலங்காரமாகவும், தூரத்திலே யிருக்கிற மடு முதலானதே புண்ணிய தீர்த்தமாகவும், சிரசில் ரோமமிருப்பதே சௌந்தரியமாகவும், வயிர் வளர்ப்பதே புருஷார்த்தமாகவும், குடும்பத்தை ரக்ஷிக்கிறதே தர்மானுஷ்டானமாகவுமிருக்கும். இந்தப் பிரகாரம் துஷ்டப் பிரஜைகளாலே சூழப்பட்ட பூமண்டத்திலே பிராமணர்கள் க்ஷத்திரியர்கள்-வைசியர்கள் - சூத்திரர்கள் இவர்களுக்குள்ளே பலமுடையவனெவனோ அவனே அரசனாயிருப்பான்.

இப்படி திருடனுடைய தர்மம் போல கர்மத்தை யுடையவர்களாயும், லுத்தர்களாயும், நிர்த்தயர்களாயும் உள்ள அரசர்களாலே ஸ்திரீகள் தனம் அபகரிக்கப்பட்டுப் போய் தீனர்களான பிரஜைகள்-பர்வதம்-காடுகள் இவைகளை ஆசரிக்கப் போகின்றார்கள். க்ஷாமத்தினாலேயும் இராஜ தண்டத்தினாலேயும் வருந்தும் பிரஜைகள் காய்கள் கிழங்குகள் வேர்கள்

மாம்சம் கேழ்வரகு முதலான அல்பதானியங்கள் பல புஷ்பாதிகள் இவைகளைப் புசித்தும், விசனத்திலே பசிதாகம் வியாதிகளுண்டாய் சந்தாபத்தை அடைவர்கள். மனுஷியர்களுக்கு இருபது வருஷமே பூர்ணாயுசாகும்.

கலிதோஷத்தினாலே மனிதர்களுடைய எண்ணம் பல வீனப்பட்டும், வர்ணாசிரம ஆசாரங்களையுடைய மனுஷியர்களுக்கு வேதோத்தமமான தர்மம் நசித்தும், பாஷாண்ட தர்மம் பிரபலமாகவும், இராஜாக்கள் திருடருக்குச் சமமாகவும், மனுஷியர்களும் சௌரியம் அசத்தியம் விருதாவிம்சை இவைகள் விருத்தியாயும் பிராமணாதி நான்கு வர்ணங்களும் சூத்திரர்களுக்குச் சமானமாகவும், பசுக்கள் ஆட்டுக்குச் சமானமாகவும், பிரமசரியம்-வானப்பிரஸ்தம் - சந்நியாசம் இம்மூன்று ஆஸ்ரமத்தை யுடையவர்கள் பிரதிக்கிரக முதலானதினால் கிருகஸ்தனுக்குச் சமானமாகவும், பந்துக்களுக்குச் சரீரசம்பந்த மாத்திரத்தையே காரணமாயும், தானியம் முதலானவை அணுவுக்குச் சமானமாயும், அசுவத்த முதலான விருக்ஷங்கள் வன்னிமரங்களுக்குச் சமானமாயும், மேகங்கள் மின்னல் மாத்திரமுண்டாய் வருஷியாமலும், வீடுகள் பகவதாராதனம் அதிதி பூஜை முதலான தர்ம சூனியங்களாயும், ஜனங்கள் கழுதை நாய்களுக்குள்ள நடத்தை யுண்டாகியும், இப்படிக் கலியுகம் பிரவர்த்தித் திருக்கையில் ஸ்தாவர ஜங்கம ரூபமான சகல பிரபஞ்சத்துக்குங் கர்த்தாவாயும், சர்வ வியாபகராயும், சர்வநியந்தாவாயு மிருக்கிற ஸ்ரீ மகா விஷ்ணு தர்மத்தை ரக்ஷிப்பதின்பொருட்டு சத்புருஷர்களுக்குக் கர்மபந்த நிவர்த்தியின்பொருட்டும், மோக்ஷத்தின் பொருட்டும் மகானுபாவராயும் விஷ்ணு ஒரு பிராமணருடைய கிருகத்தில் கற்கி அவதாரம் செய்யப்போகின்றார்.

பகவான் தேவதத்தமென்னும் அசுவத்தின் பேரிலேறி அரிதான கத்தியை எடுத்துக்கொண்டு பூமியிலரசர்களைப் போல வேஷதாரிகளாயுள்ள திருடர்களையும் துஷ்டர்களான மற்ற அரசர்களையும் சங்கரிக்கப்போகிறார். பகவானுடைய திவ்விய மங்கள மூர்த்தியிலுள்ள ஸ்ரீசந்தன முதலான வாயுவை ஸ்பரிசிக்கப்பட்டவர்களுடைய மனம் நிர்மலமாகப் போகின்றன. அந்த ப்ரஜைகளுடைய இருதயத்தில் வாசுதேவர் அந்தரியாமியா யிருக்கையில் அந்தப் பிரஜைகளுக்குண்டாகும் புத்திரர்கள் காலானுகுணமாக மகத்தான சரீரத்தை யுடையவர்களாகப் போகின்றார்கள். சந்திரன்-சூரியன்-பிரகஸ்பதி இவர்கள் மூன்றுபேரும் புஷ்ய நக்ஷத்தி

ரத்தில் கூடி ஏகராசியிலிருக்கிற அப்போதே பகவான் அவதார காலமென்றும் அதுவே கிரேதாயுகமென்றும் அறியத் தக்கது. அப்போது பிரஜைகளுடைய சிருஷ்டியும், சாத்வீகமாக உண்டாகப் போகின்றது. உன்னுடைய ஜன்மதினமுதற்கொண்டு நந்தனுக்குப் பட்டாபிஷேகமாகிற பரியந்தம் ஆயிரத்து நூற்றுப் பதினைந்து சம்வச்சரமென் றறியத்தக்கது. சப்தரிஷிகளுக்குள்ளே இரண்டுபேர்கள் உதயத்தை யுடையவர்கள். அவர்களுக்கு மத்தியில் யாதொரு நக்ஷத்திரம் சமான தேசத்திலே யிருக்கிறதாகக் காணப்படுகிறதோ அந்தச் சப்தரிஷிகள் அந்த நக்ஷத்திரத்தோடு கூடினவர்களாய் மனுஷியர்களுக்கு நூறு சம்வச்சரபரியந்தம் அப்படியே யிருப்பார்கள். அந்த ரிஷிகள் உன்னுடைய காலமான இப்போது மகா நக்ஷத்திரத்தி லிருக்கின்றார்கள்.

எப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஸ்ரீ வைகுண்டத்தை யடைந்தாரோ அப்போதே கலியுகப் பிரவேசமானது, ஸ்ரீ லக்ஷ்மி பதியான ஸ்ரீகிருஷ்ணர் தம்முடைய பாதபத்மங்களால் ஸ்பரிசித்துக்கொண்டு பூமியிலிருந்தவரையில் அந்தக் கலி பூமியை ஆக்கிரமிக்க முடியாமல் போயிற்று. சப்தரிஷிகள் எப்போது மகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்களோ அப்போது திவ்ய வருஷத்தில் ஆயிரத்திருநூறு சம்வச்சரமான கலியுகம் பிரவர்த்தித்து, அந்த ரிஷிகள் எப்போது மகத்தைவிட்டுப் பூர்வாஷாடத்தை அடைகிறார்களோ அப்போது நந்தனுக்குப் பிற்பாடு பிரத்தியோதனனென்கிற அரசன் முதற்கொண்டு கலியுகமானது பிரவேசித்ததென்று ஞானிகள் சொல்வார்கள்.

இந்த மனு வம்சம் யுகங்கள்தோறும் உத்தம மத்திமாதி பேதத்தை யுடையதாகச் சொல்லப்படுகிறது போல பிராமணர்கள் க்ஷத்ரியர்கள்-வைசியர்கள்-சூத்திரர்கள் இவர்களுடைய வம்சங்களும் யுகங்கள்தோறும் சொல்லப்படும். அவர்களுடைய பெயர்களும், சரித்திரங்களும் இந்த வம்சத்திலுண்டாகும் ராஜாக்களுடைய கீர்த்தியுமே ஸ்திரமாக நிற்கிறது. சந்தனு மகாராஜாவினுடைய பிராதாவான தேவாபியும் இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்த மநுவென்ற ராஜாவும் இவர்களிருவரும் மகா யோகபலத்தை யுடையவர்களாய் கலாபமெனப்பட்ட கிராமத்தில் இப்போதும் வாசம்பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களிருவரும் கலியுக அந்தத்திலே இந்தப் பூமியில் வந்து ஸ்ரீ வாசுதேவராலே ஏவப்பட்டவர்களாய் பிராமணாதி வர்ணங்கள் பிரமசரியாதி ஆசிரமங்கள்

இவைகளுடன் கூடின தர்மத்தை பழையபடி பிரசித்தி செய்து வைக்கப்போகிருர்கள். நான்கு யுகங்களும் இந்தக் கிரமமாகவே பிராணிகளிடத்தில் பிரவர்த்தித்துக் கொண்டிருக்கின்றன.



## மூன்ருவது அத்தியாயம்



*இராஜ தோஷங்கள் வர்ணிக்கப் படுகின்றன.*

ஸ்ரீ சுகர் வாக்கியம்

வாராய் அரசனே! பூமிதேவி அரசர்களைப்பார்த்து நகைக்கின்றவளா யிருக்கின்ருள். பூமியில் அரசர்கள் பஞ்ச இந்திரியங்களுக்கு அடியவர்களாகி அவிவேகத்தினுல் தமக்கு பகவத் கிருபையால் இயல்பாக லபித்த பூமியோடு திருப்தி யடையாமல் அதர்மங்களை யாசரித்து பிறர்களை வஞ்சித்து அவர்களது பூமியை துராக்ருதமாய் கைக்கொண்டு ஆள்வார்கள். அற்ப ஆயுளையுடைய இந்த துஷ்ட அரசர்கள் தம் பிற்கால கதியை ஓராது சமுத்திரங் கடந்தும் அன்ய தேசங்களை தம் வசப்படுத்தி அங்குள்ள பிரஜைகளை தம் சுகத்தின் பொருட்டு ஹிம்சிப்பார்கள்.

பிருது சக்கிரவர்த்தி-புரூரவசு-காதி-பரதன்-நகுஷன்-கார்த்தவீரியார்ச்சுனன்-மாந்தாதா - சகரன்-ராமராஜா-கட்டுவாங்கன்-துந்துமாறன்-இரகு-திருணபிந்து - யயாதி - சயாதி-சந்தனுக்கியன்-பகீரதன்-குவலையாகவன் - ககுஸ்தன் - நயிஷதன்-நிருகன்-இரணியகசிபு-விருத்திராசுரன்-உலோகபயங்கரனை இராவணன்-நமுசி - சம்பரன் - நரகாசுரன் - இரணியாக்ஷன்-தாருகாசூரன் முதலிய பல அரசர்களது சரித்திரங்கள் எழுதிவைக்கப்பட்டது. பிற்கால அரசர்கள் அந்த சரித்திரங்களினின்றும் தர்மா தர்மங்களையும் அவைகளால் அடையக்கூடிய பலாபலன்களையும் உணர்ந்து, தர்மம் தவருமல் செங்கோல் செலுத்துவதற்கே யல்லாமல், மனிதர்கள் பரமார்த்த சாதனங்களாக பாராயணம்செய்து உய்வதற்கல்ல. அப்படியிருந்தும் கலியுகத்தில் அரசர்கள் அந்த சரித்திரங்களால் ஒருபலனையும் அடையார்கள்.

கிருதயுகத்தில் ஜனங்கள் சத்தியம்-தயை-தபசு-தானம்-ஆகிய இந்த நான்கு பாதங்களையுடைய தர்மங்களையே அனு

சரித்து சமதமாதி குணங்களையும் பொறுமையையும் அடைந்தவர்களாய் பரமாத்துமாவினிடத்திலேயே பக்தியையும், ஆத்துமானுபவத்தையும் உடையவர்களா யிருப்பார்கள். திரேதாயுகத்தில் தர்மத்தினுடைய நான்குபாதங்களில் ஒன்று அசத்தியம்-இம்சை-துக்கம்-கலகம்-இவைகளால் நசித்துப் போகும். அப்போது பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்களான இந்த மூன்று வர்ணத்தார்களும் தர்மார்த்தங்களில் பிரீதியுண்டாய் வேதம் வேதார்த்த ஞானமுடையவர்களாய் ஒருவரையொருவர் இம்சியாமலும் பிராமணர்களையே சிரேஷ்டமாக வுடையவர்களா யிருப்பார்கள். துவாபரயுகத்தில் அதர்மத்தினுடைய பாதங்களான இம்சை-அசந்தோஷம்-அசத்தியம்-துவேஷம் இவைகளால் தர்மத்தினுடைய பாதங்களில் பாதி நசித்துப்போகும். அப்போது எஜ்ஞையும், சீலத்தையும்-வேதாத்தியயனத்தில் பிரீதியையு மடைந்து ஆட்டியர்களாயும், குடும்பவிருத்தியை யுடையவர்களாயும் அகங்காரமில்லாதவர்களாயும், பிராமணர்களும், க்ஷத்திரியர்களும் பிரதானமா யிருப்பார்கள். கலியுகத்திலோ அதர்மத்தினுடைய பாதங்களால் தர்மத்தின் பாதங்களில் மூன்று பாதங்கள் நசித்து ஒரு பாதமிருக்கும். கலியுகாந்தத்தில் யுகங்கள் தோறும் விர்த்தியடையும் அதர்மத்தினுடைய பாதங்களால் அந்த நான்கிலொரு தர்மபாகமும் நாசமடைந்து, பிரஜைகள் உலுத்தர்களாயும் துராசாரமுடையவர்களாயும் நிர்த்தயர்களாயும் வியர்த்தமான கலகத்தையும் பாக்கிய ஈனத்தையு மடைந்து சூத்திரர்களையும் செம்மிடவரையும் முக்கியமாக வுடையவர்களா யிருப்பார்கள்

அந்தக் கலியுகத்தில் மனுஷியர்கள் மந்த புத்தியும், அற்ப பாக்கியமும் அதிக போசனமும், தரித்திரமும், அடைந்து காமிகளாயிருப்பார்கள். ஸ்திரீகளும் விபசாரிகளாயும் துஷ்டர்களாயு மிருப்பார்கள். மேலும் தேசங்களில் திருடர் விசேஷித்தலும், விவேக ஈனர்கள் வேதங்களைத் தூஷிப்பதும், அரசர்கள் பிரஜைகளைப் பீடிப்பதும், பிராமணர்கள் சிசுனவுதர பரர்களாகவும், பிரமசாரிகள் விருத ஈனர்களாயும், சவுசாசாரவர்ச்சிதர்களாகவும் இருப்பார்கள். கிரகஸ்தர்கள் பிக்ஷை பண்ணிக்கொண்டும், வானப்பிரஸ்தர்கள் வனவாசத்தைவிட்டுக் கிராமங்களில் வசித்துக்கொண்டும், சந்நியாசிகள் தனத்தில்மிகவுமாசைகொண்டு மிருக்கப் போகின்றார்கள். ஸ்திரீகளும் குட்டையான சரீரத்தையும் மிகுந்த போஜனத்தையும் வெகு புத்திரர்களைப் பெறுதலையும் உண்டாய் லச்சையில்லாமலும் கடின வார்த்தையும் திருட்டு

வஞ்சனை யுடையவர்களாயும், வர்த்தகர்கள் கிரைய விற்கிரைய விஷயங்களில் கபடத்தை யுடையவர்களா யிருக்கப் போகின்றார்கள். பாலில்லாத பசுக்களை போஷிக்காமல் விட்டுவிடுவார்கள். மனுஷியர்கள் ஸ்திரீ வசியர்களாயும், தீனர்களாயுமிருக்கப் போகின்றார்கள். சூத்திரர்கள் தபவேடத்தை யுடையவர்களாய் தான முதலானவைகளை வாங்கப்போகிறார்கள். தர்மத்தை அறியாதவர்களாய் உத்தமமான ஆசனத்திலிருந்துகொண்டு தர்மத்தை சொல்லப்போகிறார்கள்.

கலியுகத்தில் பிரஜைகள் நித்தியமாய் விசனத்தில் க்ஷாமம்-இராஜதண்டனை இவைகளால் அதிகமும் பீடித்தவர்களாயும் மழையில்லாமல் மகா வியாகூலமடைந்து வஸ்திரம் - அன்னம் - பானம் - சயனம்-ஸ்திரீ சம்போகம்-ஸ்நானம்-பூஷணம்-வாஹனம் இவைகளொன்றுமில்லாதவர்களாய் பிரகாசம்போலலைவார்கள். தங்கள் மாதா பிதாக்களையும் புத்திராதிகளையும் நல்ல குலத்திற் பிறந்தவளாயும் மகா பதிவிரதையாயுமிருக்கிற தங்கள் பாரியையும் ரக்ஷிக்காமல் விட்டுவிடுவார்கள்.

அரசனே! கலியுகத்தில் மனுஷியர்கள் பாஷாண்டர்களாலே பேதிக்கப்பட்ட மனதையுடையவர்களாய் சகலலோக நாயகராயும்-கர்த்தாவாயும்-பிர்மாதி தேவர்களால் சேவிக்கப்பட்ட பாதாரவிந்தங்களை யுடையவராயும்-பகவானுயுமிருக்கிற ஸ்ரீ அச்சுதரை ஆராதிக்கமாட்டார்கள். கிரேதாயுகத்தில் ஸ்ரீ ஹரியைத் தியானம் பண்ணுகிறவனுக்கும், திரேதாயுகத்தில் ஸ்ரீ ஹரியைக் குறித்து எக்கியாதிகளால் ஆராதிப்பவனுக்கும், துவாபரயுகத்தில் சுவதர்மங்களாலே ஸ்ரீ ஹரியையாராதிக்கிறவனுக்கும், யாதொரு பலமுண்டோ அதெல்லாம் கலியுகத்தில் ஸ்ரீ ஹரியினுடைய நாமசங்கீர்த்தனத்திற்றானே சித்திக்கின்றது. பகவான் கலியுகத்தில் அவ்வளவு சுலபராகவிருந்தாலும் துர்ப்பாக்கியர்களான ஜனங்கள் அவரை பூஜிக்கமாட்டார்கள்.



## நான்காவது அத்தியாயம்

ஸ்திதி காலமும் லய காலமும் சொல்லப்படுகின்றன.

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்து மஹாராஜனே! பரமாணுமுதல் த்விபரார்த்த பரியந்தமான காலமும் யுகப்பிரமாணமும் உமக்குப் பூர்வமே சொல்லப் பட்டதன்றோ? இனி லயக்கிரமத்தைச் சொல்லு கிறேன். ஆயிரஞ் சதுர்யுகம் பிரம்மாவுக்கு ஒரு பகலென்றும் கல்பமென்றுஞ் சொல்லப்படும். அந்தப் பகலிற் பதிநான்கு மனுக்களுடைய காலம் கிரமித்துப்போகும். நைமித்திகம் பிராகிருதம் - ஆத்தியந்திகம் - நித்தியம் என பிரளயம் நான்கு விதமாயிருக்கும். அந்தப் பகலினுடைய அந்தியத்திலே ஆயிரஞ் சதுர்யுக காலமான பிரளய மூண்டாகும். அது பிரமாவுக்கு ஒரு இராத்திரியென்று சொல்லப்படும். பூலோகம் - புவர்லோகம் - சுவர்லோகம் மென்கிற மூன்றும் பிரம்மாவினுடைய ராத்திரியில் லயமடைகின்றன. அந்த ராத்திரியில் ஸ்ரீமந்நாராயணர் பிரபஞ்சத்தைத் தம்முடைய குக்ஷியில் வைத்துக்கொண்டு சேஷதல்பசாயியாய் சயனித்துக் கொள்ளுகிறார். அவருடைய நாபிகமலத்தில் பிரம்மாவும் சயனித்துக் கொள்ளுகிறார். இது நைமித்திகப் பிரளயமெனப்படும். பிரம்மாவினுடைய த்விபரார்த்த காலமான ஆயுளானது சம்பூரணமாகுகையில் - பிரிதிவு - அப்பு-தேயு-வாயு - ஆகாயம் - அகங்காரம் - மகத்துவமான இந்த ஏழும் லயத்தையடையும். இது பிராகிருத பிரளயமெனப்படும்.

அப்போது சூரியன் மிகவுங் கொடூரமான தன் கிரணங்களால் சமுத்திரதீரத்தையும் தேகரசத்தையும் பூமிசாரத்தையும் மற்றுமுள்ள சமஸ்தரசத்தையும் பானம்பண்ணிப் போடுவன். திரும்ப விடுகிறதில்லை. பின்பு சங்கருஷ்ணருடைய முகத்திலுண்டாகும் மகாவாயு வேகத்தையுடைய பிரளய காலாக்கினி சாரமற்றிருக்கிற பாதாள முதலான சமஸ்த லோகங்களையும் சாம்பலாய்ப் ப்ரகாசிக்கும்படித் தகித்துவிடும். அதன்பின் மகாவேகத்தையுடைய வாயு நூறு சம்வச்சரம் வீசிக்கொண்டிருக்கும். அப்போது ஆகாசம் புழுதியினாலே சூழப்பட்டு தூம்பரமாய்விடும். அப்போது நானாவர்ணங்களையுடைய மேகக் கூட்டங்கள் மகா பயங்கரமாகச் சப்தித்துக்கொண்டு நூறு சம்வச்சரம் வருஷங்களை 'அதி

வேகமாய்ப் பொழிந்துகொண்டிருக்கும். பிரமாண்டத்துக்குள்ளே இருக்கும் சமஸ்த பிரபஞ்சமும் ஏகார்ணவ ஜலத்தினுல் வியாபிக்கப் பட்டதாய்விடும்.

அப்போது ஜலம் பூமியினுடைய கந்தகுணத்தை ஆக்கிரஷித்துக்கொள்ளும். பின் பூமிலயத்தை யடைந்துவிடும். பின்பு ஜலத்தினுடைய சாரத்தைத் தேஜசு கிரகித்துவிடும். ரசமில்லாத ஜலமும் லயத்தை யடையும். பிற்பாடு வாயு தேஜசின் ரூபத்தைக் கிரகித்துவிடும். ரூபத்தை யிழந்த தேஜசு வாயுவிலே லயத்தையடையும். வாயுவின் ஸ்பரிச குணத்தை ஆகாசம் கிரகித்துக்கொள்ள வாயு ஆகாசத்திலே லயத்தை யடைந்துவிடும். ஆகாசத்தினுடைய குணமான சப்தத்தை தாமச அகங்காரம் கிரகிக்க ஆகாசமும் அதிலே லயத்தையடையும். ராஜச அகங்காரம் இந்திரியங்களைக் கிரகித்துப்போடும். சாத்வீக அகங்காரம் இந்திரியாதிஷ்டான தேவதைகளை ஞானங்களோடே கிரகித்துப் போடும். இந்த மூன்றுவித அகங்காரத்தையும் மகதத்துவம் கிரகித்துப் போடும். அந்த மகதத்துவத்தைச் சத்துவ ரஜஸ் தமோ குணங்கள் கிரகித்துப்போடும். அந்தக் குணங்களை அப்பிராகிருதமான பிரகிருதி காலரூபியான பரமாத்துமனு லேவப்பட்டதாய் கிரகித்துவிடும். அந்தப் பிரதானத்திற்கு காலத்தின் அவயவங்களான அகோராத்திரி முதலானவைகளாலே பரிமாண முதலான குணங்களில்லாமல் கிரகித்துப் போடும்.

அந்தப் பிரதானம் ஆதியந்த சூன்யமாயும் விகார சூன்யமாயும் சதா யேகரூபமாயும் விர்த்தி க்ஷயமில்லாததாயும் காரணமாயுமிருக்கும். அந்தப் பிரதானத்திலே வாக்கும் மனதும் பிரவர்த்திக்கமாட்டா. அதிலே சத்துவ ரஜஸ் தமோ குணங்களுமில்லை. மகதத்துவ முதலானவைகளுமில்லை. பிராணன் புத்தி இந்திரியங்களும் அதற்கு அபிமான தேவதைகளுமில்லை. சாக்ரம் - சொற்பனம் - சுழுப்தியான அவஸ்தைகளுமில்லை. பிரதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாசம் - சூரியன்-முதலானவைகளுமில்லை. சுழுப்திபோலவும் சூனியம்போலவும் இன்னபடியென்று சொல்லக்கூடாததா யிருக்குமென்று அந்தப் பிரபஞ்ச காரணமான பிரதானத்தினுடைய சுவரூபத்தை வேதங்கள் சொல்லுகின்றன. இது பிராகிருத லயமெனப்படும்.

ஞானம் - புத்தி - இந்திரியங்கள் விஷயங்கள் இதுகளை ரூபமாகவும் இவைகளுக்கு ஆசிரயமாகவும் விளங்குகிறது.

காணப்படுகிறபடியினாலேயும் காரணத்தைக் காட்டிலும் வேறாக இராதபடியினாலேயும் ஜன்மநாசங்களோடே கூடியிருக்கிறபடியினாலேயும் இந்தப் பிரபஞ்சம் வஸ்துவன்று. ஜீவன் இந்திரியங்கள் விஷயங்களாகிய இவைகள் பரமாத்மாவினுடைய காரியமானபடியினாலே பரமாத்மாவைக் காட்டிலும் வேறன்று. பரமாத்துமாவினுடைய காரியமான பிரபஞ்சம் பரமாத்துமாவைக்காட்டிலும் வேறாகவில்லை. சாக்ரம் சொற்பனம் சுழுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளும் புத்தியினுடைய அவஸ்தைகளென்று சொல்லப்படும். இந்தப் பிரபஞ்சம் பிரம்மத்திலே உதித்து அதிலேயே லயத்தை யடைகிறது. ஜன்ம நாசங்களை யுடையதான சமஸ்தமும் பாரமார்த்த வஸ்துவன்று. பிரகாசிக்கும் இந்தப் பிரபஞ்சம் பரமாத்தும பிரகாசத்தை யன்றியிலே கிஞ்சிற்றாகிலும் முண்டென்று சொல்ல நியாயமில்லை. உண்டென்று சொல்லப்பட்டாலும் அதுவும் பரமாத்துமாவாகவே யாகின்றது. சூரியனாலே உண்டாகிய மேகம் சூரியனுடைய அம்சமான நேத்திரத்துக்கும் சூரிய தரிசனத்துக்கும் மறைவாக எப்படி நிற்கிறதோ அப்படிபோல பரமாத்துமாவினாலேயே உண்டான அகங்காரம் பரமாத்துமனுடைய அங்கிசமான ஜீவனுக்கு பரமாத்தும சொரூப தரிசனத்துக்கு பிரதிபந்தமாகின்றது. பிரதிபந்தமாக விருக்கிற அகங்காரம் பரமாத்தும விசாரணையினால் எப்போது நசித்துப் போகிறதோ அப்போது புருஷனுக்கு பரமாத்தும தரிசனம் கிடைக்கின்றது. அப்போது அந்த பரமாத்மானுபவம் ஆத்யந்த ப்ரளயமெனப்படும்.

காலமாகிற பிரவாகத்தின் வேகத்தினால் அபகரிக்கப்படும் தேக முதலானவைகளுக்கு விர்த்தி-க்ஷயம்-அவஸ்தைகள் எப்படி யுண்டாகின்றனவோ அப்படிபோலவே நித்தியமாகச் ஜன்ம நாசங்களுக்கு ஏதுக்களு முண்டாயிருக்கின்றன. ஆத்தியந்த சூனியமாயும் ஈஸ்வரரூபமாயுமிருக்கிற காலத்திலுண்டாகும் அந்த அவஸ்தைகள் காணப்படுகிறதில்லை. ஆகாசத்தில் சந்திரன் முதலான கிரகங்களுடைய கதியானது காணப்படாமல் அனுமானத்தினால் எப்படி கற்பிக்கப்படுகிறதோ அப்படிப்போல தேகத்திலும் பால்யம் யௌவனம் முதலானவை காணப்படுகிற படியினால் மத்தியில் ஜன்மாதி அவஸ்தைகள் கற்பிக்கப் படுகின்றன. இதுவே நித்தியப் பிரளய மெனப்படும். காலத்தினுடைய கதியானது இப்படிப்பட்டது. ஜகத் கர்த்தாவாயும் சகலலோக சரணியராயுமிருக்கிற ஸ்ரீமந் நாராயணருடைய இந்த லீலாவிபூதி

யான கதைகள் சங்கிரகமாக நம்மாலே சொல்லப்பட்டன. அவருடைய சமஸ்த லீலா விபூதிகளையும் சொல்ல பிரமனும் சமர்த்தனன்று. நானுவிதமான துக்கமுள்ள சமுசார சாகரத்தை கடக்க இச்சை கொள்ளும் புருஷனுக்கு பகவானை புருஷோத்தமருடைய லீலா கதையாகிற அமிர்தரச சேவையாகிய தெப்பமன்றி வேறில்லை.

ஆகையால் ஸ்ரீ பகவானுடைய கதாசிரவணமே பண்ணத்தக்கது. நித்தியரான ஸ்ரீ பகவான் இந்தப் புராண சங்கீதையை பூர்வத்தில் நாரத மகா முனிக்குச் சொன்னார். அவர் வியாசபகவானுக்குச் சொன்னார். அந்த வியாசர் அதிக பிரீதி கொண்டவராய் வேதத்துக்குச் சமானமான இந்தப் பாகவத சங்கீதையை எனக்குச் சொன்னார். நானும் உனக்குச் சொன்னேன். ராஜனே! சூதபுராணிகர் நைமிசாரணிய க்ஷேத்திரத்திலே தீர்க்க சத்திரத்தில் சவுனகாதி முனிவர்களுக்கு இந்தப் புராண சங்கீதையைச் சொல்லப் போகின்றார்.



## ஐந்தாவது அத்தியாயம்



*பரிக்ஷித்துவுக்கு பரப்பிரம்ம வுபதேசத்தால் மிருத்தியு பய நிவாரணமானது.*

### ஸ்ரீ சுகர் வாக்கியம்

பரிக்ஷித்தே! விஸ்வரூபியும் சர்வ நியந்தாவும் பகவானுமான ஸ்ரீ ஹரி இந்தப் புராணத்தில் அடிக்கடி வர்ணிக்கப் படுகிறார். ஆகையினாலே அப்படிப்பட்டவருடைய குணானுபவங்களைச் சிரவணம் பண்ணிக்கொண்டிருக்கும் உனக்கு யாதொரு பயமுமில்லை. நீயோ தன்னியனாகிறாய். அரசனே! மரித்துப்போகப் போகின்றேனென்கிற அவிவேகத்தை நீ விட்டுவிடு. முன்னேயில்லாமல் இப்போதுண்டான தேகம் போல நீ முன்னேயில்லாமல் இப்போதுண்டானவனன்று. நீ நசித்துப்போகப் போகிறதுமில்லை. புத்திர பவுத்திராதி ரூபத்தை யுடையவனை நீ பூர்வமிருந்து வித்தில் நின்றும் முளை யுண்டாகிறதுபோல உண்டாகப் போகின்றவனுமன்று. அக்கினி காஷ்டத்தை யன்றி எப்படி வேறாக விருக்கின்றதோ? அப்படிபோல தேகாதிகளை யன்றி நீ வேறாக நிற்கிறாய். தேகாதிகளுக்கே ஜனன மரண மல்லாமல் ஆத்துமா

வுக்கு இல்லை. சொற்பனத்தில் தன்னுடைய சிரச்சே தத்தைத் தான்றுனே பார்க்கிருன். ஜாக்ர அவஸ்தை யிலும் தேகத்துக்கு மரண முதலானதையும் பார்க்கிருன். ஆகையால் சொற்பனத்தில் சிரச்சேதாதி போலவே ஆத்துமாவுக்கு ஜனனமரணமானது பிரமமாத்திரமேயாகின் றது. பரமார்த்தமாக ஆத்துமா ஜனனமரண சூனியனுகி ருன். எப்படி கடம் உண்டாகிறதற்கு முன்னே மகத்தான ஆகாச ரூபமாயிருந்த ஆகாசம் கடம் உண்டான பின்பு அந்தக் கடத்துள்ளேயு மிருந்து திரும்பவும் அந்தக் கடமா னது நஷ்டமாய்ப் போன பின் ஆகாசமாகவே யாய்விடு கின்றதோ? அப்படிபோல தேகம் உண்டாவதற்கு முன் பிரமஸ்வரூபியான ஜீவனும் உண்டாகும் தேகத்திலிருந்து திரும்பவும் அந்தத் தேகமானது தத்துவக் கியானத்தினுல் லயத்தை யடைகையில் அந்த ஜீவன் பிரம ஸ்வரூபத்தையே யடைகின்ருன். மனம் ஆத்துமாவுக்குத் தேகங்களையும் சத்துவாதி குணங்களையும் கர்மங்களையும் சிருஷ்டிக்கிறது. அந்த மனதை மாயை சிருஷ்டிக்கிறது. அதினுல் ஜீவனுக் குச் சம்ஸாரம் உண்டாகிறது.

எண்ணெய்-அகல்-திரி-அக்கினி இவைகளின் சம்பந்தம் உள்ளமட்டும் தீபம் என்கிற விவகாரமான துண்டாகின்றது போல கர்மம்-மனம்-தேகம்-ஆத்துமா ஆகியவைகளின் சம்பந்தம் உள்ளமட்டும் சம்சாரமான துண்டாயிருக்கும். எண்ணெய் முதலானவை நசிக்குமளவில் தீபமானது நாச மடையுமாப்போல், கர்மம் நாசமடையுங் காலத்தில் சம்சாரம் நாசத்தை யடைகின்றது. தேகத்தில் அறியப்படும் ஆத்து மாவோ நாசமே யடைவதில்லை. அந்த ஆத்துமா ஸ்தூல சூட்சும தேகங்களுக்குப் பரனும், சுயம்பிரகாசனும், ஆகா சம்போல் தேகாதிகளுக்கு ஆதாரனும், நிர்விகாரனும், நாசமில்லாதவனும், உபமான மில்லாதவனு மிருக் கின்ருன்.

ஓ அரசனே! இந்தப் பிரகாரம் தேகத்துள்ளிருக்கும் ஆத்துமாவை நீதானே பகவானுடைய தியானத்தோடே நிச்சயரூபமாயிருக்கிற புத்தியால் விசாரிக்கக் கடவாய். இப்படி நீ யறிந்துகொண்டாயானல் பிராமணனுல் ஏவப் பட்ட தக்ஷகன் உன்னைப் பஸ்பமாக்கமாட்டான். மிருத்தியு வும் உன்னை அணுகமாட்டான். நான் தேகாதிகளைக் காட் டிலும் பரமாயும் சுவயம் பிரகாசமாயு மிருக்கிற பிரமமே யாகிறேன். பரமாநந்த சுவரூபமான யாதொரு பரப்பிரம

முண்டோ அந்தப் பரப்பிரமமும் நானேயாகிறேன். ஹே புண்ணியபுருஷ! நீ கோறிய சகல விஷயங்களும் என்னால் சொல்லப்பட்டன. இன்னும் நீர் அறியவேண்டியதை கேளும் என்றனர் ஸ்ரீ சுகப்பிரம்மர்.



## ஆறுவது அத்தியாயம்



*பரிக்ஷித்துவின் மோக்ஷமும் ஜனமேஜயன் சர்ப்பயாகஞ் செய்ததும் சொல்லப்படுகிறது.*

ஸ்ரீ சூதர் சொல்லுகிறார்: சௌனகாதி ரிஷிகளே! பரிக்ஷித்து மகாராஜன் சுகப்பிரம்மரிஷியினால் சொல்லப் பட்ட இந்தப் பாகவத புராணத்தை கேட்டு சர்வாந்தரியாமி யாயும், சர்வ நியந்தாவாயு மிருக்கிற ஸ்ரீ ஹரியைத் தனது ஆத்துமாவில் பரிபூரணம் பண்ணிக்கொண்டு சுகப்பிரம்ம ரிஷியினுடைய பாதாரவிந்தங்களைத் தனது சிரசின்மேல் வைத்துக்கொண்டு சாஷ்டாங்கமாகப் பிரணமம்பண்ணிச் சொல்லுகிறான்: சுகப் பிரம்ம ரிஷியே! உம்மால் ஜனன மரண சூனியரான ஸ்ரீ ஹரியினுடைய குணானுபவங்களைக் கேட்டேன். ஆகையினால் நான் தன்னியனானேன், கிருதார்த் தனானேன். உத்தமசுலோகரான பகவான் அடிக்கடி வர்ணிக் கப்படுகிற இந்தப் புராண சங்கீதையை உம்மிடத்தில் ஐயமற நன்றாகக் கேட்டுணர்ந்தேன். நிற்பயமாயும் ஆனந்த ரூபமாயு மிருக்கிற பரப்பிரமத்தையே யடைந்தேன். ஆகையினால் தக்ஷ கன் முதலான மிருத்தியுகளுக்கு நான் இனி பயப்படேன். வாக்கு முதலான இந்திரியங்களை நியமம் பண்ணிக்கொண்டு சகல கர்மங்கள் கர்மவாசனைகள் இவைகளை விட்டுள்ள மனதை ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் வைத்துவிட்டு பிராணனை விட்டுவிடுகிறேன். சாஸ்திர ஞானம் பராமத்துமானுபவம் இவைகளுடைய நிஷ்டையினால் எனது அஞ்ஞானம் தள்ளப் பட்டுப்போயிற்று. சர்வசுக ஆஸ்ரயமான பகவானுடைய பரம பதம் உம்மால் காண்பிக்கப்பட்டது. என்றிப்படி சொல்ல சுகப்பிரம்மரிஷி அந்த ராஜாவுக்கு அனுக்கிரகம் பண்ணி விட்டு ரிஷிகளுடன் கூட யதேச்சையாய் புறப்பட்டுப் போயினார்:

சவுனகாதி ரிஷிகளே! பின்பு அந்தப் பரிக்ஷித்து பரமாத்துமாவினிடத்திலே மனதை புத்தியினால் ஸ்திரமாக வைத்து சலியாமல் பிராண நிரோதத்தை யுடையவனாய்

பரமாத்துமாவைத் தியானம்பண்ணி அந்தக் கங்காதீரத்திலே நுனிகள் கிழக்கு முகமாயிருக்கிற தர்ப்பைகள் மேலே வடக்கு முகமாயிருந்து மகா யோகாப்பியாசத்தை யுடையவனும், விஷயங்களில் ஆசக்தி யில்லாதவனுயு மிருந்துகொண்டு பிரம்ம ஸ்வருபத்தை யடைந்தவனுயிருந்தான். அந்தச் சமயத்தில் பிராம்மணபுத்திரன் அதிகோபங்கொண்டு ஏவிய தக்ஷகன் ராஜாவைக் கடித்துக்கொல்லவேண்டி வந்துகொண்டிருக்கும்போது விஷ சிகிச்சையிற் றேர்ந்த காசியபரென்கிற பிராமணர் பரிக்ஷித்து மகாராஜாவை இரக்ஷித்து அதிக தனங்களைப் பரிசுபெறவெண்ணி வருவதை மார்க்கத்திலறிந்து தான் வட விருக்ஷத்தைக் கடித்து பஸ்பமாகச் செய்ததைத் திரும்பவும் பூர்வம்போலெழுப்பினதினுல் இப் பிராமணன் அரசனை இரக்ஷிப்பதில் சந்தேகமில்லை யென்று தக்ஷகனுணர்ந்து அந்தப் பிராமணனை வேண்டிய தானங்களால் சந்தோஷிப்பித்து, திரும்ப அவரை வந்த வழியைப் பார்க்க அனுப்பிவிட்டு, முன்போல தக்ஷகன் பிராமணருபங் கொண்டு சென்று அரசனைக் கடித்தனன். பிரம்ம ஸ்வருபத்தை யடைந்திருக்கின்ற அந்த ராஜ ரிஷியினுடைய தேகமானது அந்தத் தக்ஷகனுடைய விஷாக்கினியினுலே அனேக ஜனங்கள் பார்த்துக் கொண்டிருக்கிற அந்த க்ஷணத்திலே பஸ்பமாய் விட்டது. அப்போது பூமியிலேயும் ஆகாசத்திலேயும் சமஸ்த திக்குகளிலும் ஆ! ஆ! வென்னப் பட்ட சப்த முண்டானது. தேவர்கள், அசுரர்கள், மனுஷியர்கள், முதலான சமஸ்தரும் அதிக ஆச்சரியத்தை யடைந்தார்கள். தேவதுந்துபி வாத்திய முதலானவை சப்தித்தன. தேவர்கள் புஷ்பமாரி சொரிந்தார்கள்.

ஜனமேஜய மகாராஜன் தன்னுடைய பிதா பரிக்ஷித்து தக்ஷகனுல் பஸ்மிக்கப் பட்டதைக் கேட்டு அதிக கோபத்தை யுடையவனுய் சர்ப்பயாகத்தில் மகா விஷங்களையுடைய சர்ப்பங்களை எதாவிதியாக ஓமம் பண்ணினுன். அந்த யாகத்தில் ஜொலிக்கும் அக்கினியில் கூட்டம் கூட்டமாக வந்து விழுந்து பஸ்பமாகும் அனேக சர்ப்பங்களை தக்ஷகன் பார்த்து பயங்கொண்டு மிக நடுங்கி இந்திரனைச் சரணமாக வடைந்தான். அப்போது ஜனமேஜயன் அதமனுன தக்ஷகன் யாது காரணத்தினுல் இந்த எக்கியத்தில் தகிக்கப்பட வில்லை யென்று பிராமணர்களை கேட்க, சர்ப்பமாகிய தக்ஷகன் தேவேந்திரனைச் சரணமடைந்து அவனுலே இரக்ஷிக்கும் படியாய் நிறுத்தப்பட்டிருக்கிறுன் என்று அவர்கள் சொல்ல,

அதைக் கேட்ட மகாராஜன் பிராமணர்களைப் பார்த்து இந்திரனுடன் அந்த தக்ஷகனும் எக்கியத்தில் விழும்படி ஆவாகனம் செய்யுங்கள் என அரசன் பணித்தான். அந்தப்படி பிராமணர்கள் வாராய் தக்ஷகனே! தேவபதியான இந்திரனுடனே கூட இந்த அக்கினியில் வந்து விழக்கடவாயென்று சொல்ல இந்தக் கொடூரமான வாக்கியத்தைக் கேட்டுப் பயந்து தக்ஷகனுடனே இந்திரனும் தன்னுடைய விமானத்துடனே ஸ்தானத்தைவிட்டு ஆகாசத்தில் நின்று எக்கியத்துக்கு நேராக விழும்படியாயிருக்கிறதைப் பிரகஸ்பதியறிந்து அந்த ஜனமேஜயனைப் பார்த்துச் சொல்லுகிறார் :

ஓ ராஜசிரேஷ்டனே! இந்தச் சர்ப்பங்களில் சிரேஷ்டனான தக்ஷகன் அமிர்தபானம் செய்தவன், வார்த்திகமும் மரணமுமில்லாதவன். பிராணிகளுக்கு ஜனன-மரணமும் சுகதுக்கமும் - பரலோகமும் தம் கர்மத்தினாலுண்டாகின்றன. சர்ப்பம்-சோரம் - அக்கினி-வாயு-ஜலம்-பசி - தாகம்-வியாதி இவைகளால் பிராணிகள் மரணம் அடைவது பிராரப்த கர்மத்தினால் நேர்கிறதே யல்லது வேறில்லை. ஆதலால் தக்ஷகனை கோபிப்பதைவிட்டு இம்சை ரூபமான இந்தச் சர்ப்ப யாகத்தையும் நிறுத்துவது உசிதமென ஜனமேஜய மகாராஜன் கேட்டு அங்கீகாரம் பண்ணிக்கொண்டு யாகத்தை விட்டவனாய் அந்த பகவானைப் பூஜித்து நின்றான்.

கேட்டீர்களோ சௌனகாதி முநிவர்களே! ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய சிந்திக்கக்கூடாத மகாமாயையினால் வித்வாம்சர்களுக்கும் இப்படிப்பட்ட மோகம் வருகின்றது. இப்படிப்பட்ட பகவன் மாயையாலுண்டான மோகம் பகவானுடைய உபாசனையினாலே நிவர்த்திக்கப் படவேண்டும். ஸ்ரீ ஹரிபக்தர்கள் எப்போதும் அகங்கார மமகாரங்களையொழித்து ஸ்ரீ பகவானது பாத பத்மங்களையே ஆதரவாயடைந்து உய்வார்கள் என்று சூத புராணிகர் சொல்ல, சௌனகாதி முனிவர்கள் ஆனந்தமெய்தி மீண்டும் வினவுகின்றனர்.



## ஏழாவது அத்தியாயம்



வேதம் நான்காக வகுக்கப்பட்டதை சொல்லுகின்றது.

முனிவரே! வியாசபகவானுடைய சிஷ்யர்களாயும் வேதாசாரியர்களாயு மிருக்கிற பயிலர் முதலான ரிஷிகளால் வேதங்கள் எத்தனை விதமாக விபாகம் பண்ணப்பட்டது? என, சூதர் சொல்லுகிறார்: கேளுங்கள் முனிவர்களே! பரமாத்மாவினிடத்தில் ஸ்திரமான அந்தக் கரணத்தையுடைய சதுர்முகப்பிரமாவினது இருதயத்திலுள்ள ஆகாசத்தினிடமாயிருந்து நாதமுண்டாயிற்று. அந்த நாதம் காதுகளுடைய ரந்திரத்தை மூடினால் நம்மிலுமறியப்படுகின்றது. யோகீஸ்வரர்கள் அந்த நாதப் பிரமத்தினுடைய உபாசனையினால் அத்தியாத்துமம் அதிபூதம் அதிதெய்வம் எனும் மூவித அந்தக் கரணத்தின் மலத்தை உதரிப்போட்டு மோக்ஷத்தையடைகின்றார்கள். அந்த நாதத்திலிருந்து மூன்று மாத்திரைகளை யுடையதாயும் சூக்ஷ்ம ரூபமாயும் இருதயத்தில் சுயம்பிரகாசமாயு மிருக்கிற ஓங்காரம் உண்டாயிற்று. ஓங்காரம் பரமாத்துமாவுக்கே வாசகமாகின்றது. காதானது மூடப்பட்டிருந்தாலும் இந்திரிய வர்க்கங்களில்லாமலே ஞான சொரூபரான பரமாத்மா அந்த ஓங்காரத்தைக் கேட்டுக் கொண்டிருக்கின்றார். ஓங்காரத்தினால் சமஸ்த வாக்குகளும் பிரகாசிப்பிக்கப்படுகின்றன. ஓங்காரத்தின் பிரகாசம் இருதய ஆகாசத்திலுள்ள பரமாத்மாவில் நின்றும் உண்டாகின்றது. அந்த ஓங்காரம் சமஸ்த மந்திரங்களுக்கும் சூக்ஷ்ம ரூபமாயும் சமஸ்த வேதங்களுக்குங் காரணமாயும் சர்வதா யேகரூபமாயும் நிற்கிறது.

அந்த ஓங்காரத்துக்கு அகார முதலான மூன்று வர்னங்கள் உண்டாயின. அந்த வர்னங்களாலே சத்துவ ரஜஸ் தமோ குணங்களும், ருக்காதி வேதங்களும், பூலோக புவர்லோக சுவர்லோகங்களும், ஜாக்கிரம்-சொர்ப்பனம்-சுழுத்தியாகிய அவஸ்தைகளுந் தரிக்கப்படுகின்றன. பிரம்ம ஸ்வரூபியான ஸ்ரீ பகவான் அந்த வர்னங்களில் நின்றும் ய-ர-ல-வங் பீ-ஷ-ஸ-ஹ-அ-ஆ-இ-ஈ-உ-ஊ-றி-றீ-லி-லீ-ஏ-ஐ-ஒ-ஔகார முதலான இருபத்தைந்து வர்னங்கள் ரிஸ்வம் - தீர்க்கம் - அனுஸ்வரம்-விசர்க்கம் முதலான இந்த ரூபமான அக்ஷரங்களுடைய சமூகத்தைச் சிருஷ்டித்தார். அந்தப் பிரம்ம ஸ்வரூபியான ஸ்ரீ பகவான் நான்கு முகங்களாலேயும் சப்த வியா

கிருதி பிரணவம் இவைகளுடன் கூடிக்கொண்டிருக்கிற நான்கு வேதங்களையும் எக்கியங்களையும் சொல்லவேணுமென் கிற இச்சையால் சிருஷ்டித்த தம் புத்திரர்களுக்கு அந்த வேதங்களை அத்தியயனம் பண்ணிவைத்தார். தர்மோபதேச கர்த்தர்களான அந்த மரீசி முதலான பேர்கள் தங்கள் புத்தி ரர்களுக்கு அந்த வேதங்களை யுபதேசித்தார்கள். அந்த வேதங்கள் மகா நியமத்தையுடைய அவரவர்கள் சிஷ்யர் களான மகாரிஷிகளாலே நான்கு யுகங்களிலேயும் பரம்பரை யாய் வந்தன. அந்த வேதங்கள் துவாபர யுகாந்தத்தில் வியா சர் முதலானவர்களால் விபாகம் பண்ணப்பட்டன. அற்பா யுள் உள்ளவர்களாயும், ஹீனபாலர்களாயும் துர்ப்புத்திகளை யுடையவர்களாயு மிருக்கிற ஜனங்களைப் பார்த்து பிரம்ம ரிஷிகளுடைய இருதயத்திலிரா நின்ற அச்சுதரால் ஏவப் பட்டவர்களாய் வேதங்களை வெகுப் பிரகாரமாக விபாகம் பண்ணினார்கள்.

இந்த வைவசுத மனுவந்தரத்தில் சகலலோக நாயகரான ஸ்ரீ பகவான் பிரமன் உருத்திரன் முதலான தேவர்களாலே தர்மத்தை இரக்ஷிக்கிறதின் பொருட்டு பிரார்த்திக்கப்பட்ட வராய் தம்முடைய சத்துவாம்கிசத்தினால் பராசர ரிஷியி னிடத்தில் நின்றும் சத்தியவதியினிடத்தில் வேதவியாசராக அவதரித்து ஒரு வேதத்தை நான்கு விதமாக விபாகம் பண்ணினார். ருக்குவேதம் - எஜுர்வேதம் - சாமவேதம் - அதர்வணவேதம் இவைகளுடைய ராசிகளை சமானமந்திரங் களைப் பிரித்தெடுத்து நான்கு சம்ஹிதைகளாகப் பண்ணி மகா புத்திமானான வியாசர் அந்த வேதங்களை யுபதேசிக்க நான்கு ரிஷிகளை யழைத்து அவர்களில் பயில மகாரிஷிக்கு ருக்கு வேதத்தையும், வைசம்பாயன மகாரிஷிக்கு எஜுர்வேதத்தை யும், சயமுனி மகாரிஷிக்கு சாமவேதத்தையும், சுமந்து மகா ரிஷிக்கு அதர்வண வேதத்தையுமாக வுபதேசித்தார். பயிலவர் தம்மாலே அத்தியயனம் பண்ணப்பட்ட ருக்கு வேதத்தை இரண்டாகப் பிரித்து இந்திரப்பிரமிதி யென்பவ ருக்கும் பாஷ்களருக்கும் உபதேசித்தார். அந்தப் பாஷ்கள ரானவர் அதை நாலாகப் பிரித்து போத்தியருக்கும், யாக்கிய வல்கியருக்கும், பராசரருக்கும், அக்கினி மாதாவுக்குமாக உபதேசித்தார். அந்த இந்திரப்பிரமிதியும் தம்மால் அத் யயனம் பண்ணப்பட்ட வேதத்தைத் தம்முடைய புத்திரரான மாண்டுகேயருக்கு அத்தியயனம் பண்ணிவைத்தார். அந்த மாண்டுகேயருடைய சிஷியர் வேதமித்திரர் சவுபரி முதலான பேர்களுக்கு உபதேசித்தார். அதில் மாண்டு கேயருடைய

புத்திரரான சாகல்லியர் தம்மால் அத்தியயனம் பண்ணப்பட்ட வேதத்தை ஐந்து பாகம் பண்ணி வாக்கியருக்கும், மவுக்கல்லியருக்கும், சாலியருக்கும், கோகல்லியருக்கும், சிகரருக்குமாக வுபதேசம் பண்ணினர்.

அந்தச் சாகல்லியருடைய சிஷ்யரான சாதுகாரணரான வர் தம்மாலே அத்தியயனம் பண்ணப்பட்ட வேதத்தை நான் காகப்பண்ணி பலாகர்-பைங்கர்-வைதாளர்-விரசர் இவர்கள் நால்வருக்கும் உபதேசித்தார். பாஷ்களருடைய புத்திரர் தம்மால் அத்தியயனம் பண்ணப்பட்ட வேதங்களில் நின்றும் வாலகில்லியமென்று பெயரையுடைய மூன்று சங்கிதைகளை செய்து, பாலாயினி-காற்கி-கரசார இவர்கள் மூன்றுபேருக்கும் உபதேசித்தார். உருக்கு வேதத்தினுடைய இந்தச் சம்ஹிதைகள் இப்படிப்பட்ட பிரம்ம ரிஷிகளாலே தரிக்கப்பட்டன. எஜுர்வேதத்தினுடைய விபாகம் எப்படிஎன்றல் வைசம்பாயன மகாரிஷிக்கு நான்கு சிஷ்யர்கள் இருந்தார்கள். அந்தச் சிஷ்யர்கள் தங்களுடைய குருவுக்கு பிரம்மஹத்தி பாபம் போகிற நிமித்தம் பிரமத்தியா விரதத்தை ஆசரியித்ததினலே அவர்கள் சரகாளென்று பெயரை யுடையவர்களானர்கள். வைசம்பாயனருடைய சிஷ்ய சிரேஷ்டராகிய யாக்கியவல்க்கியர் தம்முடைய ஆசாரியனைப் பார்த்து பலஹீனர்களான இந்தச் சிஷ்யர்கள் இந்தப் பிரம்மத்தியா விரதத்தை அனுஷ்டிக்கிறதினலே என்ன ஆகப்போகிறது, அந்த விரதத்தை நான் ஒருவனே ஆசரிக்கிறேனென்றர். அதைக்கேட்ட வைசம்பாயனர் அதிக கோபங்கொண்டு சிஷ்யனை நோக்கி மூர்க்கனே! பிராமணர்களை அவமதிக்கும் உன்னலே எனக்காகவேண்டிய தொன்றுமில்லை. என்னிடமிருந்து, நீ அத்யயனஞ்செய்த வேதத்தைவிட்டு அதிசீக்கிரம் அப்புறம்போய் விடக்கடவாய் என்று சொல்ல, அந்த யாக்கியவல்க்கியர் அவ்விதமே போய்விட்டனர். யாக்கியவல்க்கிய ரிஷி, தம் குருவினலே அத்தியயனம் பண்ணப்படாமலிருக்கிற வேதங்களைத் தாமடையவேண்டி வேதங்களுக்கு ஈஸ்வரனை சூரியபகவானை உபாசித்தார். சூரியபகவான் மகிழ்ந்து எஜுர்வேதங்களை அத்தியயனம் பண்ணும்படி அனுக்கிரகித்தார். அந்த யாக்கியவல்க்கியர் அபரிமிதமான அந்த எஜுர்வேதங்களைப் பதினைந்து சாகைகளாகப் பண்ணினர். அஸ்வரூபியான சூரியனலே பிடரிமயிர்களினின்றும் விடப்பட்டபடியினல் வா-ச-ச-னேயமென்று பெயர்பெற்ற அந்த வேதங்களைக் காணுவர்கள் மாத்தியந்தினர்கள் முதலானவர்கள் கிரகித்தார்கள்.

சாமவேதத்தினுடைய விபாகம் எப்படி யென்றால்: சாம வேத அத்தியாபகாரண ஜயமுனி தம் புத்திரர் சுமந்து என்பவருக்கும், அவர் புத்திரராகியும், தமக்குப் பௌத்திருமாகிய சுதனுவா வென்பவருக்குமாக அந்தச் சாமவேதத்தை இரண்டாக விபாகஞ்செய்து அத்தியயனம் பண்ணிவைத்தார். அந்தச் ஜயமுனியினுடைய சிஷியராயும் மகா புத்திமானுயுமிருக்கிற சுகவர்மா அந்தச் சாமவேதங்களை அத்தியயனம் பண்ணி அதை ஆயிரம் சம்ஹிதைகளாகப் பண்ணினர். அவருடைய சிஷ்யர்கள் இரணியநாபன் பவுஷ்பஞ்சி இவர்களிருவரும் அந்த ஆயிரம் சாகைகளையும் கிரகித்தார்கள். வேதவித்தான ஆவந்தியனென்னும் சிஷ்யனும் அந்த வேதங்களைக் கிரகித்தான். பவுஷ்பஞ்சி ஆவந்தியென்கிற இவர்களுக்கு ஐந்நூறுபேர் சிஷியர்கள். அவர்கள் ஐந்நூறு பேரும் அந்தச் சாகைகளை அத்தியயனஞ் செய்தருளினர்கள். அவர்களை உதச்சியர்களென்று சொல்லுவார்கள். இரணியநாபனுக்கும் ஐந்நூறுபேர் சிஷியர்கள். அவர்களும் மற்ற ஐந்நூறு ஸாகைகளை அத்தியயனஞ் செய்தருளினர். அவர்களைப் பிராச்சியர்களென்று சொல்லுவார்கள். இலவுகாகுஷி-லாங்கலன்-குல்லியன்-குசிதன்-குஷி இவர்கள் ஐந்துபேர்களும், பவுஷ்பஞ்சனுடைய சிஷியர்கள். இவர்கள் ஒவ்வொருத்தரும் நூறு நூறு சாகைகளாக அத்தியயனஞ் செய்தருளினர்கள். இரணியநாபனுடைய சிஷியனை கிருதன் இருபத்துநான்கு சம்ஹிதைகளை அத்தியயனஞ்செய்து, தனது சிஷியர்களுக்கு உபதேசித்தான். மற்ற சாகைகளையும் ஆத்மஞானியான ஆவந்தியன் தனது சிஷியர்களுக்கு அத்யயனஞ் செய்து வைத்தான்.

வேதவித்தான அந்தச் சுமந்துமகாமுனிவர் தாம் அத்யயனஞ் செய்த அதர்வண வேதத்தைக் கபந்த னென்ற சிஷ்யனுக்கு அத்தியயனஞ் செய்துவைத்தார். அவரதை இரண்டாக விபாகஞ்செய்து, பத்தியனுக்கும் வேத தரிசனுக்குமாக உபதேசஞ் செய்துவைத்தார். அந்த வேத தரிசனர் தமது சம்ஹிதையை நான்காக விபாகஞ்செய்து, சாலக்காயினி - பிருமவலி - மோதாதா - பிப்பிலாயனர், இந்த நான்கு சிஷியர்களுக்கும் ஒவ்வொன்றை அத்யயனஞ் செய்துவைத்தார். பத்தியர் தமது சம்ஹிதையை மூன்றாக விபாகஞ் செய்து, குமுந்தன் - சுனகன் - சாபாவி இவர்கள் மூன்றுபேருக்கும் அத்யயனஞ் செய்துவைத்தார். அந்தச் சுனகர் தமது சம்ஹிதையை இரண்டாகவிபாகஞ்செய்து பெப்புருவுக்கும் சயிந்தவாயினருக்குமாகச் சொல்லிவைத்தார்.

சாவரன் முதலானபேர்கள் சயிந்தவாயனன் முதலிய பேர்களுடைய சிஷ்யர்கள் நக்ஷத்திரகல்பன்-சாந்திரவர்க்கன்-ஆங்கீரசன் முத்லானபேர்கள் அதர்வணவேத பிரவர்த்தர்களாயிருந்தார்கள்.



## எட்டாவது அத்தியாயம்



புராண லக்ஷணம் கூறியது.

கேளும் மாமுனிவர்களே! புராண கர்த்தர்களைச் சொல்லுகிறேன். வியாசர் புராணங்களை ஆறு சம்ஹிதையாகச் செய்து எனது பிதா அருஷணருக்கு உபதேசித்தார். அவரிடத்திலிருந்து வியாசருடைய சிஷியர்கள் திரையாரணி - காசியபர் சாவர்னி-அகர்த்தவிருணர்-சிசுபாயணர்-ஆரிதர் இவர்களறுவரும் அத்யயனம் செய்தருளினர்கள். இவர்களறுவருக்கும் நான் சிஷ்யனுயிருந்துகொண்டு அந்த ஆறு சம்ஹிதைகளையும் அத்யயனஞ்செய்தேன். காசியபர்-சாவர்னி-அகர்தவிருணர்-நான் (சூதர்) ஆகிய நால்வரும் வியாச புத்திரரான சுகப்பிரம்ம ரிஷியினிடத்தில் நின்று நான்கு மூல சம்ஹிதைகளை அத்தியயனம் பண்ணினேம்.

புராணங்கள் சர்க்கம்-விசர்க்கம் - ஸ்திதி-ரக்ஷணம்-மனுவந்தரங்கள் - வம்சம்-வம்சசரிதம் - சமுஸ்தை-ஹேது-ஆசிரியம் இந்தப் பத்து லக்ஷணங்களோடிருக்குமென்று புராண லக்ஷணங்களையறிந்தவர்கள் சொல்வார்கள். சில புராணங்கள் ஐந்து லக்ஷணங்களை யுடையன. எதில் பத்து லக்ஷணங்களுஞ் சொல்லப்படுகின்றதோ அது மகாபுராணமென்றும், ஐந்து லக்ஷணங்களை சொல்பவை அற்பபுராணமென்றுஞ் சொல்லப்படும். சர்க்கமென்பது பிரகிருதியினுடைய சத்வாதி குணங்களினது கிருபையினுலே மகதத்துவம், அதினுலே திரிகுணமான அகங்காரம், அதில்நின்று சூக்ஷ்மங்களான பூதமாத்திரைகள் இந்திரியங்கள் விஷயங்கள் இந்திரியாபிமானி தேவதைகள் இவைகளின் சிருஷ்டிகளாகும். விசர்க்கமென்பது பரமபுருஷராலே அனுக்கிரகிக்கப் பட்டிருக்கிற இந்தச் சத்துவ முதலானவைகளுடைய கருமவாசனையைப் பிரதானமாகவும் சராசரப் பிராணி ரூபமாயிருக்கிற சிருஷ்டியானது யாதொன்றுண்டோ அவைகளும் வித்தில் நின்றும் வித்து வுண்டாகிறதுபோல பிரவாக ரூபமான

அந்தத் தேகசிருஷ்டி காரியமுமாகும். ஸ்திதி என்பது அசரங்களாயும் சரங்களாயுமிருக்கிற பிராணிகளுக்கு ஜீவனார்த்தமா யிருக்கிறதாகும். அதிலும் மனுஷியர்களுக்கு ஸ்வபாவமாகிய கர்மத்தினலும், வேதசாஸ்திர விதியினலும், விருத்தி விதிக்கப்பட் டிருக்கிறதுமாகும். ரக்ஷணமென்பது - யுகங்கள்தோறும் தேவர்கள் ரிஷிகள் மனுஷியர்கள் பக்ஷிகள் மிருகாதிகளாகிய இவைகளில் அச்சுதருடைய அவதாரங்களால் வேத விரோதிகளான அசுரர்கள் சங்கரிக்கப்பட்டு பூமியை கார்க்கப்படுவதாகும். மனுவந்தரமென்பது, மனு - தேவர்கள் - மனுபுத்திரர்கள் - இந்திராதி திக்குப்பாலகர்கள் - ஸ்ரீ பகவானுடைய அம்சாவதாரங்கள், இந்த ஆறு வர்க்கங்களினுடைய சரிதங்கள். வம்சமென்பது ராஜாக்களுடைய காலத்திரையத்திலே உண்டாகும் சந்ததியாகும். வம்ச சரிதமென்பது, அந்த ராஜாக்களுடைய சரிதமும், அவர்கள் வம்சத்திற் பிறந்தவர்களுடைய சரித்திரமுமாகும்.

சமூஸ்தையென்பது, நைமித்திகம் - பிராகிருதம் - நித்தியம் - ஆத்தியந்திகமெனும் நான்குவிதமான இந்தப் பிரபஞ்சத்துக்கு சுவபாவமாகவுண்டாகும் லயமாகும். இந்த ஜகத்தின் சிருஷ்டி முதலானவைகளுக்கு நிமித்தமாயும் அஞ்ஞானமூலமான கருமங்களுக்குக் கர்த்தாவாயுமிருக்கிற ஜீவன் ஹேதுவென்றும், சிலர் கர்ம வாசனையையுடைய ஜீவனை ஹேதுவென்றும், சிலர் பிரகிருதியை ஹேதுவென்றும் சொல்லுவார்கள். ஆசிரயம் என்பது சாக்கிரம் - சொற்பனம் - சுழுத்தி - அவஸ்தைகளில் மாயா மயங்களான ஜீவாத்துமாவினுடைய விருத்திகளில் சாக்ஷியாக யாதொரு பரமாத்துமாவுக்குச் சம்பந்தமும், தியான முதலானதில் அந்த ஜீவ விருத்திகளுடைய சம்பந்த சூனியமு மிருக்கிறதோ அந்தப் பரமாத்துமாவாகும். பூதபவுஷிய வர்த்தமானங்களை யறிந்த முனிவர்கள் பிராமம்-பாத்மம்-வைஷ்ணவம் - சைவம்-லயிங்கம் - காருடம்-நாரதீயம்-பாகவதம் - ஆக்கினேயம்-ஸ்காந்தம் - பவுஷீயம் - பிரமகைவர்த்தம்-மார்க்கண்டேயம் - வாமனம்-வராகம் - மச்சியம் - கூர்மம் - பிரமாண்டம் ஆகிய பதினெண் புராணங்கள் உண்டென்று சொல்லுவார்கள்.



## ஒன்பதாவது அத்தியாயம்



மார்க்கண்டேய உபாக்கியானம் சொல்லப்படுகிறது.

சூதரே! வேதவித்தான மார்க்கண்டேயர் சிரஞ்சீவியா யிருப்பதாக சொல்லுகிறார்கள். இந்த ஜகத்தானது பிரளயத்தில் மூழ்கியபோது அவர் எங்கே எவ்விதமா யிருந்தாரோ அதை தெரிவிக்க வேண்டுமென்று சௌனகர் வினவ, சூதர் சொல்லுகிறார்: கேளும் மகாரிஷியே! இப்போது நீர் கேட்டப் பிரசினம் சகல பாபங்களையும் நாசம் பண்ணும் ஸ்ரீமந் நாராயணருடைய கதையே யாகையால் இதைக் கேட்கக் கடவீர். அந்த மார்க்கண்டேய மகாரிஷி தம்மிட பிதாவிடத்தில் நின்றும் கிரமமாகச் சாதகரும முதல் உபநயன பரியந்தமுள்ள சகல சம்ஸ்காரங்களையு மடைந்தவர். தருமமாகச் சகல வேதங்களையும் அத்யயனஞ் செய்து, தபசு வேதாத்யயனம்-நைஷ்டிகப் பிரமசரியம் ஆகிய வற்றை யுடையவர். சாந்தமானவர், கமண்டலம்-தண்டம்-எக்கியோபவீதம் - மௌஞ்சி - கிருஷ்ணாஜினம்-ஜபமாலை - குசதர்ப்பை இவைகளைத் தரித்தவர். அக்கினி-சூரியன்-குரு-பிராமணன் தனது ஆத்துமா இவைகளில் ஸ்ரீ ஹரியைச் சந்தியா காலங்களிலே பூஜிக்கின்றவர். சாயங்காலத்திலும் பிராதக் காலத்திலும் பிக்ஷைசெய்து வந்து அதைக் குருவின் அனுமதியின்பேரில் புசிக்கின்றவர். எவராலும் ஜெயிக்கக் கூடாத மிருத்தியுவையும் ஜயித்தவர்.

மகா யோகாப்பியாசத்தினால் சித்தத்தை ஸ்ரீ ஹரியினிடத்தில் சமர்ப்பித்து தபசுசெய்யும் மார்க்கண்டேய மகாரிஷிக்கு ஆறு மனுவந்தரங்களுடைய காலமானது அதிக்கிரமித்து இந்த ஏழாவது மனுவந்தரத்தில் தேவேந்திரன் அந்த ரிஷியினுடைய தபசைப் பார்த்து பயந்து எங்கே தன் பதவியை அவர் பெற்றுக்கொள்வாரோ வென நினைந்து அவரது தபசைக்கெடுக்க மன்மதனையும் ரூபலாவண்யமான பல அப்ஸர ஸ்த்ரீகளையும் அனுப்பினான். அவர்கள் தம்மால் கூடியவளவு முயற்சிசெய்து அவர் மனதை வசியப்படப் பார்த்தும் முடியாமையால் வெட்கி இந்த்ரனை யடைந்தார்கள்.

மகா மகிமைவாய்ந்த அந்த மார்க்கண்டேய மகாமுனிக்கு அனுக்கிரகஞ்செய்ய ஸ்ரீ ஹரி நர நாராயண ரூபமாக

அங்கே ஆவிர்ப்பவித்தார். மார்க்கண்டேயர் ஸ்ரீ ஹரியைப் பார்த்து அதிசீக்கிரமெழுந்து சாஷ்டாங்கமாகப் பிரணமம் பண்ணி ஆனந்தமடைந்து தேகம் புளகாங்கிதங் கொண்டவ ராய் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு வணங்கி பக்தி அதிசயத்தினுல் ஸ்துதிக்கிருர்: சர்வலோகநாயகா! தேவ தேவா! தீனபந்தோ! ஆபத்பாந்தவா! அனுதாரக்ஷகா! வாக்குமுதலான இந்திரியங்களால் உம்மை உபாசிக்கின்ற வர்களுக்குத் தேவரீர் ஆத்தும பந்துவாகின்றீர். பகவானே! தேவரீர் மூன்று லோகத்தையும் இரக்ஷிக்கிறதின் பொருட்டும் துக்க நிவர்த்தியின் பொருட்டும் மோக்ஷத்தின் பொருட்டும் மூர்த்திகரித் திருக்கிறீர். இந்தப் பிரபஞ்சத்தை ரக்ஷிக்கிற தின் பொருட்டு மச்சகூர்மாதியான அவதாரங்களைத் தரித் தீர். இந்த ரூபங்களைத் தரித்து இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துத் திரும்பவும் உபசங்காரம் பண்ணிக்கொண் டிருக்கின்றீர். சகல லோகபாலராயும் ஸ்தாவர சங்கமங் களுக்கு நியந்தாவாயு மிருக்கிற தேவரீருடைய திருவடிகளைச் சரணமாக அடைகின்றேன். என்றிவ்விதம் பலபலவிதமாக ஸ்ரீ பகவானை மார்க்கண்டேயர் கண்களில் ஆனந்த நீர் ஒழுக மெய்சிலிர்க்க ஸ்தோத்திரம் செய்தார்.

இவ்விதம் மார்க்கண்டேயர் நரநாராயண ஸ்வரூபரான ஸ்ரீ பகவானை ஸ்தோத்திரஞ்செய்ய அந்தப் பகவான் சந்தோஷமடைந்து சொல்லுகிருர்.

ஓ பிரம்மரிஷியே! எனதிடத்தில் அசஞ்சலமான பக்தியை யுடையவரானபடியால் சகல நேம நியமங்களால் நீர் சித்தியை யுடையவரானீர். நாம் உமது நைஷ்டிக பிரம்ம சரியத்தினுலே சந்தோஷத்தை யடைந்தோம். உமக்கு மங்கள முண்டாகக்கடவது. எனதிடத்தில் உமக்கிஷ்டமான வரத்தைக்கேட்டு அடையக் கடவீரென்றருளிச் செய்ய, மார்க் கண்டேயர் ஸ்ரீ பகவானைப் பார்த்துச் சொல்லுகிருர்:

தேவதேவரே! பிரபன்னர்களுடைய துக்கத்தைப் போக்குகின்றவரே! அச்சுதரே! தேவரீர் எனக்கு பிரத்தி யக்ஷமான இந்தத் தரிசனமேபோதும். இதைப் பார்க்கிலும் யான் கோறத் தக்கின வரம் வேருென்றுமில்லை. பிராகிரு தர்களான ஜனங்கள் யோகாப்பியாசத்தினுல் பரிபக்குவ மனதினுலே தேவரீருடைய ஸ்ரீ பாதாரவிந்த தரிசன மடைந்து பிரம்மா முதலிய தேவர்களாய் விடுகின்ருர்கள். அப்படிப்பட்ட தேவரீர் பிரத்தியக்ஷமானீர், ஆனுலும் ஓ கமலபத்திராக்ஷரே! புண்ணிய சுலோக சிகாமணியே!

யாதொரு மாயையினாலே பிரம்மா முதலானவர்களுடன் கூடியிருக்கிற இந்த லோகமானது சத்திய ஸ்வரூபரான தேவரீரிடத்தில் பேதத்தைப் பார்க்கிறதோ அப்படிப்பட்ட மாயையை அடியேன் பார்க்கவேணுமென் றிச்சிக்கிறே னென்றார். நரநாராயண மூர்த்தி நம்முடைய மாயையை உமதிஷ்டத்தின்படி பார்க்கவே போகிறீரென்று சொல்லி புன்சிரிப்புகொண்டு பதரிகாசிரமத்தை நோக்கிப் போனார். பின்பு மார்க்கண்டேய மகாமுனிவர் அந்த பகவானருளிய படி மாயையை அறியவேணுமென்கிற சிந்தனை யுடையவ ராய் தமது ஆசிரமத்திலிருந்து ஸ்ரீ ஹரியைத் தியானித்தும் மனோமயங்களான பூஜாதிரவியங்களால் பூஜித்துக்கொண் டிருந்தார். ஒருக்கால் பிரீதி அதிசயத்தினாலே வியாபிக்கப் பட்டவராய் ஆராதனத்தையு மறந்திருந்தார்.

அப்படி யிருக்கும்போது ஒருக்கால் சாயங்காலம் மகத் தான வாயுவானதுண்டாய் மகா பயங்கரமான மேகங்கள் கர்ஜித்தவுடன் மின்னல்களுடனே தேரின் அச்சுக்குச் சமானமான தாரைகளை நான்கு திக்கிலும் வருஷித்தது. சமுத்திரங்களும் அதிவேகமான அலைகளோடு பூமியை வியாபித்து மகர மச்சங்கள் நீர்ச்சுழிகள் சப்தங்கள் காணப் பட்டன. தன்னுடன் சகலவிதமான பிராணிகளும் ஜலத் தில் பூமியுடன், முழுகிப்போகின்றதையும் பார்த்து மார்க் கண்டேயர் மிகுந்த வியசனமுடையவராய் அதிக பயத்தை யடைந்தார். இப்படி பார்த்துக்கொண் டிருக்கின்றபோதே சமுத்திரம் வருஷிக்கும் மேகங்களால் நான்கு பக்கமும் பூரிக்கப்பட்டதாய் சமஸ்த த்வீபங்களுடனே பூமி - ஆகா சம் - சொர்க்கம் - நக்ஷத்திர கண்டங்கள் மனுஷியாதி பிராணிகளுடனே கூடின மூன்று லோகமும் ஜலத்தினால் வியாபிக்கப்பட்டதாயிற்று. அந்த மகார்ணவ ஜலத்தினால் மார்க்கண்டேய மகா முனிவர் ஒருவராய் சடைகளை விரித் துக்கொண்டு சடன் போலவும் குருடன் போலவும் பிரமித் துக்கொண்டிருந்தார். பசி தாக முதலிய பாதையாலும் மகர முதலிய மச்சியங்களால் பீடிக்கப்பட்டும் அலைகளி னுடைய காற்றினாலே வருந்தியும் அபாரமான அந்தகாரத் தில் நான்கு பக்கத்திலும் சுழன்றுகொண்டு மிருக்கின்றவராய் பூமி-ஆகாசம்-திக்குகள்-ஒன்று மறியாதவராயும் ஒரு விடத் தில் அலைகளால் மோதப்பட்டும் ஒரு விடத்தில் சோகத்தை யும், மோகத்தையும், பயத்தையும், துக்கத்தையும், மூர்ச்சை யையு மடைந்தவராய் இப்படி அனேகமாயிரம் வருடங்க ளிருந்தார். அந்த மார்க்கண்டேயர் ஒருக்கால் பூமியினுடைய

மஹோன்னதப் பிரதேசத்தில் நூதன துளிர்கள் நிறைந்து விளங்கும் ஒரு கோமளமான வடவால விருக்ஷத்தைக் கண்டு அதில் ஈசான்னிய திக்கிலுள்ள கிளையில் ஒரு இலைமேல் சயனித்துக்கொண்டும் தமது தேஜஸினால் மகாந்தகாரத்தைக் கவளீகரித்துக்கொண்டு மிருக்கிற ஒரு சிசுவைப் பார்த்தார்.

அந்தச் சிசுவானது நீலவர்ணமாயும், மகா ரம்மியமான தாமரைப் புஷ்பம்போலொத்த முகத்தையும், சங்கம்போல மூன்று ரேகையையுடைய கழுத்தையும், விசாலமுள்ள மார்பையும், சோபனமான நாசிகையையும், சுந்தரமுள்ள புருவங்களையும், சுவாச வாயுவினா லலையா நின்ற முன்னெற்றி மயிர்களையும், சங்கம்போலச் சுழலையுடைய காதுகளும், பவளம்போன்ற அதரத்தினையும், கமலம்போலச் சிவந்த கடைக்கண்களையும், மனோக்கியமான புன்சிரிப்பையும், சுவாசத்தால் சலியாமல் வயிற்றிலிரா நின்ற மடிப்பும் பள்ளமுமாக விருக்கின்ற நாபியையும், அரசிலை நுனிபோலிருக்கின்ற திருவயிற்றையும், அழகிய விரல்களையுடைய கைகளால் பாதாரவிந்தத்தை யிழுத்து வாயினிடமாக வைத்துக்கொண்டு அங்குஷ்டத்தைப் பானம் பண்ணிக்கொண்டும் இப்படி மனோகரமாய் விளங்கும் அந்தச் சிசுவை அந்த மார்க்கண்டேயர் பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்தார். கேளும் பிரம்மரிஷியே! அந்த ரிஷி சிசுவைக் கண்டமாத்திரத்தில் தமக்குண்டாயிருந்த பயம் துக்கம் பிரமை யாவற்றும் நீங்கினவராய் புளகாங்கித தேகராய் ஆனந்த பாஷ்பத்துடன் சிசுவுக் கருகிற் சென்றார். அந்தச் சிசுவினது சுவாசத்தினால் அந்த மார்க்கண்டேயர் மசகம்போலச் சரீரத்திற் பிரவேசித்தார். அந்தச் சரீரத்துள்ளும், பிரளயத்துக்குப் பூர்வம்போலே யிரா நின்ற ஆகாசம்-பூமி-நக்ஷத்திர கணங்கள்-பர்வதங்கள்-சமுத்திரங்கள்-தீவுகள்-பாரத வருஷ முதலான வருஷங்கள்-திக்குகள்-சுரர்கள்-அசுரர்கள்-வனங்கள்-தேசங்கள் - நதிகள்-பட்டணங்கள்-கிராமங்கள் இடைச்சேரிகள் பிராமணர்கள் முதலான சமஸ்த பிரபஞ்சத்தையும் பார்த்தார். பின்னும் இமோர்ப் பர்வதத்தையும் புஷ்பபத்திரி யென்னப்பட்ட நதியையும் தம்முடைய ஆசிரமத்தையும் அதிலுள்ள முனிவர்களையும் பார்த்தார்.

இப்படிப் பார்த்த அந்த முனிவர், திரும்பவும் அந்தச் சிசுவினுடைய சுவாசத்தினால் வெளியில் தள்ளப்பட்டு சமுத்திர ஜலத்திலே வந்து விழுந்து பூமியினுடைய மகோன்னதப் பிரதேசத்திலே உண்டாயிருக்கிற வடவிருக்ஷத்தையும்

அதினுடைய பத்திரத்திலே சயனித்துக் கொண்டிருக்குஞ் சிசுவையும் பார்த்து, அந்தச் சிசுவினுடைய பிரீதியினால் அமிர்தம்போன்ற புன்சிரிப்புடனுண்டான கடைக்கண் பார்வையினால் கடாக்ஷிக்கப் பட்டவராய் அந்த மார்க்கண்டேய மகாரிஷி அந்தச் சிசுவை நன்றாகப் பார்த்து அதிகவாநந்தங் கொண்டவராய் நேத்திர மார்க்கங்களாலே இருதயத்தில் தரிக்கப்படாநின்ற அந்த ஸ்ரீ ஹரியை ஆலிங்கனம் பண்ணுகைக்குக் கிட்டவந்தார். அப்போதே சாக்ஷாத் யோகீஸ்வரராயும் சர்வாந்தரியாமியாயு மிருக்கின்ற அந்தச் சிசுவான ஸ்ரீ பகவான் அவருக்கு அந்தாத்தியானமாய் விட்டார். அப்போதே அந்தவட விருக்ஷமும், சமுத்திர ஜலமும், பிரளயமும். அந்த க்ஷணத்திலேயே அந்தாத்தியானமாய் விட்டது. அந்த மார்க்கண்டேய மகாரிஷியும் பூர்வம் போலவே தம்முடைய ஆசிரமத்திலேயே யிருந்தார்.

அந்த மார்க்கண்டேயர் மகா ஆச்சர்யமடைந்தவராக "ஸ்ரீ ஹரியே பிரபன்னர்களுக்கு அபயப்பிரதமான தேவரீருடைய பாதகமலங்களைச் சரணமாக அடைகிறேன். எதார்த்தக் கியானம்போலப் பிரகாசிக்கும் தேவரீருடைய மாயையினால் விர்ப்பன்னர்களும் மோகிக்கிறார்கள்" என்று இப்படி ஸ்தோத்திரஞ் செய்தார். அந்த ரிஷியை ஸ்ரீமந்நாராயணர் சிவஸ்வரூபமாக பார்வதி சமேதராய் ரிஷபாரூடராய் சிவகணங்கள் சூழும்படி ஆகாசத்தில் நின்றும் அந்த முனியைப் பார்த்தார். அப்போது பார்வதி சுவாமியை நோக்கி இங்கே பெருங்காற்று அடித்து நின்றுபோனபின்பு நிச்சலங்களான ஜலம் மச்சிய முதலியதுண்டாயிருக்கும் சமுத்திரம்போல தேகம் இந்திரியம் மனம் இவைகளையுடைய இந்த மார்க்கண்டேய மகாரிஷியைப்பாரும். தேவரீர் தபசிகளுக்கு இஷ்டசித்தியைக் கொடுப்பவரன்றோ? இவர் தபசுக்குப் பலத்தைப் பிரத்தியக்ஷமாகக் கொடுக்கக் கடவீரென்று சொல்ல, சுவாமி சொல்லுகிறார்: இந்தப் பிரம்மரிஷி இகலோக சிரேயசுக்களையும் மோக்ஷத்தையும் எவ்வளவு மிச்சித்தவரன்று. பகவானையும் நித்தியாயு மிருக்கிற பரமபுருஷரிடத்தில் பரமமான பக்தியை யடைந்திருக்கின்றார். ஆனாலும் சாதுவான இந்த முனியுடனே நாம் சம்வாதம் பண்ணுவோமென்று சொல்லி பகவானையும் பக்தபரிபாலகராயும் சமஸ்த வித்தைகளுக்கும் ஈஸ்வரராயும், சமஸ்த பிராணிகளுக்கும் பிரபுவாயு மிருக்கிற உருத்திரர் அவர் சமீபமாய் வந்தார். அப்போது அந்தக் கரண விருத்திகளைவிட்டு பகவத்தியான பரராயிருக்கிற அந்த முனி ஜகத் ஸ்வரூபர்களான-பார்வதி பரமேஸ்வரர்

கள் வந்ததையும் தன்னையும் பிரபஞ்சத்தையும் அறியாம லிருந்தார். அதை யுணர்ந்த ஈஸ்வரன் அந்த முனியி னுடைய இருதயாகாசத்திற் பிரவேசித்தார். முனிவர் தமது இருதயத்தில் மின்னற்கொடிபோல பிங்களவர்ணமுடைய சடையையும், திரிநேத்திரங்களையும், எட்டுக்கைகளையு முடையவராயும், உதிக்கும் சூரியனைப்போல தேஜஸையும், வியாக்கிர சருமத்தை வஸ்திரமாகவு முடையவராய்-சூலம்-தனுசு-பாணம்-கத்தி-கேடயம் - ஜபமாலை-டமரகம்-கபாலம்-பாசு-இவைகளைத் தரித்தவர்களாயும் காணப்படும் சிவன் அகாரணமாகப் பிரத்தியக்ஷமானதைப் பார்த்து ஆச்சரிய மடைந்தவராய் தியானத்தில் நின்றும் நீங்கி இதெதினால் உண்டாயதென்று கண்களைத் திறக்கவே பிரமத கணங்களு டனே பார்வதி சமேதராய் உருத்திரனைப்பார்த்து சாஷ்டாங் கமாகப் பிரணாமம் பண்ணி ஆசனஞ் சமர்ப்பித்து அர்க்கிய பாத்தியம் கந்தம்-புஷ்பம் தூபதீபங்களால் பூஜித்து சுவாமி! உம்மாலே இந்தச் சகத்தானது சுகத்துடனே யிருக்கின்றது. ஆத்துமானுபவத்தினாலே பூரண கர்மரான உமக்கு நான் என்ன செய்யப்போகின்றேன். நிர்க்குணராயும்-சாந்தராயும்-சத்துவ ரஜஸ் தமோகுண ஆஸ்ரயராயு மிருக்கின்ற உமக்கு அனேகம் பிரணாமஞ் செய்கிறேனென்றார்.

பக்தரக்ஷகராயும் பகவானாயுமிருக்கிற அந்த மகாதேவர் பிரத்தியக்ஷராய் பிரசன்ன மனதை யுடையவராய் புன்சிரிப் புடன் அந்த ரிஷியைப் பார்த்து பிரம்மா - விஷ்ணு - உருத் திரன் ஆகிய நாங்கள் பக்தர்களுக்கு அபீஷ்டமான வரங் களைக் கொடுக்கத் தக்கவர்கள். எங்கள் தரிசனமோ அமோக மாகும். எங்களிடத்தில் நின்றே மனுஷ்யன் மோக்ஷத்தை யடைகின்றான். தீர்த்தங்களும் தேவர்களும் வெகுகாலம் உபாசிக்கப்பட்டவர்களாய் பின்பு பாவனமாகச் செய்கிறார் கள். உம்மைப்போன்ற மகான்களோ வென்றால் தரிசன மாத்திரத்தினால் பாவனம் செய்வார்கள்.

சிவபிரானுடைய தர்ம வசனங்களைக் கேட்டு மார்க்கண் டேயர் வெகுகாலமாய் ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய மாயையி னால் பிரமிக்கப்பட்டும் பரிசிரமப்பட்டு மிருக்கிறவராகையால் கிலேச சாந்தியை யுடையவராய், அந்தச் சிவனைப்பார்த்துச் சொல்லுகிறார்: பகவானே! யாதொரு காரணத்தினால் ஜக தீஸ்வரர்களும் தங்களுடைய அனுக்கிரகத்துக்குப் பாத்தி ரர்களா யிருக்க அந்தப் பிராணிகளை தாங்கள் பிரணாமம் பண்ணுவதும் ஸ்தோத்திரஞ் செய்கிறதுமானால் ஈஸ்வா

னுடைய இந்த லீலே பிராணிகளுக்கு மிகவுஞ் சிந்திக்கக் கூடாததாய் நிற்கின்றது. பிராணிகளுக்குத் தருமத்தை யறி யச்செய்யும் பொருட்டுத் தாங்களே ஆஸ்ரயித்தும் தருமஞ் செய்பவர்களே ஸ்தோத்திரஞ் செய்கின்றீர்கள். உலக சிக்ஷார்த்தமாகச் செய்யப்படும் இந்த பிரணம முதலானவை களாலே உம்முடைய பிரபாவம் தேவரீருடைய மாய்கை யினல் மோகிக்கப்பட்டிருக்கிற ஜனங்களால் தூஷிக்கப்படுகிற தில்லே. சொற்பனங்கண்டு கொண்டிருக்கிற புருஷன் சொற் பனத்தில் நானுவித சிருஷ்டிகளேச் செய்துக்கொண்டு ரமித் துக்கொண்டிருக்கிறதுபோல இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ் டித்து அதில் தாமும் அனுப்பிரவேசித்து கருமங்களேச் செய்யு மிந்திரியங்களினுல் தாம் கர்த்தர்போல விளங்கிக் கொண்டுமிருக்கிற பகவானுக்குப் பிரணமஞ் செய்கிறேன். நிர்க்குணராயும், சத்துவாதிகுண நியந்தாவாயும், ஏகராயும், ஆனந்த ஸ்வரூபராயும், பிரம்ம ஸ்வரூபராயும் - சகலலோக கர்த்தாவாயுமிருக்கிற பகவானுக்குப் பிரணமஞ் செய்கிறேன். புருஷன் தேவரீருடைய தரிசனத்தினுல் பூர்ண காமனுயும் சர்வானந்தங்களேயு மடைந்தவனுகின்முன். அப்படிப்பட்ட தேவரீருடைய சந்தரிசனத்தைப் பார்க்கிலும் அன்னியமான எந்த வரத்தை நான் கேட்கப்போகிறேன். ஆனுலும் ஒரு வரமாத்திரங்கேட்கின்றேன். அதாவது அச்சுதரிடத்திலும், அவர் பக்தர்களிடத்திலும், உமதிடத்திலும், அசஞ்சலமான பக்தியைக் கொடுக்கப் பிரார்த்திக்கிறேனென்ற ரிஷியைப் பார்த்து பார்வதியாருடனே சுவாமி அத்தியந்தப் பிரீதி கொண்டவராய் அவருக்குச் சொல்லுகிருர். ஓய் ரிஷியே! ஸ்ரீ ஹரியினிடத்தில் அசஞ்சலமான பக்தியை யுடையவ ரானீர். ஆகையினுல் உம்முடைய அபீஷ்டமானது சித் திக்கக் கடவது. உமக்குக் கல்பாந்த பரியந்தம் புண்ணிய மான எஜசும் சோரமரண மில்லாதிருத்தலும் பூதபவுஷிய வர்த்தமானக் கியானமும் பரமாத்துமானுபவமும் - பிரம்ம தேஜசும்-புராணுசாரியா யிருத்தலும் உண்டாகக் கடவ தென்று வரங்கொடுத்துவிட்டு, அவருடைய தபசு முதலான வைகளேயும் அவரனுபவித்த விஷ்ணுமாயா வைபவத்தை யும் பார்வதியாருக்குச் சொல்லிப் போயினர். அந்த மார்க் கண்டேய முனிவரும் மகா யோக மகிமையை யுடையவராய் ஸ்ரீ ஹரியினிடத்தில் ஏகாந்த பக்தியை யுடையவராய் இப் போதும் சஞ்சரித்துக் கொண்டிருக்கிருர்.

கேளும் சௌனமகா முனியே! கல்விமான்கள் மாயா சொரூபியான பகவானுடைய சுவாச நிசுவாசங்களாலே ஏழு

தரம் அந்த ரிஷி பகவானுடைய உதரத்திற் பிரவேசித்து வெளிப்பட்டு வந்ததை ஏழு கல்பமாகச் சொல்லுகிறார்கள். ஆகையினால் பிருகு வம்சத்திற் பிறந்த மார்க்கண்டேய மகா முனிக்கு ஏழுகல்ப காலம் ஆயுளாயிற்றென்று பெரியோர்கள் சொல்லுகிறார்களென்று இந்தப் பிரகாரஞ் சூதபுராணிகர் சவுனமகா முனிக்குச் சொன்னார்.



## பத்தாவது அத்தியாயம்



*விராட்புருஷனுடைய ரூபமானது சொல்லப்படுகின்றது.*

சௌனகாதி முனிவர்கள் விராட் சொரூபரான ஸ்ரீ பகவானை உபாசிக்கும் விதத்தை சொல்லியருள வேண்டுமென்று பிரார்த்திக்க, சூதர் சொல்லுகிறார் :

சவுனகமகாரிஷியே! பிரகிருதி-புருஷன்-மகதத்துவம்-அகங்காரம் - சப்த பரிச ரூப ரசகந்தங்கள் - ஏகாதச இந்திரியங்கள் - பஞ்சமகா பூதங்களாகிய இந்தத் தத்துவங்களுடைய ஸ்வரூபமான விராட்டு ரூபத்தில் இந்த மூன்றுலோகமுங் காணப்படுகிறது. அந்த ரூபம் பரமபுருஷனுடைய ரூபமாகின்றது. பூமி திருவடிகளாகவும், சுவர்க்கம் சிரசாகவும், ஆகாசம் நாபியாகவும், சூரியன் கண்களாகவும், வாயு நாசியாகவும், திக்குகள் கரணங்களாகவும், பிரம்மா சிசுனமாகவும், மிருத்தியு அபானமாகவும், இந்திராதிலோக பாலர்கள் பாகுக்களாகவும், சந்திரன் மனதாகவும், இயமன் புருவங்களாகவும், லச்சை மேலுதடாகவும், லோபம் அதரமாகவும், நிலா தந்தங்களாகவும், பிரம்மம் சிரிப்பாகவும், விருக்ஷங்கள் ரோமங்களாகவும், மேகங்கள் கேசங்களாகவும், இந்தப் பிரகாரமாக அந்தப் பரமபுருஷனுக்கு அங்கங்கள் உண்டாயிருக்கின்றன. அந்த விராட்டு கௌஸ்துவாபரணமென்கிற வியாஜத்தினாலே தன்னுடைய அம்சமான ஜீவாத்துமாவைத் தரித்துக் கொண்டிருக்கிறார். அந்தக் கௌஸ்துவமணியினுடைய தேஜஸை ஸ்ரீ வச்சமாகவும், தம்முடைய மாயையை வனமாலையாகவும், வேத ரூபமானதைப் பீதாம்பரமாகவும், பிரணவத்தை எக்யோபவீதமாகவும், ஞானத்தையும் யோகத்தையும் மகாகுண்டலங்களாகவும், பிரம்மலோகத்தைக் கிரீடமாகவும் தரித்துக் கொண்டிருக்கிறார். இந்திரியபலம், தேகபலம், மனோபலங்களோடு

கூடிய பிராணனை கதையாகவும், ஜல தத்துவத்தைச் சங்க மாகவும், தேஜசு தத்துவத்தைச் சக்கிரமாகவும், ஆகாச தத்துவத்தைக் கத்தியாகவும், தமோமயமான தத்துவத்தைக் கேடையமாகவும், காலத்தைத் தனுசாகவும் தரித்துக்கொண் டிருக்கிறார். அந்தப் பரம புருஷருக்கு கர்மமயமானதை அப்பராத் தூணியாகவும், இந்திரியங்களைப் பாணங்களாக வும், கிரியாசத்தியோடு கூடியிருக்கிற மனதை இரதமாகவும் உண்டாயிருக்கிறதாய்ச் சொல்லுவார்கள். சப்தாதி விஷயங் களை அந்தரத்துக்கு வெளி சஞ்சாரமாகவுஞ் சொல்லுவார் கள். தரிக்கப்படும் முத்திரையினாலே வரதானம் அபயதான முதலானதைத் தரித்துக்கொண்டிருக்கிறார். பகவானுக்கு ஆராதனம் பண்ணுகிற பூமி சூரியமண்டலமாகச் செய்யக் கடவன். ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட திருமந்திரத் தையே பகவானுக்குப் பாவனை செய்யக் கடவன்.

இந்தப்பிரகாரம் பகவானுடைய உபாசனை தனது பாபக்ஷயத்திற்கு ஏதுவென்று பாவனைசெய்யக் கடவன். அந்தப் பகவான் பகவத் சப்தார்த்தமான ஞான ஐஸ்வரியாதி ஆறுகுணங்களையும் லீலா கமலமாகத் தரித்துக்கொண் டிருக் கிறார். அந்த பகவான் தர்மத்தையும் எஜஸையும் சாமரமாக வும் விசிறியாகவும் தரித்துக் கொண்டிருக்கிறார். நிற்பய மாயும், தமது ஸ்தானமாயுமிருக்கிற ஸ்ரீ வைகுண்டம் குடை யாக நிற்கிறது. கருடனாகச் சொல்லப்படும் மூன்று வேதம் எக்கிய சுவரூபமான பரமபுருஷரைத் தரியாநிற்கிறது. ஸ்ரீ ஹரியினுடைய சக்தி சாக்ஷாத் ஸ்ரீ மகா லக்ஷ்மியா யிருக்கிறாள். பாரிஷதர்களுக்குப் பிரபுவான விஸ்வச்சேனர் பாஞ்சராத்திர முதலான ஆகம ரூபமாகச் சொல்லப்படுகின் றார். ஸ்ரீ ஹரியினுடைய அணிமாதி எட்டு குணங்கள் நந்தன் முதலான துவாரபாலகராகச் சொல்லப்படுகிறார்கள். அந்த ஸ்ரீமந் நாராயணர் உபாசனையினால் வாசுதேவர் சங்க்ருஷ்ணர் பிரத்தியும்னர் அனிருத்தரென்று நான்கு வியூகமாக சொல்லப்படுகிறார். அந்த பகவான் சாக்ராதி அவஸ்தைகளினால் விஷயங்கள் - இந்திரியங்கள் - அக்கியா னம் இந்த மூன்றுக்கும் சாக்ஷியான ஞானம் இவைகளோடு கூடிக்கொண்டிருக்கிற விசுவன் - தைஜசன் - பிராக்கியன்- துரியன் என்று சொல்லப்படுகிறார். இந்த அங்கங்களுடன் கூடிக்கொண்டிருக்கிற ஸ்ரீ ஹரியானவர் வாசுதேவாதி நான்கு மூர்த்தியாய், விசுவதைச் சபிராக்கிய துரிய துரியா னென்னப்பட்ட நான்கு ரூபத்தையுந் தரியா நிற்கிறார். இந்த நான்கு ரூபத்தையுந் தரித்துக்கொண்டிருந்தாலும் பகவானாய்

சர்வ நியந்தாவா யிருக்கிறார். பிராதக்காலத்தில் எழுந்திருந்து பரிசுத்தனாய் ஸ்ரீ பகவானிடத்தில் சித்தத்தை யுடையவனாய் பரம புருஷருடைய ஸ்வரூபமான இந்த விராட்டு ரூபத்தைச் ஜபிக்கிற புருஷன் இருதயத்திலுள்ள பரப்பிரமத்தைச் சாக்ஷாத்கரிப்பனென்று சொல்லும் சூத புராணிகரைப் பார்த்துச் சவுனகர் சொல்லுகிறார் :



## பதினோருவது அத்தியாயம்



### சூரியன் கதி யுரைத்தது.

#### சவுனகர் வாக்கியம்

சூதபுராணிகரே! சுகப்பிரம்ம பகவான் பரிக்ஷித்துவின் பொருட்டு ஐந்தாம் ஸ்கந்தத்தில் சூரியனுடைய ரதத்தில் கந்தருவர்கள் முதலானபேர்கள் உபாசித்துக் கொண்டிருப்பதாய் சொன்னாரல்லவா? அந்தக் கணங்களுடைய நாமங்களையும், கர்மங்களையும், சூரியசுவரூபியான ஸ்ரீ ஹரியினுடைய விபாகத்தையும் சொல்லக்கடவீரென்று பிரசினம் பண்ணும் சவுனகரைப் பார்த்துச் சூதர் சொல்லுகின்றார் :

#### ஸ்ரீ சூதர் வாக்கியம்

பிரமரிஷியே! ஸ்ரீ ஹரியினுடைய அநாதியான மாயையினால் நிர்மிக்கப்பட்ட இந்தச் சூரியபகவான் லோகங்களிற் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறார். ஸ்தாவர ஜங்கமங்களுக்கு ஆத்துமாவாயும் சிருஷ்டி கர்த்தாவாயும் ஒருவராயும் ஸ்ரீ ஹரி சுவரூபராயுமிருக்கிற சூரியன் சமஸ்த வேதோக்த கிரியைகளுக்குக் காரணராய் ரிஷிகளால் வெகுவிதமாகச் சொல்லப்படுகிறார். ஸ்ரீ ஹரி காலம்-தேசம்-கிரியை-கர்த்தா-கரணங்கள்-கர்மம்-மந்திரம்-திரவியம்-பலம் என்று ஒன்பது பிரகாரமாகச் சொல்லப்படுகிறது போல காலரூபதாரியான ஸ்ரீ பகவான் சித்திரை மாத முதலான பன்னிரண்டு மாதங்களிலேயும் பன்னிரண்டு கணங்களோடு கூட லோகயாத்திரா நிர்வாகத்தின் பொருட்டு வேறுவேறாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்.

அதெப்படியென்றால் தாதாவென்னப்பட்ட சூரியன், கிருதஸ்தலி யென்கிற அப்சரசு, ஏதியென்னப்பட்ட ராக்ஷ

சன், வாசுகி யென்னப்பட்ட நாகம், ரதகுருப்து என்னப்பட்ட எக்ஷன், புலஸ்தியரிஷி, தும்புருவன் இவர்களேழுபேரும் சித்திரை மாசத்தை நடப்பிக்கிறார்கள். நரியமென்கிற சூரியன், புலகமுநி, போஜனென்கிற கந்தருவன், பிரகேதியென்கிற ராக்ஷசன், புஞ்சிகஸ்தலி யென்கிற அப்சரசு, நாரதனென்னப்பட்ட கந்தர்வன், கஞ்சனீரென்னும் நாகம். இவர்களேழுபேரும் வைகாசி மாதத்தை நடப்பிக்கிறார்கள். மித்திரனென்கிற சூரியன், அத்திரிஷி, பவுறுஷேபனென்கிற ராக்ஷதன், தக்ஷகன், சுதசுயென்கிற எக்ஷன். மேனகை, மகரதஸ்வன் இவர்கள் ஆனிமாசத்தை நடப்பிக்கிறார்கள் வருணனென்கிற சூரியன், வசிஷ்டமுனி, ரம்பை, சகசன்னியனென்னும் எக்ஷன், ஊகூ கந்தர்வன், சித்திரசுயென்னும் ராக்ஷசன், சுக்கிரநாகம் இவர்கள் ஆடிமாதத்தை நடப்பிக்கிறார்கள். இந்திரனென்கிற சூரியன் விசுவாவசுவென்னும் கந்தர்வன், சுரோதர்வென்னும் எக்ஷன், பலாபத்திரனென்னும் நாகம் ஆங்கீரசு ரிஷி, பிரம்மவோசை யென்கிற அப்சரசு, சரியனென்கிற ராக்ஷசன், இவர்கள் ஆவணி மாதத்தை நடப்பிக்கிறார்கள். விஸ்வானென்கிற சூரியன், உக்கிரசேனனென்னும் கந்தர்வன், வியாக்கிரமனென்னும் ராக்ஷசன், ஆசாரணனென்னும் எக்ஷன், தாவூரன் எனும் நாகம், பிருகுமுனி, வசுமூலோசரென்னும் அப்சரசு, இவர்கள் புரட்டாசி மாதத்தை நடப்பிக்கிறார்கள். துவஷ்டாவென்கிற சூரியன், கம்பளாசுவனென்கிற நாகம், திலோர்த்தமை யென்கிற அப்சரசு, பிர்மாபேதனென்கிற ராக்ஷசன் திரிதராஷ்டிரனென்கிற கந்தருவன் ஜமதக்கினி முனி, சத்தசிசுவென்னும் எக்ஷன், இவர்கள் ஐப்பசி மாதத்தை நடப்பிக்கிறார்கள். விஷ்ணுவென்கிற சூரியன், அசுவதரனென்கிற நாகம், ரம்பை, சூரியவற்சென்கிற கந்தருவன், சத்தியசிதுவென்கிற எக்ஷன், விஸ்வாமித்திர ரிஷி, மகாசேதசுவென்னும் ராக்ஷசன், இவர்கள் கார்த்திகை மாதத்தை நடப்பிக்கிறார்கள். அங்கிசுவென்கிற சூரியன், தாற்சயனென்கிற எக்ஷன். காசிபரிஷி சிதசேனனென்கிற கந்தருவன், ஊருவசி வித்யுத்சந்திரனென்னும் ராக்ஷசன், மகாசங்கனென்கிற நாகம், இவர்கள் மார்கழி மாதத்தை நடப்பிக்கின்றார்கள். பகவானென்னப்பட்ட சூரியன், ஸ்பூற்சியனென்கிற ராக்ஷசன், அரிஷ்டனேமியென்கிற கந்தருவன், ஊற்னனென்கிற எக்ஷன், ஆயுசு என்கிறமுனி கார்கோடகனென்கிற நாகம் பூருவசித்தி யென்கிற அப்சரசு இவர்கள் தைமாசத்தை நடப்பிக்கிறார்கள். பூஷாவென்னப்பட்ட சூரியன், தனஞ்செயனென்கிற நாகம், வாதனென்கிற ராக்ஷசன், சுஷேண

னென்கிற கந்தருவன். ஸ்வருசி யென்கிற எக்ஷன், கிருதசி யென்கிற அப்சரசு, கௌதமரிஷி இவர்கள் மாசி மாதத்தை நடப்பிக்கிறார்கள். சதுரியனென்கிற சூரியன், பரத்துவாச ரிஷி பற்சன்னியன் சேனசித்து வென்னும் அப்சரசு, விசுவ னென்கிற கந்தருவன், அயிராவதமென்கிற நாகம், சிறுதென் கிற எக்ஷ்ன், இவர்கள் பங்குனிமாதத்தை நடப்பிக்கின்றார்கள்.

பகவானும் ஆதித்திய ரூபியாயுமிருக்கிற ஸ்ரீ ஹரியி னுடைய ஐஸ்வரியாம்சர்களான இவர்கள் சாயங்காலங் களில் விமரியா நின்ற மனுஷியர்களுடைய பாபத்தை நாள்தோறும் போக்கடிக்கிறார்கள். இந்தப் பன்னிரண்டு மாதங்களிலேயும் சூரியன் கந்தர்வர்கள் முதலான இந்த ஆறுபேர்களுடன் நான்கு பக்கமுஞ் சஞ்சரித்துக்கொண்டு ஜனங்களுக்கு இகலோகபர லோகங்களில் சுபகரமான புத்தி யைப் பண்ணிக்கொண் டிருக்கிறார். முனியீஸ்வரர்கள் சூரிய ரூபியான பகவானைப்பிரதிபாதிக்கும் ருக்குவேத எஜுர்வேத சாமவேதங்களால் அந்தச் சூரியனை ஸ்தோத்திரம் செய்து கொண்டிருக்கிறார்கள். கந்தருவர்கள் அந்தச் சூரியனைக் குறித்து கானஞ் செய்துகொண் டிருக்கிறார்கள். அப்சர ஸ்திரீகள் அவருக்கெதிரில் நர்த்தனம் செய்கிறார்கள். நாகங்கள் ரதத்தைத் திடமாகக் கட்டிக்கொண்டிருக் கின்றன. எக்ஷர்கள் ரதத்தைக் கட்டி சன்னகஞ் செய்து கொண்டிருப்பார்கள். பலசாலிகளான ராக்ஷசர்கள் பின் பக்கத்திலிருந்து ரதத்தைத் தள்ளிக்கொண் டிருக்கிறார்கள். மிகவும் நிர்மலர்களான வாலகில்லியர்களென்னப்பட்ட அறு பதினாயிரம் பிரம்மரிஷிகள் மாதந்தோறும் அவருக் கெதிர் முகமா யிருந்துகொண்டு விபுவான அந்தச் சூரியனை ஸ்தோத் திரம் செய்கிறார்கள். வாரும் பிரம்மமுனியே! ஜனன மரண மில்லாதவராயும், சர்வநியந்தாவாயும் பகவானுமிருக்கிற ஸ்ரீ ஹரி இந்தப் பிரகாரம் கல்பங்கள்தோறும் தமது ஆத்து மாவை அநேக ரூபமாக விபாகஞ்செய்து இந்த லோகத்தைப் பரிபாலனஞ் செய்துகொண்டிருக்கிறார்.



## பன்னிரண்டாவது அத்தியாயம்

ஸ்ரீமத் பாகவத புராண வர்ணனை சொல்லப்படுகிறது.

ஸ்ரீ சுகர் வாக்கியம்

இனி பாகவதபுராணத்திற் சொல்லப்பட்ட அர்த்தங்களைச் சொல்லுகிறேன். ஜீவர்களுக்குப் புருஷ ஜன்மத்தில் சிரவண முதலானதற்கு யோக்கியமான யாதொரு சரித்திரத்திரத்தைக் குறித்து உங்களால் நான் பிரசினஞ் செய்யப்பட்டேனே ஸ்ரீ மகாவிஷ்ணுவினுடைய அதியற்புதமான இந்த சரித்திரமானது உங்களுக்கு நம்மாற் சொல்லப்பட்டது. இந்தப் புராணத்தில் ஞான ஐஸ்வரியாதி ஷாட்குண்ணிய பூர்ணராயும் சர்வபாபங்களையும் போக்கடிக்கிறவரும் சர்வ நியந்தாவாயு மிருக்கிற ஸ்ரீ ஹரி சாக்ஷாத்தாகச் சொல்லப்படுகிறார். இந்தப் புராணத்தில் நிர்க்குணமாயும் பிரபஞ்சத்தினுடைய உற்பத்தி லயங்களுக்கு ஆஸ்ரயராயு மிருக்கிற பரப்ரம்மமும் அந்தப் பரம்பிரம்ம ஞானமும் அந்தஞான சாதனமுஞ் சொல்லப்படுகின்றன. இந்தப் புராணத்தில் பிரசித்தியான பகவத் பக்தியோகமும் அதினாலுண்டாகும் வைராக்கியமுஞ் சொல்லப்படுகின்றன.

இந்தப் புராணத்தில் பிரதம ஸ்கந்தத்தில் பரிக்ஷித்து மகாராஜனுடைய ஜன்ம முதலானதும் நாரதோபாக்கியானமும் சுகப்பிரம்ம முனிக்கும் பரிக்ஷித்துக்கும் நடந்த சம்வாதமுஞ் சொல்லப்படுகின்றன. இரண்டாவது ஸ்கந்தத்தில்: பிரம நாரத மகாமுனி சம்வாதமும் அர்ச்சாவதாராதி மார்க்ககதியும் பகவதவதாரங்களும், பிரகிருதி காரியமான மகத்துவ முதலான விராட்ரூபமும் சொல்லப்படுகின்றன.

மூன்றாவது ஸ்கந்தத்தில்: விதுர உத்தவ சம்வாதமும், விதுர மயித்திரேய சம்வாதமும், புராண சங்கிதர் சிருஷ்டியும், சிருஷ்டிக்குப் பூர்வம் மகா புருஷரான பரமாத்துமாவினுடைய கேவலாவஸ்தானமும், பிரகிருதி குணங்களுடைய சஞ்சல ரூபமான சிருஷ்டியும், மகதத்துவ அகங்கார முதலான பஞ்சபூதங்களுடைய சிருஷ்டியும், பிற்பாடு பிரமாண்டத்தினுடைய சிருஷ்டியும் ஸ்தூல சூட்சும சிருஷ்டியான காலத்தினுடைய சுவரூபமும், பிரளய சமுத்திரத்தில் நின்றும் பூமியினுடைய உத்தாரணமும், இரணியாக்ஷனுடைய வதமும், சுவாயம்பு மனுவுக்குச் ஜனித்த அர்த்த நாரி ரூபமான புருஷனுடைய உற்பத்தியும், தர்மபத்தினிக

ளுடைய சந்தானமும், கர்த்தம பிரஜாபதியினுடைய சந்தான மும், பகவானுன கபில மகாரிஷியினுடைய அவதாரமும், கபில மகாமுனியுடன் தேவ ஹூதியினுடைய சம்வாதமுஞ் சொல்லப்படுகின்றன.

நாலாவது ஸ்கந்தத்தில்: மரீசி முதலான நவப் பிரம் மாக்களுடைய சந்தானமும், தக்ஷயக்ஞவிநாசமும், துருவ சரித்திரமும், வசு சரித்திரமும் பிருசின பாரிகிசுவினுடைய சரித்திரமுஞ் சொல்லப்படுகின்றன.

ஐந்தாவது ஸ்கந்தத்தில்: நாரத சம்வாதம், பிரியவிரத சரித்திரம், பின்பு நாபி பரதன்-ரிஷபன் இவர்கள் சரித்திர மும், தீவுகள் சமுத்திரங்கள் வருஷங்கள், சோதிர்கணங்கள், பாதாள முதலியவைகளில் வர்ணனை சொல்லப்படுகின்றன.

ஆருவது ஸ்கந்தத்தில்: பிரசேதசுக்களில் நின்றும் தக்ஷப் பிரஜாபதியினுடைய ஜன்மமும், தேவர்கள்-அசுரர்கள்-நரர் கள்-மிருகங்கள் - நாகங்கள் - பக்ஷிகள் முதலானவைகளின் உற்பத்தியும் விருத்திராசுரனுடைய ஜனனமரணமுஞ் சொல் லப்படுகின்றன.

ஏழாவது ஸ்கந்தத்தில்: இரணியாசுரனுடைய மரண மும், மகானுபாவரான பிரகலாதாழ்வாருடைய சரித்திரமுஞ் சொல்லப்படுகின்றன.

எட்டாவது ஸ்கந்தத்தில்: மனுவந்தரங்களும், கஜேந் திர மோக்ஷமும், மனுவந்தரங்கள்தோறும் ஸ்ரீ ஹரியினு டைய அவதாரங்களும், அம்ருதத்திற்காக நடந்த தேவாசுர யுத்தமும் சொல்லப்படுகின்றன.

ஒன்பதாவது ஸ்கந்தத்தில்: ராஜவம்ஸம், இக்ஷ்வாகு வம்சத்தில் சுத்துய்ம்னனுடைய ஜன்மம், இளோ உபாக்கி யானம், சூரிய வம்ஸ சரித்திரம், சசாதன சுகன்னியன்சை யாதிக் குவ்ஸதன்-கட்டுவாங்கன் - மாந்தாதா - சவுபரி - சகரன்- இவர்களுடைய சரித்திரம், ஸ்ரீராம சரித்திரம், நிமி சரித் திரம், ஜனகாளுடைய உற்பத்தி, பரசுராமருடைய க்ஷத்திரிய சம்ஹாரம், சந்திர வம்ஸ அமிளன்-யயாதி-நகுஷன்-துஷ்டி யந்தன்-பரதன்-சந்தனு-பீஷ்மர் இவர்களுடைய சரித்திரம், யயாதியினுடைய ஜேஷ்ட புத்திரனுன எதுவினது வம்ஸம் யதுவம்சம் ஆகியவை சொல்லப்படுகின்றன.

பத்தாவது ஸ்கந்தத்தில்: ஸ்ரீ கிருஷ்ணனுக ஸ்ரீபகவான் அவதரித்து துஷ்டர்களை சிஷ்டித்து சிஷ்டர்களை பரி

பாலித்து பூமி பாரம் தீர்த்த லீலா வைபவசரித்திரங்கள் சொல்லப்படுகின்றன.

பதினோராவது ஸ்கந்தத்தில்: பிராமண சாபத்தினுல் யாதவ குலத்தின் உபசங்காரமும், ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் உத்தவருக்கும் சம்வாதரூபமான ஆத்மஞானம் முதலானதும் பகவான் யோகப்பிரவாகத்தினுல் மனுஷிய சரீரத்தை அந்தர்த்தானஞ் செய்ததுஞ் சொல்லப்படுகின்றது.

பன்னிரண்டாவது ஸ்கந்தத்தில்: யுகங்களுடைய லக்ஷணமும், கலியுக வர்ணனையும், பரிக்ஷித்து மகாராஜனுடைய மோக்ஷமும், வேதவிபாகமும், மார்க்கண்டேய சரித்திரமும், விராட்டு புருஷ ரூபமும், சூரியகதியும் சொல்லப்படுகின்றன. இவ்விதம் நீங்கள் பிரஸ்னம் செய்தமைக்கு உத்தரமாக பகவானுடைய லீலாவதார சரித்திரங்கள் சமஸ்தமுஞ் சொல்லப்பட்டன. ஒருவன் தான் புண்யவானு யிருந்தாலும் பாபியாயிருந்தாலும் உட்கார்தல், எழுந்திருத்தல், சயனித்தல் முதலிய கார்யங்களை செய்யும்போதும் துக்கமாயிருந்தாலும் சந்தோஷமாயிருந்தாலும் ஸ்ரீ ஹரியே நமஹா வென்று வுச்சரித்தால் அவன் சகல பாபங்களி நின்று விடுபடுவன். பகவான் அந்தப் புருஷனுடைய சித்தத்தில் பிரவேசித்து சமஸ்த விசனங்களையும் நாசம் பண்ணுவார். கர்மம் சர்வோத்தமமாயிருந்தாலும், அனுஷ்டான காலத்திலேயும், பலானுபவ காலத்திலேயும் துக்கரூபமான அந்தக் கர்மம் ஈஸ்வரார்ப்பணமாகச் செய்யப்படாமற் போனுல் சோபியாது. வர்ணுசிரம ஆசாரங்கள் தபசு வேதாத்தியயன முதலானவைகளில் மகத்தான சிரமம் எஜஸுடன் கூடிக்கொண்டிருக்கிற சம்பத்துக்கே சாதனமாயிருக்கும். பகவானுடைய குண கீர்த்தனம், சிரவணம், ஆராதனை முதலானவைகளால் அந்த ஸ்ரீதரின் பாத பத்மங்களுடைய அனுபவமானது உண்டாகும். ஸ்ரீ கிருஷ்ணரது பாதாரவிந்தத்தினுடைய அனுபவம் பாவங்களை நாசம்பண்ணும், சுகத்தையும், சித்த சுத்தியையும், பரமமான பக்தியையும், பரமாத்துமானுபவத்தையும், வைராக்கியத்தையும், ஞானத்தையும் உண்டாக்கும்.

பிராமணோத்தமர்களே! ஸ்ரீமந் நாராயணரை அந்தக் கரணத்தில் பிரவேசிப்பித்து அடிக்கடி நீங்கள் உபாசிக்கிறீர்கள். ஆகையால் மகா புண்ணியத்தைச் செய்தவர்களாகிறீர்கள். பூர்வத்தில் பரிக்ஷித்து மகாராஜனுடைய பிருயோபவேசத்தில் அவனுடைய சதசில் சமஸ்த மகாரிஷிகளும் கேட்டுக் கொண்டிருக்கையில் என்னுல் சுகப் பிரம

ரிஷியினுடைய முகத்தில்நின்றும் பரமாத்தும தத்துவமானது கேட்கப்பட்டது. ஆகையினால் நானும் தன்னியனாகிறேன். எந்த புருஷன் வாசுதேவரிடத்தில் அசஞ்சலமான புத்தியை யுடையவனாய் ஒரு நிமிஷமாகட்டும் க்ஷணகாலமாகட்டும் இந்தப் புராணத்தில் ஒரு சுலோகம் அரை காலமாகட்டும் பாதிசுலோகம், அரைக்கால் சுலோகத்தையாகிலுங் கேட்கிறானோ கேட்கப் படுகிறானோ அந்தப் புருஷன் தன்னுடைய ஆத்துமாவை பாவனமாகப் பண்ணுவன். ஏகாதசியிலாவது துவாதசியிலாவது இந்தப் புராணத்தைக் கேட்கிற புருஷன் மகா புண்ணியத்தைச் செய்தவனாவன். மகா பாவியான புருஷன் உபாசனத்துடன் பரிசுத்தமாயிருந்துகொண்டு இந்தப் புராணத்தைப் பாராயணம் பண்ணினாலும், மற்றொருவர் பாராயணம் பண்ணக் கேட்டாலும், சகல சித்திகளும் பெற்று க்ஷேமமடைவான்.

பிராமணன் பரிசுத்தனாயிருந்துகொண்டு இந்தப் புராணத்தை அத்யயனம் பண்ணினால் பகவானுடைய பரமபதத்தை யடைவன். இராஜா இந்தப் புராணத்தைப் பாராயணம் பண்ணி பூமியை யடைவன். வைசியன் பாராயணம் பண்ணி தனசமூர்த்தியை யடைவன். சூத்திரன் சகல பாவத்தில்நின்றும் விடுபட்டுப் பரிசுத்தனாவன். ஜன்மசூனியராயும், அனந்த கல்யாணகுண பரிபூர்ணராயும், ஜகத்தினுடைய சிருஷ்டி - ஸ்திதி - சங்காரங்களுக்குக் காரணமான சக்திகளை யுடையவராயும், பிரம-ருத்திர இந்திராதி தேவர்களாலும் கரையறியக்கூடாத ஸ்தோத்திரத்தை யுடையவராயுமிருக்கிற அந்த அச்சுதரை நான் பிரணமம் பண்ணுகிறேன். ஸ்தாவர சங்கம ரூபமான பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி முதலானதை யுடையவராயும், சத்திய ஞானனந்த சுவரூபராயும், தேவோத்தமராயும், அநாதியாயுமிருக்கிற பகவானுக்குப் பிரணமம் பண்ணுகிறேன். சுவாத்துமானுபவ சுகத்தில் பரிபூர்ணமான மனதையுடையவராய் அந்த ஆனந்தத்தினாலேயே பிராகிருத விஷய ஞானத்தைத் தூரவற்சிதரா யிருந்தாலும் யாதொரு பிரமரிஷியானவர் ஸ்ரீ ஹரியினுடைய மனோகரமான லீலைகளா லிழுக்கப்பட்ட ஆத்துமானுபவத்தில் தைரியத்தை யுடையவராகி பரமார்த்தப் பிரகாசமாயும் சகல பாபத்தையும் நாசம் பண்ணுநின்றுமிருக்கிற ஸ்ரீ பாகவத புராணத்தைக் கிருபையினால் அருளிச்செய்தாரோ அந்தச் சுகப்பிரம்ம ரிஷியைப் பிரணமம் பண்ணுகிறேன்,



## பதின்மூன்றுவது அத்தியாயம்

*பதினெண் புராணங்களுடைய கிரந்த சங்கதியும் இந்தப் புராணத்தைச் சிரவணஞ் செய்ததற்குப் பலமுஞ் சொல்லப்படுகின்றன.*

ஸ்ரீ சூதர் வாக்கியம்

சவுனகாதி ரிஷிகளே! பிரமபுராணம் பதினாயிரங் கிரந்தமாகும். பாத்துமபுராணம் ஐம்பத்தொன்பதினாயிரங் கிரந்தமாகும். ஸ்ரீ விஷ்ணுபுராணம் இருபத்து மூவாயிரங் கிரந்தமாகும். சைவபுராணம் இருபத்து நாலாயிரங் கிரந்தமாகும். ஸ்ரீ மகாபாகவதபுராணம் பதினெண்ணாயிரங் கிரந்தமாகும். நாரதபுராணம் இருபத்தையாயிரங் கிரந்தமாகும். மார்க்கண்டேய புராணம் பதினையாயிரத்து நானூறு கிரந்தமாகும். பவுஷியபுராணம் பதினாலாயிரத்தைன்னூறு கிரந்தமாகும். பிரமகைவர்த்தபுராணம் பதினெண்ணாயிரங் கிரந்தமாகும். லிங்கபுராணம் பதினொருயிரங் கிரந்தமாகும். வராக புராணம் இருபத்துநாலாயிரங் கிரந்தமாகும். ஆக்கினேய புராணம் எண்பத்தோராயிரங் கிரந்தமாகும். ஸ்காந்தபுராணம் லக்ஷங்கிரந்தமாகும். வாமனபுராணம் பதினாயிரங்கிரந்தமாகும். கூர்மபுராணம் பதினேழாயிரங்கிரந்தமாகும். மச்சிய புராணம் பதினாலாயிரங் கிரந்தமாகும். கருட புராணம் பத்தொன்பதினாயிரங் கிரந்தமாகும். பிரமாண்டபுராணம் பன்னீராயிரங் கிரந்தமாகும். இந்தப் பிரகாரம் பதினெண் புராணங்களும் நான்கு லக்ஷங் கிரந்தங்களென்று சொல்லப்படுகின்றன. இந்த நான்குலக்ஷங் கிரந்தங்களில் ஸ்ரீ மகா பாகவதம் பதினெண்ணாயிரங் கிரந்தமென்று சொல்லப்படும். இந்தப் பாகவதம் பூர்வத்தில் நாபி கமலத்தி லெழுந்தருளியிருக்கின்ற பிரம்மாவுக்குப் பரமபுருஷரால் சமுசாரத்திலே பயந்திருக்கின்ற பேர்களிடத்தில் கிருபையால் அருளிச்செய்யப்பட்டது. இந்தப் புராணம் ஆதியிலும்-மத்தியிலும்-அந்தத்திலும் - பத்தி வைராக்கியங்களைப் பிரகாசிப்பிக்கின்றது. பகவானுடைய லீலாவதார கதாமிர்த ரசங்களையுடையதாய் மிகுந்த சுகத்தைச் செய்கின்றது. இந்தப் புராணம் சர்வ வேதாந்தசாரமா யிருக்கின்றது. ஜீவாத்துமாவைப் பிரகாசிப்பிக்கின்றது. ஒன்ருகிய பரமாத்துமாவைப் பிரகாசிப்பிக்கின்றது. அந்தப் பரமாத்துமாவில் நிஷ்டையையுடைய பேர்களுக்குப் பரமபதப் பிராப்தியைப் பிரகாசிப்பிக்கின்றது. இந்த

ஸ்ரீ பாகவத புராணத்தை யாதொருவன் புரட்டாசி மாதத்தில் பௌர்ணமியில் சுவர்னமயமான சிம்மப்பிரதிமையோடுகூட தானஞ்செய்கிருனே! அவன் பரமபதத்தையடைவன். உத்தமமான ஸ்ரீ பாகவதம் பெரியோர்களுடைய கோஷ்டியில் எந்த மட்டுக்குங் காணப்படாமலிருக்கிறதோ? அந்தமட்டுமே மற்றப் புராணங்கள் கிரகிக்கப்பட்டு விளங்கும். சகல வேதாந்த சாரமும் ஸ்ரீ பாகவத புராணமென்று சொல்லப்படுகிறது. இந்த ஸ்ரீ பாகவதத்தினுடைய கதாமிர்த ரசத்தினல் திருப்தனுயிருக்கின்றவனுக்கு மற்றொரு புராண சிரவணத்தில் ஆசையுண்டாகிறதில்லை. நதிகளுக்குள்ளே கங்கையைப் போலவும், தேவர்களுக்குள்ளே அச்சுதன் போலவும், விஷ்ணு பக்தர்களுக்குள்ளே ருத்திரன் போலவும், சகல புராணங்களிலும் இந்த ஸ்ரீ பாகவதம் உத்தமமா யிருக்கின்றது. இந்த ஸ்ரீ பாகவதம் ஒப்பில்லாமலிருக்கத் தக்கது.

இந்தப் பாகவதத்தில் நித்தியனுய் முக்தனுய் சுத்தனுய் ஞான சொரூபனுயிருக்கின்ற பரமாத்துமா நிரூபிக்கப்படுகிருர். இந்தப் பாகவதத்தில் ஞான வைராக்கிய பக்திகளோடேகூட நிவர்த்திமார்க்கம் காண்பிக்கப்படுகின்றது. இந்தப் பாகவதத்தைக் கேட்கிறவனும், பாராயணம் பண்ணுகிறவனும், அர்த்தவிசாரம் செய்கிறவனும் மிகுந்த பகவத்பக்தியை யுடையவனுய் முக்தனுய் பரமபதத்தை யடைவன். பரமாத்துமக்கியானம் பிரகாசமாய் ஒப்பில்லாமலிருக்கின்ற இந்தப் பாகவதம் யாதொரு பரமாத்துமாவால் பிரமாவுக்கு அருளிச்செய்யப் பட்டதோ பிரமரூபியான யாதொரு பகவானல் நாரதமகாரிஷிக்கு அருளிச் செய்யப்பட்டதோ? நாரதமுனி ரூபியாகவிருந்து யாதொரு பகவானல் வியாசருக்கு அருளிச்செய்யப்பட்டதோ? வியாச ரூபியான யாதொரு பகவானல் சுகயோகீஸ்வரருக்கு அருளிச் செய்யப்பட்டதோ? சுகப்பிரம்மரிஷி மூர்த்தியாய் யாதொரு பரமாத்துமாவால் பரிக்ஷித்து மகாராஜனுக்குக் கிருபையாலருளிச் செய்யப்பட்டதோ? சத்தியக் கியானனந்த ரூபியாய் பாபமில்லாதவனுய்ச் சுகரூபியாயிருக்கின்ற அந்தப் பரமாத்மாவை எப்போதும் தியானஞ் செய்கிறேன். சர்வாந்தரியாமியாய் சர்வசாஷியாயிருக்கின்ற அந்தப் பகவானுக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். யாதொரு பகவான் கிருபையால் இந்தப் பாகவதத்தைப் பிரமாவுக்கு அருளிச்செய்தாரோ? அந்தப் பகவானுக்குப் பிரணமஞ் செய்கிறேன். யாதொரு சுகப்பிரமரிஷி சமுசாரமென்கிற

சர்ப்பத்தினுல் கடிக்கப்பட்டு வியாகூலனு யிருக்கின்ற பரிக்ஷித்து மகாராஜனைத் துன்பத்தில் நின்றும் விடுவித்தாரோ? பரப்பிரம சொரூபியான அந்தச் சுகயோகிக்கு நமஸ்காரஞ் செய்கின்றேன்.

### வாழி விருத்தம்

அறியபல கலைவாழி யகிலம் வாழி
அதிலுள்ள வாலயமு மடியார் வாழி
உரியமா னிடற்பெற்று ருந்ருர்வாழி
ஓதுசந்த்ர சூரியரோ டுருக்கள்வாழி
கரியகுழன் மாதுமையாள் பாகன்வாழி
கண்ணவ னண்ணனேடு தேவர்வாழி
பிரியமுட னிதைப்படிக்கும் பெரியோர்வாழி
பெட்புட னச்சுதனி விட்டோர்வாழி.

## ஸ்ரீ மஹா பாகவதம்

முற்றுப்பெற்றது.



திருமகள்விலாச அச்சியந்திரசாலை, சென்னை-1950.